ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

*மாறன்பணித்ததமிழ்மறைக்குஆறங்கங்கூறவவதரித்த

# திருமங்கையாழ்வார்

அருளிச்செய்த

# பெரியதிருமொழி,

[ முதல், இரண்டு, மூன்று பத்துக்கள் ]

## மூலமும்;

## நஞ்சீயர்படி வ்யாக்யாநமும்;

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை

அருளிச்செய்த

## வ்யாக்யாநமும்;

பூர்வாசார்யர்கள் சேர்த்தருளின

## அரும்பதவிளக்கமும்;

வ்யாக்யாநங்களைத் தழுவின

## பதவுரையும்;

முதல்ஸம்புடம் - ப்ரதி கூ00.

சித்திரகூடம் - கந்தாடை -

திருவேங்கடாசார்யரோடு

அரசாணிபாலை-கந்தாடை-

கிருஷ்ணமாசார்யர்,

அநேகபாகவதநியமநாநுஸாரமாகப்

பரிசோதித்து,

திருவல்லிக்கேணி :

ஸ்ரீஸரஸ்வதீபண்டாரமுத்ராக்ஷரசாலையில்

பதிப்பித்தனர்.

1881.

# விளம்பரம்.

---

இந்தக் க்ரந்தம் வேண்டுமவர்கள், திருவல்லிக்கேணி பேயாழ்வார்ஸந்நிதி வீதியில், (மட்ராஸ் போஸ்ட்மாஸ்டர் ஜநரல்ஸ் ஆபீஸ் க்ளார்க்) அரசாணிபாலை-கந்தாடை-க்ருஷ்ணமாசார்யரிடத்தில் பெற்றுக்கொள்ளலாம்.

திருவல்லிக்கேணி ஸ்தலமாஹாத்ம்யம் - விலை - ௲ - அணா.

நித்தியாநுஸந்தாநம் - ௬ - அணா.

---

இந்த திவ்யப்ரபந்தத்தில் சேர்க்கப்பட்டிருக்கும் க்ரந்தஎழுத்துக்களை எல்லாரும் எளிதில் அறிந்துகொள்ளும்படி, அந்த எழுத்துக்கள்போல உச்சரிக்கப்படுகிற தெலுங்கெழுத்துக்களை அவ்வவற்றின் கீழ் அச்சிட்டுக் காட்டுகிறோம் :—

[illegible]

ఋ ౠ ఖ గ ఘ చ ఛ ఝ ట ఠ డ ఢ థ ద ధ ఫ బ భ శ

[illegible]

ఖ ఖా ఖి ఖీ ఖు ఖూ ఖ్ [illegible]

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# விஷயஸூசிகை.

| பக்கம். | திருமொழி. | திவ்யதேசம். | எம்பெருமான். |
|---|---|---|---|
| | முதற்பத்து. | | |
| ௧௨ | ௧ - வாடினேன் வாடி | | நாராயணா என்னுந்திருநாமவைபவம். |
| ௪௮ | ௨ - வாலிமாவலத்து | திருப்பிரிதி | பரமபுருஷன். |
| ௭௯ | ௩ - முற்றமூத்து | ஸ்ரீபதரி } | பதரீநாராயணன். |
| ௯௩. | ௪ - ஏனமுனாகி | ஸ்ரீபதரிகாச்ரமம் } | |
| ௧௦௫ | ௫ - கலையுங் கரியும் | ஸ்ரீசாளக்கிராமம் | ஸ்ரீமூர்த்திப்பெருமாள். |
| ௧௧௯ | ௬ - வாணிலாமுறுவல் | திருநைமிசாரண்யம் | தேவராஜன். |
| ௧௩௬ | ௭ - அங்கண்ஞாலமஞ்ச | சிங்கவேழ்குன்றம் (அஹோபிலம்) | நரஸிம்ஹர். |
| ௧௫௯ | ௮ - கொங்கலர்ந்த | திருவேங்கடம் (திருமலை) | திருவேங்கடமுடையான், வேங்கடத்துறைவார். |
| ௧௬௨ | ௯ - தாயேதந்தை | | |
| ௧௭௯ | ௧௦ - கண்ணார்கடல்சூழ் | | |
| | இரண்டாம்பத்து. | | |
| ௨௩௯ | ௧ - வானவர்தங்கள் | | |
| ௨௫௫ | ௨ - காசையாடை | திருவெவ்வுள் | வீரராகவப்பெருமாள். |
| ௨௭௦ | ௩ - விற்பெருவிழவும் | திருவல்லிக்கேணி | பார்த்தசாரதி, மந்நாதன், தெள்ளியசிங்கர், சக்ரவர்த்தித் திருமகன், தேவப்பெருமாள். |
| ௨௮௭ | ௪ - அன்றாயர் | திருநீர்மலை | நீலமுகில்வண்ணன், ரங்கநாதன், நீர்வண்ணன், நரஸிம்ஹர், உலகளந்தபெருமாள். |
| ௩௦௩ | ௫ - பாராயது } | திருக்கடன்மல்லை | தலசயநத்துறைவார், ஞானப்பிரான். |
| ௩௨௬ | ௬ - நண்ணாத } | | |
| ௩௫௭ | ௭ - திவளும்வெண்மதி | திருவிடவெந்தை | நித்யகல்யாணர். |
| ௩௮௫ | ௮ - திரிபுரம் | திருவட்டபுயகரம் | அஷ்டபுஜர். |
| ௪௦௪ | ௯ - சொல்லுவன்சொல் | பரமேசுரவிண்ணகரம் | பரமபதநாதன். |
| ௪௧௭ | ௧௦ - மஞ்சாடுவரை | திருக்கோவலூர் | திருவிக்கிரமன், ஆயனார். |
| | மூன்றாம்பத்து. | | |
| ௪௩௫ | ௧ - இருந்தண் | திருவயிந்திரபுரம் | தெய்வநாயகன். |
| ௪௫௪ | ௨ - ஊன்வாட } | திருச்சித்திரகூடம் | கோவிந்தராஜன். |
| ௪௬௬ | ௩ - வாடமருதிடை } | | |
| ௪௭௬ | ௪ - ஒருகுறளாய் | காழிச்சீராமவிண்ணகரம் | தாடாளன், திருவிக்கிரமமூர்த்தி. |
| ௪௯௨ | ௫ - வந்தனை தடியேன் } | திருவாலி | வயலாலிமணவாளன். |
| ௫௦௮ | ௬ - தூவிரிய } | | |
| ௫௨௯ | ௭ - கள்வன்கொல் } | | |
| ௫௫௮ | ௮ - நந்தாவிளக்கே | திருநாங்கூரில் திருமணிமாடக்கோயில் | நந்தாவிளக்குப்பெருமாள், நரநாராயணர். |
| ௫௭௭ | ௯ - சலங்கொண்ட | ஷை வைகுந்தவிண்ணகரம் | வைகுந்தநாதன், தாமரைக் கண்ணுடையபிரான். |
| ௫௯௩ | ௧௦ - திருமடந்தை | ஷை அரிமேயவிண்ணகரம் | குடமாடு கூத்தன். |

# ஸங்கேதஸங்க்ரஹம்.

———※———

(க) ஒவ்வொருபக்கத்திலும் சிலவரிகளின் கடைசியில், [ரு, [கo, [கரு, [உo, [உரு, [௩o, [௩ரு என்று அச்சிட்டிருக்கும் கணக்குகள், வரிகளின் கணக்கென்றறிக.

(உ) (.) இது, ஸம்பூர்ணமாக வாக்யம் முடியுமிடத்திலிருக்கும்.

(௩) (;) இது, அஸம்பூர்ணார்த்த வாக்யாந்தத்திலும்,அதிதூராந்வயிபதாந்தத்திலுமிருக்கும்.

(ச) (,) இது, வாக்யமத்யத்தில் நிறுத்துமிடத்திலும்,ஸமுச்சயத்திலும்,கிஞ்சித்தூராந்வயிபதாந்தத்திலும், நடுவில் நிறுத்தவொண்ணாத வாக்யங்களின் முடிவிலுமிருக்கும் ; ஆனால், மேல்வாக்யத்தின் நடுவேயிதுவரில், நடுவே நிறுத்தவொண்ணாத வாக்யங்களின் முடிவிலும் (;) என்ற குறிப்பேயிருக்கும்.

(ரு) (-) இது, விவரண விவரணி மத்யத்திலும், ஆத்யந்தக்ரஹண மத்யத்திலும், அந்வயம் காட்டுமிடத்தில் அந்வயிக்கும்பாபதத்தின் முடிவிலுமிருக்கும்.

(௬) அநுவாதங்களின் ஆதியில் (‘‘) என்றும், (’’) என்றுமிருக்கும்.

(எ) அநுவாதாந்தர்க்கத அநுவாதத்தின் முதலிலே (‘) என்றும், முடிவில் (’) என்றுமிருக்கும்.

(அ) (!) இது, காகுஸ்வரமுண்டாகுமிடத்திலிருக்கும்.

(௯) (?) இது, ப்ரச்நமிருக்குமிடத்தில் நிற்கும்.

(கo) ( ) இதின்நடுவே மூலப்ரதீகதாரணம் ப்ராயிகமாயிருக்கும் ; ஒரோவிடத்தில் மூலப்ரதீகதாரணத்தின் முடிவில் (-) என்று மாத்ரமேயிருக்கும்.

(கக) [ ] இதின் நடுவே ப்ராஸங்கிக வ்யாக்யேய ப்ரதீகதாரணமிருக்கும்.

(கஉ) (*) இது, நேராக ப்ரமாணத்தையெடுக்காதே ஸ்வவாக்யமே ப்ரமாணத்துக்கு ஜ்ஞாபகமாயிருக்குமிடத்தில்,அவ்வாக்யாதியிலேயிருக்கும்.

☞ நஞ்சீயர்படி வ்யாக்யாநம் முதலில் அகப்படாமற்போனமையால், முதற்பத்து முழுதும், பதவுரை, பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம், அரும்பதவிளக்கம், இவற்றுடன் முதலில் அச்சிட்டு, பின்பு, நஞ்சீயர்படிவ்யாக்யாநம் முதற்பத்துமுழுதும் ஒரேயிடத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது.

# பெரியதிருமொழிவ்யாக்யாநத்து

## வருஷமுன்பணம்செலுத்தின கையொப்பக்காரர்கள்.

### பட்டணம்.

சேஷாசார்யர்
மா - ரங்காசார்யர்
எம் - ராகவாசார்யர்
ஸ்ரீநிவாஸராகவாசார்யர்
ஸ்ரீ - ரங்காசார்யர்
உபயவேதாந்தபுரம் - ஸ்ரீநிவாஸ அய்யங்கார்.
வ - ஸ்ரீநிவாஸஅய்யங்கார்.
வி - சுப்பராயுலுநாயுடு.
அனந்தய்யநாயுடு.
எம் - ஆர் - முத்துஸாமிநாயுடு.
பி - வி - வேணுகோபாலபிள்ளை.
இ - ராஜரத்தினமுதலியார்.
வி - ரங்கஸாமிமுதலியார்.
வ - கிருஷ்ணஸாமிநாயக்கர்.
சுப்பராயமுதலியார்.
லாட் - வீராஸாமிநாயுடு.
எஸ் - நாராயணசாமிபிள்ளை.
வி - வெங்கடசாமிநாயுடு.
வரதராஜுலுநாயுடு.
தேவப்பெருமாள்முதலியார்.
வி - ராமசாமிமுதலியார்.
துபாஷி - பார்த்தசாரதிநாயக்கர்.
கோவிந்தமுதலியார்.
வி - கிருஷ்ணசாமிசெட்டியார்.
ஆ - ரங்கசாமிநாயுடு.
ப - தேவராஜுலுநாயுடு.
பி - மணவாளஜீயர்.
வி - ரங்கநாதமுதலியார். (ந - ப்ரதி)
ரீ - ராமாநுஜுலுநாயுடு.
அத்தங்கி - வரதப்பசெட்டியார்.
பி - எஸ் - பொன்னுசாமிபிள்ளை.
வெ - பொன்னுசாமிமுதலியார்.
வங்காயல - ஸ்ரீநிவாசுலுசெட்டியார்.

### திருவல்லிக்கேணி.

ஸ்ரீ-பார்த்தசாரதிஅய்யங்கார். (அ-ப்ரதி)
ம - அ-திருமலாசார்யர்.
ம - அ - திருநாராயணாசார்யர்.
ம - ட - சின்னநரசிம்மாசார்யர்.
ம - ம - ச - நரசிம்மாசார்யர்.
ம - கிரு - ஸ்ரீநிவாஸாசார்யர்.
சேஷாசார்யர்.
வழுத்தூர் - கிருஷ்ணஸாமிஅய்யங்கார்.
சோயம் - ஸ்ரீநிவாஸராகவாசார்யர்.
தீக்ஷிதர் - ஸ்ரீநிவாஸஅய்யங்கார்.
வானமாமலை - நரசிம்மாசார்யர்.
ராமாநுஜமுதலியார்.
எம் - சீதாராமநாயுடு.
கோவிந்தராஜுலு.
ஜி - வீராஸாமிநாயுடு.
ஆ - திருவேங்கடபிள்ளை.
புஷ்பகடை - விஜயரங்கநாயுடு.

### திருவடசூரன்பேட்டை.

விஜயரங்கமுதலியார்.
பி - எதிராஜமுதலியார்.
ராகவுலுநாயுடு.
தம்புசாமிபிள்ளை.
குருமூர்த்திநாயுடு.
வி - முத்துகிருஷ்ணமுதலியார்.
கா - வீராசாமிபிள்ளை.

### புதுப்பாக்கம்.

வி - புருஷோத்தமமுதலியார்.
அருணாசலமுதலியார்.
* தெய்வசிகாமணிமுலியார்.

### ராயபேட்டை.

புருஷோத்தமமுதலியார்.
சிங்காரவேலுமுதலியார்.

### நுங்கம்பாக்கம்.

வி - ராகவாசார்யர்.

### எழும்பூர்.

பி - கஜேந்திரநாயுடு.
கண்ணபிரான் என்னும் கிருஷ்ணசாமிமுதலியார்

### சிந்தாத்திரிப்பேட்டை.

மத்தேரி - வரதராஜுலுநாயுடு.
தே - நாராயணசாமிபிள்ளை.

### சூளை.

வந்தவாசி - முனிசாமிமுதலியார்.
திருவேங்கடபிள்ளை.

### சைதாபேட்டை.

பொன்னரங்கபிள்ளை.
டி - நாராயணசாமிமுதலியார்.
நாராயணசெட்டியார்.

### மைலாபூர்.

ம - கோ - ராமசாமிமுதலியார்.

### ஆலந்தூர்.

நாராயணசாமிநாயுடு.

### கூடலூர்.

ஸாமிஅய்யங்கார்.
பி - வெங்கடசாமிபிள்ளை.

பொலாரம்.

டி-ஆர்-வெங்கடாசலம்பிள்ளை (உ-ப்ரதி)

தூத்துகுடி.

எ - ராமாநுஜலுநாயுடு (உ - ப்ரதி)

ஸ்ரீரங்கம்.

கோயில்கந்தாடை-தி-வெங்கடாசார்யர்
வீராசாமிபிள்ளை.

நீலகிரி.

ராமசுவாமிநாயுடு.

பொள்ளாச்சி.

பிள்ளையுறங்காவில்லிதாஸர்.

கோயம்புத்தூர்.

வேதவியாஸ திருவேங்கடபட்டர்ஸ்வாமி.
ஸ்ரீநிவாஸவெங்கடரங்கய்ய.
கா - குப்புசாமிநாயக்கர்.
ரே - சின்னசாமிநாயக்கர்.

தென்செரக்கை.

கொ - கிருஷ்ணஸாமிஅய்யங்கார்.

கும்பகோணம்.

ஆர் - ஸ்ரீநிவாஸஅய்யங்கார்.
ரங்கசாமிஅய்யங்கார்.

பெங்குளூர்.

ஸ்ரீநிவாஸாசார்யர்.
கோபாலகிருஷ்ணய்யங்கார்.
ராஜகோபாலநாயக்கர்.
செல்வராயமுதலியார்.
ஆ - திருவேங்கடசாமிமுதலியார்.

சேரன்மாதேவி.

பெரியநம்பிநம்பிஅய்யங்கார்.

கபிஸ்தலம்.

எம்-துரைசாமிமூப்பனார்.

ஸங்கம்.

வி - குப்புசாமிஅய்யங்கார்.

கொமரலிங்கம்.

திருவேங்கடராமாநுஜஅய்ய.

ஆயக்குடி.

துளசிமாணிக்கம்பிள்ளை.

ஹொஸபேட்டை.

வி - வெங்கடாசலம்பிள்ளை.

அய்யம்பாளையம்.

வித்வான் - கிருஷ்ணய்யங்கார்.

காட்டுபுத்தூர்.

மாணிக்கம்பிள்ளை.

பட்டுக்கோட்டை.

பி - ராஜகோபாலநாயுடு.

சேலம்.

சுப்பராயசெட்டியார்.

திருப்பாதூர்.

த - பரசுராமபிள்ளை.

ஈரோடு.

தேவணசெட்டியார் என்கிற சடகோப
ராமாநுஜதாஸர்.

திருநாராயணபுரம்.

அனந்தாண்பிள்ளை - பாஷ்யாசார்யர்.
நாரணய்யங்கார்.

பெல்லாரி.

என் - பாலகிருஷ்ணபிள்ளை.
லோகநாதமுதலியார்.

மையூர்.

ஆதிராமாநுஜஅய்யங்கார்.

திருக்கடன்மல்லை.

பிள்ளைலோகம் - ஸ்ரீநிவாஸராகவாசார்யர்.

வேலூர்.

ஆ - சீதாராமமுதலியார்.

பழனி.

முத்துநாகமணியகாரர்.

கருங்கல்பாளையம்.

காமாக்ஷிபிள்ளை.

# மாஸந்தோறும்பணம்செலுத்துமவர்கள்.

## பட்டணம்.

* டி - ராமாநுஜாசார்யர்.
* ஆர் - ஸ்ரீநிவாஸராகவாசார்யர்.
* பி - அநந்தாசார்யர்.
அப்பா - சேஷய்யங்கார்.
செல்லமய்யங்கார். (உ-பாதி)
ஆண்மரைநாடு - அப்பனய்யங்கார்.
* வ - நாரணய்யங்கார்.
* கு - ஜொ - நரசிம்மாசார்யர்.
சா - சடகோபராமாநுஜய்ய.
தேவராஜபிள்ளை.
ராமசாமிபிள்ளை.
கிருஷ்ணபிள்ளை.
கோவிந்தபிள்ளை.
சாரங்கபாணிமுதலியார்.
வெங்கடராமாநுஜம்பிள்ளை.
என் - விஜயரங்கபிள்ளை.
* சோ - வீரராகவுலுநாயுடு.
கா - பார்த்தசாரதிநாயுடு.
எ - கோவிந்தராஜு.
ம - சு - சேஷாசலமுதலியார்.
நாராயணராஜு.
ம - செல்லப்பமுதலியார்.
வாசுதேவபிள்ளை.
ப - கோவிந்துநாயுடு.
வி - ஜயராமசெட்டியார்.
* எதிராஜமுதலியார்.
தொளசிங்கநாயக்கர்.
* வி - திருவேங்கடசாமிநாயக்கர்.
* வி - ராஜகோபாலமுதலியார்.
எ - வெங்கடேசம்பிள்ளை.
கோதண்டராமபிள்ளை.
ம - ரங்கசாமிமுதலியார்.
டி - ராஜகோபாலநாயுடு.
வி - மாணிக்கம்பிள்ளை.
வே - கி - நாராயணசாமிபிள்ளை.
பெருமாள்கோவில் - ஆழ்வார்.
* மதுரகவிராமாநுஜதாஸர் (ஒறையூர் வாடை)
* பார்த்தசாரதிதாஸர்.
கண்ணுபிள்ளை.
கேசவநாயக்கர்.
மா - மணவாளநாயுடு.
கிருஷ்ணப்பசெட்டியார்.
வி - அப்பாசாமிபிள்ளை.
சடகோபராமாநுஜதாஸர்.
டி - ஜி - வேணுகோபாலநாயுடு.
சுதர்சனநாயுடு.
மதுரகவிராமாநுஜதாஸர்.
* ப - வாசுதேவமுதலியார்.
கா - குப்புசாமிமுதலியார்.
கிருஷ்ணசாமிபிள்ளை.
மை - ஸ்ரீநிவாஸபிள்ளை.
* எம் - எஸ் - ஸ்ரீநிவாஸமுதலியார்.
* மணம்பேடு - ராகவமுதலியார்.
* பி - வி - சோமசுந்தரமுதலியார்.
சக்ரவர்த்திதிருமகனிராமாநுஜதாஸர். (உ - பாதி)
இளையாழ்வார்.
வெ - செல்லபிள்ளை.
நாராயணசாமி.
கிருஷ்ணசாமிசெட்டியார்.
பொன்னைபிள்ளை.
* அ - கந்தசாமிமுதலியார்.
சௌளியப்பநாயர்.
நாதமுனிநாயுடு.
வெ - வெங்கோபாபிள்ளை.
பூ - வெங்கடகிருஷ்ணபிள்ளை.
னா - கோவிந்தசெட்டியார்.
பி - [illegible]முதலியார்.
* [illegible] - ராஜகோபாலநாயுடு.
பி - திருவேங்கடபிள்ளை.
நாராயணசாமிபிள்ளை.
[illegible]செட்டியார்.

## திருவல்லிக்கேணி.

* ம - ச - நரசிம்மாசார்யர்.
ஸ்ரீ - கி - கிருஷ்ணசாமிஅய்யங்கார் (உ - பாதி)
* திருமழிசை - குப்பனய்யங்கார்.
ஸம்பத்குமாராசார்யர்.
* சாவகமுனி - அனந்தாசார்யர்.
தேவராஜதாஸர்.
* திருவேங்கடசாமிமுதலியார்.
* டி - நாராயணசாமிநாயுடு.
ராமகிருஷ்ணநாயுடு.
வி - கோவிந்தபிள்ளை.
ரவசங்கரமுதலியார்.
* டி - ரங்கநாதமுதலியார்.
ஜெ - ராமாநுஜலுநாயுடு.
கொண்டலநாயுடு.
வி - பார்த்தசாரதிநாயுடு.
* ராஜுபிள்ளைஸம்ஸாரம்.
அய்யாதுரைமுதலியார்.
ராஜகோபாலமுதலியார்.

## திருவடசூளம்பேட்டை.

பார்த்தசாரதிபிள்ளை.
டி - ராஜகோபாலராஜு.
பி - சுப்பராயுலுநாயுடு.
* ஸ்ரீ - வெங்கடராமநாயுடு.

## புதுப்பாக்கம்.

கேசவநாயக்கர்.

ராயபேட்டை.

வேணுகோபாலசெட்டியார்.
* பார்த்தசாரதிபிள்ளை.
போஜய்யநாயுடு.

நுங்கம்பாக்கம்.

பி - ராகவாசார்யர்.

எழும்பூர்.

வி - வெங்கடாசார்யர்.
நாராயணசாமிநாயுடு.

கோமளீசுரன்கோவில்.

நாராயணசாமிராஜு.

சிந்தாத்திரிப்பேட்டை.

ராகவாசார்யர்.
ராகவுலுநாயுடு.
சுப்பராயுலுநாயுடு.
* பி - சரவணபெருமாள்முதலியார்.
* சடகோபமுதலியார்.
பி-ராமாநுஜுலுநாயுடு.
நரஸிம்முலு.

பெரியமெட்டு.

பி - ஸ்ரீநிவாஸபிள்ளை.

சூளை.

கூ - முனிசாமிநாயுடு.

* ஸ்ரீநிவாஸமுதலியார்.
* நாதமுனிநாயுடு.
* வரதராஜுலுநாயுடு.
பி - ராமசாமிநாயுடு.

புரசபாக்கம்.

கா - ராமசுவாமிநாயுடு.
பி - பார்த்தசாரதிநாயுடு.
* சேமம் - வேணுகோபாலமுதலியார்
பு - திருவேங்கடராமாநுஜதாஸர்.
* டி - ராஜகோபாலநாயகர்.
சே - கோவிந்தராஜமுதலியார்.
தாமோதரம்பிள்ளை.
* பார்த்தசாரதிநாயுடு.
* ஸ்ரீநிவாஸமுதலியார்.

சைதாபேட்டை.

ராஜகோபாலாசார்யர்.

மைலாப்பூர்.

பாஷ்யகாரர்ஸ்வாமி.
ஸ்ரீநிவாஸமுதலியார்.
ம - நயனாபராயக்கா.
ப - சின்ன - கிருஷ்ணரெட்டியார்.
வெள்ளியம்பலவாத்தியார்.

ஆலந்தூர்.

ஆதிகேசவலுநாயுடு.
ராமம்முலுநாயுடு.

---

இந்தக்ரந்தம் வெளியாவதற்குக் கூடியமுயற்சிசெய்து
கையொப்பக்காரர்களைச் சேர்த்துத்தந்து பேருதவிசெய்தவர்கள்.

திருவாலி - ஸாமிஅய்யங்கார்.
விஞ்சமூர்-பார்த்தசாரதிஅய்யங்கார்.
கோயிலஅழகியமணவாளஏகாங்கி.
செ - இ - ரங்கசாமிமுதலியார்.
குருஸாமிநாயுடு.
வி - கோவிந்தபிள்ளை.

ரங்கசாமிதாஸர்.
முத்துகிருஷ்ணபிள்ளை.
பாலகிருஷ்ணநாயுடு.
ஐயாசாமிநாயுடு.
ராஜகோபாலமுதலியார்.

---

(*) இக்குறிப்புள்ள கையொப்பக்காரர்கள், முதல்ஸம்புடத்துடன் நிறுத்திவிட நினைத்திருப்பதாகத்தோற்றுகிறது; அப்படி நிறுத்திவிடுவதினால் இந்தக்ரந்தம்இருவர்க்கும் உபயோகமின்றிப்போவதை யோசித்து, "கையொப்பக்காரர்கள் நடுவில் நீங்கக்கூடாது" என்னும் ஏற்பாட்டைக்கவனிப்பதுமன்றி, தங்களுக்குப்பெற்றுக்கொள்ள ஸந்தர்ப்பப்படாவிடினும் வேறொருவர்க்காவது மாற்றித்தந்து க்ரந்தத்தைத்தலைக்கட்டித்தரவேணுமென்றுகேட்டுக்கொள்ளுகிறேன்.

கையொப்பக்காரர்களெல்லாரும் தங்கள்தங்கள் இஷ்டர்களுக்குத் தெரிவித்துத் தங்களால்முயன்றமட்டும் கையொப்பக்காரர்களைச் சேர்த்து தொடங்கின காரியத்தைக் கூடியசீக்கிரத்தில் முடிக்கும்படி பொருளுதவிசெய்யவேண்டுமென்று கோருகிறேன்.

☞ அ. க. கிருஷ்ணமாசார்யர்.

திருவல்லிக்கேணி-பேயாழ்வார்ஸந்நிதி வீதி-கூ-வது கதவிலக்கம்.

ஸ்ரீ......................

ஸ்ரீ

# திருமங்கையாழ்வார்ப்ரபாவம்.

" [illegible] " " [illegible] " ( [illegible] — [illegible] — " [illegible] ) " [illegible] " ( [illegible] — [illegible] ) என்று திவ்யஸூரிசரிதையிலே சொல்லியிருக்கிறது.

" [illegible] " ( [illegible] | [illegible] )

திருமங்கையாழ்வார் ; திருவாலிதிருநகரியிலே திருக்குறையலூரிலே, நளவர்ஷம் கார்த்திகைமாஸம் க்ருத்திகாநக்ஷத்ரத்திலே, ஸ்ரீசார்ங்காம்ஸராய் அவதரித்தருளினார். ம்லேச்சவம்ஸத்தில் அவதரிக்கையாலே, அவர்களும் இவர்க்கு நீலநிறத்தரென்று திருநாமம் சாத்தினார்கள். "தெரியேன்பாலகனாய்" என்கிறபடியே — பால்யாவஸ்தாநந்தரம் ப்ராப்தயௌவநராய் * மாரனார்வரிவெஞ்சிலைக்காட்செய்து, * தெரிவைமாருருவமேமருவி, மிகவும் விஷயப்ரவணராய், ஸ்வகரத்ருத ஸஸ்த்ரப்ரகாண்டராய், சோளபூபதியை ஸேவித்து யுத்தபராக்ராந்தராய் ப்ரவீரராயிருக்கிற இவர்க்கு, ஸஹாயபூதராக, நீர்மேல்நடப்பான், நிழலிலொதுங்குவான், சாயைபிடிப்பான், தாளூதுவான், உசரந்தொங்குவான் என்கிற மந்த்ரிகளும், ஆடல்மாவலவன் என்கிற குதிரைநம்பிரானும், "அமரில்கடமாகளியானை" என்கிற யானைநம்பிரானுமாக இப்படியிருக்கிற இவரை ; அந்தராஜாவும் ஒருதேசாதிபதியாக்கி, சிலசேனாநாயகனுமாக்கிவைத்துப் போருகிறகாலத்திலே ; திருவாலிகாட்டிலே நன்றாயிருப்பதொரு * தடத்தவிழ் தாமரைப்பொய்கையிலே "சிலம்பார்க்கவந்து தெய்வ

மகளிர்களாடும்சீர்" என்கிறபடியே - சில அப்ஸரஸ்ஸுக்கள்வந்து அதிலே நாளும் ஜலக்ரீடைபண்ணிப்போக, அவர்களிலே திருமாமகளும் ஒரு அப்ஸரஸ்ஸு வேஷத்தை தரித்துக்கொண்டு குமுதமலர் கொய்யப் புறப்படுகையாலே கூடவந்தவர்கள் இவளைவிட்டுப்போக, இவள் மாநுஷமான ஶரீரத்தை பரிக்ரஹித்துத் தனித்துநிற்க, அவ்வளவிலே, திருநாங்கூரில் எம்பெருமானை ஸேவித்திருப்பானொரு பிஷக்வரனை பாகவதோத்தமன் அநுஷ்டாநார்த்தமாகவந்து, இப்பெண்பிள்ளையைக்கண்டு, "நீ யார்? தனித்திருப்பானென்" என்று கேட்க; அவளும் "கூடவந்த பெண்பிள்ளைகள் என்னைவிட்டுப்போனார்கள், என்னை இனி உம்மோடே கொண்டுபோம்" என்று தான் வந்த க்ரமத்தை அவர்க்குச்சொல்ல; அவரும், புத்ரஹீநராகையாலே மிகவுமுகந்து, "ஆகில் நம்மூரே வா" என்று அழைத்துக் கொண்டுபோய், ஸ்வபத்நிகையிலே, குமாரி வந்த வரத்தைச்சொல்லி, போஷிக்கும்படி காட்டிக்கொடுக்க; அவளும் வந்த்யையாகையாலே அதிஸந்தோஷத்துடன் அங்கீகரித்து, இவள் குமுதமலர்கொண்டு நின்றதுவே நிரூபகமாக "குமுதவல்லியார்" என்று திருநாமம் சாத்தி, தம்பதிகளிருவரும் தமக்கு புத்ரியாக வளர்த்துக்கொண்டு போருகிறகாலத்திலே, இவர்க்குச் சிலர்போய் இப்பெண்பிள்ளையினுடைய ரூபலாவண்யாதிகளை மிகவும் ஶ்லாகித்துச்சொல்ல; இவரும் அத்தைக்கேட்டு, * நின்றவாநில்லா நெஞ்சினராய், * அவர்தம் கலவியேகருதியோடி, திருநாங்கூரிலேசென்று, மருத்துவனென்ற பாகவதனகத்திற்புகுந்து, அவனுடனே ஸம்பாஷணம் பண்ணிக்கொண்டிருக்கச்செய்தே, இப்பெண்பிள்ளை புறப்படக்கண்டு, விஸ்மயப்பட்டு, பாகவதபிஷக்வரரைக்குறித்து, "ஸௌரஸௌந்தர்யபரமான ஸௌந்த அநபத்யரான உமக்கு எங்ஙனே யுண்டாயிற்று?" என்றுகேட்க; அவரும் இவருடனே அப்பெண்ணின் வரத்தைச்சொல்லி, "இப்பெண்ணிலே அநபத்யதாதுக்கம் தீர்ந்தேன், அந்தராதகுலகோத்ரையான இவளை யாருக்கு வாழ்க்கைப்படுத்துவேன் என்று மிகவும் விவாஹோசிதவயஸ்ஸைக்கண்டு வ்யாகுலாந்தஃகரணனாகாநின்றேன்" என்ன; இவரும் "இப்பெண்ணை நமக்குப்பத்நியாகத் தரவேணும்" என்று வஸ்த்ரபூஷணாதி த்ரவ்யங்களை ஸங்கோசமறக்கொடுத்து, மிகவுமநுவர்த்தித்து விரும்பிக்கேட்க; தம்பதிகளிருவரும் இப்பெண்பிள்ளையை இவருக்குக் கொடுப்பதாக உத்யோகிக்க, அப்பெண்பிள்ளையும் "தாவத்வைஷ்ணவயோஷிநாம்" (ஶ்ரீவிஷ்ணுதர்மம்) என்கிற திருவிலச்சினை திருநாமமுள்ளவர்க்கொழிய மற்றொருவர்க்கென்னைப் பேசவொட்டேன் என்று தன்னுடைய நெஞ்சில் அத்யவஸாயத்தைச்சொல்ல; இவரும் அவ்வசநத்தைக்கேட்டு, "ஸுஹ்ருத்ஸ்நேஹம்" (ஶ்ரீபாகவதம்) என்கிறபடியே அதித்வரையோடே திருநறையூரிலே சென்று, "பொன்னியலுமாடக்கவாடம்கடந்துபுக்கு" என்கிறபடியே,

நம்பிதிருமுன்பே வந்து, "[illegible]" ( అన్వితస్తేనచక్రేణబాహుమూలేతులాంఛితః ) என்றும், "தீயிற் பொலிகின்ற செஞ்சுடராழி திகழ் திருச்சக்கரத்தின் கோயிற்பொறியாலே யொற்றுண்டுநின்று" என்றும்சொல்லுகிறபடியே திருவிலச்சினையும் தரித்து, "[illegible]" ( సద్వైర్వైశ్వత మృదాధార్యమూర్ధ్వపుండ్రం యథావిధి - ఋజూనిసాంతరాళాని యజ్ఞేషుద్వాదశస్వపి ) என்று சொல்லுகிறபடியே கேசவாதிநாமங்களையு முடையராய்வர, குமுதவல்லியாரும் ஆழ்வாரைப்பார்த்து, "[illegible]" ( ఆరాధనానాం సర్వేషాం విష్ణోరారాధనం పరం - తస్మాత్పరతరం ప్రోక్తం తదీయారాధనం నృప ) என்கையாலே ஒருஸம்வத்ஸரம் நித்யமாக ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர்களை அமுதுசெய்வித்து அவர்களுடைய ஸ்ரீபாததீர்த்தமும் தளிகைப்ரஸாதமும் ஸ்வீகரித்து நிறைவேறினாலொழிய உம்மைநான் பர்த்தாவாக அங்கீகரிப்பதில்லை என்று ஒரு நியமம்பண்ண, அவரும் அதுக்கிசைந்து ப்ராவண்யாதிசயத்தாலே ப்ரதிஜ்ஞைபண்ணிக்கொடுக்க, அதின்பின்பு குமுதவல்லியாரை நீலநிறத்தார்க்கு * நாடும் ஊரும்அறியநல்லதோர்கண்ணாலஞ்செய்து, உதகபூர்வகமாக ஸமர்ப்பித்தார்கள்.

அநந்தரம், ஆழ்வாரும் அதிப்ரீதியுடனே * திருமாலடியார்களைப் பூசிக்கநோற்க ஒருப்பட்டு, அதுக்குத்தம்முடைய ஸர்வதநத்தையுமிட்டு ததியாராதநம் பண்ணிக்கொண்டு போருகிறகாலத்திலே, பரகாலன் பகுதித்ரவ்யமெல்லாம் வ்யயம்பண்ணித் ததியாராதநம் பண்ணுகிறான் என்று சோழராஜாவுக்குச்சிலர்சொல்ல, அவனும் கேட்டு குபிதனாய், பகுதிக்கு இவர்பக்கல் தரவுவரக்காட்ட, இவரும் அந்தந்நாளுக்கு வந்த ராஜமநுஷ்யர்க்கு"[illegible]" ( పద్యామేవనిశాముఖేదినముఖే మధ్యాహ్నసాయాహ్నయోః - పశ్చాద్వ్రజగ్రామాంతరస్థోపివా ) என்னுமாப்போலே சிலபர்யாயங்களைச்சொல்லக்கேட்டுச்சலித்து, ராஜமநுஷ்யர் பகுதித்ரவ்யம் தரவேணுமென்று நிர்ப்பந்திக்க, இவரும் குபிதராய் அவர்களைத்தள்ளிவிட, அவர்களும் போய் இவ்விசேஷத்தைச் சோழராஜாவுக்கு அறிவிக்க, அவனும் குபிதனாய், இவர் ஆஜ்ஞாபங்கம் பண்ணினதுக்கு மிகவும்சீறி, தன் ஸேநாதிபதியையழைத்து, "பரகாலனை இங்கேபிடித்துக்கொண்டுவா" என்று ஆஜ்ஞாபிக்க, அவனும் கஜதுரகபதாதியோடே சென்று இவரைவளைத்துப்பிடிக்கத்தேட, இவரும் துரகாரூடராய் ஸ்வபலஸஹிதராய்வந்து, ஆலித்துக்கொண்டு அவன்படைமேலேவிழுந்து,

கஜதுரகபதாதிகளைத்துண்டித்து, பராஜிதராக்கியோட்டிவிட; ஸேநா
திபதியும் காந்திஶீகனாய்ஓடி, வந்த பராஜயத்தை ராஜாவுக்கு அறிவி
க்க, சோழபூபனும்கேட்டு, கோபஸம்ரக்தலோசநனாய், அப்போதே
தன் சதுரங்கபலத்தோடே புறப்பட்டுவர, அவனுடைய ஸேநாஸ
முத்ரம் இவரைவளைய, இவரும் பூர்வம்போலே த்ருடகரவாளபயங்
கரஹஸ்தராய் ஆவித்துக்கொண்டுவந்து, இவன்ஸேநாஸமுத்ரத்தை
மந்தராத்ரிபோலே மதிக்க, ஸர்வரும் பராஜிதராய் ஓடிவந்து ராஜா
வின்மேலேவிழ, ராஜாவும் அதிரௌத்ரத்துடனே, ஓடுகிறபலத்தை
நிறுத்தி, •ஜகதேகதநுர்த்தரனை பெருமையோடே இவரைஸேநா
ஸமுத்ரமத்யஸ்தராம்படி வளைய, இவரும் அதிவீரராய், ஸ்வகரந்
ருத ஶஸ்த்ரபலத்தாலே சேனையைமதியாமல் ஸம்ஹரிக்குமதுகண்டு,
அதிஸந்துஷ்டனாய், இவரை, "நீர்ஒன்றுக்கும்பயப்படவேண்டா, உம்
முடைய தைர்ய ஸ்தைர்ய ஶௌர்ய வீர்யங்களைக்கண்டு மிகவும் ஸந்
தோஷமாயிற்று, நீர்செய்த அபராதங்களை யெல்லாம் மறந்தோம்,
அஞ்சாதே நம்மை நம்பிவருவது" என்று தம்தருதைவங்களைத்தொ
ட்டு ஶபதம்பண்ணிக் கொடுக்க; இவரும்நம்பி அவனண்டையிலே
சென்றவளவிலே, இவருடைய பராக்ரமத்தை மிகவும் ஶ்லாகித்து,
"நீர்செய்த த்ரோஹமெல்லாம் மறந்தோம், நம்பகுதித்ரவ்யங்களை
மாத்ரம் தரவேணும்" என்று இவரைத்தன்மந்த்ரிவசமாக்கி ஊரே
மீண்டான். அந்த ஸசிவனும் படைவீட்டிலே சென்று, இவரைப்பிடி
த்துக்கொண்டு வந்து, ஒருதேவதாலயத்திலே சிறைவைக்க, இவரும்
அந்தக்கோயிலிலே மூன்றுநாள் அமுதுசெய்யாமல் உபவஸித்தரா
யிருக்க, இப்படி உபவஸித்து ஆர்த்தராயிருக்கிற இவர்ஸ்வப்நத்திலே
பேரருளாளர் எழுந்தருளி, "உமக்குப்பகுதிக்குவேண்டிய த்ரவ்யம்
தருகிறோம், காஞ்சீபுரத்தேற வாரும்" என்றருளிச்செய்ய; இவரும்
நிஶ்சிதார்த்தராயிருக்க, பொழுதுவிடிந்தவளவிலே, கரதநம் தரவே
ணுமென்று வந்த அமாத்யனுடனே, "காஞ்சீபுரத்தே, ஆபத்தந
மாகச்சிலதநம் சேமித்துக்கிடக்கிறது, அங்கேவந்தால் உங்கள்தநம்
தருகிறோம்" என்ன; அவனும் ராஜாவுக்கு அறிவிக்க; அவன் "அத்
தையும்பார்ப்போம், ஜாகரூகராய்க்காவலிட்டுக்கொண்டுபோங்கோள்"
என்று ஆஜ்ஞாபிக்க; இவரும் காவலுடனே காஞ்சீநகரியேறச்
சென்று, நிக்ஷேபதநம் சோதித்துக் காணாமையாலே முசித்து மூடிக்
கிடக்க; அவ்வளவிலே கருணாகரரான வரதராஜரும், "அஞ்சாதே
கொள்ளும்" என்று, வேகவதீதீரத்திலே தநமிருக்கிறவிடம் அடையா
ளத்துடனே ஸ்வப்நமுகேந அருளிச்செய்ய; இவரும் அங்கே தநம்
கண்டெடுத்து, ந்ருபதநம்கொடுத்து, ஶேஷித்த தநத்தை ததீயாரா
தநார்த்தமாகவைத்துக்கொள்ள; அந்தஅமாத்யனும் அந்ததநத்தை
ந்ருபதிமுன்னே வைக்க, ராஜாவும் வரதராஜர் ப்ரஸந்நராய் த்ரவ்யம்
தந்தபடிகேட்டு விஸ்மிதனாய், இவர்ஸாமாந்யரன்று, மஹாபாகவதரிறே;

இது, த்ரௌபதிக்குப்புடவைசுரந்தாப்போலே யிருந்ததுஎன்று, இந்த தநத்தை நம் கோசத்திலே வைக்கவொண்ணாதென்று பார்த்து, ஆழ்வாரையழைத்து, அபராதக்ஷாபணம் பண்ணிக்கொண்டு, பஹுமாநமாக பஹுமாநம்பண்ணிப் போகவிட்டு, இவர்உபவாஸமிருந்த தோஷம்போம்படி அந்தத்ரவ்யத்தை தேவப்ராஹ்மணஸந்தர்ப்பணம்பண்ணி தோஷம்தீர்த்துக்கொண்டான். பின்னை, இவரும் லேஷித்த த்ரவ்யங்கொண்டு ததியாராதநம் நடத்தி, தநமெல்லாம் தீர்ந்து, கையில் ஒன்றுமில்லாமையாலே இவர்வழிபறித்தாகிலும் தநார்ஜ்ஜநம் பண்ணித் ததியாராதநம் அவிச்சிந்நமாக நடத்தவேணுமென்று, வழிபறித்துத் தநங்கொண்டுவந்து, ததியாராதநம் பக்திபுரஸ்ஸரமாக நடத்திக்கொண்டு போராநிற்க, ஸர்வேஶ்வரனும் வழிபறித்தும் ஸ்ரீவைஷ்ணவர்க்கு ஆகையாலே இவர் சரமபுருஷார்த்தத்திலே நிஷ்டரானது கண்டு, அந்த ஸுக்ருதமே பற்றாசாக இவரை விசேஷகடாக்ஷம் பண்ணி அங்கீகரிக்கவேணுமென்று திருவுள்ளமாய், இவர்வழிபறிக்கைக்கு உசிதமான பரிகரத்தையுங்கூட்டிக்கொண்டு, திருமணங்கொல்லையில் திருவரசின்மேலே கொடிவைத்துப் பதுங்கியிருக்கிற வழியிலே, "ஸாக்ஷாந் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும் - மக்நாநுத்தரதே லோகாந் காருண்யாச் சாஸ்த்ரபாணிநா" (సాక్షాన్నారాయణో దేవః కృత్వా మర్త్యమయీం తనుం - మగ్నానుద్ధరతే లోకాన్ కారుణ్యాచ్ఛాస్త్రపాణినా) என்றும "பிதாவாகிய பிரானார் பிரமகுருவாகிவந்து" என்றுஞ்சொல்லுகிறபடியே – வயலாலிமணவாளன் திருமணம் புணர்ந்துவருகிற மணவாளக்கோலமும் தானுமாய், ப்ராஹ்மணவேஷத்தை பரிக்ரஹித்து, பத்நீஸஹிதனாய், ஸர்வாபரணபூஷிதனாய், பஹுத்ரவ்யங்கொண்டு, அநேகம் திரளோடு வந்து தோற்ற; இத்திரளைக்கண்டு ஆலித்துக்கொண்டு, ஸாயுதராய், ஸபரிகரராய், பெரிய ஆரவாரம் பண்ணிக்கொண்டு, இவரைவளைந்து சூழ்ந்து, வஸ்த்ராபரணங்களையும் அபஹரித்துக்கொண்டு அநுகாழியையும் திருமுத்தாலே கடித்துவாங்க; எம்பெருமானும் இத்தைக்கண்டு, நமகலியனோ என்றருளிச்செய்தார். பின்பு இவையித்தனையும் சுமைசுமையாகக்கட்டியெடுக்கப்பார்க்க, அவை பேர்க்கவும்போராதபடியாலே மணவாளனை ப்ராஹ்மணனைப் பார்த்து, நீ மந்த்ரவாதம்பண்ணினையென்று நெருக்க, அம்மந்த்ரத்தை உமக்குச்சொல்லுகிறோம் வாருமென்று கழுத்தையணைக்க, இவரும் ஓமென்று ஸம்மதித்து ஹடாத்கரித்து வாள்வலியால் கேட்க, "நீயென்செவியின்வழிபுகுந்து" என்கிறபடியே*செவிக்கினியசெஞ்சொல்லை செவிக்கின்பமாகஆழ்வாருடைய வலத்திருச்செவியிலே, "ருசோ யஜூம்ஷி ஸாமாநி ததைவாதர்வணாநி ச - ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்ஸ்தம் யச்சாந்யதபி வாங்மயம்" (ఋచో యజూంషి సామాని తథైవాథర్వణాని చ - సర్వమష్టాక్షరాంతస్స్థం యచ్చాన్యదపి వాఙ్మయం) என்றும், "ஸர்வவேதாந்தஸாரார்த்தஸம்

ஸாரார்ணவதாரக: - கதிரஷ்டாக்ஷரோ ந்ரூணாமபுநர்ப்பவகாங்க்ஷிணாம்” (సర్వవేదాంతసారార్థ స్సంసారార్ణవతారకః - గతిరష్టాక్షరో నౄణామపునర్భవకాంక్షిణాం) என்றும், “ஐஹலௌகிகமைச்வர்யம் ஸ்வர்க்காத்யம் பாரலௌகிகம் - கைவல்யம் பகவந்தம் ச மந்த்ரோயம் ஸாதயிஷ்யதி” (ఐహలౌకికమైశ్వర్యం స్వర్గాద్యం పారలౌకికం - కైవల్యం భగవంతం చ మన్త్రోయం సాధయిష్యతి) என்றுஞ் சொல்லுகிறபடியே ஸகலவேதஸங்க்ரஹமுமாய், அநந்தக்லேசபாஜநமான ஸம்ஸாரார்ணவத்தினின்றும் கரையேற்றவற்றாய், ஐஹிகாமுஷ்மிக ஐச்வர்ய கைவல்யாபுநராவ்ருத்திலக்ஷணரூப பரமபுருஷார்த்தம் முதலான அகிலார்த்தப்ரதமுமாய், “ஓமித்யக்ரே வ்யாஹரேத் - நம இதி பச்சாத் - நாராயணாயேத்யுபரிஷ்டாத் - ஓமித்யேகாக்ஷரம் - நம இதி த்வே அக்ஷரே - நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி” (ఓమిత్యగ్రే వ్యాహరేత్ - నమ ఇతి పశ్చాత్ - నారాయణాయేత్యుపరిష్టాత్ - ఓమిత్యేకాక్షరం - నమ ఇతి ద్వే అక్షరే - నారాయణాయేతి పఞ్చాక్షరాణి) என்கிறபடியே, “அவன்பேரெட்டெழுத்தும்” என்று-எட்டுத்திருவக்ஷரமாய், உபநிஷத்தில் அப்படியே பதத்ரயாத்மகமாய், அவற்றாலே ஸ்வரூபோபாயபுருஷார்த்த ப்ரகாசகமுமாய், மற்றைவ்யாபகத்வயம் போலன்றிக்கே இதிலே நாரசப்தமுண்டாகையாலே சப்தபூர்த்தியுமுடைத்தாய், “பேராளன்பேரோதும் பெரியோர்” என்கையாலே சிஷ்டபரிக்ரஹயுக்தமாய், “மந்த்ராணாம் பரமோ மந்த்ரோ குஹ்யாநாம் குஹ்யமுத்தமம் - பவித்ரஞ்ச பவித்ராணாம் மூலமந்த்ரஸ் ஸநாதந:” (మన్త్రాణాం పరమో మన్త్రో గుహ్యానాం గుహ్యముత్తమం - పవిత్రఞ్చ పవిత్రాణాం మూలమన్త్రస్సనాతనః) என்கிறபடியே உத்க்ருஷ்டதமமாகச் சொல்லப்படுகிற மூலமந்த்ரமான பெரியதிருமந்த்ரத்தை நரநாராயணனாய்த் தனக்குத்தானே உபதேசித்துக்கொண்ட இழவுதீரக் கலியனுக்கு, (க) கிழிச்சீரையோடே தநத்தைக்கொடுப்பாரைப்போலே, “பெற்றதாயினுமாயினசெய்யும் நலந்தருஞ்சொல்லை நான் கண்டுகொண்டேன்” என்று தம்வாயாரச்சொல்லும்படி உபதேசித்தருள; அநந்தரம், “லக்ஷ்மீஸஹாயோ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்யரூபயா” (లక్ష్మీసహాయో హృషీకేశో దేవ్యా కారుణ్యరూపయా) என்கிறபடியே க்ருபைதானொருவடிவுகொண்டாப்போலே காருண்யரூபையான ஸ்ரீஸஹாயனாய்க்கொண்டு, “காய்சினப்பறவையூர்ந்து பொன்மலையின்மீமிசைக் கார்முகில்போல்” என்றும், “ஸுவர்ணப்ருஷ்டே விபபௌ ச்யாம: பீதாம்பரோ ஹரி: - காஞ்சநஸ்ய கிரேச் ச்ருங்கே ஸதடித்தோயதோ யதா” (సువర్ణపృష్ఠే విబభౌ శ్యామః పీతాంబరో హరిః - కాఞ్చనస్య గిరేశ్శృఙ్గే సతటిత్తోయదో యథా) என்றுஞ் சொல்லுகிறபடியே ஸுவர்ணரூபியான பெரியதிருவடியை மேற்கொண்டு வந்து நீலமேகநிபமான அவ்வடிவை, கநககிரிமீதில்

(க) கிழிச்சீரை - சாளிகை, பணம்வைத்திருக்கும் முடிப்பு.

கார்முகில் படிந்துலாவுமாப்போலே விளங்குகிற திவ்யமங்களவிக்ரஹ ஸேவையை இவ்வாழ்வார்க்கு * மயர்வறமதிநலமருளி ஸாக்ஷாத்கரிப்பித்தருள,இவ்வாழ்வாரும் தமக்கு நிர்ஹேதுகலப்தமான திருமந்த்ரத்தையும், அதுக்குள்ளீடான ஸ்ரீமந்நாராயணனுடைய ஸ்வரூப ரூப குண விபூதி சேஷ்டிதங்களையும், "திருமாமகளாலருள்மாரி" என்னும்படி பெரியபிராட்டியாராருளாலே இவற்றையெல்லாம் இவர் *தக்க ஞானக்கண்களாலே கண்டநுபவித்து, அநுபவஜநித ப்ரீத்யதிஶயத்தாலே,வாக்ப்ரவாஹரூபேண பெருவெள்ளமிட்டு, பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம்,திருநெடுந்தாண்டகம்,திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரியதிருமடல் என்கிற இவ்வாறு ப்ரபந்தங்களையும் * ஸ்ரீசடகோபவாங்மயமான த்ராமிடவேதசதுஷ்டயத்துக்கு ஷடங்கமாக, ஆசு, மதுரம், சித்ரம், விஸ்தாரம் என்கிற சதுர்வித கவிகளாலே யருளிச்செய்து, லோகத்துக்கு "நாலுகவிப்பெருமாள்" என்று ப்ரஸித்தராம்படி உபகரித்தருளியும், முன்பு திருமொழியருளிச்செய்துகொண்டு திவ்யதேசங்கள்தோறும்ஸேவித்துக்கொண் டெழுந்தருளாநிற்கச்செய்தே, சோழமண்டலத்திலே எழுந்தருளினவளவிலே, "நாலுகவிப்பெருமாள்வந்தார், நம்கலியன்வந்தார், ஆலிநாடன் வந்தார்,அருள்மாரிவந்தார், கொங்குமலர்க்குழலியர்வேள் வந்தார், மங்கைவேந்தன்வந்தார், பரகாலன் வந்தார், பரவாதிமத்தகஜகண்டீரவர் வந்தார்" என்று விருதூதிச்செல்லாநிற்க ; அங்கே சம்பந்தன் ஶிஷ்யர்கள் வந்து, ஆழ்வாரை, எங்கள் சம்பந்தப்பெருமாளிருக்கிறவிடத்திலே நீர் நாலுகவிப்பெருமாள் வந்தார் என்று விருதூதிச்செல்லத் தகாதென்றுதடுக்க ; ஆழ்வாரும், உங்கள் சம்பந்தப்பெருமாளுடனே தர்க்கிக்கக்கடவோமென்றருளிச்செய்ய; ஆகில் நம்மூரே வாருமென்றழைத்துக்கொண்டுபோய்,இவ்விஶேஷத்தைச்சம்பந்தனுக்கு அறிவிக்க ; அவனும் இவருடனே தர்க்கிக்கக்கடவோமென்றுவர; ஊரடையஶைவராய், ஊரில் ஒருதிருமுற்றமின்றியே, ஸ்ரீவைஷ்ணவர்களுமின்றியே, வீரபாஷண்டபூயிஷ்டமாயிருக்கக்கண்டு, இவ்வாழ்வார்க்கு பகவத்விக்ரஹமின்றியே வாக்குக் கிளம்பாதிருக்க, இதுக்கு என்செய்யக்கடவோமென்று சிந்தித்திருக்கச்செய்தே, வைஷ்ணவியாயிருப்பாளொரு அம்மையாரைக்கண்டு,இப்படியிருக்கிறது ஆகையால் உன்திருவாராதநமான எம்பெருமானை எனக்கு ஒருக்ஷணம் தரவேணுமென்று கேட்டுக்கொள்ள ; அவளும் ஆழ்வாருக்கு, தனக்காராதநமான வெண்ணெயுண்ட தாடாளனை எழுந்தருள்வித்துக்கொடுக்க; ஆழ்வாரும், அவரையுங்கொண்டு சம்பந்தனிருந்தவிடத்தேறச்சென்றிருக்க ; அவனும், இவரைக்குறித்து, ஒரு குறள் சொல்லுமென்ன ; ஆழ்வாரும் "ஒருகுறளாயிருநிலம்" என்கிற திருமொழியை அருளிச்செய்து, தம் பெருமையெல்லாந் தோற்ற, " ஆலிநாடனருள்மாரி யரட்டமுக்கியடையார்சீயம்-கொங்குமலர்க்குழலியர் வேள் மங்கைவேந்தன் கொற்றவேற்பரகாலன் கலியன் சொன்ன -

சங்கமுகத்தமிழ்மாலை'' என்ன; அவனும் இத்தைக்கேட்டு ப்ரத்யுத்தரம் சொல்லிக் கவிசொல்ல க்ஷமனன்றியே, இப்படியுமொருவருண்டோ! என்று ஆஶ்சர்யப்பட்டு, நாலுகவிப்பெருமாள் என்னும் விருது உமக்கே செல்லும், விருதூதிக்கொண்டு செல்லீரென்று கும்பிட்டுப் போனான்.

அநந்தரம், "விமாநம் ப்ரணவாகாரம் வேதஶ்ருங்கம் மஹாத்புதம் - ஸ்ரீரங்கஶாயீ பகவாந் ப்ரணவார்த்தப்ரகாஶக:" (విమానం ప్రణవాకారం వేదశృంగం మహాద్భుతం-శ్రీరంగశాయీ భగవాన్ ప్రణవార్థప్రకాశకః) என்கிறபடியே, *மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத்திசைநோக்கி மலர்க்கண்வைத்த என்னுடைய திருவரங்கர்க்கு, "விமாநம் ப்ரணவாகாரம்" என்று ப்ரணவாகாரமத்யஸ்தரான பெரியபெருமாளுக்கும், திருவரங்கச் செல்வனாரான அழகியமணவாளர்க்கும் விமாநமண்டபகோபுரப்ராஸாத ப்ராகாராதிரூபமான கைங்கர்யங்கள்செய்தருளவேணுமென்று திருவுள்ளமாய், அதுக்குத் தம்முடைய பரிஜநங்களையழைத்து, நம்பெருமாளுக்குத் திருமதிள்கள் முதலான கைங்கர்யம் பண்ணுவிக்க தநார்ஜநம்பண்ணும் விரகென் என்று கேட்டருள; அவர்களும், நாகபட்டணத்திலே புலையறமாயிருப்பதொரு புத்தப்ரதிமை ஸ்வர்ணமயஸ்வரூபமாயிருக்கும், அத்தைக்கொண்டுவந்து சிந்நபிந்நமாக்கி, "அறுப்பதே கருமங்கண்டாய்" என்று விண்ணப்பஞ்செய்ய; ஆழ்வாரும் அவர்கள் சொன்னபடியே நாகபட்டணத்திலேபோய், "ஈயத்தாலாகாதோ இரும்பினாலாகாதோ-பூயத்தால்மிக்கதொரு பூதத்தாலாகாதோ-தேயந்தேயத்துலங்கும்பித்தளை செம்பாலாகாதோ-மாயப்பொன்வேணுமோ மதித்துன்னைப்பண்ணுகைக்கு" என்று தத்பிம்பமனைத்தையும் அபஹரித்துக்கொண்டுவந்துபங்கப்படுத்தி, திருமதிள்கைங்கர்யத்துக்கு அர்ஹமாம்படி *சுட்டுரைத்த நன்பொன்னாக்கிக்கொண்டு கற்படிக்கொக்கவொரு துலைபடுத்தி, தத்த்ரவ்யத்தையிட்டுத் திருமதிள்முதலாகச்சிகரபர்யந்தமாகப்பண்ணவேணுமென்று உபக்ரமித்து, திருமதிள்கட்டுவிக்கிறசெவ்வையிலே, ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் பெரியபெருமாளுக்குத் திருமாலைசேர்க்கிற ஸ்தலம் நேர்பட, அவ்விடத்தைத் தப்பி யொதுங்கத் திருமதிள் கட்டுவித்தருள, இத்தை ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் பார்த்தருளி, திருவுள்ளமுகந்து, தாம்திருமாலைகொய்கிறகையாய் வர்த்திக்கிறதுக்கு உபகரணமான ஆயுதத்துக்கு அருள்மாரியென்று இவருடைய திருநாமம்சாத்தி, ப்ரீதராயருளினார். திருமங்கையாழ்வாரும், திருமதிள், திருமண்டபம், மற்றுமுண்டான கைங்கர்யங்களும் சிகரபர்யந்தமாகப் பண்ணுவித்து க்ருதார்த்தராயருளினார்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.



    

ஸ்ரீமதே வகுளபூஷணாய நம:.

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம:.

(ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஜீயரருளிச்செய்த தனியன்.)

రామానుజదయాపాత్రం జ్ఞానవైరాగ్యభూషణమ్।
శ్రీమద్వేఙ్కటనాథార్యం వన్దే వేదాన్తదేశికమ్॥

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம்-
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தேவேதாந்ததேஶிகம்.

(எம்பெருமானாரருளிச்செய்தது.)

లక్ష్మీనాథసమారమ్భాం నాథయామునమధ్యమామ్।
అస్మదాచార్యపర్యన్తాం వన్దేగురుపరమ్పరామ్॥

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்-
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தேகுருபரம்பராம்.

(கூரத்தாழ்வானருளிச்செய்தது.)

యోనిత్యమచ్యుతపదామ్బుజయుగ్మరుక్మ వ్యామోహతస్తదితరాణితృణాయమేనే।
అస్మద్గురోర్భగవతోఽస్యదయైకసిన్ధోః రామానుజస్యచరణౌశరణంప్రపద్యే॥

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணித்ருணாயமேநே-
அஸ்மத்குரோர்பகவதோஸ்யதயைகஸிந்தோ
ராமாநுஜஸ்யசரணௌசரணம்ப்ரபத்யே.

(ஆளவந்தாரருளிச்செய்தது.)

మాతాపితాయువతయస్తనయావిభూతి స్సర్వంయదేవనియమేనమదన్వయానామ్।
ఆద్యస్యనఃకులపతేర్వకుళాభిరామం శ్రీమత్తదఙ్ఘ్రియుగళంప్రణమామిమూర్ధ్నా॥

மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதிஸ்
ஸர்வம்யதேவநியமேநமதந்வயாநாம்-
ஆத்யஸ்யந:குலபதேர்வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம் ப்ரணமாமிமூர்த்நா.

(பராசரபட்டரருளிச்செய்தது.)

భూతంసరశ్చమహదాహ్వయభట్టనాథ శ్రీభక్తిసారకులశేఖరయోగివాహాన్।
భక్తాఙ్ఘ్రిరేణుపరకాలయతీన్ద్రమిశ్రాన్ శ్రీమత్పరాఙ్కుశమునింప్రణతోఽస్మినిత్యమ్॥

பூதம்ஸரஸ்சமஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலஶேகரயோகிவாஹாந்-
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிஶ்ராந்
ஸ்ரீமத்பராங்குஶமுநிம் ப்ரணதோஸ்மிநித்யம்.



ஸ்ரீமதேராமாநுஜாயநம꞉.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த
## பெரியதிருமொழியின்
### தனியன்கள்.

(திருக்கோளூர்நம்பிஅருளிச்செய்தது.)

మూలమ్.—కలయామికలిధ్వంసం కవింలోకదివాకరమ్।
యస్యగోభిఃప్రకాశాభి రావిద్యంనిహతంతమః॥

மூலம்.—கலயாமிகலித்வம்ஸம் கவிம்லோகதிவாகரம்-
யஸ்யகோபி꞉ப்ரகாஶாபி ராவித்யம்நிஹதம்தம꞉.

---

பதவுரை.—(కలి) கலி-கலிதோஷத்தை, (ధ్వంసం) த்வம்ஸம் - நசிப்பிக்குமவராய், (లోక) லோக-நாட்டாருடைய, (దివాకరమ్) திவாகரம்-அஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்குமவராய், (యస్య) யஸ்ய-யாதொருத்தருடைய, (ప్రకాశాభిః) ப்ரகாஶாபி꞉-விளங்காநின்றுள்ள, (గోభిః) கோபி꞉-உக்திகளினாலே, (ఆవిద్యమ్) ஆவித்யம்-அஜ்ஞாநப்ரயுக்தமான, (తమః) தம꞉-அந்தகாரமானது, (నిహతమ్) நிஹதம் - போக்கப்பட்டது, அப்படிப்பட்ட, (కవిమ్) கவிம் - பரகாலகவியை, (కలయామి) கலயாமி - ஸேவிக்கிறோம் என்கிறார். ... ... ... *

---

(பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த வ்யாக்யாநம்.)

அவதாரிகை.—(కలయామికలిధ్వంసమ్-கலயாமிகலித்வம்ஸம்) திருமொழிமுதலான திவ்யப்ரபந்தோபகாரத்துக்குத் திருமங்கையாழ்வாரைத் திருவடித்தொழும்படி சொல்லுகிறது.

வ்யாக்யாநம்.—(కలయామికలిధ్వంసమ్-கலயாமிகலித்வம்ஸம்) கலிகன்றி என்று நிரூபகத்தையுடையரான பரகாலகவியை, கலயாமி-(க) ப்ரணமேம என்கிறது. (లోకదివాకరమ్ – லோகதிவாகரம்) ஆதித்யன், (உ) பாஹ்யாந்தகாரத்தைப் போக்கும்; இவர், நாட்டார்க்கு (ங) பாஹ்யாப்யந்தராந்தகாரங்களிரண்டையும் போக்குவர். (యస్యగోభిః-யஸ்யகோபி꞉) யாதொருத்தருடைய, "(ச) యద్గోసహస్రమ్" "யத்கோஸஹஸ்ரம்" என்கிற மறையாயிரங்களினாலே; அவைதான் (ప్రకాశాభిః–ப்ரகாஶாபி꞉) என்று - * நடைவிளங்கு தமிழ்மாலையாய் * நெஞ்சுக்கிருள்கடிதீபமாயிருக்கும்; இப்படி ப்ரகாஶகங்களான ஸ்ரீஸூக்திகளினாலே, * அறிவிலாமனிசருடைய (ரு) ஆவித்யதமஸ்ஸு (சு) நிஹதமாய்த்து என்பது யாதொன்று, அத்தாலே அவரை (கலயாமி) என்கிறது. ... ... ... ... *

---

(க) ப்ரணமேம - ஸேவிக்கிறோம். (உ) பாஹ்யாந்தகாரம் - வெளியிருள். (ங) பாஹ்யாப்யந்தராந்தகாரங்கள்-புறத்திலும் அகத்திலுமுள்ளஇருள். (ச) யத்கோஸஹஸ்ரம் - யத்-யாதொரு ஆழ்வாருடைய, கோஸஹஸ்ரம் - ஆயிரம் ஸ்ரீஸூக்திகள். (ரு) ஆவித்யதமஸ்ஸு- (அவித்யையினால்) அஜ்ஞாநத்தாலுண்டாகும் அந்தகாரம். (சு) நிஹதம் - அடித்தல்.

(எம்பெருமானாரருளிச்செய்தது.)

மூ.—வாழிபரகாலன்; வாழிகலிகன்றி;
வாழிகுறையலூர் வாழ்வேந்தன்;- வாழியரோ
மாயோனைவாள்வலியால்மந்திரங்கொள்மங்கையர்கோன்

ப.உரை.—பர-எதிரிகளுக்கு, காலன் - ம்ருத்யுவானவர், வாழி - வாழ்ந்தருள வேணும்; கலி - கலியினால் வரும்தோஷத்தை, கன்றி - போக்குமவர், வாழி—; குறையலூர் - திருக்குறையலூரிலுள்ளார், வாழ் - வாழும்படி அவதரித்தருளின, வேந்தன் - ராஜாவானவர், வாழி—; மாயோனை - ஆச்சர்ய குணசேஷ்டிதங்களையுடைய ஸர்வேச்வரன் பக்கல், வாள்வலியால் - தன்வாளின்வலிமையைக்காட்டி, மந்திரம் - பெரியதிருமந்த்ரத்தை, கொள் - உபதேசிக்கப் பெற்றவராய், மங்கையர்- திருமங்கையிலுள்ளார்கட்கு, கோன் - நிர்வாஹகராய்,

அ.—(வாழிபரகாலன்) எம்பெருமானுக்குத் திருமதிள்போலே அரணாயிருப்பதான ஆறுப்ரபந்தங்களை செய்தருளின ஆழ்வாருடைய திருநாமங்கள் பலவற்றையுஞ் சொல்லி அவரை வாழ்த்துகிறது-இதில். "ப்ரத்யக்ஷகுரவஸ்ஸ்துத்யா:" "(க) ப்ரத்யக்ஷகுரவஸ்ஸ்துத்யா:" என்னாநின்றதிறே. ஆழ்வார்கள் (உ) அர்ச்சாவதாரமாய் §எப்போதும் எல்லார்க்கும் ப்ரத்யக்ஷராயிறே யிருப்பது.

வ்யா.—(வாழிபரகாலன்) (௩) பகவத் த்விட்டுக்களான ப்ரதிகூலர்க்குக் காலனானவர் வாழி. (வாழிகலிகன்றி) (௪) கலிதோஷநிவாரகர் வாழி. (குறையலூர் வாழ்வேந்தன் - வாழி) திருக்குறையலூரை அவதாரஸ்தலமாக வுடையராய், அது வாழும்படிக்கு அத்தை நோக்குகிற ராஜாவென்னுதல்; அங்கே வாழுகிறவரென்னுதல். (மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன், தூயோன் சுடர்மானவேல-வாழியரோ என்று - ஆழ்வாரையும், அவர் திருக்கையில் வேலையும் ஒருக்காலே (௫) ஆசாஸித்தபடி (மாயோனை) அரங்கநகரமேவிற பாளிகொள்ளும் மாயோனையிறே வாள்வலியால் மந்திரங் கொண்டது. *தென்னரங்கன்றன்னை வழிபறித்தவாளனிறே. *(௬) கைப்பொருள்கள்முன்னமே கைக்கொண்டவரிடத்திலேயிறே மந்திரப்பொருள் கைக்கொண்டது. (௭) மந்திரத்தைப்பற்றியிறே மந்திரங்கொண்டது. (மங்கையர்கோன்) திருமங்கை மன்னனிறே.

(க) ப்ரத்யக்ஷகுரவஸ்ஸ்துத்யா:-குரவ: - ஆசார்யர்கள், ப்ரத்யக்ஷ - முன்னிலையிலே, ஸ்துத்யா: - துதிக்கத்தக்கவர்கள். (உ) அர்ச்சாவதாரம் - அவதாரங்களுக்குப்பிற்பட்டாரும்காணலாம்படி எழுந்தருளியிருக்கு மிருப்பு. (௩) பகவத் த்விட்டுக்கள்-பகவானிடத்தில் த்வேஷம்பண்ணு மவர்கள். (௪) கலிதோஷநிவாரகர் - கலியினால்வரும் தோஷத்தைப்போக்குமவர். (௫) ஆசாஸிக்கை - வாழ்த்துகை. (௬) கைப்பொருள் - கையிலுள்ள முதலியன. (௭) மந்திரத்தை-வேதங்களால் சொல்லப்படும் ஸர்வேச்வரனை. § "இப்போதும்" என்றும் சில ஸ்ரீகோசங்கள்.

மூ.—தூயோன் சுடர்மானவேல்.
(ஆழ்வான்) நெஞ்சுக்கிருள்கடிதீபம்; அடங்கா நெடும் பிறவி
நஞ்சுக்கு நல்லவமுதம்; தமிழ்நன்னூல்துறைகள்அஞ்சுக்

ப-ரை.—தூயோன் - உள்ளும் புறம்புமொக்க சுத்தியையுடையரான ஆழ்வாருடைய, சுடர் - ஒளியையுடைத்தாய், மானம் - பெரியதான, வேல் - வேலானது, வாழி - போற்றியென்று மங்களாசாஸநம் பண்ணுகிறார். ... ... *

பரகாலன் - ப்ரதிபக்ஷத்துக்குக் காலனான ஆழ்வா ரருளிச்செய்த, பனுவல்தள் - பாட்டுக்களானவை; நெஞ்சுக்கு - மநஸ்ஸிலுண்டான, இருள் - அஜ்ஞாநத்தை, கடி - போக்கவல்ல, தீபம் - விளக்காயும்; அடங்கா-ஒன்றாலும் அடங்காதே, நெடு - நெடுகிப்போருகிற, பிறவி - பிறப்பாகிற, நஞ்சுக்கு - விஷத்தைமாற்றுகைக்கு, நல்ல—, அமுதம் - அம்ர்தமாயும்; நல் - விலக்ஷணமான, தமிழ்நூல் துறைகள் - த்ராவிடசாஸ்த்ர மார்க்கமான, அஞ்சுக்கு - எழுத்து சொல் பொருள் யாப்பு அலங்காரம் என்கிற பஞ்சலக்ஷணங்களுக்கு,

வ்யா.—(தூயோன்) "தூய்மை" என்னும் பாஹ்யாப்யந்தர சுத்தியையுடையவர். "அங்கமலத்தடவயல்சூழாலிநாட னருள் மாரி யரட்டமுக்கி யடையார்சீயம், கொங்குமலர்க் குழலியர்வேள் மங்கைவேந்தன் கொற்றவேல் பரகாலன் கலியன்" என்று தாமே தந்திருநாமங்களைக் கூறினாரிறே. (சுடர்மானவேல்) தேஜோரூபமான, மானவேல்-பெரியவேல். திருமங்கைமன்ன னெடுக்கும்படியான வேல். (வாழியரோ) இத்தால்- ஆழ்வாரோபாதி ஆயுதமும் ஆசாஸ்ய மென்றபடி. "நின்கையில்வேல் போற்றி" என்னக்கடவதிறே. இதுதான் * கொற்றவேலாகையாலே வெற்றிவேலா யிருக்கும்; அத்தாலே - இதின் விஜயத்தை வேண்டுகிறது... ... *

அ.—(நெஞ்சுக்கிருள் கடிதீபம்) இதில், ஆழ்வார் திவ்யப்ரபந்த வைபவம் சொல்லுகிறது.

வ்யா.—(நெஞ்சுக்கிருள்கடிதீபம்) என்று. நெஞ்சுக்கிருளாவது (க)மநோமாலிந்யமானஅஜ்ஞாநம்.*மனனகமலமிறே. *ஞானக்கலையாகையாலே அத்தை நிராகரிக்கும் * ஞானச்சுடர் விளக்காயிருக்கும். (அடங்காநெடும் பிறவிநஞ்சுக்கு நல்லவமுதம்) ப்ரதிக்ரியையொன்றாலுமடங்காதே நெடுகிப் போருகிற ஜந்மமாகிற நஞ்சுக்கு நல்லவமுதம் - அந்தவிஷத்தை மாற்றுகைக்கு நிர்விஷமான அம்ருதம். ஸம்ஸாரவிஷத்துக்கு அம்ர்தமாயிறே *திருமால்திருநாமமிருப்பது. திருமங்கை யாழ்வார் திவ்யப்ரபந்தம், ஸம்ஸாரநிவர்த்தகமான திருமந்த்ரார்த்தத்தைப்ரதிபாதிக்குமதாயிறேயிருப்பது.(தமிழ்நன்னூல் துறைகளஞ்சுக்கிலக்கியம்) த்ராவிட சாஸ்த்ரம், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அலங்காரம் என்கிற விலக்ஷணமான பஞ்சலக்ஷணத்தோடே கூடியிறேயிருப்பது. அன்றிக்கே,தமிழுக்கு எழுத்துமுதலான அஞ்சுலக்ஷணத்தையும் அறுதி யிடுவதான நன்னூலென்று - ஒருசாஸ்த்ரமுண்டு, அத்தைச்சொல்லிற்றுதல். (உ)ஏவம்விதமானத்ராவிடசாஸ்த்ர மார்க்க பஞ்சகத்துக்கு.

(க) மநோமாலிந்யம் - நெஞ்சழுக்கு. (உ) ஏவம்விதமான - இப்படிப்பட்ட

மூ.—இலக்கியம்; ஆரணசாரம்; பரசமய
பஞ்சுக்கனலின்பொறி-பரகாலன் பனுவல்களே.

ப-ரை,—இலக்கியம் - லக்ஷ்யமாயும்; ஆரணம்—வேதத்தின், சாரம் - ஸார மாயும்; பரசமயம் - இதரமதங்களாகிற, பஞ்சுக்கு—, அனலின்பொறி- நெருப்புப் பொறியாயும் இருக்குமென்கிறார். ... ... ... ... ... *

வ்யா•—(இலக்கியம்) "இலக்கண லக்கியம்" என்றிறே அவர்கள் சொல்லுவது; அதுக்கு லக்ஷ்யமாய் (௧) படிமாவாயிருக்கும். இத்தைப்பார்த்து லக்ஷணம் கட்டலாயிருக்கை. கேவலம் தமிழுக்கு லக்ஷணமாயிருக்கையன்றிக்கே, ஆரணசாரமுமாயிருக்கும்;-வேதஸாரமுமாயிருக்கு மென்றபடி. திருமந்த்ரார்த்தமிறே இதில் ப்ரதிபாதிப்பது. "நாராயணாவென்னும்நாமம்" என்று உபக்ரமித்து, "பேசுமின் திருநாம மெட்டெழுத்தும்" என்றும், "நின்திருவெட்டெழுத்துங் கற்று நானுற்றது முன்னடியார்க் கடிமை" என்றும், "இமையோர்தலைவருடைய திருநாமம்நங்கள் வினைகள்தவிரவுரைமின் நமோநாராயணம்" என்றும், "நாநாரணனுலகத்தறநூல் (௨) சிங்காமைவிரித்தவன்" என்றும், "நாட்டினாய்-என்னைக்காட்டினாய்" என்றும், "மந்திரத்தைமந்திரத்தால் மறவாது" என்றும், "பேராளன் பேரோதும்" என்றும், "நாராயணா! ஓ! மணிவண்ணா!" என்றும், திருமந்த்ரார்த்த விசாரமேயிறே முடியநடந்துபோருகிறது, ஆகையால், (ஆரணசாரம்) என்கிறது. ஸகலவேதஸங்க்ரஹதயா தத்ஸாரமாயிறே திருமந்த்ரந்தா னிருப்பது. (பரசமயபஞ்சுக்கனலின்பொறி) பரஸமய மாகிற (௩) தூலராசிக்கு (௪) காலாநலகணமாயிருக்கை. *வெள்ளியார் பிண்டியார் போதியாரென்றிவரோதுகின்ற கள்ளநூல்களை * செம்மைப்பனுவல்நூலாலேயிறே இவர்கழித்துத் தள்ளுவது. * பரசமயக்குறும்பறுத்தவரிறே. இதெல்லாமாவதெதுதானென்ன (பரகாலன் பனுவல்களே) * மருவலர்த முடல் துணிய வாள் வீசும் பரகாலன் பனுவல்களே இவற்றைச்செய்து முடிக்கும். அவரும் வேண்டா, அவர்ஸ்ரீஸூக்திகளேஅமையும் இந்தக் கார்யங்களைச் செய்கைக்கென்கை. இவரதிகரித்தகார்யத்துக்கு க்கையும் வாயு மொத்திருக்கிறபடி யிதுவாய்த்து. ... ... *

அ.—இனி, இவ்வாழ்வாரைப்போலே (௫) பாஹ்யகுத்ருஷ்டிகளை நிரஸித்து வைதிகமார்க்கத்தை நடத்தியும், உகந்தருளின நிலங்களை (௬) உத்தரித்தும், தத்ப்ரதிபாதகமான இவர்ஸ்ரீஸூக்தியை (௭) வர்த்திப்பித்தும் போருமவரிறே உடையவர்; அத்தைப்பற்ற, இவ்வாழ்வார்திவ்யஸூக்தியான திருமொழியாயிரமும் என்ஹ்ருதயத்திலே நிலைநிற்கும்படி உபகரித்தருளவேணுமென்று எம்பெருமானாரை அர்த்திக்கிறது-இதில்.

(௧) படிமா - உபமானம். (௨) சிங்காமை - சுருங்காமல். (௩) தூலராசி - பஞ்சு ஸமூஹம். (௪) காலாநலகணம்- க்ரூரமான நெருப்புப்பொறி, (௫) பாஹ்யகுத்ருஷ்டிகள் - பாஹ்யர் - வேதத்துக்குப் புறம்பானவர்கள்; குத்ருஷ்டிகள்- வேதத்துக்கு மாறுகப்பொருள்கூறுமவர்கள். (௬) உத்தரிக்கை - சீர்மைபெறச் செய்கை, (௭) வர்த்திப்பிக்கை- வ்ருத்தியடையப்பண்ணுகை,

(எம்பாரருளிச்செய்தது.)

மூ.—எங்கள்கதியே! இராமாநுசமுனியே!
சங்கைகெடுத்தாண்ட தவராசா!— பொங்குபுகழ்
மங்கையர்கோனீந்த மறையாயிரமனைத்தும்
தங்குமனம் நீயெனக்குத்தா.

---

ப-ரை.—எங்கள் - அறவையான வெங்களுக்கு, கதியே - அடைக்கலமாயிருக்குமவரே!; இராமாநுசன்-ராமாநுஜன் என்னும் திருநாமத்தை யுடையராய், முனியே- ஆத்மாவின் ரக்ஷணத்தில் மநநம் பண்ணுமவரே!, சங்கை-வேதசாஸ்த்ரங்களில் ஸம்சயங்களை, கெடுத்து - போக்கி, ஆண்ட-எல்லாரையும் அடிமைகொண்டவராய், தவம் - தபஸ்ஸில் மிக்கோரான யதிகளுக்கு, ராசா - ராஜாவாயிருக்குமவரே!, பொங்கு - மிகுந்த, புகழ் - யசஸ்ஸையுடைய, மங்கையர் - திருமங்கையிலுள்ளார்க்கு, கோன் - ராஜாவான ஆழ்வார், ஈந்த - அருளிச்செய்த, மறை-வேதரூபமான, ஆயிரமும் - ஆயிரம்பாட்டாயிருக்கிற பெரியதிருமொழி ப்ரபந்தத்தையும், அனைத்தும் - மற்றுமுள்ள ப்ரபந்தங்களையும், தங்கும் - தரிக்கும்படியான, மனம் - மநஸ்ஸை, எனக்கு - அடியேனுக்கு, நீ - தேவரீர், தா - தந்தருள வேணுமென்று எம்பெருமானாரை அர்த்திக்கிறார். ... ... ... ... *

---

வ்யா.—(எங்கள்கதியே) (௧) அகதிகளான வெங்களுக்கு கதியாயிருக்கிறவரே. (இராமாநுசமுனியே) (௨) சதுரக்ஷரியாய்,மோக்ஷகஹேதுவான திருநாமத்தையுடையருமாய், ஆத்மரக்ஷணத்திலே மநநம்பண்ணுமவரே. (சங்கைகெடுத்தாண்ட) "త్వదన్యస్సంశయస్యాస్యచ్ఛేత్తానహ్యుపపద్యతే" "த்வதந்யஸ்ஸம்சயஸ்யாஸ்யச்சேத்தாநஹ்யுபபத்யதே" என்றும், "தத்துவநூல்கூழற்றது" என்னும்படி வேதாந்தசாஸ்த்ரத்தைநிஸ்ஸம்சயமாகப்பண்ணி மநஸ்ஸில்ஸம்சயங்களைப்போக்கி, எல்லாரையும் அடிமையாகஆண்ட. (தவராசா) யதிராஜாஎன்றபடி. அன்றிக்கே, தவம்என்று - சரணாகதி தர்மமாய், அத்தை வர்த்திப்பிக்கிற ராஜாஎன்றுமாம். * தவநெறியிறே. பொங்குபுகழித்யாதி) அதிஸம்ர்த்தமான (௩) யசஸ்ஸையுடைய திருமங்கைக்கு (௪) நிர்வாஹகரான ஆழ்வாருடைய, வேதரூபமாய் ஆயிரம்பாட்டாயிருக்கிற பெரியதிருமொழிப்ரபந்த மெல்லாவற்றையும். அன்றிக்கே, (ஆயிரமனைத்தும்) என்று-ஆயிரத்தையும, மற்றும் அவர் (௫) அனைத்து ப்ரபந்தத்தையும் என்றுமாம். (தங்குமனம்நீயெனக்குத்தா) "கண்ணநின்றனக்கும்குறிப்பாகில்கற்கலாம்" என்கிற திவ்யஸூக்தியை தரிக்கும்படியான மநஸ்ஸைத் தந்தருள வேணும். "குறையற்பிரானடிக்கீழ்விள்ளாதவன்ப னிராமாநுசன்" என்றும் "(௬) நீலன்றனக்குலகிலினியான்" என்றும், "கலிமிக்க செந்நெற்கழனிக் குறையல் கலைப்பெருமானொலிமிக்கபாடலையுண்டு தன்னுள்ளந் தடித்து" என்றும்,எம்பெருமானாரைச் சொல்லக்கடவதிறே; அத்தாலே, அவரைஅபேக்ஷிக்கிறது.... ... ... *

---

(௧) அகதிகள் - கதிஅற்றவர்கள். (௨) சதுரக்ஷரி- நாலக்ஷரத்தையுடையது. (௩) யசஸ்ஸு — கீர்த்தி. (௪) நிர்வாஹகர் - தலைவர். (௫) அனைத்து - எல்லா. (௬) நீலன் - திருமங்கையாழ்வார்.

மூ.—§மாலைத்தனியே வழிபறிக்கவேணுமென்று
கோலிப்பதிவிருந்த கொற்றவனே! - வேலை
அணைத்தருளுங்கையாலடியேன்வினையைத்
துணித்தருளவேணும் துணிந்து.

ப-ரை.—மாலை - ஸர்வேச்வரனை, தனிவழியே - தனிவழியிலே, பறிக்கவேணுமென்று - கொள்ளைகொள்ள வேணுமென்று, கோலி - முயன்று, திருவரசினடியிலே, பதிவுஇருந்த - பதுங்கிக்கொண்டிருந்த, கொற்றவனே - ராஜாவான திருமங்கை மன்னனே!, வேலை - வேல் என்னும் ஆயுதத்தை, அணைத்தருளும் - அணைக்கும்படியான, கையால் - திருக்கை யாலே, அடியேன் - சேஷபூதனென்னுடைய, வினையை - பாபங்களை, துணிந்து—, துணித்தருளவேணும் - வெட்டிக்களைந்தருளவேணுமென்கிறார்.... ... ... ... ... ... ... ... *

அ.—(மாலைத்தனியே) இதில், ப்ரபந்தாந்வய ப்ரதிபந்தகங்களை ப்ரபந்த கர்த்தாவே (க) சேதிக்கவேணு மென்கிறது.

வ்யா.—(மாலைத்தனியே வழிபறிக்க வேணுமென்று கோலி) ஸர்வாதிகனைத் தனிவழியிலே வழிபறிக்க வேணுமென்று (உ) உத்யோகித்து. தத்தநுகுணமாகத் திருவரசினடியிலே (பதிவிருந்த) மேலே கோடிவைத்துப் பார்ப்பித்த. (கொற்றவனே) ராஜாவே. பறிகொடுக்குமவன் * தெய்வத்துக்கரசு, பறிக்குமவர் ஆலிநாட்டரசு, பறிக்குமிடம் மரங்களுக்கரசிடம்; இப்படியாய்த்து பறிக்கப் பதிவிருந்தபடி. (வேலையணைத்தருளுங் கையால்) *வெட்டிப்பறிக்க வெடுத்தணைத்த வேலாலே. (அடியேன் வினையை) "அடியேன் நான்" என்று அவனுக்கு அடிமையான வுமக்கு அடியேனான அடியேன் வினையை. உமக்கடியோமாகைக்கும் வினைக்கும் என்ன சேர்த்தியுண்டு; "என்பெய்வினையைக் கிட்டிக்கிழங்கொடு தன்னருளென்னு மொள்வாளுருவி வெட்டிக்களைந்த விராமாநுசன்" என்கிறபடியே. (அடியேன்வினையை-துணிந்து-துணித் தருளவேணும்) வழிபறிக்கத் துணிந்தாப்போலே *வினையைத்துணிக்கத் துணியவேணும். என்வினையைப்போக்கவேணும் என்று நீர்துணிந்தாலாய்த்துப் போவது. "பண்டைவல்வினை பாற்றியருளினான்" என்னும்படி பண்ணவேணும். ... ... ... ... ...

பிள்ளைலோகஞ்ஜீயர் திருவடிகளே சரணம்.



§ இந்தத்தனியன், மணவாளமாமுனிகள் அருளிச்செய்ததென்று சிலர்சொல்லுவார்கள்; க்ரந்தஸ்தமாக ஆகரம்கண்டுகொள்வது: இநதப்ராந்தத்தில் அநுஸந்திக்கும் வழக்கமில்லாமையால்.

(க) சேதித்தல் - அறுத்தல். (உ) உத்யோகிக்கை - முயலுகை.



ஸ்ரீமதேராமாநுஜாய நம:

# *மாறன்பணித்ததமிழ்மறைக்கு ஆறங்கம்கூறவவதரித்த திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரியதிருமொழிக்கு, பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த வ்யாக்யாநத்தின் அரும்பதத்திலவதாரிகை.

* அபாரகருணாம்ர்தஸாகரரான பெரியவாச்சான்பிள்ளை, தம்முடைய பரமக்ர்பையாலே; பெரியாழ்வார், தாமருளிச்செய்த திருப்பல்லாண்டில் *மல்லாண்டதிண்டோளனைப் பல்லாண்டுபாடியும், அவனுடைய + திருவவதாரந்தொடக்கமான திவ்யசேஷ்டிதங்களை யநுபவித்தும், அதுக்குமடியான ராமகுணாநுபவம்பண்ணியும்; அவை காலாந்தரத்தி லநுபவங்களாகையாலே, "வடதிசைமதுரை" இத்யாதிப்படியே - அர்ச்சாவதாரங்களை பஹுப்ரகாரேண அநுபவித்துக்கொண்டு வந்து, திருவேங்கடமுடையானிடத்தில் திருவுள்ளத்தைமூட்டி யநுபவித்து, ப்ரபந்தசேஷத்தைத் தலைக்கட்டினபடியையும்; அவர் பெண்பிள்ளையான ஆண்டாள், *நந்தகோபன்குமரனையே யாசைப்பட்டு, ஆழ்வார்களை யுணர்த்திக்கொண்டு அவர்களை (௧) அடியொத்திப்போய் *நப்பின்னைகொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்வனையுணர்த்தி *தாம்வந்தகாரியத்தையாராயச்சொல்லி, அவனைப்போற்றி, தம்முடையமநோரதத்தை விண்ணப்பஞ்செய்துவிட, அது அநுகாரத்தால் பிறந்ததாகையாலே மணப்பாலமுதுசெய்தவோபாதியாய்க் கலங்கி, காமன்காலிலேவிழுந்து துவண்டு, *படாதனபட்டு, *கனாக்கண்டு, தரித்து, திருவேங்கடமுடையானைக் குறித்துத் தூதுவிட்டு; பெரியபெருமாளைக்(௨)கிலாய்த்து, பாவபந்தம்தலைசிரம்பி, தேற்றுவாரில்லாதபடி கலங்கினவளவிலே, தைவயோகத்தாலே தம்முடைய ஆசார்யபாரதந்த்ரதாஜ்ஞானம் தலையெடுத்துத் தரித்திருக்கச்செய்தேயும், அநுபூதவிஷய மஹிமாவினால்பிறந்ததெளிவும் அகிஞ்சித்கரமாய், கண்டல்லது தரிக்கமாட்டாதே, "இங்கேபோதக்கண்டீரே" என்று தேடிச்சென்று, "வீதியாரவருவானை விருந்தாவனத்தேகண்டோமே" என்று காட்சியோடே தலைக்கட்டினபடியையும்; குலசேகரப்பெருமாள், இவ்விருவரளவுமன்றியே, முந்துறமுன்னம் *வெண்ணெயுண்டவாயனை பெரியபெருமாளிடத்தில் "என்றுகொலோ கண்குளிரக்காணுநாளே" என்று (௩) பேரவாக்கரைபுரண்டு, அவ்வளவன்றியே, *அணியரங்கன்திருமுற்றத்தடியாரளவும் *மாலேறிய பெரும்பித்தராய், திருமலையில் திர்யக்ஸ்தாவரஜந்மங்களை யாசைப்பட்டு, அநந்தரம் அர்ச்சாவதாரத்துக்கடியான ராமக்ர்ஷ்ணாவதாரங்களையும் ப்ராஸங்கிகமாக அநுபவித்து, அவ்வநுபவத்தைத் திருச்சித்ரகூடத்திலே யநுபவித்து; அடியிலேபிறந்த பரமபக்தியோடே தலைக்கட்டினமையை

---

+ "திருவவதாரந்தொடங்கி பாலலீலாரஸங்களையநுபவித்தும்" என்றும் பாடம்.

(௧) அடியொத்தல்-பின்செல்லல். (௨) கிலாய்த்தல்-வெறுத்தல். (௩) பேரவா-ஒன்றாலும் தணிக்கக்கூடாத ஆசை.

அ.—யும்; திருமழிசைப்பிரான், கீழ்ச்சொன்னவர்கள்போலே(க)பாவநாமாத்ரத்திலேயநுபவித்தபடியேயன்றியே, அர்ச்சாவதாரங்கள்தான் "பைந்நாகம்பாய்சுருட்டிக்கொள்"என்று (உ)நியமிக்கும்படி தமக்குக்கைப்புகுந்தபடியாலே *தெளிந்தசிந்தையராய்,அவனுடைய ஸர்வப்ரகாரவைலக்ஷண்யங்களை லோகோஜ்ஜீவநார்த்தமாகத்திருச்சந்தவிருத்தத்தாலே வெளியிட்டருளின க்ரமத்தையும்; இவர்தம்மைப்போலேபலஅர்ச்சாஸ்தலங்களிலே (௩) மண்டியிருக்கையன்றிக்கே, "மற்றொன்றும் வேண்டா" என்று பெரியபெருமாளையே (ச) ச்ரோதாவாக்கி தம்முடைய *இன்சொற்களைச்சொல்லி யுகப்பித்தும் அவரைப்பள்ளியுணர்த்தியும்போந்த தொண்டரடிப்பொடி யாழ்வாருடைய (ரு)பாவவ்ர்த்தியிருந்தவகையையும்;திருப்பாணர் [௰
தாம், இவர்களித்தனைபேரிலுங்காட்டில் வைலக்ஷண்யம்தோற்றப் பெரியபெருமாளாலே(சா)விஷயீக்ர்தராய்,(எ)பரப்பறப் பத்துப்பாட்டாலே விஷ்ணுசித்தர்தொடக்கமானோரோபாதி மற்றொருவரையநுகரித்தும், கலங்கி தேவதாந்தரங்கள்காலில் விழுந்தும், தூதுவிட்டும்,காணாமல்தடுமாறியும்,கண்டுதெளிந்தும், (அ) பரோபதேசம் பண்ணப்போந்தவர்களை நிந்தித்து தமக்கெம்பெருமா னிரங்காமையைச் [கரு
சொல்லி "அம்ம! ஓ! கொடியவாறே" என்று(கூ)கிலாய்த்து, தாமேபோய்ப்பள்ளியுணர்த்தியும்செய்யாதே, * (க0) ஆபாதசூடம் ஸாக்ஷாதகரித் தநுபவியாநின்றுகொண்டு, ஸ்ரீலோகஸாரங்கமஹாமுநிகள திருத்தோளிலே யெழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோக, பெரியபெருமாள் (கக) ஸாயுஜ்யத்தை இவ்விபூதியிலேகொடுக்கையாலே அந்தவநுபவத்தைபெற்று,திருவேங்கடமுடையானையும் பெரிய [உ௰
பெருமாளோடு ஒருசேர்த்தியாக அநுபவித்துக்கொண்டு, "மற்றொன்றினைக்காணாவே" என்று தலைக்கட்டின தன்மையையும்; இவர்களித்தனைபேரும் (கஉ) ப்ரதமாவதியிலே(௩)மண்டினாராய்,இவர்களித்தனைபேருக்கும் (க௩)ப்ராப்யசரமாவதியாக * அடியார்க்காட்படுமது உத்தேச்யமாகையாலே, அவ்வர்த்தத்திலேநிஷ்டரான ஸ்ரீமதுரகவிகள் *வாய்த்ததிருமந்திரத்தின் மத்திமமாம்பதம்போலவான கண்ணிநுண்சிறுத்தாம்பாலே பரதிபாதித்த ஆழ்வாருடைய ப்ராப்யத்வப்ராபகத்வங்களையருளிச்செய்து * தென்குருகூர்நகர்நம்பிக் கன்பரானமையையும் திருவுள்ளம்பற்றி, இந்த திவ்யப்ரபந்தங்களுக்கு உத்தரோத்தரமுண்டான அதிசயங்களுக்கு (கச)அநுகுணமானவொருசேர்த்தியாலே யி வயித்தனைக்கும் அடைவே வ்யாக்யாநம் செய்தருளி; இவ்வளவன்றியே, இவையித்தனையாலும்- திருமந்த்ரத்தில் [௩௰
ப்ரணவ நமஸ்ஸுக்களிலர்த்தங்கள் ப்ராதாந்யேந ப்ரதிபாதிக்கப்படுகையாலே, (கரு)தத்ஸ்தாநீயமான முதலாயிரத்தைத் திருவுள்ளத்தில்வைத்துக்கொண்டு,(கசா) த்ர்தீயபதஸ்தாநேயான திருமொழிக்கு வ்யாக்யாநம்செய்தருளநினைத்தருளினார்.*

(க) பாவநாமாத்ரத்திலே - நினைப்புமாத்ரத்தாலே. (உ) நியமித்தல் - கட்டளையிடுதல். (௩) மண்டுதல் - விரும்புதல. (ச) ச்ரோதா - கேட்குமவன். (ரு) பாவவ்ர்த்தி - கருத்தின் ப்ரகாரம். (சா) விஷயீக்ர்தர் - அங்கீகரிக்கப்பட்டவர். (எ) பரப்பற-சுருக்கமாக. (அ) பரோபதேசம் பண்ணுதல்- பிறர்க்குச்சொல்லுதல். (கூ) கிலாய்த்தல் - ப்ரணயரோஷம். (க0) ஆபாதசூடம் - ( பாதாதிகேசம் ) திருவடிமுதல் திருமுடியளவும். (கக) ஸாயுஜ்யம் - தன்திருமேனியிலே லயிக்கை. (கஉ) ப்ரதமாவதி- (தலைநீர்ப்பாடு) முதல்மடை. (க௩) ப்ராப்யசரமாவதி-அடையத்தக்க கடைசியெல்லை. (கச) அநுகுணமான- தகுதியான. (கரு) தத்ஸ்தாநீயம்- அவ்விடத்தது. (கசா) த்ர்தீயபதம் - மூன்றும்பதமான நாராயணபதம்.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்த

## வ்யாக்யாநத்தின் ப்ரவேசம்.

இவ்வாழ்வாராகிறார்- ஆத்மாவை வெய்யிலிலேவைத்து உடம்பை நிழலிலேவைத்துப்போந்தா ரொருவராய்த்து. ஆத்மாவை [ரு
வெய்யிலிலேவைக்கையாவது-பகவத்விஷயத்தில் முதலிலேயிழியாமை; உடம்பை நிழலிலேவைக்கையாவது-அநாதிகாலம் (க) விஷயப்ரவணராய் அதுவே (உ) யாத்ரையாய்ப்போருகை. நிழலாவது தான் பகவத்விஷயமிறே. [𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌤𑌰𑍁𑌚𑍍𑌛𑌾𑌯𑌾 - வாஸுதேவதருச்சாயா] பார்த்தபார்த்தவிடமெல்லாம் நிழலாயிருக்கை. எங்கு [க0
மொக்க நிழல்செய்த விந்நிழலிலல்லது புறம்பொருந்த நிழலின்றிக்கேயிருக்கை. [𑌨𑌾𑌤𑌿𑌶𑍀𑌤𑌾 𑌨 𑌘𑌰𑍍𑌮𑌦𑌾-நாதிசீதாநகர்மதா] (௩) அற வவ்வலிடுதல், வேர்த்தல் செய்யாதிருக்கை. [𑌨𑌰𑌕𑌾𑌙𑍍𑌗𑌾𑌰𑌶𑌮𑌨𑍀-நரகாங்கார சமநீ] தானேயேறிட்டுக்கொண்ட நரகமாகிற பெருநெருப்பையும் அவிக்கவற்று. [கரு

அ.—இத்திருமொழிக்கு வக்தாவான திருமங்கை மன்னன், *சண்ணநுண்சிறுத்தாம்பில் (௪) பாகவதநிஷ்டையை (ரு) காயிகமர்யந்தமாக வநுஷ்டித்து, *வாள்வலியால் மந்திரங்கொண்டு, "நின்திருவெட்டெழுத்துங்கற்று நான் - உற்றது முன்னடியார்க்கடிமை" என்று வாய்விட்டும்போந்தாரொருவராகையாலே, கீழ்ச்சொல்லப்பட்டவர்களில் விலக்ஷணரிறே என்று இவருடைய வைலக்ஷண்ய [உ0
த்தைத் திருவுள்ளம்பற்றி, இதுக்கு வ்யாக்யாநம் செய்தருளக்கோலி; ஸர்வேச்வரன், இவ்வாழ்வார்பக்கலுண்டான ஸ்வவிஜயாத்வேஷமும் இவரநுபவித்த விஷயங்களினுடைய (௬) அல்பீயஸ்த்வமுமே யிவரைமீட்கைக்குப்பரிகாரமாகவும், இவருடைய ரஸிகத்வத்தைத் தன் வாசியறிகைக்குப் (எ) பற்றுசாகவுமெண்ணி, இவரை நிர்ஹேதுக கடாக்ஷவிஷயமாக்கி, தன் ஸ்வரூபாதிகளை யறிவிப்பித்தானென் [உரு
னும் வக்த்ர்வைலக்ஷண்யத்தையும், ஸ்வரூபாதிகளை யறிகைக்கு உவன்காட்டிக்கொடுத்த திருமந்த்ரத்தையநுஸந்தித்தாரென்னும் ப்ரதிபாத்ய வைலக்ஷண்யத்தையும், (அ) ததர்த்த ப்ரதிபாதகதயா வந்த ப்ரபந்த வைலக்ஷண்யத்தையு மருளிச்செய்வதாக, தாமிவருடைய பூர்வவ்ருத்தத்தை யருளிச்செய்கிறார் (இவ்வாழ்வாராகிறார் இத்யாதியாலே.) "ஸ்ரீய:பதியாய்" என்று தடங்கி "'விஜாதியரை நாம் [௩0
மால்முடியாது, ஸஜாதீயரைக்கொண்டே காரியங்கொள்வோம்'என்று ஆழ்வாரைத்திருவவதரிப்பித்தான்" என்றிவ்வளவும் உபர்யஸித்து, பின்னை (இவ்வாழ்வாராகிறார்) என்றுதுடங்கி அநுஸந்திப்பது என்றும் சொல்லுவார்கள். "ஸர்வத்ரா ஸௌ- வஸதி" என்கிற (௯) நிருக்தியையுட்கொண்டருளிச்செய்கிறார் (பார்த்தவித்யாதி.) "ஸமஸ்தஞ்ச - அத்ர-வஸது" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் [௩ரு
(எங்குமொக்கவித்யாதி.) "𑌏𑌤𑍇 𑌵𑍈 𑌨𑌿𑌰𑌯𑌾𑌸𑍍𑌤𑌾𑌤 𑌸𑍍𑌥𑌾𑌨𑌸𑍍𑌯 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃" "ஏதே வைநிர யாஸ்தாத ஸ்தாநஸ்யபரமாத்மந:" என்கிறபடியே—ஸாம்ஸாரிக லோகமெல்லாம் நரகது:கஸமமென்று திருவுள்ளம்பற்றி, அதுதானும் சேதநகர்மாதீநமாய் வருமதாகையாலே அவ்வர்த்தத்தை யருளிச்செய்கிறார் (தானே யித்யாதி.) கேவலம் நரகமாகில் அதுக்கு ப்ராயச்சித்தாதி க்ரியை (ய) சாமகமா யிருக்குமே; *வாஸுதேவதருச்சாயையைச் சொல்லவேண்டாவிறே.

(க) விஷயப்ரவணர் - எம்பெருமானை யொழிந்தவற்றில் அன்புடையவர்கள். (உ) யாத்ரை - தொழில். (௩) அற - மிகவும். (௪) பாகவதநிஷ்டை - பகவத்ஸம்பந்திகளை விரும்புதல். (ரு) காயிகம் — செயல். (௬) அல்பீயஸ்த்வம் - இழிவான தன்மை. (எ) பற்றுசு - ஹேது. (அ) ததர்த்தப்ரதிபாதகதயா-அந்த அர்த்தத்தை சொல்லுகையாலே. (௯) நிருக்தி-வேதலக்ஷணக்ரந்தம். (ய) சாமகம்-தணிக்குமது.

வ்யா.—[ஸாகிமர்த்தம்நஸேவ்யதே - ஸாகிமர்த்தம்நஸேவ்யதே] ப்ராப்த மன்றென்னவொண்ணாது, து:கநிவர்த்தகமன்றென்ன வொண்ணாது; "வயிறுநோவாநின்றது, சவி" என்பாரைப்போலே, அநிச்சைசொல்லிக் கைவாங்குமித்தனையிறே யுள்ளது. அர்த்தத்தில் [௫ மாறுட்டமில்லை, ப்ரதிபத்தியில்மாறுட்டமேயுள்ளது!. இந்நிழலிலே யிருந்துவைத்து "ஒதுங்கிற்றிலேன்" என்பாரைச செய்யலாவ தில்லையே!. "இவர்கண்ணுலகாண்கிறவிஷயங்களுக்கு அவ்வருகறி யாதிருக்கிறாராகில், நம்மையும் அவ்விஷயங்களோபாதி யிவர்கண் ணுக் கிலக்காக்கினால் விரும்பாதொழியாரிறே!" என்று பார் ௰ த்து, (க) உகந்தருளினநிலங்களிலேவந்து ஸந்நிதிபண்ணி யிவரை விஷயீகரித்து, தன்படிகளை (உ) அடையக் காட்டிக்கொடுத்து, தன் னாலல்லது செல்லாதபடிபண்ணி யிவரையநுபவிப்பித்து, இங்கே யிருந்தே பரமபதத்திலுள்ளார்படி யாம்படிபண்ணி, அத்தேச ப்ராப்தியையு மிவர்க்குப் பண்ணிக்கொடுத்தானென்கிறது- [௧௫ இப்ப்ரபந்தங்க ளெல்லாவற்றாலும். ... ... ...

---

அ.—இனி ஸேவியாதிருக்கைக்கு நிமித்தந்தானென்னென்ன வருளிச்செய்கி றார் (வயிறிதயாதி;) சிறுப்பிள்ளைகள், விளையாட்டில்பராக்காலே, "உண்ணவா" என்றழைத்தால், "எனக்கு வயிறுநோகிறது, வேண்டா" என்று, பசியாநிற்கச்செய் தேயும் சொல்லுவர்கள்: அதுக்குமேலே மாதாபிதாக்கள் நிர்ப்பந்தித்தழைக்க [௨௰ ப்புக்கால், "நீங்களே சவியுங்கோள், அதாவது-வையுங்கோள், நான் (௩) ஸர்வாத் மநா உண்ணவருகிறதில்லை" என்று அஸௌக்யம் (௪) வஹிக்குமாப்போலே, ஈச் வரன் (௫) ஸர்வத்ர இருந்து ஹிதம்செய்யவந்தாலும் விஷயப்ராவண்யத்தாலே நிஷேதிப்பர்களென்று கருத்து. அநிச்சை சொல்லி - வேண்டாமையைச்சொல்லி யென்கை. இந்த ச்லோகத்துக்கு ரிஷியினுடைய ஈடுபாடு தோற்ற ஒருதாத் [௨௫ பர்யத்தையருளிச்செய்கிறார் (அர்த்தத்திலித்யாதிவாக்யத்வயத்தாலே.) ஆக, இவ் வாழ்வாரும் பகவத் ப்ரவணரன்றிக்கே விஷயப்ரவணராயிருந்தா ரென்று பூர்வ வ்ருத்தம் சொல்லிற்றாய்த்து. இப்படியிருக்குமிவரை ஈச்வரன் திருத்தின ப்ரகார மென்னென்ன; அத்தையருளிச் செய்யாநின்று கொண்டு, ப்ரமாணமும் காட்டு கிறார் (இவர்கண்ணுலித்யாதி.) இப்ப்ரபந்தங்களெல்லாவற்றாலுமென்றது- [௩௰ இந்த ப்ரபந்தங்களாலுமென்றபடி. அர்ச்சாவதாரப்ராவண்யாதிகள் இப்ப்ரபந்தங்க ளிலே யுண்டாகையால் ஈச்வரன் இவற்றைக்காட்டித்திருத்தினது அர்த்தஸித்தம்.*

---

(க) உகந்தருளின நிலங்கள் - எம்பெருமான் விரும்பி வர்த்திக்குமிடங்கள்; அதாவது-திவ்யதேசங்கள். (உ) அடைய - எல்லாம். (௩) ஸர்வாத்மநா- எல்லாப் படியாலும். (௪) வஹித்தல் - மேற்கொள்ளுதல். (௫) ஸர்வத்ர - எங்கும்.

மூலம்.—வாடினேன்;

வ்யா.—"இவர் பக்கல் (க) அத்வேஷமும் விஷயங்களினுடைய (உ) லாகவமுமே இவரை மீட்கைக்குப் (௩) பரிகரமாகவும், இவருடைய ரஸிகத்வமே தன் வாசி யறிகைக்குப் (௪) பற்றுசாக [௫ வும், அநாதிகாலம்பண்ணின பாபாம்சத்தை நம் க்ருபைக்கு விஷயமாக்குவோம்" என்றுபார்த்து, இவர் விஷயங்களின் வாசியறிந்து, தன்னையறிகைக்கு, கிழிச்சீரையோடே தநத்தைக் கொடுப்பாரைப் போலே, தனக்கு வாசகமான திருமந்த்ரம் முன்னாகத் தன்ஸ்வரூப ரூபகுணவிபூதிகளை (௫) அடங்கக்காட்டிக்கொடுக்க, கண்ட [க0 நுபவித்து, அயோக்யனை வென்னை அதுதானே ஹேதுவாக விஷயீகரித்தான்! என்று (௬) க்ருதஜ்ஞராகையாலே, ஒருக்கால் சொன்னத்தை ஒன்பதின்கால் சொல்லிக்கூப்பிடுகிறார். பகவத்விஷயத்தில் நேர்கொடுநேர் செய்யலாவதொன்றில்லை, செய்யவேண்டுவதுமொன்றில்லை; பண்ணின வுபகாரத்துக்கு க்ருதஜ்ஞராமித் [கரு தனையே வேண்டுவது (எ) அசித்வ்யாவ்ருத்திதோற்ற. ... *

அவதாரிகை.—முதற்பாட்டு. நம்மாழ்வார், ஸர்வேச்வரனை ஸாக்ஷாத்கரித்தவநந்தரம், தாம்பெற்ற பேறறியாதே "இந்நின்ற நீர்மையினி யாமுறாமை" என்று கீழ்நின்ற நிலையை அநுஸந்தித்தாப்போலே, இவரும், பகவத்விஷயீகாரம் பிறந்தபின்பு தாம்கீழ் [உ0 நின்றநிலையையெல்லாம் (அ) அநுஸந்தித்து "வாடினேன்" என்கிறார்.

வ்யா.—(வாடினேன்) கொம்பையிழந்த தளிர்போலே. (௯) ஆச்ரயத்துக்குஅழிவில்லாமையாலே இன்னம்நோக்குவோம்என்னில்; நோக்குகைக்கு யோக்யதை யுண்டென்கை. "అనన్యారాఘవేణాహమ్"

அ.—இவரைத் திருத்துகைக்கு நிமித்தத்தையும், முதல்திருமொழியின் [உ௫ தாத்பர்யத்தையு மருளிச்செய்கிறார் (இவர்பக்கலித்யாதி.) லாகவமென்றது - அல்பாஸ்திரத்வாதிகள். கிழிச்சீரை - த்ரவ்யமிருந்தபுடவை. க்ருதஜ்ஞராகில் ப்ரத்யுபகாரம்பண்ணாதே கூப்பிடுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (பகவதித்யாதி.) *

முதற்பாட்டு,—(வாடினேனித்யாதி-) தம்மை அவன்கடாக்ஷித்தால் அவனையநுபவிக்கு மத்தனைபோக்கி, பூர்வவ்ருத்தத்தைத் தாம் சொல்லுவானென் [௩0 னென்ன வருளிச்செய்கிறார் (நம்மாழ்வாரித்யாதி.) வாடினேனென்கிறரென்றது- பூர்வவ்ருத்தத்துக்கெல்லாம் உபலக்ஷணம்.

உலர்ந்தேனென்னாதே, "வாடினேன்" என்றதுக்கு தாத்பர்ய மருளிச்செய்கி

றே.) ஆச்ரயத்துக்கு - ஆத்மஸ்வரூபத்துக்கென்றபடி.

(க) அத்வேஷம் - த்வேஷமில்லாமை. (உ) லாகவம் - இலேசாயிருக்கை. (௩) பரிகரம் - கருவி. (௪) பற்றுசு - ஹேது. (௫) அடங்க - எல்லாம். (௬) க்ருதஜ்ஞர் - நன்றிமறவாதவர். (எ) அசித்வ்யாவ்ருத்தி - அசித்து - உயிரில்லாதது, அதினின்றும் வேறுபட்டிருக்கை. (அ) அநுஸந்திக்கை - நினைக்கை. (௯) ஆச்ரயம்- பற்றுமிடம்.

வ்யா.—"அநங்யாராகவேணுஹம்" என்கிற பிராட்டியோடொத்தப்ராப்தி ஸகலாத்மாக்களுக்கு முண்டானபின்பு, இப்ப்ராப்தியை யுணர்ந்தால், அநாதிகல மிழந்தவர்க்கு "வாடினேன்" என்னத்தட்டில்லையிறே. [யச்ச ராமம் நபச்யேத்து - யச்சராமம்நபச்யேத்து] [ராமம் - ராமம்] என்றது - கண்ணுக்கு வகுத்த விஷயத்தை; காணுதிருக்கிறுன் யாவனொருவன். [யஃ - யஃ] எத்தனையேனு முயர்ந்தவனுகவுமாம். [து - து] இதுதப்பிறுலும். தப்பாதது தப்பிறல் வருமதுஇவ்வளவன்று என்கைக்காகவிசேஷிக்கிறது. [யஞ்ச ராமோ நபச்யதி - யஞ்சராமோநபச்யதி] எத்தனையேனும் சிறியாரும் இவர்கண்பார் [க0 வைக் கிலக்காகாதாரில்லை. [யம் - யம்] எத்தனையேனும் சிறியவனென்கிறது. எத்தனையேனும் சிறியாரிறே இவர்கண்ணிற்பார்வைக்கிலக்காவார். [யாருமோர்நிலைமையனென வறிவரிய வெம்பெருமான்|யாருமோாநிலைமையனென வறிவெளியவெம்பெருமான்] ப்ரஹ்மாதிகளுடைய ஜ்ஞாநத்துக்கும் அவிஷயமாயிருக்கும்; (க) ஓரிடைச்சிக்கும் (உ)வேடனுக்கும் கைப்புகுந்திருக்கும். எத்தனையேனு முயர்ந்தவனுகிலும் (ங) பெருமாளுடைய ஒருநாளைப் புறப்பாடு காணுகில் அவன்பெரியனலலன்; எத்தனையேனும் சிறியனுனவன் பக்கலிலும் தப்பாது அவருடைய பார்வை; தப்புகிறுன் யாவனொருவன், அவன் அவஸ்துககளோடு மெண்ணபபடான்; எண்ண [உ0 ப்படாமையிலே யெண்ணப்படும்; - எல்லாரும் நிந்தித்து "சீ, சீ" என்னப்படும். இவனைநிந்திப்பார் வஸிஷ்டாதிகள் துடக்கமானுர் நால்வரிருவரோ வென்னில் [நிந்திதஸ்ஸ வஸேல்லோகே - நிந்திதஸ் ஸவஸேல் லோகே] [லோகே - நிந்திதஃ, லோகே-நிந்திதஃ] இவனைநிந்திக்கைக்குரியரல்லாதாரில்லை. [உரு

அ.—"வாடிவாடுமிவ்வாணுதல்" என்கிறபடியே பிராட்டிவிஷயத்தில் சொல்லத்தக்க வார்த்தையைத் தாமிபபோது சொல்லக்கூடுமோ வென்ன வருளிச்செய்கிறுர் (அநங்யேத்யாதி.) தாய்மார் "வாடிவாடும்" என்றுசொன்னுர்களேயாகிலும், இவர்தாம் அவ்விஷயத்தி லிவ்வார்த்தையைச்சொல்லித் தம்மைத்தாமேநிந்தித்துக்கொள்ளக்கூடுமோவென்ன; த்ர்ஷ்டாந்தமுகேநவருளிச்செய்கிறுர் (யச்ச [கூ0 ராமமென்றுதுடங்கி, வாடினேனென்றல்லது வார்த்தையில்லையிறே யென்னுமளவும்.) "யஃ" எனறு மேலெடுத்தப்ரதீகத்தை, (விஷயத்தை) என்றவநந்தரம் அநுஸந்தித்துக்கொள்வது. (ச) ப்ராதாநயே சகாரமென்றருளிச்செய்கிறுர் (எத்தனையேனு முயர்ந்தவனித்யாதி.) இதுவென்றது - தன்னுடைய ஸேவையென்கை. தப்பாதது - பெருமாளுடைய கடாக்ஷம். "ராமச்ச" என்றநவயித்து அதி [கூரு நிக்ர்ஷ்டனையும் கடாக்ஷிக்குமவரென்கிற ப்ராதாந்யத்தை விவக்ஷித்தருளிச்செய்கிறுர் (எத்தனையேனும் சிறியாருமித்யாதி.) "யம்" "யம்" என்றது நிக்ர்ஷ்டவிஷயமாவானென்னென்ன வருளிச்செய்கிறுர் (எத்தனையேனுமித்யாதி.) உத்க்ர்ஷ்டரைக் கடாக்ஷியாமல் நிக்ர்ஷ்டரைக்கடாக்ஷிப்பரென்னுமதுக்கு ஸம்வாதம் (யாருமித்யாதி.) பூர்வார்த்தத்தில் தாத்பர்யத்தை யருளிச்செய்யாநின்று கொண் [ச0 டு, "நிந்திதஃ" இத்யாதிக்கவதாரிகை யருளிச்செய்கிறுர் (எத்தனையேனுமித்யாதி வாக்யஷட்கத்தாலே.)

(க) இடைச்சி - யசோதைப்பிராட்டி. (உ) வேடன்-குஹப்பெருமாள். (ங) பெருமாள் - நம்பெருமாள். (ச) ப்ராதாநயே சகாரம் - உயர்வுசிறப்பும்மை.

மூ.—வாடி

வ்யா.—விஷயப்ரவணனானவன், இப்போது பழியாய் மேல் நரகமாயிருக்கச்செய்தே, தான் "நல்லது செய்கிறோம்" என்றிருக்குமிறே; அப்படி, தான் "நல்லது செய்கிறோம்" என்றிருக்கு [ரு மோ வென்னில் [ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே] தானும் தன்னைநிந்தித்துக் கொள்ளும். (க) திருக்கைத்தலமிழந்தவன், "(உ) இற்றைப்புறப்பாடு காணப்பெறாத நாம் கர்ப்பூரமும்எலுமிச்சங்காயும் பெற்றோமாகில்முடிந்துபிழைக்கலாய்த்து!" என்றிருக்குமிறே; ஒருநாளைப் புறப்பாடிழந்தார்வார்த்தையிது [க0 வானால், அநாதிகாலமிழந்தவர்க்கு, வாடினேன்! என்றல்லது வார்த்தையில்லையிறே. (வாடினேன்) என்றவிதுதான் எவ்வவஸ்தையைப்பற்றச் சொல்லுகிறவார்த்தை?;-விஷயப்ரவணராய்ப் போந்தபோது அவற்றையநுபவித்துக் களித்துப்போருகையாலே வாட்டமில்லை, பகவத்விஷயத்தில் கைவைத்தபின்புதானே வாட்டமி [கரு ல்லை; ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்து பூர்வவ்ருத்தத்தையநுஸந்தித்தபோதைவார்த்தை. ப்ராப்திஸமயத்திலிறே பூர்வவ்ருத்தத்தை ஸ்மரியாதொழிவது, "நோபஜநம் ஸ்மரந்" "நோபஜநம்ஸ்மரந்" என்னுமளவும் வந்ததில்லையிறே; ஜ்ஞாநலாபவேளையாகையாலே பூர்வவ்ருத்தந்தா னிவர்க்கு ப்ரத்யக்ஷம்போலேயிறே தோற்றுகிறது. [உ0

(வாடி) என்கிற (ங) இவ்வநுபாஷணம், இரண்டிடத்திலும் பொருள் பெற்றுக்கிடக்கிறது.

அ.—மேலுக்கவதாரிகை (விஷயேத்யாதி.) ஆழ்வார்தம்மை நிந்தித்தமைக்குப் பின்னையுமொருத்ருஷ்டாந்தம் (திருக்கைத்தலமித்யாதி.)கைவைத்த-இச்சரீரத்தோடே பகவதநுபவம்பண்ணின. (வாட்டமில்லை) என்றவநந்தரம், எங்கேயென் [உரு னில் என்று சேஷம். ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தால் பூர்வவ்ருத்தஸ்மரணம் வருவானென்னென்ன வருளிச்செய்கிறார் (ப்ராப்தீத்யாதி வாக்யத்வயத்தாலே.)வாடினேன் - விஷயபரனாய்க் கெட்டேனென்னுமது இவ்வாழ்வார்க்குச் சேராது, விஷயபரராயிருந்தபோது களிப்புண்டாகையாலே கெட்டேனென்னக் கூடாமையாலே; இப்போது விஷயபரதை யில்லாமையால் (ச)ஸுதராம் கெட்டேனென்னக் [ஙய கூடாது என்னும்சங்கையிலே யருளிச்செய்கிறார் (ஜ்ஞாநேத்யாதி;) முன்புத்தை விஷயஸங்கம் இப்போது ப்ரத்யக்ஷம்போலே விசதமாகத் தோற்றுகையாலே இப்போது க்லேசம் பிறக்கையாலே சொல்லுகிறாரென்று கருத்து.

"வாடினேன், வருந்தினேன்" என்னுமளவும்(ரு)பௌர்வாபர்யம்தோற்றியிருக்கவும், "வாடி" என்ற (சு)ல்யபந்தமானபுநருக்திக்குப்ரயோஜநம்காட்டுகிறார் [ஙரு (வாடியித்யாதி.) இத்தால்-கீழ் "வாடினேன்" என்றதுக்கு-சிரகாலஸம்பந்தமும், மேலேவருகிறதுக்கு அத்யந்த ஸந்நிஹிதத்வமும் தோற்றுவிக்கையாலே, அதுக்கு ப்ரயோஜநமுண்டென்றதாய்த்து. பொருள் - ப்ரயோஜநம்.

(க) திருக்கைத்தலம் - திருக்கைத்தலஸேவை. (உ) இற்றை - இன்றைய. (ங) அநுபாஷணம்-அநுவாதம். (ச) ஸுதராம் - மிகவும். (ரு) பௌர்வாபர்யம்-முன்பின்னாயிருக்கை. (சு) ல்யபந்தம் - வினையெச்சத்தொடர்.

மூ.—வருந்தினேன் மனத்தால்; பெருந்துயரிடும்பையில்

ப-ரை.—பெருந்துயர் - மிகுந்ததுன்பத்துக்குக் கொள்கலமாய், இடும்பையில் - துன்பங்களுக்கெல்லாம் ஹேதுவான சரீரத்திலே,

வ்யா.—அநாதிகாலம் இவ்விழவு ப்ரவர்த்தமாய்ப் போந்த [ரு தென்றும், மேலே ஓரநர்த்தத்தை விளைத்ததென்றும் தோற்று கிறது. விஷயப்ராவண்யம் (க) காதாசித்கமாய் அநுதாபம்பிறந்து மீளுகையன்றிக்கே அநாதிகால மிதுவே யாத்ரையாய்ப்போந்ததென்றும், இவ்வளவன்றிக்கே இதுக்குமேலே விளைந்ததோரநர்த்தத்தைச்சொல்ல வொருப்பட்டமையும் தோற்றுகிறது. மேல் [கo விளைந்தஅநர்த்தந்தானேதென்னில் (வருந்தினேன்மனத்தால்) மாநஸமான க்லேசத்தை அநுபவித்துப்போந்தேன். இந்த்ரியங்கள் விஷயங்களிலே ப்ரவணமாய் அவற்றையநுபவிக்கக்கோலிஅவற்றை லபியாமையாலும், லபித்தாலும் அவற்றிலநுபவிக்கலாவதொன்றில்லாமையாலும், மாநஸமான க்லேசத்தை யநுபவித்துப்போந் [கரு தேன்; ஸர்வேந்த்ரியங்களுக்கும் (உ) கந்தமானமநஸ்ஸை (ந) ப்ரத்யகர்த்தப்ராவணமாக்க மாட்டாமையாலே, மாநஸமான க்லேசத்தை யநுபவித்தேன். இத்தால் சொல்லிற்றாய்த்து- சப்தாதிவிஷயங்களிலே ப்ரவணனாய் திருவடிகளை யொருநாளும் நினைக்கப்பெற்றிலேனென்றபடி. (பெருந்துயரிடும்பையிற்பிறந்து) விஷயங்க [உo ளிலே ருசியைப்பிறப்பித்து, வாஸநையையுண்டாக்கி, ராகத்வேஷங்களைமிகுத்து, இதிலுண்டானஅவித்யாகர்மங்களும் சரீராரம்ப ஹேதுவாகவந்து பிறந்தேன். துயரென்று - துக்கம்; இடும்பையென்றும்-துக்கம். இத்தால் - சரீரந்தான் (ச) துக்காயதநமுமாய், துக்கஹேதுவுமாயிருக்குமென்கை. துக்காயதநமுமாய் மேலே [உரு அநேக துக்கங்களை விளைக்கவும்வற்றாயிருக்கை.

அ.—சிரகாலஸம்பந்தத்தையும் மேலே ஸந்நிஹிதமாக வோரநர்த்தமுண்டென்று மத்தையு முபபாதிக்கிறார் (அநாதீத்யாதி.) சிற்வாக்யவிவரணம் (விஷயேத்யாதி.)

சப்தார்த்தமருளிச்செய்து, மாநஸமான க்லேசத்துக்கு மூன்றுஹேதுக் [நய களைக்காட்டாநின்றுகொண்டு, தாத்பர்யமருளிச்செய்கிறார் (இந்த்ரியங்களித்யாதி வாக்யத்வயத்தாலே.) ப்ரத்யகர்த்தமென்று - ஸ்ரீவேச்வர தத்த்வங்களை.

சரீரத்தை "பெரிதானதுயர்" என்றும் "இடும்பை" என்றும் இப்படிலக்ஷணயாவருளிச்செய்ததுக்கு தாத்பர்யமருளிச்செய்கிறார்(விஷயங்களிலேயித்யாதி.) இதில் - சரீரத்தில்.

[நரு

(க) காதாசித்கமாய் - ஒருக்காலுண்டாய். (உ) கந்தம்- மூலம். (ந) ப்ரத்யகர்த்த ப்ரவணமாக்குகை - ஆத்மப்ரவணமாக்குகை. (ச) துக்காயதநம் - துக்கத்துக்கு, ஆயதநம் - கொள்கலம்.

மூ.—பிறந்து | கூடினேன்;

ப-ரை.—பிறந்து - உண்டாய், கூடினேன் - சரீரம் என்றும் ஆத்மா என்றும் பகுத்தறியக்கூடாதபடி ஒன்றாய்ப் பொருந்தினேன்;

வ்யா.—"பெருந்துயரிடும்பையிற்பிறந்து-கூடி-வாடினேன்" [ரு என்னாதே, முதலிலே "வாடினேன்" என்பானென்னென்னில்; கர்மஸம்பந்தம்அநாதியாய் அசித்ஸம்ஸர்க்கமும் ப்ரவாஹரூபேண நித்யமாயிருக்கையாலே, நடுவேயொன்றைப்பிடித்துச் சொல்லுகிறார். (பிறந்து) ஜந்மமரணங்களில்லாத ஆத்மா "செத்தான், பிறந்தான்" என்று, வ்யவஹாராஸ்பதமாகையாலே. (கூடினேன்) [க0 நித்யமாய் ஏகரூபமாய் ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய் பகவச்சேஷமான ஆத்மாவை, (க) "தேவோஹம், மநுஷ்யோஹம்" என்னலாம்படியானபடி. (கூடினேன்) (உ) அசித்ஸம்ஸர்க்கந்தான் ஸத்தாப்ரயுக்த மென்னலாம்படி பொருந்தினபடி. (கூடினேன்) என்கையாலே - இதுதான் ஆத்மாவுக்கு ஸ்வரூபமன்று, ஔபாதிகம்-வந் [கரு தேறி, என்னுமிடம்தோற்றுகிறது. ராஜபுத்ரன் வழிபோகாநிற்க வேடர்கையிலே யகப்பட்டாப்போலேயிறே ஆத்மாவுக்குஅசித் ஸம்ஸர்க்கந்தான் வந்தபடி. (௩) அயஃபிண்டத்தை அக்நியினருகே வைத்தால் அக்நிபரமாணுக்கள் ஸூக்ஷ்மரூபேண அதிலே ஸங்க்ரமித்தாதல் வாஸநையாலேயாதல் அதினுடைய ஔஷ்ண்யஸ்வபாவத்தையும் நிறத்தையும் பஜித்து அதுதானென்னலாமாப் போலே,

அ.—அர்த்தஸ்வபாவத்தாலே, முந்துற "பெருநதுயரிடும்பையிற் பிறந்து கூடினேன், கூடி யிளையவர்தம்மோடு அவர்தருங்கலவியேகருதியோடினேன், ஓடி-மநத்தால்-வருந்தினேன், வருந்தி-வாடினேன், வாடி, உய்வதோர்பொருளால்-நாடினேன், நாடி நான்-நாராயணாவென்னும் நாமம்- கண்டுகொண்டேன்" என்றந் [உரு வயித்தர்த்தம் சொல்லலாயிருக்க, இருந்தபடியே அந்வயித்துஅர்த்தம் சொல்லுகை சேருமோவென்னும் சங்கையை யநுவதிக்கிறார் (பெருந்துயரித்யாதி.) 'கூடி" என்றது-கீழ்ப்பதங்களையும் மேல்பதங்களையும்அர்த்தஸ்வபாவத்துக்கநுகுணமாகஎடுக்க வேண்டும் பதங்களுக்கும் உபலக்ஷணம். இத்தைப்பரிஹரிக்கிறார்(கர்மேத்யாதி.)இப்போது ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்துகீழ்பட்ட ப்ரமாதங்களை யநுஸந்திக்குமவர்க்கு சரீரஸம்பந்தாதிகள் ப்ரவாஹதோ நித்யங்களாகையாலே,ஒன்றை யிட்டு க்ரமேணவருளிச்செய்கிறாரென்று கருத்து. "கூடினேன்"என்றதுக்கு ஒரு காலாவதி சொல்லாமையாலே பலித்தவர்த்த மருளிச்செய்கிறார் (அசித்ஸம்ஸர்க்கந்தாநித்யாதி.) சில நாள் பிரிந்தவற்றுக்கன்றோ கூடுகையென்னலாவது, (ச) ஸத்தாப்ரயுக்தம் என்னுமாப்போலே யிருந்தால் இச்சப்தம் ப்ரயோகிக்கப் போமோவென்ன வருளிச் [௩௫ செய்கிறார் (இதுதாநித்யாதி;) பின்பொருநாள் வரையிலே கழியக்காண்கையாலே ஜ்ஞாநம் பிறந்தவிவர் "கூடினேன்" என்னலாமே யென்றுகருத்து. "வந்தேறி" என்னுமத்தை த்ருஷ்டாந்த முகேந விவரிக்கிறார் (ராஜபுத்ரநித்யாதி.) இப்படி ஔபாதிக மானால் "தேவோஹம்" என்று தத்ஸ்வரூபமாக ப்ரமிக்கக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (அயஃபிண்டேத்யாதி.) வாஸநையாலே யாதல் - சிரகால [௩0 ஸம்பந்தத்தாலே யாதலென்றபடி.

(க) தேவோஹம், மநுஷ்யோஹம் - நான்தேவன், நான்மநுஷ்யன். (உ) ஸம்ஸர்க்கம்-சேர்க்கை. (௩) அயஃபிண்டம் - இருப்புருளை. (ச) ஸத்தாப்ரயுக்தம்-உடன்பிறந்தது.

மூ.—கூடி யிளையவர்தம்மோடவர்தரும்

ப-ரை.—கூடி - இப்படி நெடுங்காலம் பொருந்தி யிருந்து, இளையவர் - யுவதிகளான ஸ்த்ரீகள், தரும் - கொடுக்கிற,

வ்யா.—இவ்வாத்மாவும் அசித்ஸம்ஸர்க்கத்தாலே அதுதா [ரு
னென்னலாம்படி அசித்கல்பமானபடி. (க) பரமாணுப்பற்று சிவ
ப்புமாறினாலும் வாஸனையாலேசுடும்.

(கூடி) சரீரவிச்லேஷம் அஸஹ்யமாம்படி பொருந்தினபடி.
ஜ்ஞாநம் பிறந்தால் சரீரவிச்லேஷந்தான் ப்ரார்த்தித்துப் பெறவே
ண்டும்படி யானபடி. கூடி என்கையாலே-அநாதிகாலம் இத் [க0
தோடே பொருந்திப் போந்தமையும், இதுக்குமேலே ஓரநர்த்
தம் விளைந்ததென்றும் தோற்றுகிறது.

மேல்விளைந்த அநர்த்தந்தானென்னென்னில் (இளையவர்தம்
மோ டவர்தரும் கலவியேகருதி யோடினேன்) (இளையவர்) "சப்
தாதிவிஷயப்ராவண்யம் அநர்த்தம்" என்று ஆராயவுமொட் [கரு
டாதே, பகவத்விஷயத்தில் நன்மையை யறிந்து அதிலே மூளவு
மொட்டாதே+, பருவத்தைவிட்டுப் பகட்டித் துவக்குவர்கள். (தம்
மோடு) "[Grantha text] " "சாயாவாஸத்த்வமநுகச்சேத்"
என்கிறதுவுமெல்லா மிங்கே. நல்லதொரு பூமாலைகண்டால், தன்
தலையிலே வைத்தல் தன்னையொருவனுக நினைத்திருத்தல் செ [உ0
ய்யாதே, அவர்கள்போனஅடிவழியே போமித்தனை. "[Grantha text]" " யேநயேநதாதாகச்சதி தேநதேநஸஹகச்
சதி" என்கிறதுவுமெல்லாமிங்கே.

(அவர்தருங்கலவி)கிட்டினபோதுசிரித்து வார்த்தைசொல்லி
யிருந்து, " இனியிவன் கைப்பட்டான்" என்றறிந்தால், தங் [உரு
களைக்கொண்டு எழவாங்கியிருப்பர்கள்.

அ.—வாஸனையாலே அதுதான் என்னலாம்படி யெண்ணுமதெங்கே யென்னவருளிச்செய்கிறார் (பரமாணுவித்யாதி.)

"கூடினேன்" என்றதுக்கு - தேவோஹம்என்று தாதாத்ம்யப்ரமம் வரும்படி கூடினேனென்று தாத்பர்ய மருளிச்செய்து, அதுக்கு சரீரவிச்லேஷமஸ [கூய
ஹ்யமாம்படி கூடினேனென்று தாத்பர்யாந்தரம் விவக்ஷித்து, அநுபாஷணத்துக்கு தாத்பர்யமருளிச்செய்கிறார் (சரீரேத்யாதி.) சரீரவிச்லேஷமஸஹ்யமாவதெப்போதென்னவருளிச்செய்கிறார் (ஜ்ஞாநமித்யாதி.) முந்தின தாத்பர்யத்திலே அநுபாஷணத்துக்கு ப்ரயோஜநத்தை யருளிச்செய்கிறார்(கூடியென்கையாலேயித்யாதி.) இரண்டாம் தாத்பர்யத்திலே ப்ரயோஜநம் - சரீரவிச்லேஷமஸஹ்யமான [கூரு
மாத்ரமன்றிக்கே ஸ்திதிஹேதுவானவன் ஏகயத்நம்பண்ணும்படிகூடி மேலுமநர்த்தம் விளைத்துக்கொண்டமையை ஸூசிப்பிக்கை யென்று கண்டுகொள்வது.

பகட்டி - அஜ்ஞாநத்தை விளைத்து. "தம்" என்றத்தாலே தோற்றின ப்ராதாந்யத்தை விவக்ஷித்தருளிச்செய்கிறார் (சாயேத்யாதி.) விவரணம் (நல்லதித்யாதி.) ப்ரமாணாந்தரகதநமுகேந பரிஹரிக்கிறார் (யேநேத்யாதி.)  [சம

கலவியேகருதி என்னலாயிருக்க, "அவர்தரும்" என்றுவிசேஷித்தவருடைய ஹார்த்தபாவம் (கிட்டினவித்யாதி) தௌர்ப்பல்யம் தோற்ற விசேஷித்தாரென்று கருத்து.

(க) பரமாணுப்பற்று - (நெருப்பினுடைய) மிகவும் நுண்ணிய கண்டத்தின் ஸம்பந்தம். +"பொருந்தவுமொட்டாதே" என்று சிலஸ்ரீகோசங்கள்.

மூ.—கலவியேகருதி | ஓடினேன்;

ப-ரை.—கலவியே - ஸம்ச்லேஷத்தையே, கருதி - நினைத்து, அவர்தம்மோடு-அவர்கள்போன அடிவழியே, ஓடினேன்-பின்தொடர்ந்தோடினேன்;

வ்யா.—(கலவியேகருதி) அநுபவித்து என்பது (௧) அநு [௫
பாவ்யந்தானுண்டாகிலிறே; இவனுடைய மநோரதமேயாகையா
லே (கருதி) என்கிறது. மநோரதந்தான் மாறாதிறே அதுக்கடியான
பாபம்கிடக்கையாலே. அநுபவிக்கலாவதொன்றில்லாவிட்டால்
மீளவிறேயடுப்பது, அவர்கள் இராய்க்கவிராய்க்க "நன்மையுண்டு"
என்று மேன்மேலன மநோரதம்செல்லாநிற்குமாய்த்து அதுக் [௧0
கடியான பாபம் கிடக்கையாலே. ஒருவிஷயத்தி லநுபவிக்கலாவ
தொன்றில்லாவிட்டால் மீளலாமிறே, அத்தைவிட்டு மற்றொன்
றறியப்போய் அதிலுமொன்றும் காணாவிட்டால் பின்னையு மவ்
வருகே போகாநிற்குமத்தனையிறே (ஓடினேன்) விஷயங்கள்தன்னில்
அரைக்ஷணம் கால்தாழப்பண்ணவல்லதொரு விஷயந்தா [௧௫
னில்லையிறே;(௨)போகோபகரணம்கொண்டுபுக்குஸ்நாநத்துக்கிடா
கப்புறப்படும் விஷயமிறே. இவற்றின்தோஷத்தைத் தானுமறிந்து,
அத்தைமறைக்கைக்கீடான போகோபகரணங்கள் கூட்டிக்கொடுத்
திறே தானுமநுபவிக்கப்புகுவது. ப்ரத்யக்ஷம் அகிஞ்சித்கரமாகிற
விஷயமிறே. இவற்றினுடைய தோஷந்தான், சாஸ்த்ரங்கொண் [௨0
டறியவேண்டாதே கண்ணாலேகாணலாம்படி யிருக்கச்செய்தே,
கண்டுமீளவொண்ணாதபடி யிருக்கிறதிறே!. விஷயப்ராவண்யமா
வது - பாம்பு படத்தைவிரித்துக்கொண்டுநின்றால் அதுஅள்ளிக்
கொள்ளப்புகுகிறதறியாதே அதின்நிழலிலே யொதுங்கத் தேடுமா
ப்போலேயிருப்பதொன்றிறே§. உயிர்க்கழுவிலே யிருந்தவன் [௨௫
(௩) பிபாஸையும் வர்த்தித்துத் தண்ணீரும்குடித்துப் பிறக்கும்
ஸுகம்போலேயிறே விஷயாநுபவத்தால் பிறக்கும் ஸுகமாகிறது.
துঃகங்களிலே (௪) ஒன்றை ஸுகம் என்று நிர்வசித்துக்கொள்ளு
கிறானித்தனையிறே; "[illegible]" "ஸுகபாவைகலக்ஷணு"
என்கிறவதுவேயிறே ஸுகம். [௩0

அ.—"கலவியே கருதி" என்ற ஏவகாரத்தாலே - வேறொன்றைக் கருதுகை தோற்றாமையாலே யருளிச்செய்கிறார் (மநோரத மித்யாதி.) ஹேத்வந்தரம் (அநுபவிக்கவித்யாதி.) இராய்க்கைக்கு ஹேது (அதுக்கடியானவித்யாதி.) மேலுக்கவதாரிகை (ஒருவிஷயத்திலித்யாதி.) போனேன் என்னாதே, "ஓடினேன்" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (விஷயங்களித்யாதி வாக்யத்வயத்தாலே.) ஒருவிஷயத்தை யநுபவித்து ஸ்நாநத்துக்குப் புறப்படும்படி கண்டால் ஓடக்கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (இவற்றினித்யாதி.) வ்யாக்யாதாவினீடுபாடு (இவற்றினுடைய வித்யாதி.) த்ருஷ்டதோஷமின்றிக்கே மேலுமநர்த்தகரமென்கிறார் (விஷயேத்யாதி.) இப்படி (௫) தோஷபூயிஷ்டமானத்திலே யிவன்ப்ரமிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (உயிர்க்கழுவித்யாதி வாக்யத்ரயத்தாலே.) [௪0

(௧) அநுபாவ்யம் - அநுபவிக்குமது. (௨) போகோபகரணம்-அநுபவிக்கைக்குக்கருவி. (௩) பிபாஸை - தாஹம். (௪) ஒன்றை - அஜ்ஞாநத்தை. (௫) தோஷபூயிஷ்டம் - குற்றங்கள்நிறைந்தது. § "விஷயப்ராவண்யந்தான், ஆடுகிறபாம்பின் நிழலிலே யொதுங்கி விடாய்தீர நினைக்குமோபாதியிறே" என்று சில ஸ்ரீகோசங்கள்.

மூ.—ஓடி யுய்வதோர் பொருளா

ப-ரை.—ஓடி-இப்படி ஓரிடத்திலும்கால்தாழாதே விஷயங்கள்தோறும் விசேஷம் தேடிக்கொண்டோடி, மனத்தால் - விஷயங்களிலே சென்ற சிந்தையாலே, வருந்தினேன் - துக்கத்தை அநுபவித்தேன்; பின்பு, வாடினேன் - கொள் [ரு கொம்பில்லாக்கொடிபோலே வாடிப்போந்தேன்; வாடி - வாட்டத்தையுடையனாயிருந்து, உய்வது - உஜ்ஜீவநத்துக்குடலான, ஓர்பொருளால் - ஒருநல்ல அர்த்தத்தாலே (ஸர்வேச்வரன்க்ருபையாலே),

வ்யா.—(ஓடி) முன்பெல்லா மிப்படியேயாய்ப்போரச்செய்தே ஒருநன்மையுண்டாய்த்தென்று தோற்றுகிறது. ஸர்வசக்தி, [க0 "ரக்ஷிப்போம்"என்று கைநீட்டி யெடுக்கப்பார்த்தாலும், எட்டாதபடி கைகழியப்போனேன்.

(உய்வதோர் பொருளால்) விஷயங்களிலே கைகழியப்போயோடி இளைத்துவிழுந்த விடத்திலே, "இனியிவன் தானாக மீளமாட்டான்" என்றதுதானே ஹேதுவாக ரக்ஷிக்கவொருப்பட்ட [கரு ஸர்வேச்வரன் க்ருபையாலே. உஜ்ஜீவநோபாயமா யிருப்பதொரு நல்ல அர்த்தத்தாலே. நல்ல அர்த்தமென்கிறது - பகவத்க்ருபையை. கௌரவத்தாலே "உய்வதோர்பொருள்" என்று மறைத்துச் சொல்லுகிறார்; நாலாம்பாட்டிலே, "ஆழியானருளே" என்று அது தன்னைத் தெரியவருளிச்செய்வர். நம்மாழ்வார், அவ்வளவு [உ0 போகப்பொறுமை நடுவே "மயர்வறமதிநல மருளினன்" என்றாரிறே. ("நானேநாநாவிதநரகம்புகும் பாவம்செய்தேன்" என்றும்)§ "பாவியேனைப் பலநீகாட்டிப் படுப்பாயோ" என்றும் – நானே விநாசத்துக்கிடான பரிகரம் தேடிக்கொள்ள, எனக்கு உஜ்ஜீவிக்கலாவதொரு உபாயமுண்டாய்த்து!. ✻ அஸந்நேவவான வென்னை "ஸந்தமேநம்" "ஸந்தமேநம்" என்னப்பண்ணிற்றொரு நல்ல அர்த்தமுண்டாய்த்து.

அ.—"ஓடி" என்கிற அநுவாதத்தாலே - கீழே "ஓடினேன்" என்றவிடத்தில் யாத்ருச்சிக ஸுக்ருதாதிகள் ப்ரஸங்கிக்க வொண்ணாதபடி யோடுகையை ஸூசிப்பிக்கைக்கு ப்ரயோஜநமென்றும், ல்யப்பாலே - ஓரிடத்தில் இளைப்பாய் விழுந் [ரு தமை தோற்றுகையால் அதுவே மேல் அவன் க்ருபைக்கு ஹேதுவாகிறதென்றும் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (முன்பெல்லா மித்யாதி வாக்யத்வயத்தாலே.)

"ஓடி" என்றது ஹேதுவானமையைக் காட்டாநின்றுகொண்டு, தாத்பர்யமருளிச்செய்கிறார் (விஷயங்களிலே யித்யாதி.) சப்தார்த்தம் (உஜ்ஜீவநேத்யாதி.) நாலாம்பாட்டிலே ✻அருளைச்சொன்னால்,முதற்பாட்டிலும் அதுவேயாகவேணுமோவென்ன வருளிச்செய்கிறார் (நம்மாழ்வாரித்யாதி.) இத்தால் - ஏககண்டராகையாலே இதுவே விவக்ஷிதமென்று கருத்து. "பலநீகாட்டி" என்னுமதில் த்ருஷ்டியின்றிக்கே, "பாவியேனை" என்றதிலே நோக்காக வருளிச்செய்கிறார் (பாவியேனையித்யாதி.) இத்தால்-"உய்வது"என்னும்அம்சத்துக்குக் கருத்துச் சொல்லிற்றாய்த்து. "ஓர்" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (அஸந்நேவேத்யாதி.)

§ குண்டலத்தில் அடங்கிய க்ரந்தம் சில ஸ்ரீகோசங்களில்பாடம்.

மூ.—லுணர்வெனும்பெரும்பதந் தெரிந்து | நாடினேன்; நாடி

ப.உரை.—உணர்வு எனும் – ஜ்ஞாநமாகிற, பெரும் - பெரிய, பதம்-ஸ்தாநத்தை, தெரிந்து - இருந்தபடியே அறிந்து, நாடினேன் - " பகவத்விஷயம் நன்று, ஸம்ஸாரம் தீது" என்று ஆராய்ந்தேன்; நாடி- ஆராய்ந்து, [ரு

வ்யா.—(உணர்வெனும் பெரும்பதம்) [విజ్ఞానంయదిదంప్రాప్తమ్- விஜ்ஞாநம்யதிதம்ப்ராப்தம்] கிடக்கைப்பாயிலே வெள்ளங்கோத்தாப்போலே. (பெரும்பதம்) " அவன்றான் வேண்டா, தத்விஷய ஜ்ஞாநமே யமையும்" என்னும்படி இதினுடைய பெருமை. (திரிந்து) விஷயங்கள்தான் (க) ஸாவதியாகையாலே அவற்றில்அநு [க0 பவிக்கலாவதொன்றில்லாமை முட்டிமீண்டேன். (தெரிந்து) என்று பாடமாகில், ஜ்ஞாநம்பிறந்தவாறே எல்லாம் இருந்தபடியே தெரிந்தது. ஆகையாலே, முன்பெல்லா மிருட்சியாய்ப்போந்தமை தோற்றுகிறது. (நாடினேன்) ஜ்ஞாநம்பிறந்தவாறே, " நாம் கீழ்ப்பட்டதென், மேல்படப்புகுகிறதென்!" என்னுமாராய்ச்சி பிறந்தது. [கரு

(நாடி) இதரவிஷயங்களைப் பெறவேணும் என்று புத்திபூர்வமே ப்ரவர்த்தித்தாலும் (உ) அநர்த்தாவஹமாமதத்தை போக்கி பவிப்பதொன்றில்லை; பகவத்விஷயத்தில் ஆராய என்றிழிந்தமாத்ரத்திலே (ங) பலவ்யாப்தியுண்டு.

அ.—உணர்வாகிற பெரியபதம்-ஸ்தாநமே என்று சப்தார்த்தமாய், இத்தை [உ0 *பதமாகச் சொன்னருண்டோவென்ன வருளிச்செய்கிறார் (விஜ்ஞாநமித்யாதி) "స్థానమార్జితమ్" "ஸ்தாநமார்ஜிதம்" என்றதிலேநோக்கு." విజ్ఞానంయదిదంప్రాప్తం యదిదంస్థానమార్జితమ్ | జన్మాన్తరేపి మే దేవ మాభూత్తస్య పరిక్షయః." అస్యార్థః-యత్ వేదాన్తప్రసిద్ధంవిజ్ఞానంప్రాప్తం అయత్నలబ్ధమ్, ఇదమేవార్జితం సంపాదయితుమాశాసితం స్థానంయత్, తస్యజన్మాన్తరేపిపరిక్షయోమాభూదితి. "விஜ்ஞாநம் யதிதம்ப்ராப்தம்யதிதம் ஸ்தாநமார்ஜிதம் | ஜந்மாந்தரேபிமேதேவ மாபூத்தஸ்ய பரிக்ஷயஃ." அஸ்யார்த்தஃ-யத் வேதாந்தப்ரஸித்தம் விஜ்ஞாநம் ப்ராப்தம் அயத்நலப்தம், இதமேவார்ஜிதம் ஸம்பாதயிது மாசாஸிதம் ஸ்தாநம் யத், தஸ்ய ஜந்மாந்தரேபி பரிக்ஷயோமா பூதிதி. ப்ராப்தம் - தானேவந்ததென்று அர்த்தம்திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (கிடக்கையித்யாதி.) "திரிந்து" என்றதுக்கு-மீண்டென்று அர்த்தமாய், [ஙரு ஹேதுபூர்வக மருளிச்செய்கிறார் (விஷயங்களித்யாதி ;) இந்தபாடத்திலே " ஓடி-திரிந்து" என்று அந்வயிப்பது. அவன்றான் மீளமாட்டானென்று கீழேயருளிச்செய்தது- "தெரிந்து" என்ற பாடத்தைப்பற்ற வென்று கண்டுகொள்வது.

"நாடி" என்ற அநுபாஷணத்துக்கும்-கீழே "நாடினேன்" என்றதுக்குக்கீழ்ப்பட்டதிலே அபுத்தி பூர்வக ப்ரவர்த்தியான வளவன்றிக்கே புத்திபூர்வகமாக [ஙரு ப்ரவர்த்தித்தாலும் ப்ரயோஜநமில்லாமையை நன்றாகவிசாரித்தமை தோற்றவும், "கண்டுகொண்டேன்" என்னுமதுக்கு ஹேதுவாகவும் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இதரேத்யாதி வாக்யத்வயத்தாலே.)

(க) ஸாவதி - அளவுடையது. (உ) அநர்த்தாவஹம் - தீங்கைவிளைக்குமது.
(ங) பலவ்யாப்தி - பலத்தோடேசேருகை.

## ௩.—நான் கண்டுகொண்டேன்

ப-ரை.—நான்- திருநாமஞ்சொல்லுகைக்கு யோக்யதையில்லாத நான்,

வ்யா.—(நான்) "ஓடினேன்" என்ற நான். (க) ராவணபவநத்திலே நெடுநாள் அவனெச்சில்தின்று வளர்ந்தவன் ஒருமுழுக்[டு கிடாதே ராமகோஷ்டிக்கு ஆளானாப்போலே ௺. வேல்வெட்டிநம்பியார், பிள்ளை கிழக்கே (உ) முக்காதமாற்றிலே யெழுந்தருளியிருக்கச்செய்தே, ஒரு (௩) திருக்காத்திகையிலே, "புறம்பே சிலரைக்கேட்டால் எளியன் என்றிருப்பர்கள், இதுபரிஹரிக்க வல்லாருமில்லை, இத்தைச்சொல்லி (௪)வரக்காட்டவேணும்" என்று [க0 ஓராள் கொடுத்து வரக்காட்டினார்; அது (ரு) என்னம்புதென்னில்; "பெருமாள் கடலைசரணம்புகுகிறவிடத்தில் (௬) ப்ராங்முகத்வாதிநியமோபேதராய்க்கொண்டு சரணம்புக்கார், இதரோபாயங்களோபாதி (எ) ப்ரபத்தியும் (அ) ஸஹாயாந்தர ஸாபேக்ஷமோ?" என்றுவரக்காட்ட; "அந்தவுபாயத்துக்கு (௯) உடன்வந்தியா [கரு யிருப்பதொன்றன்று, உபாயபரிக்ரஹம் பண்ணினவருடைய ஸ்வபாவத்தாலே வந்தது, ராக்ஷஸஜாதீயராவார் தண்ணியராய் அநதிகாரிகளாயிருக்க, அவர்களிலே யொருவனை ஸ்ரீவிபீஷணாழ்வானிறே 'సముద్రంరాఘవోరాజాశరణంగన్తుమర్హతి' 'ஸமுத்ரம்ராகவோராஜா சரணம்கந்துமர்ஹதி' என்று இவர்க்கு உபதேசித்தான், அவன்[உ0 பக்கல் நியதி கண்டிலோம், இவர்பக்கலிலே கண்டோம்." இத்தால் சொல்லிற்றாய்த்தென்னென்றால்; அநதிகாரியானவனுக்கு அதிகாரம் ஸம்பாதிக்கவேண்டா, அதிகாரியானவனுக்கு அநதிகாரம் ஸம்பாதிக்கவேண்டா, நின்றநிலையிலே அதிகாரிகளாமித்தனை. ஸர்வாதிகாரமென்றபடி. (கண்டுகொண்டேன்) தநமிழந்தவனுக்கு [உரு தநலாபம்போலே யிருக்கையாலும், (க0) தாயப்ராப்தமாயிருக்கையாலும். (நான்கண்டுகொண்டேன்) கெடுத்தவன் தானே கண்டாப்போலே யிருக்கை.

அ.—"கண்டுகொண்டேன்" என்ற (கக) உத்தமனாலே தோற்றாநிற்கவும் "நான்" என்றதுக்கு பாவமருளிச்செய்கிறார் (ஓடினேனித்யாதி.) இத்தால்- பகவத் [௩0 விஷயத்திலிழிவார்க்கு அதிகாரஸம்பத்தி தேடவேண்டா என்று பலிக்கையால், இதுக்கு ஸம்வாதமருளிச்செய்கிறார் (வேல்வெட்டி யித்யாதி.) திருக்காத்திகை- ஸ்வாமி உத்ஸவகாலம். எளிடனென்றிருப்பர்கள் - லகூகரிப்பர்கள்.

(க) ராவணபவநம் - ராவணனுடைய அரண்மனை. (உ) முக்காதமாறு - முக்காதவழி. (௩) திருக்காத்திகை- திருக்கார்த்திகை. (௪) வரக்காட்டுகை-அனுப்புகை. (ரு) என்னம்புது-(வார்த்தைப்பாடு) என்ன! (௬) ப்ராங்முகத்வாதிநியமோபேதராய் - கிழக்குமுகமாய்நிற்கை முதலிய நியமங்களோடே கூடினவராய். (எ) ப்ரபத்தி - சரண்புகல். (அ) ஸஹாயாந்தர ஸாபேக்ஷம் - வேறொருதுணையை விரும்புமது. (௯) உடன்வந்தி-கூடவருமது; ஸஹஜம். (க0) தாயப்ராப்தம்-பாகத்தால் வருமது. (கக) உத்தமன்-தன்மையிடம். ௺"அர்ஹனானாப்போலே" என்றும்பாடம்.

மூ.—நாராயணாவென்னும் நாமம் ॥க॥ ஆவியே! அமுதே!

ப-ரை.—நாராயணாஎன்னும் - நாராயணாஎன்கிற, நாமம் - திருநாமத்தை, கண்டுகொண்டேன் - காணப்பெற்றேன். ... ... ... ... (க)

எல்லாப்படியாலும் ஹேயராண் ஸ்த்ரீகளை, ஆவியே - ப்ராணபூதையான [ரு வளே!, அமுதே-அம்ர்தம்போலே போக்யையானவளே!,

வ்யா.—(நாராயணா) ப்ரணவமாதல் நமஸ்ஸாதல் சதுர்த்தியா தல் கூட்டாமையாலே, திருவிடையாட்டத்திலே யிழியவமையும், பலபர்யந்தமாகைக்கு ஸாங்கமாகவும் வேண்டாவென்கிறது. (என் னும் நாமம்) என்னும் என்கிறது-பலகால் ஆதரித்துச்சொல்லுகிற அநந்யபரமான †நாராயணாநுவாகப்ரஸித்தி. நாமம்என்கையாலே- இருந்தபடியே உத்தேச்யம், இச்சைபிறந்தபோதே காலம், சொ ல்லுவோமென்றவன் அதிகாரிஎன்கிறது. "திருமந்த்ரம்சொல்லும் போது (க) ப்ரயதராய்க்கொண்டு சொல்லவேணுமோ, வேண்டா வோ?" என்று (௨) ஜீயர் பட்டரைக்கேட்க; "வேண்டா" [கரு என்றருளிச்செய்தார்;"கங்கையாடப்போமவனுக்கு நடுவேயொரு (௩)உவர்க்குழியிலேமுழுகிப்போகவேணுமோ,இந்நன்மையெல்லா முண்டாக்கப்புகுகிறது §கீழ் அயோக்யதையித்தனையும்போக்கமா ட்டாதோ" என்றருளிச்செய்தார். ... ... (க)

அ.—இரண்டாம்பாட்டு.—அநாதிகாலம்"பகவத்தத்த்வ [௨0 மென்றொன்றுண்டு" என்றுமறியாதே விஷயப்ரவணராய்ப் போரு கையாலே,"வாடினேன்"என்றும் "இளையவர்-கலவியேகருதி யோ டினேன்" என்றுமிறே கீழ்ச்சொல்லிநின்றது; அதிலநுபவித்த வகைகளையும்,காலமடங்க வ்யர்த்தமே போய்த்தென்றும் சொல்லி, இப்படி போனகாலமும் வ்யர்த்தமாகாதபடியான திருநா [௨ரு மத்தைக் காணப்பெற்றேனென்கிறார்.

வ்யா.—(ஆவியேயமுதே) "ஆவியே யமுதே யலைகடற்கடை ந்தவப்பனே" என்றும் "ஆவியேயாரமுதே யென்னையாளுடைத் தூவி யம் புள்ளுடையாய்" என்றும் பகவத்விஷயத்திலே சொல்ல க்கடவ வார்த்தையை அப்ராப்த விஷயத்திலே சொன்னேன். [௩0

அ.—திருவிடையாட்டம்-ஐச்வர்யம்; நாராயணசப்தார்த்தமான உபயவிபூத் யைச்வர்யத்திலே நானுமொருவனென்றறிய வமையுமென்றபடி. ... (க)

இரண்டாம்பாட்டு.— (ஆவியேயித்யாதி.) போனகாலமும் வ்யர்த்தமாகா தபடி யென்றதக்கு- "சென்றநாள் செல்லாத செங்கண்மாலெங்கள்மா | லென்ற நாளெந்நாளும்நாளாகும்" என்கிறபடியே போனகாலத்தையும் நல்லநா [௩ரு ளாக்கும்.பாட்டின்றுனியிலே தாத்பர்யத்தைவ்யக்தமாக வருளிச்செய்கிறாரென்று கண்டுகொள்வது.

விஷயாநுபவத்தின் வகைகளைச் சொல்லுகிறவர் "ஆவியே யமுதே" என்று இவ்வகைசொன்னதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆவியேயித்யாதி.)

†"நாராயணாநுவாகத்தில் சென்று கேட்டுக்கொள்ளுங்கோளென்கை.(நாமம்)" என்று சில ஸ்ரீகோசங்கள். (க) ப்ரயதர் - சுத்தியுடையவர். (௨) ஜீயர்-நஞ்சீயர். (௩) உவர்க்குழி - உப்புஜலமுள்ளபள்ளம். § " கீழ் யோக்யதை யித்தனையும் உண்டாக்கமாட்டாதோ" என்று சிலஸ்ரீகோசங்களிற் பாடம்.

மூ.—எனநினைந்துருகி, அவரவர் பணைமுலைதுணையா—
பாவியேனுணராதெத்தனைபகலும்பழுதுபோயொழிந்தனநாள்கள்;
தூவிசேரன்னம் துணையொடும்புணரும் சூழ்புனற்குடந்தையேதொழுது, என்-
நாவினாலுய்யநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும் நாமம்.

ப-ரை.—என-என்று அநேகங்களைச்சொல்லி, நினைந்து-அவர்கள்தருஞ்சிற்றின்பத்தைநினைத்து,உருகி-நீர்ப்பண்டம்போலே உருகி, அவரவர்-அவ்வவஸ்த்ரீகளுடைய,பணை-பெருத்த, முலை-தோளும் மாம்ஸமுமான ஸ்தநங்களை, துணையா-ரக்ஷகமாகக்கொண்டு,பாவியேன்!-விஷயங்களின் துன்னிமையையும் அவற்றால் வரும்அநர்த்தத்தையும் பாராதே கண்டவிடமெங்கும் கால்தாழ்ந்து போந்தநான், உணராது-[௧0
"ஸர்வேச்வரனேநமக்குரக்ஷகன்" என்று அறியமாட்டாதே, எத்தனை பகலும்நாள்களும்-காலமெல்லாம், பழுதுபோய் ஒழிந்தன- "பழுதேபலபகலும்போயின"என்றும் "அவத்தே அருமந்த காலத்தைப் போக்கி" என்றும் சொல்லுகிறபடியே வ்யர்த்தமாய்க் கழிந்துபோயின; தூவி - சிறகு, சேர் – உடைத்தாகையால் வந்த அழகையுடைய, அன்னம் - ஹம்ஸமானது, துணையொடும் - தன்பேடையோடே, புணரும் – ஸம்ச்லேஷித்து வர்த்திக்குமதுமாய், புனல் - ஜலத்தால், சூழ்- சூழப்பட்டிருப்பதான, குடந்தை - திருக்குடந்தையில் ஆராவமுதாழ்வாரை, தொழுது-ஸேவித்து, நான - விஷயங்கள்தோறும் பசையுண்டென்று ஓடித்திரிந்தநான், உய்ய - உஜ்ஜீவிக்கும்படியாக, நாராயணனென்னும் நாமம் - நாராயணா என்னும் திருநாமத்தை, என்நாவினால் - பிறரை ஸ்தோத்ரம்பண்ணித்திரிந்த என் நாவாலே,[௨0
கண்டுகொண்டேன் - புகழ்ந்து காணப்பெற்றேனென்கிறார். ... ... (௨.)

வ்யா.—தாரகத்வமும்(௧)கண்ணழிவற்று போக்யதையும் கண்ணழிவற்றிருப்பது பகவத்விஷயமே யிறே; தாரக மின்றிக்கே பாதகமுமாய், போக்யதை யின்றிக்கே பீபத்ஸமுமா யிருக்கிற விஷயங்களிலேயாயத்து வார்த்தை சொல்லிப் போந்தது. "த்வம் ஜீவிதம் த்வமஸி மே ஹ்ருதயம் மதீயம்" "த்வம் ஜீவிதம் த்வமஸி மே ஹ்ருதயம் மதீயம்" என்றிறே சொல்லிப்போந்தது. (எனநினைந்து) "(௨) இப்படைகளில் நினைப்பது அநேகத்தை யிறே" என்றாய்த்து ஜீயரருளிச்செய்வது. பிள்ளை, "இங்ஙன் நினைந்து வாய்விடமாட்டாதே 'நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்' என்று இங்ஙனேசொல்லலாமோ?" என்று ஜீயர்க்கு விண்ணப்பஞ்செய்ய; "நீரிவரிலும் பக்தராயிருந்தீர்" என்றருளிச்செய்தார்.[௩0

அ.—தாத்பர்யார்த்தம் (தாரகமித்யாதி.) பீபத்ஸமுமாயென்றது - ஹேயமுமாயென்றபடி. ஒருநாயிகாவிஷயத்திலே யொருவன் சொல்லுமத்தை ஸம்வாதமாகக்காட்டுகிறார் (த்வமித்யாதி.) ஜீவிதமென்றது - "ஆவியே" என்றதுக்கு ஸதர்சம். ஹ்ருதயமென்றது-ஹ்ருதயாபிமதை யென்றபடி. "என" என்றது-அநேகங்களையென்றதாய், அருளிச்செய்கிறார் (இப்படைகளிலித்யாதி.) "எனை" என்றது-என்று என்றாய், அதுதானும்-சொல்லவென்றதாய், அருளிச்செய்கிறார் (பிள்ளையித்யாதி.) நீரிவரிலும் பக்தராயிருந்தீரென்றது-ஆழ்வார் பகவத்விஷய ரஸ்யதையாலே யிப்படி யருளிச்செய்தார், நீரவரைக்காட்டிலும் ரஸிகராயிருந்தீரென்றபடி.[௪0

(௧) கண்ணழிவு - குற்றம். (௨) இப்படைகளில் - இந்தப்ரகாரங்களிலே.

(எனநினைந்துருகி) இங்ஙனே அநுஸந்தித்து, நீர்ப்பண்டம்போலேமயங்கிக்கிடப்பர். எத்தனைவிஷயங்களிலே யிப்படி கால்தாழ்ந்து போந்ததென்னில் (அவரவர்) காலம்அநாதி, ஆத்மா நித்யன், பரிக்ரஹித்தசரீரங்களுக்கு எல்லையில்லை, அவ்வோ சரீரங்கள்தோறும் விஷயங்களுக்கும் எண்ணில்லை; அவ்விஷயங்கள்தோறும் கால்தாழ்ந்தேபோந்தது; ஆசையாலே, (அவரவர்) என்னுமித்தனை. (பணைமுலை) ஒருத்தன்நோவுபட்டான் என்றால், பிற்பாடராயே முதவப்பெற்றிலோம்; "[illegible]" "ஹரிரேகாஹிமமா
௧0]துலா," "[illegible]" "நத்யஜேயம்" என்னுமவனன்றே. "(க) இளிம்பனுயிருந்தான் அகப்பட்டான், இனி இவன்கையிலுள்ளதடங்க நம்மது" என்று அதுவேபொருளாகப் பணைக்குமாய்த்து. நம்மைப்பெற வேணுமென்று உருகிறான் என்றால் இரங்கி உடம்புகொடுக்குமத்தனை நீர்மையில்லையே!. (பணைமுலைதுணையா) ஜங்கமமாயும் ஸ்தாவரமயமான (உ) க்ராந்தியைப்பற்றி, "தயாதத்த பகவந்நவ்யயம்நி மற்றிலேன்தஞ்சமாகவே" என்றிருக்குமாப்போலேயிறேயிருப்பது. "இப்போது சாபலத்தாலே விரும்புகிறோம்" என்றிருக்கை யன்றிக்கே அத்ருஷ்டத்தையும் இதுதானே தருவதுபோலேயாய்த்து அநுஸரிப்பது. அத்ருஷ்டத்தை மறந்தபடி. "துன்னுகுழல் கருநிறத்தென்
௨0]துணையே" என்றிருக்குமத்தையிறே யிங்கேநினைப்பது.

(பாவியேன்) நித்யமாய் ஏகரூபமாய் ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய் ஈச்வரனுக்கு ஸ்ரீகௌஸ்துபத்தோபாதியாயிருக்கிற ஆத்மவஸ்து படும் (௩) எளிவரவேயிது!. (உரையாது) இவ்விஷயத்துக்கு நம்மை வருத்ததுஎன்று உரைமாட்டாதே.

---

பணைக்குமாய்த்து - பெருக்குமாய்த்தென்றபடி. தங்களிடத்திலே பொருந்தியிருந்தவனுக்கு ஹாநிவந்தால் இதுவேஹேதுவாகப் பணைக்கைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் (நம்மையித்யாதி.) ஈச்வரனைப்போலே த்ருஷ்டாத்ருஷ்ட பலஸாதநமென்னுமத்தை விவரிக்கிறார் (இப்போதித்யாதி.) அத்ருஷ்டத்தையு மென்றது- அத்ருஷ்ட ஸாதகத்தையு மென்றபடி. ஸம்பாஸம்போகாதிகளும இதுவேயென்று
௩0]எண்ணி, வேறே அத்ருஷ்டஸாதகத்தையும் மறந்திருக்குமென்றுகருத்து. அவரவர் துணையா என்னாதே, "பணைமுலைதுணையா" என்றதுக்கு தாத்பர்யமருளிச்செய்கிறார் (துன்னுகுழலித்யாதி.)

ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்து அநுசயிக்கும்தசையிலே "பாவியேன்" என்னக்கூடாமையால், இது க்லேசஸூசகமான பாசுரமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (நித்யமாயித்யாதி.) இவ்விஷயத்துக்கு - பகவத்விஷயத்துக்கு.

---

(க) இளிம்பன் - சதுரப்பாடில்லாதவன்; ஸாலபன்.
(உ) க்ராந்தி - முடிப்பு. (௩) எளிவரவு - ஏழைமை.

(எத்தனைபகலும் பழுதுபோயொழிந்தனநாள்கள்) எத்தனைகாலமுண்டு இப்படி வ்யர்த்தமேபோகிறது. காலமடங்க வ்யர்த்தமே போய்த்து. அணைக்கு அவ்வருகுபட்ட கீரோபாதியிறே. "[Sanskrit]" "வயோஸ்யாஹ்யநிவர்த்ததே." (பழுதுபோயொழிந்தனநாள்கள்) இளையபெருமாளைப்போலே கண்ணுறங்கவும் அவஸரமின்றிக்கே போகக்கடவகாலம், அநர்த்தத்தோடேபோய்த்தது. கைங்கர்யத்தோடே (௧) அடிக்கழஞ்சுபெற்றுச் செல்லக்கடவ காலம், பழுதேபோய்த்தது.

(தூவிசேரித்யாதி) இப்படி கைகழிந்தது உகந்தருளினநிலங்களிலேயாகையாலே ஸ்வரூபம்பெற்றுமீண்டது. தூவி-சிறகு. சிறகால்வந்தஅழகையுடைத்தாயஅன்னம் (௨) ஸஹசரத்தோடேபுணர்ந்து வர்த்திக்கிற தேசம். ஸர்வபூதசரண்யமான தேசம். அன்னத்தோடு ஸர்வதாஸாம்யம்சொல்லலாயிருக்கையாலே, பெரியபிராட்டியாரோடே ஆராவமுதாழ்வார் ரமித்துவர்த்திக்கிற தேசம். சரண்யவஸ்து குறைவற வர்த்திக்கிற தேசம். பொறுப்பாருமுண்டாய் பொறுப்பிப்பாருமுண்டாகையாலே குறைவற்ற தேசம். (சூழ்புனல்) அசேதநமானஜலமும் அங்கேவந்தால் ஒருக்கால் சூழவாய்த்துப்போவது. * நாபார்த்தர்க்கு ச்ரமஹரமானதேசம். (குடந்தையேதொழுது) "[Sanskrit]" "அவசா: ப்ரதிபேதிரே" என்கிறபடியே - நம்பக்கல் ஒரு நினைவின்றிக்கேயிருக்க, தொழுதுகொடு நிற்கக்கண்டார். (என்நாவினால்) "ஆவியேயமுதே" என்ற என் நாவினால். இப்ப்ரஜையைப்பெற்றுவாழ்ந்தேன்! என்பாரைப்போலே. கரணம் இவ்வுபெற்றபேற்றுக்குப் பாங்காயிருக்கையாலே, வேறொரு சரீரபரிக்ரஹம்பண்ணிற்றும், என்நா என்னலாமிறே. இதரரை ஸ்தோத்ரம்பண்ணித்திரிந்த இவ்வுடம்போடே.

"எத்தனைபகலும்-நாள்களும்-பழுதுபோயொழிந்தன" என்றுஅந்வயமாய், பலித்தஅர்த்தம் (காலமடங்கவித்யாதி.) "போய்" என்றதுக்குபாவம் (அணைக்கித்யாதி.) போனகாலத்துக்கு க்லேசித்தாருண்டோவென்ன அருளிச்செய்கிறார் (வயோஸ்யாஇத்யாதி.) "பழுது" என்ற பதப்ரயோகத்துக்குக் கருத்தருளிச்செய்கிறார் (இளையவித்யாதி.) கீழ்வாக்யவிவரணம் (கைங்கர்யேத்யாதி.)

"சேர்" என்றது - அநுரூபமென்றும் அருளிச்செய்கிறார் (சிறகாலித்யாதி.) சரண்யமான தேசமானமையை உபபாதிக்கிறார் (அன்னத்தோடித்யாதி) "என்" என்றது- நைச்யத்திலே யாக்கி யருளிச்செய்கிறார் (ஆவியே இத்யாதி.) கொண்டாட்டமாகத் தாத்பர்யாந்தரம் (இப்ப்ரஜையையித்யாதி.) ஸ்வரூபஜ்ஞானம் பிறந்தபின்பு பூர்வவ்ருத்தமுடையனுகையைக் கொண்டாடலாமோவென்ன (கரணமித்யாதி.) நா சரீரைகதேசமாகையாலே, (இதரரைஸ்தோத்ரம்பண்ணித்திரிந்த இவ்வுடம்போடே) என்றது.

(௧) அடிக்கழஞ்சுபெறுகை-ஓரடி, கழஞ்சுபொன் பெறுகை; ச்லாக்யமென்றபடி. (கழஞ்சு-பன்னிரண்டு பணவிடை கொண்டநிறை.) (௨) ஸஹசரம்-தன்னுடன் ஸஞ்சரிப்பது; பேடை.

(உய்யநான்கண்டுகொண்டேன்) "மறந்தமதியின்மனத்தால்—இறந்தேனெத்தனையும்" என்றநான், உஜ்ஜீவிக்கும்படி கண்டுகொண்டேன். (கண்டுகொண்டேன்) திருமந்த்ரத்திலுடைய அர்த்தத்தை அநுஸந்தித்தால் அது ஸ்வரூபமாயிருக்குமாப்போலே, சப்தத்தைச் சொல்லுகையும் ஸ்வரூபமாயிருக்குமிறே. இப்படி ப்ராப்தமாயிருந்தத்தைக் காணப்பெற்றேனென்கை. (நாராயணாவென்னும் நாமம்) "நா வாயிலுண்டே" என்னுமதைத். * நா வாயிலுண்டாக * ஓவாதுரைக்குமுரையிறே. [நா வாயிலுண்டே] இது முந்துறமு
க0]ன்னம் தேடிப்போகவேண்டாவே. [நமோநாராயணாவென் றோவாதுரைக்குமுரையுண்டே] ஓவாதுரைக்கும் உரையாகிறது - உச்சியிலே விடாதே சொல்லவேணுமென்கிறதன்று; எட்டு அக்ஷரமாகையாலே நடுவே யிளைக்க வேண்டாதே, சொல்லி யிளைப்பாறலா மென்கை. ஸஹஸ்ராக்ஷரிமாலாமந்த்ரமாய், "இதுசப்தத்தில் காதத்தைப்புக்கும் போகவமையும்" என்னும்படியிராதொழிகை (என்னும் நாமம்) முன்பு இழந்தகாலமும் வ்யர்த்தமாகாதபடியான திருநாமத்தைக்காணப்பெற்றேன். [சென்றநாள்செல்லாத செங்கண்மாலெங்கள்மால் | என்றநாளெந்நாளும்நாளாகும்] செங்கண்மாலெங்கள்மால் என்பதொருநாளுண்டாகில். [சென்றநாள்செல்லாத – எந்நாளும்நாளாகும்] திருமந்
உ0]த்ரத்தைச்சொல்லுகைக்குறுப்பாகையாலே போனகாலமும் நல்லகாலமாய், செல்லுகிறகாலமுந்தானே நல்லகாலம். திருமந்த்ரஞ்சொல்லல் மேல்தானே ஓராநர்த்தம்விளையாதிறே. ... ... (உ)

மதிப்ரஷ்டனான நானென்றர்த்தாந்தரம் (மறந்தவித்யாதி.) ஸ்வரூபமிருக்கு ஞல் அர்த்தாநுஸந்தாநமொழிய சப்தாநுஸந்தானம் கூடுமோவென்ன வருளிச் செய்கிருர் (திருமந்த்ரத்திலுடைய வித்யாதி) § என்னுமதைக்கையென்றது - என்கிற பாட்டையென்கை; அநந்தரம், "கண்டுகொள்வது" என்றத்யாஹரிப்பது. ¶ (க) கத காலம் நல்லநாளாமோவென்ன வருளிச்செய்கிருர் (திருமந்த்ரத்தையித்யாதி.) (திருமந்த்ரத்தை) என்றவநந்தரம், ஒருநாள் என்று சேஷம். ஆக, ஒருநாள் திரு மந்த்ரத்தை யநுஸந்தித்தால் அநாதிகாலமுண்டான ப்ராதிகூல்யங்களெல்லாம்
ரு0]உருமாய்ந்துபோகையாலும், மேல் ஆநுகூல்யங்களை விளைக்கையாலும், வர்த்தமாந காலத்தில் ரஸ்யதாதிசயத்தால்வந்த ஏற்றத்தாலும், ஸர்வகாலமும் ஸார்த்தகமாயிற்றென்றுகருத்து. "செல்லாத" என்று-பவிஷ்யத்காலத்தைச்சொல்லுகிறது. (உ)

§ "திருநாமம் சொல்லுகை உஜ்ஜீவநஹேது என்னுமதுக்கு ப்ரமாணங் காட்டுகிருர் (நா வாயிலித்யாதி," என்றஅரும்பதாந்தரத்தில் வாக்யத்தை இங்கும் கூட்டிக்கொள்வது. ¶ "உரைக்கு முரையிறே - மந்த்ரமென்றபடி. 'என்னும் நாமம்' என்று பாவநத்வ ப்ரஸித்தியைப்பற்ற வருளிச்செய்கிருர் (முன்பிழந்தகாலமித்யாதி.)" என்று அரும்பதாந்தரத்தின் வாக்யம்.

(க) கதகாலம் - போனகாலம்.

மூ.—சேமமேவேண்டித்தீவினைபெருக்கித்தெரிவைமாருருவமேமருவி
ஊமனார்கண்டகனவிலும்பழுதாயொழிந்தன கழிந்தவந்நாள்கள்;
காமனார்தாதை, நம்முடை யடிகள், தம்மடைந்தாரமனத்திருப்பார்—
நாமம்நானுய்யநான்கண்டுகொண்டேன்நாராயணாவென்னும்நாமம்.

ப-ரை.—சேமமே - யாவராலும் க்ஷேமத்தையே, வேண்டி- விரும்பி, அதற்கு வேண்டும் நற்காரியங்கள் செய்யாதே, தீவினை-பாபங்களை, பெருக்கி-அதிகரிக்கச் செய்து, தெரிவைமார் - ஸ்த்ரீகளுடைய, உருவமே - வடிவழகையே, மருவி - நற்றுணையாகக்கருதி, கழிந்த-விணேயொழிந்த, அந்நாள்கள் - பெறவொண்ணாத கால மெல்லாம், ஊமனார்-ஊமைகள், கண்ட—, கனவிலும்-கனவிலுங்காட்டில், பழு[க0 தாய் - வ்யர்த்தமாய், ஒழிந்தன - போயின; ஆதலால், காமனார் - மந்மதனுக்கு, தாதை-தமப்பனும், நம்முடை-நம்போல்வாரெல்லாருக்கும், அடிகள்-ஸ்வாமியாய், தம்-தன்னையே, அடைந்தார்-சரணம்பற்றினவர்களுடைய, மனத்து - நெஞ்சில், இருப்பார்- நீங்காதிருப்பவரான ஸர்வேச்வரனுடைய, நாராயணாஎன்னும் - நாரா யணா என்கிற, நாமம்-திருநாமத்தை, நான்-விஷயசபலனாய்த்திரிந்த நான்,உய்ய- உஜ்ஜீவிக்கும்படி, கண்டுகொண்டேன் - காணப்பெற்றேன் என்கிறார். (ங)

வ்யா.—மூன்றும்பாட்டு.—(சேமமேவேண்டி) "சத்ருக்களாலே ராஜாக்களாலேவிட்டால் நமக்கொரு நலிவு வாராதொழியவேணும், எல்லாராலும் ரக்ஷைபெற்றுச்செல்லவேணும்" என்றுமித்து நெஞ் சால்நினைந்திருப்பது. (தீவினைபெருக்கி) ரக்ஷையேபெற்றுச்செல்ல[உ0 வேணுமென்றிருந்தால்,அதுபெறும்படியான ஸுக்ருதியைப் பண் ணாதே பாபத்தையாய்த்து (௧) கூடுபூரிப்பது. (தெரிவைமாருருவ மே மருவி) நல்லதைவேண்டியிருக்குங்காட்டில் அதுவாராதே, செ ய்ததின்பலமிறே வருவது; பண்ணிவைத்த பாபங்கள் கொடுபோய் விஷ யங்களிலே மூட்டும். (உருவமே மருவி) அகவாயிலேழியில்ல த்யஜிக்கலா மிறே. அகவாய் நஞ்சாய், (உ) ஸ்வகார்ய பரராயிறே யிருப்பது. அகவாயிலேயிழியில் அநாத்மகுணம் கண்டு மீளலாயிருக்குமிறே; வடிவில் தோஷங்களை மறைத்திறே வைப்பது. (மருவி) அத்தையே (௩) சுபாச்ரயமாக மநநம்பண்ணரியாய்த்திருப்பது.

அ.—மூன்றும்பாட்டு.—(சேமமேயித்யாதி) கீழ்ப்பாட்டிலே "பழுதாபோயொழி[ங0 ந்தன" என்னுமத்தை ஸத்ர்ஷ்டாந்தமாக உபபாதித்துக்கொண்டு, பின்னையும் சிறிதுகளை அநுஸந்தித்து அநுதபிக்கிறாரென்று ஸங்கதியையுட்கொண்டு வாக் யார்த்த மருளிச்செய்கிறார் (சத்ருக்களித்யாதி.) "சேமம்" என்றது - க்ஷேமமென் றாய், அதுதானும்-ஸ்திதிபரிபாலநமாய், இத்தைச்சொன்னது-அபூர்வார்த்தப்ராப்தி ரூபமான யோகத்துக்கு முபலக்ஷணமென்று திருவுள்ளம்பற்றி, இவ்விரண்டும் ப்ரார்த்யமாகையாலே* சேமபதார்த்தம் கிழருளிச்செய்து, யோகபதார்த்தமருளிச் செய்கிறார் (எல்லாராலுமித்யாதி.) ரக்ஷைபெறறென்றது - இஷ்டத்தையடைந் தென்றபடி. இப்படி சரீரரக்ஷணம் சொன்னது ஆத்மரக்ஷணத்துக்கு முபலக்ஷ ணமாக்கி யருளிச்செய்கிறார் (நல்லத்தையித்யாதி.) அகவாய்போலே வடிவி லும் தோஷமில்லையோவென்ன அருளிச்செய்கிறார் (வடிவிலித்யாதி.) [சு0

(௧) கூடுபூரிக்கை - உறையைநிறைக்கை. (உ) ஸ்வகார்யபரர் - தங்கள் ப்ரயோஜநத்தில் ஊற்றமுடையவர்கள். (௩) சுபாச்ரயம் - த்யாநவிஷயம்.

(ஊமனார் கண்டகனவிலும் பழுதாய்) ஊமனார் - ஊமைகள். (ஊமைகண்ட கனவிலும் பழுதாய்.) ‡ ஊமை கண்டகனா வாய்விட மாட்டானித்தனை, நினைத்திருக்கும்; அங்ஙனுமன்றியே, நெடுநாள் அநுபவித்துப் போந்த விஷயங்களில் போயிருந்து, அநந்தரம் நினைத்திருக்கைக்கு மொன்று மின்றிக்கே யிருக்கை. அங்ஙனன்றியே, ஊமை கண்டகனா வாய்விடமாட்டிற்றிலனாகிலும் நினைத்திருக்கலாம், இவை நினைக்கில் (க) பயாவஹமாகையாலே நினைக்கவுமொண்ணாதென்கை. ஸ்ம்ருதி விஷயமாவதொன்றில்லை, ஸ்ம்ருதிவிஷயமாய்த்த துண்டாகில் பயாவஹமா
௧0]யிருக்கும். (ஒழிந்தனகழிந்தஅந்நாள்கள்) [ந மே து:கம் ப்ரியா தூரே ந மே து:கம் ஹ்ருதேதி வா | ஏததேவாநுசோசாமி வயோஸ்யாஹ்யதிவர்த்ததே, நமேதுঃகம்ப்ரியா தூரே நமேதுঃகம்ஹ்ருதேதிவா | ஏததேவாநுசோசாமி வயோஸ்யாஹ்யதிவர்த்ததே] ப்ரியையானவள் தூரவிருந்தாளென்று வெறுத்திருக்கிறோமல்லோம், அது நாலுபயண மெடுத்துவிடத் தீரும்; வலியரக்ஷஸ்ஸாலே (உ) அபஹ்ருதையென்று வெறுத்திருக்கிறோமல்லோம், அது அவன்றலையறுக்கத்தீரும்; நமக்கு சோகநிமித்தமிதுவே [வயோஸ்யாஹ்யதிவர்த்ததே, வயோஸ்யாஹ்யதிவர்த்ததே] போனகாலத்தை அம்பாலே மீட்கவொண்ணாதே!

நீர்பற்றிச்சொல்லுகிற விஷயத்துக்கு இந்த தோஷங்களில்லையோவென்ன (காமனார்தாதை) உருவமே மருவிலும் பசைபோரும், உடம்பைப்
௨0]பற்றிலும் ஊதியம்போரும். ¶ தன்வடிவாலே நாட்டையடையப் பகட்டித்திரியுமவனுக்கும் உத்பத்திஸ்தானம். தன்கையில் நாட்டார் படுவதடங்க அவன்றான் இவன்கையிலே படும்; "ஸாக்ஷான்மன்மத மன்மத:" "ஸாக்ஷாந்மந்மதமந்மதঃ." (நம்முடை யடிகள்) கீழில் விஷயங்களுக்குச் சொன்ன குற்றமில்லாததுவேயன்று இதுக்கு வாசி; அவை அப்ராப்தவிஷயம், இது ப்ராப்தவிஷயம். (நம்முடை யடிகள்) ஸர்வஸ்வாமி.

(தம்மடைந்தார் மனத்திருப்பார்) வடிவைக்காட்டித் துவக்கிக்கையிலுள்ள தடங்க அபஹரித்து உடம்புகொடாதே எழவாங்கியிருக்கை யன்றிக்கே, ஆசாலேசமுடையார்நெஞ்சை விட்டுப்போயிருக்கமாட்டாதவன்.

---

நிஸ்ஸாரத்வமும் பயாவஹத்வமுமான * பழுதாகையை நிகமிக்கிறார்
௩0](ஸ்ம்ருதீத்யாதி.)

மேலுக்கவதாரிகை (நீர்பற்றி யித்யாதி.) பசை - ஸாரம். ஊதியம்போரும் - வ்ருத்தியுண்டாமென்றபடி. காமயதீதிகாம: என்ற வ்யுத்பத்தியையுட்கொண்டு அருளிச்செய்கிறார் (நாட்டையித்யாதி.) காமனுக்குத்தாதை என்றத்தாலே - காமன் அழகுக்குத்தோற்றுப் பிள்ளையானானென்று தோற்றுகையாலே யருளிச்செய்கிறார் (தன்கையிலித்யாதி.)

---

‡ குண்டலிதக்ரந்தம் சிலஸ்ரீகோசங்களிலில்லை. (க) பயாவஹம் - அச்சத்தை விளைக்குமது. (உ) அபஹ்ருதை - அபஹரிக்கப்பட்டவள். ¶ "நாட்டையடையத் தன்வடிவாலே பகட்டித்திரியுமவன்" என்றானால் அரும்பதத்தின் ப்ரதீகத்துக்குச் சேரும்.

(க) கலவிருக்கையான பரமபதத்தையும் விட்டு, நெஞ்சேகலவிருக்கையாகக் கொள்ளும். (தம்மடைந்தார்மனத்திருப்பார்நாமம்) இவ்வர்த்தமித்தனைக்கும் வாசகமான திருநாமம். ஹேறுகுணமும், ஸர்வஸ்வாமித்வமும், ஸௌலப்யமும், வாத்ஸல்யமுமிறே இதுக்கு அர்த்தமாய்த்தது. (நானுய்ய நான் கண்டுகொண்டேன்) "அஸந்நேவ" "அஸந்நேவ" என்று முடியும்படியான நான் உஜ்ஜீவிக்கும்படிகண்டுகொண்டேன். (நான் கண்டுகொண்டேன்) இனிக்காட்சி யில்லையோ ! என்னும்படி கைகழிந்தநான், (உ) உத்தேச்யஸித்தி யுண்டாகப் பெற்றேன். "இனிஸத்தையுண்டாகமாட்டாது, காட்சியுண்டாகமாட்டாது" என்னும்படியான நான், உஜ்ஜீவிக்க[க0 வும்பெற்று, காணவும் பெற்றேனென்கிறார். (நானுய்ய, நான்) என்று இருக்கால் சொல்லுகிறது - லாபத்தால் வந்த ப்ரீதிக்குப் போக்குவிட்டுச்சொல்லுகிறார். (நாராயணாவென்னும் நாமம்) "ஶாந்தோதாந்த உபரதஸ்திதிக்ஷுஸ் ஸமாஹிதோ பூத்வா ஆத்மந்யேவாத்மாநம் பஶ்யேத்" "சாந்தோதாந்த உபரதஸ்திதிக்ஷுஸ் ஸமாஹிதோபூத்வா ஆத்மந்யே வாத்மாநம்பச்யேத்" என்று (ங) சமதமாத்யுபேதர் சொல்லக்கடவ திருநாமத்தைச் சொல்லப்பெற்றேன். "சேமமேவேண்டித் தீவினைபெருக்கித் தெரிவைமாருருவமேமருவி" என்று அநாத்மகுணோபேதனாய்ப் போந்தநான் ஆத்மகுணோபேதர் பெறும் பேற்றைப்பெற்றேன். ... ... ... ... (ங)

---

"மனத்தேயிருப்பார்" என்று ஸாவதாரணமாக்கி, பரமபதத்திலிருப்பு[உ0 இல்லையோவென்னவருளிச்செய்கிறார் (கலவிருக்கையானவித்யாதி.) இவ்வர்த்தமித்தனைக்கு மென்றது - "காமனோ" இத்யாதி பதத்ரயார்த்த மித்தனைக்குமென்றபடி. இரண்டாம் * நானுக்கர்த்தம் (இனியித்யாதி.) இல்லையோவென்றது - இல்லையேயென்றபடி. கீழிரண்டுவாக்யத்திற்சொன்ன தாத்பர்யத்தையும் கூட்டி ஒரு * நானுக்கே கருத்தாக வருளிச்செய்கிறார் (இனிஸத்தை யித்யாதி.) ஆனால் இருக்கால் சொல்லுவானெனென்னும் சங்காநுவாதபூர்வகம் பரிஹரிக்கிறார் (நானுய்யவித்யாதி.) "மனத்திருப்பார்நாமம் - நான்கண்டுகொண்டேன்" என்று அந்வயித்திருக்கவும், "நாராயணாவென்னும் நாமம்" என்றதுக்குக்கருத்தருளிச்செய்கிறார் (சாந்தஇத்யாதி.) "நான்கண்டுகொண்டேன்" என்று (ச) அநுஷங்கித்து தாத்பர்யமருளிச்செய்கிறார் (சேமமேயித்யாதி.) ... ... ... (ங)[ங0

நாலாம்பாட்டு.—(வென்றியே யித்யாதி) கீழ்ப்பாட்டிலே * சேமமேவேண்டித் தீவினை பெருக்குகைக்கு ஹேது - அர்த்தேஷணையாதல் தேஹாத்மாபிமானமாதலென்று காட்டாநின்றுகொண்டு, திருமந்த்ரத்தைக் கண்டுகொண்டதுக்கு ஹேதுவையும் (ரு) முக்தகண்டமாக வருளிச்செய்கிறாரென்று ஸங்கதிகண்டு கொள்வது.

---

(க) கலவிருக்கை - நெஞ்சுபொருந்தியிருக்கை; ஓலக்கம்; கொலுச்சாவடி: நித்யவாஸம்பண்ணுமிடம்; "இறைப்பொழுதில் பாதாளம் கலவிருக்கைகொடுத்துகந்தவம்மான்" என்னக்கடவதிறே. (உ) உத்தேச்ய ஸித்தி-தான்ஆசைப்பட்டது கைகூடுகை. (ங) சமதமாத்யுபேதர் - சமம் தமம் முதலிய குணங்களோடு கூடினவர்கள். (ச) அநுஷங்கித்து - சேர்த்து. (ரு) முக்தகண்டமாக - விடப்பட்டமிடற்றையுடையராய்; வெளிப்படையாகவென்றபடி.

மூ.—வென்றியேவேண்டிவீழ்பொருட்கிரங்கி வேற்கணார்கலவியேகருதி,
நின்றவாநில்லாநெஞ்சினையுடையே னென்செய்கேன்!; நெடுவிசும்பணவும்-
பன்றியா யன்று பாரகங்கீண்ட பாழியான், ஆழியானருளே,
நன்றுநானுய்ய நான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம். (௪)

ப-ரை.—வென்றியே - எல்லார்பக்கலிலும் ஜயத்தையே, வேண்டி-அபேக்ஷித்து, வீழ்-நசிக்குந்தன்மையுள்ள, பொருட்கு-தநத்துக்கு, இரங்கி-துக்கித்து, வேல்கணார்-வேல்போன்ற கண்ணையுடைய ஸ்த்ரீகளது, கலவியே-ஸம்ச்லேஷத்தையே, கருதி-நினைத்து, நின்றவாநில்லா-ஒன்றிலும் நிலைபெற்றிராத, நெஞ்சினை-நெஞ்சை,
௧௦ உடையேன்-உடையநான், என்செய்கேன்-உன்னைப்பெறுகைக்குறுப்பான ஓர்உபாயமும் செய்யவல்லேனல்லேன்; அன்று-பூமியை ப்ரளயங்கொண்ட அக்காலத்திலே, நெடு-உயர்ந்த, விசும்பு-ஆகாசத்தை, அணவும் - தழுவும்படிவளர்ந்த, பன்றியாய்-வராஹரூபங்கொண்டு, பாரகம்-பூமியை, கீண்ட-உத்தரித்த, பாழியான்-மிடுக்கையுடையனாய், ஆழியான்-விரோதிகளை நிரஸிக்கைக்குத் திருவாழியைக்கையிலேயுடைய ஸர்வேச்வரனது, அருளே-க்ருபையாலே, நான் நன்றுஉய்ய நாராயணா என்னும் நாமம் நான் கண்டுகொண்டேன்—. (௪)

வ்யா. — நாலாம்பாட்டு.—(வென்றியேவேண்டி) பிதாவாகவுமாம், ஆசார்யனாகவுமாம், வென்றியேயாய்த்து இவன் வேண்டியிருப்பது. தன்னையொழிந்தாரைக் கீழ்ப்படுத்தி தான் மேலாகவாய்த்து வேண்டியிருப்
௨௦ பது. தோல்வி குணமாம் விஷயத்திலேயாய்த்து வெல்லநினைத்திருப்பது. (வீழ்பொருட்கிரங்கி) கையில் சிறிது அர்த்தமுண்டாய் அத்தாலேயிறே யிவனொருவனையும் மதியாதிருப்பது. அது அஸ்திரமானபடியாலே அபஹ்ர்தமாயிருக்குமிறே; அத்தையிழந்து கூப்பிடாநிற்கும். கௌரவ்யராயிருப்பார்பக்கல் அபிமாநம் பண்ணக்கடவதன்றிக்கேயிருக்க, அபிமாநம்பண்ணி வர்த்தித்ததுக்குமேலே இரங்கக்கடவதல்லாததுக்கு இருந்து கண்ணநீர் பாயாநிற்கும். அங்ஙனன்றிக்கே, தேஹாத்மாபிமாநத்தைப் பண்ணி தன்னையெல்லார்க்கும் மேலாகநினைத்துப்போந்ததுவே யன்றியே, அஸ்திரமானவுடம்பை "நித்யமாக வேணும்" என்று சோகியாநிற்குமென்னவுமாம்.

௩௦ அ.—"அர்த்தாதுராணாம் ந ஸுஹ்ருந்ந பந்து:" "ஆர்த்தாதுராணாம்குருர்நபந்து:" என்கிறபடியே - இவனுடைய அர்த்தாபிமாநத்தால் வந்த மேன்மையைச் சொல்லுகிறதென்று தாத்பர்யம் திருவுள்ளம்பற்றி, வென்றி-ஜயமாய், ஸ்வோத்கர்ஷம்மேலிட்டென்று அர்த்தமாய், இது அநுதாபஹேதுவானபடியை யருளிச்செய்கிறார் (பிதேத்யாதி.) இவ்வர்த்தம், "வென்றியே"என்கிற ஸாமாந்ய நிர்த்தேசத்தாலே ஸூசிதமாகிறதென்னுமத்தைக் காட்டுகிறார் (தன்னையித்யாதி.) இது அதிக்ரூரதோஷமானமையை உபபாதிக்கிறார் (தோல்வியித்யாதி.)

வீழ்கையே-போகையே ஸ்வபாவமான, பொருட்கு-தநத்துக்காக, இரங்கி-க்லேசித்தனென்று சப்தார்த்தமாய்,ஹேதுபூர்வகம் தாத்பர்யமருளிச்செய்கிறார்(கையிலித்யாதி வாக்யத்ரயத்தாலே.) இரண்டுபதங்களாலும் பலித்தஅர்த்தத்தைத் தொகுத்
௪௦ தருளிச்செய்கிறார். (கௌரவ்யராயித்யாதி.) அபிமாநம் - அர்த்தாபிமாநகார்யமென்றபடி. வெற்றிக்குஹேது-தேஹாத்மாபிமாநமென்றும் பொருள். தேஹாத்மாபிமாநம் என்னும் பதத்வயத்துக்கு அர்த்தாந்தரமருளிச்செய்கிறார் (அங்ஙனன்றிக்கேயித்யாதி.)

(வேற்கணார்கலவியேகருதி) கையில் (க) அர்த்தமுண்டானகாலம் (உ) பார்யையைச் செங்கற்சீரைகட்டிக் கூப்பிட்டுத் திரியவிடுமவன் (க) அர்த்தமிழந்து கூப்பிடாநின்றால், அல்லாதாரோடொக்க அவளும் வினவப்புகுருமே; இவனோக்கண்டவாறே, "அவ்வர்த்தத்தை யெல்லாம் இட்டு ஒருபவளியாகப் பூட்டிக்காணப்பெற்றிலோம்" என்று மநோரதியா நிற்கும். கெடுத்தபொன்னை யிப்போது பூட்டத்தேடும்.

(நின்றவாநில்லா நெஞ்சினையுடையேன் என்செய்கேன்) ¶ உர்வசி ஸாலோக்யத்துக்கு நாடடங்க ஸாதநாநுஷ்டாநம்பண்ணாநிற்க, நேர்கொடு நேர் அவள்தான்வந்து உபஸ்தாநம்பண்ணி முன்னே நிற்க, அர்ஜுநன்[௧0 நமஸ்கரித்துக் கடக்கநின்றானிறே விரக்தியாலே; இப்படிப்பட்டவன்,

---

கலவிசெய்தென்னாதே, "கருதி" என்கையாலே - அம்மநோரதமாத்ரந்தான் அர்த்தமிழந்தபோது மற்றவிஷயத்தில் நிஷ்பலமாகையாலே, பார்யாவிஷயமாக்கி தாத்பர்யமருளிச்செய்கிறார் (கையிலர்த்தமித்யாதி) இதுமுந்தினதாத்பர்யத்துக்குச்சேரும். பொருள் - சரீரமென்ற பக்ஷத்தில், "வேற்கணார்" என்றது-ஸர்வ விஷயமாகக் கண்டுகொள்வது. செங்கற்சீரைகட்டி - காவிப்புடவை யுடுத்து.

---

(க) அர்த்தம் - தநம். (உ) பார்யை - மனைவி.

¶ அவிவேகிகளுக்கன்றோ மாஸஸநலங்கும், விவேகிகளுக்குக் கலங்குமோவென்ன (உர்வசிஸாலோக்யத்துக்கித்யாதி.) அதாவது - புரூரவா என்கிற ராஜா வேட்டைக்குப் புறப்பட்டவிடத்திலே, சாபோபஹதையாய்க் கொண்டு உர்வசிபூமியிலே ஸஞ்சரியாநிற்க, இவனை லோக்கண்டு "ஸ்த்ரீயாகவேணும்" என்று அபேக்ஷிக்க, "நான்சொன்னபடியே செய்தாயாகி லப்படியே செய்கிறேன்" என்று அவள்சொல்ல, "அதாவதேது?" என்ன, "எப்போதும் என்ஸமீபத்திலே இரண்டு ஆட்டுக்குட்டியைக் கட்டிவைக்கவேணும், வெளியிலே நக்நனாய் என்முன்னேயிருக்கவொண்ணாது, இருந்தாயாகில் அப்போதேவிட்டுப்போகிறேன்" என்று சொல்ல, "அப்படியே செய்கிறேன்" என்று பிரகாலம் அவளோடே ஸம்ச்லேஷித்துக்கொண்டிருக்கிறவளவிலே, இவளுக்கும் சாபமோக்ஷம்பிறந்து, இந்த்ரனுடைய ஆஜ்ஞையாலே யிவளையழைத்துக்கொண்டு போவதாக கந்தர்வர்கள்வந்து, ஒருராத்ரியிலே யிவளுமவனுமாகக் கூடி யிருக்கிறவளவிலே, அவனுடைய புடவையையும் அந்த ஆட்டுக்குட்டிகளையும் அபஹரித்துக்கொண்டுபோக, ஆட்டுக்குட்டிகள்போகையாலே மிகவும் துக்கிதையாய் மீட்டுக்கொண்டுவரச்சொல்ல, அவன்போகாதே வெறுமனேயிருக்க, "உன்னை புருஷனென்றிருந்தேன், நீயுமென்னைப்போலே ஸ்த்ரீயானாய்!" என்று க்ஷேபோக்தியைப்பண்ண, அவனும் அந்த நக்நவேஷத்தோடே புறப்பட, அவ்வளவிலே ஒருமின்மின்ன, அந்தவெளியாலே அவனைக்கண்டு "வெளியிலே யென்முன்னே நக்நனாயிருந்தாய்" என்றுசொல்லி அந்த ராஜாவை விட்டு ஸ்வர்க்கத்திலேபோனாள்; அநந்தரம், அந்தராஜா ப்ராந்தனாய்க்கொண்டு அந்தவேஷத்தோடே ஸஞ்சரியாநிற்க, இவனுடைய வ்யஸநத்தைக் கண்டு உர்வசிமீளவும்வந்து "துக்கப்படவேண்டா, உன்னாலே யுண்டானகர்ப்பம் என்வயிற்றிலே யிருக்கிறது, ஒருவருஷம் சென்றவாறே ஒருபிள்ளைபிறக்கும், அந்தப்பிள்ளையையு முனக்குக்கொடுத்து உன்னோடேயொருநாள் ஸம்ச்லேஷிக்கிறேன்" என்றுசொல்லிப்போய், ஒருவருஷம்சென்றவாறே திரும்பவந்து பிள்ளையுங் கொடுத்து ஒருநாள்ஸம்ச்லேஷித்திருந்து மீளவும் ஸ்வர்க்கத்துக்குப் போம்போது,

'తస్యాహం నిగ్రహం మన్యే వాయోరివ సుదుష్కరమ్' "தஸ்யாஹம்நிக்ரஹம் மந்யே வாயோரிவஸுதுஷ்கரம்" என்று—ப்ரதிகூல வாயுவைப் பிடித்துக் கூடுகெட்டிலும் என்னெஞ்சைப்பிடிக்கப்போகாது என்றானிறே. (௧) ஒருவிஷயங்களிலே அரைக்ஷணம் கால்தாழாத நெஞ்சையுடையேனான நான், இந்நெஞ்சைப்பரிகரமாகக்கொண்டு உன்னைப்பெறுகைக் கிடான உபாயாநுஷ்டாநம் பண்ணவென்பதொன்றுண்டோ; உன்னையிழக்கைக்கு உறுப்பாமித்தனை. (என்செய்கேன்) அர்ஜுநனுக்கு பதினெட்டு (௨) ஓத்திலும் (௩) சோகத்தை உத்பாதித்தாப்போலே, கண்டதெல்லாம் இவர்க்கு பயா
௧0]வஹமா யிருக்கிறபடி.

நீரிப்படி யிருந்தீராகில் உமக்குப் பேற்றுக்கடி யெத்தாலே யென்றிருந்தீரென்ன; ப்ரளயங்கொண்ட பூமி தன்றுடைய ரக்ஷணத்தில் அஸமர்த்தமாய் அத்தைரக்ஷித்தான் யாவனொருவன், அவனாலே யென்கிறார் (நெடுவிசும்பணவும் பன்றியாயன்று பாரகங்கீண்டபாழியான் ஆழியானருளே) ப்ரளயங்கொண்டபூமிக்கு ஸ்வரக்ஷணத்தில் அந்வயமுண்டாமன்றிறே விஷயங்கொண்டநெஞ்சை யுடையேனானநான் எனக்கு ஹிதசிந்தை பண்ணுவது. ஆகாசாவகாசம் வெளியடையும்படி விம்ம வளர்ந்தவன். ரக்ஷ்யத்தின் னாவல்லாதபடி.

"நெஞ்சைப்பிடிக்கவொண்ணாது" என்றஆர்ஜுநனுடைய உட்கருத்தை யருளிச்
௨0]செய்கிறார் (ஒருவிஷயங்களிலே யித்யாதி.) ச்லோகாந்தபூர்வகம் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அர்ஜுநனுக்கித்யாதி.) கண்டதெல்லாம் - விஷயங்களெல்லாமென்றபடி.

(அடி) என்றவாக்கரம், ஏதுஎன்னும் ஸமர்ப்பிபேறுமென்னும் தாத்பர்யமுரிப்பது. இப்படி ப்ரசாத்வயம் கண்டுகொள்வது.

பூர்வார்த்தத்தை யெல்லாமுட்கொண்டு இப்பதத்துக்குட்கருத்தை யருளிச்செய்கிறார் (ப்ரளயங்கொண்டவித்யாதி.)

---

அவனோடே கூடவந்த கந்தர்வர்கள் அந்தராஜாவைப்பார்த்து "உனக்கு வேண்டினதொருவரத்தைக் கேட்டுக்கொள்" என்ன; "எனக்கு ஊர்வசிஸாலோக்யம் வேணும்" என்ன; அவர்கள் ஒருஅக்நியைக்கொடுத்து "இத்தால் யாகம்பண்ணினதே யுண்டாகில் தத்ஸாலோக்யம் பெறலாம்" என்றுசொல்லிப் போனார்கள். அந்தராஜாவும், அந்தஅக்நியைக் கொண்டு வாராநிற்க, பழைய ப்ராந்தி தலையெடுத்து ஒருஅரசின்கீழ் அந்தஅக்நியைவைத்து மறந்துபோய், தன்பட்டணத்துக்குவந்து, மீளவும்நினைத்து அரசடியிலேசெல்ல, அந்தஅக்நியானது (௪) சமீவ்ருக்ஷரூபமாய்க் கொண்டு அந்தஅரசோடேகூடியிருக்க, அதிலே யொருகொம்பை முறித்துக்கொண்டுவந்து கடைந்து அக்நியையுண்டாக்கி அந்த அக்நியாலே யாகத்தைப்பண்ணி ஊர்வசிஸாலோக்யத்தை யடைந்தானென்; அத்தைச்சொல்லுகிறது. (திருவாய்மொழி - ௬-பத்து, ௰ - திருவாய்மொழி * மாலைநண்ணி ப்ரவேசத்தின் அடையவளைந்தானரும்பதத்தில் வாக்யம்.)

(௧) "ஒருவிஷயத்திலே" என்னும்பாடம் கோசாந்தரங்களிற் கண்டுகொள்வது. (௨) ஓத்து - வேதம்; இங்கு, பகவத்கீதையின் அத்யாயத்தைச்சொல்லுகிறது. (௩) சோகம் - மனவருத்தம். (௪) சமீவ்ருக்ஷம் - வன்னிமரம்.

பார்த்து ரக்ஷகனானவன் வடிவைப் (௧) பாரித்தபடி. பூமி ப்ரளய த்திலேபுக்கு முடிந்துபோகப்புக்கவாறே, நீருக்கும் சேற்றுக்கும் (௨) இருயாத மஹாவராஹமானான். ஜலஸம்ர்த்தி காணப் பணைக்கும் வடிவைக் கொண்டான். [மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப்பன்றியாம்] "மஹிஷியுடம்பு பேறாதே பாசிதூர்த்தது" என்றவாறே, (௩) காந்தனானதானும்உடம்புபேறாதே, மாசேறின வுடம்பை யுடையனானான். [மானமிலா] ஈச்வரத்வாபிமாநம் (௪) பின்னாட்டாதபடி யிருக்கை. மாயாம்ர்கத்தைக் கண்டபோது இனத்தில் மான்கள் வந்துமோந்துபார்த்து, "விஜாதீயம்" என்று கடக்கப்போயிற்றினவிறே; அங்ஙனன்றி[௰ யே, "ஆத்மாநம் மாநுஷம்மந்யே" "ஆத்மாநம் மாநுஷம்மந்யே" என்கிறது இங்கும் அநுவர்த்தித்தபடி. (பாரகங்கிண்ட) பூமிப்பரப்படங்க அண்டபித்தியோடே புக்குச் சேர்ந்தத்தை ஒட்டுவிடுவித்து எடுத்த. (பாழியான்) மிடுக்கையுடையவன். (ஆழியான்) ரக்ஷிக்குமிடத்து ஒரு பரிகராபேக்ஷையில்லை; ஒரு பரிகரங்கொண்டு ரக்ஷிக்கப்பார்த்தானாகில் அநுக்கிடான பரிகரமுடையவன். (அருளே) அபிமாநம் பண்ணக்கடவதல்லாத விஷயங்களிலே அபிமாநம் பண்ணியும், சோகிக்கக்கடவதல்லாததுக்கு சோகித்தும், நரகாவஹமான விஷயங்களை அநுபவிக்க மநோரதித்தும், "நின்றவா நில்லா நெஞ்சினையுடையேன்" என்று இப்படி கைகழிந்தவென்னை, "இனியிவன் தானாக[௨௰ மீளமாட்டான்" என்றதுவே ஹேதுவாக எடுக்கவொருப்பட்ட ஸர்வேச்வரன் க்ர்பையாலே. அருளே என்னவுமாம், அருளாலே என்னவுமாம். (நன்றுநானுய்ய) "வென்றியே வேண்டிவீழ் பொருட்கிரங்கி வேற்கணார் கலவியே கருதி" என்று போந்தவன் சுத்தனானான் என்று தெரியாதபடி (௫) அஸ்பர்ஷ்டஸம்ஸாரகந்தனாம்படி யானேன். (நான் கண்டுகொண்டேன் நாராயணா வென்னும்நாமம்) "வென்றியே வேண்டி விழ்பொருட்கிரங்கி" என்று – அபிமாநமும்லோபமுமிறே சொல்லிற்று; இப்படிபோந்தநான், (௬) அமாநித்வாத்யாத்மகுணோபேதர் பெறும் பேற்றைப் பெற்றேன். ... ... ... ௪

---

இங்கு மநுவர்த்தித்தபடி என்றது - ஆத்மாநம் வராஹம்மந்யே என்றுஅநு[௩௰ வர்த்தித்தபடி. "பாழியான் ஆழியான்" என்ற பதத்வயத்துக்கும் க்ரமேண பாவமருளிச்செய்கிறார் (ரக்ஷிக்குமித்யாதி வாக்யத்வயத்தாலே.) அடியெது என்றப்ரச்நத்துக்குஉத்தரமானபடியை யருளிச்செய்கிறார் (அருளேயித்யாதி.) சப்தநிர்வாஹபேதமொழிய அர்த்தபேதமில்லை. மூன்றினபக்ஷத்தில், மூலத்தில் "அருளே" என்றவநந்தரம், அடியாக என்றுஅத்யாஹரித்து, அந்வயம் கண்டுகொள்வது. ... ௪

---

(௧) பாரிக்கை - பரப்புகை. (௨) இருயாத-பின்வாங்காத. (௩) காந்தன் - கணவன். (௪) பின்னாட்டுகை - பின்தொடருகை; அநுவர்த்திக்கை. (௫) அஸ்பர்ஷ்டஸம்ஸாரகந்தன்- ஸம்ஸார ஸம்பந்தம் சற்றுமில்லாதவன். (௬) அமாநித்வாத்யாத்மகுணோபேதர் - பகவத்பாகவத விஷயங்களில் பெருமையில்லாமை முதலிய ஆத்மகுணங்களை யுடையவர்கள்.

மூ.—கள்வனேனானேன்; படிறுசெய்திருப்பேன்; கண்டவாதிரிதந்தே னேலும், தெளிவியேனானேன்; செல்கதிக்கமைந்தேன்; சிக்கெனத் திருவருள்பெற்றேன்; உள்ளெலா முருகிக்குரல் தழுத்தொழிந்தேன்; உடம்பெலாம் கண்ணநீர்சோர, நள்ளிருளளவும் பகலும் நானழைப்பன் – நாராயணாவென்னும்நாமம். (௫)

ப-ரை.—அவன்கடாக்ஷம்பெறுவதற்குமுன்னே, கள்வனேன் ஆனேன் - அவனுடைமையான ஆத்மாவைக் களவுகண்டேன்; படிறு - மிக்கதீம்பை, செய்து இருப்பேன் - எப்போதும் செய்துகொண்டிருப்பேன்; கண்டஆ - கண்டவிஷ
௧0]யங்கள்தோறும், திரிதந்தேனேலும் - கால்தாழ்ந்து போந்தேனாகிலும், திரு அருள் - அவன்கடாக்ஷத்தை, சிக்கென - த்ருடமாக, பெற்றேன் - அடைந்தேன்; அத்தாலே, தெளிவியேன் ஆனேன் - "அவன்சேஷி, நாம்சேஷபூதர்" என்னும் விவேகமுடையேனானேன்; செல் - அர்ச்சிராதிமார்க்கத்தாலே செல்லக்கடவ, கதிக்கு - பரமபதத்துக்கு, அமைந்தேன் - போம்படி பூர்ணனானேன்; பின்பு, உள் எலாம் - உள்ளுண்டான எலும்பும் நரம்பும், உருகி - நீராயுருகி, குரல் - மிடறு, தழுத்தொழிந்தேன் - தழுதழுக்கும்படி ஆனேன்; அதுக்குமேலே, உடம்பு எலாம் - சரீரமெங்கும், கண்ணநீர் - ஆநந்தக்கண்ணீர், சோர - பெருகும்படி பாய, நள் - செறிந்த, இருளளவும் - ராத்ரிமுழுதும், பகலும் - பகல்முழுதும், நாராயணா என்னும்நாமம் - நாராயணாவென்கிற திருநாமத்தை, நான் - அடியேன்,
௨0]அழைப்பன் - அழைக்கப் பெற்றேனென்று களிக்கிறார். ஆத்மாவைக்களவுகாண்கையாவது - ஸ்வதந்த்ரனென்கிற நினைவு. கண்ட ஆறு என்பது-கண்டஆ எனவும், எல்லாம் என்பது - எலாம் எனவும் கிடக்கிறது.

வ்யா.— அஞ்சாம்பாட்டு.— (கள்வனேனானேன்) விப்ரருடைய கண்டவனிற்காட்டில் ரத்நாபஹாரம்பண்ணினவனுக்கு பாபம் ப்ரபலமாயிருக்கும்; ரத்நதநத்தை அபஹரித்தவனிற்காட்டில் ப்ராஹ்மண தநத்தை அபஹரித்தவனுக்கு பாபம்விஞ்சியிருக்கும்; த்ரவ்யங்களில்தலையான ஆத்மவஸ்துவையாய்த்து அபஹரித்தது. ஸர்வேச்வரனுடைமையை யாய்த்து என்னதென்றுபோந்தது.

(படிறுசெய்திருப்பேன்) மிடறு தின்றால் சொறியவொண்ணாதாப்போலே (க) பச்யதோஹாரனானேன்.
௩0]

அஞ்சாம்பாட்டு.—(கள்வனேனித்யாதி.) கீழ்ப்பாட்டிலே "வென்றிசேர் வேண்டி" இத்யாதிகளுக்கெல்லாம் மூலம் - தேஹாத்மாபிமாநமேயென்று திருவுள்ளம்பற்றி, அத்தை இப்பாட்டிலே யருளிச்செய்கிறாரென்றும், ஆழியானருளாலே தாமுஜ்ஜீவித்தப்ரகாரங்களை யருளிச்செய்கிறாரென்றும் ஸங்கதியையுட்கொண்டு, "கள்வனேனானேன்" என்று பரிதபிக்கைக்கு களவு க்ரூரதமமாக வேண்டுகையாலே, அத்தைநிரூபிக்கிறார் (விப்ரேத்யாதி.) (விஞ்சியிருக்கும்)என்றவனந்தரம், ஆகையாலே என்று சேஷம்.

படிறு – தீம்பாய், அத்தை, செய்வேனென்னாதே, "செய்திருப்பேன்" என்கையாலே - தடையறச்செய்துகொண்டிருப்பேனென்று, அதுக்கு ஸத்ருஷ்டாந்த தாத்பர்ய மருளிச்செய்கிறார் (மிடறித்யாதி.) சொறிய வொண்ணாதாப்போலே யென்றது - சொறிந்துபோக்கவொண்ணாதாப்போலே யென்கை.

(க) பச்யதோஹாரன் - பார்த்துக்கொண்டிருக்கையில் திருடுமவன்.

நான் தேஹாதமாபிமாநம் பண்ணிப்போந்ததுவே யன்றிக்கே, 'ரசவரசேஷம இவ்வாத்மவஸ்து'' என்றிருப்பாரோராஸ்திகனுண்டாகில, ''தேஹாதிரிக்தமா யிருப்பதொரு வஸ்துவாவதென் ? ஈச்வரனாவதென்?'' என்று காணக்காணப்புரிந்தேன். (கண்டவா திரிந்தேனேனும்) முன்னடி தோற்றமையாலே கைவந்தபடி பரிமாறி னேனித்தனை போநகி, சாஸ்த்ரங்கள் ''ஆராது'' என்றத்தைஅறிந்தும் மீண்டிலேன். [ந்ருபஸ்: நாபசு] அலலாதவற்றுறு பரிமாறுமத்தை ஜநபிபசாஸிலேயும் பரிமாறத் தேடும். (தெள்ளியேனானேன்) இப்படியிருாரசெய்தே, ஸாராஸாரவிவேகம்பண்ணி செய்யக்கடவது செயது அல்லாதது தவிர்ந்துபோருவாரைப் போலே,விவேகமுடையேனானேன் (செலரதிக்ரமைந்தேன்) நித்யஸம்ஸாரியானைக நுபபானவற்றை செயதுபோந்தநான், ''இனியிவன் ஸம்ஸாரத்துக்கு ஆளாகமாட்டான், பரமபதத்துக்காளாமத்தனை'' என்னும்படியானேன். செலலக்கடவ ததியுண்டு- பரமபதம், அங்குத்தைக்கு ஆளாருபாபு பூரானுனேன். ''கண்டவா திரிதந்தேன்'' என்றீர், 'தெள்ளியேனானேன்'' என்றீர், வ்யாஹதபாஷணமா யிருந்ததீ! என்ன ( சிறோனந்திருவருள் பெறறேன் ) இனி மீளாதபடி அருளைபெற்றேன். நீர் பெற்றபேறுதானென்னென்ன (உள்ளெலாமுருகி குரல் தழுத்தொழிந்தேன்) உள்ளொலும்பும் நரம்பும்அற [௨0] -ருகி, அநுநான் த்வநியில தழுதழுப்பிலே தெரியும்படியானேன். உடம்பெலாம கண்ணநீர் சோர ) ''ஷ்லாஶ்ர நேத்ராம்பு புலகீக்ருத காத்ர'' ''ஆஹ்லாதசீதநேத்ராம்பு: புளகீக்ர்த காத்ரவாந்.'' உடம்படங்க பஞ்சஸரமும் ந்ரிஸரமுமிட்டாபபோலே கண்ணநீர்வெள்ளமிட்டபடி. (நள்ளிருளளவும்பகலும் நானழைப்பன் நாராயணாவென்னும் நாமம்) விஷயாநுபவம்பண்ணிக் களித்திருக்கும் போதோடு விஷயாநுபவம்பண்ணுகைக்கு அர்த்நார்ஜநம்பண்ணும் போதோடு வாசியற எனக்கும் திருநாமம சொல்லுகையே யாத்ரையாகப் பெற்றேன். ... ... ... ... ... ... ரு

---

பச்யதோஹாரதவநதன்னைவிவரிக்கிறார் (நானித்யாதி.) ''கண்டவா'' என்ற [௩0] க்கு கேட்பார யயாவர்த்யராகையாலே, அத்தையருளிச்செய்கிறார் (முன்னடித்யாதி.) சபநார்ததம் (செல்லக்கடவவித்யாதி.) மேலுக்கவதாரிகை (கண்டவா த்யாதி.) * திருவருள்பெற்றத்தாலே நீர்பெறறதான * தெள்ளியேனாகையும் செலததிக்ரமைமகையுமாகிறபேறு எங்ஙனே ! என்னும் ப்ரச்நத்தை அநுவதிக்கிறார் ( நீரித்யாதி. ) தழுதழுப்பிலே - கத்கதஸ்வரத்திலே. அஞ்சுமுத்துத்தாவடமான்று யிருக்குமது- (பஞ்சஸரமென்றது.) விழவென்றதே, ''சோர'' என்றத்தால பலித்தஅாததயிதுவென்றுகொளவது. ''நள்ளிருளளவும்'' என்றதுக்கு, ''நள்'' என்று-சப்தவிசேஷமாய்,அதுஎழுந்த மத்யராத்ரத்திலுமென்றுசப்தார்த்தமாய்,காரத்தை இப்படி அநுசிசெய்தவர்க்குஉட்கருத்தருளிச்செய்கிறார்(விஷயேத்யாதி.)

௩.—எம்பிரா னெந்தை யென்னுடைச்சுற்ற மெனக்கர செ ன்னு டைவாணாள்§, அம்பினா லரக்கர் வெருக்கொள நெருக்கி யவருயிர் செகுத்த வெம்மண்ணல், வம்புலாஞ்சோலை மாமதிள் தஞ்சைமா மணிக்கோயிலே வணங்கி, நம்பிகாள் ! உய்ய நான் கண்டுகொண் டேன் நாராயணாவென்னும்நாமம். (௩)

ப-ரை.—நம்பிகாள்!- பகவத்குணாநுபவத்தாலே பூர்ணராயிருப்பவர்களே!, எம்பிரான் - எனக்குஉபகாரகனாய், எந்தை - எனக்குத்தமப்பனாய், என்னுடைச் சுற்றம் - எனக்கு எல்லாவுறவுமுறையுமாய்,எனக்கு அரசு - என்னை ஆண்டவனாய், ௧0 என்னுடைவாணாள் - எனக்கு ப்ராணபூதனாய், அரக்கர் - ராக்ஷஸர்கள், வெரு க்கொள- அஞ்சும்படியாக, அம்பினால் - பாணங்களினாலே, நெருக்கி - நெருக்கப் பண்ணி, அவர்உயிர் - அவர்கள்ப்ராணனை, செகுத்த - முடித்த, எம்அண்ணல் - என் ஸ்வாமியான ஸர்வேச்வரன் நித்யவாஸம்பண்ணுமதாய், வம்பு - பரிமளம், உலாம்-வீசாநின்றுள்ள, சோலை - பொழிலையும், மா - நீண்ட, மதிள் - மதிளை யுமுடைய, தஞ்சைமாமணிக்கோயிலே - தஞ்சைமாமணிக்கோயிலையே, வணங்கி - ஸேவித்து, நான்உய்ய - உங்களைப்போலே நானும்உஜ்ஜீவிக்கும்படி, நாராயணா என்னும் நாமம் கண்டுகொண்டேன்—.

அ.—ஆறும்பாட்டு.—இத்தை நீர் போர ஆதரியாநின்றீர், இது தனக்கு அர்த்தமென்னென்ன; சொல்லுகிறார். இதினுடைய பாட ௨0 த்தை ஜபித்து அத்தாலே பலம் பெறவிருத்தல், இத்தாலே பாப த்தைப்போக்கி கர்மயோகத்துக்குடலாக்குதல் செய்கையன்றிக்கே, அர்த்தாநுஸந்தானத்தாலேபேறு என்று தமக்கு பக்ஷமாகையாலே அர்த்தத்தைச்சொல்லுகிறார். நம்மாழ்வாரும், திருமந்த்ரம் ஓரிடத் திலே ப்ரஸ்துதமானால், முன்னேயாதல் பின்னேயாதல் அர்த்தத் தைச்சொல்லிப்போருவர் அர்த்தப்ராதாந்யம் தோற்ற; ஜ்ஞாநாத் மோக்ஷமாகவேண்டுகையாலே.

வ்யா.—(எம்பிரான்) எனக்குஉபகாரகன். (எந்தை) எனக்கு ஜநகன். (என்னுடைச்சுற்றம்) என் (௧) குடற்றுடக்கான எல்லாவுற வுமுறையுமானவன். (எனக்கரசு) என்னை வன்னியமறுத்து ஆண்ட ௩0 வன். (என்னுடைவாணாள்§) என்றுடைய ஆயுஸ்ஸு.

ஆறும்பாட்டு.—(எம்பிரானித்யாதி.)"நம்பிகாள்" என்றபதம் விஷயாந்தர பரனாச்சொல்லுமளவில், இதுக்கு - அர்த்தஜிஜ்ஞாஸையாலே கேட்டார்களென் றும், பகவத்பரரானபோது, இவருடைய அதிகார சோதநார்த்தம் ப்ரச்நம் பண்ணினார்களென்றும் கண்டுகொள்வது; இவ்வர்த்தத்தை யருளிச்செய்கைக் குத்தா னுட்கருத்தை யருளிச்செய்கிறார் (இதினுடையவித்யாதி.)
வன்னியம் - குறும்பு.

(௧) குடல்துடக்கு - சரீரசரீரிபாவஸம்பந்தம். § வீரசோழியம் - சந்திப்பட லம் - உக - சூத்திரம்.—"ஐம்மூன்றதாமுடல்வன்மைபின்வர்திடிலாறுடைந்தா, மெய்ம்மாண்பதா நவ்வரின்முன்பழிந்துபின்மிக்கணவ்வா - மம்மேல்வரினிருமூன் றுமுடன்மற்றியல்புசந்தி,தம்மாசகலங்கிடப்பின்களாமென்பதாழ்குழலே." (உம்.) பாழ்கும்பி - பாண்கும்பி. வாழ்நாள் - வாணாள்.

(அம்பினாலரக்கர் வெருக்கொளநெருக்கி அவருயிர் செகுத்த வெம்மண்ணல்) ஸங்கல்பத்தாலன்றிக்கே அம்பாலே ராக்ஷஸரைக் கும் படி நெருக்கி அவர்களுயிரை முடித்த என் ஸ்வாமி. ஸ்வாமித்வத்தோ டே தலைகட்டிற்றாய்நின்றது. இத்தால்சொல்லிற்றாய்த்து - "ஸுஹ்ருத் ... ... ... நாராயண:" "மாதா பிதா ப்ராதா நிவாஸச்சரணம்ஸுஹ்ருத்கதிர்நாராயண:" என்கிற படியே. இதுதான் டமக்குவந்தபடியென்னென்ன (வம்புலாம்சோலை மாமதிள் தஞ்சை மாமணிக்கோயிலே வணங்கி) நித்யவஸந்தமான சோலையையும் மாமதிளையுமுடைத்தான தஞ்சைமாமணிக்கோயிலே வணங்கி வந் [௧0] து; "எல்லாவுறவுமுறையுந்தானே" என்று தோற்றும்படி அவன் நின்றுநிற்கிற ஸௌலப்யத்தை அநுஸந்திக்கையாலே வந்தது. (நம்பி காள்!) பகவத்வ்யதிரிக்த விஷயங்களைப் பற்றி தேஹபோஷண பர ராயிருக்கிற வவர்களை சொல்லிற்றுதல், பகவத்குணாநுபவம்பண் ணி அத்தாலே பூர்ணராயிருக்கிற வவர்களைச் சொல்லிற்றுதல். (உய்ய நான் கண்டுகொண்டேன்) நீங்களெல்லாம் புறம்பேபோய் க்லேசப்படாநிற்க நானுஜ்ஜீவிக்கும்படி காணப்பெற்றேனென்னு தல்; நீங்களுஜ்ஜீவிக்கும் விரகறிந்து கரையேறினாப்போலே நானும் கரையேறப் பெற்றேனென்றுதல. (நாராயணா வென்னும்நாமம்) ஸர்வவிதபந்துவுமவனே என்கிற அர்த்தத்துக்கு வாசகமான திரு [௨0] நாமத்தைக் காணப்பெற்றேன். ... ... ... ... ௬

அ.—ஏழாம்பாட்டு.—அல்லாதார்நானிழக்கிறார் (௧) அவிசே ஷஜ்ஞராகையாலே, விசேஷஜ்ஞராய் என்னோடுஸஜாதியராய்க் கூப்பாடித்திரிகிற நீங்களிழக்கிறதென்னென்கிறார்.

(இத்தால - நாராயண: என்கிறபடியே - சொல்லிற்றாய்த்து) என்று ...க்யர்த்தை ஆக்ஷேபித்துச்சொல்லுகிறது. சதிபமானகோயிலேயே வணங்கி யென்றும் கோயிலிலேயிருக்கிறவனையென்று லக்ஷணையாகவும் இரண்டர்த்தமருளிச்செய் கிறார் (நித்யேத்யாதிவாக்யத்வயத்தாலே.) ... ... ... ... (௬)

ஏழாம்பாட்டு.—(இற்பிறப்பித்யாதி.) கீழ்ப்பாட்டிலே "நம்பிகாள்!" என்று ...ஷபூர்ணரைச்சொன்னபக்ஷத்துக்கு அநுகுணமாக, இப்பாட்டிலே விசேஷஜ் [௩0] ஞராகவிட்டு, "சொற்பொருளாளீர்!" என்று விசேஷிக்கையாலே பலித்தஸங்கதியை நளிசெய்கிறார் (அல்லாதாரித்யாதி.) ஸஜாதியராயென்றது - ஸதீர்சராயென்ற . கீழே "நம்பிகாள்" என்று - பகவத்ப்ரவணரானபோது அவர்களைப்பார்த் வார்த்தைசொன்னவர்; க்ருபையாலே லோகத்திலே கண்வைத்து உபதேசிக்கப் ர்த்தாராய், அதிலே "சொற்பொருளாளீர்" என்றுவிசேஷித்ததுக்குத் தாத்பர்ய ருளிச்செய்கிறார் (அல்லாதாரித்யாதி) என்று கண்டுகொள்வது.

(௧) அவிசேஷஜ்ஞா - அறிவிலிகள்.

மூ.—இற்பிறப்பறியீரிவரவரென்னீரின்னதோர்தன்மையென்றுணரீர்;
கற்பகம்புலவர்களைகணென்றுலகில் கண்டவாதொண்டரைப்பாடும் —
சொற்பொருளாளீர்! சொல்லுகேன்வம்மின்; சூழ்புனற்குடந்தையே
தொழுமின் ; நற்பொருள்காண்மின் ; பாடிநீருய்மின் — நாராயணா
வென்னும் நாமம். (எ)

---

ப-ரை.—உலகில் - இப்பூமியிலுள்ளார்க்கு, தொண்டரை - இழிதொழில்செய்துதிரியுமவர்களை, இல் - (அவர்களுடைய) க்ருஹவைலக்ஷண்யத்தையும், பிறப்பு - ஜந்மவைலக்ஷண்யத்தையும், அறியீர் - அறியாதவராய், இவர் - இவரிப்போது
௧0]ஸம்பந்நரானவர்கள், அவர் - அவர்முன்புதரித்ரராயிருந்தார், என்னீர் - என்று சொல்லமாட்டாதவராய், தன்மை - இவர்கள் ஸ்வபாவம், இன்னதொன்று - இப்படிப்பட்டதொன்று,என்று—, உணரீர் - அறியமாட்டாதவராய்க்கொண்டு, கற்பகம்!- வேண்டிற்றெல்லாம் தரும் கல்பகவ்ருக்ஷம்போலே உதாரரானவர்களே!, புலவர் - கற்றோர்க்கு, களைகண் !- ரக்ஷகரே!, என்று- என்றுசொல்லி, கண்டவா- நெஞ்சில்தோற்றினபடியே, பாடும் - * கவிபோற்றி செய்யுமவராய், சொல் - சப்தத்துக்கும், பொருள் - அர்த்தத்துக்கும், ஆளீர் - நிர்வாஹகரானவர்களே, வம்மின்- வாருங்கள், சொல்லுகேன் - ப்ராப்யவிஷயத்தை நிர்ணயித்து [illegible]படி சொல்லுகிறேன் என்ன; ஆகில் சொல்லலாகாதோ என்ன; நீர் - என்றென்றும் நீங்கள், புனல் - ஜலத்தாலே, சூழ் - சூழப்பட்ட, குடந்தை - திருக்குடந்தை
௨0]யிலெழுந்தருளியிருக்கும் ஆராவமுதனை, தொழுமின் - சேவியுங்கள்; நாராயணனென்னும் - "எல்லாவுறவுமுடையவனே" என்கிறஅர்த்தத்துக்கு வாசகமான, நாமம் - திருநாமத்தை, பாடி - வாயாரச்சொல்லி; உய்மின் - உஜ்ஜீவியுங்கள்; நல்பொருள்காண்மின் - இது பரமார்த்தங்கிடீர் என்கிறார். • எ

---

வ்யா.—(இற்பிறப்பறியீர்) அவர்கள் [illegible] நிலை அறியீகோள், அவர்கள்ஜந்மமறியீகோள். (இவரவரென்னீர்) பண்டு தரித்ரனாய் க்லேசப்பட்டுப் போந்தானொருத்தன் இப்போது ஜீவிக்கப்புக்கால்,"இதுஇவனளவன்றிக்கேயிருந்தது, இது வேறேயொருவனடியாகவேணும்" என்று அறியமாட்டாதே, ஸ்ரீயஃபதியைப்போலே பிறப்பேபிடித்து ஸ்ரீமானாய்ப் போந்தானாக நினைத்
௩0]திருப்புதிகோள். அன்றிக்கே, (இவரவரென்னீர்)என்று-ஒருசொல்லாய், ஒருவர்வாசியுமறியீரென்னவுமாம். (இன்னதோர்தன்மையென்றுணரீர்) இவனுக்குள்ளவளவுஇது என்றறியமாட்டீர்.

---

* "இல் - அறியீர், பிறப்புஅறியீர்" என்று சப்தார்த்தமாய், அத்தையருளிச்செய்கிறார் (அவர்களித்யாதி வாக்யத்வயத்தாலே.) இவர் இப்போது ஸம்பந்நரானவர்கள், அவர் முன்பு தரித்ரராயிருந்தார் என்னீரென்று சப்தார்த்தமாய், பலிதார்த்த மருளிச்செய்கிறார் (பண்டித்யாதி வாக்யத்வயத்தாலே.)

(கற்பகம்) "நினையாதே கொடுக்கும்" என்புதிகோள். (புலவர்களாக ணென்று) விசேஷஜ்ஞராயிருப்பார் சிலர் அர்த்தித்துவந்தால் ஜீவி த்துப்போமவனை, "எங்களுக்குநிர்வாஹகன்" என்பர்கள். (உலகிற் கண்டவாதொண்டரைப்பாடும்) லோகத்தில் நீசவர்த்திகளாய்த்திரி வாரை, கண்டவாபாடும்-ப்ரதிபந்நங்களைச்சொல்லித்திரிகிற. (சொற் பொருளாளீர்) சப்தத்துக்கும் அர்த்தத்துக்கும் (க) நிலவரான நீங்கள். சொல்லுடைமைக்கு உங்களிற்காட்டிலில்லை; ப்ரமேய ஜ்ஞாநமுடையார் உங்களத்தனையில்லை.

(சொல்லுகேன் வம்மின்) உங்கள் ப்ரமேய ஜ்ஞாநத்துக்கும் [௧0] சொல்லுடைமைக்கும் (உ) பாத்தம் போரும்படியான விஷயத் தை நான் காட்டித் தர வாருங்கோள். (சூழ்புனல்குடந்தையே தொ ழுமின்) ஓராறும்படைவீடும் வேணுமே! உங்களுக்குக் கவிபாடும் போது. ஆறும் மலையும் படைவீடும் உள்ளிட்ட பரிகரங்களும் வே ணுமே!. (நற்பொருள்காண்மின்) நன்றான அர்த்தத்தைக்கண்டுகொ ள்ளுங்கோள். பேறும்தானேயாய் தன்னைத்தருவதும் தானேயாயிரு க்கை. (பாடிநீருய்மின் நாராயணனென்னும்நாமம்) வாச்யங்களில் தலையானதைக்காட்டித்தந்தேன்; அதுக்கு வாசகமான திருநாமத் தைப்பாடி உஜ்ஜீவியுங்கோளென்கிறார். "யஃபரஸ்ஸமஹேஶ்வரஃ" "யஃ பரஸ்ஸமஹேச்வரஃ" என்றதிறே யிதினுடைய ஸங்க்ரஹத்தை. வாச [௨0] கங்களில்தலை-அகாரம், வாச்யங்களில் தலை-கீழ்நான்சொன்னது.(எ)

அ.—எட்டாம்பாட்டு.—எங்கள் பூர்வவர்த்தத்தைப்பார்த்தால் நீர்சொல்லுகிற அர்த்தத்துக்கு நாங்கள் தேசிகராக வல்லோமோ வென்ன; கெடுவிகாள்! நானன்றோ இவ்விஷயத்துக்கு யோக்ய னாய் உங்களுக்கு உபதேசிக்கும்படியானேன், ஆனபின்பு இவ்விஷய த்துக்கு ஆளாகாதாருண்டோ என்கிறார்.

---

நினையாதேயென்றது - ‡ தேயவஸ்துவின் உத்கர்ஷத்தைநினையாதேயென்றபடி; வப்ரயோஜநத்தை நினையாதேயென்றுமாம்; யாசகனுடைய குறைகள் நினையா தயென்றுமாம். உலகில் தொண்டரை - ப்ர்த்யக்ர்த்யம்பண்ணுமவரை, கண்டவா டுமெவரென்றர்த்தமாயருளிச்செய்கிறார் (லோகத்திலித்யாதி.) தாத்பர்யார்த்தம் [௩0] சொல்லுடைமைக்கித்யாதி.)

நன்மையை விவரிக்கிறார் (பேறுமித்யாதி.) * நாராயணபதம் * நற்பொரு க்கு வாசகமென்னுமதுக்கு ப்ரமாணத்தை யருளிச்செய்கிறார் (யஇத்யாதி.) தினுடையவென்றது - நாராயணபதத்தினுடையவென்றபடி. ஸங்க்ரஹத்தை - ாரத்தை. கீழ்நான்சொன்னதென்றது - "நற்பொருள்" என்றதென்றபடி. (எ)

எட்டாம்பாட்டு.— (கற்றிலேனித்யாதி.) "வாடினேன்" என்று தொடங்கி வர்த்தத்தை அநுஸந்தித்துச்சென்று, கீழிரண்டுபாட்டிலே அத்தைவிட்டவர், வும் பூர்வவர்த்தத்தை யருளிச்செய்கைக்கு ஸங்கதி யருளிச்செய்கிறார் களித்யாதி;) "பாழியானாழியானருளே" என்று ஆழ்வார் * மயர்வறமதிநல ளப்பெற்றவராகையாலே அவருடைய பூர்வவர்த்தமெல்லாம் அகிஞ்சித்கர [௪0] த்தென்றுகருதி, ப்ரச்நம்பண்ணினார்களென்று கருத்து. அநாதபசுரீயனு ந்தளன்னிடத்திலே யருளினவன்; "நாங்கள் தேசிகராகவல்லோமோ" என்னும் களிடத்தில்அருளக்குறையில்லையென்று உத்தரத்துக்குக்கருத்து.

---

(க)நிலவர்-ஜ்ஞாதாக்கள். (உ)பாத்தம்-தாரம். கலவாசி. ‡ தேயம்-கொடுக்கத்தக்கது.

**மூ.—கற்றிலேன்கலைகள்; ஐம்புலன்கருதுங்கருத்துளே திருத்தினேன் மனத்தை; பெற்றிலேனதனால் பேதையேன்நன்மை; பெருநிலத்தா ருயிர்க்கெல்லாம்- செற்றமேவேண்டித்திரிதருவேன்; தவிர்ந்தேன்; செல்கதிக்குய்யுமாறெண்ணி, நற்றுணையாகப் பற்றினே னடியேன் நாராயணாவென்னும் நாமம். ... ... ... ... (அ)**

ப-ரை.—கலைகள் - சாஸ்த்ரங்களை, கற்றிலேன் - ஓராசார்யனிடத்தில் அப்யஸித்தேனல்லேன்; ஐம்புலன் - ஐந்துஇந்த்ரியங்கள், கருதும் - நினைக்கிற, கருத்துள் - விஷயங்களிலே, மநத்தை - மநஸ்ஸை, திருத்தினேன் - வலியமூட்டி
௧0]ப்போந்தேன்; அதனால் - இப்படிபோருகையாலே, பேதையேன் - அறிவில்லாதநான், நன்மை - நல்லநினைவை, பெற்றிலேன் - பெருதவனானேன்; பெரு- பெரிய, நிலத்து - பூமியில், ஆர் - நிரம்பியிருக்கிற, உயிர்க்குஎல்லாம் - எல்லா ப்ராணிகளுக்கும், செற்றமே-ஹிம்ஸைபண்ணும் உபாயத்தையே, வேண்டி-நினைத்து, திரிதருவேன் - திரிந்துகொடுபோந்தேன்; இப்படிநெடுங்காலம் திரிந்தேனாகிலும் அவன்கடாக்ஷத்தாலே, தவிர்ந்தேன் - இவையெல்லாம் போகப்பெற்றேன்: செல்கதிக்கு-அர்ச்சிராதிமார்க்கத்தாலே செல்லக்கடவ பரமபதத்துக்குப்போய், உய்யும் ஆறு-உஜ்ஜீவிக்கும்வகையை, எண்ணி-நினைத்து, அடியேன் - சேஷபூதனான நான், நாராயணாஎன்னும்நாமம் - நாராயணா என்கிற திருநாமத்தை, நல்துணையாக-நல்ல ஸஹாயமாக, பற்றினேன் - கைக்கொண்டேன்; ஆனபின்பு, பகவத்விஷயத்துக்கு
௨0]ஆளாகாதாரில்லை என்கிறார். ... ... ... ... ... ... அ

வ்யா.—(கற்றிலேன்கலைகள்) ஓராசார்யனைப் பின்சென்று அவனுச்சரிக்க அநூச்சாரணம் பண்ணிப்போராமையாலே, சாஸ்த்ரீய ஜ்ஞாநமுண்டாய்த்ததில்லை. (ஐம்புலன்கருதும் கருத்துளே திருத்தினேன் மனத்தை) மநஸ்ஸை பரவிஷயமாக்கி, விஷயங்களிலே ப்ரவணமாகிற பாஹ்யேந்த்ரியங்களை காதாசித்கமாகிலும் விஷயங்களில் நின்றும் மாற்றி ப்ரத்யக்விஷயமாக்கினால் நல்வழி போகைக் குறுப்பாமிறே; ச்ரோத்ராதீந்த்ரியங்கள் விஷயங்களிலே யிழிந்து தான் நினைத்தவழியே கொடுபோக, மநஸ்ஸையும் அதுக்கு உறுப்பாக்கிப்போந்தேன். (திருத்தினேன் மனத்தை) விஷயப்ரவணரானவர்கள், "விஷயப்ராவண்யம்போராது" என்றுஔஷதஸேவை
௩0]பண்ணி யிருப்பார்களிறே; அப்படியே, விஷயங்களிலே மநஸ்ஸை வலியமூட்டிப்போந்தேன் (பெற்றிலேனதனால்பேதையேன்நன்மை) சாஸ்த்ரீயஜ்ஞாநமு மின்றிக்கே விஷயப்ரவணனாய்ப் போருகையாலே அறிவுகேடனாய் ஹிதசிந்தைபண்ணப் பெற்றிலேன். (பெருநிலத்தாருயிர்க்கெல்லாம் செற்றமேவேண்டித்திரிதருவேன்) எனக்கொரு நன்மை ஸம்பாதியாமையேயன்றிக்கே, பரஹிம்ஸை பண்ணும் விரகே சிந்தித்துப்போந்தேன். எல்லாரையும் ஹிம்ஸித்து நான் ஜீவிக்கும் விரகே பார்த்துப் போந்தேன். "ஒருவனுக்கு பகவத்ஸம்பந்தமுண்டு இல்லை என்று தனக்கே அறியலாம்" என்று
௪0]பலகாலு மருளிச்செய்வர் ஜீயர். ஒருவன்நோவுபடக்கண்டால்,

"அதனால் - பேதையேன் நன்மை - பெற்றிலேன்" என்று அந்வயித்தருளிச்செய்கிறார் (சாஸ்த்ரீயேத்யாதி.)

"செற்றமே" என்றஏவகாரத்தாலே ஸ்வஜீவநம் வ்யாவர்த்திக்கிறதென்றருளிச் செய்கிறார் (எனக்கித்யாதி.) பரஜீவநம் வ்யாவர்த்யமென்று தாத்பர்யாந்தரம் (எல்லாரையுமித்யாதி.) பரஹிம்ஸை அனர்த்தகரமென்னுமத்தை ஐதிஹ்யமுகே உபபாதிக்கிறார் (ஒருவனுக்கித்யாதி.)

'ஐயோ!'' என்று இரக்கம்பிறந்திருக்கில், "நமக்கு பகவத்ஸம்பந்தமுண்டு" என்றறியலாம்; "அத்தனையும்வேணும்" என்றிருந்தானாகில், 'நமக்குபகவத்ஸம்பந்தமில்லை'' என்றிருக்கலாம். பெருநிலத்து ஆருயிக் கெல்லாமென்னுதல்; பெருநிலத்தாருயிர்க்கெல்லா மென்னுதல்.

(தவிர்ந்தேன்) ஹேதுவறிந்திலேன், தவிர்ந்துகொடு நிற்கக் கண்டேன். " உய்வதோர் பொருள் '' என்றும் "ஆழியானருள்" என்றும், "சிகெனத் திருவருள பெற்றேன்" என்றும் கீழ்ச் சொன்னாரிறே.

(செல்கதிக்குய்யுமாறெண்ணி) செல்லக்கடவ கதியுண்டு-பரமபதம், அங்கேபுகக்கு உஜ்ஜீவிக்கும்படியை மநோரதித்து. (நற்றுணையாகப்பற்றினே னடியேன்) அம்பியைக்கட்டிக்கொண்டு ஆற்றிலிழிவாரைப்போலேயன்றிக்கே, "పాథేయం పుణ్డరీకాక్ష నామసంకీర్తనామృతమ్" "பாதேயம்புண்டரீகாக்ஷநாமஸங்கீர்த்தநாம்ர்தம்" என்னுமத்தைப் பற்றினேன். அக்கரைப்படுத்திவிடுமத்தைப் பற்றினேன். (நாராயணாவென்னும்நாமம்) அக்கரைப்படுத்தும் வஸ்துவுக்கு வாசகமான திருநாமம்; 'నయామి పరమాం గతిమ్" "நயாமிபரமாம்கதிம்" என்னக்கடவதிறே. (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. அநாதிகாலம் விஷயப்ரவணனாய் பகவத்விஷயத்தில விமுகனாய்ப்போந்த நான், விஷயங்கள்தான் ஸாவதியாய் மீண்டவளவிலே, ஸர்வேச்வரன் தன்க்ருபையாலே கைக்கொண்டானென்கிறஅர்த்தத்தை "உய்வதோர்பொருளால்" என்கிறத்தாலே சொன்னார்-முதற்பாட்டில; காலமடங்க வ்யர்த்தமே புறம்பே போக்கினேன் என்றார — இரண்டாம்பாட்டில் ; ரக்ஷையேவேண்டிப்புதுக்குவிருத்தமான துஷ்காமங்களைப்பண்ணி விஷயப்ரவணனாய் காலத்தையடங்க நிஷ்ப்ரயோஜநமாகப் போக்கினநான், போக்யனுமாய் ப்ராபகனுமான ஸர்வேசவரனையும அவனுக்கு வாசகமான திருநாமத்தையும் காணப்பெற்றே னென்றார் — மூன்றாம்பாட்டில்;

· பெருநிலத்து - மஹாப்ருதிவியில், ஆர் - நிரம்பியிருக்கிற வென்றும், பெருநிலத்தாரானவுயிர்க்கெல்லாமென்றும் சப்தநிர்வாஹம் காட்டுகிறார்(பெருநித்யாதிவாக்யத்வயத்தாலே.)

ஹேதுவறிந்திலேனென்றது - என்னிடத்திலொருஹேதுவறிந்திலேனென்றபடி.

"செல்கதிக்கு" என்றவநந்தரம், போய்என்று சேஷபூரணம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (செல்லவித்யாதி.) ... ... ... அ.

ஒன்பதாம்பாட்டு.—(குலந்தருமித்யாதி.) நிகமம் அணித்தானவாறே இத்திருமொழியில் பாட்டுத்தோறும்சொன்ன ப்ரமேயங்களை புத்திஸௌகர்யார்த்தம் அநுவதியாநின்றுகொண்டு ஸங்கதி யருளிச்செய்கிறார் (அநாதீத்யாதி.) ஸாவதியென்றது - அல்பமாயென்றபடி ; இது "விஷயங்கள்தன்னில் அரைக்ஷணம் செல்தாழப்பண்ணவல்லதொரு விஷயந்தானில்லையிறே" என்றருளிச்செய்தத்தைப்பற்ற. மீண்டவளவிலே யென்றது - ஒருவிஷயத்தில் நின்றும் மீண்டு விஷயாந்தரத்தில் போகாதே ஓடியிளைத்தவளவிலே யெனகை. (முதற்பாட்டில்) என்றநந்தரம், அருளப்பெற்றவராகையாலே என்று கூட்டுவது. இரண்டாம்பாட்டில் காலம் வ்யர்த்தமேபோக்கினத்தை யெல்லாம், மூன்றாம்பாட்டில் அநுவதித்துக்கொண்டு, தாம்பெற்றபேற்றை அருளிச்செய்தாரென்கிறார் (ரக்ஷையேயித்யாதி.)

மூ.—குலந்தரும்;செல்வந்தந்திடும்;அடியார்படுதுயராயினவெல்லாம்-நிலந்தரம்செய்யும்;நீள்விசும்பருளும்;அருளொடுபெருநிலமளிக்கும்;வலந்தரும் †; மற்றுந்தந்திடும்; பெற்றதாயினுமாயினசெய்யும்; நலந்தருஞ்சொல்லை நான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னுநாமம்.

ப-ரை.— நாராயணா என்னும் நாமம் - நாராயணா என்கிற திருநாமமானது, தன்னை அநுஸந்தித்தவர்களுக்கு, குலம் - உயர்குலத்தையும் அதுக்கீடான வர்த்தத்தையும், தரும் - கொடுக்கும்; செல்வம் - பகவத்பாகவதவிஷயங்களில்உபயோகிக்கத்தக்க ஐச்வர்யத்தை, தந்திடும் - தரும்; அடியார்-சேஷபூதரானவர்கள், பட
க0]அநுபவித்தேகழிக்கவேண்டிய, துயராயின எலலாம்-துக்கம் என்று பேர் பெற்றவை யெல்லாவற்றையும், நிலந்தரம் செய்யும் - தரைமட்டமாக்கிவிடும்; நீள்விசும்பு- பரமபதத்தை, அருளும் - கொடுக்கும்; அருளொடு - ஜ்ஞாநபக்திகளையும், அதுக்குமேலே, பெருநிலம் - கைங்கர்யமாகிற பெரியஸ்தாநத்தையும், அளிக்கும்-தரும்; வலம் - தன்னை அநுபவிக்கைக்கீடான சக்தியையும், தரும்-கொடுக்கும்; மற்றும் - இவனறியாத எல்லா ஹிதங்களையும், தந்திடும் - செய்துகொடுக்கும்; பெற்ற தாயினும் - சரீரத்தை உண்டாக்கின தாயானைக்காட்டிலும், ஆயின - ஹிதமாயுள்ள ஸ்வரூபஜ்ஞாந விகாஸத்தை; செய்யும் - பிறப்பிக்கும்; நலந்தரும் - கைங்கர்யஸ்ரீயைத் தருவதான, சொல்லை-திருநாமத்தை, நான் - இப்படியிருப்பதொன்றுண்டு என்றறியாதநான், கண்டுகொண்டேன - காணப்பெற்றேனென்று,
உ0]திருநாம பலத்தைச் சொல்லுகிறார். ... ... ... ... ... கூ

துர்மாநியாய் சோகிக்கக்கடவதல்லாத விஷயங்களுக்கு சோகித்து விஷயப்ரவணனாய் அநாத்மகுணங்களால் குறைவற்றநான், அமாநித்வாத்யாத்மகுணோபேதர்பெறுமபேற்றைப்பெறநேனென்றார்-நாலாம்பாட்டில்; ஆத்மாபஹாரத்தைப்பண்ணி பரயதோஹாராய் மா வேச்வரனொருவனுளன் என்றிருப்பாருண்டாகில் ¶ உத்யாபாஸங்களாலே யில்லைசெய்துபோந்தநான், ஆத்மஸமர்ப்பணம்பண்ணி எம்று மிதுவே யாத்ரையாய்ப்போருவார் பெறும் பேற்றைப் பெற்றேனென்றார் - அஞ்சாம்பாட்டில்; "இதுக்காதநமென்? இதுவந்தபடியென்?" என்ன, ஆர்த்தத்தையும்சொல்லி, ஸம்ஸாரிகளெல்லாமிங்
ங0]ஙனே க்லேசப்படாநிற்க நானிப்பேற்றைப்பெற்றேனெனறார்-ஆறும்பாட்டில்; அல்லாதார் நிறக்கிறார்கள் (அவிசேஷஜ்ஞராகையாலே)‡, என்னோடுஸஜாதீயராய் விசேஷஜ்ஞராய்க் கவிபாடித்திரிகிற நீங்கள் இழவாதேகொள்ளுங்கோளென்றார்-ஏழாம்பாட்டில்; "நீர் சொல்லுகிற அர்த்தத்துக்கு நாங்கள் தேசிகராக வல்லோமோ" என்ன, கெடுவிகாள்! நானன்றோ இவ்விஷயத்துக்கு நிலவனாய் உங்களுக்கும் கூட உபதேசிக்கிறேன், ஆனபின்பு பகவத்விஷயத்துக் காளாகாதாரில்லை என்றார் - எட்டாம்பாட்டில்; "நீர் திருநாமத்தைப் போர ஆதரியாநின்றீர், இதென்னபலத்தைத் தரவற்று" என்ன, திருநாம பலத்தைச் சொல்லுகிறார் — இப்பாட்டில்.

ச0]( நானிப்பேற்றை ) என்றவநந்தரம, தஞ்சைமாமணிக்கோயிலே வணங்கி என்று கூட்டுவது.

† "வரந்தரும"என்றுபாடாந்தரம். ¶ " யுக்த்யாபாஸங்களாலே" என்றும் பாடம். ‡ குண்டலிதக்ரந்தம் சிலஸ்ரீகோசங்களிலில்லை.

வ்யா.—(குலந்தரும்) ஜந்மவ்ருத்தங்களால் குறையநின்றவொருத்தனுக்கு பகவத்ஸம்பந்தமுண்டானால், இவற்றாலுயர்ந்தானொருத்தன், இவையிரண்டிலுமிவனுக்குத்தாழ்வுண்டாகவும் தானுயர்ந்தானாகவும் நினைத்திருக்கவுங்கூடக் கூசவேண்டும்படியாய்த்து பகவத்ப்ரபாவமிருப்பது. ஆகிலும், பெண்கொடுத்தல் கொள்ளுதல்செய்கிறானில்லை; அதுக்கடி-ஜாதிநிபந்தநமாகை. சலாகை, குணநிபந்தநம்; "ஶ்லாக்யஸ்ஸகுணீநஸ்ய ஸ்ஸுகுலீநः" "ஸச்லாக்யஸ் ஸகுணீநய்ஸ் ஸகுலீநः" என்னக்கடவதிறே. ¶ கண்டதெல்லாம் தர்மஸந்தேஹம் பண்ணக்கடவ தர்மபுத்ரன், பகவத்ப்ரத்யாஸத்தியாலும் அசரீரிவாக்யத்தாலும் விதுரரை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்காரம்பண்ணினனிறே; ரிஷிகள், தர்மவ்யாதன் மாம்ஸவிக்ரயம்பண்ணிக் கையொழியுந்தனையும்பார்த்துநின்று தர்மஸங்கடங்கள் கேட்டுப்போனாகளிறே; இங்ஙனன்றாகில், (க) பஞ்சம வேதமான மஹாபாரதத்திலே யெழுதக்கூடாதிறே. கைசிகத்தையிலே வந்தவாறே, விலக்ஷணனாயிருப்பானொரு ப்ராஹ்மணன் ஆசார வைகல்யத்துக்கு பகவத்ஜ்ஞானமுடையானொரு பாடுவானாலே பரிஹாரமா யிருந்ததிறே. ஸ்ரீவிபீஷணாழ்வான், ராவணனைப்பார்த்து "பெருமாளை சரணம்புகு" என்றுசொல்ல; "த்வாம்து திக்குலபாம்ஸநம்" "த்வாம் து திக்குலபாம்ஸநம்" என்று-நீ யிக்குடிக்கு உடலல்ல என்றானிறே. ராவணனுக்கு வார்த்தை [௨0 சொல்லுகிற விடத்தில, "நிசாசர" "நிசாசர" என்று அவனை ராக்ஷஸனாகவும், தான் அல்லனாகவும்சொன்னான்.

---

குலத்தையும அதுக்கீடான வ்ருத்தத்தையும தருமென்று சப்தார்த்தம் விவக்ஷித்து ஹேதுவருளிச்செய்கிறார் (ஜந்மவ்ருத்தேத்யாதி. நினைத்திருக்கவுங்கூடவென்றது-தாழ்ந்தசொல்லவும் தாழ்வுக்கு ஸூசகமான செயலும் செய்யக்கூடாதென்றபடி.

இப்படி உத்க்ருஷ்டனானால் கொடுத்துக் கொள்ளவேண்டாவோவென்ன வருளிச்செய்கிறார் (ஆகிலுமித்யாதி.) ஜாதிநிபந்தநமென்றது - ப்ராஹ்மணஜாதியிலே பிறந்தவன் அதிலே கொடுத்துக் கொள்ளக்கடவனென்று சரீரஸம்பந்தத்துக்குச் சொன்ன சாஸ்த்ரநிபந்தந மென்றபடி. கொள்வனை கொடுப்பனையில்லாவிட்டால் சலாகயதை யெங்ஙனேயென்னவருளிச்செய்கிறார் (சலாகையித்யாதி.) குணநிபந் [௩0 தந மென்றது-பகவத்ப்ரஸாதத்தாலே வந்த சேஷத்வஜ்ஞாநநிபந்தந மென்றபடி. சரீரஸம்பந்தம்தவிர த்ரிவிதகரணத்தாலும் பகவத்ப்ரத்யாஸந்நரை ஆதரிக்கைக்கு ப்ரமாணம் காட்டுகிறார் (கண்டதெல்லாமித்யாதி வாக்யத்ரயத்தாலே.) ப்ரமாணாந்தரம் (கைசிகேத்யாதி.) (இருந்ததிறே) வராஹபுராணத்திலே என்றுசேஷம். இதிஹாஸச்ரேஷ்டத்தில் ப்ரமாணங்களை யருளிச்செய்கிறார் (ஸ்ரீவிபீஷணாழ்வானித்யாதி.)

---

(க) பஞ்சமவேதம் - அஞ்சாவதுவேதம். ¶ ஸ்ரீவசநபூஷணம் - ௨ - வது ப்ரகரணத்திலுள்ள "தர்மபுத்ரர், அசரீரிவாச்யத்தையும் ஜ்ஞாநாதிக்யத்தையுங் காண்டு ஸ்ரீவிதுரரை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்தார் [வாக்யம் - ௨௩௰] ரிஷிகள், தர்மவ்யாதன்வாசலிலே தவண்டு தர்மஸந்தேஹங்களை சமிப்பித்துக் காண்டார்கள் [௨௩௧]" "இவ்வர்த்தம், கைசிகவ்ருத்தாந்தத்திலும்........காணலாம் [௨௩௬]" "விபீஷணனை ராவணன் 'குலபாம்ஸநம்' என்றான்;

இவனேயன்றிக்கே, "[illegible]" "ராக்ஷஸாநாம்பலாபலம்" என்று பெருமாள்தாமுமருளிச்செய்தார். ஆகையாலே, பகவத் ஸம்பந்தம் (க) ஸ்பர்சவேதியாயிருந்தது. (செல்வம்தந்திடும்) ராவணஸம்பந்தமற்றவாறே, "[illegible]" "அந்தரிக்ஷகதஸ்ரீமாந்" என்று ராமஸம்பந்தத்தாலேவந்தஸ்ரீகுடிபுகுந்தது. அன்றிக்கே, அதுதன்னையே சொல்லிற்றாகவுமாம். "[illegible]" "பரித்யக்தாமயாலங்கா" என்று இவன்றானே கைவிடச்செய்தே, ராவணஸம்பந்தமற்றவாறே, ராமஸம்பந்தத்தாலேலங்கைச்வர்யமும் ௧௦]முடியும் அவன்றலையிலேவந்திருந்ததிறே. "நின்னையேதான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்றன்னையே தான்வேண்டும்செல்வம்" என்னக்கடவதிறே; உன்னையேயுகந்து நிலைநில்லாதஸம்பத்தை வேண்டேன் என்றிருப்பாரை அது கைவிடாதாப்போலே யென்கிறார், தாம்விடச்செய்தே தம்மை அது கைவிடாதபடியாலே. அங்ஙனன்றியே, உன்னையுகந்து நிலைநின்றஐச்வர்யத்தைக் காற்கடைக்கொண்டு நீயேயமையு மென்றிருக்குமவனை மோக்ஷஸ்ரீ கைவிடாதாப்போலே யென்றுமாம்.

(அடியார்படு துயராயினவெல்லாம் நிலந்தரம்செய்யும்) அடியாருண்டு - தனக்கு அஸாதாரணரானவர்கள்; படுதுயருண்டு - ௨௦]"[illegible]" "அவச்ய மநுபோக்தவ்யம்" என்று அநுபவவிநாச்யமான கர்மங்கள்; அவற்றை யெல்லாம், (நிலந்தரம்செய்யும்) நிலத்தோடொக்கப்பண்ணும் – வெறுந்தரையாக்கும் - கேவலபூதலமாக்கும். அங்ஙனன்றியே, நிலமென்று - அவன்வர்த்திக்கிற இடமாய், தரமென்று – தரணமாய், இடைக்குறைத்தலாய், இவன்பக்கல் நின்றும் கர்மங்கள்தானே நமக்கிருப்பிடமன்றென்று போம்படிபண்ணுமென்றுமாம்; "[illegible]" "யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே | நதத்ரஸஞ்சரிஷ்யந்தி வ்யாதிதுர்ப்பிக்ஷ தஸ்கரா:," "சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே," "கோலாடி ௩௦]குறுகப்பெறா."

---

அதுதன்னையே யென்றது-லங்கைச்வர்யந்தன்னையே என்றபடி. தாமென்றது-குலசேகராழ்வாரை. "நீள்செல்வம்" என்றது - விபரீதலக்ஷணையாலே அஸ்திரைச்வர்யத்தைச் சொல்லுகிறதென்று கீழருளிச்செய்து, "நீள்" என்றதாலே - நித்யைச்வர்யமென்று யோஜநாந்தரமருளிச்செய்கிறார் (அங்ஙனன்றியேயித்யாதி.)

கோலாடியென்றது - கோல்நடமாடும்தேசமாய், அத்தால் - ஆஜ்ஞைநடக்குமிடத்திலென்றபடி. குறுகப்பெறா - கிட்டப்பெறாது.

---

பெருமாள் இக்ஷ்வாகுவம்ச்யராகநினைத்து வார்த்தை யருளிச்செய்தார் [௨௨௬]' என்றவாக்யங்கள் இவ்விடத்தில் அநுஸந்தேயம். (க) ஸ்பர்சவேதி - தன்மேலேபடும் வஸ்துவின் ஸ்வரூபத்தை வேதகப்பொன்போலே வேறாக்குமது. (வேதகப்பொன்னாவது - அநேகஸித்தௌஷதங்களையிட்டுப் பலகாலுருக்கி குளிகையாகப் பண்ணி ரஸவாதிகள் கையிலிருக்கும் ஸ்பர்சவேதியானபொன். அதுஸ்பர்சமாத்ரத்தாலே இரும்பைப்பொன்னாக்குமாப்போலே யாய்த்து,ஜந்மஸித்தமான நைச்யாதிகளையுடைய விலக்ஷணரான இவர்களோட்டைஸம்பந்தம் நிக்ருஷ்டஜந்மத்தால் வந்த தோஷத்தைப்போக்கி இவனையும் விலக்ஷணனாக்கிவிடும்படி.)

அங்ஙனன்றியே, நிலமென்று-ப்ர்திவ்யாதி பூதங்களாலே ஆரப்தமான சரீரமாய், இவன்பண்ணின கர்மங்களை சரீரத்தளவாக்கும். பக்திமா னுக்கு ப்ராரப்தகர்மாவதியா யிருக்கும்; இவ்வர்த்தாநுஸந்தாநத்தைப் பண்ணி ப்ரபந்நனானவனுக்கு இச்சரீராவதியா யிருக்கும்.

(நீள்விசும்பருளும்) விரோதிநிவ்ர்த்தியாகிறது- சரீராவதியிறே; அவ்வளவன்றியே, பரமபதத்தையும்கொடுக்கும்.

(அருளொடுபெருநிலமளிக்கும்) அருளோடேகூட, பெரியநில மூண்டு - பெரிய ஸ்தாநம்- கைங்கர்யமாகிற பெரியபதம்; அத்தைத் தரும். ( வரந்தரும் ) "ஒழிவில் காலம்" என்று இவனுக்கு ப்ரார்த்த[க0 நீயமான கைங்கர்யத்தைக்கொடுக்கும். (வலந்தரும்) என்றாலும்,அது தன்னையேகாட்டும். அங்ஙனன்றிக்கே, (வலந்தரும்) என்று- "ஸ்ஶ்ரு லைஶ" "யஆத்மதாபலதா" என்று தன்னையும் கொடுத்து தன்னையநு பவிக்கைக்கீடான சக்தியையும்கொடுக்கும். நித்யஸம்ஸாரியா யின்று சென்றவனுக்கும், நித்யாநுபவம்பண்ணுகிற நித்யஸூரிகளோடொ க்க அநுபவிக்கைக்கீடான சக்தியையும்கொடுக்கும். அங்ஙனன்றிக்கே, (அருளொடுபெருநிலமளிக்கும் வலந்தரும்) தன்னை ஆச்ரயித்தவர்தங்க ளளவன்றிக்கே, தங்களோடு ஸம்பந்தித்தார்க்கும், தங்களருளோடே கூட, பெரியநிலமூண்டு - பரமபதம், அத்தைக் கொடுக்கவல்லராம்படி யான ப்ரஸாதத்தைப்பண்ணும். [உ0

(மற்றும்தந்திடும்) இவனுக்கு ஹிதமாய் இவனறியாதவற்றையும் தானேகொடுக்கும். "இவன்கார்யம் தானறிந்தானே, நாமன்றோ கட வாம்" என்று தானேகொடுக்கும். ¶கோவிந்தஸ்வாமி, தன்னைக்கண்ட நந்தரம், "நான்கூடப்போருவேன்" என்ன; அவனுடையமுன்புத்தை னைவையறிந்து, "நீயிங்கேயிருந்து சிறிதுநாளநுபவித்துவா" என்று பானனிறே.

---

"பெருநிலம்" என்ற பதத்துக்கர்த்தமான கைங்கர்யத்துக்கு ப்ரார்த்தநீய த "வரம்" என்றத்தாலே சொல்லுகிறதென் றருளிச்செய்கிறார்(ஒழிவிலித்யாதி.)

---

¶ கோவிந்தஸ்வாமிவ்ர்த்தாந்தம்;—கோவிந்தஸ்வாமி என்பானொரு ப்ராஹ்ம ணன், இதிஹாஸ புராணச்ரவணத்தாலே, க்ர்ஷ்ணனுடைய பால்யசேஷ்டிதங்க ளையும் ராஸக்ரீடாதிகளையும் ஸாக்ஷாத்கரித்து, ஸகாமனாய், "முன்பு * காண ராயென் றென்றிருப்பார்க்கு "பரித்ராணாயஸாதூநாம்" என்கிறபடியே காட்டி கொடுத்துப் போருமவனன்றோ, நமக்கும் "அவ்வாசையுண்டானால் ஸித்தி மையில்லை, ததர்த்தமாக ஆர்த்திப்போம்" என்று சரீரத்தை ஒறுத்து தபஸ்ஸு ண்ண; இவன்நினைவின்படியே க்ர்ஷ்ணாவதாரத்திற்படிகளையடைய ஸ்ர்ஷ்டித்துக் காட்டி அநுபவிப்பித்து, "உனக்குவேண்டுவதென்!" என்றுகேட்டருள; "கூடப் போந்து இப்படி தேவரீரை அநுபவிக்குமித்தனை" என்ன; "நீ தபஸ்ஸுபண்ணு மபோது, விஷயவிதானாய் அந்நபாநாதிகளையும் கழித்து உடம்பையும் காரும் பும்புமாக்கிக்கொண்டு போந்தாய், இக்கேயிருந்து செகிழ்ந்துபோகங்களையும்கழி துவா" என்று அவன்கருத்தறிந்து அருளிச்செய்தார்.

மூ.—மஞ்சுலாம்சோலை வண்டறைமாநீர் மங்கையார்வாள்கலிகன்றி- செஞ்சொலாலெடுத்த தெய்வநன்மாலை யிவைகொண்டு சிக்கெனத் தொண்டீர்!, துஞ்சும்போதழைமின்; துயர்வரில்நினைமின்; துயரிலீர் சொல்லிலும்நன்றாம்; நஞ்சுதான்கண்டீர் நம்முடைவினைக்கு நாரா யணாவென்னும் நாமம். ... ... ... ... ... (௧0)

ப-ரை.—மஞ்சு - மேகங்கள், உலாம் - [illegible]சரியாநின்றுள்ள, சோலை - சோலையையும், வண்டு - வண்டுகளை, அறை - சப்தியாநின்றுள்ள, மாநீர் - மிக்க ஜலத்தையுமுடைய, மங்கையார் - திருமங்கையிலுள்ளார்க்கு ரக்ஷகமான, வாள்-
௧0] வாளையுடையராய், கலிகன்றி - கலிதோஷத்தைப்போக்கினஆழ்வார், செம்சொலால் - செவ்வியசொல்லாலே, எடுத்த - எல்லார்க்கும் தெரியும்படி அருளிச்செய்ததாய், தெய்வம் - அப்ராக்ருதமாய், நல் - நித்யஸூரிகள் அநுபவிக்கலாம்படி நன்றான, மாலை - சொன்மாலையாயிருக்கிற, இவைகொண்டு - இத்திருமொழியாலே, துஞ்சும்போது - சரீராவஸாநத்திலே, அழைமின் - நாராயணா என்று அழையுங்கள்; துயர்வரில் - வ்யஸநங்கள் நேரிடுங்காலத்திலும், நினைமின் - இத்தையேமநநம்பண்ணுங்கள்; துயரிலீர் - வ்யஸநமற்றநீங்கள்; சொல்லிலும் - சொன்னாலும், நன்றாம் - நன்மையைத்தரும்; நாராயணா என்னும் நாமம் - நாராயணா என்கிற திருநாமமானது, நம்முடை - நம்முடைய, வினைக்கு - பாபங்களைப்போக்குகைக்கு, நஞ்சுதான்கண்டீர் - விஷமாயிராநின்றது கிடீர்! என்கிறார். ௰.

௨0] (பெற்றதாயினும்ஆயின செய்யும்) மாதா வானவள், சரீரத்துக்கு உத்பாதகையாயிருக்கிறாள்; ஆத்மாவுக்கு ஸ்வரூபமான ஜ்ஞாநவிகாஸத்தைப்பிறப்பிப்பானவனேயிறே. "शरीरमेव मातापितरौ जनयतः" "சரீரமேவமாதாபிதரௌஜநயத:" என்று - விரோதியானசரீரத்தை உத்பாதித்து விடுமளவிறே அவர்கள்செய்வது; "स हि विद्यातस्तं जनयति तच्छ्रेष्ठं जन्म" "ஸஹிவித்யாதஸ்தம்ஜநயதிதச்சரேஷ்டம்ஜந்ம" என்று - ஜ்ஞாநப்ரதனானவனேயிறே.

(நலந்தரும்சொல்லை) ஆத்தாநுஸந்தாநமொழியவே பாடத்தைச சொன்ன மாத்ரத்திலே பக்தியைப்பிறப்பிக்குமென்னுதல்; நலமென்று - வ்ருத்தமாய், கைங்கர்யத்தைத்தருமென்னுதல்; ஆகையாலே,
௩0] கைங்கர்யத்துக்கடியான ருசியைப்பிறப்பிக்குமென்னுதல; கைங்கர்யம தருமென்னுதல். (நான் கண்டுகொண்டேன்) இப்படியிருப்பதொன் றுண்டு என்றறியாத நான் காணப் பெற்றேன். (நாராயணாவென்னும நாமம்) "श्रीमन्नारायणेति स्वार्थसाधकः" "நமோ நாராயணாயேதிமந்த்ரஸ் ஸர்வார்த்தஸாதக:" என்னுமர்த்தை. ... ... ௬.

வ்யா.—பத்தாம்பாட்டு.—(மஞ்சுலாஞ் சோலை) மேகங்கள் உலாவும்படியான ஓக்கத்தை யுடைத்தான சோலை.

அவனேயிறேயென்றது - மந்த்ரப்ரதனான ஆசார்யனிறேயென்கை. இத்தால்- மந்த்ரஸ்வரூபஜ்ஞாநத்தை யுண்டாக்குமென்றதாய்த்து.

"அருளொடுபெருநிலமளிக்கும்வலந்தரும்" என்றதுக்கு - மோக்ஷப்ரதத்வ
௪0] ரூபசக்திப்ரதாநம் அர்த்தமான பக்ஷத்திலே, "நலம்" என்றதுக்கு அர்த்தமருளிச் செய்கிறார் (நலமென்றித்யாதி.) ஆகையாலே யென்றது - ஸ்வரூபஜ்ஞாந ஜநகமாகையாலே யென்றபடி. இவ்வாக்யத்வயமும் கீழ்ச்சொன்ன அர்த்தத்துக்கு விவரணமென்றுகொள்வது. "என்னும்" என்கிற ப்ரஸித்தியை யிப்பாட்டு ப்ரமேயத்துக்குச்சேர வருளிச்செய்கிறார் (நமஇத்யாதி.) ... ... ... ௬.

(வண்டறை) என்கிறது- * சோலைக்கு விசேஷணமாகவுமாம்; * மா நீர்க்கு விசேஷணமாகவுமாம். ஜலத்தினுடைய ரஸ்யதையாலே வண்டோடு மொய்ப்பதென்று ஆற்றுவரவுகளிலே சொல்லுவார்களாய்த்துத் தமிழர். (மங்கையார்வாள்கலிகன்றி) பகவத்ஸம்பந்த்தை புணர்ந்தவர்கள் பகவத்பலமே பலமாயிருக்குமாப்போலே, திருமங்கையிலுள்ளார் இவர்கையில் வாளே தங்களுக்கு பலமாகவாய்த்து நினைத்திருப்பது.

(செஞ்சொலாலெடுத்த) அதிக்ர்தாதிகாரமாய், ஸம்ஸ்க்ர்தமாய், தெரியாத சப்தங்களாலேசொன்ன அர்த்தங்களை, வ்யக்தமாக எல்லார்க்கும்தெரியும்படி செவ்வியசொல்லாலே சொன்ன. (தெய்வநன்மாலை) அப்ராக்ர்தமாய், "கேட்டாரார வானவர்கள்" என்று நித்யஸூரிகள் கேட்டு அநுபவிக்கலாம்படியிருக்கிற,மாலை-தொடை.(இவைகொண்டு சிக்கெனத் தொண்டீர்! துஞ்சும்போதழைமின்) சரீராவஸாநத்தில் யமவச்யதைக்கு அஞ்சாதே இத்திருநாமங்களைச் சொல்லுங்கோள். (துயர்வரில்நினைமின்) இவ்வருகுண்டான வ்யஸநங்கள் வந்தபோதும், இத்தையேசொல்லுங்கோள். (துயரிலீர் சொல்லிலும்நன்றாம்) "சரீரத்தோடே யிருந்தாலிவையெல்லாம் வருகை ப்ராப்தமன்றோ" என்று இத்தைமதியாதே அநந்யப்ரயோஜநராயிருப்பார்க்கு ஸ்வயம்ப்ரயோஜநம். (நஞ்சுதான்கண்டீர் நம்முடைவினைக்கு) நம்முடைய பாபங்களுக்கு ¶காற்றவொண்ணாத நஞ்சு. (நாராயணாவென்னும் நாமம்) "எனக்கென்றும்தேனும்பாலுமமுதுமாய திருமால்திருநாமம்-நானும்சொன்னேன் நமருமுரைமின் நமோநாராயணம்" என்று - நமக்கு இனிய திருநாமமே பாபத்துக்கு நஞ்சு; அல்லாதன வெல்லாம் ஸம்ஸாரத்திலே வேர்பற்றுகைககுறுப்பாயிருக்கும். இதினுடைய அர்த்தாநுஸந்தாநமே ஸம்ஸாரத்தை வேரறுப்பது என்னுமிவ்வர்த்தத்தை யெலலாரும் புத்திபண்ணி யிருக்கலாகாதோ! ... ... ௰.

திருமங்கையாழ்வார்திருவடிகளே சரணம்.
பெரிய வாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அடிவரவு.—வாடினேன் ஆவி சேமம் வென்றி கள்வன் எம்பிரான் இல்பிறப்பு கற்று குலம் மஞ்சு வாலி.

---

பத்தாம்பாட்டு,— (மஞ்சுலாமித்யாதி.) "வண்டறை" என்றது - வண்டுகள் சப்தியாநிற்கிற என்றபடி, இது சோலைக்குச் சொல்லுகை லோகஸித்தமென்றும், நீருக்குச் சொல்லுகை கவிஸமயஸித்தமென்றும் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (வண்டறையித்யாதி வாக்யத்வயத்தாலே.) (வாளே தங்களுக்கு பலமாக) என்றதுக்கு - * வாள்வலியால் மந்திரங்கொண்டு உபதேசித்த ரக்ஷிக்கையாலும் வீரனாகையாலு மென்று கருத்து.

ஆறறவொண்ணாத - ஸஹிக்கக்கூடாத. "என்னும்" என்றது - போக்யதாதிசயத்தாலே யென்றருளிச்செய்கிறார் (எனக்கித்யாதி.) "கண்டீர்" என்றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிறார் (அல்லாதனவித்யாதி.)... ... ... ௰.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

¶ காற்றவொண்ணாத - ப்ரத்யௌஷதமிட்டுக்கக்கவொண்ணாத; பரிஹரிக்கப் போகாத. "ஆற்றவொண்ணாத" என்று அரும்பதத்தின் பாடம்.

வ்யா.—ஸம்ஸாரஸ்வபாவத்தையும் தம்முடைய இதரவிஷய ப்ராவண்யத்தையும் அநுஸந்தித்தருளினவிவர், அந்நோவுபாடே ஹேதுவாக தன்நிர்ஹேதுகக்ருபையாலே யென்னை விஷயீகரித்து, தன் ஸ்வாமித்வத்தையும் எனக்குக்காட்டித் தந்தானென்ருர் — கீழில் திருமொழியில்; "அம்பிணுலரக்கர் வெருக்கொளநெருக்கி" என்று— ராமாவதாரம் ப்ரஸ்துதமாய்த்து. திருமந்த்ரமும் ப்ரஸ்துதமாய்த்து. இத்திருமந்த்ரத்துக்கு அர்த்தமாகிறதுதான்- ஸ்வாமித்வஸௌலப்ய மிறே. (க) கர்ஷகனைவன் பயிர்த்தலையிலே குடில்கட்டிநோக்குமாப் க0]போலே, ரக்ஷ்யமிருந்தவிடத்தேவந்து ரக்ஷிக்கையிறேஸௌலப்யம்; உகந்தருளினநிலங்களிலேவந்து ஸந்நிதிபண்ணியித்தை நோக்குகை யாலேஉடையவனென்று ஸ்வாமித்வப்ரகாசகமுமாயிருக்கிறது.

எதிர்த்தலைபாராதேவந்து அவஸரப்ரதீக்ஷனாய் அந்தர்யாமி ரூபத்தாலே யிருக்கிறவிருப்பு, ஸ்வாமித்வ கார்யமிறே; அவ்வள வன்றிக்கே, கண்ணாலே கண்டநுபவிக்கவேணும் என்று அபேக்ஷை பிறந்தவன்று அப்போதே அநுபவிக்கலாம்படி கோயில்களிலே வந்து நிற்கிறவிதுக்கு மேற்படவில்லையிறே ஸௌலப்யத்துக்கு. ஸம்பந்தஜ்ஞாநம் பிறந்தவநந்தரம் அநுபவாபேக்ஷை பிறந்தால், அப்போதே யிவ்வுடம்போடே யடிமைசெய்யலாம்படி யிராதிறே உ0]பரமபதத்தில்; "அநுபவிக்கவேணும்" என்று அபேக்ஷைபிறந்தபோதே அவ்வுடம்போடே அநுபவிக்கலாம்படி யிருக்குமிறே உகந்தருளின நிலங்களிலே. இப்படி ஸௌலப்யத்துக் கெல்லையான உகந்தருளின நிலங்களெங்கும் புக்கநுபவிக்கக்கோலி; அதில் இப்பாசை.

அ.—வாலிப்ரவேசம். கீழ்த்திருமொழியிலே "குடந்தையேதொழுது" என்றும் "தஞ்சைமாமணிக்கோயிலேவணங்கி" எனறும் தமக்குத் திருமந்த்ரலாபம் உகந்தருளின நிலத்திலெம்பெருமானாலே வந்ததாக அநுஸந்தித்து, திருமந்த்ரம் பெற்றமையை யருளிச்செய்தவர், இனி, மேல் திருமொழிகளிலே அர்ச்சாவதாரமே தமக்கு ப்ராப்யமாக அநுஸந்திக்கைக்குக் கருத்து - திருமந்த்ரார்த்தமான ஸ்வாமித்வஸௌலப்யங்களை உகந்தருளின நிலங்களிலே கண்டநுபவிக்கவேணு ௩0]மென்கை யென்று விவக்ஷித்து, வர்த்தவர்த்திஷ்யமாண கதநமுகேந ஸங்கதி யருளிச்செய்கிருர் (ஸம்ஸாரேத்யாதி.) (ஸ்வாமித்வத்தையும்) என்ற (உ) சகாரம்-ஸௌலப்யத்தை ஸமுச்சயிக்கிறது. "எம்பிரானெந்தை" என்கிறபாட்டு திருமந்த்ரார்த்தப்ரதிபாதகமாகையாலே அதுஉயிர்ப்பாட்டாய், அதிலே "எம்பிரான்" இத்யாதியால் - ஸௌலப்யமும், "அண்ணல்" என்றத்தாலே - அதுக்குஹேதுவான ஸ்வாமித்வமும் ப்ரஸ்துதமான வளவன்றிக்கே, ராமாவதாரமும் திருமந்த்ரார்த்தமும் ப்ரஸ்துதமாய்த்தென்று அவற்றையும் அநுவதிக்கிருர் (அம்பிணு லித்யாதி.) காட்டித்தந்த ஸ்வாமித்வ ஸௌலப்யங்களை அர்ச்சாவதாரத்தில் கண்டநுபவிக்கிருரென்னுமத்தை உபபாதிக்கிருர் (இத்திருமந்த்ரத்துக்கித்யாதி.)

உடைமையைநோக்கும் ஸ்வாமித்வப்ரகாசகமெங்ஙனே யென்ன வருளிச் ச0]செய்கிருர் (எதிர்த்தலையித்யாதி.) மேல்திருமொழிகள் அநேகத்தோடும் ஸங்கதியை யருளிச்செய்து, (௩) அவ்யவஹிதமானத்தோடு அருளிச்செய்கிருர் (இப்படியித்யாதி.)

(க) கர்ஷகன் - உழுதொழில் செய்யுமவன். (உ) சகாரம் - உம்மை.
(௩) அவ்யவஹிதம் - பிரிக்கப்படாதது.

மூ.—வாலிமாவலத்தொருவனதுடல்கெட வரிசிலைவளைவித்தன்று,
ஏலநாறுதண்டடம்பொழி லிடம்பெற விருந்தநல்லிமயத்துள்;
ஆலிமாமுகிலதிர்தர வருவரை யகடுறமுகடேறிப்
பீலிமாமயில்நடஞ்செயுந்தடஞ்சுனைப்பிரிதிசென்றடைநெஞ்சே.

ப-ரை.—அன்று - ஸுக்ரீவமஹாராஜர் சரணம்புக அவரை அநுக்ரஹித்த வன்று, வாலி-வாலியென்னும் பேரையுடையனாய், மா-மிக்க, வலம்-பலம் பொருந்திய, ஒருவனது - ஒப்பற்றவனுடைய, உடல்-சரீரம், கெட-சிதறும்படி, வரி-அழகிய, சிலை-வில்லை, வளைவித்து-சரங்கள்பாயும்படி வளைத்து, அவருடைய அநிஷ்டத்தைப்போக்கி, ஏலம்-பரிமளம், நாறு - வீசாநிற்பதாய், தண்-குளிர்ந்து, தடம்-[க0
பரந்த, பொழில்-உத்யானவநங்களிலே, ஸர்வேச்வரன், இடம்பெற-எல்லார்க்கும் காட்சிகொடுக்கைக்காக, இருந்த - ஓலக்கம் கொடுத்துக்கொண்டிருக்கிற, நல்-விலக்ஷணமான, இமயத்துள்-ஹிமவானில்; ஆலி-சிறுதுளியையுடைய, மாமுகில்-மஹாமேகங்களானவை, அதிர்தர - நீர்க்கனத்தாலே முழங்காநிற்பதுமாய், பீலி-தோகையையுடைய, மா-பெரிய, மயில்-மயில்களானவை, அரு-ஒருவராலும்தாவி யேறவரிதான, வரை-மலைகளிலே, அகடு-சீழ்வயிறு, உற-தழுவும்படியாக, முகடு-அவற்றின் சிகரங்களில், ஏறி-போய்ஏறி, அங்கே, நடம்செய்யும்-ஆடாநிற்பதுமாய், தடம் - பரந்த, சுனை - சுனைகளை யுடைத்தான, பிரிதி - திருப்பிரிதிஎன்கிற திவ்ய ஸ்தலத்தை, சென்றுஅடை-சென்றுகிட்டப்பாராய், நெஞ்சே!- மநஸ்ஸே ! என்று தம் திருவுள்ளத்தோடே கூட்டுகிறார்... ... ... ... (க) [உ0

நடையாடுமிடந்துக்கெல்லையாயிருக்குமிறே திருமலை, அவ்வளவிலே நில்லாதிறே இவருடைய ஆசையானது, ஆசையாலே உகந்தருளின நிலங்களுக்குஎல்லையான ஹிமவானில் திருப்பிரிதியளவும் சென்று அவ்விடத்தைஅநுபவிப்பதாகத் (க)திருவுள்ளத்தோடேகூட்டுகிறார். கீழ்த்திருமொழியிலே, "அம்பினாலரக்கர்வெருக்கொள நெருக்கி" என்று – ராமாவதாரமுகத்தாலே விரோதிநிரஸநம் ப்ரஸ்துதமிறே; அவ்வழியாலே, மஹாராஜர் வெறுவியருமாய், தனியருமாய், ஜ்யேஷ்டனாலே நெருக்குண்டு நோவுபட்டிருக்க, அவர் அபேக்ஷியாதிருக்கச்செய்தேயும், "[தெலுங்கு எழுத்து]" "ஸராமோ வாநரேந்த்ரஸ்ய"என்கிறபடியே–தாமேஅவரிருந்த விடத்தேசென்று[ங0
அவர்விரோதியைப்போக்கியுபகரித்தாப்போலே, அவன்றானேநம்முடைய குறைகளையுமெல்லாம் தீர்த்து உபகரிக்கைக்காக இங்கே திருப்பிரிதியிலேவந்து எழுந்தருளி யிருந்தான், நெஞ்சே ! அங்கே சென்று கிட்டப்பாராய் என்று திருவுள்ளத்தோடே கூட்டுகிறார். முன்பெல்லாம் கண்ணுக்கிலக்கான விஷயங்களிலே ப்ரவணராய்ப் போந்தார் ; பகவத்ஜ்ஞாநம் பிறந்தபின்பும்அவ்வாஸநை அநுவர்த்தித்து, கண்ணுக்குவிஷயமான உகந்தருளினநிலங்களிலே புக்கநுபவிக்கிறார்; "தானுகந்தவூரெல்லாம்" என்னக்கடவதிறே. ...

"ராமாவதாரம் ப்ரஸ்துதமாய்த்து" என்று வ்ருத்தகீர்த்தநத்துக்கு ஸங்கதி தன்னை முதற்பாட்டைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் ( கீழ்த்திருமொழியிலே[சு0
த்யாதி.) வெறுவியர் - தரித்ரர். "திருமந்த்ரமும் ப்ரஸ்துதமாய்த்து" என்றதாலே - திருமந்த்ரத்துக்கு பரத்வாதிகளெல்லாம் அர்த்தமாயிருக்க, ஏகதேசமான அர்ச்சாவதாரங்களிலேதானே போவானென்னென்ன ; ரஸோக்திமுகேந வருளிச்செய்கிறார் (முன்பெல்லாமித்யாதி.) ... ... ... ...

க) திருவுள்ளத்தோடேகூட்டுகை-அத்திருப்பதியை நெஞ்சுக்கு விஷயமாக்குகை.

வ்யா.—முதற்பாட்டு.—(வாலியித்யாதி) வாலியென்று பேராய், மஹாபலத்தில்வந்தால் தன்னைப்பெண்ணினால் இரண்டாம்விரலுக்கு ஆளில்லாதபடி அத்விதீயனாயிருக்கிறவனுடையவுடலானது சிந்தும படியாக, தர்சநீயமான வில்லை வளைத்து. வாலியுமழிகையும்கிடக்கச் செய்தே, அக்கையும் வில்லும் சேர்ந்த சேர்த்தியும் தர்சநீயதையும் அநுபவிக்கிறாராய்த்துஇவர். "ஶத்ருநாஶநே" "சத்ருநாசநே" என்கிறது கிடக்க, "ஶக்ரசாபநிபே" "சக்ரசாபநிபே" என்கிறத்தை அநுபவிக் கிறார். உகப்பாரோடு உகவாதாரோடு வாசியற இரண்டுதிறத்தா

௧0 ரையும் அழிக்குமாய்த்து!. [ஶக்ரசாபநிப உக்த்வா, சக்ரசாபநிப இத் யாதி] இந்த்ரதநுஸ்ஸுபோலே அநுகூலர்க்கு வைத்தகண் மாறாதே கண்டுகொண்டிருக்க வேண்டும்படி தர்சநீயமாயிருக்கும். [க்ருஹீத்வா, க்ர்ஹீத்வா] விற்பிடித்த பிடியிலே ப்ரதிகூலர் முடிந்துபோம்படியு மாயிருக்கும். அநுகூலரைஅழகாலே யழியச்செய்யும், ப்ரதிகூலரை அம்பாலே யழியச்செய்யும்.

[எரிசிதறும் சரத்தால்] "தீப்தபாவகஸங்காஶை:" "தீப்தபாவகஸங் காசை:" என்கிறபடியே-தொடுத்துவிடும்போதாய்த்து அம்பென்று அறியலாவது; தைக்கும்போது உடம்பிலே நெருப்பைச் சொரிந்து கொண்டாய்த்துத் தைப்பது. [இலங்கையினை] (௧) அந்தகனுங்கூட

௨0 ப்ரவேசிக்க அஞ்சும்படியானவூரை. [தன்னுடையவரிசிலைவாயிற் பெய்து] ஸர்ப்பம்நாவாலேவிழுங்குமாப்போலேயாய்த்து அம்பாலே (௨) க்ரஸிக்கும்படி. வில்லுக்கு வாய் அம்பிறே. வாயான அம் பிலே புகும்படி ப்ரவேசிப்பித்து. [வாய்க்கோட்டம் தவிர்த்து] வாயில், கோடுதலுண்டு-விலங்குதல், அத்தைத் தவிர்த்தானாய்த்து. "நமேயம்" "நமேயம்" என்றிருந்தவிருப்பைத் தவிர்த்தானாய்த் து. [கஸ்யசித், கஸ்யசித்] இவர் தம்மை யிதரஸஜாதீயராக்கி வைக்கையாலே மநுஷ்யரென்றே யிருந்தான், இவரேயன்றிக்கே

முதற்பாட்டு.—(வாலியித்யாதி.) தம்முடைய விரோதிகளைப் போக்குகைக்கு உறுப்பாக வாலிவதம்சொல்லவேண்டினால், உடல்கெடுத்து எனலாமே, "வரி

௩0 சிலைவளைத்து" என்னுமதுக்குக்கருத்தென்னென்ன வருளிச்செய்கிறார் (வாலியு மித்யாதி.) "சாபே - க்ருஹீத்வா, சாபே - க்ர்ஹீத்வா" என்றது ஆயுதமாகை யாலே விரோதிநிரஸநம் அர்த்தலப்யமாயிருக்கவும், "ஶத்ருநாஶநே, சத்ருநாசநே" என்றுவிசேஷித்ததுக்கும் "ஶக்ரசாபநிபே, சக்ரசாபநிபே" என்றுவர்ணிக்கைக்கும்-ரிஷிகொண்டாடுகிறானென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (உகப்பாரோடித்யாதி.) சக்ரசாபநிபங்களான(௩)சாபங்களை சத்ருநாசகமாம்படி(௪)க்ர்ஹீத்வாஎன்றுஅர்த் தம் திருவுள்ளம்பற்றி, தாத்பர்யமருளிசெய்கிறார் (விற்பிடித்தவித்யாதி.) வில்லா னது சத்ருநாசகமானவழியை யுபபாதிக்கிறார் (அநுகூலரையித்யாதி.) இங்கு (அநுகூலரை) இத்யாதி - த்ருஷ்டாந்தார்த்தம்.

ப்ரதிகூலரை அம்பாலேயழித்தாரோவென்னவருளிச்செய்கிறார்(எரியித்யாதி.)

௪0 எடுத்தபாசுரத்துக்கு ப்ரமாணபூர்வகம் அர்த்தமருளிச்செய்கிறா (தீப்தேத்யாதி.) "நமேயம்" என்றது அதிக்ரூரமானபடியை யருளிச்செய்கிறார் (கஸ்யேத்யாதி.)

(௧) அந்தகன் - யமன். (௨) க்ரஸித்தல் - விழுங்குதல். (௩) சாபம் - வில். (௪) க்ர்ஹீத்வா - எடுத்து.

ர்வரன் என்று சொல்லுகிற அவன்றான் வந்தால்தான் வணங் வன்றே!. ஸ்வரூபம் கைபுகுந்தால் "[illegible]" "நம க்யேவவாதிந:" என்றாய்த் திருப்பது; "மம" என்றிருக்கை ய்த்து ஸ்வரூபவிரோதி. அநுகூலபாஷணம் பண்ணுகை ப்ரா மாயிருக்க "எனக்கு" என்றபேச்சில் விலங்குதலைத் தவிர்த்தா ய்த்து. [உகந்தவரையன்] (க) ஈரரசு தவிர்த்தபின்பு உகந்தபடி. வன்றான், "எனக்கு" என்றிருக்குமத்தைத்தவிர்த்தோமாகில்இனி மதேயன்றே!என்றுஇனியனானான். இவன்"என்னது"என்றிருக்கு து தவிர்ந்தால், பின்புள்ளதடையத் திருவிடையாட்டமாயிருக்கு[௧௦ றே. [அரையன்] இவன்பக்கல் அல்பாநுகூல்யமமைகிறது உடை யவனாகையிறே;இவன் ப்ராதிகூல்யத்தில்நின்றும் நிவர்த்தனானவளவு கொண்டு உகக்கும்படியாய்த்து ஸ்வாபாவிகஸம்பந்த மிருப்பது. (அன்று)அன்று அங்ஙனேசெய்தான், இன்றுஇங்கே வந்திருந்தான்.

(ஏலமித்யாதி) வினையுள்ளபோதாய்த்துத் தன்னைப்பேணாதே மேல்விழுந்து வ்யாபரிப்பது,அதுபோனவாறே ராஜபுத்ரனாய்ச்செல் லப்பிள்ளையாய் வளர்ந்த ஸௌகுமார்யம் வந்துமுகம்காட்டுமிறே; அதுக்கீடாக விருக்கிறவிடமாய்த்து. அன்றிக்கே, "அம்புக்குச்செல் லாதவிடத்தை ஆஸநத்தாலேதிருத்துவோம்" என்றுபார்த்து வந்திரு ந்தபடி யாகவுமாம்; சத்ருக்களையழிக்க வொண்ணாவிட்டால் "அவர்க[௨௦ ளோடே யெதிரிட்டுக் கொள்வோமல்லோம்" என்றுபார்த்து, (உ) எடுத்துவிட்டு ஆஸநத்தாலே பக்நாபிமாநராக்குமாப்போலே. (ஏலம்நாறு) விட்டுப்போந்த விடத்தை விஸ்மரிக்கும்படிபண்ணும் தேசமாய்த்து; "[illegible]" "அதிகம் புரவாஸாச்ச," "[illegible]" "ஜஹௌளசதுஃகம் புரவிப்ரவாஸாத்." படைவீட்டில் விசேஷேண வுண்டான ப்ரகர்ஷடவாஸத்தால் வந்த துக்கமடையப்போம்படி யாய்த்து இங்குத்தைவாஸம். பரிமளத்தை புடைத்தாய் ச்ரமஹரமாய் பரப்பையுடைத்தாயிருந்துள்ளபொழில்.

---

"வாயில் கோடுதல்" என்றவாக்யத்தை விவரிக்கிறார் (அநுகூலேத்யாதி.)அங் ஙனே செய்தான் - வாலியைக்கொன்றானென்றபடி. [௩௦
வினை - யுத்தம். அத்யந்தப்ராதிகூல்யமில்லாதவர்களை வசீகரிக்கைக்கு போ ன தேசத்திலே ஸ்தாயியாயிருப்போமென்று வந்தானாக தாத்பர்யாந்தர ருளிச்செய்கிறார் (அன்றிக்கேயித்யாதி) (உ) எடுத்துவிடும் ராஜாக்கள் நீரும் ம் பார்த்திருக்குமாப்போலே யிருந்தானென்றுகருத்து. நீரும் நிழலும் பா க்குமிடத்திலே பரிமளத்தைச்சொல்லுவானென்னென்ன வருளிச்செய்கிறார் த்யாதி.) விட்டுப்போந்தவிடம் - திருவயோத்யை. "அதிகம்புரீவாஸாத்" பெருமாளுக்கு விப்ரவாஸமானது, புரத்தில்நின்றும் புறம்பேவந்த துஃகம் ல அதிசயமாகச்சொல்ல வொண்ணாதென்று, அதுக்குஅர்த்தமருளிச்செய்கி படைவீட்டிலித்யாதி.) இத்தால் - மிகவுமதிகமாக புரத்திலே யிருக்கையா தேஷ்டமாகபிராட்டியோடே ஸஞ்சரிக்கவொண்ணாதே மாதாபிதாக்களுக்கு[௪௦ க்கிட தந்துஃகம் தீர்ந்தது திருச்சித்திரகூடத்திலே யானாப்போலே, திருப் யிலே யிருந்தானென்றதாய்த்து. சப்தார்த்தம் (பரிமளத்தை யித்யாதி.)

---

க) ஈரரசு - த்வைராஜ்யம். (உ) எடுத்துவிடுகை - படையெடுக்கை.

(இடம்பெற) இடம்பெற விருக்கை யாவது – எல்லாருக்கும் காட்சி கொடுக்கைக் கீடாக ஓலக்கமிருக்கை. நித்யஸூரிகளுக்குஓலக்கம் கொடுக்கையன்றிக்கே நித்யஸம்ஸாரிகளுக்கும் ஓலக்கம் கொடுத்துக்கொண்டிருக்கை. அவதாரகாலத்தில் காணப்பெறாதா ரெல்லார்க்கும் காட்சிகொடுத்துக் கொண்டிருக்கிற விடமாய்த்து. (நல் இமயத்துள்) ஒருகாரியப்பாடொழியவேயும் வர்த்திக்கவேண்டும்படியான தேசமாய்த்து. தன்னநுக்ரஹத்தாலே வர்த்தித்தானாக வேண்டாதே, தேசவாஸந்தானே உத்தேச்யமாகப்போரும்படியிருக்கை.
க0] (ஆலியித்யாதி) ஸ்ரீவைகுண்டத்தில் வாத்யகோஷங்களோடும் நித்யஸூரிகள் "அஹமந்நமஹமந்நம்" "அஹமந்நமஹமந்நம்" என்று களிக்குமத்தோடும்போதுபோக்கியிருக்குமவன்,அவ்விழவுதிர,அவை தன்னையுங்கூடமறக்கும்படி,மேகங்கள்கோஷிக்க,மயில்கள்ஆட, அது கண்டு போதுபோக்கிக்கொண்டிருக்கிற விடமாய்த்து. விலையற்று பிராட்டியோடேகூட எழுந்தருளி யிருக்கையாலே மேகத்வநிதான் அநுகூலமா யிருக்குமிறே.

(ஆலியித்யாதி) சிறுதுளியை யுடைத்தான மஹாமேகங்களானவை நீர்க்கநத்தாலே முழங்க. ஆலிமாமுகிலதிர்தர,பீலிமாமயில் நடஞ்செய்யுமாய்த்து ; வாத்யங்கள்வாய்த்தால் கூத்தாடுவார்உடம்பு
உ0]பேசாதிராதிறே ; காலுக்கிடாக வாய்த்தவாறே ஆடுவாரைப்போலே, அவைமுழங்க இவைஆடாநிற்குமாய்த்து. (அருவரையித்யாதி) ஒருவரால் தாவியேறவரிதான மலைகளிலே ப்ரீதியாலே யேறில் ஏறுமத்தனையாய்த்து ; அவற்றிலே கீழ்வயிறு நெடுந தழுவும்படியாக சிகரத்திலேபோயேறி, சிகரத்திற்பரப்படங்கலும் தன்தோகையாலே பரப்பி மயிலானது ஆடாநிற்குமாய்த்து. ராமாவதாரத்தில் விஜயம் கண்டு வாநரஜாதியாக ஆடினத்தை, இவ்விருப்பைக்கண்டு மயில்கள்ஆடாநிற்குமாய்த்து. (பிரிதிசென்றடைநெஞ்சே) சைதந்யத்தில் குறையநின்றாரும் அத்தேசத்தை ப்ராபித்து ப்ரீதிக்குப்போக்கு விட்டுச் சில வ்யாபாரங்களைப் பண்ணுகிற தேசமானபின்பு, சைதந்ய
ந0]த்தில்குறையற்றிருந்தநீ அத்தேசத்தைச்சென்றுப்ராபிக்கப்பாராயென்கிறார்.சைதந்யத்தில்குறையநின்றாரோடுகுறைவற்றாரோடுவாசியறவலவராய்அடிமை செய்யும்படி யாய்த்து விஷயஸ்வபாவம். துறும் பெழுந்தாடுமாய்த்து. ... ... ... ... ... க.

சப்தார்த்தம் (தன்னநுக்ரஹத்தாலே யித்யாதி.)

வாலிவதம்பண்ணினவர் வந்துவர்த்திக்கிறாராகில் (க) மால்யவானிற்போலே மேகத்வநி பாதகமாகாதோவென்ன வருளிச்செய்கிறார் (விலையற்றித்யாதி.) வாலிவதம், ராவணவதத்துக்கு உபலக்ஷணமென்று திருவுள்ளம்.

சப்தார்த்தம் (சிறுதுளியித்யாதி.) மயில்நடம்செய்கைக்கு அதிர்தருகைஹேதுவானமையைக்காட்டுகிறார் (ஆலிமாமுகிலித்யாதி வாக்யத்ரயத்தாலே.) அகடு-
௩0]கீழ்வயிறு. தோகையின்கனத்தாலேபறக்கக்கூடாமல் அகடுறவென்றுகருத்து. (க)

(க) மால்யவான் - ஓர்மலை.

மூ.—கலங்கமாக்கடல்,அரிக்குலம்பணிசெய்ய, அருவரை யணைகட்டி,
இலங்கைமாநகர்பொடிசெய்தவடிகள்தாமிருந்தநல்லிமயத்து;
விலங்கல்போல்வனவிறலிரும் சினத்தன வேழங்கள் துயர்கூர,
பிலங்கொள்வாளெயிற்றரியவைதிரிதருப்பிரிதிசென்றடைநெஞ்சே.

ப-ரை.—மாக்கடல் - மஹாஸமுத்ரங்கள், கலங்க - கலங்கும்படி, அரிகுலம்-இடக்கைவலக்கை வாசியறியாத குரங்குக்கூட்டம், பணி - நித்யஸூரிகள் செய்யும் அடிமையை, செய்ய-பண்ணவும், அத்தாலே,அரு-ஒருவராலும் எல்லை காணவொண்ணாத, வரை - மலைகளைக்கொண்டு, அணைகட்டி - ஸேதுபந்தநம்பண்ணி, இலங்கைமாநகர்-லங்கையையும் அதில்குடியேறின ராவணன்முதலான ராக்ஷஸ [௧0 வர்க்கத்தையும், பொடிசெய்த - பாழ்படுத்தின, அடிகள் - ஸர்வஸ்வாமியானவன், இருந்த - நித்யவாஸம்பண்ணுகிற, நல் இமயத்து - விலக்ஷணமான ஹிமவானிலே; விலங்கல்போல்வன-மலைபோன்ற, விறல் - மிடுக்கையுடையனவாய், இரும்-மிக்க, சினத்தன - கோபத்தையுடையவான, வேழங்கள் - யானைகளானவை, துயர்கூர-மிகவும்பயப்படும்படியாக, பிலம்-குகைகளை, கொள்-இருப்பிடமாக வுடையனவாய், வாள்-வாள்போன்ற, எயிறு - பற்களையுடைய, அரிஅவை- ஸிம்ஹங்களானவை,திரிதரு-ஸஞ்சரியாநிற்கிற, பிரிதி-திருப்பிரிதியை,நெஞ்சே!—, சென்றுஅடை-சென்று கிட்டப்பாராய் என்று, ராவணவதம்பண்ணினபடியைப் பேசுகிறார். (௨)

அ.—இரண்டாம்பாட்டு.—தம்மிழவைப்பரிஹரித்த ப்ரஸங்கத்தாலே மஹாராஜரிழவைப்பரிஹரித்தபடியைப் பேசினார் முதற்பாட்டில்; மஹாராஜரிழவைப்பரிஹரித்த பின்பிறே பெருமாள் [௨0 தம்மிழவைப்பரிஹரித்துக்கொண்டது, அந்த க்ரமத்திலே ராவணவதம்பண்ணினபடியைப் பேசுகிறார்.

வ்யா.—(கலங்கவித்யாதி) ஈச்வரன் தன்ஸங்கல்பத்தை நெகிழ்ந்தால் பதார்த்தஸ்வபாவங்கள் மாறுமோப்போலே யாய்த்து, சக்ரவர்த்தித்திருமகன் முனிந்தாலிருக்கும்படியும். ஒருவரால் கலக்கவொண்ணாதகடல் கலங்கும்படியாகவும், நித்யஸூரிகள் செய்யும்அடிமையை இடக்கைவலக்கைவாசியறியாத குரங்குகள் செய்யும்படியாகவும், நிலாழ்க்கடவ மலைகள்மிதந்து அணையாய்நிற்கும்படியாகவும் பண்ணிற்றாய்த்து. (மாக்கடல்-கலங்க) "அப்ரமேயோ மஹோததி:" "அப்ரமேயோ [௩0 மஹாததி:" என்கிறகடல்கலங்கி கீழ்மண்கொண்டுமேல்மண்ணெறியும்படியாக. (அரிகுலம் பணிசெய்ய) அஸ்ப்ர்ஷ்டஸம்ஸாரகந்தரான திருவடி, திருவநந்தாழ்வான், ஸ்ரீஸேநாபதியாழ்வான் தொடக்கமானார் செய்யக்கடவ கைங்கர்யத்தை, ஸம்ஸாரிகளுக்கும் பின்னே யெண்ணவேண்டும்படி இடக்கை வலக்கை வாசியறியாத வாநரஜாதி செய்யும்படியாக.

இரண்டாம்பாட்டு.—(கலங்கமாக்கடலித்யாதி.) தம்மிழவைப்பரிஹரித்தது - "பன்றியாயன்று பாரகங்கீண்ட பாழியானாழியானருளே - நானுய்ய" னுமத்தைப்பற்ற.

கடல்முதலான பதார்த்தங்கள் ஸ்வபாவங்களைமாறுடிக்கலங்கவும் கைங்கர்யம் பண்ணவும் மிதக்கவும்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (ஈச்வரனித்யாதி.) [௪0 நிவால்மாறுடினபடி யேதென்னவருளிச்செய்கிறார்(ஒருவராலித்யாதி.) "பணி" ற பதவாஸனையாலே பலித்தஅர்த்தத்தையருளிச்செய்கிறார்(அஸ்ப்ர்ஷ்டேத்யா ஸம்ஸாரிகளுக்குமென்றது-தேஹபோஷணபரரான மநுஷ்யர்க்குமென்றபடி.

இதுக்கு த்ர்ஷ்டாந்தமாக, திருவெள்ளறைத் திருமொழியிலே ஒருபாட்டருளிச்செய்வர் [ ஆங்கு மாவலிவேள்வியில் - சென்று - இரந்து ‡] மஹாபலியினுடைய யஜ்ஞவாடத்திலே தன்னை அர்த்தியாக்கிச் சென்று.[அகலித்யாதி]பூமிப்பரப்படையவாங்குகிறவன்று, அவனை யெதிரிட்டுக்கொண்டு வாங்குகையன்றிக்கே அவ னேறிட்டுக் கொண்டிருக்கிற ஔதார்யத்துக்கு அநுரூபமாக வாங்கினான் ; ராவணாதிகளைப்போலே தலையறுக்க வேண்டிற்றில்லை ஔதார்யமென்றொரு குணலேசம் கிடக்கையாலே ; இவன் கொடுக்க வுகந்திருந்தானென்று தன்னை யிரப்பாளனாக்கி அவனோடிசையக் கொண்டான். தன்னதான பூமியையிறே அவன் தந்தானாகக்கொண்டது. ஆக, நம்முடைய ஆத்மஸமர்ப்பணம்போலே யிருப்பதொன்றிறே அவனுடைய தானமும் ; [அதவாகிந்நுஸமர்ப்பயாமி - அதவாகிந்நுஸமர்ப்பயாமி] அநந்தரம் அநுசயிக்கவேண்டும்படியிறே யிதுதானிருப்பது ; விழுக்காட்டில் ஆத்மஸமர்ப்பணத்தோடு ஆத்மாபஹாரத்தோடுவாசியற்றிறே[யிரு] யிருப்பது ; ஆகையிறே உபாயநைரபேக்ஷ்யம் சொல்லுகிறது.[பரம! நிற்பணிந்தெழுவேனெனக்கருள்புரியே ] ஸர்வாதிகனே !, உன்னை வணங்கி யுஜ்ஜீவிக்கிற வெனக்கு ப்ரஸாதத்தைப்பண்ணியருள வேணும். ஆச்ரயணத்துக்கு பலவ்யாப்தியுண்டிறே. [ஓங்கித்யாதி] ஆகாசமிடமறும்படி வளர்ந்து பரப்பு மாறப் பூத்த அசோகத்தினுடைய சிவந்த பூக்களிலே மதுபாநார்த்தமாக வண்டுகள் ஸஞ்சரிக்க, தர்சநீயமான குயில்களானவை, "இவை நெருப்பிலேபுக்கன" என்றே நிச்சயித்து, அதுதன்னைத் தட்டாதபடி மாவிலேபோயேறிக் கூப்பிடாநிற்குமாய்த்து. சிவந்தபூப் பூவாத மாத் தேடி யேறிநின்று ; [மிழற்றும்] எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி [உரு

"பாங்கினால்கொண்ட" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனை யித்யாதிவாக்யத்ரயத்தாலே.)அவனோடிசையக்கொண்டானென்றது-அவன் கொடுக்கிறவனும் தான் வாங்குகிறவனுமாயிருந்து கொண்டானென்றபடி. இதுக்கு ஜ்ஞாபகமென்னென்னவருளிச்செய்கிறார்(தன்னதானவித்யாதி.)ப்ரஸங்காத்ஸ்வரூபசிக்ஷை பண்ணுகிறார் (ஆகவென்றுதுடங்கி, நைரபேக்ஷ்யம் சொல்லுகிறதென்னுமளவும்,) அநுசயிக்கும்படி யிதுகுற்றமோவென்ன வருளிச்செய்கிறார் (விழுக்காட்டில்த்யாதி) அவனதான வஸ்துவைத் தன்னதென்று அபிமானித்தது ஸ்வரூபவிருத்தமானாப்போலே,அவன்வஸ்துவை யவனுக்குக்கொடுத்தேனென்றிருக்கையும் ஸ்வரூபத்துக்குச்சேராதென்றபடி.ஆகையிறேஎன்றது - ஆத்மாபஹாரதுல்யமாகையாலேயிறே யென்றபடி. துல்யமன்றுகில் அதுவுமொருஸாதநமாகக்கூடு [கூடு]கையாலே, வைஷம்ய நைர்க்ருண்ய பரிஹாரார்த்தமாக அபேக்ஷித்திருக்கு மீச்வரனுக்கு * ஏகசப்தத்திற் சொல்லுகிற ஸாதநாந்தரநைரபேக்ஷ்யம் ஜீவியாதென்று கருத்து. வணங்கினாலருளவேணுமென்கிற நிர்ப்பந்தமென்னென்ன வருளிச்செய்கிறார் (ஆச்ரயணத்துக்கித்யாதி.)

‡ "வேள்வியிலிரந்துசென்று" என்றுகேரேயிருந்தால்,வ்யாக்யானத்துக்குச்சேரும்.

கூப்பிடாநிற்கும். இவற்றினுடைய தயநீயதசையைக் கண்டு இன்னதென்று பாசுரமிட்டுச் சொல்லமாட்டாதே, கடக்கநின்று, "தர்மஹாநிகிடிகோள்!" என்பாரைப்போலே அவ்யக்தமாகக் கூப்பிடாநிற்கும். [படப்பை] இதாய்த்து ஊரில் † கொடித் தோட்டங்களிரு[ரு]க்கும்படி.

இத்தால் – அவனுடைய ஸர்வாதிகத்வத்தையும் அவனையநுபவிப்பதாகச் சொல்லுகிற தங்களுடைய ஸம்ஸாரித்வத்தையு மநுஸந்தித்து, "நாம்சென்றுகிட்டுகையாவதென்!" என்று (க) துணுக்குத்துணுக்கென்னாநிற்பர்கள் ப்ரஹ்மாதிகள்; இவ்வண்டுகளானவை, புஷ்பஸாமாந்யத்தைக்கொண்டு மதுபாநார்த்தமாகமேல்விழாநிற்பது, அக்நியென்று கிட்டமாட்டாதே யிருய்த்து வெருவுவதாகாநிற்குமாய்த்து. அன்றிக்கே, ஆச்ரயிப்பார்க்கு "அதஸோ உபயங்கதோபவதி" "அதஸோ உபயங்கதோபவதி" என்னுமிதுவுமுண்டாய், போக்யதையால் வந்த பயம் என்றுமுண்டாயிருக்கு மென்னுதல். ஆச்ரயணீயவஸ்து ஸுலபமாகையாலே ஆச்ரயிப்பார்க்குத் தந்தாமுடைய அநுபவவிநாச்யமான பாபங்களை யநுஸந்தித்து பயப்படவும் வேண்டா; அசோகபுஷ்பத்தை அக்நியாகக்கொண்டு வண்டுகளஞ்சுகிற அச்சம் நித்யமாய்ச் செல்லாநிற்கும். ... ... ... ... ... ... ௬.

வ்யா.—பத்தாம்பாட்டு.—(கரியவித்யாதி) (உ) கழுத்தேகட்டளையாக நீரைப்பருகுகையாலே கறுத்தநிறத்தையுடைத்தான மஹாமேகங்களுடைய ஸமூஹங்களானவை, முகந்த நீர்க்கனத்தாலே பேர்ந்து போகமாட்டாதே கிடந்தவிடத்தே கிடந்து முழங்க. நீர் குறையும்படி வர்ஷித்து வெளுத்ததுமன்றிக்கே கறுத்து, அதுதான்

"ஒங்குபிண்டியின்செம்மலரேறி வண்டுழிதரமாவேறித் தீங்குயில்மிழற்றும்" என்ற ஸமபிவ்யாஹாரத்தாலேபலித்த தாத்பர்யத்தை யருளிச்செய்கிறார் (இவற்றினுடைய வித்யாதி.)

ப்ராஸங்கிகமான பாட்டுக்கு வ்யாக்யாநம் செய்தருளி, இப்பாட்டிலே "உறுதுயர்" என்றதுக்கு - அயோக்யதாநுஸந்தாநமாக தாத்பர்யம் சொன்ன பக்ஷத்துக்கநுகுணமாக, இப்பாட்டுக்கு ஹார்த்தபாவ மருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதிவாக்யத்வயத்தாலே.) ப்ரஹ்மாதிகளென்றது-"பிரமனோடு" என்று கீழ்ப்பாட்டில் ப்ரஸ்துதரை; இப்பாட்டில் "ஓதியாயிரநாமங்களுணர்ந்தவர்" என்றது என்று திருவுள்ளம். "உறுதுயர்" என்றது - பாபங்களான பக்ஷத்திலே, பாட்டுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (அன்றிக்கே யித்யாதி.) போக்யதையால் வந்தபயமென்றது-அநுபவிக்க மாட்டாமையால் வந்த பயமென்றபடி. பாட்டு[கூறு]க்கெல்லாம் தொகுத்தபாவத்தை யருளிச்செய்து தலைக்கட்டுகிறார் (ஆச்ரயணீயவஸ்த்வித்யாதி) அவனைக்கண்டால் தங்கள்வினைக்கஞ்சவேண்டா, அங்குத்தை ஸுமகல்ஸூக்களுடைய ராகவிசேஷத்தைக்கண்டால் தங்களுக்கதில்லாமையாலே சென்றணுகவஞ்சும்படியாயிருக்குமென்றதாய்த்து. ... ... ௬.

பத்தாம்பாட்டு.—(கரியவித்யாதி.) [சமு

வ்யாவர்த்தங்களைக்காட்டாநின்றுகொண்டு விவரிக்கிறார் (நீர்குறையும்படியித்யாதி.)

† "ஊவில்" என்றுசிலஸ்ரீகோசங்கள். (க) துணுக்குத்துணுக்கென்கை-நடுக்குகை; - பயப்படுகை: கலங்குகையென்றபடி. (உ) கழுத்தேகட்டளையாக-கழுத்தளவாக. பூர்ணமாகவென்றபடி.

மூ.—கரியமாமுகிற்படலங்கள் கிடந்தவைமுழங்கிடக்,களிறென்று-
பெரியமாசுணம் வரையெனப் பெயர்தரு பிரிதியெம்பெருமானை,
வரிகொள்வண்டறை பைம்பொழில் மங்கையர் கலியனதொலிமாலை-
அரியவின்னிசைபாடு நல்லடியவர்க் கருவினை யடையாவே....ய. [ரு

ப - ரை.— கரிய - கறுத்தநிறத்தையுடைய, மாமுகில் - மஹாமேகங்களின், படலங்கள்அவை - கூட்டங்களானவை,கிடந்து - இருந்தவிடத்திலேயிருந்து, முழங்கிட - த்வநிக்க, அந்தத்வநியைக்கேட்டு, பெரிய - பெருத்த, மாசுணம் - மலைப் பாம்புகள், களிறுஎன்று - தங்களுக்கு இரையானயானைகள் வருகிறனஎன்றுநினைத்து, வரையென - மலைபோலே, பெயர்தரு - அஞ்சிநகரும்படியான, பிரிதி -[ம் திருப்பிரிதியில் நித்யவாஸம்பண்ணுகிற, எம்பெருமானை - ஸர்வேச்வரன்விஷய மாக; வரிகொள் - வரியையுடைய, வண்டு - வண்டுகளானவை, அறை - த்வநியா நின்றுள்ள, பை - பரந்த, பொழில் - சோலையையுடைத்தான, மங்கையர் - திரு மங்கையிலுள்ளார்க்கு நியாமகரான, கலியனது - ஆழ்வாருடைய, ஒலி - ஒலியு டைத்தாம்படி அருளிச்செய்த,மாலை-தொடையாய்,அரிய-ஒருவர்க்குமறியவொ[ர் ணாதபெருமையையும், இன் - சுவைப்பாட்டையுமுடைத்தாய், இசை - இசை யையுமுடையபாட்டுக்களை, பாடும் - அப்யஸிக்கிறவர்களாய், நல் - ஸர்வேச்வரனு க்கு அந்தரங்கமான, அடியவர்க்கு - அடிமைசெய்யுமவர்களை, அருவினை - மஹா பாபங்கள், அடையா - "சும்மெனாதேகைவிட்டோடி" என்கிறபடியேவிட்டோடிப் போம். ... ... ... ... ... ... (ய)

மேகசகலமுமாயிருக்கையன்றிக்கே மாமுகிலாய், அவைதான் ஒன்றி ரண்டன்றிக்கே ஸமூஹங்களுமானவை, முகந்த நீர்க்கனத்தாலே கால் வாங்கிப்போகமாட்டாதே வாயுவாலும் ப்ரேரிக்க வொண்ணாதபடி கனத்து அவைகிடந்தவிடத்தேகிடந்து,கர்ப்பகேதத்தாலே முக்குவா ரைப்போலே முழங்குமாய்த்து. [உரு

(களிறென்று) நிறத்தினுடையவும் அதிருகிற த்வநியினு டையவும் ஸர்வதாஸாம்யத்தாலே யானையென்று. (பெரியமாசுணம்) பெரியவடிவையுடைத்தாயிருக்கிற மலைபபாம்புகளானவை. ஆனை யை விழுங்கும்படியாய்த்துப் பெருமையிருப்பது. (வரையெனப்பெ யர்தரு) அம்மலைப்பாம்புகளானவைஅவற்றுக்கஞ்சி மலைபோலேபேர் ந்துபோய்,புற்றிலேபுகாநிற்குமென்று."காருடையமின்னென்றபுற்ற டையும்" என்றும்"பரந்ததலையுடையநாகம்வாரணத்தையஞ்சியொளிக் கும்" என்கிற ப்ரஸித்தியாலும,இப்படி "புற்றிலேயடையும்" என்றரு ளிச்செய்வர்ஜீயர். "இதுவோஇதுக்கருளிசெய்யும்படி ?" என்று பிள்ளைகேட்டருள;"நீரிப்படிகேட்கும்போதுஒன்றைநினைத்தல்லதுகே ளீர்,அத்தைச்சொல்லும்" என்ன;"'பெயருகையாகிறதுதான்-போக்கு வரத்துஇரண்டுக்கும்ஸாதாரணமாயாய்த்திருப்பது,இனித்தான்மலைக் குச் சிறப்புச்சொல்லுமவர்கள் மலைப்பாம்புகள் ஆனையைவிழுங்கும்

(புகாநிற்குமென்று) என்றவநந்தரம், கூட்டுவது என்று சேஷம். சிறப்பு - உத்கர்ஷம்.

என்னக்கடவர்கள், ஆகையாலே, கரியமாமுகிற்படலங்கள் கிடந்து முழங்குகிறவற்றைப் பெரிய மாசுணமானது ஆனையாக புத்திபண்ணி ஆமிஷார்த்தமாக மலை பேர்ந்தாப்போலே கால்வாங்கிவந்துகிட்டா நிற்குமாய்த்து என்றுமே' என்ன; 'அதுவேயிறே பொருள்!' என்று போரக்கொண்டாடியருளினார்'' என்றருளிச்செய்வர். ஆகையிறே பெரியமாசுணமென்றது;-ஆனையைவிழுங்கும்படியாய்த்து இதினுடைய பெருமையிருப்பது.

(வரிகொளித்யாதி) வரியையுடைத்தாய்-தர்சநீயமாயிருந்துள்ள வண்டுகளானவை மதுபாநம்பண்ணிக்களித்து த்வநியாநின்றுள்ள[௰ பரந்தபொழிலையுடைத்தான திருமங்கையிலுள்ளார்க்கு நியாமகரான ஆழ்வார் ஒலியுடைத்தாம்படி சொன்ன தொடையாய்த்து. (அரிய இன்னிசை) "திருமங்கையாழ்வார், தம்திருவாயாலே 'அரியவின்னிசை' என்பதே!'' என்றருளிச்செய்வர். ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையர், சிலரோடேபிணங்கி, கையில் தாளத்தைப்பொகட்டு, "*வாலிமாவலத்தை யென்றோடே யிசைசொல்லிப்போ'' என்றாராம். வாது பாட்டாகப்பாடுமது என்று ப்ரஸித்தமிறே. இயலிலுமிழியலாம், பொருளிலுமிழியலாம்; இசையிலொருவர்க்கு மிழியவொண்ணாது. * அருமையால் நினைக்கிறது – பெருமையை; * இனிமையால் நினைக்கிறது – சுவைப்பாட்டை. (அரிய) அருமை பெருமைகளையும் [உ௰ சுவைப்பாட்டையு முடைத்தாயிருக்கை. (நல்லடியவர்க்கு) இத்தைப்பாடுமவர்களாய்த்து ஸர்வேச்வரனுக்கு அந்தரங்கராகிறார். (அருவினை) அவர்களை, பாபங்கள் வந்துகிட்டாது. ஸர்ப்பங்களானவை மேகங்களை ஆமிஷமாக புத்திபண்ணி மேல்விழுமாப்போலே, இத்தை அப்யஸித்தவர்கள் பக்கலிலே ஸர்வேச்வரன் போக்யதாபுத்தி [உ௫ பண்ணி அவர்களுடைய விரோதிகளைப் போக்கி விஷயீகரிக்க அவனாலே விஷயீக்ர்தராகப் பெறுவர்கள். இப்பாசுரத்தைச் சொன்னவர்களை அச்சொல்வழியே ஸர்வேச்வரன் அவர்களையே யெல்லா போக்யமுமாக வந்துகிட்டும்; நடுவுபாபங்களுக்கு ஒதுங்க நிழலில்லாமையாலே யோடிப்போம். ... ... ... ... ௰.

திருமங்கையாழ்வார்திருவடிகளேசரணம்.

பெரியவாச்சான்பிள்ளைதிருவடிகளேசரணம்.

அடிவரவு.—வாலி கலங்க துடி மறம் கரைசெய் பணம் கார இரவு ஓதி கரிய முற்ற.

*இசையினுடைய அருமைக்கு ஒரு ஸம்வாதமருளிச்செய்கிறார் (ஆழ்வாரித் [௩௫ யாதி.) இயல் - சப்தம். இசை - ராகம். அர்த்தாந்தரம் (அருமையாலித்யாதி.) பெருமை - அதிசயம். சுவைப்பாட்டை - ரஸ்யதையை. இரண்டர்த்தத்தையும் தந்த்ரேண கூட்டி சப்தார்த்தமருளிச்செய்கிறார் (அருமையித்யாதி.) பாட்டுக் [illegible] தொகுத்தபாவம் (ஸர்ப்பங்களித்யாதி.) ஸர்வேச்வரன்போக்குவானுனால், "வினையடையாவே" என்று இவற்றுக்கு கர்த்ருத்வம் சொல்லுகைக்கு [௪௰ ப்ரயோஜநமென்னென்ன வருளிச்செய்கிறார் (இப்பாசுரத்தையித்யாதி.) ௰.

ஜீயர்திருவடிகளேசரணம்.

வ்யா.—தந்திருவுள்ளத்தைக்குறித்து "திருப்பிரிதிமை ஆச்ரயி"
என்று உபதேசித்தார் ; அது தம் த்வரைக் கீடாக த்வரித்ததில்லை;
கெடுவாய!நாமிருக்கிற விருப்பில்பொல்லாங்கு கண்டாயே, கடுக[இ
ஒருக்ஷணம் முற்பட்டதுடலாக ஆச்ரயிக்கப் பாரா யென்கிறார்.
கீழே திருமந்த்ரத்தை அநுஸந்தித்தார்; அநந்தரம், மந்த்ரப்ரதிபா
த்யமானஅர்த்தத்தை அநுஸந்தித்தார்; மந்த்ரத்ரஷ்டாவானவனிரு
ந்த தேசத்தை ஆச்ரயிப்போ மென்கிறார். திருமந்த்ரந்தன்னை
அநுஸந்திப்பாரக்கு ப்ரதிபாத்யமான வஸ்துவோபாதி, ரிஷி [ம
சந்தோ தேவதைக ளென்ன, பீஜசக்திக ளென்ன, சோ
ஷண தாஹநாதிக ளென்ன, இவை யெல்லாம் அநுஸந்தேய
மாகக்கடவது. அது வேண்டுவானென்னென்னில் ; "நமோநாராய
ணாயவென்று - பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர்" என்று – இம்
மந்த்ராநுஸந்தாநம்பண்ணுவார் நித்யஸூரிகளாய்,அவர்களுடை[மரு
ய யாத்ரையாய்த்துஇது ; அத்தையிறே குணத்ரயாத்மிகையான ப்ர
க்ர்திவச்யனானவிவன் அநுஸந்திக்கபபாரக்கிறது ; ஆகையாலே, ஒரு
பாவனையாலே அவர்களோபாதியாகத் தன்னுடைய சரீரத்தையு
ம் பாவித்து அநுஸந்திக்கைக்காக சோஷணாதிகள் வேண்டுகிறது.
இனி,ரிஷிசந்தோதேவதைகளை யநுஸந்திக்கிறது–இம்மந்த்ரத்தி [உம
லுண்டான ஆதராதிசயத்தாலே, பீஜசக்திகளை யநுஸந்திக்கிறது –
மோக்ஷப்ரதமென் றவ்வழியாலே யிவனுக்கிதில் விச்வாஸம் பிறக்கைக்
காக. கீழே "பிரிதிசென்றடை நெஞ்சே" என்றார் ; "க்ரமத்திலே
செய்கிறோம்" என்றுறியிருந்தது நெஞ்சு ; "கெடுவாய் ! ப்ரக்ர்திஸம்
ஸ்ர்ஷ்டராயிருப்பார்க்கு அப்படி'செய்கிறோம்' என்றுறியிருக்கப்போ
மோ, அப்ராக்ர்த சரீரபரிக்ரஹம் பண்ணினார்க்கன்றே 'பின்னைச்செ
ய்கிறோம்' என்றுறியிருக்கலாவது" என்று - இங்ஙனே ப்ரக்ர்தியினு
டைய அஸ்திரதையையும், விஷயங்களினுடைய தண்ணிமையையும்,
பற்றப்படுகிற விஷயத்தினுடைய வைலக்ஷண்யத்தையும் சொல்லி,

---

அ.—முற்றமூத்துப்ரவேசம்.—கீழ்த்திருமொழியோடேயொருஸங்கதியரு [ளம
ளிச்செய்து, " வதரிவணங்குதுமே" என்றத்தைக்கடாக்ஷித்து கீழிரண்டுதிருமொ
ழிகளோடு ஸங்கதியருளிச்செய்கிறார (கீழே யித்யாதி.) திருமந்த்ரம் ப்ரஸ்துத
மானால் மந்த்ரத்ரஷ்டாவை யநுஸந்திக்க வேணுமோவென்ன வருளிச்செய்கி
றார் ( திருமந்த்ரந்தன்னை யென்றுதுடங்கி, விச்வாஸம் பிறக்கைக்காக என்னு
மளவும்;)உபாஸகனுக்குத்திருமந்த்ராநுஸந்தாநம்பண்ணும்போது ரிஷிசந்தோ[வுரு
தேவதைகள் வேண்டுமாப்போலே, ஆழ்வாருக்கு மந்த்ரத்தினுடைய ஆதிதே
வதையாலே மந்த்ரப்ரதனிருந்த தேச முத்தேச்யமென்று கண்டுகொள்ளும்
என்றருளிச்செய்வர். மேற்சொன்ன மூன்றின ஸங்கதியை, பாட்டுள் ஸாதிக்க
கதபூர்வகம் விஸ்தரிக்கிறார் (கீழே யித்யாதி.)

இருந்தபடி யிதுவானபின்பு ஒரு கை கால் முறியவாகிலும் ஒரு க்ஷணம் முற்பட்டதுடலாக ஆச்ரயிக்கப் பாராய்! என்று திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறார்.

(முற்றமூத்து) ஹிமவானில் திருப்பிரிதியை யாச்ரயி என்று [௫ திருவுள்ளத்தைக்குறித்து உபதேசித்தார்; அது தம் த்வரைக்கு அநுரூபமாக மேல்விழாதே திமிர்த்திருந்தது; "மநஏவமநுஷ்யாணாம்" "மந ஏவமநுஷ்யாணாம்" என்று-பந்தமோக்ஷங்க ளிரண்டுக்கும் ஹேது மநஸ்ஸிறே, இது பகவத்விஷயத்தில் மேல்விழுகிறதில்லை, இனி பண்டையதுவேயிறே நமக்குநிலை, இனி அவன்றான் விரோதியான [௰ இவ்வுடம்போடே தன்னை யாச்ரயித்துப் பெறலாம்படிக் கீடாக இங்கேவந்து ஸந்நிஹிதனானான், இனி இந்தவிரோதியான ப்ரக்ருதிதான் தேஹமாயும் இந்த்ரியங்களாயும் சப்தாதி விஷயங்களாயுமிறே விரோதியாவது, அநுபாவ்ய விஷயங்களில் ப்ரதாநபோக்யங்களாவன-ஸ்த்ரீகளிறே,அவர்கள்தாங்களாகிறார்-தங்களைக்கொ[௰௫ ண்டு அருமைப்படுத்தி இவன் ஸர்வஸ்வத்தையு மபஹரிக்குமத்தனை போக்கி இவனுக்குத் தங்களுடைய வுடம்புகொடுக்கக் கடவர்களன்றிக்கே, கொடுத்தார்க ளாகில் அதுதன்னில் அநுபாவ்யமொன்றில்லாதபடி அல்பமாய் அஸ்திரமாய் அநர்த்தாவஹமாய் துராராதமாயிறே யிருப்பது: இனி, தேஹமாகிறதுதான்-ஏகரூபமாயிரு[௨௰ ப்பதொன்றல்லாமையாலே, அவைதன்னுடைய அநுபவ யோக்யமுள்ளது சிறிதுநாளாய், பின்பு அதுவுங்கூட இல்லாதபடியிறே யிருப்பது; இந்த்ரியங்களாகிறவிவை, "ஆநந்தயதி" "ஆநந்தயாதி" என்கிறபடியே - இவனுக்கு நிரதிசயாநந்தத்தைப் பண்ணிக்கொடுக்கும்; பகவத்விஷயத்துக் குடலாகையன்றிக்கே ஸந்நிஹிதமான[௨௫ க்ஷுத்ரவிஷயங்களிலே மூட்டி து:கத்தை விளைக்கக்கடவதாய், பின்பு தானுண்டாயிருக்கச்செய்தேயும் இக்காரியந்தன்னையும் செய்யமாட்டாதபடியாயிறே யிருப்பது; இப்படி யிருக்கையாலே, இவ்வசித்தத்தனைக்கே பாங்காயிருக்கிற நாளிலே அவனை யாச்ரயித்துத் தன்னைக்கழித்துக்கொள்கைக்குஉடலாயிருப்பதுமோராகாரமுண்டு; அவன்றானும் இது பாங்கானபோதே தன்னை யாச்ரயிக்கலாம்படி யிங்கே ஸ்ரீபதரியிலே வந்து ஸந்நிஹிதனானான், ஆனபின்பு இது அநுகூலமானபோதே அவனை யாச்ரயித்து இத்தைக்கழிப்பித்துக் கொள்வோமென்றுபார்த்து, அதிலே ஒருப்படுகிறார்.

---

(ஒருகைகால் முறியவாகிலும்) என்றதக்கு-முறியும்படியாகிலும் ஓடி ஆச்ரயி[௩௫ யென்ற சீக்ரத்திலே தாத்பர்யமாதல், கேவல கரணசைதில்யம் பிறப்பதற்கு முன்னே யென்ற தாத்பர்யமாதல் கொள்வது.

இத்திருமொழியிலே "பிரிதிசென்றடைநெஞ்சே" என்றவது அதிதூரதேசமென்றஞ்சித் திமிர்த்திருக்க; ஸந்நிஹிதமாக வதரியிலே வந்தான், அங்கே நமக ஆச்ரயி என்று ஸைந்த்யந்தரம்சொல்லுகைக்குப்ரதிக்ரஹணம்பண்ணுகிறார் [௪௰ (முற்றமூத்தென்று.)

மூ.—முற்றமூத்துக் கோல் துணையா முன்னடிநோக்கி வளைந்து -
இற்ற கால்போல் தள்ளி மெள்ள விருந்தங்கிளையாமுன் ;
பெற்ற தாய்போல் வந்த பேய்ச்சி பெருமுலையூ டுயிரை -
வற்றவாங்கியுண்ட வாயான் வதரி வணங்குதுமே. ... க

ப-ரை.—முற்றமூத்து - ஒன்றும் செய்யமாட்டாதபடி மிகவும் கிழத்தனத்தை யடைந்து, கோல் - ஊன்றுகோலை, துணையா - ஸஹாயமாகக் கொண்டு, முன்அடி - முன்னே இடவேண்டும் அடியை, வளைந்து - தலைகவிழ்ந்து, நோக்கி - பார்த்து, இற்றகால்போல் - முறிந்த கால்போலே, தள்ளி - தடுமாறி, அங்கு - ஓரிடத்தில், மெள்ள - மிருதுவாக, இருந்து - உட்கார்ந்து, அதுவும் செய்யப் [௰ பொறுமையாலே, இளையாமுன் - இளைப்புவந்து மேலிடுவதற்குமுன்னே ; பெற்ற தாய்போல் வந்த - பெற்ற தாயின் வடிவுகொண்டு வந்த, பேய்ச்சி - பூதனை யுடைய, பெருமுலையூடு - பெரிய முலைவழியே, உயிரை - அவள்ப்ராணனை, வற்ற - பாலோடேகூட வற்றும்படியாக, வாங்கி - உறிஞ்சி, உண்ட - அமுதுசெய்த, வாயான் - திருப்பவளத்தையுடைய ஸர்வேச்வரனெழுந்தருளியிருக்கிற, வதரி - ஸ்ரீபதரியை, வணங்குதும் - வணங்குவோம் என்று தந்திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்கிறார்.

பட்டரை ஒரு வ்யாபாரி, “ ‘இது அல்பம், அஸ்திரம்’ என்று இத்தை த்யாஜ்யமாக நினைத்திராநின்றார்கள் சிலர், ‘காண்கிற வுடம்புக்கவ்வருகில்லை’ என்று இதுதன்னிலே போக்யதாபுத்தி பண்ணியிராநின்றார்கள் சிலர், ஒன்றைப்பற்றி யிவையிரண்டும் [உ௰ நடக்கிறபடி யெங்ஙனே ?” என்றுகேட்க ; “பாக்யாதிகர்க்கு இதி னுடைய தோஷதர்சநத்தைக் கொண்டு கை விடுகைக்கு முடலாய், பாக்ய ஹீநர்க்கு இதிலே போக்யதாபுத்திபண்ணி அநர்த்தப்படுகைக்கு முடலாம்படி அவ்வவருடைய புண்யபாபங்களை யிட்டு அதுக் கநுரூபமாகக்காணுமித்தைப்பண்ணிற்று” என்றருளிச்செய்தார்.[உரு [𑌬𑌾𑌲𑍍𑌯𑍇 𑌕𑍍𑌰𑍀𑌡𑌨𑌕𑌾𑌸𑌕𑍍𑌤𑌾𑌃 - பால்யேக்ரீடநகாஸக்தா:] பால்யத்தில் லீலோப கரணங்கொண்டு போதுபோக்கித் திரியும், அல்பம் (க) வெளிச்செறிப்புப் பிறந்தவாறே விஷயங்கள் வந்து கைக்கொள்ளும், பின்னை அவைதன்னையு மநுபவிக்கவொண்ணாதபடி மூப்பு வரும், ஆனபின்பு இது பாங்கான நாளிலே ஒருக்ஷணம் முற்பட்டதுடலாக [௩௰ பகவத்ஸமாச்ரயணம் பண்ணவடுக்கும் என்னாநின்றதிறே. ... *

முதற்பாட்டு.— ( முற்றமூத்து ) பரிணாமி த்ரவ்யத்துக்கு பரிணாமபரம்பரைகள் வரத் தவிராதிறே ; இனி ஒரு அவஸ்தைக்கு அவகாச மில்லாதபடி கழியமூத்து.

சரீரந்தனக்கே ஆநுகூல்யமும் ப்ராதிகூல்யமும் கூடுமோவென்ன; கூடுமென்னுமதக்கு ஸம்வாதமருளிச்செய்கிறார் (பட்டரையித்யாதி.) ஒருதேஹத்திலிரண்டு ஆகாரம்கூடுமென்னுமதக்கு ப்ரமாணமும் காட்டுகிறார் (பால்யேத்யாதி.) ... *
முதற்பாட்டு.—(முற்றவித்யாதி.)

(க) வெளிச்செறிப்பு - ஜ்ஞாநவைசத்யம்.

(கோல்துணையா) முன்பு தன்னை யெல்லார்க்கும் அபாச்ரயமாகவிறே நினைத்திருப்பது, ஒருபரமசேதநனைப்பற்றுகிறானுமன்றே. ஜீயர், ஸங்யஹித்தருளுகிறவன்று, "தண்டதாரணம் பண்ணுகிறமந்த்ரம் - 'நீயென்க்குமித்ரமாய்எல்லாரக்ஷணங்களும் பண்ணவேணும்' என்றாய்த்திருப்பது, அத்தைக்கேட்டு, 'ஒருஸர்வஜ்ஞன் ஸர்வசக்தி பரமசேதநனை யாசார்யன் முன்னாக இவ்வார்த்தை சொல்லிவைத்து, இத்தையும் இவ்வார்த்தை சொல்லும்படியான இவ்வாச்ரமப்ராப்திதானென்!' என்றிருந்தேன் காண்" என்றருளிச்செய்வர். (முன்னடிநோக்கி வளைந்து) முன்பு இறுமாப்பாலே தரைபாராதேயிறே திரிவது. [௰
சோழர்கள், வெற்றிலை சிலரிடவன்றிக்கே தாங்களே யெடுத்திறே தின்பது, "தலைகவிழ்ந்துவாங்கில் சிலரைவணங்கிற்று" என்னும் துர்மாநத்தாலே. "[illegible]" "த்விதாபஜ்யேயம்" என்பது (க) இயற்றியுண்டான நாளிறே ‡; செயலற்றால் செய்யலாவதில்லையிறே. (இற்றகால்போல்தள்ளி) முறிந்தகால்போலே தடுமாறி. (மெள்ள [௰௧
இருந்து) ஸ்திதியிலுண்டான அருமையாலே இருக்கவொருப்படும்; ஒருமஹாபாரதத்துக்கு வேண்டும் (உ) நேர்த்தி போருமாய்த்து ஒருக்காலிருந்தானாய்த் தலைக்கட்ட. (அங்கிளையாமுன்) இருந்த ஆயாஸந்தான் பொறுமை யிளைக்குமாய்த்து; அக்க்லேசம் வருவதுக்கு முன்னே. [௰௨

(பெற்றதாயித்யாதி) தாய்வடிவுகொண்ட பூதனையுடைய பெரியமுலைவழியே ப்ராணனும்பாலோடொக்கவற்றும்படியாகபுஜிக்குமவனுடைய. அன்றிக்கே, பேய் வற்றும்படி முலையூடு உயிரையுண்ட வாயானென்னவுமாம். பால் நேரானவாறே ப்ராணனும் நேராய்த்து.

இத்தால்—அநுகூலம்போலே தோற்றி ப்ரதிகூலமான ப்ரக்ருதியைக்கழித்துக்கொள்ளப் பார்க்கில், தாய்வடிவைக்கொண்டு அநுகூலரைப்போலே வந்து ப்ரதிகூலமான பூதனையை நிரஸித்தவன் திருவடிகளைப் பற்றவடுக்குமென்கிறார். ... ... க.

---

மிகவும் மூத்தவனுக்குக் கோல் பிடிக்கை ஸ்வதஸ்ஸித்தமா யிருக்கவு மருளிச்செய்ததுக்குக்கருத்து-துணையாகாதத்தைத் துணையாக்கினானென்று தோற்ற [௯
கைக்காக வென்று பலித்த தாத்பர்யங்களை யருளிச்செய்கிறார் (முன்பித்யாதி.) பரமசேதநன் தவிர வேறொன்று ரக்ஷகமன்றென்னுமதுக்கு ஸம்வாதம் (ஜீயரித்யாதி.) மந்த்ரம் - "[illegible]" "ஸகாமேகோபாய" என்றது. ஸ்திதியிலென்றது - நிற்கையிலென்றபடி.

பேய் வற்றும்படி யென்றது-பேயின் சரீரம் வற்றும்படி யென்றபடி. [௯௫
முலையூடு பாலையுண்ணக்கூடு மித்தனைபோக்கி, ப்ராணனையுண்ணக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (பாலித்யாதி) பால் நேர்பட்டவளவிலே யிவனுடைய அகடிதகடநாஸாமர்த்யத்தாலே ப்ராணனும் நேர்பட்டது, ஆகையாலே உண்ணக் கூடுமென்ற கருத்து. ... ... ... ... ... ... க.

---

(க) இயற்றி - சக்தி. ‡ "நாளிலிறே" என்றானால் ஸ்வரஸம். (உ) நேர்த்தி - நேர்தல்: ப்ரயாஸமென்றபடி.

மூ.—முதுகுபற்றிக் கைத்தலத்தால், முன்னொருகோலூன்றி,
விதிர்விதிர்த்துக் கண்சுழன்று மேற்கிளைக்கொண்டிருமி,
இதுவென்னப்பர்மூத்தவாறென் றிளையவரேசாமுன்,
மதுவுண் வண்டு பண்கள் பாடும் வதரி வணங்குதுமே. உ.

ப-ரை.—முதுகு - முதுகை, கைத்தலத்தால் - கையாலே, பற்றி - பிடித்தும், முன் - முன்னே, ஒருகோல் - ஒருகொம்பை, ஊன்றி - ஊன்றிக்கொண்டும், விதிர்விதிர்த்து - உடம்பெல்லாம் நடுங்கியும், கண்சுழன்று - கண்கள் சுழலவிட்டும், மேல் கிளைக்கொண்டு - மேலான த்வநியோடே, இருமி - இருமல் மேலிட்டும், இப்படியிருப்பதைக்கண்டு, இளையவர் - சிறுவர்கள், "அப்பர் ! - பெரிய [வ]வரே!, மூத்தஆறு - கிழத்தனத்தை யடைந்தபடி, இது என்! - இவ்வளவோ!," என்று - என்றுசொல்லி, ஏசாமுன் - ஏசுவதற்குமுன்னே ; மது - பூவில்தேனை, உண் - பாநம்பண்ணுகின்றுள்ள, வண்டு - வண்டுகள், பண்கள் பாடும் - எல்லாப் பண்களையும்பாடுகிற, வதரி-ஸ்ரீபதரியை, வணங்குதும்-வணங்குவோம்என்கிறார். உ.

வ்யா.— இரண்டாம்பாட்டு.—(முதுகுபற்றிக்கைத்தலத்தால்) [மு]தௌர்பல்யத்தாலே முதுகு நோமே, ஒரு கையாலே அத்தைப் பற்றும். (முன்னொருகோலூன்றி) முன்பு விழாமைக்காக ஒருகோலை ஊன்றுமாய்த்து. இரண்டருகும் கப்புக்கால் கொடுக்கவேண்டும்படி யிறே யிருப்பது. ( விதிர்விதிர்த்து ) சரீர மெங்குமொக்க நடுங்கு மாய்த்து. (கண்சுழன்று) ஓரோ அவயவங்களுக்குப் பிறக்கும் [உ]விகாரங்கள் சொல்லுகிறது. (மேற்கிளை) மேற்கென்று – மேலாய், மேலிளைப்புக் கொண்டென்னுதல் ; அன்றிக்கே, மேலான கிளையை- உச்சமான த்வநியைக் கொண்டிருமி. (இதுவென்னப்பர் மூத்தவாறு!) இதுதான் ! எல்லாரும் மூக்கக்கடவதிறே, இத்தனை கழியமூக்க லாகாது என்பர்களாய்த்து. அப்பர் என்று - ப்ரக்ருதி, அதின்மேலே[உடு] மூப்பு. (இளையவர்) அவர்களுக்கும் அது வ்யவஸ்திதமாய் தங்களுக் கும் இவை வ்யவஸ்திதமானுப்போலே யிருக்க, ஏசாநிற்பர்கள்.

(மதுவுணித்யாதி) ஒருபண்ணைப்பாடுகையன்றிக்கே, வண்டுகள் மதுபாநமத்தமாய் எல்லாப்பண்களையும் பாடாநிற்கும். (வதரி) ஆக, இக்க்லேசத்தைத் தவிர்க்குமளவே யன்றிக்கே, நிரதிசயாநந்தத்தைப் பெற்றுக் களிக்கலாம்படியான தேசமாய்த்து. ... உ.

அ.—இரண்டாம்பாட்டு.—(முதுகித்யாதி.) முற்றமூத்த ப்ரகாரவிசேஷத்தை விவரிக்கிறாரென்று ஸங்கதி ஸ்பஷ்டமென்று வ்யாக்யாநம் செய்தருளுகிறார் (தௌர்பல்யேத்யாதி.) * கண்சுழலுகை - உபலக்ஷணமாய், ஸர்வாவயவவிகாரங்களும் சொல்லுகிறதென்கிறார்(ஓரோவித்யாதி.)மேலிளைப்புக்கொண்டென்றது- [கூடு] மேல் ச்வாஸம் பிறக்கும்படி க்லேசம் கொண்டென்றபடி. " அப்பர்மூத்தவாறு. என்" என்னலாயிருக்க, "இது" என்றத்தால் பலித்தவர்த்தம் (இதுதானித்யாதி.) கழியமூக்கை - கேவலம் சிதிலாவயவனாகை. ப்ரக்ருதி யென்றது - ஸ்வபாவத: மூத்தமையைச்சொல்லுகிறதென்றபடி. மூப்பென்றது - மூப்பையும் சொல்லுகிறதென்றபடி.இத்தால்-கழியமூத்தமையைச்சொல்லிற்றாய்த்து.இவையென்றது-[சும்] இளமையும், ஏசுகையுமென்றபடி.

வண்டுகளைப்போலே நமக்கு மவனை வணங்கினால் ஆநந்திக்கலாமென்று முட்கருத்தை யருளிச்செய்கிறார் (ஆகவித்யாதி.) ... ... உ.

மூ.—உறிகள்போல் மெய்ந்நரம்பெழுந் தூன்தளர்ந்துள்ளமெள்கி,
நெறியைநோக்கிக் கண்சுழன்று நின்றுநடுங்காமுன்;
அறிதியாகில் நெஞ்சம்! அன்பா யாயிரநாமம்சொல்லி,
வெறிகொள் வண்டு பண்கள் பாடும் வதரி வணங்குதுமே. ௩.

---

ப-ரை.—மெய் - சரீரத்திலுள்ள, நரம்பு - நரம்புகளானவை, உறிகள் போல் - உறிபோலே, எழுந்து - மேலேகிளம்பி, அதுக்குறுப்பாக, ஊன்-மாம்ஸம், தளர்ந்து - கட்டுக்குலைந்து, அத்தாலே, உள்ளம் - ஹ்ருதயம், எள்கி - ஈடுபட்டு, தூரப்போவதற்காக, நெறியைநோக்கி - வழியைப்பார்த்து, நெடுகப்பார்த்த ஆயாஸத்தாலே,கண்சுழன்று-கண்ணைஞ்சுழலையிட்டு,நின்று-போகமாட்டாதேநின்று, [௰ நடுங்காமுன் - நடுங்குங்காலம் வருவதற்கு முன்னமே; நெஞ்சம்! - மநஸ்ஸே!, அறிதியாகில் - ஜ்ஞாநமுண்டானால், அன்பாய் - ஸர்வேச்வரன்பக்கல் பக்தியை யுடையையாய், ஆயிரம்நாமம் - அவனுடைய ஆயிரம்திருநாமங்களையும், சொல்லி- வாயாரச்சொல்லி, வெறிகொள்-பரிமளந்தான் ஒருவடிவுகொண்டாப்போலே யிருக்கிற,வண்டு-வண்டுகள், பண்கள்-இசைப்பாட்டுக்களை, பாடும் - பாடாநின்று [௧௫ ள்ள,வதரி - ஸ்ரீபதரியை, வணங்குதும் - வணங்குவோமென்கிறார். ... ௩.

---

வ்யா.—மூன்றாம்பாட்டு.—(உறிகளித்யாதி) மெய்யில் - சரீரத்தில், நரம்புகளானவை; பால்யத்தில் மறைந்து கிடந்தவை, சரீரம் பசையற வுலர்ந்தபடியாலே உறிபோலே மேலே (க) புடைக்குமாய்த்து. அதுக்குறுப்பாக,(ஊன்தளர்ந்து)மாம்ஸம் க்ஷயித்து. [௨௰ (உள்ளமெள்கி) அத்தாலே ஹ்ருதயமீடுபட்டு. (நெறியையித்யாதி) போக்கை நினைக்குமே, தூரப்போகநினைக்கிறுகையாலே வழியைப் பார்க்குமே, நெடுகப்பார்த்த ஆயாஸம்பொறுமை கண்சுழலும், பின்பு அடிபேர்ந்திடமாட்டாதே நின்று நடுங்குமாய்த்து.

(அறிதியாகில்நெஞ்சம்)ஜ்ஞாநப்ரஸரத்வாரமாகில்:அவன் [௨௫ பக்கலிலே அன்பையுடையையாய், சிலவற்றைச்சொல்லி மீளவேண்டாதபடி பாங்கான வளவிலே ஆயிரம் திருநாமங்களையும் சொல்லி. (வெறியித்யாதி) பரிமளத்தை வகுத்தாப்போலே யிருக்கிற வண்டுகள், முக்தர் ஸாமகாநம் பண்ணுமாப்போலே அநுபவத்துக்குப் போக்குவிட்டுப் பாடுகிறனவாய்த்து. ... ... ... ௩.

---

மூன்றாம்பாட்டு.—(உறிகளித்யாதி.) * விதிர் விதிர்த்துக் கண்சுழலுகைக்கு ஹேதுசதநமுகேந * மூப்பை வர்ணிக்கிறுரென்று ஸங்கதியை யுட்கொண்டு, பதவ்யாக்யாநம் செய்தருளுகிறார் (மெய்யிலித்யாதி.) "எழுந்து" என்ற பதவாஸனை (பால்யத்தி லித்யாதி.) புடைக்கும் - (ச) புறம்பும்.

"நெஞ்சம்"என்றது-அண்ணுமைவிளியாய்,அதாவது-ஸமீபத்தேயழைக்கை [௩௫ யாய், ஸம்போதநமென்று கண்டுகொள்வது. பாங்கான வளவிலே யென்றதுவ்ர்த்தனுல் திருநாமங்களை முடியச்சொல்ல மாட்டாதே சிலசொல்லி நடுவே மீளவேண்டாத பால்யத்திலே யென்றபடி. ... ... ... ௩.

---

(க) புடைத்தல் - வீங்குதல்.

மூ.—பீளைசோரக்கண்ணிடுங்கிப் பித்தெழமூத்திருமித்,
தாள்கள்நோவத்தம்மில்முட்டித் தள்ளிநடவாமுன் ;
காளையாகிக் கன்றுமேய்த்துக் குன்றெடுத்தன்றுநின்றான்-
வாளைபாயும் தண்தடம் சூழ் வதரி வணங்குதுமே. ... ௪.

ப-ரை.—கண் - கண்கள், இடுங்கி - நெருங்கி, பீளை - கண்ணழுக்கு, சோர-புறப்படும்படியாகவும், பித்து - பித்தம், எழ - மேலிடும்படியாகவும், மூத்து-கிழத்தனத்தையடைந்து, இருமி - ஆயாஸத்தாலே இருமி, தாள்கள் - கால்கள், தம்மில் முட்டி - தம்மில்ஒன்றோடொன்று தாக்கி, நோவ - நோம்படியாக, தள்ளி-தடுமாறி, நடவாமுன்-நடப்பதற்குமுன்னமே ; காளையாகி-பாலனாய்க் [டு கொண்டு, கன்றுமேய்த்து - கன்றுகளை மேய்த்து, அன்று - இந்த்ரன் கல்வர்ஷத்தை வர்ஷித்த அக்காலத்திலே, குன்று - கோவர்த்தநமலையை, எடுத்து-குடையாகஎடுத்து, நின்றான் - ஏழுநாள் ஒருபடிப்பட தரித்து நின்றவன் எழுந்தருளியிருக்குமிடமாய், வாளை - மத்ஸ்யங்கள், பாயும் - குதித்துப்பாயாநின்றுள்ள, தண் - குளிர்ந்த, தடம்-தடாகங்கள், சூழ் - சூழ்ந்திருப்பதான, வதரி-[யிடு ஸ்ரீபதரியை, வணங்குதும் - வணங்குவோமென்கிறார். ... ... ௪.

வ்யா.—நாலாம்பாட்டு.—(பீளைசோரக் கண்ணிடுங்கி) கண்ணானது ஸங்கோசத்தை (௧)பஜித்து, பசையற்றபடியாலே பீளைபாய்ந்து. (பித்தெழ) கழிய, மூத்து. (௨) ஸ்காலித்யம் பிறக்கும்படி மூத்து. (தாள்களித்யாதி) ஒரு சஸ்த்ராதிகளாலாதல், மற்றொன்றிலேயிடறியாதலன்றிக்கே, காலோடு காலறைஞ்சுநோவ. தாள்கள் - தம்மில் முட்டி - நோவவென்றபடி. பின்னையும் சாபலத்தாலே போகத் துடங்குமே ; தடுமாறி நடப்பதுக்குமுன்னே.

(காளையாகி) தன்னை யாச்ரயித்தார்க்குத் தன்னோடு ஸாம்யாபத்தியைக்கொடுக்குமவன். நித்யயுவாவாகலாம். (கன்றுமேய்த்து) ரக்ஷ்யவர்க்கத்தில் வரையாதே ரக்ஷிக்குமவன். (குன்றெடுத்தன்றுநின்றான்) அரியனசெய்து நோக்குமவனுய்த்து. (வாளையித்யாதி) தனக்கென்னவொரு யோக்யதை யில்லாத பதார்த்தங்களும் களித்து வர்த்திக்கும் தேசமாய்த்து. ... ... ... ... ௪.

அ.—நாலாம்பாட்டு.—(பீளையித்யாதி.)போக்கிலேயொருப்பட்டுநெறியை[டூயி நோக்கிநின்று நடுங்கா நின்றாலும் " ஆசைகாதருளையதே" என்கிறபடியே போகநினைத்த விஷயத்திலே ஆசாதிசயத்தாலே போமவனுடையபடியை வர்ணித்தருளுகிறாரென்று ஸங்கதியைத் திருவுள்ளம்பற்றி, "கண்ணிடுங்கி - பீளைசோர" என்றன்வயமுகேந தாத்பர்ய மருளிச்செய்கிறார் (கண்ணுனதித்யாதி.) பித்து-பைத்யமாய், அதுஎழும்படியாக மூத்தென்று சப்தார்த்தமாய், பலிதார்த்தம் [கூறு (கழியமூத்தென்று.) விவரணம் (ஸ்காலித்யமித்யாதி.) "தம்மில்" என்றதற்கு வ்யாவர்த்ய மருளிச்செய்கிறார் (ஒருவித்யாதி.) மேலுக்கவதாரிகை (பின்னையுமித்யாதி.) சப்தார்த்தம் (தடுமாறி யித்யாதி.)

மூப்பை நிந்தித்துக்கொண்டு வருகிற ப்ரகரணத்திலே, "காளையாகி" என்று - அவனுடைய யௌவநத்தை யருளிச்செய்தவருக்கு உட்கருத்தை யருளி [சுயி ச்செய்கிறார் (தன்னையித்யாதி.) "கன்று" என்றதற்கு தாத்பர்யம் (ரக்ஷ்யேத்யாதி.) வரையாதே - தரதமபாவம் பாராதே. யோக்யதையில்லாதவென்றது-பகவத்ஸமாச்ரயணத்துக்கு ஜ்ஞாநாதி யோக்யதை யில்லாத வென்றபடி. ... ௪.

(௧)பஜித்தல் - அடைதல். (௨) ஸ்காலித்யம் - தடுமாறுகை : வ்யத்யஸிக்கை.

ரு—பண்டுகாமரான வாறும், பாவையர் வாயமுதம்—
உண்டவாறும், வாழ்ந்தவாறு மொக்கவுரைத்திருமி ;
தண்டுகாலாவூன்றியூன்றித் தள்ளிநடவாமுன்,
வண்டுபாடும் தண்டுழாயான் வதரி வணங்குதுமே.

ப.உரை.—இவன்நடையைப்பார்த்து "நீ யிங்ஙன் தடுமாறி நடப்பானென்?", என்று இவனைச் சிலர் கேட்க, பண்டு - தன்னுடைய இளமைப்பருவத்தில், காமரான ஆறும் - ஸ்த்ரீகள் தன்னை விரும்பியிருந்த படியையும், பாவையர் - அந்த ஸ்த்ரீகளுடைய, வாய் - வாயிலுள்ள, அமுதம்-அம்ர்தத்தை, உண்டஆறும்-தான் புஜித்தபடியையும், வாழ்ந்த ஆறும் - சிற்றின்பத்தை விரும்பி இப்படி [ய் கெட்டபடியையும், ஒக்க - ஒருபடிப்பட, உரைத்து - அவர்களோடே சொல்லி, அத்தாலுண்டான ஆயாஸத்தாலே, இருமி - நடுநடுவே இருமி, தண்டு - தடியை, காலா - காலாகக்கொண்டு, கையில் பலமில்லாமையாலே, ஊன்றியூன்றி - ஓரிடத்திலேயே பலதரமும் ஊன்றி, தள்ளி - இளைத்து, நடவாமுன் - நடப்பதற்குமுன்னே ; வண்டு-வண்டுகள், பாடும்-பாடுகிற, தண் - குளிர்ந்த, துழா[ய் ந் யான் - திருத்துழாய்மாலையை யுடைய ஸர்வேச்வரனெழுந்தருளியிருக்கிற, வதரி-ஸ்ரீபதரியை, வணங்குதும் - வணங்குவோம் என்கிறார். ... ... ரு.

வ்யா.—அஞ்சாம்பாட்டு.—(பண்டுகாமரித்யாதி) தனக்கென்ன போக்யதை யுள்ளநாள் நிஷித்தங்களையே முன்னடிதோற்றுதேயநுஷ்டித்துப்போரும்; பின்பு பகவத்ஸமாச்ரயணம் பண்ணுமாகிலும் [உம் "வணக்கொடு மாள்வது வலம்" என்கிறபடியே-நன்மைக்குடலாய்த் தலைக்கட்டுமிறே ; அதுவும் செய்யாதே, சேஷித்தநாள் வ்ர்த்தகீர்த்தநத்தைப்பண்ணிச் செத்துப்போமாய்த்து. (பண்டித்யாதி) முன்பு தான் ஸ்த்ரீகளுக்கு ஸ்ப்ர்ஹாவிஷயமாய்ப் போந்த படியையும்‡, அவர்களுடைய வாகம்ர்தத்தை புஜித்தபடியையும். அன்றிக்கே, அவர்கள்தாங்கள் ஆதரித்துமேல்விழ தானிருந்தபடியாகவுமாம். (வாழ்ந்த வாறும்) "இன்னம் கெடுப்பாயோ" என்கிறபடியே - இப்போது கேடாகவிறே தாம் நினைத்திருக்கிறது.

அ.—அஞ்சாம்பாட்டு.—(பண்டுகாமரித்யாதி.)தாள்கள்தம்மில்முட்டிகோவத் தள்ளிநடக்குமவனைப்பார்த்து, "நீ இங்ஙனே இளைத்துநடக்கப்புகாநின்றாய்"என்று சிலர் வினவ ; அவர்களைக்குறித்து இவன்சொல்லுமத்தையும் நடக்கும் ப்ரகாரத்தையு மருளிச்செய்கிறாரென்று ஸங்கதியையுட்கொண்டு, "அவன் சொல்லும் போது காலம் குறுகிற்று, ஹிதம்சொல்லுவாருண்டோ" என்னவேண்டியிருக்க, தாழ்வ்ர்த்த கீர்த்தநம் பண்ணுவதே ! என்று ஈடுபாட்டிலே தாத்பர்யமாகவருளிச் செய்கிறார் (தனக்கென்ன வித்யாதி வாக்யத்ரயத்தாலே.) "பாவையருடைய [கரு வாயமுத முண்டவாறும்" என்று கீழருளிச்செய்து, பாவையர்தாங்கள் தன் வாயமுதமுண்டவாறு மென்றர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (அன்றிக்கேயித்யாதி.) "வாழ்ந்த வாறும்" என்றது - விபரீதலக்ஷணையாய், கெட்டவாறுமென்றுக்கி யருளிச்செய்கிறார் (இன்னமித்யாதி.)

‡ "ஸ்த்ரீகளுக்கு விஷயமாய் ஸ்ப்ர்ஹாபண்ணிப் போந்தபடியையும்" என்று சில ஸ்ரீகோசங்கள்.

மூ.—எய்த்தசொல்லோ டீளையேங்கி யிருமியிளைத்துடலம்,
பித்தர்போலச் சித்தம் வேருய்ப் பேசி யயராமுன்;
அத்த னெந்தை யாதிமூர்த்தி யாழ்கடலைக்கடைந்த –
மைத்தசோதி யெம்பெருமான் வதரி வணங்குதுமே. ... அ.

ப - ரை.—எய்த்த - பலஹீநமான, சொல்லோடு - பேச்சையுடையனாய், அத்தாலுண்டாகும், ஈளை - கோழையாலே, ஏங்கி - இளைத்து, பின்பு, இருமி - இருமலாலேவருந்தி, அதினாலே, உடலம் - சரீரம், இளைத்து - மிகவும்மெலிந்து, பித்தர் போல - பைத்தியம்பிடித்தவர்களைப்போலே, சித்தம்வேருய்ப்பேசி-நினைவொன்றும் பேச்சுஒன்றுமாய், அயராமுன்-தளருவதற்குமுன்பே; அத்தன் - ஸ்வாமியாய், [ய எந்தை - எனக்குப்பிதாவாய், ஆதிமூர்த்தி - ஜகத்காரணபூதனாய், ஆழ் - அகாதமான, கடலை - ஸமுத்ரத்தை, கடைந்த- மந்தரபர்வதம் மத்தாகவும் வாஸுகியென்னும்பாம்பு கடைகயிருகவும்கொண்டு கடைந்தவனாய், மைத்த - கறுத்த, சோதி- தேஜஸ்ஸையுடையனாய், எம்பெருமான் - என்னை அடிமைகொண்ட ஸர்வேச்வரனுடைய, வதரி - ஸ்ரீபதரியை, வணங்குதும் - ஆச்ரயிப்போமென்கிருர். ... (அ)

( ஒக்கவுரைத்திருமி ) இவற்றைச்சொல்லத்துடங்குமே, அநந்தரம் இருமல் வருமே, பின்னையும் சாபலத்தாலே விட்டகுறையிலே சொல்லத்துடங்குமே, ஆக இருமுவது சொல்லுவதாகாநிற்கும். (தண்டு காலா) காலால் கொள்ளும் காரியத்தை ஒரு தண்டத்தாலேயாய்த்துக் கொள்வது.(ஊன்றியூன்றி)பிள்ளையழகியமணவாளவரையர்[உய இதுக்கு பட்டரருளிச்செய்தாராகச் சொன்னபடி – " ஒருக்கால் சரீரம் ஸ்திதிக்க வேண்டுமென ஊன்றமாட்டானே, தன் கையில் பிடிக்கில்லாமையாலே, பலகாலித்தை யெடுத்தெடுத்துஇடாநிற்கும் " என்று. (தள்ளியித்யாதி) தடுமாறி நடப்பதுக்கு முன்னே.

(வண்டித்யாதி) "அன்று,இன்று" என்னவேண்டாதே,என் [உரு று மொக்க அநுபவமே யாத்ரையாகச் செல்லும் தேசம். சிலநாள் அநுபவித்துப் பின்பிருந்து வ்ர்த்தகீர்த்தநம் பண்ணவேண்டா. ... ரு.

ஆரும்பாட்டு.—( எய்த்தசொல்லோடு ) துடங்கி யெய்க்கை யன்றிக்கே முந்துறவே யெய்த்தாய்த்துச் சொல்லுவது ; அதுதான்

"உரைத்திருமி" என்றதே, " ஒக்க" என்கையாலே பலித்தவர்த்தமருளிச் [கய செய்கிருர் (இவற்றையித்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே.)

தாள்கள் தம்மில்முட்டி நொந்தபடியாலே தண்டைக் காலாக்கிக்கொண்டு நடக்கத்துடங்குமென்றருளிச்செய்கிருர் (காலாலித்யாதி.) " ஊன்றியூன்றித்தள்ளிநடக்கும்" என்று பூர்வர்கள் நிர்வாஹமாய், ஒருகால்தானுமூன்ற சக்தியில்லாமையால் அங்கேதான் பலகாலூன்றுமென்று பட்டர் நிர்வாஹத்தை [கரு யருளிச்செய்கிருர் ( ஊன்றி யித்யாதி வாக்யத்வயத்தாலே. ) ... ... ரு.

ஆரும்பாட்டு.—(எய்த்தவித்யாதி.) இருமியிருமியுரைக்கத்துடங்ினவளவிலே கண்டு வினவினவன் விட்டுநடக்குமே,இவன் துடங்கினவார்த்தையை விடமாட்டாதே தன்னில் தான் சொல்லுமே, அத்தை வர்ணித்தருளுகிருரென்று ஸங்கதி கண்டுகொள்வது. [சய

இருமியிருமியுரைத்தத்தால் இளைப்பு வருகையாலேயெய்த்த சொல்லாயிற்றென்று விவக்ஷித்தருளிச்செய்கிருர் (துடங்கியெய்க்கையிந்யாதி·) எய்த்[illegible].

மூ.—பப்ப! அப்பர் மூத்தவாறு! பாழ்ப்பது, சீத்திரளை -
யொப்ப வைக்கள் போதவுந்த வுன்தமர் காண்மினென்று,
செப்புநேர் மென் கொங்கை நல்லார் தாம் சிரியாதமுன்னம்;
வைப்பும் நங்கள் வாழ்வுமானான் வதரி வணங்குதுமே. ... எ.

---

ப - ரை.—சீத்திரளையொப்ப - சீயின்திரட்சிபோலே, ஐக்கள் - கோழையானது, போதஉந்த - மிகவும்தள்ளுவதைக்கண்டு, செப்புநேர் - செப்புப்போன்ற, மெல் - ம்ருதுவான, கொங்கை - ஸ்தநங்களையுடையராய், நல்லார் - இவனுக்குஹிதம் செய்யுமவர்களென்றுநினைத்திருந்தஸ்த்ரீகள், "பப்ப! - பப்ப!, அப்பர்! - கிழவரே!, மூத்தஆறு - நீர் கிழத்தனத்தை அடைந்தபடி, பாழ்ப்பது - சாலப்பொல்லாது" [ய என்றுசொல்லி, தாம் - வயஸ்ஸம்காசும்உள்ளநாளில் "என்னுடையவன்" என்று ஆதரித்துப்போந்த தாங்களே, இப்போது அருகிருந்த பெண்களைப்பார்த்து, "உன்தமர் - உன்னோடுஉறவுள்ளவர், காண்மின் - இவர்படியைப்பாருங்கள்" என்று - என்றுசொல்லி, சிரியாதமுன்னம் - ஹாஸ்யம்பண்ணுவதற்குமுன்னே; நங்கள் - நம்போல்வாரான ஆச்ரிதரெல்லார்க்கும், வைப்பும் - நிக்ஷேபம்போ [ய்டு லே ஸாத்யமும், வாழ்வும்ஆனான் - ஸாதநமுமானவனுடைய, வதரி - ஸ்ரீபதரியை, வணங்குதும் - ஆச்ரயிப்போமென்கிறார். ... ... ... (எ)

---

அநந்தரம் ஈளையோடே கொடுபோய்ச் சேர்க்கும். (ஏங்கி) அதி னநந்தரமாக இளைப்புவந்து கைக்கொள்ளுமாய்த்து. (இருமியிளைத்து உடலம்) அதுதான் இருமலுக்கு பூர்வக்ஷணவர்த்தியாயிருக்குமிறே. இருமி, அத்தாலே சரீரம் போரஇளைக்குமாய்த்து. (பித்தர்போலச் சித்தம்வேறாய்ப்பேசி) நினைவொன்றும் சொலவொன்று மாயிருக்கு மாய்த்து. பித்தேறினாரைப்போலே நெஞ்சால் நினைப்பதொன்றாய் வாயால்சொல்லுமதொன்று யிருக்கு மாய்த்து¶. (சித்தம்வேறாய்ப் பேசி யயராமுன்) இப்படி பேசுகையுங்கூடவரிதாம்படி அயர் [உடு வோடே தலைக்கட்டும்; இப்படி மோஹிப்பதற்கு முன்பே.

(அத்தனித்யாதி) வகுத்த ஸ்வாமியானவன், எனக்கு ஹிதகாம னானவன், ஜகத்காரணபூதனான ஸர்வேச்வரன். (ஆழ்கடலைக் கடைந்த) அரியன செய்தும் அபேக்ஷிதம் செய்துகொடுக்குமவன். (மைத்தசோதி) அபேக்ஷிதம்செய்யாவிடிலும் விடவொண்ணாதவடிவழகை யுடையவன். வெளுத்தல் சிவத்தல் செய்கையன்றிக்கே, கண்ணுக்குக் குளிர்ந்த தேஜஸ்ஸை யுடையவன். (எம்பெருமான்) அவ்வடிவழகைக் காட்டியென்னையடிமைகொண்டவனுடையவதரியையாச்ரயிப்போம். கூ.

---

ஈளை - கோழை, ஏங்குதல் - பொருமுதலாய், அத்தால்வந்தஇளைப்பைச் சொல்லுகிற தென்கிறார் (அதினித்யாதி.) இப்படிப்பட்ட இளைப்பும் இருமலுக்கு ஹேது [கூடு வாய்விடுமென்கிறார் (அதுதானித்யாதி.) போர இளைத்தவாறே நினைத்தபடி சொல்ல வும் வல்லனல்லனென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (நினைவித்யாதி.) சப்தார்த் தம் (பித்தேறினாரை யித்யாதி.) இப்படி பேசுகையும் கூடவென்றது - அயுக்த்யா சொல்லுமதவும்கூட வென்றபடி.

* மூர்த்திசப்தம் - ஸ்வரூபவாசகமாய், (ஸர்வேச்வரன்) என்கிறது. ... கூ.

---

¶ "பேசுவதொன்றாயிருக்குமாய்த்து" என்று [illegible]

வ்யா.—ஏழாம்பாட்டு.—(பப்ப!) க்ஷேபோக்தியில் இவருடைய அநுகாரமிருக்கிறபடி.வப்பவென்றபடி. (அப்பர்மூத்தவாறு)எல்லார்க்கும்மூப்புவருகைதவிராதிறே;இத்தனை(க)கழியமூக்கலாமாகாதே! என்பர்களாய்த்து.மூப்பை ப்ரக்ருதியாக்கிஅதிலேமூத்தபடியாகவாய்த்துச் சொல்லுவது. (பாழ்ப்பது)இது(க)சாலப்பொல்லாது. (க)அறப்பொல்லாதாயிருந்ததீ!யிவ்வசித்ஸம்ஸர்க்கம்என்றுவெறுப்புக்குடலாய்த்து.(சீயித்யாதி)பூயபிண்டம்போலேச்லேஷ்மாவானது(உ)போரத்தள்ள.சீத்திரளையொப்பனக்கள்(உ)போதவுந்த,பப்ப! அப்பர்மூத்தவாறு!பாழ்ப்பது!என்பர்கள். (உன்தமர்காண்மினென்று) இவன்பக்கல் யௌவநமும் கையில் வீசமுமுள்ளவன்று, எல்லாருமொக்க "என் தமர், என்தமர்" என்பர்கள் ; கையில் வீசமும்போய், இவனோட்டை ஸம்பந்தம் நமக்குஅவத்யாவஹம் என்று தோற்றும்படி யௌவநமும் போனவாறே, "உன்னுடையவன்"என்றும், மற்றையவனும் "உன்னோடே யன்றோ அவனுக்குறவு" என்றும் தங்களோடே [யுடு (௩)தொற்றறச்சொல்லிப் பிணங்காநிற்பர்கள்.(செப்பித்யாதி)இவனைக்கொண்டு போதுபோக்குகைக்காக முலைக்கச்சை நெகிழ்த்தி முலையினுடைய ஸந்நிவேசத்தைக் காட்டுவர்கள் ; இவன் கண்ணைவிடுத்து எழப்பார்க்கும்; அத்தைக்கண்டு, "பிள்ளாய்! இவன் இவற்றோடு என்ன வுறவுண்டாய்ப் பார்க்கிறான்" என்று சிரிப்பர்களாய்த்து. [உய் செப்புநேர் மென் கொங்கைநல்லார் – அப்பரென்று சிரியாத முன்னமென்னுதல். பண்டு தன் ஸர்வஸ்வத்தை நேர்ந்திறே ஒரு ஸ்மிதம் பெறுவது; இப்போது இவரிருப்புக்கண்டு விட்டுச்சிரிப்பர்களாய்த்து.

(வைப்பும் நங்கள் வாழ்வுமானான்) பரிக்ரஹித்தவன்றே ஸாதநமுமாய்,பின்னை ப்ராப்யனுமானவன் வர்த்திக்கிற வதரிவணங்குதும். ஒருநாள்ஆதரித்துஒருநாள் சிரியாதவனாய்த்து;"అమృతంసాధనంసాధ్యం" "அம்ர்தம்ஸாதநம் ஸாத்யம்" என்னக்கடவதிறே. ... ... எ.

---

ஏழாம்பாட்டு.—(பப்பவித்யாதி.) இப்படியெய்த்துக்கிடந்தவன் ஆயுச்சேஷத்தாலே மெள்ளத்தெளிந்து (ச)கந்தவ்யஸ்தலத்திலேசெல்ல,அங்கே இவனுக்குஉத்தேச்யர் இவனை க்ஷேபிக்கும்படியைச் சொல்லுகிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

இவருடையவென்றது - இப்பாட்டிலே ப்ரஸ்துதரான ஸ்த்ரீகளுடைய வென்றபடி. ப்ரக்ருதியாக்கி - ஸ்வபாவதர்மமாக்கி. போதவுந்த- போரத்தள்ள. வீசம்- மாகாணிப்பணம். தங்கள் பருவத்தைக்காட்டிச் சிரிக்கும் ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் (அத்தையித்யாதி.) பிள்ளாயென்றது - பெண்பிள்ளா யென்றபடி. இவன்மூப்பைக்கண்டு சிரிப்பார்களென்றருளிச்செய்கிறார் (செப்புநேரித்யாதி.) எ.

எட்டாம்பாட்டு.—(நசியித்யாதி.) செப்புநேர்மென் கொங்கைநல்லார் முலைக்கச்சைநெகிழ்த்துவது சிரிப்பதான வாறே, இவன் தன் ப்ராப்யம் கைபுகுந்தது என்று அங்கேயிருக்கத்தொடங்குமே, அநந்தரம் அவர்கள்பண்ணும் பரிபவப்ரகாரங்களை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி..

---

(க) கழிய, சால, அற - மிகவும்.(உ) போர, போத-அதிகமாக. (௩) தொற்று- ஸம்பந்தம். (ச) கந்தவ்யஸ்தலம் - போகத்தக்க இடம்.

மூ.—ஈசி போமி னீங்கிரேன்மி னிருமி யிளைத்தீர், உள்ளம்-
கூசியிட்டீரென்று பேசும் குவளை யங்கண்ணியர்பால்,
நாசமானபாசம்விட்டு நன்னெறிநோக்கலுறில்,
வாசம்மல்கு தண்டுழாயான் வதரி வணங்குதுமே. ... அ.

ப-ரை.—அவர்கள் இப்படிசொல்லச்செய்தேயும் இவர்போகாமையாலே, போமின் - போங்கோள்என்பர்கள்; இருக்கச்சொன்னார்களாக நினைத்து இவர் போகாதிருக்க, ஈசி - சீ!சீ!, ஈங்கு - இங்கு, இரேன்மின் - இராதேகொள்ளுங்கோள் என்ன; "என்தான்?, நான்போகவேண்டுகிறதென்?" என்ன; "இருமி - இருமலாலே, இளைத்தீர் - சரீரம் கட்டுக்குலைந்தீர், இவர்கள்முன்னே இப்படிபடுவதே! [யி என்று, உள்ளம்கூசியிட்டீர் - ஹ்ருதயம்கூசினீர்," என்றுபேசும் - என்றுசொல்லுகிற, குவளை - குவளைமலர்போலே, அம் - அழகிய, கண்ணியர்பால் - கண்ணையுடையஸ்த்ரீகள்பக்கலுண்டான, நாசமான பாசம்-விநாசத்தைவிளைக்கும் ஸங்கத்தை, விட்டு - தவிர்ந்து, நல்நெறிநோக்கல்உறில் - நல்வழிபோகப்பார்க்கில்; வாசம்- பரிமளம், மல்கு - நிறைந்த, தண் - குளிர்ந்த, துழாயான் - திருத்துழா[யிரு யையுடைய ஸர்வேச்வரன் நித்யவாஸம்பண்ணுகிற, வதரி - ஸ்ரீபதரியை, வணங்குதும்- வணங்குவோமென்கிறார். ... ... ... ... (அ)

வ்யா.—எட்டாம்பாட்டு.—(ஈசிபோமின்) நடவும்; சீச்சீஎன்றபடி. (போமின்) போகீர் என்பர்கள். என்றவாறே, இருக்கச் சொல்லிற்றாகக்கொண்டு இருக்குமிறே பழையவாஸனையாலே (ஈங்கிரேல்மின்) நீரிருக்கிறவிடந்தன்னை யறிந்திலீரோ, உமக்கு இங்குத்தையிருப்பில் ஓரந்வய மில்லைகாணும், போம் என்பர்கள். "என்தான் ? எனக்குப்போகவேண்டுகிற ஹேதுவென் ?" என்னுமே (இருமியிளைத்தீர்,உள்ளம்கூசியிட்டீர்) என்பர்கள். இருமலாலே போரஇளைத்தீர், உம்மை யறிவீரே, "இவர்கள்முன்னே யிப்படி படுவோமே !" [உரு என்று எங்கள் ஸந்நிதியை யநுஸந்தித்து ஹ்ருதயம் கூசினீர் என்று சொல்லுகிற. (குவளை யங் கண்ணியர்பால் ( இவனுடைய எளிவரவு காண்கைக்காக ஸாதரமாகப் பார்ப்பார்களாய்த்து. அருநஞ்சாகிலுமாகிறது, ஆரமுதாகிலு மாகிறது, இவர்கள்தான் பார்க்கப்பெற்றோமிறே ! என்று இவனுடைய பாவபந்தந்நுக்குடலாயிருக்குமாய்த்து. (நாசமானபாசம்விட்டு) ஏதேனும்தசையிலு மிவனைவிடாதே விநாசத்தை பலிப்பிக்கும்படியான ஸங்கமாய்த்து. ஹேயவிஷயத்தில் ஸங்கம் விநாசத்தை பலிப்பிக்குமிறே; அத்தைத் தவிர்ந்து, நல்வழிபோகப்பார்க்கில்; தன்னை ஆச்ரயித்தார்க்குக்கொடுத்துஆதரிக்கைக்காக மாலையிட்டிருக்கிறவனதான வதரியை வணங்குதுமே. அ.

மூன்றுமுன்னம் "ஈசி" என்னவொண்ணாமையாலே "போமின்" என்ன, போகாமையாலே "ஈசி" என்கிறார்களென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (நடவுமென்று.) பழையவாஸனையாலேயென்றது - ப்ரணயரஸத்தாலூடிக்கொண்டு போகச்சொல்லுவது இருக்கைக்காகவேசொல்லுவர்களே, அந்தவாஸனையாலேயென்றபடி. "ஈங்கிரேன்மின்" என்றபின்பும் பாசம் வருகைக்குஹேதுத்வேந "குவளையங்கண்ணியர்"[சுயி என்றதென்னுமிடம்தோற்ற வருளிச்செய்கிறார் (இவனுடையவித்யாதி.) பேச்சாலே ஆசைபடுத்திருக்கவும் கண்ணாலே வலைத்துவைத்தால்ஸங்கம்வரும்படியை உபபாதிக்கிறார் (அருநஞ்சாகிலுமித்யாதி.) ... ... ... ... அ.

மூ.—புலன்கள்நையமெய்யில் மூத்துப் போந்திருந்துள்ளமெள்கி,
கலங்க வைக்கள்போதவுந்திக் கண்டபிதற்றுமுன்;
அலங்கலாயதண்டுழாய்கொண் டாயிரநாமம்சொல்லி,
வலங்கொள்தொண்டர் பாடியாடும் வதரி வணங்குதுமே....கூ

ப - ரை.—மெய்யில் - சரீரத்தில், புலன்கள் - இந்த்ரியங்களானவை, நைய - சிதிலமாம்படி, மூத்து - கிழத்தனமடைந்து, அவர்கள் "ஈங்கிரேன்மின்" என்றதுவேஹேதுவாக, இவன், போந்து - ஏகாந்தமானவிடந்தேடிப்போய், இருந்து - அங்கேயிருந்து, உள்ளமெள்கி - நாம்பட்டதோ! என்று நெஞ்சுகலங்கியும், கலங்க - வாத பித்த ச்லேஷ்மங்கள் வேறுபட, அத்தாலே, ஐக்கள் - கபமானது, [டு போதஉந்தி - போரத்தள்ளியும், கண்ட - கண்டத்தையெல்லாம், பிதற்றுமுன் - வாயில்வந்தபடி சொல்லுவதற்குமுன்னே; வலம்கொள் - ப்ரதக்ஷிணம்நடக்கமான அநுகூலவ்ர்த்திகள்பண்ணுகிற, தொண்டர் - சேஷபூதரான ஸ்ரீவைஷ்ணவர்கள், தண் துழாய் - குளிர்ந்த திருத்துழாயால், ஆய - தொடுக்கப்பட்ட, அலங்கல் - மாலையை, கொண்டு - கையிலேந்திக்கொண்டு, ஆயிரம்நாமம் - அவனு [டு டையஆயிரம்திருநாமங்களையும், சொல்லி - அடைவுபடச்சொல்லி, பாடி - வாயாரப்பாடி, ஆடும் - ஆடுகிற, வதரி - ஸ்ரீபதரியிலெழுந்தருளியிருக்கும் ஸர்வேச்வரனை, வணங்குதும் - ஸேவிப்போமென்கிருர். ... ... (கூ)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு.—(புலனித்யாதி) சரீரத்தில் இந்த்ரியங்களானவை, ஸந்நிவேசமும் கிடக்கச்செய்தே தந்தாமுடைய [உ விஷயங்களை பரிக்ரஹிக்கவும்மாட்டாதே சிதிலமாம்படி மூத்து. (போந்திருந்து) அல்லாதாரோபாதி காண்பன காணவும் கேட்பன கேட்கவும் பெறுமையாலே, ஆள்நடையாடாத விடந்தேடிப் போந்திருந்து. (உள்ளமெள்கி) "நாம்பட்டதோ!" என்று ஹ்ர்தயமானது ஈடுபட்டு. (கலங்கவித்யாதி) தோஷத்ரயமும் தலையெடுத்தவாறே ச்லே [உடு ஷ்மாவானது போரத்தள்ளுமாய்த்து. (கண்ட பிதற்றுமுன்) பின்னை ப்ரதிபந்நங்களைப் பிதற்றுவதுக்குமுன்னே.

(அலங்கலாய) அங்குத்தைக்குச் சாத்தி யருளுகைக்கீடான மாலையான திருத்துழாயைக்கொண்டு. (ஆயிரநாமம்சொல்லி) கண்ட பிதற்றுமே அவ்வழியே இந்த்ரியத்துக்கு அடைத்த திருநாமம் [ங டு சொல்லி; "நா வாயிலுண்டே" இத்யாதிப்படியே.

ஒன்பதாம்பாட்டு.—(புலனித்யாதி.) "ஈங்கிரேன்மின்" என்றசொன்னதே பலித்து விடுகையாலே அவஸாதம் விஞ்சி, விஜநப்ரதேசத்திலே பிதற்றும்படியை யருளிச்செய்கிருரென்று ஸங்கதி.

குவளையங்கண்ணியர் "ஈங்கிரேன்மின்" என்றபின்பு, ஸ்வஜநத்தோடு பரஜநத்தோடு பொருந்தாதே தனியேயிடந்தேடிப்பிதற்றுகை ப்ராப்தமாகையாலே (ஆள் நடையாடாதவிடந்தேடியென்றது.) தோஷத்ரயம் - வாத பித்த ச்லேஷ்ம விகாரங்கள். "கண்ட" என்றது - கண்டத்தையென்றுய், (ப்ரதிபந்நங்களையென்றது.)

அவ்வழியேயென்றது - ப்ரதிபந்நங்களைச்சொன்னநாவாலேயென்றபடி. இந்த்ரியத்துக்கடைத்தது திருநாமம் என்னுமதுக்குஸம்வாதம்(நாவாயிலித்யாதி.) [கூ

மூ.—வண்டுதண்டேனுண்டுவாழும்வதரிநெடுமாலை,
கண்டல் வேலி மங்கைவேந்தன்கலியனொலிமாலை—
கொண்டு தொண்டர் பாடியாடக்கூடிடில், நீள்விசும்பி—
லண்டமல்லால் மற்றவர்க்கோராட்சியறியோமே. ... ௰.

ப-வுரை.—வண்டு - வண்டுகள், தண் - குளிர்ந்த, தேன் - தேனை, உண்டு- பாநம்பண்ணி, வாழும் - களித்துவர்த்திக்கிற, வதரி - ஸ்ரீபதரியிலெழுந்தருளி யிருக்கும், நெடுமாலை - ஸர்வாதிகன்விஷயமாக; கண்டல்- தாழைகளை, வேலி-வே லியாகவுடைய, மங்கை - திருமங்கைக்கு, வேந்தன் - ராஜாவான, கலியன் - ஆழ் வார் ரருளிச்செய்த, ஒலி - மாலைகொண்டு - சப்தஸந்தர்ப்பங்களையுடைய [௰ விப்பத்துப்பாட்டையுங்கொண்டு, தொண்டர் - சேஷபூதரானவர்கள், பாடி-அவன் குணங்களைவாயார அநுஸந்தித்து, ஆடக் கூடிடில் - ப்ரீதிக்குப்போக்குவீடாகஆட ப்பெறில், நீள்விசும்பில் - பரமபதத்தில், அல்லால் - ஒழிய, மற்று - வேறு, ஓர்- ஒரு, அண்டம் - லோகத்தில், அவர்க்கு - அவர்களுக்கு, ஆட்சிஅறியோம் - ஆளு கை யில்லை யென்கிறார். ... ... ... ... ... (௰)

(வலங்கொளித்யாதி) அநுகூலவ்ருத்திகளைப்பண்ணுநின்றுள்ள ஸ்ரீவை ஷ்ணவர்கள், சாத்துகைக்கீடானமாலைகளையுமேந்தி, திருநாமங்களையும் சொல்லி, பாடுவதாடுவ தாகாநிற்பார்கள் ; அத்திரளிலே புக்கு அவர் களிலே யொருவரா யாச்ரயிப்போம். ... ... ௯.

பத்தாம்பாட்டு.—(வண்டு தண்டே னித்யாதி) ஸர்வபதா [உ௰ ர்த்தங்களு முத்தேச்ய லாபத்தாலே களித்து வர்த்திக்கும் தேசமாய் த்து; இப்படியிருக்கிற ஸ்ரீபதரியிலே வந்திருக்கிற ஸர்வாதிகனைக் கவிபாடிற்று. (கண்டல்வேலி) கண்டலென்று—தாழை. கடல் அணித் தாகையாலே தாழைக ளுண்டா யிருக்குமிறே. பூத்த தாழைகளை வேலியாகவுடைத்தான திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வாரருளி ச்செய்த மாலை. (கொண்டு தொண்டர் பாடியாடக் கூடிடில்) இவற் றைக்கொண்டு, "வழுவிலாவடிமை செய்யவேண்டும்" என்றிருக்கிற வர்கள் பாடுவ தாடுவதாகக் கூடிடில். நீள் விசும்பு என்கிறது - உபரி தந லோகங்களினுடைய ஸமுதாயத்தை; அதில், (அண்டமல்லால்) பரமபதமல்லது, மற்றவர்க்காட்சியறியோ மென்னுதல்; அன் [௩௰ றிக்கே, நீள்விசும்பென்கிறது - பரமபதமாய், அதிலல்லால் மற்றோ ரண்டம் அவர்க்கு ஆட்சியாக அறியோமென்னுதல்.

மெய்யில் - புலன்கள்ளைய - மூத்தித்யாதி, வலங்கொள் தொண்டர் - அலங்க லாயதண்டுழாய்கொண் டாயிர நாமம் சொல்லி - பாடியாடும் வதரி வணங்குதும் என்றுஅந்வயம். ... ... ... ... ... ... ௯.

பத்தாம்பாட்டு.—(வண்டுதண்டேனித்யாதி.)

வண்டு, வாளை, தொண்டர்களைக் கீழேயருளிச்செய்கையாலே, இதிலே யவற்றைச் சொன்னது உபலக்ஷணமென்றருளிச்செய்கிறார் (ஸர்வபதார்த்தங் களுமித்யாதி.)

ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில் இவர் அருளிச்செய்த தோஷம் ப்ரத்யக்ஷித்து அநுபவியாநின்றோம்; அவ்வோபாதி பகவத்விஷயமாக இவரருளிச் செய்ததும் மெய்யா யிருக்குமிறே; ஆனபின்பு, இவர் விடச்சொன்னவற்றை விட்டு இவர் பற்றச்சொன்னவற்றைப் பற்று[ஞ] கையிறே சேதநராயிருப்பார்க்குச் செய்யவடுப்பது. ... ... ௰.

அடிவரவு.—முற்ற முதுகு உறி பிளை பண்டு எய்த்த
பப்ப ஈசி புலம் வண்டு ஏனம்.

திருமங்கையாழ்வார்திருவடிகளேசரணம்.

பெரியவாச்சான்பிள்ளைதிருவடிகளேசரணம். [௰

இத்தை அப்யஸித்தமாத்ரத்திலே பரமபதமுண்டாகக் கூடுமோவென்ன; இது அர்த்தவாதமன்றோ வென்ன வருளிச்செய்கிறார் (ப்ரக்ருதீத்யாதி) ... ௰.

ஜீயர்திருவடிகளே சரணம்.

முதற்பத்து-நாலாந்திருமொழி-ஏனம். ப்ரவேசம்.

வ்யா.—ஸ்ரீபதரியென்றும் பதரிகாச்ரமமென்றும் இரண்டு [௰ஞ திருப்பதியாய், அதில் இங்குத்தை யிருப்பாகிறது-ப்ரஜையினுடைய ரக்ஷணத்துக்குறுப்பாகத் தாய் குடிநீர் குடிக்கு மோபாதி யிவை தன்னை வழிப்படுத்துகைக்குறுப்பாகத் தான் (க) தபஸ்ஸுபண்ணி ஹிதகாமனா யிருக்கிற விடமாய், சென்று ஆச்ரயிக்கும் நங்குறையே குறையாக ஆச்ரயணீயனானவன் தன்குறை யறுத்துக்கொண்டிருக்கிற விடமாயிருந்தது; ஆனபின்பு,நாமங்கே போய் ஆச்ரயிப்போமென்று திருவுள்ளத்தோடே கூட்டுகிறார்.

இங்கு திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறவிடமுண்டோ வென்னில்; கீழே "வதரிவணங்குதும்" என்றும் "அறிதியாகில் நெஞ்சம்" என்றும் சொல்லிக்கொடுபோந்து, இதிலும் "துணிவினி [உஞ உனக்குச் சொல்லுவன் மனமே" என்று - முடியத் திருவுள்ளத்தைக் குறித்துச் சொல்லிற்றாயிறே யிருக்கிறது. கீழ் தாம் பெற்றதாகச் சொல்லி அர்த்தாநுஸந்தாநம் பணணிப்போந்த மந்த்ரப்ரதனான நாராயணன் வந்திருக்கிற தேசமாயிருக்குமிறே. ... ... ✻

அ.—ஏனமுனாகிப்ரவேசம்.—கீழ்த்திருமொழியிலே-மந்த்ரப்ரதனான நா[கூ௰ ராயணன் வர்த்திக்கிறதேசத்தை யாச்ரயிப்போமென்று திருவுள்ளத்துக்குச் சொல்ல, நமக்கு ஸச்சிஷ்ய லக்ஷணங்களறிந்தன்றோ ஆச்ரயிக்க வடுப்பது என் றிறியிருக்க; அக்குறைதீர்ந்தானா யெழுந்தருளி யிருக்கும் தேசமான பதரிகாச்ரமத்தை யாச்ரயிப்போமென்றருளிச்செய்கிறாரென்று ஸங்கதிதன்னை யருளிச்செய்கிறார் (ஸ்ரீபதரியித்யாதி.) குடிநீர்-கஷாயம். இத்தால்-"சிஷ்யனாய்நின்றது [கூஞ சிஷ்யனிருக்குமிருப்பு நாட்டாரறியாமையாலே அத்தையறிவிக்கைக்காக" என்றபடியே சேதநரை வழிப்படுத்துமென்றதாய்த்து. கீழ் மூன்று திருமொழியில் ப்ரமேயத்தையு மநுவதித்து ஸங்கதியை ஸ்புரிப்பிக்கிறார் (கீழித்யாதி.) (இருக்குமிறே) என்றவநந்தரம், இங்கு நான் வர்த்திக்கிறதேசத்தைச் சொல்லுகிறதென்றசேஷம். ... ... ... ... ... ... ✻

(க) தபஸ்ஸுபண்ணுகை - நரநாராயணனாய்த் திருமந்த்ரோபதேசம்பண்ணுகை.

மூ.—ஏனமுனாகி யிருநிலமிடந்தன் றிணையடியிமையவர் வணங்க,
தானவனாகம் தரணியிற்புரளத் தடஞ்சிலை குனித்த வென்தலைவன்;
தேனமர்சோலைக்கற்பகம் பயந்த தெய்வநன்னறுமலர் கொணர்ந்து-
வானவர்வணங்குங்கங்கையின்கரைமேல்¶வதரியாச்சிராமத்துள்ளானே.

ப-ரை.—அன்று - பூமியை ப்ரளயங்கொண்டஅக்காலத்திலே, இமையவர்- ப்ரஹ்மாதிகள், இணைஅடி - சேர்த்திஅழகையுடைத்தானதிருவடிகளை, வணங்க - ஆச்ரயிக்கும்படியாக, முன் - வராஹகல்பத்தின்ஆதியிலே, ஏனமாகி - பன்றிருபங் கொண்டு, இருநிலம் - பரப்புடைத்தானபூமியை, இடந்து - ஒட்டுவிடுவித்தெடு த்து, தானவன் - தநுவம்சத்திற்பிறந்த ராவணனுடைய, ஆகம்-வராதிகளாலே [ய பூண்கட்டின சரீரமானது, தரணியில் - பூமியிலே, புரள - அம்புதைத்துப் புரளு ம்படி, தடம் - பெரிய, சிலை - வில்லை, குனித்த - வளைத்தருளின, என்தலைவன் - என்ஸ்வாமியான நாராயணன்;தேன்அமர்-தேன்மிக்கு,சோலை-சோலைசெய்திருந்து ள்ள, கற்பம் - கல்பகவர்க்ஷமானது, பயந்த - உண்டாக்கின, தெய்வம் - திவ்ய மாய், நல் - விலக்ஷணமாய், நறு - பரிமளம்வீசுகிற, மலர் - புஷ்பங்களை, வா[ய்ந்து ணவர் - தேவர்கள், கொணர்ந்து - கொண்டுவந்து, வணங்கும் - திருவடிகளில் ஸமர்ப்பித்து ஆச்ரயிக்கும்படியாக, கங்கையின்கரைமேல் - கங்காதீரத்திலுள்ள, வதரியாச்சிராமத்து - பதரிகாச்ரமத்திலே, உள்ளான் - எழுந்தருளியிருக்கிறான், நெஞ்சே ! அங்கேசென்று ஆச்ரயிஎன்று தந்திருவுள்ளத்தைக் குறித்து அருளிச் செய்கிறார். ... ... ... ... ... ... (௧)

வ்யா.—முதற்பாட்டு.—(ஏனமுனாகி யித்யாதி) (முன் - ஏன மாகி) வராஹகல்பத்தினுடைய ஆதியிலே, அண்டபித்தியிலே புக்குச் சேர்ந்து பரப்புடைத்தான பூமியை; அத்தை யெடுக்கைக்கீடான செருக்கையுடைய மஹாவராஹமா யெடுத்துக்கொண்டு. (அன்றிணை யடி யிமையவர் வணங்க) அப்போது அந்தஉளைமயிர்களிலே [உறு யொதுங்கிக்கிடந்த ப்ரஹ்மாதிகள், சேர்த்தியழகையுடைத்தான திரு வடிகளை யாச்ரயிக்க. "సుకవి కటసటాసఙ్కటైః" "ஸுகவிகடஸடாஸங் கடை:" என்னக்கடவதிறே.

முதற்பாட்டு.—(ஏனமுனாகி யித்யாதி.) நிலத்துக்கிருமை சொல்லுகையாலே பலித்தவர்த்தம் (அத்தை யித்யாதி.) [றுய

உளைமயிர் - பிடரிமயிர். "నమస్తస్మై వరాహాయ లీలయోద్ధరతే మహీమ్ । ఖురమధ్యగతో యస్య మేరుః కణకణాయతే" "நமஸ்தஸ்மை வராஹாய லீலயோத்தரதே மஹீம் । குரமத்யகதோயஸ்யமேருஃகணகணாயதே" என்கிறபடியேவளர்ந்த திரு மேனி யாகையாலே,உபரிதநலோக வர்த்திகள் உளைமயிரிலே யிருக்கை ப்ராப்தமெ ன்று கருத்து. உளைமயிரிலே யிருக்கைக்கு ப்ரமாணம் (ஸுகவியித்யாதி.) ஸுகவி களுக்கு, கடகல்பமாய் - வரண்யத்வேந ஆச்ரயமாயிருக்கிற, ஸடைகளிலே- பிடரிமயிர்களிலே, ஸங்கடை:-நெருங்கி யிருக்கிறவர்களாய் என்றர்த்தம் கண்டு கொள்வது. ப்ரமாணத்திரட்டிலே யானால், "ఉత్తిష్ఠతస్తస్య జలార్ద్రకుక్షేర్మహావరాహస్య మహీం ప్రగృహ్య । విధున్వతో వేదమయం శరీరం రోమాన్తరస్థా మునయస్స్తువన్తి" "உத்திஷ்டதஸ்தஸ்ய ஜலார்த்ரகுக்ஷேர்மஹாவராஹஸ்ய மஹீம் ப்ரக்ருஹ்ய । [சுய விதுன்வதோ வேதமயம் சரீரம் ரோமாந்தரஸ்தாமுநயஸ்துவந்தி" என்கிற வச நத்தை யெடுத்திருக்கிறது.

¶ "வதரியாச்சிராமம்" என்றால் இசைக்குச்சேரும்.

மூ.—கானிடையுருவைச்சுடுசரந்துரந்துகண்டு, முன்கொடுந்தொழிலுரவோன்-
ஊனுடை யகலத்தடுகணைகுளிப்ப வுயிர்கவர்ந்துகந்தவெம்மொருவன்;
தேனுடைக்கமலத்தயனொடு தேவர் சென்று சென்றிறைஞ்சிடப்; பெருகு-
வானிடைமுதுநீர்க் கங்கையின்கரைமேல் வதரியாச்சிரமத்துள்ளானே...உ.

ப - ரை.—கானிடை - காட்டில் மறைவது தோற்றுவதாய்த் திரிகிற, உருவை - மாயாம்ர்கமான மானை, கண்டு - பார்த்து, சுடுசரம் - பொறுக்க வொண்ணாதஅம்பை, துரந்து - அதின்மேலேவிட்டு; முன் - ஸுக்ரீவமஹாராஜர் சரணம்புகுந்தவன்று, கொடும்தொழில் - க்ரூரமானசெயலையும், உரவோன்- மிடுக்கையுமுடைய வாலியினது, ஊன்உடை - மாம்ஸம்நிறைந்த, அகலத்து- [ம மார்விலே, அடுகணை - கொலைஅம்பானது, குளிப்ப - அழுந்தும்படிபண்ணி, உயிர் - அவன்ப்ராணனை, கவர்ந்து - அபஹரித்து, உகந்த - "மஹாராஜர் விரோதிபோசப்பெற்றோம்!" என்றுஉகந்த, எம்ஒருவன் - ஒப்பற்றபலமுடைய னானஎன்ஸ்வாமி; தேன் - தேனை, உடை - உடைத்தான, கமலத்து - திருநாபீ சமலத்திற்பிறந்த, அயனொடு-ப்ரஹ்மாவோடுகூட,தேவர்-தேவர்கள், சென்று [மரு சென்று-நான்நானென்றுஇழிந்து, இறைஞ்சிட - ஆச்ரயணத்துக்குறுப்பாக ஸ்நா நம்பண்ண, அத்தாலே, வானிடை - ஆகாசத்திலேயாய், முது - பழைதான, நீர் - ஜலம், பெருகு- மிக்குவருகிற, கங்கையின்கரைமேல் - கங்கைக்கரையிலே, வதரியாச்சிராமத்துள்ளான்—,நெஞ்சே ! அங்கேபோய் ஆச்ரயிப்போம்என்கிறார்.

(தானவனித்யாதி) இப்போது, தானவனென்கிறது-ராவ [உம ணனை. "தையலாள்மேல் காதல்செய்த தானவன் வாளரக்கன்" என்னக்கடவதிறே. தநுவினுடைய வம்சஜனென்று தாநவனென் கிறதாதல், ஆஸுரமான வ்யாபாரங்களை யுடையவனென்றுதல். ராவணனுடைய, வராஹிகளாலே பூண்கட்டி யிருக்கிற சரீரமானது, அம்பு தைச்சு பூமியிலே புரளும்படியாக. (தடஞ்சிலையித்யாதி) [உரு "மஹாதநு:" "மஹத்தநு:" என்கிறபடியே அளவுடைத்தான வில்லை வளைத்த. (என்தலைவன்) வீரரஸத்தில் ப்ரதாநனான என்நாயன்.

(தேனமரித்யாதி) ராவணனுடைய மிடுக்காலே கல்பகவ்ருக்ஷத் தினுடைய பூவைப் பணிப்பூவிட்டுத் திரிவர்களாய்த்து தேவர்கள் முன்பு; அவன் தலை யறுப்புண்டவாறே, அத்தை ப்ராப்தவிஷ [நய யத்திலேயாக்கினார்களாய்த்து. தேன்மிக்குச் சோலைசெய்திருந்துள்ள கல்பகமானது உண்டாக்கின, திவ்யமாய் விலக்ஷணமாய் செவ்வியை யுடைத்தான பூக்களைக்கொண்டு, தேவர்கள் ஆச்ரயிக்கும்படியாக, கங்காதீரத்திலே ஸ்ரீபதரிகாச்மத்திலே வந்து ஸந்நிஹிதனானான். க.

வ்யா.—இரண்டாம்பாட்டு.—(கானித்யாதி)தன்னிலமான காட் டிலே ஸஞ்சரிக்கிற, உருஉண்டு-மான்-மாயாம்ர்கம், அத்தைக்கண்டு.

"சிலைகுனித்த" என்கையாலே ஹிரண்யாக்ஷனைச் சொல்லவொண்ணாதென் றருளிச்செய்கிறார் (இப்போதித்யாதி.) தநுவம்சம் - ராவணனுக்கு மாத்ர்வம்ச மாகையாலே, ஸமபிவ்யாஹார தாத்பர்யம் (ராவணனுடையவித்யாதி.)

"வணங்கும்படி - நிலமிடந்து" என்றந்வயம். ... ... க.

இரண்டாம்பாட்டு.—(கானிடையித்யாதி.) கோரமான ஸம்ஸாரப்ரளயத்தில் நின்றும் தம்மையெடுத்தபடியாலே, ப்ரஸ்துதமான வராஹாவதாராபதாநத்தில் பூமிப்பிராட்டிக் குபகரித்தவளவன்றிக்கே பெரியபிராட்டியார்க்காக ராவணவதம் பண்ணினமையையநுஸந்தித்தார் இழ்ப்பாட்டில்;அதுக்கடியான மாயாம்ர்க நிரஸ நாதிகளை யருளிச்செய்கிறா ரிப்பாட்டில் என்று ஸங்கதி கண்டுகொள்வது. "பன்றியாய்" என்று முதல்திருமொழியிலே ப்ரஸ்துதமானத்தை, "ஏனமுனாகி" என்று ஸ்மரித்தாரென்று திருவுள்ளம்.

௩.— இலங்கையும் கடலு மடலரும்துப்பி னிருநிதிக்கிறைவனும், அரக்கர்
குலங்களும்கெடமுன்கொடுந்தொழில்புரிந்தகொற்றவன்; கொழுஞ்சுடர்சுழன்ற-
விலங்கலினுரிஞ்சிமேல்நின்றவிசும்பில்வெண்துகில்கொடியெனவிரிந்து
வலந்தருமணிநீர்க்கங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே. ௩.

---

ப - ரை.—இலங்கையும் - ஒருவராலுமழிக்கப்போகாத லங்கையும், கடலும்- அதுக்கும் கீழான ஸமுத்ரமும், அடல் அரும் - ஒருவராலும் வெல்ல வொண்ணாத, துப்பில் - பலத்தையுடையனாய், இருநிதிக்கு இறைவனும் - சங்கநிதி பத்மநிதிகளையுடையனாயிருக்கிற ராவணனும், அரக்கர் குலங்களும் - ராக்ஷஸஜாதியும், கெட-நசிக்கும்படியாக, முன்-ராவணன் கைவிஞ்சினவன்று, கொடு-கொடிய, [ய தொழில் - வ்யாபாரங்களை, புரிந்த - பண்ணின, கொற்றவன்-ராஜாவான ஸர்வேச்வரன்; கொழு - விளங்காநின்றுள்ள, சுடர் - ஸூர்யன், சுழன்ற - சுழலவருகிற, விலங்கலில் - மேருபர்வதத்திலே, உரிஞ்சி - தாக்கி, மேல்நின்ற - அதுக்குமேலேயிருக்கிற, விசும்பில்-ஆகாசத்திலே, வெள்-வெளுத்த நிறத்தையுடைத்தாய், கொடித்துகில் என-த்வஜத்தில்கட்டப்பட்ட துணிபோலே, விரிந்து- பரந்து, வலம் [யரு தரும்-வேகத்தாலே பலத்தையுடைத்தாய், மணி-தெளிந்திருக்கிற, நீர்-ஜலம் நிறைந்த, கங்கையின் கரைமேல் - கங்காதீரத்திலுள்ள, வதரியாச்சிராமத்து- ஸ்ரீபதரிகாச்ரமத்திலே, உள்ளான்- நித்யவாஸம் பண்ணுகிறான், நெஞ்சே! அங்கே சென்று கிட்டப்பாராய் என்கிறார். ... ... ... ... ... ... (௩)

---

(சுடுசரம்துரந்து) ஒருவர்க்கும் தோற்றாதபடி மறைவது தோற் [உய றுவதாய்த் திரிகிற அத்தைக்கண்டு, பொறுக்கவொண்ணாதபடியான அம்பைவிட்டு; முன்பு. († கொடுந்தொழிலித்யாதி) க்ரூரமான செயலையுடையனான வாலியுடைய தசைந்து அகன்றிருந்துள்ள மார்விலே (க) கொலையம்பானது அழுந்தும்படிபண்ணி, அவ்வழியாலே அவனுடைய ப்ராணனையபஹரித்து, "மஹாராஜர்விரோதிபோ [உரு கப்பெற்றோம்!" என்று உகந்த அத்விதீயமான பலத்தை யுடையவன்.

(தேனித்யாதி) திருநாபீகமலத்தை உத்பத்திஸ்தாநமாக வுடைய ப்ரஹ்மாவோடே தேவர்களானவர்கள் அஹமஹமிகயா இழிந்து, ஆச்ரயணத்துக் குறுப்பாக ஸ்நாநம்பண்ணப்புக்கவாறே, ஒன்றால் குறைதல் நிறைதல் செய்யாதே ஏகரூபமாயிருக்கக்கடவ ஜலம் [௩ய பெருகுமாய்த்து; திருவடிகள் ஸஹ்யமாகையாலே. (வானிடைமுதுநீர்) ஆகாசத்திலேயாய்ப் பழைதான நீரென்றபடி. ... ௨.

வ்யா.—மூன்றாம்பாட்டு.—(இலங்கையுமித்யாதி) ஒருவராலழிக்கவொண்ணாதபடியான லங்கையும், அதுக்கும்கீழாம்படியிருக்கிற கடலும், ஒருவராலடற்க வரிய ஸாமர்த்யத்தை யுடையனாய் ஜயே [௩ரு ஷ்டனான வைச்ரவணனை வென்று வாங்கின சங்கநிதி பத்மநிதிகளை

---

"வாலிமாவலத்தொருவன்" என்றத்தை ஸ்மரிக்கிறாரென்று விவக்ஷித்து உரவோன்-மிடுக்கையுடைய வாலியென்றருளிச்செய்கிறார் (க்ரூரேத்யாதி.) தசைந்து - மாம்ஸளமாய். "அடு" - கொல்லுகிற.

ஸஹ்யமாகையாலே - திருக்காவேரிக்கு ஸஹ்யபர்வதம் உத்பத்திஸ்தாந [௬ய மானாப்போலேயாகையாலே. ... ... ... ... ௨.

மூன்றாம்பாட்டு.—(இலங்கையித்யாதி.) வாலிவதாநந்தரபாவியாய் முதற்பாட்டில் ப்ரஸ்துதமான ராவணவதத்தை ஸப்ரகாரமநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

---

† "கடுந்தொழில்" என்றும்பாடம். (க) கொலையம்பு - ஹிம்ஸகமானசரம்.

மூ.—துணிவினியுனக்குச்சொல்லுவன்மனமே!தொழுதெழு; தொண்டர்கள்தமக்கு பிணியொழித்தமரர் பெருவிசும்பருளும்பேரருளாளனெம்பெருமான்; [ப் அணிமலர்க்குழலா ரரம்பையர்துகிலு மாரமும்வாரிவந் தணிநீர் மணிகொழித்திழிந்தகங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே. ச.

ப - ரை.—மனமே !-நெஞ்சே!, இனி - இப்போது, உனக்கு - விஷயவைல க்ஷண்ய மறியாத உனக்கு, துணிவு-உறுதியான ஒருவார்த்தையை, சொல்லுவன்- சொல்லுகிறேன் கேள் என்று ஆழ்வாரருளிச்செய்ய ; அது என்? என்று நெஞ்சு வினவ ; தொண்டர்கள்தமக்கு - ஆச்ரிதரான நம்போல்வார்க்கு, பிணி - வ்ரோ [ப தியாயுள்ளவற்றை, ஒழித்து - போக்கி, அமரர் - நித்யஸூரிகளுடைய, பெரு விசும்பு - பரமபதத்தை, அருளும் - தந்தருளுமவனும், பேர் அருளாளன் - பரமக்ருபாவானுன எம்பெருமான் - ஸர்வேச்வரன் ; அணிநீர் - தர்சநீயமான ஜலமானது, மலர் - புஷ்பங்களாலே, அணி - அலங்கரிக்கப்பட்ட, குழலார்-மயிர் முடியையுடையரான, அரம்பையர்- அப்ஸரஸ்ஸுக்களுடைய, துகிலும்-பரியட்ட [டு ங்களேயும், ஆரமும்-நவரத்நங்கள் கோத்துச்சமைத்த ஹாரங்களையும், வாரி வந்து - திரட்டிக்கொண்டும், மணி - ரத்நங்களை, கொழித்து - வாரிக்கொண்டும், இழிந்த - வந்திழிகிற, கங்கையின்கரைமேல் - கங்கைக்கரையிலுள்ள, வதரியாச் சிராமத்து - ஸ்ரீபதரிகாச்ரமத்திலே, உள்ளான் - நித்யவாஸம்பண்ணுகிருன், அங்கே சென்று, அவனை,தொழுது - ஸேவித்து, எழு-வாயார ஸ்தோத்ரம்பண்ணு என்றருளிச்செய்கிருர். ... ... ... ... ... (ச)

யுடையனு யிருக்கிற ராவணனும், அவனுக்கு பலமான ராக்ஷஸஜாதி யாகவும் மண்ணுண்ணும்படியாக, பண்டு க்ரூரமான வ்யாபாரங்க ளைப் பண்ணின ராஜாவானவன்.“ఇక్ష్వాకూణామియం భూమిస్సశైలవనకాననా” “இக்ஷ்வாகூணமியம் பூமிஸ்ஸசைலவநகாநநா” என்னக்கடவதிறே. (கொழுஞ்சுடரித்யாதி) ஆதித்யனுனவன் சுழலவாராநின் [உடு றிருந்துள்ள மேருவிலே தாக்கி, மேல்நின்ற, விசும்பிலே- ஆகாசத்தி லே, வெளுத்தநிறத்தை யுடைத்தான கொடியாடையை விரித்தாப் போலே, இதுவந்துவிழும்போதை நீர்த்தெளிவிருக்கும்படி. (வலந் தருமணிநீர்) வேகத்தாலே மிடுக்கையுடைத்தாய்த் தெளிவையுடைத் தாயிருக்குமாய்த்து. ... ... ... ... நு.

வ்யா.—நாலாம்பாட்டு.—(துணிவினியுனக்குச் சொல்லுவன் மன மே தொழுதெழு) இப்போது உனக்கு உறுதியாக ஒரு நல் வார்த்தை சொல்லுகிறேன், நெஞ்சே ! கேள் ; சொல்லச்செய்தே பின்னை யும்சொல்லாததின் பலமேயாகாமே, நீயவனைத்தொழுது உஜ்ஜீவி [நடு க்கப்பாராய்.

மேருவாகிற த்வஜஸ்தம்பத்திலே வெளுத்த துகிலாலே கொடியைக்கட்டிவிட் டாப்போலே ஸ்வச்சமான நீரையுடைத்தான கங்கையென்றருளிச் செய்கிருர் (ஆதித்யனித்யாதி.) “உரிஞ்சி” என்றதினர்த்தம் (தாக்கியென்றது.) ... நு.

நாலாம்பாட்டு.—(துணிவினியித்யாதி.) அவதாரத்துக்கு ப்ரதாந ப்ரயோஜந மான ராவணவதத்தைக் கீழ்ப்பாட்டிலேயருளிச்செய்தவாறே, அதிமாநுஷ [சுய மானசெயலாகையாலே * அன்று சராசரங்களைவைகுந்தத்தேற்றினமையும் திரு வுள்ளத்திலே தோற்ற, அந்தப்ரஸங்கத்திலே அவனுடைய மோக்ஷப்ரதத்வத்தை யநுஸந்திக்கிருரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

“இனியுனக்கு-துணிவாக-சொல்லுவன்” என்று அந்வயித்தருளிச்செய்கிருர் (இப்போதித்யாதி.)

மூ.—பேயிடைக்கிருந்துவந்த மற்றவள்தன் பெருமுலைசுவைத்திடப்;பெற்ற
தாயிடைக்கிருத்தலஞ்சுவனென்றுதளர்ந்திடவளர்ந்தவென்தலைவன்;
சேய்முகட்டுச்சியண்டமும்சுமந்த செம்பொன்செய்விலங்கலிலிலங்கு-
வாய்முகட்டிழிந்தகங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே.டு.

ப-ரை.—வந்த - தாயின்வடிவுகொண்டுவந்த, பேய் - பூதனையுடைய, இடைக்கு இருந்து - மடியிலே இருந்து, அவள்தன் - அவளுடைய, பெரு - பெரிய, முலை - முலையை, சுவைத்திட - உண்ண ; அத்தைக்கண்ட, பெற்ற தாய் - பெற்ற தாயாரான யசோதைப்பிராட்டியானவள், இடைக்கு - தீங்கு செய்யவந்தவர்கள் மடியிலே, இருத்தல் - பொருந்தியிருக்கும் இருப்பைக் [ம கண்டு, அஞ்சுவன் - என்விளைகிறதோ ! என்று பயப்படாநின்றேன், என்று - என்று சொல்லி, தளர்ந்திட - கூசிப்பரிந்து வளர்க்க, வளர்ந்த - வளர்ந்தருளின, என்தலைவன் - என்ஸ்வாமியானவன் ; சேய் - உயர்ந்த, முகடு-சிகரத்தின், உச்சி- உச்சியிலே, அண்டம் - அண்டத்தை, சுமந்த - தரிக்கிற, செம்பொன்செய் விலங்கலில்-சிவந்தபொன்னால் செய்யப்பட்ட மேருபர்வதத்திலே, இலங்கு-விளங்[மரு காநின்றுள்ள, வாய் - இடமுடைத்தான, முகடு - சிகரத்தினின்றும், இழிந்த- வந்துவிழுகிற, கங்கையின் கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளான்—, நெஞ்சே! அவனைத்தொழுதெழு என்கிறார். ... ... ... ... ... (டு)

நீருறுதியாகச் சொல்லுங்காட்டில் அவன் நம்விரோதியைபபோக்கி நன்மையைத் தருமோவென்ன(பிணியித்யாதி) நம் விரோதியை [உம யும் போக்கி பரமபதத்தையும் நமக்குத்தரும். ஒருக்காலாச்ரயித்த மாத்ரத்திலே நம்விரோதியைப்போக்கி நித்யஸூரிகளிருப்பை நமக் குப் பண்ணித்தரும் பெரியக்ர்பாவானான ஸர்வேச்வரன்.

(அணியித்யாதி)க்ர்ஷ்ணன்படியாய்த்துஜலத்தினுடையசெருக்கு மிருப்பது. மலராலே யணியப்பட்ட குழலையுடையரான அப் [உடு ஸரஸ்ஸுக்களுடைய பரியட்டத்தையும் ஹாரத்தையும் வாரியணிகிற நீரென்னுதல்; அழகியநீரென்னுதல். இவற்றைத் திரட்டிக்கொண்டு ஓர்சநீயமான நீரானது ரத்நங்களைக் கொழித்துக்கொண்டு வந்திழியா நின்றுள்ளவதரியாச்சிராமத்துள்ளானை — தொழுதெழு என்கிறவிது இத்திருமொழி க்கெல்லாம் க்ரியை. ... ... ... ச.

வ்யா.—அஞ்சாம்பாட்டு.—(பேயித்யாதி)(வந்த — பேயிடைக்கு இருந்து) யசோதைப் பிராட்டி யுடைய வடிவைக் கொண்டு வந்த

"தொண்டர்கள்தமக்கு - பெருவிசும்பருளும், மனமே!தொழுதெழு" என்றவர்க்கு விவக்ஷிதமான வுட்கருத்தையருளிச்செய்கிறார் (நம்விரோதியையித்யாதி.) வாக் யார்த்தத்தையருளிச்செய்கிறார் (ஒருக்காலித்யாதி.) [கூடு

வஸ்த்ராபஹரணத்துக்கு ப்ரஸித்தி க்ர்ஷ்ணனிடத்திலேயாகையாலே அத் தை த்ர்ஷ்டாந்திகரித்துக்கொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார் (க்ர்ஷ்ணனித்யா தி.) "அணிகிறநீர்" என்றது - கரையையலங்கரிக்கிற நீரென்றபடி. ... ச.

அஞ்சாம்பாட்டு.—(பேயிடைக்கித்யாதி.) துகில்வாரிவந்ததென்னும் ப்ரஸங்க த்திலே க்ர்ஷ்ணனுடைய வஸ்த்ராபஹரணுபதாநத்தில் செருக்கும் ஸ்மர்த [சம மாய் அதுக்குஹேதுவாக யசோதைப்பிராட்டி வளர்த்தபடியை யநுஸந்திக்கிற ரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

"வந்த" என்று விசேஷிக்கைக்குத் தாத்பர்யம் (யசோதையித்யாதி.)

மூ.—தேரணங்கல்குல்செழுங்கயற்கண்ணிதிறத்தொருமறத்தொழில்புரிந்து,
பாரணங்கிமிலேறேழும்முன்னடர்த்தபனிமுகில்வண்ணனெம்பெருமான்;
காரணந்தன்னால் கடும்புனற்கயத்த கருவரை பிளவெழக்குத்தி
வாரணங்கொணர்ந்தகங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே.

ப - ரை.—முன் - ஏழு ரிஷபங்களை நேரேநிறுத்தினவன்று, தேர்-தேர்த்தட்டானது, அணங்கு - வருந்தி ஒப்பாகாநின்றுள்ள, அல்குல் - நிதம்பத்தையுடையளாய், செழு - அழகிய, கயல் - கயல்மத்ஸ்யம்போன்ற, கண்ணிதிறத்து - கண்களையுடைய நப்பின்னைப்பிராட்டியைத் திருமணம்புணருகைக்காக, மறம்-கோபத்தையுடைத்தா யிருப்பதான,ஒரு தொழில்-ஒருசெயலை,புரிந்து-செய்து, பார்-[ம
பூமியிலுள்ளார், அணங்கு - நோவுபடும்படியான, இமில் - கருத்துக்களையுடைய, ஏறு - ரிஷபங்கள், ஏழும் - ஏழையும், அடர்த்த-நிரஸித்தவனும், அத்தாலே, பனி-குளிர்ந்த, முகில்- மேகம்போன்ற, வண்ணன்-திருநிறத்தையுடையனும், எம்பெருமான்-எனக்கு ஸ்வாமியானவன் ; காரணந் தன்னால் - பகீரதன்செய்த தபஸ்ஸை ஹேதுவாக, கடு - அதிகவேகத்தையுடைய, புனல் - ஜலத்தை, கயத்த - [மரு
தகைந்த, கரு - பெரிய, வரை - மலையானது, பிளவுஎழ - பிளக்கும்படி, குத்தி - அடித்து, வாரணம் - அங்குண்டானயானைகளை, கொணர்ந்த - தள்ளிக்கொண்டு வந்திழிகிற, கங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளான்—, அவனை, நெஞ்சே! தொழுதெழு என்கிறார். ... ... ... ... (கூ)

பூதனையுடைய மடியிலேயிருந்து,அதுக்குமேலே அவளுடைய [உம
பெரியமுலையையுண்டிட. (பெற்றதாயித்யாதி)இத்தைக்கண்ட யசோதைப்பிராட்டியானவள்,நாம் மடியிலேவைத்து முலைகொடுத்துப்போந்த வாஸனைகொண்டு இவன் கண்டவாயகராய்நம்மை அநுகரித்து வந்தார் மடியிலே பொருந்தி யவள்முலையுண்கிறதென்று கூசி, அவள் பரிந்து வளர்க்க வளர்ந்த வென்தலைவன். [உரு

(சேயித்யாதி) ஓங்கியிருந்துள்ள சிகரத்தினுடைய வுச்சியாலே அண்டத்தை தரிக்கிற சிவந்தபொன்னாலே செய்யப்பட்ட மேருவிலே விளங்காநின்றுள்ள இடமுடைத்தான சிகரத்தில்நின்றுமிழிந்தகங்கையின்கரைமேலே வதரியாச்சிராமத்திலேவந்து ஸந்நிஹிதனானான்.(ரு).

வ்யா.—ஆரும்பாட்டு.—(தேரித்யாதி) தேரானது வருந்தி [நடம
யொப்பாகாநின்றுள்ள, அல்குலையுடையளாய் — நிதம்பப்ரதேசத்தையுடையளாய். அணங்கென்று-நோவுபடுகைக்குப்பேர். தேர்த்தட்டை நிதம்பத்துக்குஒப்பாகச் சொல்லக்கடவர்கள். அழகிய கயலோடொத்த கண்களையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காக, மறத்தையுடைத்தாயிருப்பதொரு செயலைச்செய்து, பூமியாக நோவுபடும்படியான [நடரு

"மற்று" என்றதினர்த்தம் (அதுக்குமேலேயென்றது.)பெற்ற தாய் மடியிலேவைக்க அஞ்சினாளென்றால், மேலே " வளர்ந்த" என்னக்கூடாமையாலே, அதுக்கேடாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இத்தையித்யாதி.) மிகவும் பரிவோடேவளர்த்தாளென்று கருத்து. "வாய்" என்றதினர்த்தம் (இடமுடைத்தானவென்றது.) ... ரு.

ஆரும்பாட்டு.—(தேரணங்கித்யாதி.) வளர்ந்தபின்பு நப்பின்னையைத் [சம
திருமணம் புணர்ந்தமையைநினைத்தநுபவிக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.
(வருந்தியொப்பாகாநின்றுள்ள) என்றதுக்கு, அணங்கென்று - நோவாய், அத்தாலே - மிகவும் ஸத்ர்சமன்றென்று பலித்ததென்றுகருத்து. மறத்தை - ரிஷபங்களி னிடத்தில் கோபத்லதை.

மூ.— வெந்திறற்களிறும்வேலைவாயமுதும்விண்ணொடுவிண்ணவர்க்கரசும்,
இந்திரற்கருளியெமக்குமீந்தருளு மெந்தையெம்மடிகளெம்பெருமான்;
அந்தரத்தமர ரடியிணைவணங்க வாயிரமுகத்தினு லருளி,
மந்தரத்திழிந்தகங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே.எ

ப - ரை.—வெம்திறல் - மிகுந்த மிடுக்கையுடைய, களிறம் - ஐராவதமென்னு யானையையும்,வேலைவாய்-திருப்பாற்கடலிலுண்டான,அமுதம்-அம்ருதத்தையும், விண்ணொடு- ஸ்வர்க்கத்தையும், விண்ணவர்க்கு அரசும்-தேவர்களுக்கு ராஜாவாயிருக்கு மிருப்பையும், இந்திரற்கு - ப்ரயோஜநாந்தரபரனான இந்த்ரனுக்கு, அருளி-கொடுத்து, எமக்கும் - அநந்யப்ரயோஜநரான என்போல்வார்க்கும், [மீந்தருளும்-தன்னைக்கொடுத்தருளுமவனாய், எந்தை-எனக்குபிதாவாய்,எமஅடிகள்-எனக்கு ஸ்வாமியாய், எம்பெருமான் - எனக்கு சேஷியானவன் ; அந்தரத்து - ஸ்வர்க்கத்திலுள்ள, அமரர் - தேவர்கள், அடியிணை - திருவடிகளை, வணங்க - ஆச்ரயிக்கும்படி ; ஆயிரம்முகத்தினால் அருளி-ஆயிரம் முகங்களாலே புகவேணும் என்று ஸர்வேச்வரன் திருவுள்ளமாயருள, மந்தரத்து-மந்தரபர்வதத்திலே, [டுரு இழிந்த - வந்திழிந்த, கங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளான்—, அவனை நெஞ்சே ! தொழுதெழு என்கிறார். ... ... ... ... (எ)

கருத்துக்களையுடைய ரிஷபங்களேழையும் நிரஸித்து, அநந்தரம், விரோதிபோகப்பெற்ற ஹர்ஷத்தாலே, குளிர்ந்த மேகம்போலேயிருந்துள்ள வடிவையுடையனாய், அவ்வடிவாலே யென்னை [௨ம அநந்யார்ஹனாக்கினவன்.

(காரணமித்யாதி) ஸகீரதன் கங்கையை யவதரிப்பிக்கிற போது நடுவழியிலே ஒருமலை தகைந்துகொடுநின்றதாய், அத்தை யிரண்டு பிளவாம்படி குத்தி யானைகளையு முருட்டிக்கொண்டு இவ்வருகே போந்து இழிந்ததாகச் சொல்லக்கடவது. அதுக்கடி யென்னென்னில் (காரணந்தன்னால்) தன்னுடைய தபோபலத்தாலே, ஸஸ்மமாய்க் கிடந்த தன்னுடைய பாட்டன்மாருடைய சுத்யர்த்தமாக கங்கையைப் பெறவேணுமென்று, தபஸ்ஸுபண்ணினானிறே; அந்தகாரணத்தாலே. பழமையாலேவந்த மிடுக்கையுடைய ஜலத்தையுடைத்தான, கருவரையானது இரண்டுபிளப்பாம்படி குத்தி அங்குண்டான [௩ம ஆனைகளைத்தள்ளிக்கொண்டுவந்திழிகிற. அன்றிக்கே,அம்மலைதகைந்தவளவிலே இந்த்ரனைநோக்கி தபஸ்ஸுபண்ணினானாய், பின்னை அவன் தன்சதுர்த்தந்தியையிடுவித்து அமமலையிருபிளவாம்படிகுத்துவித்து பின்னை அவ்வானைகொண்டுவந்ததாக வொரு ப்ரமாணப்ரஸித்தியுண்டு; அத்தைச் சொல்லிற்றாகவுமாம். ... ... ௬.

வ்யா.—ஏழாம்பாட்டு.—(வெந்திறலித்யாதி) ஐராவதத்தையும், கடலி லம்ர்தத்தையும், ஸ்வர்க்கத்தையும், அத்தோடேகூட தேவர்களுக்கு ராஜாவாயிருக்கு மிருப்பையும், இந்த்ரனுக்குக் கொடுத்தருளி,

"இமில்" என்றதினர்த்தம் (கருத்துக்களையென்றது.)

பழமை - ஸ்வபாவம்; அத்தாலே வந்த மிடுக்கு - அதிவேகம். ஜலத்தை [௬ம யுடைத்தானவென்றது - * கங்கைக்கு விசேஷணம். ... ... ... ௬.

ஏழாம்பாட்டு.—(வெந்திறலித்யாதி.) நப்பின்னைப்பிராட்டிக்குத் தன்னைக் கொடுத்த வளவன்றிக்கே ப்ரயோஜநாந்தர பரனுக்கும் அபேக்ஷித ஸம்விதானம் பண்ணினானென்று அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதியுட்கொண்டு வாக்யார்த்த மருளிச்செய்கிறார் (ஐராவதத்தையுமித்யாதி.)

மூ.—மான்முனிந்தொருகால்வரிசிலைவளைத்தமன்னவன்; பொன்னிறத்தரவோன்—
ஊன்முனிந்தவனதுடலிருபிளவாவுகிர்நுதிமடுத்து, அயனரனைத் —
தான்முனிந்திட்டவெந்திறற்சாபந்தவிர்த்தவன்; தவம்புரிந்துயர்ந்த—
மாமுனிகொணர்ந்தகங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே.

ப-ரை.—ஒருகால் - பிராட்டி "இம்மானைப்பிடித்துத்தரவேணும்" என்று அபேக்ஷித்தபோது, மான் - மான்வடிவுகொண்டுவந்தமாரீசனை, முனிந்து - பின்தொடர்ந்துசென்றும் அது கைக்குளட்டாமையாலே கோபித்து, வரி - அழகிய சிலை - வில்லை, வளைத்த - அதின்மேலேஎய்த, மன்னவன் - ராஜாவாய்; பொன்னிறம் - பொன்போலும்நிறத்தையும், உரவோன்-மிடுக்கையுமுடைய ஹிரண்யனை, [மு] முனிந்து - ஆச்ரிதவிரோதிஎன்றுசீறி, அவனது - அவனுடைய, ஊன் - மாம்ஸம் நிறைந்த, உடல் - சரீரமானது, இருபிளவா - இரண்டுகூறும்படி, உகிர் - நகங்களின், நுதி - நுனியை, மடுத்து - புகுத்தவனாய்; அயன்தான் - முன்பு "என் தலையையறு" என்றுஅறுமதிபண்ணினப்ரஹ்மாதானே, அரனை - ருத்ரனை, முனிந்து-கோபித்து,இட்ட-"கபாலியாகக்கடவாய்" என்றுசபித்த, வெந்திறல் -[மி] மிகவும்க்ரூரமான, சாபம் - சாபத்தை, தவிர்த்தவன் - போக்கின ஸர்வேச்வரன்; தவம்புரிந்து - தபஸ்ஸுபண்ணி, உயர்ந்த - அத்தாலேப்ரஹ்மர்ஷியான, மாமுனி - விச்வாமித்ரன், கொணர்ந்த - பெருமாளையும் இளையபெருமாளையும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டுசென்ற, கங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளான்—, நெஞ்சே! தொழுதெழுஎன்கிறார். ... ... ... ... (அ)

எனக்குத் தன்னைத் தந்தருளின. (எந்தை) எனக்கு ஜநகன், எனக்குஸ்வாமி, இவற்றாலே யென்னை அநுக்ரஹிக்கினவன்.

(அந்தரத்தமரரித்யாதி) ஸ்வர்க்கத்தில் தேவர்கள் திருவடிகளை யாச்ரயிக்க,ஒருமுகஞ்செய்துவந்து புகில் கடல் பொறுதென்று பார்த்து, "ஆயிரம்முகத்தினாலே போய்ப்புகு" என்று, ஸர்வேச்வரன் திருவுள்ளமாயருள; அப்படி மந்தரபர்வதத்தில் நின்றும் வந்திழிந்ததாய்த்து. அன்றிக்கே, கங்கைதன்னை யாச்ரயிக்க அதுதா னருளுகை யாகவுமாம். (ஆயிரமுகத்தினால்) மேருவிலேயிழிந்து, மந்தரத்திலே யிழிந்து, ஹிமவானிலேயிழிந்து, இங்ஙனே பலவகைகளாலே வரும் படியைச் சொல்லக்கடவதிறே. .. ... ... எ.

வ்யா.—எட்டாம்பாட்டு.—(மான்முனிந்தித்யாதி) பெருமாளை

"எமக்கும்" என்றத்தால் - களிறுமுதலானவற்றைத் தமக்குத் தந்தானென்று தோற்றினாலும், அதுஇவர் ப்ரக்ர்திக்குச் சேராதென்றுவிவக்ஷித்து, (தன்னை)என்று அத்யாஹரித்தருளிச்செய்கிறார் (எனக்கித்யாதி.)

"நாளுநந்திருவுடை யடிகள்தம் நலங்கழல் வணங்கி" என்கிற விடத்தில் "வணங்கி" என்கிறவிது-வினையெச்சமாய்; வணங்கவென்றுஅர்த்தமா யிருக்கிறதென்று வ்யாக்யானம் செய்தாப்போலே, இங்கே "அருளி" என்றத்தை - அருள என்றாக்கி, இம்முகத்தினால் புக என்றுஅத்யாஹாரமும் திருவுள்ளம் பற்றி, ஒரு யோஜனை யருளிச்செய்கிறார் (ஸ்வர்க்கத்தி லித்யாதி.) இந்த யோஜனையில், "அடியிணை" என்றதுக்கு ஸ்வாரஸ்யமுண்டென்று திருவுள்ளம். "அருளி" என்றது ஸ்வாரஸ்யத்தைப்பற்ற யோஜநாந்தரம் (அன்றிக்கே யித்யாதி) இந்தயோஜனையில், "மந்தரம்" என்று - பஞ்சமியன்றிக்கே, ஸப்தமியாய், அது [illegible] லக்ஷணமென்று கருத்து. ... ... ... ... ... ... எ.

"இம்மானைப் பிடித்துத்தரவேணும்" என்று பிராட்டியருளிச்செய்ய, அவரும் அதின்பின்னேதொடர்ந்து போனவிடத்து மாயாம்ர்கமாகை யாலே அதுபிடிதாராதேயொழிய, அத்தைச்சீறி, அதின்மேலே தர்ச நீயமான வில்லைவளைத்த செருக்கன். (பொன்னிறத்துரவோனித்யாதி) பொன்போலேயிருந்துள்ள நிறத்தையும் மிடுக்கையுமுடையனானவன். ஹிரண்யனென்றபடி; அவனுடைய துர்மாநத்தாலேவளர்ந்த மாம்ஸ த்தைச்சீறி, அதுக்குஆச்ரயமான வுடலானது இருபிளவாம்படி திரு வுகிரினுடைய நுனியைமாட்டி.

(அயனித்யாதி) பிராட்டிதிறத்திற்செய்யுமத்தை ஒருசிறுக் [மு கன் விஷயத்திலே செய்தான்; அவன்விஷயத்திற்செய்தத்தை துர்மா நியான ருத்ரன்விஷயத்திலே செய்தானாய்த்து. முற்பட இவன் செருக்கித்திரிகிறது பொறுக்கமாட்டாமை, (க) செய்திடுவானுக்கு என்று "என்தலையையறு" என்றுஅநுமதிபண்ணி, பின்னேயும் தானே இவனை "இப்படிசெய்தான்" என்று-"[illegible]" "கபாலீத்வம் ஹவிஷ்யஸி" என்று பழியிட்டானாய்த்து. பெற்றதமப்பன் பகையாக, அவனி லண்ணியவுறவா யுதவுமவனாய்த்து.

(தவமித்யாதி) தவம்புரிந்துயர்ந்த மாமுனிகொணர்ந்த வென் கிறது – விச்வாமித்ரனை. அவன் க்ஷத்ரியனாயிருக்கச்செய்தேயும் தபோபலத்தாலேப்ரஹ்மர்ஷியானானிறே. அவன்பெருமாளையும்இளை யபெருமாளையும் நடத்திக்கொண்டுவந்தது அக்கரையேயாகையாலே, அத்தைச்சொல்லிற்றாகவுமாம். தபஸ்ஸைச்செய்து உயர்ந்தவென்ற படி. இதுக்கு, ஸ்ரீபராங்குசதாஸர், "ஜீயா! 'மாமுனிபுகன்ற' என்று பாடபேதத்தைப்பண்ணி அதினுடைய ப்ரபாவத்தைப் பிள்ளைகளுக்கு ச்சொல்லிக்கொடுபோந்தானிறே! அத்தைச்சொல்லிற்றாகவுமா [உரு மே!" என்ன; "அதுக்கு நமக்கு பலம்போராது" என்றருளிச்செய் வர். அன்றிக்கே, ஸரீரயென்றன்னையே சொல்லுகிறதாய், அவன் கொடு வந்த கங்கையென்னுதல். ... ... ... ... அ.

---

எட்டாம்பாட்டு.—(மானித்யாதி.) இந்திரற்கருளின வளவன்றிக்கே அநந்யை யானவளுக்கும் அர்ப்பகனுக்கும் பிச்சையாண்டிக்கும் கூடக் கையாளாய் அபே க்ஷிதங்கள் செய்யுமவனென்று சிலகுணாநுஸந்தாநம் பண்ணுகிறாரென்று ஸங்கதி.

"ஒருகால் - மானைமுனிந்து - வரிசிலைவளைத்த மன்னவன்" என்று அந்வயம் விவக்ஷித்து ஸஹேதுகமாக தாத்பர்ய மருளிச்செய்கிறார் (பெருமாளையித்யாதி.) "ஒருகால்-" ஒரு கால விசேஷத்திலே.

(பிராட்டி) இத்யாதிவாக்யத்துக்கு - அபிமதையாய் நித்யாநபாயிநிக்குக் கை யாளானமையைக்காட்டிலும் ஆசாலேசமுடைய ப்ரஹ்லாதன் சொலவுக்குக் காரி யம் செய்ததேற்றம்; அதிலும், அரன்சாபம் தீர்த்த தேற்றமென்று ஈடுபாட்டிலே தாத்பர்யம். "அயன்-தான்முனிந்திட்ட" என்கையாலே-முனிகைக்கு யோக்யதை யில்லாமை தோற்றுகையாலே, அத்தை யருளிச்செய்கிறார் (முற்படவித்யாதி.)

சப்தார்த்தம் (தபஸ்ஸையித்யாதி.) ஜீயாவென்றது-நம்பிள்ளையை பூஜ்யோக்தி யாலே ஸம்போதித்தபடி. (அதுக்கு நமக்கு பலம்போராது) என்றதுக்கு - ஆழ் வார் திவ்யஸூக்தியைத் திருத்தி பாடபேதம்பண்ணுகைக்கு பலம் போராதென்று நம்பிள்ளை யருளிச்செய்தாரென்று கருத்து. ... ... ... அ.

---

(க) செய்திடுவானுக்கு - செய்யக்கடவன்: "பட்டிடுவானுக்கு" என்றாப்போலே.

மூ.—கொண்டல் மாருதங்கள் குலவரை தொகுநீர்க்குரைகடலுலகுடனனைத்தும்-
உண்டமாவயிற்ரோ னொண்சுடரேய்ந்த வும்பருமூழியுமானான்;
அண்டமூடறுத்தன்றந்தரத்திழிந்தங்கவனியாளலமரப் பெருகும்-
மண்டுமாமணிநீர்க்கங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே. ௧.

ப - ரை.—கொண்டல் - மேகங்களையும், மாருதங்கள் - வாயுஸமூஹத்தையும், குலவரை - குலபர்வதங்களையும், தொகுநீர் - ஜலஸம்ருத்தியையுடைத்தாய், குரை - சப்தியாநின்றுள்ள, கடல் - ஸமுத்ரங்களையும், உலகுடன்-பூமியையும், அனைத்தும் - மற்றுமுள்ளபதார்த்தங்களையும், உண்ட - அமுதுசெய்தருளின,மா - பெரிய, வயிற்றோன்-திருவயிற்றையுடையனாய்;ஒள் - ப்ரகாசிக்கிற, சுடர் - சந் [யு த்ரஸூர்யர்களை,ஏய்ந்த-உடைய, உம்பரும்-மேலுலகங்களையும்,ஊழியும்-கல்பங்களையும்,ஆனான்-ப்ரகாரமாகவுடையனாயிருக்கிற ஸர்வேச்வரன்;அன்று-பகீரதன்கங்கையைஅவதரிப்பிக்கிறபோது, அண்டம் - ப்ரஹ்மலோகத்தை, ஊடுஅறுத்து - இடைவெளியாக்கிக்கொண்டு, அந்தரத்து - ஆகாசத்தில்நின்றும், இழிந்து - கீழிழிந்து, அவனியாள்-ஸ்ரீபூமிப்பிராட்டியானவள்,அலமர-பொறுக்கமாட்டாதே வருந் [டு தும்படி, பெருகும் - ப்ரவஹிக்குமதாய், மண்டு - நெருங்கி, மா - நிறைந்து, மணி - தெளிந்த, நீர் - ஜலத்தையுடைத்தான, கங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளான்—. ... ... ... ... ... (௧)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு.—(கொண்டல் மாருதங்கள்)மேகங்கள், வாயுஸ்கந்தம், குலபர்வதங்கள், ஜலராசியை யுடைத்தாய் [உம் வோஷியாநின்றுள்ள கடல்,லோகங்களோடேஸர்வபதார்த்தங்களையும் வைக்கப்பட்ட. (மாவயிற்றோன்) இவற்றை வயிற்றிலே வைத்தவிடத்திலும் இவைதா னளவுபட்டு வயிறே பெருத்திருக்கை. “ வல்வயிற்றுப்பெருமான்” என்னக்கடவதிறே. (ஒண்சுடரித்யாதி) சந்த்ரஸூர்யர்களை யுடைத்தான உபரிதநலோகத்தையும், காலவிசேஷமான காலத்தையும், தான் என்று சொல்லலாம்படியானான். இவை ப்ரகாரமாக, தான் ப்ரகாரியாய்நின்றான்.

(அண்டமித்யாதி) அண்டமுண்டு - ப்ரஹ்மலோகம், அதின்நடுவே வழிகண்டுபோந்து,அதுக்குஇவ்வருகில் அந்தரிக்ஷத்திலே போந்திழிந்து,எல்லாவற்றையும்பொறுக்கக்கடவ,அவனியாளுண்டு-பூ [ங்ம மி, அவள் பொறுக்கமாட்டாதே தடுமாறும்படி பெருகுமாய்த்து. (மண்டுமாமணிநீர்) எங்குமொக்கப்பரந்து பெருநீராய், அதடையத் தெளிந்திருப்பதான கங்கையின்கரையிலே. ... ... ௧.

ஒன்பதாம்பாட்டு.—(கொண்டலித்யாதி.) அரணை வெந்திறற்சாபம் தவிர்த்தவளவேயோ, ஸர்வவிஷயமாக ஆபத்ஸகனன்றோ என்றநுஸந்திக்கிறானென்று [டு ஸங்கதி கண்டுகொள்வது.

வாயுஸ்கந்தமென்றது - வாயுஸமூஹமென்றபடி. “மா” என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (இவற்றை யித்யாதி.) பெருத்திருக்கை-மாஹாத்ம்யத்தை யுடைத்தாயிருக்கை ; “అణ్డానాంత్వదుదరమాహుర్మనస్తః” “ அண்டாநாம்த்வதுதரமாஹுர் மநீஷிண:” என்ற ச்லோகமநுஸந்தேயம். ... ... ... ... ௧.

மூ.—வருந்திரைமணிநீர்க்கங்கையின் கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானை,
கருங்கடல்முந்நீர் வண்ணனையெண்ணிக் கலியன்வாயொலிசெய்தபனுவல்
வரஞ்செய்தவைந்துமைந்தும்வல்லார்கள், வானவருலகுடன்மருவி,
இருங்கடலுலகமாண்டு வெண்குடைக்கீ ழிமையவராகுவர்தாமே. ம.

ப - ரை.—வரும் - பெரியவேகத்தோடேவருகிற, திரை - அலைகளையுடைத்தாய், மணி - தெளிந்த, நீர் - ஜலத்தையுடைத்தான, கங்கையின்கரைமேல் - கங்கைக் கரையிலுள்ள, வதரியாச்சிராமத்து - ஸ்ரீபதரிகாச்ரமத்திலே, உள்ளானை - நித்ய வாஸம்பண்ணுமவனாய், கரு - கறுத்த, முந்நீர் - மூன்றுவகைப்பட்டநீரையுடைத்தான, கடல்வண்ணனை - கடல்போன்றதிருநிறத்தையுடையவனை, எண்ணி - அநு[ம] ஸந்தித்து, கலியன் - ஆழ்வாரருளிச்செய்ததாய், ஒலிசெய்த - சப்தஸந்தர்ப்பமான, பனுவல்வாய் - பாட்டுக்களில், வரம்செய்த - ச்ரேஷ்டமாகப்பண்ணின, ஐந்தும்ஐந்தும் - இப்பத்துப்பாட்டுக்களையும், வல்லார்கள் - அர்த்தத்தோடுசொல்ல வல்லவர்கள்; இரு - பெரிய, கடல் - கடலாலேசூழப்பட்ட, உலகம் - இப்பூமியை, வெள் - வெளுத்த, குடைக்கீழ் - குடைநிழலின்கீழேயிருந்து, ஆண்டு - செங் [மரு] கோல்செலுத்தி, பின்பு, வானவர் - இந்த்ராதிதேவர்களுக்கு நிர்வாஹகனான ப்ரஹ்மாவினுடைய, உலகுஉடன் - ஸத்யலோகத்தையும், மருவி - கிட்டி அநுபவித்து, இமையவர்ஆகுவர் - நித்யஸூரிகளோடு ஒருகோவையாகப்பெறுவர். (ம)

வ்யா.—பத்தாம்பாட்டு.—(வருமித்யாதி) பெரியவேகத்தோடே வருகிற, திரைகளையுடைத்தாய்த்தெளிந்தஜலத்தையுடைத்தான [உம] கங்கையின்கரைமேலே ஸ்ரீவதரிகாச்ரமத்திலேயிருக்கிற ஸர்வேச்வரனைக் கவிபாடிற்று. (கருங்கடல்முந்நீர்) முந்நீரான கருங்கடல். ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலமான மூன்றுவகை நீரையுடைத்தாய்க் கறுத்தநிறத்தையுடைய கடல்போலேயிருக்கிற நிறத்தையுடையவனை அநுஸந்தித்து ஆழ்வாரருளிச்செய்தபாட்டுக்களிவைதான்!.[உரு] (வரம்செய்த) ஊமவத் ப்ரஸாதலப்யமான பத்துப்பாட்டையும் வல்லவர்கள். அன்றியே, வரிஷ்டமான பத்துப்பாட்டையுமென்னுதல். (வானவரித்யாதி) பெரியகடல்சூழ்ந்தபூமியை (க) ஏகாதபத்ரமாக நடத்தி, பின்பு ப்ரஹ்மபதத்தைநிர்வஹித்து, அநந்தரம் நித்யஸூரிகளோடொருகோவையாகப்பெறுவர். இத்தால்சொல்லிற்றாய்த்து-[௬ம] இவனஹிஸங்யிபண்ணினவற்றை யெல்லாம் தருமென்றபடி.

"அறிவுடையார் அபுருஷார்த்தமென்று காற்கடைக்கொண்ட ஐச்வர்யத்தை 'வேண்டேன்மனைவாழ்க்கை' என்றும் 'போந்தேன்' என்றும் (உ) வீதராகராய்ப்போந்தவிவர், இப்போது ஐச்வர்யத்தை பலமாகச்சொல்லுவானென்?" என்று ஜீயர் பட்டரைக்கேட்க ;[௬ரு]

பத்தாம்பாட்டு.—(வருந்திரையித்யாதி)இதுவதானென்று - வ்யாக்யாதர்வாக்யமாதல், "பனுவல்" என்றஆழ்வார்கருத்தாதல். அர்த்தக்ரமத்தைப்பற்ற "இருங்கடலுலகம்-வெண்குடைக்கீழ்-ஆண்டு - வானவருலகுடன் மருவி - இமையவராகுவர் தாமே" என்று அந்வயித்தருளிச்செய்கிறார் (பெரியகித்யாதி.)

(போந்தேனென்றும்) என்ற வநந்தரம், துறந்த என்று சேஷம். [௬ம]

(க) ஏகாதபத்ரமாக - ஈராசன்றிக்கே. (உ) வீதராகர் - விரக்தர்.

"திருமங்கையாழ்வாரவதரித்தபின்பு, த்யாஜ்யமானஐச்வர்யமும் பரம புருஷார்த்துக்குள்ளே புக்குப்போய்த்துக்காணும்–'ஈச்வரனேயாக வுமாம் நித்யஸூரிகளேயாகவுமாம் ராஜாவாகவுமாம் பறித்தஹாமவத சேஷமாக்கலாமாகில்' என்றுமிவரிருப்பது" என்றருளிச்செய்தாராம்.

அடிவரவு.—ஏனம் கான் இலங்கை துணிவு பேய் தேர் வெந்திறல் மான் கொண்டல் வருந்திரை கலே.

திருமங்கையாழ்வார்திருவடிகளேசரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

"வேண்டேன்மனைவாழ்க்கையை" என்றுமவர்தாமே ஐச்வர்யத்தைபலமாகச் [ம சொல்லுகையாலே, ஓராகாரத்தாலே த்யாஜ்யமானது ஆகாராந்தரேணஉபாதேய மாய்த்தென்று விவக்ஷித்து,பட்டர் பரிஹரித்தமையை யருளிச்செய்கிறார்(திருமங் கையாழ்வாரித்யாதி.) உள்ளே புக்கபடி யெங்ஙனேயென்ன (ஈச்வரனேயித்யாதி;) ஈச்வரபதார்த்தமாகவுமாம், பாகவதபதார்த்தமாகவுமாம், ராஜத்ரவ்யமாகவுமாம், ததியர்க்கு விநியோகமானாலதுவே புருஷார்த்தமென்றிருப்பரென்றபடி. [மரு ஈச்வரபதார்த்தத்தை பாகவதசேஷமாக்கினால் அது அவனுக்குகப்பாகையாலும் ராஜத்ரவ்யத்தைப் பறித்து பாகவதசேஷமாக்கினால்ப்ரத்யவாயமின்றிக்கே ஸ்வரூ பானுரூபமாகையாலும் அவைகூடிற்றே யாகிலும், பாகவத பதார்த்தத்தைப் பறித்து பாகவதர்க்குக்கொடுக்கக்கூடுமோ வென்னில்; அவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்க ளென்றறியாதே பறித்தானாகிலும் தோஷமுண்டாகையாலே அதுவே பாக [உம வதவிஷயத்திலே விநியோகமானால் அர்த்தேதோஷம் வாராதென்றுகருத்தாகவுமாம். ஸம்பந்நராய்ச் சிலரிருந்தால் நிரவகாசராயிருப்பார்க்கு அவர்கையில் நின்றும் பறித்துக்கொடுத்தால் அவர்கள் பாகவதசேஷமாய்த்தே! என்று உகப்பராகை யாலே, தோஷமில்லை யென்று கருத்தாகவுமாம். இங்ஙனன்றாகில், பாகவதஸ்வத் தையெடுத்து பாகவதர்க்குக்கொடுக்கைக்கு சாஸ்த்ரம் இசையாதிறே; ப்ர [உரு ஹ்மபதத்தளவும் சொன்னது - ஐச்வர்யத்துக்கு மேலெல்லை யாகையாலே. ம.

ஜீயர்திருவடிகளேசரணம்.

முதற்பத்து, அஞ்சாந்திருமொழி - கலையும். ப்ரவேசம்.

வ்யா.—ஸௌஹரி ஹோமத்துக்குறுப்பாக அநேகம் வடிவுகொ ண்டாப்போலே ஆச்ரிதரையநுபவிப்பிக்கைக் குறுப்பாக உகந் [கூம தருளின நிலங்களெங்கும் புகுந்து ஸந்நிதிபண்ணிற்றாய்த்து அவன்; இனி, இவர்தாமும் * தானுகந்த வூரெல்லாம் தன்தாள்பாடி எங் கும் புக்கநுபவிக்கையிலே யாய்த்து அபேக்ஷை பண்ணியிருப்பது.

அ.—கலையும் கரியும் ப்ரவேசம். கீழ் நாலு திருமொழிகளாலும் - தமக்குண் டான மந்த்ரலாபத்தையும், மந்த்ரார்த்தத்தையும்,நரநாராயணரூபேண அவத [கூரு ரித்துத் திருமந்த்ரத்தை வெளியிட்டதேசத்தில் தமக்குண்டான ப்ராவண்யத்தையு மருளிச்செய்தாரே யாகிலும், ஸாளக்ராமம் தொடக்கமான திவ்யதேசங்களை விரு ம்புவானென்னென்கிறசங்கையிலே, இவர் விரும்புகைக்குஹேதுவை யருளிச்செய் யக் கோலி, அதுக்குறுப்பாக அவன் பலபடி யிருக்கைக்கு ஹேதுவை யருளி ச்செய்கிறார் (ஸௌபரியித்யாதி.)அவன் பலபடியிருந்தால் இவர்தாம் பலபடி [அம அநுபவிக்கைக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார் (இனியித்யாதி.)

மூ.—கலையும் கரியும் பரிமாவும் திரியும் கானம் கடந்துபோய்ச் -
சிலையுங்கணையுந்துணையாகச்சென்றான்வென்றிச்செருக்களத்து;
மலைகொண்டலைநீரணைகட்டி, மதிள்நீரிலங்கைவாளரக்கர் -
தலைவன்தலைபத்தறுத்துகந்தான் சாளக்கிராமமடைநெஞ்சே!.க.

ப - ரை.—சக்ரவர்த்தித்திருமகன், சிலையும் - வில்லையும், கணையும் - அம்பு களையும், துணையாக - ஸஹாயமாகக்கொண்டு, கலையும் - மான்களும், கரியும் - யானைகளும், பரிமாவும் -குதிரைகளும், திரியும் - ஸஞ்சரிக்கிற, கானம் - காட்டை, கடந்து - தாண்டி, போய் - நெடுந்தூரம்போய், வென்றி - ஜயத்தையுடைத்தானபோரைவிளைக்கக்கடவ, செருக்களத்து-யுத்தபூமியிலே, சென்றான் - புகுந்து, அலை - அலையையுடைய, நீர் - ஸமுத்ரத்தை, மலைகொண்டு - மலையால், அணைகட்டி - ஸேதுபந்தநம்பண்ணி, மதிள் - மதிளையும், நீர் - கடலாகிறஅகழுமுடைய, இலங்கை - லங்கையைத்தனக்குநகரமாகவுமுடையனாய், வாள் - ருத்ரனால்கொடுக்கப்பெற்றவாளையுடையனாய், அரக்கர்தலைவன் - ராக்ஷஸர்க்குத்தலைவனானராவணனுடைய,தலைபத்து-பத்துத்தலைகளையும்,அறுத்து-சேதித்து,[மிகு உகந்தான் - ஆச்ரிதர்விரோதிபோகப்பெற்றோம்!என்றுஉகந்துநித்யவாஸம்பண்ணுகிற, சாளக்கிராமம் - ஸ்ரீஸாளக்ராமத்தை, நெஞ்சே!—,அடை - கிட்டப்பாராய் என்கிறார். ... ... ... ... ... ... ... ... (க)

ஒருவிஷயத்தை அநுபவிக்கப்புக்கால் அவ்விஷயத்தில் அவயவங்கள்தோறும்ஸ்பர்சைபண்ணுமாப்போலேயாய்த்துஇவரெ[உமிங்கும் புக்கநுபவிப்பதாகப் பாரிக்கிறதுவும். ஆக, விரோதிநிரஸநசீலனுமாய், ஆஸ்ரிதஸம்ச்லேஷைகஸ்வபாவனுமாய், ப்ரஹ்மாதிகளாபந்நராமன்று அவ்வாபத்துக்களைப்போக்கிஅவர்களுக்குது:கநிவர்த்தகனுமிருக்கிறவன் நித்யஸூரிகளோடு தன்பக்கல் ருசியுடையாரோடு கேவலப்ராஹ்மணரோடுவாசியற ஸர்வஸமாச்ரயணீயனாய்க் கொண்டு ஸ்ரீஸாளக்ராமத்திலேவந்து ஸந்நிஹிதனானான், அங்கே போயவனையாச்ரயிப்போமென்று திருவுள்ளத்தோடே கூட்டுகிறார். கோஸலஜநபதமாகப் பெருமாளதா யிருக்குமாப்போலே, ஒருமண்டலமாகத்தனக்கு விஷயமாகக்கொண்டு ஸந்நிஹிதனாய்க் குறைவற வர்த்திக்கிற தேசமாய்த்து. ... ... ... ... *

விஷயமொன்றாயிருக்க, எங்கும் தனித்தனியே புக்கநுபவிக்க வேண்டுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (ஒருவிஷயத்தை யித்யாதி.) ஆகவென்றது - ஆகையாலே யென்றபடி. "ஊரான் குடந்தையுத்தமன்" என்றதைப்பற்ற (ஆஸ்ரிதஸம்ச்லேஷைக ஸ்வபாவனுமாய்) என்றது. "வெந்தாரென்பும்" என்கிறபாட்டைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார்(ப்ரஹ்மாதிகளித்யாதி;) கபாலநிமோசகம் வேதாபஹாரணாதிகளுக்கு முபலக்ஷணமென்று திருவுள்ளம். "தொண்டாயினரும்" என்கிறபாட்டைப்பற்ற (நித்யஸூரிகளோடித்யாதி.) இழ்ச்சொன்னவரெல்லாருமாச்ரயிக்கும்படி யிடமுடைத்தா யிருக்குமோவென்ன(கோஸலேத்யாதி;) மிலயாகையாலே ஒருமண்டலப்பரப்புப்பெருத்திருக்கு மென்றுகருத்து. விஷயமாக - வாஸஸ்தாநமாக, ... ... ... ... *

வ்யா.—முதற்பாட்டு.—(கலையித்யாதி) கலைமுதலானவைகளை வர்த்திக்கக்கடவதான காட்டைக் கடந்து போய். (சிலையும் கணையும் துணையாகச்சென்றான் வென்றிச்செருக்களத்து) "தேவநேவநம் மத்வா" என்கிறபடியே - படைவீட்டில் நின்றும் காட்டிலே புகு[று கையன்றிக்கே, காட்டில் நின்றுமாய்த்துக் காட்டிலே வந்து புகுந்தது; அப்படியே, இங்கும், துஷ்டஸத்த்வப்ரசுரமான காட்டைக்கழிந்து பின்னை யுத்தபூமியிலே யாய்த்து வந்துபுகுந்தது. கலைகளையும் ஆனைகளையும் குதிரைகளையு முடைத்தாயிருக்கிற காட்டைக் கடந்துபோய், வென்றிச்செருக்களத்திலே வந்து புகுந்தான். அங்குப்போய்ப் புகுகிற விடத்துத் துணையாரென்னில் (சிலையும் கணையும் துணையாக) வில்லு மம்பும் துணையாக வாய்த்துப் போய்த்தது. லக்ஷ்மணாதிகளோ வென்னில்; அவர்களையும் ஓரவயவவிசேஷங்களாக நினைத்திருந்தாரித்தனை போக்கி, தனித்தொருதுணையாக நினைத்திருந்திலராய்த்திவர்.

---

மூதற்பாட்டு.—(கலையுமித்யாதி.) "தானவனாகம்தரணியிற்புரள" என்றும் [மூ "இலங்கையும்கடலும்" என்றும் கீழ்த்திருமொழியிலே ப்ரஸ்துதமான ராமசரிதந்தான், "తాదృగ్గుణోనుబభూవిథ రాఘవ త్వేయ స్తావకం చరితమన్వహమన్వభుఙ్క్త | సోత్రైవహన్తహనుమాన్ పరమాంవిముక్తిం బుద్ధ్యావిధూయ చరితంతవసేవతేస్మ" "தாத்ருக்குணோநுபபூவிதராகவத்வேயஸ்தாவகம்சரிதமந்வஹமந்வபுங்க்தே | ஸோத்ரைவஹந்தஹநுமாந்பராமாம் விமுக்திம்புத்த்யா விதூயசரிதம்தவஸேவதேஸௌ" என்கிறபடியே நித்யாநுபாவ்யமாய்த் துவக்கவற்றாகையாலே அத்தை யநுபவிக்கிறாரென்று அவதாரிகையிட்டுக்கொள்வது.

காடானபோதே ம்ருகம் முதலானவை யுண்டாயிருக்குமே, அவற்றையிட்டு விசேஷிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (கலையித்யாதி.) இத்தால் - விஜநவநத்திலே யெழுந்தருளுவதே! என்றீடுபடுகிறாரென்றதாய்த்து. கரியைப் [உரு பற்றவும் கலையைமுற்படவெடுத்தது - இவர்கள் நிலையைக் கொலைத்தது கலையென்று "கானிடையுருவை" என்கிறபாட்டிலே ப்ரஸ்துதமான மாயாம்ருகத்தின் தௌஷ்ட்யத்தைப்பற்ற. "அரக்கர்தலைவன் தலைப்பத்தறுத்துகந்தான்" என்னவே, செருக்களத்துக்குப்போகை அர்த்தஸித்தமாயிருக்கவு மருளிச்செய்ததுக்கு தாத்பர்யமருளிச்செய்கிறார் (தேவநேநேத்யாதி வாக்யத்வயத்தாலே.) இத்தால்- நடுவிலாச்சிக்காகக் காடேறப்போனாலும் அவ்வளவிலே மீண்டுவரப்பெற்றதே! ஸீதாவியோக வ்யாஜேந யுத்தரங்கத்திலே போகவேண்டிற்றே! என்றீடுபாடு தோற்றுகிற தென்றதாய்த்து. கீழ் தாத்பர்யங்களை யருளிச்செய்து, சப்தார்த்த மருளிச்செய்கிறார் (கலைகளையுமித்யாதி.) "சிலையும்கணையும் துணையாக" என்ற பத ஸ்வாரஸ்யத்தாலே-செருக்களத்துச்சென்றது கரவதவ்ருத்தாந்தமாகச்சொல்[லலு லாயிருந்ததேயாகிலும், கானம்போய் என்றதே"கடந்து" என்ற பதஸ்வாரஸ்யத் தாலே - லங்கையில் யுத்தரங்கமேயாகவேணு மென்று விவக்ஷித்து, ஆனால் தநுர் பாணங்களே துணை யென்னக்கூடுமோ வென்கிற சங்கையை உத்க்ஷேபிக்கிறார் (லக்ஷ்மணாதிகளோ வென்னிலென்று.) ஆதிசப்தத்தாலே - ஸுக்ரீவ மாருதி விபீஷணர்களைச் சொல்லுகிறது. இளையபெருமாள் "రామస్యదక్షిణోబాహుః" "ராமஸ்யதக்ஷிணோபாஹு:" என்னும்படி யிருக்கையையும், ஸுக்ரீவர் (க) ஏகக்ரீவராய்ப்போந்தபடியையும், திருவடி திருவடிகளாய்ப் போந்தபடியையும், ஸ்ரீ விபீஷணாழ்வானை இக்ஷ்வாகுவம்ச்யராக நினைத்தபடி யாலே ராம பாஹ்யன் தாநாபிஷிக்தரானபடியையு முட்கொண்டு பரிஹரிக்கிறார் (அவர்களையுமித்யாதி.)

---

(க) ஏகக்ரீவர் - ஒருமிடறாயிருப்பவர்.

முதலிகளடங்கலும்பெருமாளுக்குக்குழைச்சரக்கானார்களாயித்தனையி றே;“ராமலக்ஷ்மணமாப்தாஸா.”(வென்றிச்செருக்களத்து) நலியவே ணுமென்னு மபிஸந்தி யுண்டாய் நலியாத மிதுனங்களைத் தப்பிப்போ னால் பின்னையும்போய்ப்புகுமிடம்யுத்தபூமியாய்த்து. வென்றியை[ரு யுடைத்தான போரை விளைக்கக்கடவ யுத்தபூமியிலே.

அங்குப்போய்ப்புக்கபின்பு செய்தசேஷ்டிதங்களைச் சொல்லுகி றதுமேல் (மலையித்யாதி) பெரியக்ஷோபத்தை யுடைத்தான கடலை, நீரிலே ஆழக்கடவ மலைகளைக் கொண்டு அணையாகக்கட்டி, மதிளையும் அதுக்ககழான கடலையு முடைய லங்கையைக்கலவிருக்கையாகவுடை யனுமாய், ஒருதேவதையை யாச்ரயித்து அதின்பக்கலிலே ஒரு வாளைப்பெற்று அது தனக்கரணாக நினைத்திருப்பானாய், ஸர்வர்மத்துக் கெல்லாம் நியாமகனா யிருக்கிற ராவணனுடைய தலைகள் பத்தையும் அறுத்து,“தேவர்களும்தந்தாமுடைய குடியிருப்புப்பெற்றார்கள்! ருஷி களும்தந்தாமுடைய ஆச்ரமங்களிலேயிருந்து தபஸ்ஸுபண்ணப் [மரு பெற்றார்கள்!” என்றுஉகந்தவன் ; அப்படி ஆச்ரிதவிரோதியைப் போக்கிப் பிறபட்டார்க்கு முதவுகைக்காக வந்துவர்த்திக்கிற ஸ்ரீஸா ளக்ராமத்தை யாச்ரயிக்கப் பாராய் நெஞ்சே ! என்கிறார். ... க.

அ.—இரண்டாம்பாட்டு.—ராவணனை நிரஸித்தபடியைச் சொ ல்லிற்று-முதற்பாட்டில் ; அதுக்குறுப்பாக அவனுடைய முதல்நாளை ப்படையெழுச்சி சொல்லுகிறது - இதில்.

---

முதலிகளடங்கலுமென்றது - மற்றுமுள்ள வாநரமுதலிகளெல்லாரு மென்றபடி. (குழைச்சரக்கு) குழையென்று - பையாய், பையில் சரக்குப்போலே ரக்ஷ்யமெ ன்றபடி.

“வென்றி” என்று விசேஷிக்கையாலும் - காட்டைப்பற்றவும் யுத்தபூமியி லாதிக்யம் ஸூசிதமாகிறதென்கிறார். நலியவேணுமென்னுமபிஸந்தியில்லாதம்ர்கங் களுள்ள காட்டைத்தப்பிப்போகப் பெற்றால் நலிகைக்குஇப்போது வரப்புகுகிறா ரென்று (க) விஜிகீஷுக்க ளிருக்குமிடத்தில் புகவேண்டிற்றே என்று கருத்து. சப்தார்த்தம் (வென்றியையித்யாதி.)

மேலுக்கவதாரிகை(அங்கித்யாதி.)“செருக்களத்து-சென்றான்” என்றது- [கடல் ஸமுத்ரதீரத்திலே படையெடுத்து விட்டபோதே போய்ப்புக்கது ஸித்தவத்கரி த்தருளிச் செய்தாரென்று திருவுள்ளம்பற்றி, ஸமுத்ரத்தில் ஸேதுபந்தநத்தையும் அங்குப்புக்குச்செய்த செயலாக வருளிச்செய்தாரென்று கண்டுகொள்வது. ஒரு தேவதை - ருத்ரன். அரணாக - ரக்ஷகமாக. “సహితేనైవ రుద్రీర్ణస్య రావణస్య వధార్థిభిః| అర్థితో మానుషే లోకే జజ్ఞే విష్ణుస్సనాతనః” “ஸஹிதேநைவ ருதிர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி: l அர்த்திதோ மாநுஷேலோகே ஜஜ்ஞேவிஷ்ணுஸ்ஸநாதந:” என்றும் “దేవయంభవతారక్ష్యా భవద్విషయవాసినః” “தேவயம்பவதாரக்ஷ்யா பவத்விஷ யவாஸிந:” என்றும் சொல்லுகிறபடியே - இவர்களுக்காக ராவணன்தலையை யறுத்தானாகையாலே வந்தவுகப்பை யருளிச்செய்கிறார் (தேவர்களுமித்யாதி.) க.

இரண்டாம்பாட்டு.—(கடஞ்சூழித்யாதி.) அரக்கர்தலைவன்தலைபத்தறுத்த[மு பின்பு இலங்கை பொடியாம்படி சரந்துரந்தா னென்னுமது கூடாமையாலே, தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ரவணனையித்யாதி.) அதுக்குறுப்பாக - நிரஸநத்து க்குறுப்பாக. இத்தால் - படையெடுத்து வந்திருந்த அம்பு கோத்தானதையாலே தலையறுத்து விட்டாரென்று கருத்து.

---

(க) விஜிகீஷுக்கள் - ஜயிக்கவேணுமென்னும்இச்சையுடையவர்கள்.

மூ.—கடஞ்சூழ்கரியும் பரிமாவு மொலிமான்தேரும் காலாளும்-
உடன்சூழ்ந்தெழுந்தகடியிலங்கைபொடியாவடிவாய்ச்சரந்துரந்தான்;
இடஞ்சூழ்ந்தெங்குமிருவிசும்பிலிமையோர்வணங்கமணங்கமழும் -
தடஞ்சூழ்ந்தெங்குமழகாய சாளக்கிராமமடை நெஞ்சே!. ... உ.

ப-ரை.—கடம்சூழ் - மும்மதங்களையுடைய, கரியும் - யானைகளும், பரிமாவும் - குதிரைகளும், ஒலி - சப்தியாநின்றுள்ள, மாத்தேரும் - மஹாரதங்களும், காலாளும் - பதாதிகளும், உடன்சூழ்ந்து - ஒன்றாகத்திரண்டு, எழுந்த - கிளர்ந்துதோற்றின, கடி-அரணையுடைத்தான, இலங்கை-லங்கையிலுள்ளதுர்வர்க்கமானது, பொடியா-நீறும்படிக்கீடாக, வடி - கூரிய, வாய் - வாயையுடைத்தான, சரம் - பாணங்களை, துரந்தான் - ப்ரயோகித்த சக்ரவர்த்தித்திருமகன், இரு - பரப்பையுடைத்தான, விசும்பில் - ஸ்வர்க்கத்தில் வஸிக்கிற, இமையோர் - தேவர்கள், இடம்எங்கும் - பூமிப்பரப்பெல்லாம், சூழ்ந்து - பரவி, வணங்க - ஆச்ரயிக்கத்தக்கதாய், மணம் - செங்கழுநீர்முதலியபுஷ்பங்களின்வாஸனையை, கமழும் - வீசாநின்றுள்ள, தடம் - தடாகங்களாலே, சூழ்ந்து - சூழப்பட்டிருப்பதாய், எங்கும் - எல்லப்பக்கங்களிலும், அழகாய - அழகையுடைத்தாயிருக்கிற, சாளக்கிராமம்அடைநெஞ்சே!—. (உ)

வ்யா.—(கடஞ்சூழித்யாதி) ஐஷிதான் படையெழுச்சியைச் சொன்ன க்ரமத்திலே சொன்னாரிவரும். மதஜலத்தை யுடைத்தாய் மலை வடிவுகொண்டு நடந்தாப்போலே யிருக்கிற ஆனைத்திரளும், அதுக்கநந்தரம் குதிரைத்திரளும், கோஷத்தையுடைத்தா யிருந்துள்ள பெரிய தேர்களும், காலாளும், இவை யடைய ஒன்றாகத்திரண்டு பெரியகிளர்த்தியோடே தோற்றின அரணுடைத்தான லங்கை, "ஸ்மசாந ஸத்ருஶீ ஹவேத்" "ச்மசாந ஸத்ர்ஶீ ஹவேத்" என்கிறபடியாய்ப் போம்படிக்கீடாக, வடித்தவாயையுடைத்தான சரத்தைநடத்தினாய் [உம] த்து. (இடமித்யாதி) பூமியிலவகாசமுள்ள விடமெங்கும் பரந்து கொண்டு பரப்புடைத்தான ஸ்வர்கத்தில் தேவர்களாச்ரயிக்க, பரிமளப்ரசுரமான தடாகங்களை யுடைத்தாய் எங்குமொக்க தர்சநீயமாயிருக்கிற ஸ்ரீஸாளக்ராமத்தை யாச்ரயிக்கப்பார்.... ... உ.

க்ரமத்திலேயென்றது-ரத கஜ துரக பதாதிகளாகிற சதுரங்கஸேனையை[நடய] ச்சொல்லும் க்ரமத்திலே யென்றபடி. "கடம்" என்றதினர்த்தம் (மதஜலத்தை யென்றது.) ஆனைகளை வர்ணிக்கிற விடத்திலே, "விலங்கல்போல்வன" என்று வர்ணிக்கையாலே அது இங்கு விவக்ஷிதமென்றருளிச்செய்கிறார் (மலையித்யாதி) மதஜலமுண்டாவது ஒரு வயோவிசேஷத்திலே யாகையாலே அப்போதையில் மஹத்வம் த்யோதிதமென்று கருத்து. மாத்தேர் என்னும் வல்லொற்று மெல்[நடு] லொற்றாய், மாந்தேர் என்றாய், அதுதானும், குந்தம் என்னுமது குன்றம்என்று கிடக்கிறாப்போலே "மான்றேர்" என்றுகிடக்கிறதென்று திருவுள்ளம்பற்றி (பெரிய தேர்களுமென்றது.) "மால்" என்று - பெருமையாய், "வன்றாளினிணைவணங்கி" என்கிறவிடத்தில், வலிமையை யுடைய தாளென்ற வோபாதி, "மான்றேர்" என்று - மாலானதேரென்கிறதென்றாகவுமாம். கடி-கட்டுடைமையாய், அரணை [சம] யுடைத்தாயென்றபடி. வடித்த - கூரிடப்பட்ட. (ஆச்ரயிக்க) என்ற வாக்தாம், தக்கதாய் என்றுசேஷம். சரந்துரந்தான், அவனுக்கிடமாயிருக்கிற சாளக்கிராமம் என்றந்வயம். ... ... ... ... ... ... உ.

மூ.—உலவுதிரையும் குலவரையு மூழிமுதலாவெண்டிக்கும்,
நிலவும் சுடரு மிருளுமாய் நின்றான் ; வென்றிவிறலாழி -
வலவன்;வானோர்தம்பெருமான்;மருவாவரக்கர்க்கெஞ்ஞான்றும்-
சலவன்;சலஞ்சூழ்ந்தழகாய சாளக்கிராமமடை நெஞ்சே!. ... ௩.

---

ப - ரை.—உலவு - ஸஞ்சரியாநின்றுள்ள, திரையும்-அலையையுடையகடலும், குலம் - ச்லாக்யமான,வரையும் - பர்வதங்களும், ஊழிமுதலா - காலம்முதலாக, எண்திக்கும் - எட்டுதிக்கிலுள்ள பதார்த்தங்களும், நிலவும் - சந்த்ரனும், சுடரும் - ஸூர்யனும், இருளும் - அந்தகாரமுமாகியஇவற்றுக்கு, ஆய் - ப்ரகாரியாய், நின்றான் - நின்றவனாய், வென்றி - ஜயத்தையும், விறல் - மிடுக்கையு [ய முடைய, ஆழி - திருவாழியை, வலவன்-வலத்திருக்கையிலுடையனாய், வானோர்தம் - ப்ரஹ்மாதிகளுக்கு, பெருமான் - ஸ்வாமியாய், மருவா - தன்னைக்கிட்டி ஆச்ரயியாத, அரக்கர்க்கு - ராக்ஷஸர்கள்விஷயத்தில், எஞ்ஞான்றும் - நித்ராஸமயத்திலுங்கூட, சலவன் - பகைமைபாராட்டுமவன் நித்யவாஸம்பண்ணுமதாய், சலம்-ஜலத்தாலே, சூழ்ந்து - சூழப்பட்டு, அழகாய - அழகாயிருக்குமுள்ள, [யரு சாளக்கிராமமடைநெஞ்சே!— ... ... ... ... (௩)

---

வ்யா.—மூன்றாம்பாட்டு.—(உலவித்யாதி) ஸஞ்சரியாநின்றுள்ள திரையையுடைத்தாய் – பெரியவோஷத்தை யுடைத்தான கடலும், மலையும்துடக்கமாக. (ஊழிமுதலா எண்டிக்கும்) காலோபலக்ஷிதமான ஸகலபதார்யங்களுமான எட்டுதிக்கும், சிலநாள் வர்த்திக்க [உய க்கடவராயிருக்கிற சந்த்ரஸூர்யர்களும், அதுக்கெதிரான இருளுமாய், அதடைய "தான்" என்கிற சொல்லாலே சொல்லலாம்படி தனக்கு ப்ரகாரமாகவுடையனாய் நின்றான். இத்தால் – ஜகதாகாரனாய் நிற்குநிலை சொல்லிற்று ; மேல் – அஸாதாரண திவ்யவிக்ரஹயுக்தனான நிலையைச்சொல்லுகிறது(வென்றியித்யாதி) ஆச்ரிதரக்ஷணத்[உரு துக்குப் பரிகரமான திருவாழியை வலவருகே யுடையவன். (வானோர்தம் பெருமான்) ப்ரஹ்மாதிகளுக்கு ஆச்ரயணீயனானவன். (மருவா) கண்வளர்ந்தருளும்போதும், தன்னோடு பொருந்தாதஅஸுரவர்கத்துக்கு,"அவுணர்க்கென்றும்சலம்புரிந்து" என்கிறபடியே – சாத்ரவத்தையுடையனா யிருக்குமவன் ; ஏவம்விதனானவன் வந்து ஸந்நிதி பண்ணுகிற ஜலஸம்ருத்தியை யுடைத்தாய் தர்சநீயமாயிருக்கிற. ௩.

---

அ.—மூன்றாம்பாட்டு.—(உலவுதிரையு மித்யாதி.) இப்படி படையெழுச்சியோடே வந்த ராவணனை நிரஸித்த வநந்தரம், "తమస్సఃపరమోధాతా శఙ్ఖచక్రగదాధరః" "தமஸஃபரமோதாதா சங்கசக்ரகதாதரஃ" என்றும் "భవాన్నారాయణో దేవః" "பவாந்நாராயணோதேவஃ"என்றும் பெருமானுடையபரத்வம் ஸ்புட [ரூரு தரமாகச் சொல்லப்படுகையாலே, இவரும் அந்த பரத்வத்தை யருளிச்செய்கிறா ரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

பலிதம் (பெரியவித்யாதி.) (துடக்கமாக) என்றவநந்தரம், பெருப்பெருத்த பதார்த்தங்களும் என்று சேஷம். எட்டுதிக்கும் - எட்டுதிக்கிலுள்ள பதார்த்தங்களும். நிலவு - சந்த்ரன். வென்றி - ஜயத்தையும், விறல் - அதுக்குறு [சும ப்பான மிடுக்கையு முடைய, "ஆழி" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஆச்ரிதேத்யாதி.) "எஞ்ஞான்றும் - மருவாவரக்கர்க்கு - சலவன்" என்றந்வயம் விவக்ஷித் தருளிச்செய்கிறார் (கண்வளர்ந்தித்யாதி.) இத்தால் - நித்ராஸமயத்திலும் ப்ரதிபக்ஷத்தின்மேலே சீற்றமுடையவரென்று, "కాలాగ్నిసదృశక్రోధే" "காலாக்நிஸத்ருசக்ரோதே" என்னும் குணதிக்யம் சொல்லிற்று. ... ௩.

மூ.—ஊரான்; குடந்தையுத்தமன்; ஒருகா லிருகால் சிலைவளையத்—
தேராவரக்கர்தேர்வெள்ளம்செற்றான்; வற்றாவருபுனல்சூழ்—
பேரான்; பேராயிரமுடையான்; பிறங்குசிறைவண்டறைகின்ற—
தாரான்; தாராவயல் சூழ்ந்த சாளக்கிராமமடைநெஞ்சே. ௪.

ப-ரை.—ஊரான் - திருவூரகத்தைத்தனக்கு வாஸஸ்தாநமாக வுடையனாய்; "கிடந்தவாறெழுந்திருந்து பேசு" என்று ஆச்ரிதர்நியமிக்கும்படிக்கீடாக, குடந்தை - திருக்குடந்தையில்க ண்வளர்ந்தருளுகிற, உத்தமன் - புருஷோத்தமனாய்; ஒருகால் - கரன் முதலானோர் எதிர்த்தபோது, சிலை - வில்லினுடைய, இருகால்- இரண்டுகோடியையும், வளைய-வளைத்துத் தம்முடையவல்லமையைக்காட்ட, [யு தேரா - இவனை நம்மால் வெல்லமுடியாது என்று ஆராய்ந்தறிய மாட்டாத, அரக்கர் - ராக்ஷஸருடைய, தேர்வெள்ளம் - ரதஸமூஹங்களை, செற்றான் - சிந்நம் பிந்நமாம்படி பண்ணினவனாய்; வற்றா - வற்றுதலின்றிக்கே, வரு - மேல் மேலும் வெள்ளமிடாநின்றுள்ள, புனல் - ஜலத்தாலே, சூழ் - சூழப்பட்ட, பேரான்-திருப்பேர்நகரில் நித்யவாஸம்பண்ணுமவனாய்; ஆயிரம்பேர்உடையான் - தன்குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான அநேகம்திருநாமங்களை யுடையனாய், பிறங்கு - நெருங்கி யிருந்துள்ள, சிறை - சிறகுகளையுடைய, வண்டு - வண்டுகளானவை, அறைகின்ற - ஆளத்திவைத்துப்பாடாநின்றுள்ள, தாரான் - திருத்துழாய்மாலையையுடையனான ஸர்வேச்வன் எழுந்தருளியிருக்குமதாய், தாரா - தாராஎன்னும்ஜலபக்ஷிகள் நிறைந்த, வயல் - வயல்களாலே, சூழ்ந்த-சூழப்பட்ட, சாக்ளகிராமம் - ஸ்ரீஸாளக்ராமத்தை, நெஞ்சே! அடை—. ... (௪)

அ.—நாலாம்பாட்டு.—அதுக்கும் முன்னே யுண்டான வரவய வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிறது.

வ்யா.—(ஊரான்) திருவூரகத்தைத் தனக்கிருப்பிடமாக வுடையவன். (குடந்தை யுத்தமன்) அவாகள் அபேக்ஷையின்றிக்கேயிரு[உரு க்க ஆஸ்ரிதரக்ஷணத்துக்காகத் தானே திருக்குடந்தையிலே வந்து சாய்ந்தருளின நீர்மையி லேற்றத்தை யுடையவன். அன்றிக்கே, (திருக்குடந்தை – ஊரான் - உத்தமன்) என்றும் சொல்லவுமாம். (ஒருகால்) ஒருக்கால். (இருகால்சிலை வளைய) வில்லிரண்டுகோடியும் வளையும்படியாக. ராவணன் வளையாமையாலே வில்லை வளைத்தான். (தேராவரக்க ரித்யாதி) "சக்ரவர்த்தித்திருமகனிறே நமக்கெதிரியாய் வருகிறான்!" என்று மதிக்கவறியாத ராக்ஷஸருடைய தேர்வெள்ளத்தை

நாலாம்பாட்டு.—(ஊரானித்யாதி.) கீழ்ச்சொன்ன ராவணவதந்தான் வாநர வீரர்களும் தாங்களுமாய்ச் செய்ததாகையாலே அதிலு மத்புததமமாகத் தனியே நின்று வென்ற வீர ரஸந்தன்னை யநுஸந்திக்கிறாரென்று விவக்ஷித்து, "தேர்[கூறு வெள்ளம்" என்றபதத்திலே நோக்காக அவதாரிகை யருளிச்செய்கிறார் (அதுக்கு மித்யாதி.)

அவர்கள் - திருக்குடந்தையிலுள்ளார். அபேக்ஷை-ரக்ஷாபேக்ஷை. "கால்" என்று - வில்லின் நுனியாய், அருளிச்செய்கிறார் (வில்லித்யாதி.) (ராவணன்) என்றது-உபலக்ஷணமாய், "நாமேயம்" என்னத்தக்க கராதிகளைச்சொல்லுகிற[சூசி து."தேரா" என்று - விசாரியாதவென்றாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (சக்ர வர்த்தித் திருமகனிறே யித்யாதி.)

மூ.—அடுத்தார்த்தெழுந்தாள்பிலவாய்விட்டலறவவள்மூக்கயில்வாளால்
விடுத்தான்; விளங்குசுடராழிவிண்ணோர்பெருமான்; நண்ணார்முன்
கடுத்தார்த்தெழுந்தபெருமழையைக்கல்லொன்றேந்தியினநிரைக்காத்
தடுத்தான்; தடஞ்சூழ்ந்தழகாய சாளக்கிராமமடைநெஞ்சே. ரு.

ப-ரை.—அடுத்து - மேல்விழுந்துகிட்டி, ஆர்த்து - ஆரவாரித்துக்கொண்டு, எழுந்தாள் - கிளர்ந்துதோற்றின சூர்ப்பநகையானவள், பிலம் - குகைபோன்ற, வாய்விட்டு - வாயைத்திறந்து, அலற - கூப்பிடும்படி, அவள் - அவளுடைய, மூக்கு - மூக்கை, அயில் - கூர்மைபொருந்திய, வாளால் - வாளாலே, இளையபெருமாளைக்கொண்டு, விடுத்தான் - அறுத்தவனாய்; விளங்கு - மிகவும் ப்ரகாசியாநின்றுள்ள, சுடர் - ஒளியை யுடைத்தான, ஆழி - திருவாழியையுடையனாய், அத்தாலே, விண்ணோர் - நித்யஸூரிகளுக்கு, பெருமான் - நிர்வாஹகனாய்; இந்த்ரன் ஏவுதலாலே, கடுத்து - பெரியவேகத்தோடே, ஆர்த்து - சப்தித்துக்கொண்டு, எழுந்த - தோற்றின, பெருமழையை - மஹாவர்ஷத்தை, நண்ணார்முன் - அவனுக்கு பகைவரான இடையர் முன்னே, இனம் - கூட்டமாயுள்ள, நிரைக்கா - பசுக்களின் ரக்ஷிக்கைக்காக, கல்ஒன்று - கோவர்த்தநமென்னும்ஒருமலையை, ஏந்தி - தரித்து, தடுத்தான் - அம்மழையை மறுத்தவன் நித்யவாஸம் பண்ணுமதாய், தடஞ்சூழ்ந்து - தடாகங்களாலே சூழப்பட்டு, அழகாய - அழகாயிருந்துள்ள, சாளக்கிராமமடைநெஞ்சே !—. ... ... ... ... ... ரு.

அழியச்செய்தானாய்த்து. (வற்றாவித்யாதி) நின்ற நீர் வற்றாக்கடவதன்றிக்கே மேன்மேலே வாராநின்றுள்ள புனலையுடைத்தா யிருக்கிற திருப்பேரைத் தனக்கு வாஸஸ்தாநமாக வுடையவன். (பேராயிரமுடையான்) தன்குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான அநேகம் திருநாமங்களையுடையவன்.

அந்நாமத்வாரா அநுபவிக்கும் வடிவைச்சொல்லுகிறது [உடு (பிறங்கித்யாதி) நெருங்கியிருந்துள்ள சிறகையுடைத்தான வண்டுகளானவை மயூபாநம் பண்ணிஅறையாநின்றுள்ள மாலையை யுடையவன். (தாராவித்யாதி) ஊரடங்கலும் மநுஷ்யர் குடியிருப்பு நெருங்கியிருக்குமாப்போலே, தாராவாகிற பக்ஷிகளாலே நெருங்கியிருந்துள்ள வயலாலேசூழப்பட்டிருந்துள்ள சாளக்கிராமமடைநெஞ்சே. ... ச.

அ.—அஞ்சாம்பாட்டு.—அதுக்கு முன்னான சூர்ப்பநகாநிரஸநத்தை யருளிச்செய்கிறார்.

வ்யா.—(அடுத்து)மேல்விழுந்துவந்துகிட்டி.(ஆர்த்தெழுந்தாள்) ஆரவாரத்தைப்பண்ணிக்கொண்டு கிளர்ந்து வந்து தோற்றினவள்,

மேலுக்கவதாரிகை(அந்நாமத்வாரேத்யாதி.)அறையாநின்றுள்ள-சப்தியா[கூடு நின்றுள்ள. ... ... ... ... ... ... ச.

அஞ்சாம்பாட்டு.—(அடுத்தார்த்தித்யாதி.) தேராவரக்கர் தேர்வெள்ளத்தை நிரஸிக்கைக்குக் காரணமென்னென்கிற சங்கைக்குப் பரிஹாரந்தோன்ற வவதாரிகை யருளிச்செய்கிறார் (அதுக்கித்யாதி.)

(கிளர்ந்துவந்துதோற்றினவள்)என்கையாலே - பிராட்டிபக்கல்அபசாரப்[சமயப்படி தோற்றுகிறது.

மூ.—தாயாய்வந்த பேயுயிரும் தயிரும் விழுதுமுடனுண்ட -
வாயான் ; தூயவரியுருவிற்குறளாய்ச் சென்று மாவலியை-
யேயானிரப்ப மூவடிமண் ணின்றே தாவென்றுலகேழும் -
தாயான் ; காயாமலர்வண்ணன்;சாளக்கிராமமடைநெஞ்சே. ௬.

ப-ரை.—தாயாய் வந்த - தாயவடிவு கொண்டுவந்த, பேய் - பூதனை யுடைய, உயிரும்-ப்ராணனையும், தயிரும்-யசோதைப்பிராட்டி தோய்த்து வைத்த தயிரையும், விழுதும் - கடைந்துதிரட்டின வெண்ணெயையும், உடன்உண்ட - ஒக்க அமுதுசெய்த, வாயான் - திருப்பவளத்தையுடையனாய், ஏயான்-இரத்தற்குத்தகாததான், தூய - பரிசுத்தமாய், வரி - அழகாயிருந்துள்ள, உருவின்-ரூபத்தையுடைய, குறளாய் - வாமநனாய், மாவலியை - மஹாபலிபக்கலிலே, சென்று - போய், இன்றே - இப்போது, மூவடிமண்தா என்று - மூன்று அடி நிலம் தரவேணும் என்று, இரப்ப - யாசிக்க, அவன் நீர்வார்த்துத் தந்தவுடனே, உலகு ஏழும் - ஏழுலோகங்களையும், தாயான் - தாவி அளந்துகொண்டவனாய், காயாமலர் - காயாம்பூப் போன்ற, வண்ணன் - திருநிறத்தையுடைய ஸர்வேச்வரன் நித்ய[மிரு]வாஸம்பண்ணுகிற, சாளக்கிராமமடை நெஞ்சே!—.... ... ... (௬)

[பி]லம்போலேயிருக்கிற வாயைத்திறந்து கூப்பிட, அவளுடைய மூக்கை. (அயில்) கூர்மை. கூரிய (க) திருக்குற்றுடைவாளைவாங்கிப்போக்கினான். (விளங்கித்யாதி) கையுந்திருவாழியுமான சேர்த்தியழகைக்காட்டி நித்யஸூரிகள்கார்யத்தை நிர்வஹித்துக்கொண்டு[உய]போருகிறவன். (நண்ணாரித்யாதி) சத்ருக்கள் முன்பே இந்த்ரனுடைய அஹிஸந்தி பூர்வகமாக வருகிறதாகையாலே பெரியவேகத்தோடே வோஷித்துக்கொண்டு தோற்றின மஹாவர்ஷத்தை கோவர்த்தந கிரியையெடுத்து, பண்ணின வுபகாரத்தையு மறியாதே ஸ்வரக்ஷணத்துக்குப் பரிகாரமுமில்லாத பசுக்களை நோக்குகைக்காகத் தடுத்தா[உரு]ராய்த்து. நடாகங்களாலே சூழப்பட்டு தர்சநீயமான. ... ... ரு.

வ்யா.—ஆறும்பாட்டு.— (தாயாயித்யாதி) தாய்வடிவைக்கொண்டுவந்த பூதனையுடைய வுயிரையும், யசோதைப்பிராட்டியுடைய

அவள்மூக்கைப்போக்கினவர் இளையபெருமாளேயாகிலும், "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" "ராமஸ்ய தக்ஷிணோபாஹு:" என்கிறபடியே அவயவபூதராகையைப் பற்றப் பெருமாள் போக்கினாரென்னத்தட்டில்லை.

இப்படி மஹர்ஷிகளுக்கு உபகாரகனான வளவன்றிக்கே ஜ்ஞாநாதிகரான ஸூரிகளுக்கும் அஜ்ஞர்களான பசுக்களுக்கு முபகரிக்குமவனென்று திருவுள்ளத்தில் தோற்றி யருளிச்செய்கிறாரென்று "விளங்குசுடர்" இத்யாதி பாட்டுசேஷத்துக் கவதாரிகை கண்டுகொள்வது. சத்ருக்கள்முன்பே யென்றது - எதிரிட்டுவந்த இந்த்ராதிகள் முன்பே யென்றபடி. யத்வா, நந்தவ்ரஜத்திலுள்ளாரென்றாய், இந்த்ரனுக்கு க்ரோதநீயத்வம் சொல்லவுமாம். "கடுத்து" என்றதினர்த்தம் (வேகத்தோடே யென்றது;) "கடுகவர" என்னக்கடவதிறே. ... ... ரு.

ஆறும்பாட்டு.—(தாயாயித்யாதி.) பசுமேய்க்கும் பருவத்திற்செய்த கோவர்த்தநோத்தரணத்திலு மாச்சர்யாவஹ மாகையாலே சைசவத்தில் சரிதத்தையநுஸந்தித்துக்கொண்டு, க்ர்ஷ்ணாவதாரத்தோடு (உ) தோள்தீண்டியான வாமநவ்ர்த்தாந்தத்தை யநுஸந்திக்கிறு ரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

(க) திருக் குற்றுடை வாள்- குறு- சிறிய, உடைவாள்- அரையில்தரிக்கும் கத்தி
(உ) தோள்தீண்டி - புஜஸ்பர்சி,ஸமமென்றபடி.

மூ.—ஏனோரஞ்ச வெஞ்சமத்து ளரியாய்ப் பரியவிரணியனை-
ஊனாரகலம்பிளவெடுத்த வொருவன்; தானே யிருசுடராய்,
வானாய்த், தீயாய், மாருதமாய், மலையா யலைநீருலகனைத்தும்-
தானாய்த்; தானுமானான்றன் சாளக்கிராமமடைநெஞ்சே. எ.

ப-ரை.—ஏனோர் - சத்ருக்களான அஸுரர்கள், அஞ்ச - பயப்படும் படியாக, வெம் - க்ரூரமான, சமத்துள் - யுத்தத்திலே, அரியாய் - நரஸிம்ஹரூபத்தையுடையனாய்க் கொண்டு, பரிய - தடித்த சரீரத்தை யுடையனான, இரணியனை - ஹிரண்யனுடைய, ஊனார்-மாம்ஸம் நிறைந்த, அகலம்-மார்வை, பிளவு எடுத்த-கிழித்துப்பொகட்ட, ஒருவன் - ஒப்பற்ற பலத்தை யுடையனாய்; தானே - [ம இப்படிப்பட்டவன் தானே, இருசுடராய் - சந்த்ரஸூர்யர்களாயும், வானாய்-ஆகாசமாயும், தீயாய் - அக்நியாயும், மாருதமாய் - காற்றாயும், மலையாய் - மலைகளாயும், அலைநீர் - அலையையுடைய ஸமுத்ரத்தால் சூழப்பட்ட, உலகுஅனைத்தும் - எல்லாலோகங்களும், தானாய் - தான்என்னலாம்படி நின்றவனாயும், தானுமானான்றன் - இப்படி ஸர்வாந்தர்யாமியான ஸர்வேச்வரனெழுந்தருளியிருக்கிற, [மரு சாளக்கிராமமடை நெஞ்சே!—. ... ... ... ... ... (எ)

தயிரையும், வெண்ணெயையுமொக்க அமுதுசெய்த திருப்பவளத்தை யுடையவன். அநுகூலஸ்பர்சமுடைய த்ரவ்யமும் ப்ரதிகூலருடைய ப்ராணனு மொக்க தாரகமாக வளர்ந்தவன். (தூயவித்யாதி) கண்ணழிவற்ற வாமநவேஷத்தை யுடையனாய். அம்புக்குச் செல்லாத [உம் விடத்தை அழகாலே வசீகரிக்கும்படியான வாமநவேஷத்தை யுடையனாய்க்கொண்டு சென்று. (ஏயானிரப்ப) "மோஹஸ்ய ப்ரஜாதாரம்" "[illegible]" "ஓஞ்யாந்நப்ரதிக்ரஹ்ணீயாத்" என்று - இரப்புத் தகாத தான் சென்றிரக்க. (மாவலி யையேயானிரப்ப) "கொடேன்" என்றே அஸிஸந்தி பண்ணி [உரு யிருந்தஅவன்பக்கலிலே இரப்ப என்னவுமாம். மூவடிமண் இப்போதே தரவேணு மென்று வேண்டிக்கொண்டு, அவனநுமதி பண்ணின வநந்தரம் மறுமநஸ்ஸுப் படுவதுக்கு முன்னே வளர்ந்து லோகங்களைையு மளந்துகொண்டவன். (தாயான்) தாவினவன். (காயா மலர்வண்ணன்) அவ்வடிவைக்கொண்டாய்த்து பூமியையளந்தது. கூ.

"தயிரும்விழுதும்" என்றது த்ருஷ்டாந்ததயா என்னுமதுதோற்ற, உட் கருத்தை யருளிச்செய்கிறார் (அநுகூலேத்யாதி;) அநுகூலஸ்பர்சமுள்ளது தாரகமானாப்போலே, ப்ரதிகூலருடைய ப்ராணனும் தாரகமாவதேயென்றுகருத்து. இத்தால் - ப்ரதிகூலநிரஸநமிவனுக்கு ஜந்மஸித்த மென்றதாய்த்து. (கண்ணழிவற்ற) என்றதுக்கு விவரணம் (அம்புக்கித்யாதி.) தூய - பரிசுத்தமான, வரி - அழகையுடைத்தான, உருவின்- ரூபத்தை யுடைய, குறளாயென்றுசப்தார்த்தம். (ஏயான்) எய்கை - பொருந்துகையாய், இரப்புப்பொருந்தாதவனென் றருளிச்செய்கிறார் (மோஹஸ்யேத்யாதி.) இப்பக்ஷத்தில், "மாவலியை யேயானுனதானிரப்ப, தூய வரியுருவிற்குறளாய்ச் சென்று - மூவடிமண்ணின்றே தாவென்றுலகேழும்தாயான்" என்றந்வயம். அடைவேஅந்வயமாய், "இரப்ப" என்றத்தை இரப்பனென்று உத்தமனாக்கி, ஏகாரம் அவதாரணார்த்தமாக யோஜநாந்தரமருளிச்செய்கிறார் (கொடே னித்யாதி.) ... ... ... ... ... ... ... கூ.

மூ.—வெந்தாரென்பும் சுடுநீறும் மெய்யிற்பூசிக் கையகத்தோர் —
சந்தார்தலைகொண்டுலகேழும் திரியும்பெரியோன், தான்சென்றுஎன் —
எந்தாய்! சாபம் தீரென்ன ; இலங்கமுதுநீர் ‡ திருமார்வில் —
தந்தான் ; சந்தார்பொழில்சூழ்ந்த சாளக்கிராமமடைநெஞ்சே. அ.

ப-ரை.—வெந்தார் - தஹநம் பண்ணப்பட்டவர்களுடைய, என்பும் - எலும்பை மாலையாக தரித்தும், சுடுநீறு - அந்தசரீரங்களைக் கொளுத்தின சாம்பலை, மெய்யில் - தன்னுடம்பில்,பூசியும் - பூசிக்கொண்டும்,சந்தஆர் - துளைகளையுடைத்தாய், ஓர் - ஒருவராலும் நிறைக்கவொண்ணாத,தலை - ப்ரஹ்மகபாலத்தை, கையகத்து-கையிலே, கொண்டு- ஏந்திக்கொண்டும், இச்சாபத்தை நீக்கவல்லார் [யி ருண்டோஎன்று, உலகேழும் - ஸகலலோகங்களிலும், திரியும் - திரியுமவனாய், பெரியோன்றான் - அழித்தல் தொழிலுக்கு நாம் கடவோம் என்று பெருமை பாவித்திருக்குமவனான ருத்ரன், சென்று - ஸர்வேச்வரன்பக்கல் போய், "என் எந்தாய்! - எனக்குஹிதபரனானவனே !, சாபம்-இந்தசாபத்தை, தீர்-போக்கியரு ளவேணும்," என்ன - என்று ப்ரார்த்திக்க ; இலங்கு- விளங்காநின்றுள்ள, [யரு திருமார்வில் - தன்திருமார்விலுண்டான, அமுதுநீர் - அம்ருதஜலத்தை, தந்தான்- தெளித்தப்போக்கினவன் நித்யவாஸம்பண்ணுமதாய், சந்து - சந்தநவ்ருக்ஷங் கள், ஆர் - நிறைந்த, பொழில்-சோலைகளாலே, சூழ்ந்த-சூழப்பட்டிருப்பதான, சாளக்கிராமமடை நெஞ்சே!—. ... ... ... ... (அ)

வ்யா.—ஏழாம்பாட்டு.—(ஏனோரித்யாதி) சத்ருக்களான ஆஸுர ப்ரக்ருதிகளஞ்சும்படியாக, யுத்தத்திலே நரஸிம்ஹமாய். (பரியவிர ணியனை) ஊர்மாநத்தாலே தடித்த ஹிரண்யனை. "உடம்பையொழிய ஆத்மாவு மொன்றுண்டு, அத்தை யுடையானொருவனுண்டு, அவனைப் பெறவேணும்" என்னும் மென்மையும் கலந்துவளர்ந்த வுடலன்றே!. மாம்ஸப்ரசுரமாயிருக்கிற மார்வைப் பிளவுசெய்த அத்விதீய [உரு ன்;அப்படிப்பட்டவன்தானே,சந்த்ரஸூர்யர்களுக்கு அந்தராத்மதயா புக்கு இவர்கள் தானென்னலாம்படியாய், ஆகாசமாய், தேஜஃ பதார்த்தமாய், வாயுதத்வமாய், கார்யகோடியில் மலையாய், கடல் சூழ்ந்த ஊமியுடைய தான் என்னலாம்படி ஜகதாகாரனாய் நின்றநிலை யைச்சொல்லுகிறது. (தானுமானான்) அஸாதாரண திவ்ய [கூயி விக்ரஹயுக்தனாயிருக்கிறவன். ... ... ... ... எ

எட்டாம்பாட்டு.—(வெந்தாரென்பும்) வெந்தவர்களுடைய எலும்பும் அது சுட்ட சாம்பலும் உடம்பிலே பூசி, கையிலே,

ஏழாம்பாட்டு.—(ஏனோரித்யாதி.) கீழ்ப்பாட்டில் த்ரிவிக்ரமாபதாநம் ப்ரஸ்துதமாகையாலே, அதுதானும் வ்யாப்திக்குப்ரத்யபிஜ்ஞாபகமாகையாலே[கூரு ஸ்மர்தமான வ்யாப்திக்கும் "எங்குமுளன்" என்ற சிறுக்கன் வார்த்தையை மெய்யாக்கின நரஸிம்ஹாவதாரம் ப்ரயோஜகதயா ஸ்மர்தமாய், அத்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

"பரிய" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (உடம்பையித்யாதி.)மென்மையும்கலந்தென்றது-பகவத்பரனுடம்புபோலே நினைந்தனைக் [சூயி து க்ர்சமாயிருக்கு மதுவும் கலந்தென்றபடி. இங்ஙனன்றாகில், "ஊனுரதலம்" என்றபோதே பருத்திருக்கை அர்த்தஸித்தமிறே ; இப்படி விசேஷிக்க வேண்டா விறே யென்று திருவுள்ளம். ... ... ... ... ஊ.

‡ "இலங்கு மதுநீர்" என்றும் சில ஸ்ரீகோசங்கள்,

மூ.—அங்கண் ஞாலமஞ்ச வங்கோ ராளரியாய், அவுணன்
பொங்க வாகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதனிடம்;
பைங்கணானைக்கொம்பு கொண்டு பத்திமையாலடிக்கீழ்
செங்கணாளி யிட்டிறைஞ்சும் சிங்கவேழ்குன்றமே. ... க.

ப-ரை.—"ஸர்வேச்வரன் எங்குமுளன்" என்று ப்ரதிஜ்ஞைபண்ணின ப்ரஹ்லாதனைப்பார்த்து அவன் தமப்பனான ஹிரண்யன் "இங்கில்லை" என்று ஒரு தூணைத்தட்ட, அங்கு - அவன் ப்ரதிஜ்ஞைபண்ணின அவ்விடத்திலேயே; அம் - அழகியதாய், கண் - இடமுடைத்தான, ஞாலம் - பூமியெல்லாம், அஞ்ச-பயப்படும்படி, ஓர் - இதற்குமுன்பு ஒருவரும் கண்டறியாத, ஆள் அரியாய் - நரஸிம்ஹரூபியாய்த்தோற்ற; அத்தைக்கண்டு, அவுணன் - ஆஸுரப்ரக்ருதியான ஹிரண்யன், பொங்க - கிளர; ஆகம் - அவனுடைய சரீரத்தை, வள்உகிரால் - கூர்மையுள்ள திருவுகிரால், போழ்ந்த - பிளந்து பொகட்ட, புனிதன் - பாவசுத்தியையுடைய ஸர்வேச்வரன், பின்புள்ளாருடைய விரோதிகளைப் போக்குகைக்காக வர்த்திக்கிற, இடம்-ஸ்தாநமாவது; செம்கண்-கோபத்தால்சிவந்தகண்களையுடைய, ஆளி - ஸிம்ஹங்களானவை, பை - பசுமையையுடைய, கண் - கண்களையுடைத்தான, ஆனை - யானைகளின், கொம்பு-கொம்புகளை, கொண்டு - பறித்துக்கொண்டு, பத்திமையால் - பகவத்பக்தியாலே, அடிக்கீழ் - திருவடிகளிலே, இட்டு - ஸமர்ப்பித்து, இறைஞ்சும் - ஆச்ரயிக்கிற, சிங்கவேழ்குன்றம் - சிங்கவேழ்குன்றம்; அங்குப்போய் நெஞ்சே! நாம்தொழுதும் என்கிறார். ... ... க.

ப்ரதிஜ்ஞைபண்ணினவிடத்திலே வந்து ஸந்நிதிபண்ணி அவனுடைய விரோதியைப்போக்கி உபகரித்திலோமோ, அதுதான் அக்காலமொன்றிலுமேயாய் பிற்பட்டகாலத்தி லுள்ளார்க்கு மிழக்கவேண்டாதபடி "உன்னைப்பிரமாணித்தார் பெற்றபேறு" என்கிறபடியே ஆச்ரிதராருமெல்லார்க்குமாகச்செய்த செயலன்றோ, ஆனபின்பு உம்முடையபோல்வார்க்கு இழக்கவேண்டாதபடி சிங்கவேழ்குன்றிலே வந்து நீர்கிட்டி யநுபவிக்குமதுவே குறையாக நாம் வந்திருந்தோமே, இப்படியிருக்க ஒருதலை யத்யவஸாயமேயாக நீர் சொல்லுவானென்? என்று, தான் சிங்கவேழ்குன்றிலேவந்து ஸந்நிதிபண்ணினபடியைக் காட்டிக்கொடுக்க; அங்கே புருஷகாரபூதையான பிராட்டியாரோடேகூட வெழுந்தருளி யிருக்கிற விருப்பையநுஸந்தித்து ஹ்ருஷ்டராய், உத்தேச்யனா யிருக்கிறவன் வந்திருக்கிற தேசமாகையாலே அங்குள்ளதடைய உத்தேச்யமாய், சிலரால் வந்தணுக வொண்ணாதபடி ஸுரக்ஷிதமாக வெழுந்தருளி யிருக்கப்பெற்றது! என்றுதிருவுள்ளத்தோடேகூடிப்போ யநுபவிக்கையிலே யொருப்படுகிறார். ... ... ... ... *

[உடு]
[உடு]
[கூடு]
[கூடு]

"பிரமாணித்தார் பெற்றபேறு" என்றதுக்குத்தாத்பர்யம்-அன்று இந்த்ரனுக்குக்காரியம் செய்தநீ இன்றுஎனக்கும் செய்யவேணுமென்றுவழக்குச்சொல்லிக் காரியங்கொள்ளலா யிருக்கையாலே, அன்றுஒராச்ரிதனுக்குச்செய்தது இன்றெல்லார்க்குமாகச் செய்ததாமென்று. பிராட்டியாரோடே யென்றது-"அல்லிமாதர்"என்றத்தைப்பற்ற. "நல்லநெஞ்சே" என்றத்தைப்பற்ற (திருவுள்ளத்தோடே யென்றது.) இத்திருமொழியாலே உத்தரவண்யார்யமான ப்ராப்யாநுபவம் பண்ணுகிறாரென்று கருத்து. ... ... ... ... ... ... ... *

[சூடு]

வ்யா.—முதற்பாட்டு.— (அங்கண்ஞாலமஞ்ச) அழகிதான இடத்தையுடைத்தாயிருந்துள்ள ஐூமியாகஅஞ்ச. நரஸிம்ஹமாய்த் தத்தான் ஐமஷ்ட்ரகூணத்துக்காகவிறே; அங்ஙனேயிருக்கச்செய்தேயும் இதினுடைய விளைவதறியாமையாலே ஜமத்தாக நடுங்கிற்றாய்த் [ரு து. இதெவ்வளவாய்த்தலைக்கட்டுகிறதோ என்றிருந்ததாய்த்து. (அங்கு) அவன் ப்ரதிஜ்ஞை பண்ணின அவ்விடந்தன்னிலே. (ஓராளி யாய்) இதுக்கு முன்போரிடத்திலும் கண்டறியாத நரஸிம்ஹமாய். (அவுணன்பொங்க) ஆஸுரப்ரக்ருதியான ஹிரண்யன், கிளர்ந்தானாய் த்து, நரஸிம்ஹத்தைக்கண்டகாட்சியிலே. இதுக்குமுன்பொருவன்[ம் "நானெதிரி" என்றுதோற்றக்கண்டறியானே, இவனுடைய தோற்றரவி லே கிளர்ந்தானாய்த்து; அவனுடைய சரீரத்தைக் கூரியதிருவுகிராலே யிருபிளவாம்படிபண்ணின. சில அசித்பதார்த்தங்களை வகிர்செய்யுமாப் போலே யாய்த்துப் போழ்ந்தபடி. (போழ்ந்த புனிதனிடம்) ஜமத்ஸ்ரு ஷ்ட்யாதிகளில்வந்தால்ப்ரஹ்மாதிகளையேவித்தான்கடக்கவிருக்கு [ம்டு ம்; அங்ஙனன்றியே, தானே கைதொட்டு வ்யாபரிக்கையாலே பிறந்த சுத்தியைச் சொல்லுகிறது. அவனப்படி பின்புள்ளார்க்கு உதவுகைக் காக வர்த்திக்கிற ஸ்தாநம்.

(பைங்கணித்யாதி) ஹிரண்யனைக்கண்ட நரஸிம்ஹத்துக்குச் சீற்றம் மாறாதாப்போலே, ஆனைகளைக்கண்ட ஸிம்ஹங்களுக்கும் சீற் றம் மாறாதே யிருக்கும்படி. (பைங்கண்) ஜாத்யுசிதமான பசுமை யை யுடைத்தாயிருக்குமாய்த்து. (கொம்புகொண்டு) ஆனையினு டைய மஸ்தகத்தைக் கிழித்து அதினுடைய கொம்பைப்பறித்து, ஸமவஸ்ஸத்தியாலே திருவடிகளிலே யிட்டு ஆச்ரயியாநிற்குமாய்த்து ஸிம்ஹங்களானவை. *யடிந:புருஷோஸவதியிறே. செங்கணாளி—[உரு பைங்கணானைக்கொம்புகொண்டு பத்திமையா லடிக்கிழ் – இட்டிறை ஞ்சும். (செங்கணாளி) இவற்றுக்கானைகளின்மேலே சீற்றமாறாதே யிருக்கச்செய்தேயும், ஸமவஸ்ஸத்தி ஒருபடிப்பட்டுச் செல்லு மாய்த்து. சீற்றம் விக்ருதியாய், ஸமவஸ்ஸத்தி ப்ரக்ருதியா யிருக்கு மாய்த்து. ... ... ... ... ... க.

---

அ.—முதற்பாட்டு.— (அங்கணித்யாதி.)

விளைவதறியாமையாலே யென்றது - ஆச்ரிதவிரோதியைப் போக்குகைக்கா கக் கொண்டசீற்றமென்றறியாமையாலே யென்கை. ஐூமியாகஅஞ்சஹிரண்யன் கிளர்ந்ததுக்குஹேதுவென்னென்ன வருளிச்செய்கிறார் (நரஸிம்ஹத்தையித்யாதி.) போழ்ந்தபடி - பிளந்தபடி. சுத்தியை - ஸாவசுத்தியை. [கூரு

"செங்கணாளி" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (ஹிரண்யனை யித் யாதி.) * வலிமிக்கசியமான விராமாநுசனோடொப்பார், பரவாதிமத்தஜங்கள் மேல் கொண்ட சீற்றத்தோடே யிருக்கச்செய்தேயும், ஸமவத்ஸத்தி குறைவற்றி ருப்பரென்று ஸ்வாபதேசம். ... ... ... ... க.

மூ.—அலைத்தபேழ் வாய் வாளெயிற்றோர் கோளரியாய், அவுணன்-
கொலைக்கையாளன் நெஞ்சிடந்த கூருகிராளனிடம்;
மலைத்தசெல்சாத்தெறிந்த பூசல் வன்துடி வாய் கடுப்பச்
சிலைக்கைவேடர் தெழிப்பறாத சிங்கவேழ்குன்றமே. ... உ.

ப-ரை.—அலைத்த - சிற்றத்தாலே நாவானது நின்றவிடத்தில்நில்லாதபடி சலி யாநின்றுள்ள, பேழ் - பெரிய, வாய் - வாயையும், வாள் - ஒளிதங்கின, எயிறு-பற்களையும், ஒர் - ஒப்பற்ற, கோள் - மிடுக்கையுமுடைய, அரியாய் - ஸிம் ஹமாய்க்கொண்டு; கொலை-கொல்லுகையே ஸ்வபாவமான, கையாளன்-கையை யுடையனான, அவுணன் - ஹிரண்யனுடைய, நெஞ்சு - மார்வை, இடந்த - [௰ கிழித்துப்பொகட்ட, கூர் உகிராளன் - கூரிய திருவுகிரையுடைய ஸர்வேச்வரன் நித்யவாஸம்பண்ணுகிற, இடம்-ஸ்தாநமாகிறது; மலைத்த-வேடரால் தகையப்பட்ட வர்களாய், செல் - தீர்த்தயாத்ரை போகாநிற்கிற, சாத்து - ஸமூஹமானது, எறி ந்த - இட்ட, பூசல்-யுத்தத்திலே, வல் - மிகவும் த்வநியாநின்றுள்ள, வாய்-வாயை யுடைத்தான, து -உடுக்கைமுதலிய வாத்யங்கள், கடுப்ப-சப்திக்கவும், சிலை-[௰௫ வில்லை, கை - கையிலேயுடையரான, வேடர் - வேடருடைய, தெழிப்பு - ஆர வாரமானது, அறாத - எப்போதும் மாறாத, சிங்கவேழ்குன்றம்—. ... உ.

வ்யா.—இரண்டாம்பாட்டு.—(அலைத்த) சிற்றத்தாலே கடை வாய்களோடே நாக்கை யொற்றிக்கொள்ளாநின்றுள்ள பெரியவாயை யும், ஒளியையுடைத்தான எயிற்றையுமுடையஅத்விதீயமான மிடு[௨௰ க்கை யுடைத்தான ஸிம்ஹமாய். (அவுணன் கொலைக்கையாளன்) நாட்டார் பரஹிம்ஸை பண்ணுவது தந்தாமுடைய ப்ரஜைகளுடை ய ரக்ஷணத்துக்காகவிறே; இவனுக்கது போய், ப்ரஜையை ஹிம் ஸிக்குமது ஸித்ததாய்த்து. பரஹிம்ஸைபண்ணுகைக்கு தேவதை கள்பக்கலிலே வரம்பெற்று அதுதானே யாத்ரையாய்த் திரிகிற [௨௫ அஸுரனுடைய நெஞ்சை யிடந்த கூரிய திருவுகிரை யுடையவன் வர்த்திக்கிற ஸ்தாநம்.

(மலைத்தவித்யாதி) திரள் திரளாக தீர்த்தயாத்ரை போகாநி ற்பர்களே; அவர்களைப்பறிக்கைக்காக அங்குண்டான வேடர் வந்து மலைத்து மேல்விழுவர்கள்; இவர்களுமவர்களோடே யெதிர்ப்பர்[௩௰ கள். (எறிந்தபூசல்) எறிதல் — இடுதல்; இட்டபூசல். அவர்களிவர் களைச்சூறைகொள்ளுகிற பூசலிலே. (வன்துடி வாய் கடுப்ப) கேட்ட போதே முடியும்படியான த்வநியை யுடைத்தா யிருக்கிற துடி யானது கடுப்ப.

இரண்டாம்பாட்டு.—(அலைத்தவித்யாதி.)ஞாலமஞ்சஆளரியானப்ரகாரத் [௩௫ தை வர்ணிக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

"கோள்" என்றதினர்த்தம் (மிடுக்கையென்றது.) கொலைக்கையாளனை - அவுணன் - நெஞ்சிடந்த என்றந்வயம்.கொலையே ஸ்வபாவமாக வுடைய கையை யுடையவனென்று சப்தார்த்தம்; அத்தை யுபபாதிக்கிறார் (நாட்டாரித்யாதி.) வாக் யார்த்தம் (பரஹிம்ஸையித்யாதி.) [௪௰

மலைத்த-தகையப்பட்ட, செல்சாத்து-செல்லாநிற்கிறஸமூஹமென்றுசப்தார்த்த மாய், அத்தை வர்ணிக்கிறார் (திரளித்யாதி.) சூறை - புடவை. கடுப்ப-சப்திக்க.

மூ.—ஏய்ந்தபேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய், அவுணன்-
வாய்ந்த வாகம் வள்ளுகிரால் வகிர்ந்த வம்மானதிடம்;
ஓய்ந்த மாவு முடைந்த குன்று மன்றியு நின்றழலால்
தேய்ந்தவேயுமல்லதில்லாச் சிங்கவேழ்குன்றமே. ... ௩.

ப-ரை.—ஏய்ந்த - வடிவுக்குத்தக்க, பேழ் - பெருத்த, வாய் - வாயையும், வாள் - வாள்போன்ற, எயிறு - பற்களையும், ஓர் - ஒப்பற்ற, கோள் - மிடுக்கையுமுடைய, அரியாய்-நரஸிம்ஹரூபியாய்க்கொண்டு, அவுணன்-ஆஸுரப்ரக்ருதியான ஹிரண்யனுடைய, வாய்ந்த-நரஸிம்ஹத்துக்குத் தகும்படி வளர்ந்த,ஆகம் - சரீரத்தை, வள்உகிரால் - கூரிய திருவுகிராலே, வகிர்ந்த - அநாயாஸேந [மு றித்துப் பொகட்ட, அம்மானது - ஸர்வேச்வரனுடைய, இடம் - ஸ்தாநமாவது; ஓய்ந்த - ஸாரமில்லாத நிலத்தில் ஸஞ்சரிக்கையாலே ஓய்ந்து கிடக்கிற, மாவும் - ம்ருகங்களும், உடைந்த - திக்குதவி உடைந்த, குன்றும் - பர்வதங்களும், அன்றியும் - அதுக்குமேலே, நின்று - தன்னிலேயுண்டான, அழலால் - நெருப்பாலே, தேய்ந்த - குறைக்கொள்ளியாய்க் கிடக்கிற, வேயும் - மூங்கிலும், அல்லது - [ழிந் ஒழிய, இல்லா - வேறில்லாத, சிங்கவேழ்குன்றம்—. ... ... ௩.

(சிலைக்கை) கையில் வில்லை யுடையராயிருந்துள்ள வேடருடைய ஆர்ப்பாவம் மாறாத தேசமாய்த்து; அவர்கள் கையில் ஸயாவஹமான துடியோசையும் பறிக்கிற ஆர்ப்பரவமுமேயாய்ச் செல்லாநிற்குமாய்த்து. உகந்தருளின நிலங்களிலே யுள்ளதாகையாலே,அவர்கள்கையில் துடியோசையோடு அவர்களைப் பறிக்கிற த்வநியோடுவாசியற உத்தேச்யமாயிருக்கிறதாய்த்து. நரஸிம்ஹத்தினுடைய சீற்றத்தோடு அங்குள்ளாருடைய சீற்றத்தோடு அவர்கள் வ்யாபாரத்தோடு வாசியற்றிருக்கிறதாய்த் திவர்க்கு. ... ... ... ... ௨.

மூன்றும்பாட்டு.—(ஏய்ந்தவித்யாதி) வடிவிற்பெருமை [உடு க்குத் தகுதியானபெரியவாயையும்; வாள்போலேயிருந்துள்ளஎயிறென்னுதல், ஒளியை யுடைத்தான எயிறென்னுதல். (ஓர்கோளரியாய்) மிடுக்கையுடைய அத்விதீய நரஸிம்ஹமாய். அவுணனுடைய – ஆஸுர ப்ரக்ருதியானவனுடைய, வாய்ந்தவாகமூண்டு – நரஸிம்ஹத்துக்குத் தகுதியாம்படி வளர்ந்த சரீரம், அத்தைக்கூரிய[கூடு வுகிராலே வகிர்ந்த ஸர்வேச்வரனுடைய ஸ்தாநம்.

“தெழிப்பு” என்றதினர்த்தம் (ஆர்ப்பரவமென்றது.) தீர்த்தயாத்ரை போகிறவர்களுடைய கூறைகொள்ளுகிற வேடரை யிவர் வர்ணிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (உகந்தருளினவித்யாதி.) இத்தால் - “யஸ்யாநுக்ரஹமிச்சாமி தஸ்யவித்தம்ஹராம்யஹம்” என்கிற ஈச்வரனேபாதி அவர்களும் கைம்முதல் [கூறு வாங்கி அநந்யகதிகளாக்கி விட்டு இவர்களுடைய ஸர்வஸ்வத்தையும் ஆளியைப் போலே அந்நரஸிம்ஹத்துக்கு சேஷமாக்குமவர்களாகையாலே உத்தேச்யமாய் வர்ணித்தா ரென்றதாய்த்து. ... ... ... ... ௨'

மூன்றும்பாட்டு.— (ஏய்ந்தவித்யாதி.) இவரவன்வாயைப்பார்த்துக் கொண்டிருக்குமவராகையாலேயிவ்வுமவன்வாயை வர்ணிக்கிறாரென்றுமாற்றுமின்டு[சமி கொள்வது.

மூ.—எவ்வும் வெவ்வேல் பொன்பெயரோனேதலனின்னுயிரை-
வவ்வி ஆகம் வள்ளுகிரால் வகிர்ந்த வம்மானதிடம்;
கவ்வுநாயும் கழுகு முச்சிப்போதொடு கால் சுழன்று
தெய்வமல்லாற் செல்லவொண்ணாச் சிங்கவேழ்குன்றமே. ௪.

ப-ரை.— எவ்வும் - துக்கத்தைப் பண்ணுகிற்பதாய், வெம் - க்ரூரமான, வேல்-வேலையுடைய, ஏதலன் - சத்ருவான, பொன்பெயரோன் - ஹிரண்யனுடைய, இன் உயிரை - நற்சீவனை, வவ்வி - பரிக்ரஹித்து, ஆகம் - அவன் சரீரத்தை, வள்ளுகிரால் வகிர்ந்த அம்மானதிடம்—; கவ்வும் - கண்டாரை யெல்லாம் கவருமதான, நாயும்-நாய்களும், கழுகும் - அப்படிப்பட்ட கழுகுகளும், உச் [௰சிப்போதொடு - ஆதித்யனும், கால்சுழன்று - கால்தடுமாறுமதாய், தெய்வம் அல்லால் - தன்னை விரும்பித்தொழும் ஆஸ்ரிதர்க்கொழிய, செல்ல ஒண்ணா - சென்று கிட்டவொண்ணாத, சிங்கவேழ் குன்றம்—. ... ... ... ௪.

(ஓய்ந்தமாவும்‡) தளர்ந்து பசையற்ற நிலத்தில் ஸஞ்சாரத்தாலே அந்நிலத்துக்கடைத்த திர்யக்குக்களும் ஓய்ந்திருக்கு மாய்த்[௰டு து. (உடைந்தகுன்றும்) தொட்டாரோடே ஷோஷமாம்படி திக்கதுவி யுடைந்த குன்றும், அதுக்குமேலே, தன்னிலே யுண்டான அழலாலே தேய்ந்த மூங்கிலுமல்ல தில்லாத சிங்கவேழ்குன்றமே. தன்னிலேயுண்டான நெருப்பாலே தேய்ந்த வேய்களும், *வண்டினமுரலுஞ்சோலை யோபாதியாகத்தோற்றுகிறதாய்த்திவ[௨௰ர்க்கு. "அதுவிதுவுதுவென்னலாவனவல்ல" என்னக்கடவதிறே. பிறர்க்குக்குற்றமாய்த்தோற்றுமவையும் உபாதேயமாய்த் தோற்றுகையிறே ஒருவிஷயத்தை உகக்கையாகிறது. ... ... ௯.

நாலாம்பாட்டு.— ( எவ்வும் வெவ்வேல் பொன்பெயரோன்) கையும் வேலுமா யிருக்கிற விருப்பைக்கண்டகாட்சியிலே, [௨௫

"மா‡" என்று - நாலுகாலுடைய ஜந்துக்களாய், மிருகங்களைச் சொல்லுகிறது. தேய்ந்த - குறைக்கொள்ளியான. குறைக்கொள்ளியைக் கொண்டாடுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (தன்னிலேயித்யாதி.) அவன் ஸம்பந்தமுள்ளதெல்லா முத்தேச்யமாய்த் தோற்றுகைக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார் (பிறர்க்கித்யாதி.) ஆக, நரஸிம்ஹம் தன்னிலுண்டான கோபாக்நியாலே குன்றுபோன்ற ஹிரண்யன்நெஞ்சுடைத்து தத்ரத்யரான ராக்ஷஸராகிற துஷ்டம்ருகங்கள் ஓய்ந்து கிடக்கிறபடிக்கு ஸ்மாரகமாய் இவர்க்குத்தேச்யமாய்த் தோற்றுகிறதென்றதாய்த்து. ... ... ... ... ... ... ௯.

நாலாம்பாட்டு.— (எவ்வுமித்யாதி.) கீழ் "கோளரியாய்" என்று - மிடுக்கைச் சொன்னது உபபந்நமென்று தோற்ற, சத்ருவான ஹிரண்யனை வர்ணிக்கிறு[௧௫ ரென்று வக்ஷ்யமாணம் கண்டுகொள்வது.

‡ "மாவே கருமையும் பெருமையும் விலங்கும், மேவியகாற்காறுடையவும் வண்டும், பூவுறைதிருவெனவாறையும் பொருந்தும்" என்று நிகண்டு.

அது உடம்பிலே தைத்தால் பிறக்கும் து:க்கமெல்லாம் பிறக்கும்படி யிருக்கை. எவ்வத்தைப் பண்ணாநின்றுள்ள வெவ்விய வேலை யுடைய, பொன்பெயரோனுண்டு-ஹிரண்யன். எவ்வம் - து:க்கம். ஏதலன்- சத்ரு. சிறுக்கனுக்கு சத்ருவானபோதே தனக்கும் சத்ருவாயிருக்கிறானாய்த்து. "சத்ருக்ருஹத்தில் போஜிக்கவுமாகாது" என்றானிறே. பாண்டவர்களுக்கு சத்ருவானபோதே தனக்கும் சத்ருவானபடி ; அவனுடைய இன்னுயிரை - அவன்விரும்பின வுயிரை. (வவ்வி) பரிக்ரஹித்து ; "பௌஜநார்த்தக்ருத்ய:" என்கிறபடியே.

(கவ்வுநாயும்) ஆரேனுமாகக்கண்டபோதே கவ்வியல்லது நில்லாதநாயும், அப்படி கவ்வும் கழுகும். (உச்சிப்போதொடு கால்சுழன்று) ஆதித்யனும் அந்நிலத்திலே வந்தவாறே,கால்தடுமாறிச்சுழன்று வாராநிற்குமாய்த்து. உச்சிப்போதுண்டு - ஆதித்யன், அவனோடே கூட, கவ்வுநாயும் கழுகுமாகக் கால் சுழன்று வாராநிற்கு மென்னுதல் ; அன்றிக்கே, உச்சிப்போதோடே,காலுண்டு-காற்று,அது சுழன்றுவாராநிற்கும். நிலவெம்மையைச்சொன்னபடி. அத்தேசத்தை ச்சென்று ப்ராபிக்க ஆசைப்படுகிறவர், "தெய்வமல்லால் செல்ல வொண்ணா" என்கிறாராய்த்து, நரஸிம்ஹத்தினுடைய அழகைக் கண்டு கண்ணெச்சில்படுவாரில்லையென்னுமத்தைப்பற்ற. "அந்தியம் போதி லரியுருவாகி யரியையழித்தவனைப்பல்லாண்டு" என்னுமவர்களிறே. அநாஸ்ரிதர்க்குச் சென்று கிட்ட வொண்ணாதாய்த்து. ஹிரண்யன்போல்வார்க்குச்சென்று ப்ரவேசிக்கப்போகாதாய்த்து.ச.

---

"த்விஷத³ந்நம் நபோ⁴க்தவ்யம் த்விஷந்தம் நைவபோ⁴ஜயேத் | பாண்டவாந் த்விஷஸேராஜந் மமப்ராணாஹிபாண்டவா:" என்ற வசநத்தை யுட்கொண்டு கீழ்ச் சொன்ன அர்த்தத்தை ஸாதிக்கிறார் (சத்ருக்ருஹத்திலித்யாதி.) உரு

உஷ்ணகிரணனான ஆதித்யனுக்கும் கால் தடுமாறும்படி யென்னென்ன வருளிச்செய்கிறார் (நிலவெம்மையித்யாதி.) தாம் கிட்டவாசைப்படுகிறவர் "தெய்வமல்லால் செல்லவொண்ணா" என்னக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (அத்தேசத்தை யித்யாதிவாக்யத்ரயத்தாலே.) இங்கு, "தெய்வம்" என்றதுக்கு - "விஷ்ணுபக்திபரோதேவ:" என்கிறபடியே மங்களாசாஸநபரன்கிடாஸ்ஸாப்ராக்ருதிகளுக்குக்கிட்ட வொண்ணாதென்று தாத்பர்யம் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (அநாஸ்ரிதர்க்கித்யாதி.)"ஸீதோபவஹநுமத:" என்கிறபடியே அந்நிலவெம்மைதானே குளிர்த்தியைக் கொடுக்குமென்று கருத்து. ... ... ச.

அஞ்சாம்பாட்டு.—(மென்றவித்யாதி.)சக்ரவர்த்தித்திருமகன்விற்பிடித்தபிடியிலே அஸுரர்மண்ணுண்ணுமாப்போலே,நரஸிம்ஹத்தின் வாயில்பிறக்கும் விக்ருதிகளிலேயும் நசிப்பர்களென்று திருவுள்ளம்பற்றி,*ஏதலனின்னுயிரை வவ்வினதுக்கு ஹேதுவான * மென்றபேழ்வாயை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டு கொள்வது.

மூ.—மென்றபேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய், அவுணன்-
பொன்றவாகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதனிடம்;
நின்றசெந்தீ மொண்டுசூறை நீள் விசும்பூடிரிய†
சென்றுகாண்டற்கரிய கோயில் சிங்கவேழ்குன்றமே. ௫.

---

ப-ரை.—மென்ற - சீற்றத்தாலே அசையாநின்றுள்ள, பேழ் - பெரிய, வாய்- வாயையும், வாள் - வாள்போன்ற, எயிறு - பற்களையும், கோள் - மிடுக்கையுமுடைய, ஓர் அரியாய் - அத்விதீயநரஸிம்ஹமாய், அவ்வடிவைக் கண்டபோதே, பொன்ற - நசித்த, அவுணன் - அஸுரனான ஹிரண்யனுடைய, ஆகம் - சரீரத்தை, வள்உகிரால் - கூரியதிருவுகிராலே, போழ்ந்த - இருபிளவாம்படி பண்ணின, புனிதன் - பாவசுத்தியையுடைய ஸர்வேச்வரனெழுந்தருளி யிருக்கிற, இடம் - ஸ்தானமாவது ; நின்ற - குறைவற்றுக்கிடக்கிற, செந்தீ - சிவந்த அக்நியை, சூறை - சுழல்காற்றானது, மொண்டு - முகந்துகொண்டு, நீள்விசும்பூடு - பரந்த ஆகாசத்தினிடையிலே, இரிய - சிதறவோடுகையாலே, சென்று - அருகே போய், காண்டற்கு-காண்கைக்கு, அரிய- எல்லார்க்கும் அரிதாயிருக்கிற, கோயில் - திருப்பதியான, சிங்கவேழ்குன்றமே—. ... ... ... (௫)

---

வ்யா.—அஞ்சாம்பாட்டு.—(மென்றவித்யாதி) சீற்றத்தாலே மடித்த பெரியவாயையும், வாள்போலே யிருந்துள்ள எயிற்றையும், மிடுக்கையுமுடைய அத்விதீய நரஸிம்ஹமாய். (அவுணன் பொன்ற) நரஸிம்ஹத்தினுடைய தோற்றரவிலே பிணமானானாய்த்து. (ஆகமித்யாதி) பின்னையும் சீற்றம் மாறாமையாலே பிணத்திலே வ்யாபரித்தானித்தனை யாய்த்து. (புனிதனிடம்) பிறர்க்கு உபகரித்தானாயிருக்கையன்றிக்கே தன்விரோதியைப் போக்கின சுத்தியோமத்தை நினைக்கிறதாய்த்து.

(நின்றவித்யாதி) குறைவற்றுக்கிடக்குமாய்த்து அக்நி, அத்தை முகந்துகொண்டு, சுழல்காற்று, பரப்பை யுடைத்தான ஆகாசத்திலே இரிய - அங்கே சிதறவோட, ஆர்ப்பரவத்தைப் பண்ணவென்னுதல்; (எரிய) என்று பாடமாகில், ஆகாசந்தானே (க) இந்தநமாக எரியவென்றபடி. (சென்று) இப்படி யிருக்கையாலே ஒருவர்க்கும் சென்று காண்கைக்கரிதா யிருக்குமாய்த்து. பரமபதத்தோபாதி யிந்நிலத்துக்கும் நமக்கு ஹயப்படவேண்டா என்று ஹ்ருஷ்டராகிறார். ... ... ... ... ௫.

---

பொன்ற - நசித்த. மென்றவாயைக்காணவே பொன்றவாகமாய்த்தென்று கருத்து.

"சூறை" என்றதினர்த்தம் (சுழல்காற்றென்றது.) (எரிய) என்ற பாடத்திலே, சூறைவீச அது நீள்விசும்பூடு (எரிய) என்றத்யாஹரித்துக்கொள்வது. ௫.

ஆறாம்பாட்டு.—(எரிந்தவித்யாதி.) ✱ அங்கண்ஞாலமஞ்சின வளவன்றிக்கே, "நவாயுஃபஸ்பர்ஷேயதராயவாஸ்தம் சமிரவீதிசோகச்யக்விச்வாப்யசலதசலாஸசலகுலா|நஹச்சப்ரச்யோதிக்வஷிதமபிபாயோநரஹரௌ த்வயிஸ்தம்ஹேசம்ஹ்ருத்யபுஷிஸதிஹேஸுர்தராஸுஜ" என்கிறபடியே-தேவர்களு மஞ்சும்படியானபடியை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

---

† "எரிய" என்று பாடாந்தரம். (க) இந்தநம் - விறகு.

ரு.—எரிந்தபைங்கணிலங்குபேழ்வாயெயிற்றொடிதெவ்வுருவென்று
இரிந்து வானோர் கலங்கியோட விருந்த வம்மானதிடம்;
நெரிந்தவேயின் முழையுள்நின்று நீணெறிவா யுழுவை
திரிந்தவானைச்சுவடு பார்க்கும் சிங்கவேழ்குன்றமே. ரு.

ப-ரை.—எரிந்த - சீற்றத்தாலே எரியாநிற்பதாய், பை-பசுமையான, கண்-கண்களையும், இலங்கு - ஒளிவிடாநின்றுள்ள, பேழ்வாய் - பெரியவாயையும், எயிற்றொடு - பற்களையுமுடைத்தாயிருக்கிற, வடிவைக்கண்டு, இது எவ்வுரு ! - இது என்னவடிவு !, என்று - என்றுஅஞ்சி, வானோர் - தேவர்கள், இரிந்து - அங்கேயிங்கே சிதறி,கலங்கி-கால்தடுமாறி, ஓட- ஒருவர் புக்கவிடத்தில் ஒருவர்புகாதே[யோ]டும்படியாக, இருந்த - எழுந்தருளியிருக்கிற, அம்மானது - ஸர்வேச்வரனுடைய, இடம் - ஸ்தாநமாவது ; நெரிந்த - ஒன்றோடொன்று சேர்ந்திருந்துள்ள, வேயின் - மூங்கிலின், முழையுள்நின்று - துளைவழியாக, உழுவை - புலிகளானவை, நீள் நெறிவாய் - பெரியவழியிலே, திரிந்த - ஸஞ்சரியாநின்றுள்ள, ஆனை - யானைகள் போன,சுவடு - அடையாளத்தை, பார்க்கும்- நிர்வ்யாக்ராணத்தாலே[யே] பாராநின்றுள்ள, சிங்கவேழ்குன்றம்—. ... ... ... (ரு)

வ்யா.—ஆறும்பாட்டு.—(எரிந்தவித்யாதி) சீற்றத்தாலே யெரியாநிற்பதாய் ஜாதிப்ரயுக்தமான பசுமையை யுடைத்தான கண்ணையும், உஜ்ஜ்வலமாகாநின்றுள்ள பெரிய வாயையும், எயிற்றையுமுடைய வடிவைக்கண்டு.(இதெவ்வுருவென்று)"இற்றைக்கு முன்பு[ம்] கண்டறியாத தொன்று யிராநின்றது ! இதென்ன வடிவு!" என்றஞ்சி, தேவர்களானவர்கள் (ஆர்ப்பரவத்தைப்பண்ணி) † அங்கேயிங்கே சிதறிக் கால் தடுமாறி, ஒருவர் புக்கவிடத்திலே யொருவர் புகாதே யோடும்படியா யிருந்த ஸர்வேச்வரனுடைய ஸ்தாநம்.

(நெரிந்தவித்யாதி)நெருக்கத்தாலேஒன்றோடொன்றுஇழை[ய]ந்து நெரிந்திருந்துள்ள மூங்கில்துளைவழியே - அந்த த்வாரத்தாலே, உழுவையுண்டு - புலி, அது, நீணெறிவாயிலே - பெருவழியிலே, ஸஞ்சரியாநின்றுள்ள. (ஆனைச்சுவடு பார்க்கும்) ஆனையினுடைய மஸ்தகத்தைப்பிளந்துஅத்தைப்பாநம்பண்ணுகைக்காகஅவை போகிற பெருவழியிலே அவற்றைச்சுவடொத்தி நிற்குமாய்த்து,[கூம்] ஆஸ்ரப்ரக்ஷிகளாயிருப்பாரை யழியச்செய்கைக்கு நரஸிம்ஹம் அடிச்சுவடொத்துமாப்போலே. ... ... ... ரு.

மூலத்திலே (எயிற்றொடு) என்ற வநந்தரம், இருக்கிறவடிவைக்கண்டு என்றத் யாஹாரம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (சீற்றத்தாலே யித்யாதி.) "இரிந்து" என்றதினர்த்தம் (அங்கேயிங்கேசிதறி) என்றது. [கூடு

(த்வாரத்தாலே) என்றவநந்தரம், புறப்பட்டு என்று சேஷம். இத்தால் - ஒன்றோடொன்று சேர்ந்திருந்துள்ள மூங்கில்களைத் தன் பலத்தாலே நீக்கி வெளிகண்டு புலி வெளிநிலத்திலே புறப்பட்டதென்று வம்சாதிவ்ருத்தியைச் சொல்லிற்றாய்த்து. (சுவடொத்திநிற்கும்) என்றதுக்கு - இக்குறங்யாக்ராணம் பண்ணுநிற்குமென்று கருத்து. ... ... ... ... ... ரு.

† குண்டலிதக்ரந்தம் சில ஸ்ரீகோசங்களி லில்லை.

மூ.—முனைத்த சீற்றம் விண்சுடப்போய் மூவுலகும் பிறவும்
அனைத்துமஞ்சவாளரியா யிருந்த வம்மானதிடம்;
கனைத்த தீயும் கல்லுமல்லா வில்லுடைவேடருமாய்த்
தினைத்தனையும் செல்லவொண்ணாச் சிங்கவேழ்குன்றமே. எ.

ப-ரை.—முனைத்தசீற்றம் - மிக்க கோபமானது, போய் - இக்குன்றும் போய், விண்சுட - ஆகாசத்தைச் சுடும்படியாகவும், மூவுலகும் - மூன்றுலோகங்களிலுள்ளவர்களும், பிறவும் - மற்றும், அனைத்தும் - ப்ரஹ்மாதிலோகங்களிலுள்ளவர்களும், அஞ்ச - பயப்படும்படியாகவும், ஆளரியாய் - நரஸிம்ஹரூபியாய், இருந்த - எழுந்தருளி யிருக்கிற, அம்மானது - ஸர்வஸ்வாமியுடைய, இடம் - [ம ஸ்தானமாவது ; கனைத்த-எரியும்போது த்வநியாநின்றுள்ள, தீயும்-அக்நியையும், கல்லும் - அத்தாலே வேகிற கற்களையும், அல்லா-இவற்றிலுங் காட்டில் க்ரூரராய், வில் - வில்லை, உடை - கையிலே யுடையரான, வேடருமாய் - வேடர்களையுமுடைத்தாய், அநாஸ்ரிதர்களுக்கு, தினைத்தனையும் - க்ஷணகாலமாகிலும், செல்ல ஒண்ணா - கிட்டவொண்ணாத, சிங்கவேழ்குன்றம்—. [கரு
முனைத்தலென்றும், சீற்றமென்றும் - கோபமாய், மிக்ககோபமென்றபடி.(எ)

வ்யா.—ஏழாம்பாட்டு.—(முனைத்தவித்யாதி) மிக்கசீற்றமானது போய் அந்தரிக்ஷத்தைச்சுட. (மூவுலகு மித்யாதி) த்ரைலோக்யமும் ப்ரஹ்மாதிகளுடைய குடியிருப்பும் எங்குமொக்க அஞ்சும்படியாக ; ஆண்மையை யுடைய வென்னுதல், மநுஷ்யத்வமும் [உம ஸிம்ஹத்வமும் கலந்திருக்கையைச் சொல்லிற்றுதல்.

(கனைத்த) த்வநியாநின்றுள்ள அக்நியும் – எரிகிறபோதை வெடு வெடென்கிற த்வநியை யுடைத்தான அக்நியும், அதிலே வைக்கோல் போர்போலே வேகிற கல்லும்¶.

(அல்லாவித்யாதி) இங்ஙனெரிகிற நெருப்பிலும் கல்லிலும் [உரு அடியிடலாம், அங்குத்தை வேடர்முகத்தில் விழிக்க வொண்ணாதாய்த்து அவர்களுடைய க்ரௌர்ய மிருந்தபடி. (தினைத்தனையும்)உகவாதார்க்கு நண்ணாலே காணலாம்படி சென்றுகிட்டிக் கண்ணெச்சிற்படவொண்ணாதபடி யிருந்த தேச மாய்த்து. ... ... எ.

ஏழாம்பாட்டு.—(முனைத்தவித்யாதி.) "எரிந்தபைங்கண்" என்றத்தால் [கூம தோற்றின சீற்றத்தின் எல்லைநிலத்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி கண்டு கொள்வது.

"ஆள்" என்றதினர்த்தம் (ஆண்மையையென்றது.) அதாவது - சேவகத்தனம். "ஆள்" என்றதுக்கர்த்தாந்தரம் (மநுஷ்யத்வமுமித்யாதி.)"அல்லா" என்றுவிசேஷிக்கையாலேவேடர்க்குஆதிக்யம்தோற்றுகிறதென்கிறார் (இங்ஙனித்யாதி.)தினைத் [கூரு தனையும்-" தினையென்று - ஸூக்ஷ்மமானயாங்யமாய், எள்ளத்தனை யென்னுமாப் போலே யாய், பரிமிதகாலத்தைச்சொல்லுகிறதென்று விவக்ஷித்து, வாக்யத்துக்கு உட்கருத்தருளிச்செய்கிறார் (உகவாதார்க்கித்யாதி.) ... ... எ.

எட்டாம்பாட்டு.—(நாத்தழும்ப வித்யாதி.) ஓர்ஹகிர்ஹஜகத்தாலே விக்ஜதியை யடைந்து ஹிரண்யனைக்கொன்றபடியை யநுஸந்தித்தாராய், பின்பு [சம ப்ரஹ்மாதிகளாலே ஸ்துத்யனாயிருக்கும்படியை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

¶ "அக்நியாலே த்ரணம்போலே வேகிறகல்லும்" என்று சில ஸ்ரீகோசங்கள்.

மூ.—நாத்தழும்ப நான்முகனு மீசனுமாய் முறையா
லேத்த அங்கோராளரியா யிருந்த வம்மானதிடம்;
காய்த்த வாகை நெற்றொலிப்பக் கல்லதர் வேய்ங்கழைபோய்,
*தேய்த்ததீயால் விண்சிவக்கும் சிங்கவேழ்குன்றமே. அ.

ப-ரை.—நா - நாவானது, தழும்ப - தழும்பேறும்படியாக, நான்முகனும் - நான்கு முகத்தையுடைய ப்ரஹ்மாவும், ஈசனும் - ருத்ரனும், ஆய் - தந்தாமுடைய தரம் குலையாதபடியாக, முறையால் - "அவன்சேஷி, நாம்சேஷபூதர்" என்னும் முறையாலே, ஏத்த - ஸ்தோத்ரம்பண்ண; அவர்களுக்கு ஸ்துத்யனாய்க்கொண்டு, அங்கு - அவ்விடத்திலே, ஓர் ஆளரியாய் இருந்த அம்மானது இடம்—; [ய காய்த்த - காய்கள் நிறைந்த, வாகை - வாகைகளின், நெற்று-நெற்றுகள், ஒலிப்ப-சப்திக்கும்படியாக, கல்அதர்-கல்வழியிலே யுண்டான, வேய்ங்கழை - குழல் மூங்கிலானது, போய் - ஆகாசத்தை யளாவும்படி ஓங்கி, தேய்த்த - தன்னிலே உராய்கையாலுண்டான, தீயால் - நெருப்பாலே, விண் - ஆகாசம், சிவக்கும் - சிவந்துகிடக்கிற, சிங்கவேழ்குன்றம்—. ... ... ... (அ)

வ்யா.—எட்டாம்பாட்டு.—(நாவித்யாதி) நாவானது தழும்பேறும்படியாக, சதுர்முகனும், தேவர்களில் தலையான ருத்ரனும், முன்பு ஹிரண்யனுக்கஞ்சி மநுஷ்யவேஷங்கொண்டுதிரிந்தவர்கள், அவன் பட்டபின்பு தந்தாமுடைய தரம் குலையாதபடி முறையாலே வந்து சேஷித்வ ப்ராப்தியாலே ஸ்தோத்ரம்பண்ண; அவர்களுக்கு [உ ய ஸ்துத்யனாய்க்கொண்டு, அவ்விடத்திலே இதுக்கு முன்பநுபவித்தறியாத நரஸிம்ஹமாய்க்கொண்டிருக்கிற ஸர்வேச்வரனுடைய ஸ்தாநம்.

(காய்த்தவித்யாதி) காய்த்த வாகைகளிலே நெற்றானது த்வநிப்ப. பாலை நிலத்துக் கடைத்த வ்ருக்ஷங்களிவையும் சொல்லக்கடவதிறே. (கல்லதர் வேய்ங்கழைபோய்) கழையென்று - மூங்கிலாய், அதரென்று-வழிக்குப்பேர். கல்வழியிலேயெழுந்த, வேய்ங்கழை யுண்டு - குழல் மூங்கில், அது அந்தரிக்ஷத்தளவும் வளர்ந்து [உ ந தன்னிலே யிழைந்து அத்தாலே யுண்டான அக்நியானது, மேவுந்தாலே ஆகாசம் கறுத்திருக்குமாப்போலே இந்தநெருப்பாலே சிவந்து கிடக்குமாய்த்து. இத்தால் - அகவாயடங்க ப்ரஹ்மாதிக [கூ ய ளுடைய ஸ்தோத்ரமாய்க் கிடக்கும்; புறவாயடங்கலும் வாகை நெற்றினுடைய த்வநியாய்க்கிடக்கும். ... ... அ.

"ஈசனுமாய்" என்கையாலே - முன்பு மநுஷ்யராயிருந்தமை ஸூசிதமாய்த்தென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (நாவானதித்யாதி.)

பாலைநிலத்துக்கு - நிர்ஜலதேசத்துக்கு. முனைத்த சீற்றம் போய் விண் [கூ ரு சுடும்படி யிருந்த நரஸிம்ஹத்தின் சீற்றம் மாறுகைக்கு மெள்ள ப்ரஹ்மாதிகள் வந்து ஸ்துதிக்குமாப்போலே, விண்சிவக்கும்படியான மூங்கிலிலுண்டான அக்நிக்கு அஞ்சி காட்டுவாகைகள் ஸ்துதிக்கிறன வென்று விவக்ஷித்துக் கருத்தருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி.) (அகவாய்) என்கிறது - உள்ளிருக்கிற நரஸிம்ஹவிஷயத்திலே யென்கை. (புறவாய்) என்றது - அந்த திவ்யதேசத்தைச் [சு ய சுற்றிலு முண்டான மூங்கில் விஷயத்திலென்கை. ... ... அ

மூ.—நல்லை நெஞ்சே! நாந்தொழுதும்; நம்முடை நம்பெருமான்
அல்லிமாதர் புல்க நின்ற வாயிரந்தோளனிடம்;
நெல்லிமல்கிக் கல்லுடைப்பப் புல்லிலையார்த்ததர்வாய்
சில்லிசில்லென்றொல்லறாத சிங்கவேழ்குன்றமே. கூ.

ப-ரை.—நம்முடை - நமக்கு ஆச்ரயணீயனாய், நம்பெருமான்-நமக்குஸ்வாமியாய், அநுகூலர் பக்கலிலும் அச்சீற்றம் புகுகிறதோ! என்று அத்தையாற்றுகைக்காக, அல்லிமாதர் - தாமரைப்பூவையிருப்பிடமாக வுடைய பெரியபிராட்டியார், புல்க - “அகலகில்லேனிறையும்” என்று கட்டிக்கொள்ளும்படி, நின்ற - எழுந்தருளியிருக்கிற, ஆயிரம்தோளன் - ஆயிரம் திருத்தோள்களையுடைய ஸர்[டு]வேச்வரனுடைய, இடம் - ஸ்தாநமாவது; நெல்லி - நெல்லிமரங்கள், மல்கி - நிறைந்து, கல் - கற்களை, உடைப்ப - உடையப்பண்ணும்படியாகவும், புல்இலை - பனையோலையானது, ஆர்த்து - ஓசைப்படும்படியாகவும், அதர்வாய் - வழியிலே, சில்லி - சில்வீடு என்னும் பக்ஷிகள், சில்லென்று ஒல்அறாத - சில்லென்னும் ஓசை மாறாதபடியுமான,சிங்கவேழ்குன்றம்—;நல்லைநெஞ்சே!- எனக்குப்பாங்கான [டிரு]நெஞ்சே!, நாம்தொழுதும் - நாம்அங்கேசென்று அவனைத் தொழுது உஜ்ஜீவிப்போமென்று தந்திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறார். ... ... (கூ)

வ்யா. - ஒன்பதாம்பாட்டு.— (நல்லைநெஞ்சே) எனக்குப் பாங்கானநெஞ்சே. ஸம்போதித்து, நெஞ்சே நீயெனக்குப்பாங்காயிறே யிப்பேறுபெற்றது. (நாந்தொழுதும்) நாம்தொழுதுஉஜ்ஜீவிப்போம். இது,இத்திருமொழியிற்பாட்டுக்கெல்லாம் க்ரியாபதம். (நம்முடைநம்பெருமான்) நித்யஸூரிகளுக்கநுஸாவ்யனாயிருக்குமாப்போலே நமக்கும் ஆச்ரயணீயனாய்க்கொண்டுவந்துஸந்நிபண்ணினஸர்வேச்வரன். (அல்லியித்யாதி) ப்ரஹ்மாதிக ளாச்ரயிக்க தேவர்கள் கலங்கி யோடப் புக்கவாறே, ப்ரதிகூல நிரஸநத்துக்காக இவ்வடிவுகொ[உரு]ண்டதுபோய் அநுகூலர்பக்கலிலேயும் வந்துமேலிக்குமளவாய்த்தோ! என்று அந்தச்சீற்றத்தை ஆற்றுகைக்காகப் பெரியபிராட்டியார் வந்து கட்டிக்கொள்ளுமாய்த்து. (ஆயிரந்தோளன்) இவளணைத்தால் இவளைக்கட்டிக்கொள்ள ஆயிரம்தோளுண்டாமாய்த்து.

ஒன்பதாம்பாட்டு.—(நல்லைநெஞ்சேயித்யாதி.) நான்முகனு மீசனுமேத்தச்[கூடி]செய்தேயும் சீற்றம்மாறாதேயிருக்க பிராட்டி போய் ஸம்ச்லேஷித்துச் சீற்றத்தை மாற்றினபடியை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

நல்லையான நெஞ்சே என்று விசேஷணமாக வொருயோஜனை யருளிச்செய்து, நெஞ்சே நீநல்லை யென்று அந்வயித்து யோஜநாந்தரம்(ஸம்போதித்தித்யாதி.)(பெற்றது) என்றவநந்தரம், என்கிறாரென்றுமாம் என்றுகூட்டுவது. இங்ங[கூடு]னன்றாகில்,(ஸம்போதித்து)என்றுசொல்லவேண்டாவிறே. நம்பெருமான் என்னவமைந்திருக்க, “நம்முடை” என்று விசேஷித்தத்தாலே-தாம் நிரூபகரானமை தோற்றுகையாலே, அத்தை ஸத்ஸஷ்டாந்த முபபாதிக்கிறார் (நித்யேத்யாதி)“அயர்வறுமமரர்கள்” என்னக்கடவதிறே.

ஹிரண்யனுடையநெஞ்சிடந்தபோது,அவனெலும்புடையும்படியும்,அவனு[ராய்]டைய ஆர்த்துக்கொள்ளுகையும், அவன் ரக்தம் சில்லென்று புறப்படும்படியும், அத்தேசத்தைக் கண்டவுடனே ஸ்ம்ருதி விஷயமாகிறதென்னும் கருத்தாலே வர்ணிக்கிறாரென்று கொள்வது.

மூ.—செங்கணாளியிட்டிறைஞ்சும் சிங்கவேழ்குன்றுடைய
எங்களீசனெம்பிரானை யிருந்தமிழ் நூற்புலவன்
மங்கையாளன் மன்னுதொல்சீர் வண்டறைதார்க்கலியன்
செங்கையாளன்செஞ்சொல்மாலைவல்லவர் தீதிலரே. ய

பசுரை.—செம் - சிவந்த, கண் - கண்களையுடைய, ஆளி - ஸிம்ஹங்கள், தங்களுக்கு ப்ரதிகூலமான ம்ருகங்களைக் கொன்று அவற்றை, இட்டு - திருவடிகளிலே ஸமாராதநோபகரணமாக ஸமர்ப்பித்து, இறைஞ்சும் - ஆச்ரயியாநின்றுள்ள, சிங்கவேழ்குன்று - சிங்கவேழ் குன்றத்தை, உடைய - வாஸஸ்தாநமாக வுடையனாய், எங்கள் - ஸம்ஸாரிகளான நம்போல்வார்க்கும், ஈசன் -ஸ்வாமியாய், [ய எம்பிரானை - எனக்கு உபகாரகனான ஸர்வேச்வரன் விஷயமாக ; இரு - ஒருவராலும் கரைகாண வொண்ணாத, தமிழ்நூல் - தமிழ்சாஸ்த்ரத்தில், புலவன் - வல்லவராய், மங்கைஆளன் - திருமங்கைக்கு ராஜாவாய், தொல் - அநாதியான, மன்னு - பாரதந்த்ர்யத்திலே நிலைநின்ற, சீர் - ஸ்ரீயையுடையராய், வண்டு - வண்டுகள், அறை-சப்தியாநின்றுள்ள, தார் - மாலையையுடையராய்,செங்கையாளன்-மிக [ய@ வும் ஔதார்யத்தை யுடையரான, கலியன் - ஆழ்வாரருளிச்செய்த, செஞ்சொல் மாலை-செவ்விய சொல் தொடையை, வல்லவர் - அர்த்தத்துடன் கற்கவல்லவர்கள், தீதிலர் - பொல்லாங்கு இல்லாதவராவர் என்கிறார். ... ... (ய)

(நெல்லியித்யாதி)நெல்லிகளானவை மிக்கு கற்களை உடையபடியுமாய்த்து. நெல்லிமரங்கள் வேரோடிக் கற்களை உடையப்பண்ணும். (புல்லிலையார்த்து) மூங்கிலிலைகளானவை த்வநிக்க வென்னுதல், பனையோலைகளைசைப்பட வென்னுதல். அதர்வாயிலே - வழியிடத்திலே; சில்லியுண்டு—சில்வீடு, அது,சில்லென்றுநிற்குமாய்த்து- ஒரு சப்தாநுகாரத்தைப பண்ணுநிற்குமாய்த்து. ஒல்லருத-த்வநி மாறுத. ... கூ.

வ்யா.—பத்தாம்பாட்டு.—(செங்கணித்யாதி) வீரஸ்ரீயாலே [உ@ சிவந்த கண்களையுடைய ஆளிகளானவை தங்களுக்கு ப்ரதிகூலமான ம்ருகங்களை யழியச்செய்து அவற்றைத் திருவடிகளிலே ஸமாராதநோபகரணமாகக் கொண்டுவந்து பொகட்டு ஆச்ரயியாநிற்குமாய்த்து. ஸ்ரீவண்டாகர்ணழ்வான் "இது ப்ராஹ்மணசவம், உத்தமம்" என்று "இதுபுதிசு"என்றுணிறே.சிங்கவேழ்குன்றம்தனக்குவாஸஸ்தாந[ரு@ மாக வுடையவன். ஸம்ஸாரிகளான நம்போல்வார்க்கும் சென்றுச்ரயிக்கலாம்படி யிருக்கிற உபகாரகனை. (இருந்தமிழ்நூற்புலவன்)ஒருவரால் கரைகாணவொண்ணாதபடி யிருக்கிற தமிழ் சாஸ்த்ரோக்தமானபடியைக் கரைகண்ட ஜ்ஞாநாதிக்யத்தை யுடையவர். (மங்கையாளன்) திருமங்கைக்கு நிர்வாஹகரானவர்.(மன்னுதொல்சீர்)நிலைநின்ற

சில் வீடென்றது - பக்ஷிவிசேஷம். இப்படி நரஸிம்ஹாவதாராபதாநத்தில் த்வநிக்கு ஸூசகமான தேசமாகையாலே "நாம் தொழுதும்" என்கிறுரென்று கருத்து. ... ... ... ... ... கூ

பத்தாம்பாட்டு.—(செங்கணாளியித்யாதி.)

"நவம்சவமிதம்புண்யம் வேதபாரமச்யுத|பஞ்சுமிலம் மஹாப்ராஜ்ஞம்[சய ப்ராஹ்மணம் சிவமுத்தமம்" என்கிற வசநத்தையுட்கொண்டு உத்தார்யத்தை ஸமர்யிக்கிறுர் (ஸ்ரீவண்டாகர்ணழ்வா னித்யாதி.)

பாரதந்த்ர்ய ஸ்ரீயை யுடையவ ராய்த்து; "லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந:" வண்டுகளானவை மதுபாநம்பண்ணி அறையாநின்றுள்ள மாலையை யுடைய ஆழ்வார். (செங்கையாளன்) மஹோதாரான். இப்ப்ர பந்தத்தைப் பிறர்க்கநுஸந்தேயமாம்படி பண்ணித்தந்தவரிறே. [ரு (செஞ்சொல்மாலைவல்லவர்) அரியஅர்த்தத்தை உள்ளபடி காட்டவற்றான செவ்விய சொல்தொடைவல்லவர். (தீதிலரே) நரஸிம்ஹம் விரோதி யைப்போக்குகையாலே அவர்களுக்குப் பொல்லாங்கு வாராதிறே. ய.

அடிவரவு—அங்கண் அலை ஏய்ந்த எவ்வும் மென்ற எரி
முனைத்த நா நல்லை செங்கண் கொங்கு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அறையாநின்றுள்ள - சப்தியாநின்றுள்ள. செம் - அழகான, கையை யாளுமவ னென்று சப்தார்த்தம் (மஹோதாரனென்று.) ... ... ... ய.

ஜீயர்திருவடிகளே சரணம்.

---

முதற்பத்து - எட்டாந்திருமொழி - கொங்கு. ப்ரவேசம்.

விரோதிநிரஸநசீலனாய், ஆஸ்ரிதஸம்ஸ்லேஷ ஸ்வபாவனாய், ஸர் வானுராத்மாவா யிருக்கிற ஹரியானவன், வாயாலே திருநாமஞ் சொன்னானென்று ஒருசிறுக்கனுக்குத் தமப்பன் பகையாக உதவிற் றுருவடிவைக்கொண்டுவந்துதோற்றி, அவனுடைய விரோதி [உய யைப்போக்கி உபகரித்தவன், அவனொருவனளவிலேயும் பர்யவஸி க்கையன்றிக்கே திருநாமஞ்சொன்னாரெல்லாருடைய ஸம்ஸாரதுரித த்தைத் போக்குகைக்காகத் திருமலையிலே வந்து ஸந்நிஹிதனானன், நாமங்கேபோயநுபவிப்போமென்றுதிருவுள்ளத்தோடே கூட்டுகிறார். தமிழ்பாஷைநடையாடுகிறதுக்கும் எல்லையானநிலமாயிருக்குமிறே. *

---

அ.—கொங்கலர்ந்த ப்ரவேசம்.—கீழ்த்திருமொழியிலே, "நின்ற செந்தீ மொ ண்டு சூறை நீள்விசும்பூடிரிய" என்றும் "கனைத்த தீயுங்கல்லும்" என்றும் "தே ய்த்த தீயால் விண் சிவக்கும்" என்றும் - விரோதிகளுக்கு துஷ்ப்ரவேசமா யிருக்கும்படியை யநுஸந்தித்து, "நெஞ்சே நாந் தொழுதும்" என்றும் அநுஸந் தித்தார்; இப்படி நிலவெம்மையை யநுஸந்தித்ததே ஹேதுவாக, பரம [கூய காருணிகனான ஸர்வேச்வரன் இவரிடத்தில் தன்னுடைய படிகளைக் காட்டி க்கொடுக்க, கண்டநுபவிக்கிறாரென்று ஸங்கதி யுட்கொண் டருளிச் செய்கிறார் (விரோதீத்யாதி.) "பொங்குநீர் செங்கயல் திளைக்குஞ்சுனை" என்றிறே அநுஸந்தி க்கிறது. குருந்தம், புள், பேய், மாமருதுகளை நிரஸித்தபடியைச் சொல்லுகை யைப்பற்ற (விரோதிநிரஸநசீலனாயென்றது.)"கோத்தங்காயர்தம் பாடியில் [கூரு குரவை" இத்யாதியைப்பற்ற (ஆஸ்ரிதஸம்ஸ்லேஷ ஸ்வபாவனாயென்றது.) "பாரு நீரெரிகாற்றினொடு" இத்யாதியைப்பற்ற (ஸர்வாநுராத்மாவாயென்றது.) "திண் டிறலரியாயவன்" என்றத்தைப்பற்ற (ஹரியானவனித்யாதி.) "பேசுமின் திரு நாமம்" என்கிறபாட்டைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (அவனொருவனித்யாதி.) திருமலையை யநுபவிக்கைக்கு நியாமகாநுரம் (தமிழித்யாதி.) இத்தால் - [சய ன்கவேங்குன்றத்திலே தாமெழுந்தருளினால் அங்குள்ளார் வடுகராய் தாம் தமி ழராகையாலே * பேபாஷயநு: பரஸ்பரம் பண்ணுகைக்குச் சேரவிழாமையாலே, இத்திருமலையிலேயிரண்டும் கலசியிருக்குமென்று அநுபவிக்கிறாரென்றுகருத்து. *

மூ.—கொங்கலர்ந்த மலர்க்குருந்த மொசித்த கோவல னெம்பிரான்,
சங்குதங்குதடங்கடல் துயில்கொண்ட தாமரைக்கண்ணினன்,
பொங்குபுள்ளினைவாய்பிளந்த புராணர்தம்மிடம்; பொங்குநீர்
செங்கயல் திளைக்குஞ்சுனைத் திருவேங்கடமடை நெஞ்சமே. க.

ப-ரை.—சங்கு - சங்குகள், தங்கு - பொருந்தி, தடம் - பரந்திருந்துள்ள, கடல் - திருப்பாற்கடலில், துயில்கொண்ட - யோகநித்திரை செய்யுமவனாய், தாமரைக்கண்ணினன் - தாமரைமலர்போன்ற திருக்கண்களை யுடையனானவன், கோவலன் - அங்குநின்றும் க்ருஷ்ணனாய் வந்து திருவவதரித்து, கொங்கு - பரிமளம், அலர்ந்த - வீசாநின்றுள்ள, மலர்-புஷ்பங்கள் நிறைந்த, குருந்தம்-குரு [ம
ந்து வடிவுகொண்டு வந்த அஸுரனை, ஒசித்த - நிரஸித்து, பொங்கு - பெரியகிளர்த்தியோடே வந்த, புள்ளினை - பகாஸுரனுடைய, வாய் - வாயை, பிளந்த - கிழித்துப்பொகட்டவனாய், எம்பிரான் - இப்படி விரோதிகளைப் போக்குகையாலே எனக்கு உபகாரகனாய், புராணர்தம் - புராணப்ரஸித்தனான ஸர்வேச்வரனுடைய, இடம்-ஸ்தாநமானது; பொங்குநீர்-மிக்க ஜலத்தையுடைத்தாய், செம்- [மு
இளமையாலே சிவந்த, கயல் - கயல்மத்ஸ்யங்களானவை, திளைக்கும் - களித்து வர்த்தியாநின்றுள்ள, சுனை-சுனைகளையுடைய, திருவேங்கடம்-திருமலையாம்; நெஞ்சமே! - மநஸ்ஸே!, அங்கே சென்று, "தாழ்சடையும் நீண்முடியும்" இத்யாதிப்படியே எழுந்தருளியிருக்குமவனை, அடை - கிட்டப்பாராய் என்கிறார். ... (க)

வ்யா.—முதற்பாட்டு.—(கொங்கலர்ந்த)பரிமளத்தை ப்ரவஹி [உம
யாநிற்பதான மலரை யுடைத்தான. (குருந்தமொசித்த) அடியே
பிடித்துத்தலையளவும் பூத்து தர்சநீயமாய் அஸுராவேசத்தாலே கவிவ
தாகத்தேடிநிற்க ; "இதழகிதாயிருந்தது, முறித்துக்காரியங்கொள்ளு
வோம்" என்றுஒசித்தானாய்த்து.(கோவலனெம்பிரான்) க்ருஷ்ணனாய்வ
ந்தவதரித்துக் குருந்தை முறித்தாப்போலே, என்விரோதியைப் போ
க்கி யெனக்கு உபகரித்தவன். அதின்நினைவின்படி காரியஞ்செய்கை
யன்றிக்கே என்னுடைய காரியஞ்செய்த உபகாரகன். (சங்கித்யாதி)
இவ்வவதாரத்துக்கடியாகத்திருப்பாற்கடலிலேவந்து ஸந்நிதிபண்ணி
னபடியைச் சொல்லுகிறது.சங்கென்றுபேர்பெற்றவையடைய சேரா
நிற்பதாய்,கண்வளர்ந்தருளுகைக் கீடான பரப்பையுடைத்தான [நடம
திருப்பாற் கடலிலே, கண் வளர்ந்தருளினவன். (பொங்கித்யாதி)
பெரியகிளர்த்தியோடே மிகைத்துவந்துதோற்றின பகாஸுரனை வா
யைக்கிழித்து, இப்படிவிரோதிகளைப் போக்குகை பழையதாகச்செ
ய்துபோருகிறவர் வந்து வர்த்திக்கிறஸ்தாநம். (பொங்கித்யாதி) ஜல
த்தினுடையஸம்ருத்தி கயலினுடைய களிப்புக்கீடாயிருக்குமிறே.[நடு

முதற்பாட்டு.—(கொங்கித்யாதி) ஹிரண்யன் தான் * கொலைக் கையாளனாய் தன்னுடைய விரோதித்வந்தோற்ற விருந்தான், குருந்தம் முதலானவை ஆநுகூல்யந்தோற்ற வந்து வஞ்சகங்களாயிருக்கையாலே அவனிலும் க்ரூரங்களென்று திருவுள்ளத்திலே தோற்றி அவற்றை யருளிச்செய்கிறாரென்று அவதாரிகை யிட்டுக்கொள்வது. [சும

அழித்தஎன்னாதே, "ஒசித்த" என்றதுக்கு வாஸனை (அடியேபிடித்தித்யாதி)
இத்தால்-மாயாம்ருகத்தைம்ருகமென்றுபிடிக்கத்தேடினாப்போலேபூத்தமரமென்றே
பூவுதிராதபடிபேர்த்தானென்றதாய்த்து.குருந்தொசித்ததேதமக்குபகாரமாக்கிஅத்
தால்[illegible]மருளிச்செய்கிறார் (அதின்நினைவித்யாதி.) நீர்ப்பசையற்றநிலமாகை
யாலேஉஷ்ணமாயிருந்தது,அதுக்கு ப்ரதிபக்ஷமான நிலமென்றுதோற்ற [சடு
"பொங்குநீர்" என்கிறாரென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ஜலத்தினித்யாதி.)

மூ.—பள்ளியாவதுபாற்கடலரங்கம்; இரங்க வன் பேய்முலை
பிள்ளையா யுயிருண்ட வெந்தை பிரானவன் பெருகுமிடம் ; -
வெள்ளியான் கரியான் மணிநிறவண்ண னென்றெண்ணி நாடொறும்
தெள்ளியார்வணங்கும்மலைத் திருவேங்கடமடைநெஞ்சமே. உ.

ப-ரை.—வல் - வலியநெஞ்சுடையளான, பேய் - பூதனையுடைய, முலை - முலைகளானவை, இரங்க - தானேசுரக்கும்படியாக, பிள்ளையாய் - சிறியகுழவி வடிவுகொண்டு, உயிர் - அவளுடைய ப்ராணனையுங்கூட, உண்ட - அமுதுசெய்தருளினவனும், எந்தை - எனக்கு குலநாதனும், பிரான் அவன் - உபகாரகனுன ஸர்வேச்வரனானவன், பள்ளியாவது-ஆச்ரிதரக்ஷணார்த்தமாகக் கண்வளர்ந்தரு [ம ளும் படுக்கையாவது, பாற்கடல் - திருப்பாற்கடலும், அரங்கம் - திருவரங்கம் பெரியகோயிலுமாம் ; பெருகும் - வளருகிற, இடம் - ஸ்தானமாவது; தெள்ளியார் - அநந்யப்ரயோஜநரான திருமழிசைப்பிரான் போல்வார், "பாலின்நீர்மை செம்பொன் நீர்மை" இத்யாதிப்படியே, க்ர்தயுகத்தில், வெள்ளியான் - வெளுத்த நிறத்தையுடையவன், கலியுகத்தில், கரியான் - கறுத்தநிறத்தை யுடையவன், [மரு த்வாபரயுகத்தில், மணிநிறவண்ணன் - நீலமணிபோன்ற நிறத்தையுடையவன், என்று எண்ணி - என்று பலகாலும் இவ்வடிவுகளை அநுஸந்தித்து, "ஒழிவில்கால மெல்லாமுடனாய் மன்னி" என்கிறபடியே, நாடொறும் - நாள்தோறும், வணங்கும் - திருவடிகளிலேவிழுந்து ஆச்ரயிக்கிற, மலை - மலையான, திருவேங்கடம் - திருமலையாம்; நெஞ்சமே!—, அடை-அங்கேசென்று கிட்டப்பாராய் என்கிறார். (உ)

இளமையாலே சிவந்தநிறத்தையுடைய கயல்களானவை களித்து வர்த்திக்கிற சுனைகளையுடைய திருமலையைஅடைநெஞ்சே யென்கிறார். க.

வ்யா.—இரண்டாம்பாட்டு.—(பள்ளியாவது பாற்கட லரங்கம்) ப்ரஹ்மாதிகளுக் காச்ரயணீயனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகிறது திருப்பாற்கடல் படுக்கை; அவ்வளவும் சென்று கிட்டமாட்டாத [உரு ஸம்ஸாரிகளுக்காக, கோயில். (இரங்கவித்யாதி) முலையை ஸ்பர்சித்த வளவிலே நெகிழ்ந்து முலைசுரக்கும்படியாக வென்னுதல் ; அன்றிக்கே, அவள் கதற வென்னுதல். வன்மையையுடைத்தான நெஞ்சையுடைய பூதனையுடைய முலையைப் பிள்ளையாயே யுண்டானாய்த்து. மௌக்த்யத்தாலே உயிருக்கும்முலைக்கும்வாசியறியாதேஅமு [கூம து செய்தானாய்த்து. (எந்தைபிரானவன் பெருகுமிடம்) எனக்கு குலநாயனான வுபகாரகன் வர்த்திக்கிற தேசம். பெருகுகை — வளருகை. அத்தால் - வர்த்திக்கையைச் சொன்னபடி.

"சங்குதங்குதடங்கடல்துயில்கொண்டதாமரைக் கண்ணினன்" என்றத்தைமூன்றற அநுஸந்தித்து, பாட்டுஅநுஸந்திக்கைஅந்வயம். ஆக, இப்பாட்டால்-திருமலை [கூரு சென்றுகிட்டலாம் தேசமாகையாலே விரோதிக ளநுகூலவேஷத்தாலே வந்தாலும் திருவேங்கடமுடையான் அவர்களை நிரஸிப்பனென்றுசொல்லிற்றாய்த்து.க.

இரண்டாம்பாட்டு,—(பள்ளியித்யாதி.) கீழ்ப்பாட்டில் - க்ஷீராப்திசாயித்வம் பின்னாட்டி, ஸ்ரீரங்கசாயித்வத்தையும் யசோதைதொட்டிற்கிடையையும் ஸ்மரிப்பிக்கஅநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது. [சமு

பிள்ளையா யுயிருண்ணக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (மௌக்த்யத் தாலேயித்யாதி.) (வர்த்திக்கையைச் சொன்னபடி) என்றதுக்கு - தொட்டிற்பிள்ளை பேயுயிருண்டபின்பு நிற்கக்கற்றது திருமலையிலே என்று கருத்து.

மூ.—நின்றமாமருதிற்றுவீழ நடந்த நின்மலன் ; நேமியான்;
என்றும்வானவர்கைதொழுமிணைத்தாமரையடியெம்பிரான் ;
கன்றிமாரிபொழிந்திடக் கடிதாநிரைக்கிடர்நீக்குவான்
சென்றுகுன்றமெடுத்தவன் திருவேங்கடமடைநெஞ்சமே.௩.

ப-ஸர.—நின்ற - அஸுராவேசத்தாலே பேராதேநின்ற, மாமருது - பெரிய மருதமரமானது, இற்றுவீழ - முறிந்து விழும்படியாக, நடந்த - நடுவே தவழ்ந்துபோன, நின்மலன் - நிர்மலமான மநஸ்ஸையுடையனாய் ; விரோதிகளை நிரஸிக்கைக்காக, நேமியான் - கருதுமிடம் பொருதுவரும் திருவாழியைத் திருக்கையிலே யுடையனாய் ;வானவர் - நித்யஸூரிகள், என்றும் - எப்போதும், கைதொ[ழு]ம் - ஸேவித்துக்கொண்டிருப்பதாய், தாமரை - தாமரை மலர்போன்ற, இணை அடி - இரண்டுதிருவடிகளையுடைய, எம்பிரான் - உபகாரகனாய் ; திருவாய்ப்பாடியிலுள்ளார் இந்த்ரனுக்கு வர்ஷார்த்தமாக இடும்விருந்தைப் பெருமையாலே, கன்றி - கோபித்து, அவன், மாரி - மஹாவர்ஷமாக, பொழிந்திட - வர்ஷிப்பிக்க, ஆ-பசுக்களுடைய, நிரைக்கு-திரள்களுக்குண்டான, இடர்-துக்கத்தை, நீக்கு[ம்]வான்-போக்கி அவற்றையும் இடையரையும் ரக்ஷிக்கைக்காக,கடிது-சடக்கென,சென்று - போய், குன்றம் - கோவர்த்தநமலையை, எடுத்தவன் - குடையாகதரித்த ஸர்வேச்வரன் எழுந்தருளியிருக்கிற, திருவேங்கடம் - திருப்பதியை. நெஞ்சமே—, அடை - ஆச்ரயி என்கிறார். ... ... ... ... (௩)

(வெள்ளியானித்யாதி) கொண்டகொண்டவடிவெல்லாமிவர்க்கு உத்தேச்யமாயிருக்கிறதாய்த்து அவன்கொண்ட வடிவானதையாலே. க்ருதயுகத்தில் வெளுத்தநிறத்தை யுடையனாய், கலியுகத்தில கறுத்த நிறத்தை யுடையனாய், த்வாபரயுகத்தில் வந்தவாறே ச்யாமமான நிறத்தையுடையனாயிருக்குமென்று இவ்வடிவுகளை அநுஸந்தித்து, தெள்ளியாருண்டு—அநந்யப்ரயோஜநரானவர்கள், நாடோறும் வணங்கு[உடு]வர்களாய்த்து. நித்யஸூரிகளைப்போலே நித்யாநுபவம் பண்ணும் மலையான ... ... ... ... ... ௨.

வ்யா.—மூன்றும்பாட்டு.—(நின்ற) அஸுராவேசத்தாலே பேராதேநின்ற, மாமருதுண்டு - பெரியமருது ; அவ்வருகே விழுந்தவிது இவ்வருகேயாய்த்ததாகில்செய்வதென்! என்று ஸயப்பட[நடு]வேண்டும்படியா யிருக்கிறதாய்த்து; அது முறிந்து விழும்படியாக.

(அநந்யப்ரயோஜநரானவர்கள்) என்றது-"பாலினீர்மைசெம்பொனீர்மை"இத்யாதியாலேஅநுபவிக்கையேப்ரயோஜநமாயிருந்த திருமழிசைப்பிரான் போல்வார்களென்கை. (மலையான) என்ற வநந்தரம், திருவேங்கடமித்யாதியைப் பூரிப்பது என்று திருவுள்ளம். ... ... ... ... ... ... ௨.

மூன்றும்பாட்டு.—(நின்றமாமருதித்யாதி.) "பெருகுமிடம்" என்றதாலே - நிற்கக்கற்றவன் என்று தோற்றினவளவன்றிக்கே நடைகற்றுச் செய்தவற்றை அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

மருதானபோதே நின்றிராதோ, "நின்ற" என்பானென்னென்ன வருளிச்செய்கிறார்(அஸுரேத்யாதி.)(நின்றமாமரம்)என்றும்பாடமுண்டென்று சொல்[சுய]லுவர்கள். "மா" என்றதுக்கு உட்கருத்தை யருளிச்செய்கிறார் (அவ்வருகேயித்யாதி.) (இவ்வருகே) என்கையாலே - தாமும் க்ருஷ்ணனு மொருப்ரதேசத்திலேயிருந்தமை தோற்றுகிறது.

மூ.—பார்த்தற்காயன்று பாரதம்கைசெய்திட்டு வென்றபரஞ்சுடர்;
கோத்தங்காயர்தம்பாடியில் குரவைபிணைந்த வெங்கோவலன்;
ஏத்துவார்தம்மநத்துள்ளான்; இடவெந்தைமேவியவெம்பிரான்;
தீர்த்தநீர்த்தடஞ்சோலைசூழ் திருவேங்கடமடை நெஞ்சமே.ச.

ப-ரை.—அன்று - பாண்டவர்தூதனாய்ச்சென்று துர்யோதநாதிகளை ஒருப்ப டுத்தப்பார்த்தவன்று, அவர்கள் ஒருகோற்குத்து நிலமும் கொடோம்என்ன, பா ரதம் - மஹாபாரதயுத்தத்திலே, பார்த்தற்கு ஆய் - அர்ஜுநனுக்குக் கையாளாய் நின்று, கைசெய்திட்டு-கையுமணியும் வகுத்து,வென்ற - அவர்களை ஜயித்து, தர்ம புத்ரனை முடிசூடுவித்து த்ரௌபதியைக் குழல்முடிப்பித்து, அத்தாலே, பரஞ் [டு சுடர் - திருமேனியில்மிக்க ஒளியையுடையனாய்; ஆயர்தம்பாடியில் - திருவாய்ப் பாடியிலே, எங்கோவலன் - ஆச்ரிதர்பக்கல் வாத்ஸல்யத்தாலே கோபகுலத்தி லவதரித்து, குரவை - குரவைக்கூத்தில், கோத்துப்பிணைந்த - தானுமொருவனாய்க் கைகோத்து ஆடினவனாய்; ஏத்துவார்தம் - அக்கூத்திலே ஈடுபட்டு அவனை வா யாரவாழ்த்துமவர்களுடைய, மநத்து-மநஸ்ஸில்,உள்ளான்- விடாதே யிருக் [டு குமவனாய்; இடவெந்தை - திருவிடவெந்தையிலே, மேவிய - நித்யவாஸம் பண் ணுகிற, எம்பிரான் - ஸர்வஸ்வாமியானவன் எழுந்தருளியிருப்பதாய், தீர்த்தம் - பாவநமான, நீர் - ஜலத்தையுடைய, தடம் - தடாகங்களாலும், சோலை - பொழில் களாலும், சூழ் - சூழப்பட்டிருக்கிற, திருவேங்கடம் அடை நெஞ்சமே—.

"குரவையென்ப கைகோத்தாடல்"என்று நிகண்டு.கோத்தங்கு என்றத்தை[உ௰ கோ தங்கு என்றுபிரித்து - கோஸம்ருத்தியையுடைய என்றும் சொல்லுவர். (ச)

நெஞ்சில் நினைவின்றிக்கே அது முறியும்படி நடந்த சக்தியை யுடையவன். (நேமியான்) தான் கைதொட்டு வ்யாபரிக்கவேண்டா, தன்னையொழிய விரோதியைப் போக்குகைக்கீடான பரிகரமுண்டா யிருக்கச் செய்தேயிறே தான் வந்தகப்பட்டது!.(என்றுமித்யாதி)[உடு நித்யஸூரிகள் ஒருநாடாகப்பரிய விருக்குமவனிறே தனியே புகுந் தகப்பட்டான்!.(கன்றியித்யாதி)பெரியசிற்றத்தையுடையனாய்க்கொண்டு இந்த்ரனைவன்மேவுங்களை ஏவ,அவையும்அவன்கருத்தை யநுவர்த்தி த்துமாரிபொழிந்திட.(ஆநிரைக்கிடர்நீக்குவான்-கடிது-சென்றுகுன்ற மெடுத்தவன்) ஸ்வரக்ஷணத்துக்குப்பரிகாரமில்லாதவற்றின்மேலே[ஙம ஒருதுளி விழுவதற்கு முன்பே, அவற்றுக்கிடர் வாராதபடியாகக் கடுநடையிட்டுச் சென்று கோவர்தநத்தை யெடுத்தவன். (திரு வேங் கட மடை நெஞ்சமே) ஒருமலையை யெடுத்துப் பரிஹரித்தவன் ஒரு மலையிலே நின்று ரக்ஷிக்கப்பார்த்தான், அவனை ஆச்ரயிக்கப்பார் நெஞ்சே யென்கிறார். ... ... ... ... ௫

"நின்மலன்" என்ற பதவாஸனை (நெஞ்சிலித்யாதி.)நினைவு - அஸுராவிஷ்டமெ ன்கிற நினைவு. அன்று சென்று குன்றென்றை ஏந்தினதும், இன்று குன்றில் நின்றதும் என்றும்ஆஸ்ரிதர்க்காகவென்றருளிச் செய்கிறார் (ஒருமலையையித்யாதி.) ஒருமலை ஆயேயமாய் ரக்ஷணோபகரணமாய், திருமலை ஆதாரமாய் ரக்ஷணோப கரணமாய்த்து,என்றும்திருமலைபோலேகாணும் ரக்ஷித்ததென்று திருவுள்ளம். ௫.

வ்யா.—நாலாம்பாட்டு.—(பார்த்தற்காய்)பார்த்தனுக்காக.(அன்று பாரதம்கைசெய்திட்டு)பாரதஸமரத்திலே கையுமணியுமாகவகுத்து ப் படைபொருத்தி. (வென்றபரஞ்சுடர்) தோல்வி துர்யோதநாதிகள் தலையிலேயாய் வெற்றிதன்தலையிலேயாம்படியாகவாய்த்து அவர்கள்[ரு விஷயத்தில் பண்ணினஓரம். (பரஞ்சுடர்)பர்மபுத்ரன்றலையிலே அபி ஷேகத்தை வைத்து ஸ்ரௌபதி குழல்முடித்தபின்பு திருமேனியிற் பிறந்தஔஜ்ஜ்வல்யம்; "ராக்ஷஸேந்த்ர0 விபீஷணம் | க்ஷிதக்ஷீத்யஃ." (கோத்தித்யாதி) திருவாய்ப்பாடியிலே அங்கே குரவைக்கூத்திலே தன்னையுமொருவனாக இடையிலே தொடுத்து. (குரவைபிணைந்த [ய வெங்கோவலன்) குரவைக்கூத்தை மன்றிலேயாடி ஆச்ரிதர்க்கத்தைப் பின்னிக்கொடுத்தவன். (ஏத்துவார்தம் மனத்துள்ளான்) குரவைக் கூத்தை அநுஸந்தித்து அதிலே யீடுபட்டு ஏத்துமவர்களுடைய ஹ்ரு தயத்தை விடாதே வர்த்திக்குமவன். (இடவெந்தை) பெரியபிரா ட்டியார்க்காகத் திருவிடவெந்தையிலே வந்து ஸந்நிஹிதனானாப் [யிரு போலே யாய்த்து ஏத்துமவர்கள்நெஞ்சு விட்டுப்போக மாட்டா தபடி. (தீர்த்தநீரித்யாதி) எல்லாஸம்ருத்தியையும் பண்ணிக்கொடுக்க வற்றான ஜலஸம்ருத்தியை யுடைத்தாய் சரமஹாரமா யிருந்துள்ள சோலையாலே சூழப்பட்ட. ... .. ... ௪

---

நாலாம்பாட்டு.—(பார்த்தற்கித்யாதி) ஒரு வ்ருக்ஷத்தையும் ஒரு பக்ஷியை [உய யும் பேயையும் மருதையும் வென்றவளவேயோ, அதிரயமஹாரதரான பீஷ்ம த்ரோணாதிகளை யெல்லாம் திரட்டிக்கொண்டு கிடந்த துர்வர்க்கத்தையும் வென் றான், அப்படிப்பட்டவன், அவைகள் கைகளிலே யகப்பட்டுக் கூத்தாடுகிறானெ ன்று அவனுடைய * வீரச்ருங்கார ரஸத்தை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது. [உரு

தன் தலையிலே யென்றது - தானென்கிற சொல்லுக்குள்ளேயான பர்மபுத் ராதிகள் விஷயத்திலே யென்றபடி. ஓரம் - பக்ஷபாதம். கீழ்ச்சொன்ன அர்த்த த்துக்கு த்ருஷ்டாந்தம் (ராக்ஷஸேந்த்ரமித்யாதி) "அபிஷிச்யசலங்காயாம் ராக்ஷ ஸேந்த்ரம் விபீஷணம் | க்ருதக்ருத்யஸ்ததாராமோ விஜ்வரஃப்ரமுமோதஹ." "எம்" என்றதுக்குத்தாத்பர்யம் (குரவையித்யாதி.) பின்னி - பூர்ணமாகவென்றபடி.[ருய "தீர்த்தம்" என்றபடிம் - பாவநத்வத்தைச் சொல்லுகையாலே அது உபலக்ஷண மாய், த்ருஷ்டாத்ருஷ்ட ஸகலஃலப்ரதத்வத்தையும் சொல்லுகிறதென்று வ்யக்ஷி த்தருளிச்செய்கிறார் (எல்லாவித்யாதி.) ... ... ... ௪.

அஞ்சாம்பாட்டு.—(வண்கையானித்யாதி.) கீழே - ஆச்ரிதர்க்காக தௌத்ய ஸாரத்யங்களைப்பண்ணினபடியாலேகையானாக்கினபடி சொல்லிற்று; அவ்வள[ருரு வன்றிக்கே, ஆச்ரிதர்க்காகத்தன்னை யிரப்பாளனாக்கியும் மழுவேந்திக்கொடுத்தும் பலவிடங்களிலேயும் அவலாப்ரதீக்ஷனாய் அரைகுலையத் தலைகுலைய வந்ததயினை படியை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

ரு.—வண்கையானவுணர்க்குநாயகன் வேள்வியிற்சென்று மாணியாய்
மண்கையாலிரந்தான்; மராமரமேழு மெய்த வலத்தினான்;
எண்கையானிமயத்துள்ளானிருஞ்சோலைமேவியவெம்பிரான்;
திண்கைமாதுயர்தீர்த்தவன் திருவேங்கடமடைநெஞ்சமே. ரு.

ப-ரை.—வண்கையான் - உதாரமான கையையுடையனாய், அவுணர்க்கு - அஸுரர்களுக்கு, நாயகன் - தலைவனான மஹாபலியினுடைய, வேள்வியில் - யாகசாலையிலே, மாணியாய் - ப்ரஹ்மசாரியாய், சென்று - போய், மண் - பூமியை, கையால் - தன்கையாலே, இரந்தான் - யாசித்தவனாய்; க்ர்ஷ்ணனை நலிவதாக அஸுராவேசத்தாலே நின்ற, மராமரம் ஏழும் - ஏழுஸாலவ்ருக்ஷங்களையும், [மெ]ய்த - ஒருபடிப்படப்போக்கின, வலத்தினான் - மிடுக்கையுடையனாய்; ஆச்ரித விரோதி நிரஸநபரிகரமான திவ்யாயுதங்களை தரிக்கைக்கு, எண்கையான் - அநேகம் திருக்கைகளையுடையனாய்; இமயத்து உள்ளான் - ஹிமவானில் திருப்பிரிதியிலெழுந்தருளி யிருக்குமவனாய்; இருஞ்சோலை - தெற்குத்திருமலையான திருமாலிருஞ்சோலையிலே, மேவிய - நித்யவாஸம்பண்ணுகிற, எம்பிரான் - ஸர்வஸ்வாமி [யி]ருயாய்; முதலையின்கையிலே யகப்பட்ட, திண் - பலிஷ்டமான, கை - துதிக்கையையுடைய, மா - ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய, துயர் - துக்கத்தை, தீர்த்தவன் - போக்கின ஸர்வேச்வரன் ஸந்நிதிபண்ணியிருக்கிற, திருவேங்கடம் அடை நெஞ்சமே!—.

கைம்மா என்று ஒருசொல்லாகவுமாம்: கைம்மா - யானை. ... (ரு)

வ்யா.—அஞ்சாம்பாட்டு.—(வண்கையானித்யாதி) உதாரனாயிருந்தானாய்த்து. அஸுரப்ரக்ருதிகளுக்குத்தலைவனாயிருந்தானேயாகிலும், ஔதார்ய மென்றொரு குணம் கிடக்கையாலே அம்பாலே அழிக்கலா யிருந்ததில்லை. இவன்றான் கொடுக்க வுகந்திருந்தான்; அவன்உகந்தவழியேவாங்குவோமென்று தன்னையிரப்பாளனாக்கி[உ]வாங்கினானாய்த்து. (மாணியாய் மண் கையாலிரந்தான்) அவனுடைய யஜ்ஞவாடத்திலே இரப்பிலே தகணேறின வடிவைக் கொண்டு சென்று, தன் கையிலே பருத்திபட்ட பன்னிரண்டும்பட்ட ஊமியையிரந்தானாய்த்து. (மராமரம்) ஆஸ்ரிதரை விச்வஸிப்பித்தும் கார்யம் செய்துகொடுக்குமவன். (வலத்தினான்) மிடுக்கையுடையவன். [கூமி

மஹாபலி வண்கையானா யிருந்தது ஸ்ரிய:பதி மாணியாகைக்கு ஹேதுவென்று மிடங்தோற்ற வருளிச்செய்கிறார் (உதாரனாயித்யாதி.) பருத்திபட்ட பண்டு படுகையாவது-கொட்டைவாங்கிப் பன்னிச்சுருட்டி நூலாக்கியும் பாவோடி நெய்து மடித்து விற்றப் போகடும்படியும், தோய்த்து உலர்த்தி உடுத்துக் கிழித்துவிடும்படியும் சேதநர்க்கு வச்யமாகை. தார்ஷ்டாந்திகத்தில், ஈச்வரன் தன்[கூடு]னில் விஹக்தமாக்கி, பஞ்சீக்ருதமாக்கி, அண்டமாக்கி, தேவாதிசரீரங்களாக்கி, லோகவ்யவஸ்திதியுண்டாக்கி, அவாந்தர ஸ்ருஷ்டியைப்பண்ணி, ரக்ஷித்து ப்ரஹ்மாதிகளுக்காக்கி, ப்ரளயத்திலே யெடுத்துவயிற்றிலேவைத்து, வயிற்றிலேவைத்து, உமிழ்ந்து, பின்பு ஸம்ஹ்ருதமாக்கியும் செய்தபடிகளை யெண்ணிக் கண்டு கொள்வது. ஆக, இத்தால் - கேவலம் ஸ்வாதீநமான தென்றதாய்த்து. "த்வம் [சம]நிர்மிதாஜாரமாச தவ த்ரிலோகீகிம்ஹீக்ஷணதியம்ஸ்தே ஹவதாஙுஸராபா | மத்யே ததா துகவிசக்ரமிஷேஜமச்சேத்த்வத்விக்ரமை:க்ஷமிவச்ருதிரஞ்விதாஸ்யாத்" என்கிறதநுஸந்தேயம்.

மூ.—எண்டிசைகளுமேழுலகமும்வாங்கிப்பொன்வயிற்றிற்பெய்து
பண்டோராலிலைப்பள்ளிகொண்டவன்; பான்மதிக்கிடர்தீர்த்தவன்;
ஒண்டிறலவுணனுரத்துகிர்வைத்தவன்; ஒள்ளெயிற்றொடு
திண்டிறலரியாயவன் திருவேங்கடமடை நெஞ்சமே. ௬.

---

ப-ரை.—எண்திசைகளும் - எட்டுதிக்குக்களோடேகூடின, ஏழுஉலகமும் - ஏழுலோகங்களையும், பண்டு - மஹாப்ரளயகாலத்தில், வாங்கி - அமுதுசெய்து, தன்னுடைய, பொன் - ச்லாக்யமான, வயிற்றில் - திருவயிற்றிலே, பெய்து - வைத்து, ஓர் - ஒரு, ஆலிலை - ஆலந்தளிரிலே, பள்ளிகொண்டவன் - கண்வளர்ந்தருளினவனாய்; பால் - ப்ரகாசகனான, மதிக்கு - சந்த்ரனுக்குவந்த, இடர் - [௰ க்ஷயத்தை, தீர்த்தவன் - போக்கினவனாய்; ஒண்திறல் - மிக்கமிடுக்கையுடைய, அவுணன் - அஸுரனான ஹிரண்யனுடைய, உரத்து - மார்விலே, உகிர்வைத்தவன் - திருவுகிரைவைத்துக் கிழித்துப்பொகட்டவனாய்; அதுக்காக, ஒள் - ஒளிதங்கின, எயிற்றொடு - பற்களையும், திண் - சலியாத, திறல் - மிடுக்கையுமுடைய, அரியாயவன்-நரஸிம்ஹரூபியானவன் நித்யவாஸம்பண்ணுகிற, திருவேங்கடமடை நெ[௰௫ ஞ்சமே—. ... ... ... ... ... ... (௬)

(எண்கையான்) ஆச்ரிதவிரோதிநிரஸநத்துக்குறுப்பான திவ்யாயுதங்களையரிக்கைக்கும்பலதிருக்கைகளையுடையவனென்னுதல். அன்றிக்கே, திருவட்டபுயகரத்தைச் சொல்லிற்றாகவுமாம். (இமயத்துள்ளான்) ஹிமவானில் திருப்பிரிதியிலே வந்து ஸந்நிஹிதனானவன். (இருந்[௨௰ சோலையித்யாதி) ம்லேச்சபூமியான தெற்கில்திருமலையிலே வந்து ஸந்நிஹிதனானவன். (திண்கைமா துயர் தீர்த்தவன்) ஸ்ரீகஜேந்த்ராழ்வான் முதலையாலே யீடுபட்டு ப்ரதிக்ரியை பண்ணமாட்டாத வளவிலேவந்து அவனுடைய து:கத்தைப் போக்கி ரக்ஷித்தவன். (திண்கை)தன்னையொழிந்தவற்றையடையஇடர்படுத்துமவனுமிடர்[௨௫ பட அத்தைப் பரிஹரித்தானென்கை. (திருவேங்கடம்) ஸ்ரீகஜேந்த்ராழ்வான் வ்யாபாரம் ஓவுந்தனையும் பார்த்திருந்து, பிற்பாடனை குறைதீர ஆச்ரிதர்க்கு முற்பாடனா யுதவுகைக்காக வந்திருக்கிற தேசமாய்த்து. ... ... ... ... ... ௫.

---

(பலதிருக்கைகளையுடையவன்) என்றது-"எண்கையான்-"எண்ணப்பட்டகையானென்றசப்தார்த்தத்தைப்பற்ற. இத்தால்-"தோள்களாயிரத்தாய்"என்றதை நினைக்கிறது. "மா" என்று - ஆனையாய், இப்போது இந்த அபதாநத்தை யருளிச்செய்ததின் கருத்தைக்காட்டுகிறார் (ஸ்ரீகஜேந்த்ரேத்யாதி.) ... ... ௫.

ஆறும்பாட்டு.—(எண்டிசைகளுமித்யாதி.) மாணியாயிரந்து கொண்டத்தையொரு சிறுப்பிள்ளையாயுண்ட சமத்தும், மதிகெட்டுப்போகாதபடி நோக்கின[௩௫ சமத்தும், அரைகுலையத் தலைகுலைய வரவேண்டாதே * ஸமஸமய ஸமுத்பவம் திருவுள்ளத்திலேதோற்றி யருளிச்செய்கிறாரென்று அவதாரிகையிட்டுக்கொள்வது.

மூ.—பாருநீரெரிகாற்றினோடாகாசமு மிவையாயினான்;
பேருமாயிரம் பேசநின்ற பிறப்பிலி பெருகுமிடம்;-
காரும் வார்பனி நீள் விசும்பிடைச் சோருமாமுகில் †தோய்தர
சேருவார்பொழில்சூழெழில் திருவேங்கடமடைநெஞ்சமே. எ.

ப-ரை.—பாரும் - பூமியும், நீர் - ஜலமும், எரி - அக்நியும், காற்றினோடு - வாயுவும், ஆகாசமும் - ஆகாசமும், இவை - ஆகிய பூதபஞ்சகமும், ஆயினான் - தானேயாயிருக்குமவனாய்; ஆயிரம்பேரும் - ஆயிரம்திருநாமங்களையும், பேச - சொல்லி ஆச்ரயிக்கலாம்படி, நின்ற - நித்யவாஸம் பண்ணுமவனாய், பிறப்பிலி - பிறப்பின்றிக்கே தான்தோன்றியான ஸர்வேச்வரன், பெருகும் - வளருகிற, [யி இடம் - ஸ்தாநமாவது; காரும் - மேகங்களும், வார்பனி - மிக்கபனியும், நீள் விசும்புஇடை- பெரிய ஆகாசத்தின் இடையிலே, சோரும் - சொரியும்படி யிருப்ப தாய், மாமுகில் - பெரியமேகங்கள், தோய்தர - படியும்படி, சேரு - தகுதியாக, வார் - நீண்ட, பொழில் - சோலையாலே, சூழ் - சூழப்பட்டு, எழில் - அழகை யுடைத்தான, திருவேங்கடமடை நெஞ்சமே—. ... ... ... (எ)

வ்யா.—ஆறும்பாட்டு.—(எண்டிசையித்யாதி) எட்டு திக்குக்க ளோடே கூடியிருந்துள்ள லோகங்களேழையும் வாங்கி, ச்லாக்ய மான திருவயிற்றிலே வைத்து, பண்டு பவனாயிருப்பதொரு ஆலந் தளிரிலே கண்வளர்ந்தருளின அகடிதகடநா ஸாமர்த்யத்தை யுடையவன். (பால்மதிக்கிடர் தீர்த்தவன்) பால்மதியுண்டு - ருத்ர[உயி ன், அவனுக்கு யர்மிலோப பர்யநமாக வோரிடர் வர, அதுஅவ் வளவாகாதபடி பரிஹரித்து அவனிடரைப் போக்கினவன். (ஒண் டிறலித்யாதி) மிக்க மிடுக்கை யுடையனா யிருந்துள்ள ஹிரண்யனு டைய வுரஸ்ஸிலே திருவுகிரை வைத்தவன்; அதுக்குறுப்பாக, அ ழகிய திருவெயிற்றோடேகூடவலியாதமிடுக்கையுடையநரஸிம்ஹ [உரு மானவன். திருமந்த்ரம் சொன்ன சிறுக்கனுக்கு உதவினவன், திரு நாமம் சொன்னாரெல்லாருடையவும் ஸம்ஸாரது:ரிதத்தைப் போக்கு கைக்காக வர்த்திக்கிற திருமலையை அடையப்பாராய். ... சு.

"பேசுமின்திருநாமம்" இத்யாதிபாட்டை யுட்கொண்டு, சிங்கவேழ்குன்றத் தி லரியானவனே டொருஸாயர்மயத்தை வெளியிடாநின்றுகொண்டு, "அரி" என்ற துக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (திருமந்த்ரமித்யாதி.) ஹாரிர்ஹரி: என்கிற யோகார்த்திலே நோக்கு. இத்தால் - சிங்கவேழ்குன்றத்தில் ரூட்யா ஹரிபதவா ச்யன், யோகசக்த்யா திருவேங்கடத்திலே வாச்யனா யிருக்கிறானென்று ஸம்மதி ஸூசிதமாய்த்து. ... ... ... ... ... சு.

† "சேருமாமுகில்" என்று பாடாந்தரம்.

வ்யா.—ஏழாம்பாட்டு.—(பாரித்யாதி) ஊதபஞ்சகத்தையும் சொல்லுகையாலே - ஜமதிகாரனும் நிற்கும்படியைச்சொல்லுகிறது. தான் கொடுத்த வுடம்பைக்கொண்டு தன்னுடைய திருநாமத்தைச் சொல்லி ஆச்ரயிக்கலாம்படி நிற்கிறவன். (பிறப்பிலி பெருகுமிடம்) அகர்ம[ரு வச்யனாய் இதரவிஸஜாதியனாய் ஜமத்தின்படி யன்றிக்கேயிருக்கிறவன் வர்த்திக்கிற விடம்.(காரித்யாதி) மேவங்களும், மிக்கபனியும்,பெரிய ஆகாசத்தினிடையிலே சொரிவதாய், பெரியமேவங்கள் படியும்படி நீண்டசோலை சூழப்பட்ட திருவேங்கடம்; பெருகின மிக்கஜலத்தை யுடைத்தாய், ஆகாசத்திலே வர்ஷிக்கிற மேவங்களானவை. (சேரும்)[ம என்றுபாடமானபோது, சேருகிற-ஸ்பர்சிக்கும்படி சேருகிற - கிட்டு கிற.பரந்தபொழிலாலே சூழப்பட்டு எழிலையுடைத்தான திருமலையை. காரும்-பெருகுகை. வார் – மிகுகை. ... ... எ.

---

ஏழாம்பாட்டு.—(பாருநீரித்யாதி.) இப்பாட்டில் - * எங்குமுளன் கண்ணனென்றமகனைக்காய்ந்தஹிரண்யநிரஸநார்த்தமாகதத்ஸமகாலத்திலேதோற்றின[மரு ஸ்ரீந்ருஸிம்ஹாவதாரம் ப்ரஸ்துதமாகையாலே ஸம்பந்தமான ஜமதிகாரதையை யநுஸந்தித்து, திருநாமஞ்சொல்ல ஸஹியாத ஹிரண்யனைக்கொன்றவன் நின்ற விடமாகையாலே திருநாமங்கள் சொல்லலாம்படியு மிருக்கிறதென்றநுஸந்திக்கி றாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

"பிறந்தவாறும் வளர்ந்தவாறும்"என்று-பிறப்புசொல்லி யிருக்க,"பிறப்[உம பிலி" என்னக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (அகர்மேத்யாதி.)

"நீள் விசும்பிடை, காரும் - மேவமும், வார்பனியும் சோருமதாய், மாமுகில் தோய்தரும்படி சேருவார் பொழிலாலே சூழப்பட்டதுமாய், எழிலையுடைத் தான திருவேங்கடம்" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி யொருயோஜனை யருளிச் செய்கிறார்(மேவங்களுமித்யாதி.)பெரியவாகாசத்தினிடையிலே யிருக்கிறமேவ[உரு ங்களும் மிக்கபனியும் சோருவதாய் என்று வாக்யத்தை அந்வயித்துக்கொண்டு, திருவேங்கடத்துக்கு விசேஷணமாக்கிக்கொள்வது. இங்ஙனன்றாகில், மேவங்கள் சோருவதான பெரிய மேவங்களென்ன வொண்ணாதிறே. சோருவதாய் - சொரியும்படி யிருப்பதாய். "தோய்தர" என்றதினர்த்தம் (படியும்படியென்றது.) நீண்டவென்றது-"சேருவார்" என்றதினர்த்தம். "சேருவார்" - தகுதியாகநீண்ட[கூம வென்றபடி. அன்றிக்கே, "காரும்வார்பனி" என்று - ஸமஸ்தபக்ஷமாய், காராநிற் கிற - பெருகாநிற்கிற, வார்பனியானது - மிக்கஜலமானது, நீள்விசும்பிடைச் சொரியும்படி யிருப்பதான மாமுகிலானவை, தோய்தர - ஸ்பர்சிக்கைக்கு, சேரு-அநுரூபமான, வார் - நீண்ட, பொழில் சூழெழில் திருவேங்கடமென்று க்ரமேண வொருயோஜனையைவிவக்ஷித்துத்தாத்பர்யத்தையருளிச்செய்கிறார்(பெரு[கூரு கினவித்யாதி.) (சேருமாமுகில்) என்ற பாடாந்தரத்திலே, நீள் விசும்பிடைச் சோராநிற்கிற - நடந்து வாராநிற்கிற, மாமுகிலென்று சப்தார்த்தம். இப்போது, காராநிற்கிற வார் பனியையுடைத்தாயென்று விசேஷணமாக்கிக்கொள்வது. எ.

எட்டாம்பாட்டு.—(அம்பரமித்யாதி.) இப்பாட்டில் ப்ரஸ்துதமான ஜமதிகாரத்வமாத்ரமன்றிக்கே உஜ்வலிஹூதியோமத்தையுமநுஸந்தித்துக்கொண்டு[சம "ஸ்ரீயாஸார்த்தம் ஜமத்பதி:" என்கிறபடியே அவ்விருக்கு மிருப்பை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

மூ.—அம்பர மனல் கால் நிலம் சலமாகிநின்ற வமரர்கோன்;
வம்புலா மலர்மேல் மலி மடமங்கைதன் கொழுநனவன்;
கொம்பினன்னவிடைமடக்குறமாதர் நீளிதணந்தொறும்
செம்புனமவை காவல்கொள் திருவேங்கட மடைநெஞ்சமே. அ

ப-ரை.—அம்பரம் - ஆகாசம், அனல் - அக்நி, கால் - காற்று, நிலம் - பூமி, சலம் - ஜலம், ஆகிய பஞ்சபூதங்களும், ஆகிநின்ற - தானேயா யிருக்குமவனாய், அமரர் - நித்யஸூரிகளுக்கு, கோன் - தலைவனாய், வம்பு - பரிமளம், உலாம்-வீசுகிற, மலர்மேல் - தாமரைமலரின்மேலே, மலி - எப்போதுமிருக்குமவளாய், மடம்-மடமைக்குணம் நிறைந்த, மங்கைதன்-பெரியபிராட்டியார்க்கு, கொழுநனவன் - நாயகனான ஸர்வேச்வரன் நித்யவாஸம்பண்ணுமிடமாய், [யி கொம்பு அன்ன - வஞ்சிக்கொம்பு போன்ற, இடை - இடுப்பையும், மடம் - மடப்பத்தையுமுடைய, குறமாதர் - குறப்பெண்கள், நீள் - உயர்ந்த, இதணம்தொறும் - பரண்கள்தோறும் இருந்து, செம் - தினைமுதலிய பயிர்களாலே சிவந்த, புனமவை - கொல்லைநிலங்களை, காவல்கொள்-காத்துக்கொண்டிருப்பதான, திருவேங்கடம் - ஸ்ரீவேங்கடாத்ரியை, நெஞ்சமே !—, அடை - கிட்டப்பாராய் என்கிறார்.

நாண் மடம் அச்சம் பயிர்ப்பு என்று பெண்களின்குணங்கள் நான்கு; இங்கு, மடமையைச் சொல்லுகிறது: மடம் - ஒடுக்கம். ... ... (அ)

வ்யா.—எட்டாம்பாட்டு.—(அம்பரமித்யாதி) ஜகதாகாரனாய் நிற்கும்படியைச் சொல்லுகிறது. (அமரர்கோன்) இத்தால் - [உயி அஸாதாரணமான திவ்யவிக்ரஹயுக்தனாய், ✻ அயர்வறு மமரர்களதிபதியாயிருக்கும்படியைச்சொல்லுகிறது.(வம்புலா)நித்யஸூரிகள் ஓலக்கங் கொடுக்கப் பிராட்டியும் தானுமாய் பரமபதத்திலே யிருக்குமிருப்பைச் சொல்லுகிறது. செவ்விமாறாத மலரை வாஸஸ்தாநமாகவுடைய பெரியபிராட்டியார்க்கு வல்லபனானவன். (கொம்பித்யாதி) வஞ்சிக்கொம்போடொத்த இடையையும் ஆத்மகுணங்களையுமுடைய, குறமாதருண்டு - குறப்பெண்கள்; ஓக்கத்தை யுடைத்தான பரண்கள்தோறும். (செம்புனம்) பாலைநிலமாகையாலே நில ப்ரயுக்தமான சிவப்பைச்சொல்லுதல். தினைமுற்றி நுணிபழுத்த வளவிலே கிளிகள் புறக்கள் கடியாதபடி நோக்குகிற திருமலையை. அ.

"அமரர்கோன்" என்ற பதச்சேர்த்தியால் ஃபலித்தஅர்த்தத்தை யருளிச்செய்கிறார் (நித்யேத்யாதி.) வம்புலா - பரிமளமுலாவாநின்றுள்ள, மலர்மேல் மலி - ஸந்நிதியையாயிருந்துள்ள, மடமங்கை - மௌக்த்யத்தையுடைய பிராட்டியென்று சப்தார்த்தமாய், வாக்யத்துக்கு ஃபலிதார்த்த மருளிச்செய்கிறார் (செவ்வியித்யாதி.) வம்பு-புதுமையாய்,அத்தாலே - செவ்வியென்ற தென்னவுமாம்."கொழுநன்"[கொ என்றதினர்த்தம் (வல்லபனென்றது.) இன் - சாரியைச்சொல்லாய், கொம்பன்னவென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (வஞ்சியித்யாதி.) "இதணம்" என்றதினர்த்தம் (பரணென்றது.) "செம்புனம்" என்றதுக்கு - கதிர்நுணிபழுக்கையாலே வந்த சிவப்பென்று யோஜநாந்தர மருளிச்செய்கிறார் (தினையித்யாதி.) புறக்கள் - கபோதங்கள். ... ... ... ... ... ... அ.

மூ.—பேசுமின்திருநாமமெட்டெழுத்தும்சொல்லிநின்று, பின்னரும்
பேசுவார்தம்மை யுய்யவாங்கிப் பிறப்பறுக்கும் பிரானிடம் ;
வாசமாமலர் நாறுவார்பொழில் சூழ்தருமுலகுக்கெல்லாம்
தேசமாய்த் திகழும்மலைத்திருவேங்கடமடை நெஞ்சமே. கூ

ப-ரை.—பேசும் - எல்லாராலும் உச்சரிக்கப்படுமதாய், இன் - நாவுக்கு இனிய, திருநாமம் - திருநாமமான, எட்டெழுத்தும் - எட்டுத்திருவக்ஷரத்தையும், சொல்லி நின்று - ஒருதரம் அநுஸந்தித்து, அத்தோடே கைவாங்குகை யன்றிக்கே, பின்னரும் - பின்னையும், பேசுவார்தம்மை - அநுஸந்திக்குமவர்களை, உய்ய-உஜ்ஜீவிக்கும்படி, வாங்கி - அங்கீகரித்து, பிறப்பு - அவர்களுடைய ஸம்[ஸ]ஸார ஸம்பந்தத்தை, அறுக்கும் - போக்கித்தந்தருளுகிற, பிரான் - மஹோபகாரகன் நித்யவாஸம் பண்ணுகிற, இடம் - ஸ்தாநமாவது ; வாசம் - பரிமளத்தையுடைத்தாய், மா - ச்லாக்யமான, மலர் - புஷ்பங்கள், நாறு - கமழாநின்றுள்ள, வார் - பரந்த, பொழில் - சோலைகளாலே, சூழ்தரும் - சூழப்பட்டிருப்பதாய், உலகுக்கு எல்லாம்-எல்லாலோகங்களுக்கும், தேசமாய்-ஒளியை விளக்கத்தக்க[வ]து தாய், திகழும் - பரமபதம்போலே விளங்குகிற, மலை - மலையான, திருவேங்கடம் - திருமலையை, நெஞ்சமே அடை—. ... ... ... (கூ)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு.—(பேசுமினித்யாதி)(பேசுவார்தம்மை யுய்யவாங்கிப் பிறப்பறுக்கும்பிரானிடம் - பேசுமின் திருநாமமெட்டெழுத்தும்சொல்லிநின்று) என்று – இத்தனையும்பரோபதேசமாய், (வாசமாமலர்)என்று - மேலித்தனையும்ஸ்வமதமாகவருளிச்செய்கிறரென்றுமாம். அன்றிக்கே, திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறு ராகவுமாம். (பேசுமி னித்யாதி) ஓரதிகாரி ஸம்பத்தி வேண்டாவிறே பெற்ற தாய் பேர் சொல்லுவார்க்கு ; அப்படியே, இடர் வந்தபோது எல்லாருமொக்கச் சொல்லிக்கொடுபோரக்கடவதான இனிய திருநாமமான எட்டெழுத்தையும் சொல்லி நின்று.

ஒன்பதாம்பாட்டு.—(பேசுமினித்யாதி.) "வைகுண்டேது பரேலோகே ஸ்ரீயா ஸார்த்தம் ஜகத்பதி: ! ஆஸ்தேவிஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ்ஸஹ" என்கிறபடியே யிருக்குமிருப்பைக் கீழ்ப்பாட்டிலே "அமரர்கோன்" இத்யாதியாலே அநுஸந்தித்தவர், "த்யக்த்வா வைகுண்டமுத்தமம்|ஸ்வாமிபுஷ்கரிணீதீரே[ர]மயா ஸஹமோததே" என்று வந்தபடியை யநுஸந்தித்து, அவன் வந்ததுக்கு ப்ரயோஜநத்தை யருளிச்செய்கிறார் என்று அவதாரிகை கண்டுகொள்வது.

"பேசுமின்" என்னுமது க்ரியாபதத்வேந ப்ரஸித்தமாகையைப்பற்ற வொரு யோஜனை யருளிச்செய்கிறார் (பேசுவாரித்யாதி.) (திருநாம மெட்டெழுத்தும் சொல்லிநின்று,பின்னரும்-பேசுவார்தம்மையுய்யவாங்கிப்பிறப்பறுக்கும் பிரா[னு]னிடம்-பேசுமின் என்று இத்தனையும் பரோபதேசமாய்) என்று வாக்யத்தை அந்வயித்துக் கொள்வது.ப்ரகரணஸ்வாரஸ்யத்துக்குஅநுகுணமாக, பேசுமதாய் இனிய திருநாமமென்று ஸமஸ்தபதமாக்கி யருளிச்செய்கிறார் (அன்றிக்கேயித்யாதி.) பரோபதேசமென்னும் பக்ஷத்திலே பஹுவசநப்ரயோகத்தாலே எல்லாரையும் சொன்னதுக்கு உட்கருத்தை யருளிச்செய்கிறார்(ஓரதிகாரீத்யாதிவாக்யத்வயத்தாலே) பாட்டெல்லாவற்றையும் திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறரென்னும் பக்ஷத்திலே அர்த்தமருளிச்செய்கிறார் (அப்படியேயிடரித்யாதி.) அன்றிக்கே, இரண்டாம் யோஜனைதன்னிலே, பேசும் என்ற ஸாமார்த்யோக்திக்குத் தாத்பர்யம் (ஓரதிகாரீத்யாதிவாக்யம்) என்று கொள்ளவுமாம்.

மூ.—செங்கயல்திளேக்குஞ்சுனேத் திருவேங்கடத்துறைசெல்வனே
மங்கையர்தலேவன் கலிகன்றி வண்டமிழ்ச்செஞ்சொல்மாலேகள்
சங்கையின்றித் தரித்துரைக்க வல்லார்கள், தஞ்சமதாகவே
வங்கமாகடல் வையம் காவலராகி வானுலகாள்வரே. ய.

ப-ரை.—செம் - இளமையாலே சிவந்த, கயல் - கயல்மத்ஸ்யங்கள், திளேக்கும் - களித்துவர்த்திக்கிற, சுனே - சுனேகளேயுடைய, திருவேங்கடத்து - திருமலேயில், உறை - நித்யவாஸம் பண்ணுகிற, செல்வனே - ஸ்ரீயஃபதிவிஷயமாக, மங்கையர் - திருமங்கையிலுள்ளார்க்கு, தலேவன் - ராஜாவாய், கலிகன்றி - கலிதோஷத்தைப் போக்கினஆழ்வார், வண்-அழகிய, தமிழ் - தமிழ்பாஷையால், சொல் - [ய அருளிச்செய்த, செம் - செவ்விய, மாலேகள் - சப்தஸந்தர்ப்பங்களே, தரித்து - நெஞ்சிலே தரித்து, உரைக்க வல்லார்கள் - சொல்லவல்லவர்கள் ; தஞ்சமதாக - நிச்சயமாக, வங்கம் - மரக்கலங்கள் நிறைந்த, மா-பெரிய, கடல் -ஸமுத்ரத்தால் சூழப்பட்ட, வையம் - பூமிக்கு, காவலராகி - ரக்ஷகராய்க்கொண்டு, வானுலகு - பரமபதத்தை, ஆள்வர்-ஆளப்பெறுவர்;இவ்வர்த்தத்தில், சங்கை இன்றி - ஸந் [யரு தேஹமின்றிக்கே யிருங்கோ ளென்கிறுர். ... ... ... (ய)

ஒருக்கால்சொன்னேமிறேஎன்றுகைவாங்கியிருக்கையன்றிக்கே, (பின்னரும்) பின்னேயுமென்றபடி.வாயாலே திருநாமத்தைச் சொல்லுமவர்களுக்குஸத்தாஹாநிவாராமேஅவர்களுஜ்ஜீவிக்கும்படிஅங்கீகரித்து, பின்னேயும் அவர்களுக்குவிரோதியான ஸம்ஸாரஸம்பந்தத்தை[உய யறுத்துக்கொடுக்குமுபகாரகன் வர்த்திக்கிற ஸ்தாநம்.“ஆக்கைபுகாமலுய்யக்கொள்வான் நின்றவேங்கடம்” என்னக்கடவதிறே. (வாசமித்யாதி) பரிமளத்தை யுடைத்தாயிருந்துள்ள மலராலே கமழாநின்றுள்ள பரந்த பொழிலாலே சூழப்பட்டிருப்பதுமாய். (உலகுக்கெல்லாம் தேசமாய்த்திகழும்மலே) “நீணிலத்துள்ளது” என்கிறபடியே-பரமபதத்துக்குண்டான ஏற்றம்போலே திருமலே யிங்கே யாகையாலேஸம்ஸாரமுத்தேச்யமாம்படி யிருக்கிறதாய்த்து.“திலதமுலகுக்காய்” என்னக்கடவதிறே. “நிலமகள்தன் நெற்றிக்குத் திலதமாய் நின்ற” என்று இட்டுவைத்தான். ... ... ... கூ.

வ்யா.—பத்தாம்பாட்டு.—(செங்கயலித்யாதி)முக்தர்என்று [நய மொக்க பஞ்சவிம்சதி வார்ஷிகராய் ஸமவஹுஸவமே யாத்ரையாய்க்

‘உய்யவாங்கி” என்ற வநந்தரம்,“பின்னரும்”என்றபதத்தைஅநுஸந்தித்துக்கொண்டருளிச்செய்கிறுர்(பின்னேயுமவர்களுக்கித்யாதி.) ஸம்ஸாரவிமோசநமே [ வேங்கடத்தானுகைக்கு ப்ரயோஜந மென்னுமதுக்கு ஸம்வாதம் ( ஆக்கையித்யாதி.) உலகுக்கெல்லாம்தேஜஸ்கரமாய்ப்ரகாசிக்கும் மலே யென்று சப்தார்த்தம். [நரு “சென்று கைதொழுவார்கள்- தேவர்கள்” என்ற பாசுரசேஷத்திலும் நோக்காகத் தாத்பர்ய மருளிச்செய்கிறுர் (நீணிலத்தித்யாதி.) திலதமாகப் பின்னேயும் சொன்னருண்டோவென்ன ; தமிழனும்சொன்னனென்கிறுர்(நிலமகளித்யாதி.) கூ.

பத்தாம்பாட்டு.—(செங்கயலித்யாதி.) “பொங்குநீர் செங்கயல் திளேக்கும் சுனே” என்று முதற்பாட்டிலேசொன்னவிசேஷணத்தை யிங்கே நிகமத்திலேயு[சுய மருளிச்செய்தவருடைய வுட்கருத்தையருளிச்செய்கிறுர்(முக்தரித்யாதி.)இத்தால்-

களிக்குமாப் போலே, யௌவநப்புகராலே சிவந்த நிறத்தை யுடைய கயல்களானவை ஒன்றோடொன்று களித்து வர்த்தியாநின்றுள்ள சுனைகளையுடைத்தான திருமலையிலே நித்யவாஸம் பண்ணுகிற ஸ்ரீயஃபதியை. (மங்கையர்தலைவன்) திருமங்கைக்கு நிர்வாஹகரான[ரு] ஆழ்வார், அழகிய தமிழில்செவ்வியசொல்லாலேசெய்த தொடையை யறித்துச்சொல்லவல்லவர்கள்; நிச்சிதமாகவே, கடல்சூழ்ந்த பூமிக்கு ரக்ஷகராய், பின்பு நித்யவிபூதியும் தாங்களிட்ட வழக்காம்படி ஆகப் பெறுவர்கள். இதுகூடுவதொன்றோ வென்னில் (சங்கையின்றி) இதில் சங்கைபண்ணவேண்டா. ... ... ம.

அடிவரவு.—கொங்கு பள்ளி நின்ற பார்த்தன் வண்மை எண்டிசை பார் அம்பரம் பேசு செங்கயல் தாய்.

திருமங்கையாழ்வார்திருவடிகளேசரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

தாமும் "மீளுப்பிறக்கும் விதியுடையேனுவேனே" என்று மநோரதிக்கிறார்[ம.] என்றதாய்த்து. "வண்" என்றதினர்த்தம் (அழகியவென்றது.) "தஞ்சமதாகவே" என்றதுக்கு பாவிதார்த்தம் (நிச்சிதமாகவேயென்றது.) (வாறுலகாள்வர்;-சங்கையின்றி) இருங்கோள் என்று கூட்டிக்கொள்வது. ... ... ம.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

முதற்பத்து-ஒன்பதாந்திருமொழி-தாயேதந்தை. ப்ரவேசம்.

வ்யா.—திருமலையை யாச்ரயியென்று திருவுள்ளத்தைக்குறித்து உபதேசித்தார் கீழ்; அப்படியே அதுவும் பாங்காய் தாமும் அநுபவிப்பாராய் திருமலையிலே வந்து புகுந்தார். ஸர்வஸ்வாமியாய் நிருபாதிக பந்துவுமானவ னிங்கேவந்து ஸந்நிஹிதனுகையாலே தம்முடைய அபேக்ஷிதங்களெல்லாம் பெறலாமென்று; அக்ரூரன் "மாமக்ரூரேதிவக்ஷ்யதி" என்றுமநோரதித்துக்கொண்டுவந்தாப்போலேயும்,

---

அ.—தாயேதந்தைப்ரவேசம்.—கீழ்த்திருமொழியிலே - "திருவேங்கடமடை நெஞ்சமே" என்று பலகால் சொல்லிக்கொண் டநுபவிக்க விழிந்தவர், இத்திருமொழியிலே - பூர்வவ்ருத்தத்தைச் சொல்லிக்கொண்டு சரணம் புகுருகைக்கு ப்ரஸங்கமென்னென்கிற சங்கையிலே யருளிச்செய்கிறார்(ஸர்வஸ்வாமியித்யாதி) "யோகநித்ரப்ரஜ்ஞீவிம்ஷத்தே சேவரஸ்ஷிதி ஸம்ஸ்திதாம் । ஸோவதீர்ணோஜகத்யர்த்தே மாமக்ரூரேதிவக்ஷ்யதி" என்று ப்ரமாணசேஷம்.

ஸ்ரீபுண்டரீகன் மநோரதம் போலேயும், இவரும் மநோரதித்துக் கொண்டு வந்தவிடத்தில், அப்படி யெதிரே வருதல் அணைத்தல் ஓர்இன்சொல் சொல்லுதல் "க்ரியதாம்" என்று கைங்கர்யத்திலே யேவுதல் செய்தருளக் காணாமையாலே மிகவும் நொந்து, [ரு நித்யஸந்நிதியு முண்டாய் நினைத்தது செய்து தலைக்கட்டுகைக்கீடான சக்தியுமுண்டாய் ப்ராப்தியு முண்டாயிருக்க, அபேக்ஷிதம் செய்யாதொழிகிறது – செய்தருள நினையாமைக் கீடாயிருப்பதொரு ஹேது இத்தலையிலே யுண்டாகையிறே என்று கைவாங்கினவர்; பின்னையும் கைங்கர்யத்திலுண்டான வாபலாதிசயத்தாலே தவிரமாட்டாமையாலே மீண்டு, என்னுடையபாபங்களைப்பார்த்தால், அவைபந்தங்களை பந்தங்களாக நினைத்தும், ஹோக்யமில்லாதவிடத்திலே ஹோக்யபுத்தியை ப்பண்ணியும், பரஹிம்ஸையைப் பண்ணியும், ஆர்த்தவிஷயங்களிலே ஐயோ! என்னுதேயும், உன்னை யொழியப் புறம்பே காலத்தைப் போக்கியும் போந்தேன், இங்ஙனே போந்தேனேயாகிலும், இப்போது தேவரை யொழியச்செல்லாமையுண்டாய் வந்தேன், இத்தலை சேஷமாய், தேவர் சேஷியாய், விடவொண்ணாதபடியான ஸம்பந்தமு முண்டாய், என்குற்றங்களைப் பொறுப்பிக்கைக்குப்பிராட்டி ஸந்நிதியுமுண்டானபின்பு, என் அபராதங்களைப் பொறுத்தருளி என்னுடைய ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைக் கொண்டருளவேணுமென்று, பெரியபிராட்டியார் புருஷகாரமாகத் திருவடிகளிலே விழுந்து சரணம் புகுகிறார். இதுதான் * வானிலாமுறுவலிலே செய்ததன்றோ வென்னில்; ஸுகுமாரராயிருக்குமவர்கள் விடாய்த்தால் பலகாலும் முகத்திலே நீரை யள்ளி யிறட்டுக்கொள்ளுமாப்போலே பலகாலும் ப்ரபத்தி பண்ணும்படியாய்த்து இவருடையமார்த்தவ மிருப் [உரு பது. ஒருக்கால், பெற்றிலோம் என்று கைவாங்குமளவன்றிக்கே பெற்ற வளவும் ப்ரபத்திபண்ணுவராய்த்து; "நிபபாதவிபீஷண:" என்று அவன்றிருவடிகளிலே விழுந்து சரணம் புக்காப்போலே யாய்த்து. ... ... ... .. ... *

---

ஸ்ரீபுண்டரீகன்மநோரதமென்றது-திருக்கடல்மல்லையிலே ஸ்ரீபுண்டரீகனென்கி[றவ ற ஜ்ஷி கடலை வற்றஇறைத்து க்ஷீராப்திசாயிக்குகைங்கர்யம்பண்ண நினைத்தநினை வென்றபடி. கைவாங்கினவரென்றது - "நோயேபட்டொழிந்தேன்" என்றத்தைப் பற்ற. கீழே "திருவேங்கடமடைநெஞ்சமே" என்றவர் "நோயேபட்டொழிந்தேன்" என்றத்தாலே கைவாங்கினது அர்த்தஸித்தமென்று கருத்து. (மீண்டு) என்றதுக்கு, (சரணம்புகுகிறார்)என்றத்தோடன்வயம். (பார்த்தால்) என்றதுக்கு, (போந்தேன்) என்றத்தோடன்வயம். "எங்கள் மாதவனே" என்றத்தைப்பற்ற (பெரியபிராட்டியாரித்யாதி.) கீழ்த்திருமொழிகளில் தோற்றின பௌநருக்த்யத்தைப்பரிஹரித்து, இதில் பாட்டுத்தோறும் "வந்தடைந்தேன்" என்கைக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஒருக்காலித்யாதி.) யபாத என்னாதே "நிபபாத" என்றத்தாலே - பலகால் சரணம்புக்கானென்று கருத்து. ... ... ... *

மூ.—தாயே தந்தையென்றும் தாரமே கிளை மக்களென்றும்
நோயேபட்டொழிந்தே னுன்னைக்காண்பதோராசையினால்;
வேயேய்பூம்பொழில்சூழ் விரையார் திருவேங்கடவா!
நாயேன்வந்தடைந்தேன்; நல்கியாளென்னைக்கொண்டருளே. க.

ப. ரை.— வேய் - மூங்கில்கள், ஏய் - நெருங்கி யிருப்பதாய், பூ - புஷ்பித்து, விரைஆர் - பரிமளம்மிக்கிருப்பதான, பொழில்சூழ் - சோலையாலே சூழப்பட்டிருக்கிற, திருவேங்கடவா - ஸ்ரீவேங்கடாத்ரியை நிரூபகமாக வுடையவனே, ஸர்வவித பந்துவான தேவரீ ரிருக்க, தாயே யென்றும் - தாயல்லாதாளைத் தாயா ரென்றும், தந்தையே என்றும்-தந்தையல்லாதவனைத் தகப்பனென்றும், தாரமே என்றும்-[ம] மனையாளல்லாதவளை மனையாட்டி யென்றும், கிளையே என்றும் - பந்துக்களல்லாதவர்களை பந்துக்களென்றும், மக்களே என்றும் - மக்களல்லாதாரைப் பிள்ளைகளென்றும் நினைத்து, நோய்பட்டு ஒழிந்தேன் - அனர்த்தப்பட்டுப் போந்தவனுய், நாயேன் - நாய்போலே மிகத்தண்ணியனான நான், உன்னை - நிருபாதிக பந்துவான தேவரீரை, காண்பது-காணவேணுமென்கிற, ஓர் ஆசையினால்-ஒரு[ம] ஆசையாலே, வந்து - தேவரீர்திருவடிகளிலே வந்து, அடைந்தேன் - சரணம் புகுந்தேன்; என்னை - தாஸபூதனான வென்னை, நல்கி - க்ருபைசெய்து, ஆள் கொண்டருள் - அடிமைகொண்டருளவேணு மென்கிறார். ... ... (க)

வ்யா.—முதற்பாட்டு.—(தாயேயித்யாதி) "மாதாபிதாப்ராதா" "ப்ராதா பர்த்தாச" "ஏகைகஸகலலாபாய" என்கிறபடியே-தேவ[உம]ரோ ஸர்வவிதபந்துவுமா யிருக்க,ஸோபாதிகபந்துக்களாய் இத்தலையில் ப்ரயோஜந முள்ளநாள் கொண்டு இவனுக்கு உதவவேண்டுமென்று தங்களைக்கொண்டு அகலநின்று அபகாரத்தையே பண்ணுமவர்களையே பந்துக்களென்று நினைத்து அநர்த்தப்பட்டே னென்கிறார்.

முதற்பாட்டு.—(தாயேயித்யாதி.) [உரு]
"தாயே" என்கிறவிடத்தில், ஏகாரம்-பிரிநிலையேகாரமாய், தாயாகாதவளைத்தாயே யென்றிருந்தேனென்று தாத்பர்யமாய், இதுதானும் எல்லாபடிகளிலும்அநுவர்த்திக்கையால் ஒருவர்க்கு மொருஸம்பந்தமும் வாஸ்தவமாகஇல்லையென்று ஸலிக்கையாலே, வேங்கடவனே யிவையெல்லாமாயிருப்பனென்று விவக்ஷித்து ப்ரமாணங்களையும் காட்டாநின்றுகொண்டு தாத்பர்ய மருளிச்செய்கிறார்[நூம] (மாதேத்யாதி.)"மாதாபிதாப்ராதாநிவாஸச்சரணம்ஸுஹ்ருத்கதிர்நாராயண:" என்றவிடத்திலும், "அஹஞ்சாவகமஹாராஜே பித்ருவத்கௌரவம்தாரோபலக்ஷயே | ப்ராதா பர்த்தாசபந்துச்ச பிதாச மமராகவ:" "பித்ருமாத்ருஸுதப்ராத்ரு தாரமித்ராதயோபிவா ¶ | ஏகைகஸகலலாபாய ஸர்வலாபாயகேசவ:." "நாராயண:"என்றவிடத்திலும், "ஸர்வம்வாக்யம்ஸாவதாரணம்" என்கிற ந்யாயத்தாலே-நாராயணஏவ[நூரு] என்று கொள்வது. "மித்ராதயோபிவா" என்கிற விடத்திலே, "வா" என்கையாலே-பித்ருத்வாதிகளில்லை, உண்டானாலும் என்னும் (க) அப்யுபகம்யவாதம் ஸூசிதமாகிறது. ஆக, இந்த ப்ரமாணங்களாலே - மாத்ருத்வாதிகள் மற்றொருவர்க்குமில்லை,எம்பெருமானுக்கே யுள்ளதென்று சொல்லிற்றாய்த்து.ஸோபாதிகபந்துக்களென்றது-தன்னிச்சையாலே ஆரோபிதஸம்பந்தத்வாங்க ளென்றபடி. கர்மோபாதிகபந்துக்க ளென்னவுமாம்.

¶"பந்து-மித்ராதயோபிவா"என்றும்காண்கிறது.(க)அப்யுபகம்யவாதம்-ஒத்துக்கொண்டுவாதிக்கை.

தாயேயென்றும் தந்தையேயென்றும் தாரமேயென்றும் கிளையே யென்றும் மக்களேயென்றும் புத்ரமித்ராதிகளை யாசைப்பட்டு. (நோ யேபட்டு) இவன்பக்க லுபகாரங்கொள்ளலாமன்றுகொண்டு இவ னுக்கு உதவவேண்டுமென்று அபகாரத்தைப்பண்ணித் தங்களைக் [ரு கொண்டு அகலநினைக்குமவர்களை பந்துக்களென்று நினைத்தால், அவர்கள் பந்துக்ருத்யம் பண்ணக்காணாமையாலே க்லேசமேயிறே ஸித்திப்பது. இவன் பந்துக்களென்று நினைத்திருக்குமத்தனையிறே, அவர்கள்பக்கல் அதில்லையே. வேறொரு வ்ருத்தாதிகளால் வேண்டா தே அவர்கள்தாங்களே க்லேசத்துக்குடலாயிறே யிருப்பது. (பட் [ழி டொழிந்தேன்) பட்டேனென்றபடி யாகவுமாம். அன்றிக்கே, நோயே பட்டொழிந்தேன்-விட்டேனென்னவுமாம்.ஹேயவஸ்துக்கள் உத்தேச்ய மென்றறியும்போது ஸதாசார்யோபதேசமும் சாஸ்த்ரமும்வேணும்; ஸம்ஸாரத்தில் த்யாஜ்யதையில் ப்ரத்யக்ஷமே அமையுமிறே. இவை தானே உபாத்யாயர்களாக வாய்த்து விட்டது. (உன்னைக்காண்ப[ம்ரு தோராசையினால்) ஸோபாதிக பந்துக்களை பந்துக்களென்று ப்ரமி த்து அவர்கள் உதவவேண்டுமென்று உதவக் காணாமையாலே நிருபாதிக பந்துவானவுன்னைக் காணவொண்ணுமோ என்னும்படியாய் உன் பக்கலிலே அவைதானே ஆசையைப் பிறப்பித்தன.

"கிளையேயென்றும்" என்றது-ஸம்பந்திகளேயென்றுமென்றபடி."தாயேதந்[ உய தை" இத்யாதிக்கு - ஸ்தநந்தயாவஸ்தா ப்ரப்ருதியான விவனுடைய * பால்யவா ஹாஸலோலத்வத்தை அடைவே யருளிச்செய்கையிலே தாத்பர்யமென்று திருவு ள்ளம். இவன் "தாய்" என்று ஆதரித்தானாகில்அவர்களாலே நோயேபடவேண்டு வா னென்னென்ன வருளிச்செய்கிறார் (இவன்பக்கலித்யாதி.) கொண்டு - வாங் கிக்கொண்டு. இத்தால் - இவனுடைரிக்கைக் குறுப்பாகத் தாங்களும் தாய்நினைவுகொ ண்டு வருமத்தனை போக்கி இவனுக்கு உதவுகைக்குறுப்பான தாய் தந்தையன்றிக் கே, பலியிடக்கொடுத்தும்தாங்கள் விற்றுஜீவிக்குமவர்களுண்டென்றதாய்த்து. "தாயே" இத்யாதிகளில் ஏவகாரங்களுக்குத் தாத்பர்யாநுஸாரமருளிச்செய்கிறார் (வேறொருவித்யாதி.) இத்தால் - அவர்களுடைய அபகாரத்தாலே நோவுபடுகையன் றிக்கே அவர்கள்ஸ்வரூபமேநோய்க்கு நிதாநமென்றுவ்யாவர்த்தகங்களென்ற[ கூய தாய்த்து. இப்பக்ஷத்தில், அவர்கள் நியதஸ்வபாவராகையாலே நினைத்து நினைத் து து:கிக்கைக்குறுப்பா யிருப்பர்களென்று திருவுள்ளம்.முழுச்சொல்லாக ஓர் ய மருளிச்செய்து, பதச்சேதவிவக்ஷயா அர்த்தாந்தரம் (அன்றிக்கேயித்யாதி.) அநா தியாக ஆதரித்தே போந்தவனுக்கு இப்போது விடுகைக்கு நிமித்தமென்னென்ன வருளிச்செய்கிறார் (ஹேயவஸ்தித்யாதி.) விசேஷதர்சநத்தால் அநாதிப்ரமம்நிவ்ருத்[கூரு தமாய்த்தென்று கருத்து. (அமையுமிறே) என்றவநுஸாரம், ஆகையாலே என்று சேஷம். விடுகைக்கு ஹேதுவான வளவன்றிக்கே, ஈச்வர விஷயராகஹேதுவுமா ய்த்தின வென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ஸோபாதிகேத்யாதி.)

(வேயித்யாதி) ப்ரயோஜநமுள்ள நான் கொண்டு உதனவே ண்டுமென்றாக அகலவிற்கையன்றிக்கே, முன்பெல்லா மகலநின்று கார்ய வேளையிலே வந்து முகங்காட்டி உபகரிக்கு மவனுயிருந்தாய் நீ. வேய்கள்வெய்ந்திருப்பதாய். (பூம்பொழிலித்யாதி) "ஸர்வகந்த:" என்[ரு றவஸ்து உள்ளேயிற்கிறதென்றுதோற்றும்படியாய்த்திருக்கிறது; அப்பரிமளம்வழிகாட்டவந்தேன்.(வேங்கடவா) அவனுடையவாத்ஸல்யமும் ஸௌலப்யமும்ப்ரத்யக்ஷிக்கலாயாய்த்திருக்கிறது. அகர்மவச்யனுய்பரமபதத்திலேநித்யஸூரிகளுக்குஓலக்கம்கொடுத்திருக்குமவன், இவைநோவுபடுகிற ஸம்ஸாரத்திலே, ப்ரஜை விழுந்த கிணற்றிலே ஒக்கவிழுந்து[ய எடுக்கும் தாயைப்போலே இங்குவந்திருக்கிறது ரக்ஷிக்கைக்காகவிறே. (நாயேன்) நான் செய்து கொண்டபடியைப் பார்த்தால், புறம்புத்தைக்கும் ஆகேன், கேவர்க்கு மாகேன். புறம்பே போகில் கல்லைவிட்டெறிவர்கள், உள்ளேபுகுரில் தொட்டனவும் தீண்டினவும் போகடவேண்டிவரும்.(வந்தடைந்தேன்) அநந்யகதித்வத்தாலே[யரு திருவடிகளிலே வந்து சரணம் புகுந்தேன். நீரே யிப்படிசெய்து கொண்டீராகில் இப்போது நம்மைச்செய்யச்சொல்லுகிற தென்னென்ன (நல்கி) அந்த க்ஷூத்ரபதார்த்தத்தையே ராஜபுத்ரன் செருக்காலே மேல்விழுமிறே. (ஆளென்னைக்கொண்டருளே) நீயே, ஸர்வவிஷயபந்தவு மென்று நினைத்து "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி"[உய என்று நித்யஸூரிகளைக் கொள்ளுமடிமை யென்னைக் கொண்டருள வேணும். ... ... ... ... ... க.

அ.—இரண்டாம்பாட்டு.—பந்துக்களல்லாதாரை பந்துக்களென்று நினைத்திருந்தேன், அக்குற்றத்தைப் பொறுத்தருளவேணுமென்று சரணம் புகுந்தார்-முதற்பாட்டில்; போக்யமல்லாதவற்றிலே போக்யதாபுத்திபண்ணிப்போந்தேன், அக்குற்றத்தைப் பொறுத்தருளவேணுமென்றுசரணம் புகுகிறுரிதில்.

---

"உனைக" என்று முன்னிலைதோற்றச் சொன்னபோதே ஸம்பந்தம்தோற்றியிருக்கவும், "வேங்கடவா!" என்றுஸம்போதித்தவர்க்குஉட்கருத்தையருளிச்செய்கிறார்(ப்ரயோஜநமித்யாதி.)பூத்தபொழிலானபோதே, விரையானது-பரிமள [௯ய மானது, ஆர்ந்திருக்குமே, "விரையார்" என்று விசேஷிப்பபானென்னென்ன வருளிச்செய்கிறார் (ஸர்வகந்தஇத்யாதி.) இத்தால் - "விரையார்" என்று - ஸர்வேச்வரனுடைய பரிமளம் பூர்ணமாய்த்தென்று கருத்து. இப்படி வர்ணித்ததுக்கு ப்ரயோஜநம் காட்டுகிறார் (அப்பரிமளமித்யாதி.) "முகங்காட்டி யுபகரிக்கு மவனாயிருந்தாய் நீ" என்று மேற்சொன்ன அர்த்தம் ப்ரத்யக்ஷமானபடியையுபபா[௫ரு திக்கிறார் (அவனுடையவித்யாதி.) தீண்டினவுமென்றது-பரம்பராஸ்பர்சமுள்ளனவுமென்றபடி.மேல்விழுமிறே-வேட்டைக்குஉபயுக்தமென்று அதிலேவிழுமிறே. க.

இரண்டாம்பாட்டு.—(மானேயித்யாதி.)

மூ.—மானேய்கண்மடவார் மயக்கிற்பட்டு மாநிலத்து
நானே நாநாவிதநரகம் புகும் பாவம்செய்தேன் ;
தேனேய்பூம்பொழில்சூழ் திருவேங்கடமாமலையென்
ஆனாய்! வந்தடைந்தே னடியேனை யாட்கொண்டருளே. ௨.

ப-ரை.—தேன் - வண்டுகள், ஏய் - நிறைந்த, பூ - பூக்களையுடைய, பொழில்-சோலையாலே, சூழ் - சூழப்பட்ட, திருவேங்கடமாமலை - திருமலையை வாஸஸ்தாநமாகவுடையனாய், என் - என்னுடைய குற்றங்களை, ஆனாய் - ஆனைபோலேபொறுக்குமவனே!, மான்ஏய் - மான்போன்ற, கண் - கண்களையும், மடவார் - மடப்பத்தையுமுடைய ஸ்த்ரீகளது, மயக்கில் - கண்மயக்கிலே, பட்டு - அகப்பட்டு, [௰ மாநிலத்து - மஹாப்ருதிவியிலே, நாநாவிதநரகம் - பலவிதமான நரகங்களிலும், புகும் - ப்ரவேசிக்கும்படியான, பாவம் - பாபத்தை, நானே - அடியேன் ஒருவனுமே, செய்தேன் - பண்ணினவனாய்க்கொண்டு, வந்து—, அடைந்தேன் - தேவரீர் திருவடிகளைச் சரணமாகப்பற்றினேன் ; அடியேனை-சேஷபூதனான வென்னை, ஆள்கொண்டருள் - அடிமைகொண்டருளவேணு மென்கிறார். ... ... (௨)

வ்யா.—(மானேயித்யாதி) மானேய்ந்திருக்கிற நோக்கையுடைய. அகவாய் நஞ்சாயிருக்கச்செய்தேயும் இவனை யொழியச் செல்லாதாரைப்போலே யிருக்க நோக்குமவர்களாய்த்து. அகவாயாராய்கைக்கிடான வளவில்லையே யிவனுக்கு ; கார்யஹானியா ஆராயாநிற்கச் செய்தேயும் அநந்யப்ரயோஜநைகளாக நோக்குகிறார்களாகக்கொ [௨௰ ண்டு அதிலே துவக்குண்ணு மாய்த்து. (மடவார்) நாண், மடம், அச்சம் என்கிற விவற்றில் மடப்பத்தை யுடையராயிருப்பர்களிறே. அத்தாலே சொல்லுகிறது - ஸமஸ்தகல்யாண குணாத்மகமான விஷயத்துக்குள்ளதெல்லாம் தங்களுக்குண்டாக நினைத்திருப்பது. (மாநிலத்தில்-நாநாவித நரகம்-நானே - புகும் பாவம் செய்தேன்) [௨௫ வேதநஹேதுக் கெல்லையில்லையிறே ; அவர்களை கர்மாநுகுணமாக அநுபவிப்பிக்கைக்கு லோகங்கள்தோறும் பண்ணிவைக்கும் நரகங்களுக்கும் ஓரவதியில்லையிறே ; அவையெல்லாவற்றுக்கும் நானொருவனுமே தேவையறுக்கும்படியான பாபத்தைப் பண்ணினேன். ஈச்வரனுக்குஜகந்நிர்வாஹம் நடக்கவேண்டில் வேறேசில நரகங்[௩௰ கள்ஸ்ருஷ்டிக்கவேணும். ஸ்ரீராமாயணத்திலே கைகேயியை "நீயென்ன நரகத்திலே புகக்கடவை" என்றுண்டு, அவ்விடத்தை வாசியாநிற்க, நம்பிள்ளை, "முன்பே ஸ்ருஷ்டமான நரகங்கள் போராதென்கிறதோ" என்ன ; "அழகிதாகச் சொல்லிற்று" என்று ஜீயரருளிச் செய்தார். [௩௫

அழகில் மண்டியென்னாதே, "மயக்கிற்பட்டு" என்கைக்குக் கருத்தருளிச் செய்கிறார் (அகவாயித்யாதி) அவர்கள் கண்ணாலே மயக்கினால் இவன் கண்ணைக்காணாதே மயங்குவா னென்னென்ன வருளிச்செய்கிறார் (அகவாயித்யாதி வாக்யத்வயத்தாலே.) நெஞ்சுநஞ்சாம்படி யிருக்குமவர்களை "மடவார்" என்று ஹ்வயதையே நிருபகமாகச் சொல்லப்போமோவென்னவருளிச்செய்கிறார்(அ [௪௰ த்தாலே யித்யாதி.) (தேவையறுக்கும்படி) அதாவது-இன்னார்க்கின்ன நரகம் என்று எல்லார்க்குமாகவிட்ட நரகத்தை எல்லாருடைய பாபங்களை யுடையனாய் ஒருவர்க்கு மில்லாதபடி பண்ணுகை. எல்லாநரகத்துக்கு மொருவனே விஷயமாகக்கூடுமோவென்ன ; கூடுமென்னுமதுக்கு ஸம்வாதமாக ஐதிஹ்ய மருளிச்செய்கிறார் (ஸ்ரீராமாயணத்திலே யித்யாதி.)

மூ.—கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோளொன்றிலாமையினால்;
என்றேனுமிரந்தார்க்கினிதாகவுரைத்தறியேன் ;
குன்றேய் மேகமதிர் குளிர்மாமலை வேங்கடவா !
அன்றே வந்தடைந்தே னடியேனை யாட்கொண்டருளே. ௩.

ப-ரை.—குன்று - மலைகளிலே, ஏய் - தங்கியிருந்துள்ள, மேகம் - மேகங்களானவை, அதிர்-கர்ச்சனத்தாலே முழங்காநிற்பதாய், குளிர்-குளிர்த்திமாறுததாய், மா-பெருமைமிக்கிருப்பதான, மலைவேங்கடவா-ஸ்ரீவேங்கடாசலத்தைநிரூபகமாக வுடையவனே!, குறிக்கோள் ஒன்று-"தேஹத்துக்குவேறாய்ஆத்மா என்றஒன்றுண்டு" என்னும்அறிவு, இலாமையினால் - அடியேனுக்குப்பிறவாமையாலே, பல்உயிரை-எல்லாப்ராணிகளையும், கொன்றேன்-ஹிம்ஸித்துக்கொண்டுபோந்தவனாய், இரந்தார்க்கு-யாசித்தவர்களுக்கு, "தன்கையில் காசில்லாமையாலே யன்றோ இவனிங்ஙன் சொல்லுகிறது" என்று அவர்கள் நினைக்கும்படி, இனிதாக - நல்வார்த்தைகளாலே, என்றேனும்-ஒருகாலத்திலும், உரைத்தறியேன்-சொல்லியறியாதவனான அடியேன், அன்றே-அப்போதே, வந்து அடைந்தேன்—; அடியேனை ஆள்கொண்டருள்—.

(தேனித்யாதி) தேனென்று-வண்டென்னவுமாம். (என்றாலுமு) அவ்வானை வர்த்திக்கிற மலையிலுள்ளதுதன்னையே காட்சியாகக் கொடுக்கவமையும். ஆனை — பெரிய குற்றங்களைக் காணுக்கண்ணிட்டு, பொறுக்க வரியன செய்யவற்று யிருக்கையும், ஸ்பர்சநீயமாயிருக்கையும். (வந்தித்யாதி) "நாநாவித நரகம்புகும்பாவம்செய்[உய் தேன்" என்ற நானே வந்தடைந்தேன் ; அந்நரகாநுபவம் பண்ணும் போதை க்லேசத்துக்கெதிர்த்தட்டான ஸுகைகதாநமாயிருக்கும் கைங்கர்யத்தை யென்னைக் கொண்டருளவேணும். காமுகனுக்கு அங்கநாபரிஷ்வங்கம்போலே ரஸிக்குமிறே சேஷபூதனுக்கு கைங்கர்யம் ; "ரமமாணா:" ... ... ... ... ௨.

அ.—மூன்றாம்பாட்டு.—வங்யங்களல்லாதாரை வங்யங்களென்றும்போக்யமல்லாதார்பக்கலிலே போக்யதாபுத்தி பண்ணியும் போந்தவளவேயோ, தேவர்திருவுள்ளத்துக்கு அஸஹ்யமாம்படி பரஹிம்ஸையே பண்ணிப்போந்தே னென்கிறார்.

"மாமலையென்றாய்"என்றஸமஷ்டியாஹாரஸௌர்யத்தையருளிச்செய்[கிற கிறார் (அவ்வானையித்யாதி.) (ஆனை) என்றவநுஷங்கம், என்கிறது என்றுசேஷம். (கண்ணிட்டு) என்றவநுஷங்கம், இருக்கையும் என்றுசேஷம். (ஸ்பர்சநீயமாயிருக்கையும்) என்றவநுஷங்கம், உண்டாகையாலே என்று பூரிப்பது. "ஆட்கொண்டருளே" என்றதுக்கு "அடியேனை" என்றது ஹேதுகர்ப்பமென்னுமிடந்தோற்ற தாத்பர்ய மருளிச்செய்கிறார் (காமுகனுக்கித்யாதி.) "ரஸிக்கும்" என்கைக்கு[நடு ப்ரமாணம் (ரமமாணாஇத்யாதி) "ரம்யமாவஸயம் க்ருத்வா ரமமாணாவநேத்ரய: | தேவகந்தர்வ ஸங்காஸாஸ்தத்ரதேந்யவஸந் ஸுகம்." ... ... ௨.

மூன்றாம்பாட்டு.—(கொன்றேனித்யாதி.) மேலிரண்டு பாட்டோடும் ஸங்கதிதன்னை யருளிச்செய்கிறார் (வங்யங்களித்யாதி.)

வ்யா.—(கொன்றேன்) மடிதடவி விட்டிலேன். அர்த்தம் கொடு
வந்தானாகில், பின்தொடர்ந்தியறக் கொன்று பறிக்கும்; வெறுங்கைய
னாகில், நான் அவள்பக்கல் என்கொடுபோகக்கடவேனாக நீ வெறுங்
கையே வந்ததுஎன்றுகொல்லுவன்.(பல்லுயிரை)அநுதாபம்பிறந்த [௫
தில்லை, ப்ராயஸ்சித்தாதிகாரமுமில்லை. அநுதாபமுண்டாகில் ஒன்
றிரண்டளவிலே மீளுமிறே; அப்போதிறே ப்ராயஸ்சித்தாதிகாரமுமு
ள்ளது. இப்போது இத்தைக் குற்றமாகச் சொல்லுகிறநீர் அன்று அது
செய்வானென்னென்ன (குறிக்கோளொன்றிலாமையினால்) தேஹா
திரிக்தமா யிருப்பதோ ராத்மவஸ்துவுண்டு, இது செய்யில் நரகா [௰
நுபவம் தப்பா தென்றறிதல்; அன்றிக்கே, இத்தை யுடையானொரு
வனுளன், அவன் ஸர்வஜ்ஞத ஸஹ்ருதயத்தாயிருப்பானொருத்தன், அ
வனுக்கிது அஸஹ்யமாயிருக்கும் என்று புத்தியிற் படாமையாலே
செய்தேன்; அவனைப் பார்த்தல், நாம் நின்றநிலை யிது என்றாராய்
தல்செய்யாமையாலே. ஒருதலையை யறியிலும் பாஹ்யஸையில் ப்ர[௰௫
வர்த்தியானிறே. விஷயார்த்தமாக த்ரவ்யார்ஜநம் பண்ணுகிறநாளில்
முன்னடி தோற்றாமையாலே பாஹ்யஸையைப்பண்ணிப்போந்தீராகி
ல், பின்பு த்ரவ்யங்களும் பெற்று அபிமதவிஷயங்களும் கைபுகுந்து
நீருமவளுமாய் ரஸித்திருக்கிற வளவில்தான் ஆர்த்தவிஷயத்தில்
ஐயோ! என்றீரோவென்ன (என்றேனுமித்யாதி காத்திகைப்புதிய[௨௰
துக்கும் நாமிடவேணு மென்னுதல், இவன் ஜீவிக்க வேணுமென்
னுதல், செருக்காலே யாதல். இட்டறியே னென்பது அதுக்கு
ப்ரஸங்கமுண்டாகிலிறே. (இனிதாக) ஒருவனர்த்தித்து வந்தால், இர
ப்பாளனாய் வந்தவனுக்கு "குறைவறத்தரப்பெற்றிலேன்" என்றாறி
வார்த்தைசொன்னானாகில், "இவன்றான் செய்வதென், தன் வெறு[௨௫
மையாலே யன்றோ தாராவிட்டது" என்று அவனும் ஆறிப்போமி
றே; அங்ஙனன்றிக்கே, "நாமும் நம்தாரித்ர்யமுமாய்ப் பட்டது
படாதே யிவன் வாயில் வார்த்தைகேட்கைக் கென் செய்யஅபேக்ஷித்
தோம்" என்று உள்ளதனையும் நெஞ்சு புண்படும்படியாய்த்து
இல்லை என்பது. [௩௰

---

பின்தொடர்ந்தியற - தன்பின்னே தொடர்ந்துவாராதபடி. அவள் பக்கல் -
* மானேய்கண் மடவாள் பக்கல். கீழ் வாக்யத்துக்கு விவரணம் (அநுதாப
முண்டாகிலித்யாதி.) மேலுக்கவதாரிகை (இப்போதித்யாதி.) குறிக்கோள் - ஜ்ஞா
நம். "ஒன்று" என்றது - ஒன்றும் என்றாய், அநேகமுண்டாகிலன்றோ ஒன்று
ம் என்னவேண்டுவதென்ன வருளிச்செய்கிறார் (தேஹேத்யாதி.) (இருக்குமெ[௩௫
ன்று) என்றவநுஷங்கம், ஆதல் என்று சேஷம். கீழ்ப்பண்ணின ப்ரச்நத்துக்கு
உத்தரமாம்படி தாத்பர்ய மருளிச்செய்து, ஸப்தார்த்தத்தை யருளிச்செய்கிறார்
(அவனையித்யாதி.) இவற்றிலொன்றறிந்தாலமையுமோவென்ன (ஒருதலை யித்யாதி.)
மேலுக்கவதாரிகை (விஷயேத்யாதி.) "என்றேனும்-ஒருநாளாகிலும், இரந்தார்க்
கினிதாகவுரைத்தறியேன்" என்றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிறார்(காத்திகை[௪௰
யித்யாதி.) இத்தால்-புண்யத்துக்காகவாதல், ஐயோ! என்றிரக்கத்தாலேயாதல்
க்யாதிக்காக வாதல், ஒருநாளும் சோறிட்டதில்லையே, நல்வார்த்தையும் சொல்லி
யறியே னென்றதாய்த்து.

மூ.—குலந்தானெத்தனையும்பிறந்தேயிறந்தெய்த்தொழிந்தேன்;
நலந்தானொன்றுமிலேன்; நல்லதோரறஞ்செய்துமிலேன்;
நிலந்தோய் † நீள்முகில்சேர் நெறியார் திருவேங்கடவா!
அலந்தேன் வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. ௪.

ப-ரை.—நிலம் - பூமியிலே, தோய் - படிந்த, நீள்முகில் - மஹாமேகங்கள், சேர் - ஸஞ்சரிக்கிற, நெறி - வழியை, ஆர் - உடைத்தான, திருவேங்கடவா - ஸ்ரீ வேங்கடாத்ரி நிர்வாஹகனே!, எத்தனைகுலமும் - எல்லாக்குலங்களிலும், பிறந்து இறந்து-பிறப்பது இறப்பதாய்க்கொண்டு, எய்த்தொழிந்தேன்-இளைத்துப்போனவனாய், ஒருநலமும் இலேன் - ஒன்றிலும் ஒருநன்மையும் இல்லாதவனாய், நல்[ல]து-ஹலத்தோடேகூடியிருப்பதாய்நன்மையையுடைத்தான, ஓர்அறமும்-ஒருஸா[த]நாநுஷ்டாநத்தையும், செய்திலேன் - பண்ணப்பெறுதவனாய்க் கொண்டு, அல[ந்]தேன் - ஜந்மங்கள்தோறும்திரிந்து க்லேசித்த அடியேன், வந்து அடைந்தேன்—; அடியேனை ஆள்கொண்டருள்—. ... ... ... ... ௪

(குன்றேய்மேகமதிர்) குன்றிலேயென்னுதல், குன்றுபோ[ல்]லேயென்னுதல். கனக்கநீரைமுகந்தால் ஓரிடத்திலே தங்கிவர்ஷிப்பது. (அதிர்) இரவாதிருக்கச்செய்தேயும் இனிதாகச் சொல்லுவாரைப்போலேயாய்த்து முழக்கமிருப்பது. (அன்றேவந்தடைந்தேன்) அநுதாபம் பிறந்தாதல் ப்ராயஶ்சித்தம் பண்ணியாதல் அன்றிக்கே,கொன்றகை கழுவாதே உதிரக்கைகழுவாதேவந்து சரண[ம்]ம் புகுந்தேன்; என்செயலைப்பாராதே ஸ்வரூபத்தைப் பார்த்தடிமைகொண்டருளவேணும். பூர்வ வ்ருத்தத்தைப்பார்த்தால் பரஹிம்ஸை யாகில் பண்ணிற்று, இப்போதொரு ஸாதநாநுஷ்டாநம் பண்ணி வந்தாப்போலேயிருக்கச் சொல்லுகிற தென்னென்ன; அவனை[ப்] பார்த்துத்தம்மைப் பாராதே வார்த்தை சொல்லுகிறார். அவனைப்[பு] பார்த்தால், "அபிப்ராணாந் பரித்யஜ்ய" என்றிறேயிருப்பது; "ப்ராணாநபி" என்றுவிட்டது அவற்றைக் குவாலாகநினைத்திராமை. காலிலேவந்து விழுந்தவனை முன்புத்தை ஸாத்ரவம் பாராதே ரக்ஷித்த விதோரேற்றமோ என்றிருக்குமவராய்த்து. ... ... ரு.

குன்றிலேயென்றது-குன்றின் கொடுமுடியிலே யென்றபடி. அன்றிக்கே, [கூடி] குன்றுகளிலே வர்த்திக்கக்கடவ மேகமென்று கொள்ளவுமாம்.இப்படி விசேஷித்ததுக்கு ப்ரயோஜநம் (கனக்கவித்யாதி.) பல்லுயிரைக்கொன்றவெனக்கு ப்ரதி கோடியாக பல்லுயிருக்கும் ஜீவப்ரதாநஶீலமாய் இனிதாக வுரைத்தறியாதவெனக்கெதிராக பரமோதாரர் வர்த்திக்கிற தேசத்திலிருக்கும் * ஸ்ரீவேங்கடாத்ரி ஶிவராலய காளமேகத்தை ஸம்போதிக்கிறுரென்று உட்கருத்தையுட[ன்] கொண்டு, * அதிர்ப் பதத்துக்குக் கருத்தருளிச் செய்கிறார் (இரவாதித்யாதி.) "அடியேனை" என்றதுக்கு பாவம் (என்செயலை யித்யாதி.) "கொண்டருளே" என்றஇதுக்கு சங்காபரிஹாரரூபேண பாவமருளிச்செய்கிறார் (பூர்வேத்யாதி.) "ஆர்த்தோவா யதிவாத்ருப்த: பரேஷாம் ஶரணாகத: | அரி:ப்ராணாந்பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய:க்ருதாத்மநா." அவற்றை - ப்ராணன்களை. ஆத்மநி பஹுவசநம். குவாலாக நினையாமைக்கு ஹேதுவென்னென்ன வருளிச்செய்கிறார் (காலிலேயித்யாதி.) ... ... ... ... ... ... ... ரு

வ்யா.—நாலாம்பாட்டு.—(குலந்தானித்யாதி) குலங்களெங்கும் பிறந்திறந்து திரிந்தேன். அநுலோம ப்ரதிலோம ரூபத்தாலே பிறந்த பிறவிக்கு ஓரெல்லையில்லையாய்த்து. எல்லா ஜந்மங்களிலும் புக்குப் பிறப்பதிறப்பதாய் இனிப்பிறக்கைக்கீடான கர்மவிசேஷமுண்டாகிறு லும் பிறக்கைக்கு க்ஷமனல்லாதபடி யிளைத்தேன்‡. (நலந்தானொன் றுமிலேன்) இப்படி அநேகஜந்மங்கள் பிறந்து மரித்துப் போருகிற விடத்திலும் நடுவேயொரு ஸுக்ருதமாதல் அதுக்கு ஃலமான ஜ்ஞாநமாதல் உடையேனாய்த்திலேன். (நல்லதோரறம் செய்து மிலேன்) இப்போது நன்மை பிறக்கைக்கடியாக முன்பு செய்த தொன்று மில்லையே யாகிலும், மேலொரு நன்மைபிறக்கைக் கீடாக இப் போது ஏதேனு மொரு ஸாயநாநுஷ்டாநம் பண்ணுகிறதுண்டோ வென்னில்; ஃலத்தோடே வ்யாப்தமா யிருப்பதொரு ஸாயநாநு ஷ்டாநம் பண்ணப்பெற்றிலேன்.

(நிலமித்யாதி) நிலத்திலே தோய்ந்தமஹாமேகங்களானவை [யிரு போனஅடிப்பாடு ஆர்ந்திருக்குமாய்த்து. கழுத்தேகட்டளையாக நீரை ப்பருகி முகந்த நீர்க்கனத்தாலே கால்வாங்கிப் போகமாட்டாதே நகர்ந்து நகர்ந்து துளித்துத்துளித்துக்கொண்டு ஸஞ்சரிக்கிற மேகங்கள் போன அடிப்பாடு தெரியும்படியா யிருக்குமாய்த்து. (அலந் தேன்வந்தடைந்தேன்) ஜந்மபரம்பரைகளிலே அலந்துமுசித்தேன். [உம் (அடியேனை) இனியொருஜந்மம்வரு மென்றஞ்சி ஏங்கவேண்டாதபடி யான தாஸ்யத்திலே யென்னைமூட்டவேணும். ... ... ச.

---

நாலாம்பாட்டு.—(குலமித்யாதி.) "பல்லுயிரை-கொன்றேன்" என்கைக்கு நீர்தாம் ஆசந்த்ரார்க்க ஸ்மாயியா யிருந்தீரோவென்ன; அதொன்றுமில்லை, நான் பட்ட பாட்டைக் கேளீரென்கிறார் என்று ஸங்கதி கண்டுகொள்வது.

"பிறந்தே" என்கிற ஏவகாரம் பிறவாமலிறப்பில்லாமையால் வ்யாவர்த்தக மன்றென்று பிறப்பினுடைய நைரந்தர்ய ஸூசகமென்று விவக்ஷித்து, ஸ்வாமி மருளிச்செய்கிறார் (குலங்களித்யாதி) பிறப்பும்இறப்பும் விநா வேறு கிரிகையில்லை யென்றுகருத்து. "எத்தனையும்" என்றபதத்துக்குத் தாத்பர்யம் (அநுலோமேத் யாதி.)அநுலோமமென்றது-உத்க்ருஷ்டவர்ணன் அபக்ருஷ்டவர்ணத்தில் விவாஹம் பண்ணினபெண்பிள்ளைவயிற்றில்பிறக்கை. ப்ரதிலோமமென்றது-அபக்ருஷ்டவர்ண ன் உத்க்ருஷ்டவர்ணத்தில்பரிக்ரஹித்தபெண்பிள்ளைவயிற்றில்பிறக்கை.வாச்யார்த்தக யநமுலேவ"எய்த்தொழிந்தேன்"என்றதுக்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (எல்லா வித்யாதி.) "ஒன்றும்" என்றபதவாஸனை (இப்படியித்யாதி.) "நலந்தானொன்றுமி லேன்"என்றுசொல்லிவைத்து,"நல்லதோரறஞ்செய்து மிலேன்" என்ன ப்ரஸக்தி யுண்டோவென்ன வருளிச்செய்கிறார் (இப்போதித்யாதி.)

விவரணம் (கழுத்தேயித்யாதி.) முசித்தேன்-க்லேசித்தேன். ... ... ச.

அஞ்சாம்பாட்டு.—(எப்பாவமித்யாதி.) இப்படியெல்லாக்குலங்களிலும்புக்குப் பிறக்கைக்கடியான பாபப்ராசுர்யத்தை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டு கொள்வது. [சும்

---

‡ "......ல்லாதபடி யிருந்தேன்" என்று சில ஸ்ரீகோசங்கள்.

௫.—எப்பாவம் பலவு மிவையே செய்திளைத்தொழிந்தேன் ;
துப்பா! நின்னடியே தொடர்ந்தேத்தவும் கிற்கின்றிலேன் ;
செப்பார்திண்வரைசூழ் திருவேங்கட மாமலை யென்
அப்பா! வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. ௫.

ப-ரை.—செப்புஆர் - செப்புப்போலே ரக்ஷகமாய், திண் - த்ர்டமான, வரை - மலைகளாலே, சூழ் - சூழப்பட்ட, திருவேங்கடமாமலை - திருமலையை வாஸஸ்தாநமாக வுடையனாய், என் - ஆச்ரிதனை மன் போல்வார்க்கு, அப்பா - உபகாரகனானவனாய், துப்பா - ஆச்ரிதர்பாபங்களைப்போக்கி ரக்ஷிக்கைக்கீடான சக்தியை யுடையவனே!, எப்பாவம் பலவும் இவையே - பலவகைப்பட்ட பாபங்களையே, [ய செய்து - பண்ணி, இவற்றுக்கு வரக்கடவ பலங்களைக் கேட்டு, இளைத்தொழிந்தேன் - துக்கித்தவனாய், நின்அடி - தேவரீர் திருவடிகளை, தொடர்ந்து - பின்சென்று, ஏத்தவும் - பக்திபூர்வகமாக ஆச்ரயிக்கவும், கிற்கின்றிலேன் - சக்தியற்றவனாய், வந்துஅடைந்தேன்—; அடியேனை ஆள்கொண்டருள்—. ... ... (௫)

வ்யா.—அஞ்சாம்பாட்டு.—(எப்பாவமித்யாதி) அதிபாதகம், [ய௫ உபபாதகம், மஹாபாதகம் என்றுப்போலே சொல்லுகிற பஹுவிதமான பாபங்களை அநுஷ்டித்து, பின்னை இவற்றுக்கு வரக்கடவ பலங்களைக்கேட்டு க்லேசப்பட்டேன். இப்படி மஹாபாபங்களையே அநுஷ்டித்துக்கொடுபோராநின்றால் நடுவே யொரு ஸுக்ருதம்பிறந்து அத்தாலே யென்பக்கலிலே ருசியு முண்டாகப் பெற்றதாகில், [௨ய "நமேமோக்ஷ:ப்ரணச்யதி" என்கிற வார்த்தையை விச்வஸித்திருக்கலாமிறே. மஹாபாபங்களைப் பண்ணினானாகிலும் புருஷோத்தம வித்யையுண்டாக அவனுக்கு பாபவிமோசந முண்டாகச் சொல்லாநின்றதிறே. (துப்பா) இப்பாபங்களைப்போக்கி உன்னைப்பற்றினாரை ரக்ஷிக்கைக் கீடானசக்தியோகத்தையுடையவனே. (நின்னடியே) பக்தி [௨௫ பூர்வகமாக உன்திருவடிகளை வடிம்பிட்டாச்ரயிக்க க்ஷமனாய்த்திலேன்.
(செப்பாரித்யாதி) அரணாகப்போரும்படியான திண்ணிய வரைகளாலே சூழப்பட்ட திருமலையை வாஸஸ்தாநமாக வுடைய நிருபாதிக பந்துவானவனே. (அடியேனை) என்னுடைய பாபாநுகூலமாகவன்றிக்கே உன்னோடுண்டான நிருபாதிக பாந்தவாநுரூபமான கைங்கர்யத்தில் என்னை மூட்டவேணும். ... ... ௫.

"இவையே" என்கிற அவதாரணத்துக்குத் தாத்பர்ய கதந முமேமேந மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (இப்படி யித்யாதி.) அல்பம் ஸுக்ருதருசியுண்டானால் பாபங்கள் போமோ, இவ்வசநத்தைவிச்வஸிக்கும்படி யென்னென்னவருளிச்செய்கிறார் (மஹாபாபங்களையித்யாதி) வசநபலத்தாலேவிச்வஸிக்கத்[௩௫ தட்டென்னென்று கருத்து.

"செப்பு" என்று - ஆபரணத்துக்கு ரக்ஷகமான பாத்ரமாய், அத்தாலே (அரணாக) என்றது. திருமலைக்குப் புறமலை ரக்ஷகமாயிருக்கையாலே தம்முடைய ரக்ஷகவஸ்து ஸுரக்ஷிதமாயிருக்கப் பெற்றதென்று திருவுள்ளமென்று கருத்து. ௫.

ஆறும்பாட்டு.—(மண்ணாயித்யாதி.) இப்படி அதிபாதகாதிகள்பண்ணுகைச்[௩ய கடி - ஜ்ஞாநநிரோதகரமான ப்ராக்ருததேஹஸம்பந்தமென்று, அதுதன்னை அநுஸந்தித்து க்லேசித்து சரணம் புகுகிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது

மூ.—மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவுமாகாசமுமாம்
புண்ணாராக்கைதன்னுள் புலம்பித்தளர்ந்தெய்த்தொழிந்தேன் ;
விண்ணார் நீள் சிகர விரையார் திருவேங்கடவா !
அண்ணா ! வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. ௬.

ப-ரை.—விண் - ஆகாசத்தை, ஆர் - அளாவும்படி, நீள் - உயர்ந்த, சிகரம் - கொடுமுடிகளையும்,விரை-பரிமளத்தையும்,ஆர்-உடைத்தான,திருவேங்கடவா-திருமலையைவாஸஸ்தாநமாகவுடையவனாய், அண்ணா - எல்லாவுறவுமுறையுமானவனே!, மண்ணாய்-பூமியாயும், நீராய்-ஜலமாயும், எரியாய்-அக்நியாயும்,காலாய்-வாயுவாயும், மஞ்சு-மேகங்கள்,உலாவும்-ஸஞ்சரியாநின்றுள்ள,ஆகாசமுமாம்-ஆகாசமுமாகிய[ப் பஞ்சபூதமயமானதாய், புண் ஆர் ஆக்கைதன்னுள் - வ்ரணத்தோடொத்த தேஹத்திலே யகப்பட்டு, புலம்பி - அங்கே கிடந்து கூப்பிட்டு, தளர்ந்து - அதுவும் செய்யமாட்டாதே மெலிந்து, எய்த்தொழிந்தேன் - மிகவும் இளைத்தவனான அடியேன், வந்தடைந்தேன்—; அடியேனை ஆள்கொண்டருள்—. ... (௬)

வ்யா.—ஆறும்பாட்டு.—(மண்ணாயித்யாதி) ராஜபுத்ரன் வேடன் கையிலே யகப்பட்டுத் தன்னை வேடனாக ப்ரமிக்குமாப்போலே, நித்யமாய் ஜ்ஞாநாநந்த லக்ஷணமாய் ஏகரூபமாய் ஈஶ்வரஶேஷமான ஆத்மவஸ்து கர்மாநுகுணமாக அசித்தோடே ஸம்ஶ்லிஷ்டமாய்த்து. ஏகரூபமான வஸ்து உபயயாத்மகமான தேஹத்திலே யகப்பட்டது. (புண்ணாராக்கை) * புண்ணைமறைய வரிந்திறே உடம்[உம் பிலே வைத்தது. அறிவுடையார், “ஶரீரம் வ்ரணவத்பஶ்யேத்” என்று இதுதன்னையே வ்ரணமாகச் சொல்லாநின்றார்களிறே. தேஹத்திலே புக்ககப்பட்டு, பின்னை அங்கே கிடந்து கூப்பிட்டு, அது தானும் மாட்டாதே தளர்ந்து, பின்னை யிளைத்தேன்.

(விண்ணாரித்யாதி) நித்யஸூரிகள் ஸ்ரீவைகுண்டத்திற்போலே வந்தேத்தும்படியாக ஆகாஶாவகாஶத்தளவும்வளர்ந்தபெரிய கொடுமுடிகளையுமுடைத்தாய் பரிமளப்ரசுரமான திருமலையை வாஸஸ்தாநமாகக்கொண்டு நிற்கிற. (அண்ணா) கீழே, “அப்பா” என்றார் ; இங்கே, அண்ணா என்னாநின்றார். * தாயேதந்தையென்றும் தாரமே கிளைமக்களென்றும்விட்டவுறவுமுறைக்கெதிர்த்தட்டானஎல்லா [கூய் வுறவுமுறையு மெம்பெருமானே யென்றாய்த்திவரிருப்பது. (அடியேனை) வெளிறு கழிந்தால் ஸம்பந்தம் நித்யஸூரிகளோடொத்திருக்குமிறே யெனக்கும் ; ஆனபின்பு, அவர்களைக் கொண்டருளுமடிமையை யென்னைக்கொண்டருளவேணும். ... ... ௬.

“அப்பா வந்தடைந்தே னடியேனை யாட்கொண்டருளே” என்றத்தாலே-[நூறு பிதாபுத்ரஸம்பந்தமும் தம்முடைய ஸ்வாஹாவிகாகாரமு மறுஸந்தித்தவர் பஞ்சபூதாத்மகமான * புண்ணாராக்கையிலகப்பட்டமைக்கு ஸத்ஜேஷ்டாஜமாக ஹேதுவருளிச்செய்கிறார் (ராஜபுத்ரனித்யாதி.) தேஹம் புண்ணகைக்கு ப்ரமாணங்களை ஸூசிப்பிக்கிறார் (புண்ணையித்யாதி) “ஶரீரம் வ்ரணவத்பஶ்யேதந்தஞ்ச வ்ரணலேபநம்। ‡ வ்ரணலேசநவத்பாநம் வஸ்த்ரஞ்ச வ்ரணபட்டவத்” என்று ப்ர[அம் மாணசேஷம். வெளிறு - அஸாரம். ... ... ... ... ... ௬.

‡ “வ்ரணலேசநவத் ஸ்நாநம்” என்றும் ஸ்ரீகோசங்கள்.

மூ.—தெரியேன்பாலகனாய்ப் பலதீமைகள் செய்துமிட்டேன்;
பெரியேனாயினபின் பிறர்க்கேயுழைத்தேழையானேன் ;
கரிசேர் பூம்பொழில்சூழ் கனமாமலை வேங்கடவா!
அரியே!வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. ௭.

ப-ரை.—கரி - யானைகள், சேர் - மிக்கிருப்பதாய், பூ - பூக்கள் நிறைந்த, பொழில் - சோலையாலே, சூழ் - சூழப்பட்டு, கனம் - திர்டமாயிருக்கிற, மாமலை - பெரியமலையான, வேங்கடவா - திருமலையை வாஸஸ்தாநமாக வுடையையாய், அரியே - சத்ருக்களை நிரஸிக்கைக்கு ஸிம்ஹம்போலே செருக்கியிருக்குமவனே!, பாலகனாய் - சிறுப்பிள்ளையானபோது, தெரியேன் - "இதுநன்று, இதுதீது" என்று பகுத்தறியமாட்டாதவனாய், சிறிதஜ்ஞாநம் பிறந்தபின்பு, பலதீமைகள் - அநேகமான கொடிய செயல்களை, செய்து மிட்டேன் - பண்ணிப்போந்தவனாயும், பெரியேன் ஆயினபின் - யௌவநத்தை அடைந்தபின்பு, பிறர்க்கே - ஸ்த்ரீகளுக்கு வேண்டுமவற்றையே, உழைத்து - தேடி, அத்தாலே தக்கித்து, ஏழையானேன் - சதிர்கெட்டுப்போன அடியேன் ; ஸர்வேச்வர னொருவனுளன் என்னும் அறிவு பிறந்த பின்பு, வந்தடைந்தேன்—; அடியேனை ஆள்கொண்டருள்—. ... (௭)

வ்யா.—ஏழாம்பாட்டு.—( தெரியேனித்யாதி ) ( பாலகனாய் - தெரியேன்) சிலநாள் அதிசைசவமாய் யுக்தாயுக்தங்களறியாதே கிடந்தேன். அல்பம்அறிவுபிறந்தபின்பு, தோன்றினபடி பலதீமைகள் செய்துதிரிந்தேன்.(பெரியேனித்யாதி)அநந்தரம் யௌவநம்வந்து[௨௰ முகங்காட்டினவாறே, நல்லதொரு பூக்கண்டால் என்தலையிலே வையாதே ஸ்த்ரீபரதந்த்ரனாய் அவர்களுக்கேஆவனதேடி வருத்தப்பட்டுச் சதிர்கேடனாய் இளிம்பனானேன்.

(கரியித்யாதி) லீலார்த்தமாக ஆனைகள் வந்து சேரப்பட்டு, பூத்த பொழிலாலே சூழ்ந்து திண்ணிதாயிருக்கிற திருமலையை வாஸ[௨௫ ஸ்தாநமாக வுடையவனே. (அரியே) என்னுடைய ப்ரதிபந்தகத்தைப்போக்குகைக்கீடான பராஹிம்ஸநஸாமர்த்யத்தை யுடையவனே. (ஆட்கொண்டருளே) பிறர்க்கேயுழையாமே ப்ராப்தவிஷயத்திலே கைங்கர்யத்தைக்கொண்டருளவேணும். ... ... ௭.

ஏழாம்பாட்டு.—(தெரியேனித்யாதி.) "விசித்ராதேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும்" என்றும் "சரீரமாத்யம்கலுதர்மஸாதநம்" என்றும் சொல்லுகிறபடியே ஆவச்யகமானத்தை, "புண்ணராக்கை" என்று நீர்ஸ்ஸ்ஹரித்துக்கொண்டு வருவானேன்னென்ன ; அப்படியே யாமிறே *உன்பூவார்கழல்களிலே ஒருபூவிடப்பெற்றேனாகில் ; அங்ஙனன்றிக்கே போனபடியைக்கேளா யென்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது. [௩௰

ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான், இளையபெருமாள், ப்ரபந்நஜநகூடஸ்தரான நம்மாழ்வார், இவர்களுக்கெல்லாம் ஆஜந்ம ஸித்தமான ஸத்வப்ராவண்யம் தலையெடுக்கக் காண்கையாலே தாம்அதிசைசவந்தடங்கவ்யர்த்தமேபோக்கினபடியை யநுஸந்திக்கிறாரென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (சிலநாளித்யாதி.) த்ருவன் அஞ்சுவயஸ்ஸிலே ஸத்வஸ்ஜநம்பண்ணினபடியையுட்கொண்டருளிச்[௩௫ செய்கிறார் (அல்பமித்யாதி.) "பிறர்க்கே" என்கிற ஏவகாரவ்யாவர்த்யம் (என்தலையிலே யென்றது.)

"அரி" என்று - ஸிம்ஹமாய், அத்தாலே (பராஹிம்ஸந ஸாமர்த்யத்தையுடையவனே யென்றது.) ... ... ... ... ... ௭.

மூ.—நோற்றேன் பல்பிறவி யுன்னைக்காண்பதோராசையினால்;
ஏற்றேன்;இப்பிறப்பே யிடருற்றன னென்பெருமான்!
கோற்றேன்பாய்ந்தொழுகும் குளிர்சோலைசூழ் வேங்கடவா!
ஆற்றேன் வந்தடைந்தே னடியேனை யாட்கொண்டருளே. அ.

ப-ரை.—தேனிக்களானவை, கோல் - கோல்களிலே சேர்த்துவைத்த, தேன்-மதுவானது, பாய்ந்து - நிறைந்து வழிந்து, ஒழுகும் - வெள்ளமிடாநிற்பதாய், குளிர் - குளிர்த்தியையுடைத்தான, சோலைசூழ் - பொழில்களாலே சூழப்பட்ட, வேங்கடவா - திருமலையை வாஸஸ்தாநமாக வுடையனாய், எம் - ஆச்ரிதரான வெங்களுக்கு,பெருமான்-மஹோபகாரகனாயிருக்குமவனே!, உன்னை-தேவரீரை, [யி காண்பது - காணவேணுமென்கிற, ஓர் - ஒரு, ஆசையினால் - ஆசையாலே, பல் பிறவி - அநேகஜந்மங்க ளுண்டாம்படி, நோற்றேன் - ஸாதநாநுஷ்டாநம் பண் ணிப்போந்த அடியேன், இப்பிறப்பே - இந்தஜந்மத்திலேயே, இடருற்றனன் - ஜந் மம்த்யாஜ்யம் என்று அறிந்தவனாய், ஏற்றேன் - தேவரீர் கடாக்ஷத்துக்கு யோ க்யனானேன் ; அத்தாலே,ஆற்றேன்-மாறிமாறிவரும் பலபிறவிகளை ஸஹிக்கமா[யிரு ட்டாதவனாய், வந்தடைந்தேன்—; அடியேனை ஆள்கொண்டருள்—. ... (அ)

வ்யா.—எட்டாம்பாட்டு.—(நோற்றேன்பல்பிறவி) (பல்பிறவி-நோற்றேன்) எனக்குப் பல ஜந்மங்களுண்டாம்படியாக வாய்த்து நான்ஸாதநாநுஷ்டாநம் பண்ணிற்று. இப்படி பிறந்துபோராநிற்க ச்செய்தே நடுவே யாத்ருச்சிகமாகவொருஸுக்ருதம்பிறந்தது, அத் [உயி தாலே உன்னைக்காணவேணுமென்றாசை பிறந்து, தேவர்க்காம்படி யோக்யனானேன். நீர் யோக்யரென்னுமிட மறிந்தபடி யெங்ஙனே யெ ன்ன (இப்பிறப்பேயிடருற்றனன்) இஜ்ஜந்மந்தன்னிலே, நாம்நின்றநிலை சாலப்பொல்லாதென்று என்நெஞ்சிலேபட்டது.

(கோல்தேனித்யாதி) கோல்களிலே வைத்த தேனானது [உரு பாய்ந்து வெள்ளமிட்டுக் குளிர்ந்த சோலையாலே சூழப்பட்ட திரு மலையை வாஸஸ்தாநமாகவுடையவனே. (ஆற்றேன்) ஜந்மபரம்பரை களுக்கு ஆற்றமாட்டாதே திருவடிகளிலேவந்துசரணம்புகுந்தேன்.

எட்டாம்பாட்டு.—(நோற்றேனித்யாதி.) "பிறர்க்கேயுழைத்தேழையானேன்" என்றிருக்கிற நீர் திருமலையளவும் வந்து சரணம் புகுருகைக்கு நிதாநம்சொ[நடி ல்லிக்காணீரென்ன ; நான் ஸம்ஸாரத்தைப் பெருக்கிக் கொள்ளச்செய்தே நீ சில ஸுக்ருதவிசேஷங்களைக் கதிர்பொறுக்கிக் கடாக்ஷித்தாயாக வேணுமென்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

"உன்னைக்காண்பதோ ராசையினால் - பல்பிறவி - நோற்றேன்" என்று யதா ச்ருதத்திலே தாம் ஸாதநாநுஷ்டாநம் பண்ணினமை தோற்றுகையால், அங் [நடு நனேயானால், "இடருற்றனன்" "ஆற்றேன் வந்தடைந்தேன்" என்கிற மேலிற்படி கள் சேராமையால், (பல்பிறவி) என்றவநந்தரம்,உண்டாம்படி என்று அத்யாஹ ரித்து அர்த்தமருளிச்செய்கிறார் (எனக்கித்யாதி.) "ஏற்றேன்" என்றதினர்த்தம் (யோ க்யனானேனென்றது.) "ஏல்" என்று - தகுதியாய், அத்தாலே ஃலித்ததுஇவ்வர்த்தம் நான்யாத்ருச்சிகாதிகளைத்திரட்டிக்கொண்டதுநீரறிந்ததெத்தாலே யென்னும்[சயி ஹமவதிஅபிப்ராயத்தை யருளிச்செய்கிறார் (நீரித்யாதி.)

மூ.—பற்றேலொன்றுமிலேன்; பாவமேசெய்து பாவியானேன்;
மற்றேலொன்றறியேன்;மாயனே!யெங்கள்மாதவனே!
கற்றேன் பாய்ந்தொழுகும் கமலச்சுனைவேங்கடவா!
அற்றேன்வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. கூ.

ப-ரை.—மாயனே - ஆச்சர்ய குணசேஷ்டிதங்களை யுடையனாய், எங்கள் - ஆச்ரிதரான எங்களுடைய குற்றங்களைப் பொறுப்பிக்கும், மாதவனே - பெரிய பிராட்டியாரைத் திருமார்விலேயுடையனாய், கல் - மலைக்குகையிலே யிட்ட, தேன் - தேனானது, பாய்ந்து - மிக்கு, ஒழுகும் - வெள்ளமிடாநிற்பதாய், கமலம்-தாமரைகள் நிறைந்த, சுனை-அருவிகளையுடைய, வேங்கடவா - திருமலையில் நித்[ய]யவாஸம் பண்ணுமவனே!, உன்னையொழியப் புறம்பொருவிஷயத்திலும், ஒன்றும் - ஏகதேசமும், பற்று - ஸங்கம், இலேன் - இல்லாதவனாய், பாவமேசெய்து - பாபத்தையேபண்ணி, அத்தாலே, பாவியானேன் - பாபிஷ்டனாய், மற்று - உபாயாந்தரத்தை, ஒன்றும் - ஏகதேசமும், அறியேன் - அறியாதவனான அடியேன்; அற்றேன்-தேவரீருக்கேஅற்றுத்தீர்ந்தவனாய்,வந்துஅடைந்தேன்—;அடியேனை [டிரு]ஆள்கொண்டருள்—. ... ... ... ... ... (கூ)

(அடியேனை யித்யாதி) எனக்காற்றாமையுண்டானால் பிறப்பே யாற்றாமையுடைய வுன்னை, என் ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைத் தரவேணுமென்று ப்ரார்த்திக்க வேண்டுகிறதென்? நான் ஆற்றாமை யுடையேனா யிருந்தேன்; ஆற்றாமை பிறப்ப தெப்போ [உய]தோ! என்று பார்த்துநிற்குமவனாயிருந்தாய் நீ. ... ... அ.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு.—(பற்றேலொன்றுமிலேன்) ஸமவத் ஸம்பந்தத்தை யறுத்துக்கொண்டு கைகழியப்போன வஸ்துவுக்கு ஸமவத் ப்ராப்திக் கிடாகச் சொல்லலாவ தொருஸுக்ருத மில்லை; அதில்லாமையாலே, பாபங்களையேபண்ணி, பின்னை நிரூபிக்குமிடத்தில் ஜ்ஞாநாநந்தாதிகளை யொழிய பாபங்களையிட்டு நிரூபிக்க வேண்டும்படியானேன். (மற்றேலொன்றறியேன்) ப்ராப்திக்கிடான வுபாய

நான்ப்ரார்த்திக்கைமிகை யென்னுமத்தை யறிந்தே, என்செல்லாமையாலே ப்ரார்த்திக்கிறே னென்னுமுட்கருத்தை யருளிச்செய்கிறார் (எனக்கித்யாதி.) விவரணம் (நானாற்றாமை யித்யாதி.) (இருந்தாய்நீ) என்ற வநுஸாரம் [நடய] இங்ஙனே யிருக்கச்செய்தேயும் ப்ரார்த்திக்கிறே னென்கிறார் என்று பூரிப்பது. அ.

ஒன்பதாம்பாட்டு.—(பற்றேலித்யாதி.) யாத்ருச்சிக ஸுக்ருத மடியாக நாமே யுமக்கு ஸம்ஸாரத்தில்பொருந்தாமையைப் பிறப்பித்தோமாகில்இனிஅபேக்ஷித ஸித்திக்குடலான ஸாதநத்திலே நீரிழிகிறீர், அதுக்கு நம்மைச் சரணம்புகுருவானென்னென்ன;கார்யபலத்தாலேயொருநன்மைஸம்பாவிதமாகச் சொன்னே[நடு]ஸித்தனைபோக்கி என்னைப்பார்த்தா லொரு நன்மையுண்டாக ஸம்பாவிதமோ என்று நின்றுகொண்டு, திருவயோத்யைக்குப் போகச்சொன்ன பெருமானை "ஸஹ ராதுஸ்வயனைஸ ஸம நிவேத்ய ரவுநந்தந:|ஸீதாமுவ ஸாதியஸாராவஸுமஹாவ்ரதம்" என்று பிராட்டியை முன்னிட்டு சரணம்புகுந்த இளையபெருமாளைப்போலே, * அலர்மேல்மங்கை யுறை மார்வனைச் சரணம் புகுகிறேனென்று ஸங்கதி [சய]கண்டுகொள்வது.

"பற்றேல்" என்றது-பற்றுகிலேன்றாய், அதுக்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸமவதித்யாதி.)

மூ.—கண்ணாயேழுலகுக்குயிராய வெங்கார்வண்ணனை
விண்ணோர்தாம் பரவும் பொழில் வேங்கடவேதியனை,
திண்ணார்மாடங்கள்சூழ் திருமங்கையர்கோன் கலியன்-
பண்ணார் பாடல் பத்தும் பயில்வார்க்கில்லை பாவங்களே. ம.

ப-ரை.—ஏழுலகுக்கு - ஏழுலோகங்களுக்கு, கண்ணாய் - கண்போலேயும்,உயிராய - ப்ராணன்போலேயு மிருக்குமவனாய், எம் - ஆஸ்ரிதரான எங்களை அநுபவிப்பிக்கைக்கு,கார் - மேகம்போலே கறுத்த,வண்ணன்- திருநிறத்தையுடையனாய், ஸம்ஸாரிகளேயன்றியே, விண்ணோர்தாம் - நித்யஸூரிகளுங்கூட, பரவும் - ஸ்துதிப்பதாய், பொழில் - சோலைகளையுடைய, வேங்கடம் - திருமலையை யிருப்பிட [ம மாக வுடையனாய், வேதியனை - வேதத்தாலே சொல்லப்படு மவனான ஸர்வேச்வரன் விஷயமாக, திண்ஆர் - திண்மையை உடைத்தாய், மாடங்கள் சூழ் - மாடங்களாலே சூழப்பட்ட, திருமங்கையர் - திருமங்கையிலுள்ளார்க்கு, கோன் - ராஜாவான, கலியன் - ஆழ்வார், பண்ஆர் - ஒலியுடைத்தாம்படி அருளிச்செய்த, பத்துப்பாடலும் - பத்துப்பாட்டுக்களையும், பயில்வார்க்கு - அப்யஸிக்குமவர்களுக்கு, பாவங்கள் - எம்பெருமானைக் கிட்டுகைக்கு ப்ரதிபந்தகமாயுள்ள எல்லா பாபங்களும், இல்லை - "தீயினில் தூசாகும்" என்கிறபடியே விட்டோடிப்போம் என்று நிகமிக்கிறார். ... ... ... ... ... (ம)

விஷயஜ்ஞாநமில்லை; "அஹமஸ்ம்யபராதாநா மாலய:." (மாயனே) இங்ஙனேயிருந்துள்ளவர்களையும் ரக்ஷிக்கைக்கீடான ஆஸ்வர்யஸக்தியுக்தனே. (எங்கள்மாதவனே) இப்படியிருப்பாருடைய குற்றங்களையும் பொறுப்பித்து ரக்ஷிக்கைக்கடியான பிராட்டியை யுடையையாய் அத்தாலே ஸர்வாபாஸ்ரயபூதனானவனே.

(கல்தேனித்யாதி) முழஞ்சுகளிலே வைத்த தேன்களானவை நிறைந்து வழிந்து வெள்ளமிட்டு ஒழுகிவந்து சுனைகளிலே புகுர,[உரு அங்கே தாமரைகள்அலருமாய்த்து.(அற்றேன்)தேவர்திருவடிகளிலே வ்யவஸிதனானேன். (அடியேனை யாட்கொண்டருளே) எனக்குப் புறம்பு பற்றில்லை என்றேனே,எனக்குப்பற்றான நீ லக்ஷ்மீபதியாயிருந்தாயே, ஆனபின்பு, என்னுடைய ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைக் கொண்டருளவேணும். ... ... ... கூ

வ்யா.—பத்தாம்பாட்டு.—(கண்ணாயித்யாதி) ஸகலலோகங்களுக்கும் த்ருஷ்டிபூதனாய், ஸத்தாஹேதுவான ப்ராணனாய், அதுக்கு மேலே என்னையநுபவிப்பிக்கைக்காக மேவம்போலேஸ்ரமஹரமான வடிவை யுடையனாய், ஏழுலகத்துள்ளாரோபாதி நித்யஸூரிகளுமொருமூலையிலே புகுந்தேத்துகிற திருமலையை வாஸஸ்தாந [ருரு மாக வுடைய வேதைகஸமதிகம்யனை யாய்த்துக் கவிபாடிற்று.

உக்தார்த்தே ப்ரமாணம் (அஹமித்யாதி) "அஹமஸ்ம்யபராதாநா மாலயோ கிஞ்சநோகதி: | த்வமேவோபாயபூதோமே ஹவேதி ப்ரார்த்தநாமதி: | ஸரணாகதிரித்யுக்தா ஸாதேவேஸ்மிந் ப்ரயுஜ்யதாம்."

பாட்டெல்லாம் கடாக்ஷித்துத் தாத்பர்யம் (எனக்கித்யாதி.) ... க.

பத்தாம்பாட்டு.—(கண்ணாயித்யாதி.) "ஏழுலகுக்கு - கண்ணாய்" என்றதுவயித்தார்த்யம் (ஸகலேத்யாதி.)

(திண்ணார்) "ஸர்வஜ்ஞகுஶலம்ஜ்ஹோ" என்னும்படியாய்த்து. (பண்ணார் பாடல்) பண் மிகுந்திருக்குமாய்த்து ; இவற்றை அப்யஸிப்பார்க்கு ஒருபாபங்களும்வந்துகிட்டாது. பகவத்ப்ராப்திக்கு ப்ரதிபந்தகங்க ளடங்க வோடிப்போம். "பாவமேசெய்து பாவியானேன்" என்று [ரு இவரும் சொல்லி ஈஶ்வரனும் அத்தைப்பொறுத்தபின்பு இவருக்கு பாபமில்லையே. ஸ்ரீவிபீஷணாழ்வானை "வத்யதாம்" என்றபோது, அது க்கு விஷயமானார் கூடவந்த நால்வரும் பின்னை அவத்யரானார்கள் ; அப்படியே, இவருடைய பரிகரமாய்இவருடையப்ரபந்தத்தைஅபி கரிக்கவே, இவர்கள் பாபங்களைப் போக்குமாய்த்து.ஈஶ்வரனுக்குத்[ம் தம் வ்யுத்தஹாநியைச் சொல்லிவைத்து, அநந்தரம் "அடைந்தே ன்" என்றதுக்குக் கருத்தென்னென்னில் ; அதுசொன்னால் அவ னிரக்கத்துக்கடியாமே, அவ்விரக்கம் ஸ்வரூபாநுரூபமான கைங்கர்ய த்துக்குடலாம். ... ... ... ... ... ௰

அடிவரவு.—தாய் மான் கொன்றேன் குலம் எப்பாவம் மண் தெரி நோற்று பற்றேல் கண்ணாய் கண்.

திருமங்கையாழ்வார்திருவடிகளேசரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

இப்போது, "திண்ணார்மாடம்" என்கைக்குத் தாத்பர்யம் (ஸர்வமித் யாதி) "பங்கதிம்ஸ்துஜடிலோ ஹரதஸ்த்வாம் ப்ரதீக்ஷதே|பாதுகேதே புரஸ்[உம் க்ருத்ய ஸர்வஜ்ஞ குஶலம்ஜ்ஹோ." ஸ்ரீபரதாழ்வானார்த்தி கண்டு பெருமா ளை மூர்தருளுவரென்றுநிர்ணயித்துஎல்லாரும்தேறிக்களித்திருந்தாப்போலே, ஆழ்வா ரார்த்திகண்டுதிருவேங்கடமுடையான்ப்ரஸந்நராகக்கடவரென்றுதேறிதிருமங்கை யிலுள்ளார் களித்தார்களென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம். "திண்ணார்" என்றது - * திருமங்கைக்கு விசேஷணம். ஆழ்வார்தாம்"பாவியேன்" என்றன்றோ சொன்னார், அவர்ஸம்பந்தங்கொண்டு இவர்கள்பாபங்கள் போம்படி யென் னென்ன வருளிச்செய்கிறார் (பாவமேயித்யாதி.) இதுக்கு த்ருஷ்டாந்தம் (ஸ்ரீ விபீஷணேத்யாதி.)"வத்யதாமேஷ தீவ்ரேண தண்டேந ஸசிவைஸ்ஸஹ|ராவணஸ்ய ந்ருஶம்ஸஸ்ய ப்ராதாஹ்யேஷ விபீஷண:." ... ... ... ௰.

ஜீயர்திருவடிகளேசரணம்.

முதற்பத்து - ஒன்பதாந்திருமெழி ஸம்பூர்ணம்.

ஆக, திருமொழி - ௯ - க்கு, பாட்டு - ௯௰.

## முதற்பத்து - பத்தாந்திருமொழி - கண்ணார். ப்ரவேசம்.

வ்யா.—தம்முடைய வெறுமையைச்சொல்லி கைங்கர்ய லாபத்துக்காக சரணம்புக்கார்; பாஷ்யகாரர் சரணம்புக்க வநந்தரம், "ஸ்வரூபஸங்கோசரூபையான ப்ரக்ருதியைக்கழித்துத் தரவேணும், [௫] அஹங்கார மமகாரங்களைக் கழித்துத்தரவேணும், விரோதியைப் போக்கித்தரவேணும், பரபக்த்யாதிகளைப்பிறப்பிக்கவேணும்" என்று அபேக்ஷித்தாப்போலே, விரோதிநிரஸநசீலனாய்ஸர்வரக்ஷகனாய் ஆஸ்ரிதஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தாலல்லது தரியாதானாய் ஆஸ்ரிதஸம்ச்லேஷைகஸ்வபாவனாய் ஸர்வஸுலபனாயுள்ள ஸர்வேச்வரனை, "என்னுடைய விரோதியைப் போக்கித்தரவேணும், உன்னையல்லது செல்லாமையை ப்பிறப்பிக்கவேணும்" என்றபேக்ஷிக்க; உம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களையும் செய்கைக்கன்றோ நாமிங்கே வந்து நிற்கிறது என்று திருமலையில் நிலையைக்காட்டி, அநந்தரம் இவர்திருவுள்ளத்திலே வந்து இவர்க்குபரபக்த்யாதிகளைப் பிறப்பித்தானென்கிறது - இத்திருமொழியில். ப்ரபந்நனுக்குமுண்டு பக்தி, பக்திமானாகிற அதிகாரிக்குமுண்டு; "நமஸ்யந்தச்சமாம் நித்யம்" என்று இரண்டிடத்திலும் சொல்லாநின்றதிறே. ... ... ... ... ✻

---

அ.—கண்ணார் கடல்சூழ் ப்ரவேசம்.—கீழ்த்திருமொழியில் - இஷ்டப்ராப்தியை அர்த்தித்தார்; இதில் - அநிஷ்டநிவ்ருத்தியை ப்ரார்த்திக்கிறாரென்று ஸங்கதி [௨௰] யருளிச்செய்கிறார் (தம்முடைய வித்யாதி.) (புக்கார்) என்றவநந்தரம், விரோதிநிவ்ருத்தியை ப்ரார்த்திக்கிறா ரிதில் என்று சேஷம். இஷ்டப்ரார்த்தனையிலே தானே அநிஷ்டநிவ்ருத்தி ஸித்தியாதோ, தனித்தும் ப்ரார்த்திக்க வேணுமோவென்ன; தத்த்ருஷ்டாந்த கத்யமுகேந விஸ்தரமாக ப்ரமேயத்தையு மருளிச்செய்கிறார் (பாஷ்யேத்யாதி.) "மதீயாநாதிகர்மப்ரவாஹப்ரவ்ருத்தாம்" என்றசூர்ணிகை [௨௫] யினர்த்தம் (ஸ்வஸ்வரூபேத்யாதி.) இதுக்குக் கீழ் "அநாதிகால" இத்யாதி சூர்ணையில் ப்ரமேயம் (அஹங்காரேத்யாதி.) இதுக்கும் பூர்வமான "மநோவாக்காயை:" இத்யாதி சூர்ணிகாபலிதார்த்தம் (விரோதியைப்போக்கித்தரவேணுமென்றது.) இங்கே வ்யுத்க்ரம மாக வெடுத்ததுக்குக் கருத்து - ப்ரக்ருதி வச்யதையாலே அஹங்கார மமகாரங்களும் அவற்றாலே பகவதபசாராதிகளும் பிறக்குமென் [௩௰] கிற க்ரமந்தோற்றவேணுமென்கை. பரபக்த்யாதிகளைப்பிறப்பிக்கவேணுமென்றது- இவையில்லாமையும் கைங்கர்ய விரோதியாகையாலே; ஆகையிறே, ப்ரத்யுக்திரூபமான பகவதுக்த்யநுவாதத்திலே "பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி விக்ந ப்ரதிஹதோபி" என்று விரோதித்வந்தோற்ற வருளிச்செய்தது. ஸர்வரக்ஷகனென்றது-"நீரார்கடலும்" என்றபாட்டைக் கடாக்ஷித்து. "உண்டாயுறிமேல்" [௩௫] என்றபாட்டின் ப்ரமேயம் (ஆச்ரிதேத்யாதி.) "மானேய் மடநோக்கி" என்ற பாட்டைப்பற்ற (ஆச்ரிதஸம்ச்லேஷேத்யாதி) "கோனைகளையாய்" என்றத்தைப் பற்றவாதல். "எங்கள்நம்பீ" என்றத்தைப்பற்ற (ஸர்வஸுலபனென்றது.) நிலையை க்காட்டி யென்றது - ஸ்ரீஹஸ்தமுத்ரையாலே காட்டினமையைப்பற்ற. "என்னெஞ்சினுளான்" என்றத்தைப்பற்ற (திருவுள்ளத்திலேவந்தென்றது.) "ஆயனடி [௪௰] யல்லது மற்றறியேனே" என்கையைத் திருவுள்ளம்பற்றி (பரபக்த்யாதிகளை ப்பிறப்பித்தானென்றது.) உபாஸகனுக்கன்றோ பக்தி, ப்ரபந்நனுக்கும் வேணுமோ வென்ன வருளிச்செய்கிறார் (ப்ரபந்நனுக்கு மித்யாதி.) "ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தச்ச த்ருடவ்ரதா: | நமஸ்யந்தச்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே." "நமஸ்யந்தச்ச" என்றது - ப்ரபத்திபரமாகவுஞ் சொல்லுகிறது. ... ✻

மூ.—கண்ணார்கடல்சூழிலங்கைக்கிறைவன்றன்
திண்ணாகம்பிளக்கச் சரஞ்செலவுய்த்தாய்!
விண்ணோர்தொழும் வேங்கடமாமலைமேய
அண்ணா! அடியேனிடரைக்களையாயே. ... ... க.

ப-ரை.—கண் ஆர் - இடமுடைத்தான, கடல்சூழ் - ஸமுத்ரத்தாலே சூழப்பட்ட, இலங்கைக்கு - லங்கைக்கு, இறைவன்றன் - தலைவனான ராவணனுடைய, திண் - வரத்தாலே பூண்கட்டின, ஆகம்- சரீரமானது,பிளக்க - பிளக்கும்படியாக, சரம் - அம்புகள்,செல - செல்லும்படி, உய்த்தாய் - நடத்தினவனாய்,விண்ணோர் - ப்ரஹ்மாதி தேவதைகள், தொழும்-ஆச்ரயிக்கும்படி, மா - பெருமைபொருந்திய,வேங்கடம் - திருமலையிலே,மேய - நித்யவாஸம் பண்ணுமவனாய்,அண்ணா- ஸர்வவித பந்துவுமானவனே !, அடியேன் - சேஷபூதனான என்னுடைய, இடரை - க்லேசத்தை, களையாய் - போக்கியருளவேணுமென்று சரணம் புகுகிறார். ... (க)

வ்யா.— முதற்பாட்டு.—(கண்ணார்கடல்)கண்ணென்று – இடம். இடம்மிக்கிருந்துள்ளகடல். பூமியில் வர்த்திக்கும் பதார்த்தங்களிலு மேற்றமுண்டிறே கடலில் வர்த்திக்குமவை ; அவற்றுக் கெல்லாம் வேண்டுமிடம் போந்திருக்கும். அன்றிக்கே, வைத்த கண் வாங்க வொண்ணாதபடி தர்சநீயமான கடலென்னவுமாம். அக்கடலை அகழாக வுடைத்தாகையாலே அரணுடைத்தா யிருக்கிற லங்கைக்கு நிர்வாஹகனாய், அத்தாலே அபிமாநித்திருக்கிற ராவணனுடைய. (திண்ணாகமித்யாதி) ப்ரஹ்மாஸ்த்ராதிகள் வாய்மடியும்படி தேவதைகள் வரத்தாலே திண்ணிதான உடலானது பிளக்கும்படியாக அம்புசெல்லும்படியாக நடத்தினாய். (விண்ணோரித்யாதி) ராவணனாலே குடியிருப்பிழந்த தேவதைகள் இப்போதுவந்தாச்ரயிப்பர்களாய்த்து.ப்ரஹ்மாதிகளாச்ரயிக்கும்ஸ்வபாவனாய்திருமலையைவாஸஸ்தானமாகக்கொண்டு ஸந்நிதிபண்ணின நிருபாதிகபந்துவே. (அடியேனித்யாதி) இங்குத்தை யிருப்பு இடரென்றுஎன்நெஞ்சிற் பட்ட பின்பு என் கைங்கர்யவிரோதியைப் போக்கியருளவேணும். ... க.

அ.—இரண்டாம்பாட்டு.—ஆக, கீழ்ப்பாட்டிலும் இப்பாட்டிலும்–அவனுடைய விரோதிநிரஸநசீலதையைச் சொல்லி, என்னுடைய து:க்கத்தைப் போக்கித் தரவேணு மென்கிறார்.

முதற்பாட்டு.—( கண்ணாரித்யாதி. ) அபார பாபஸாகரமத்யே * புண்ணாராக்கையாகிற லங்கையிலே அநர்த்தார்ஹனானவடியேன் அகப்பட்டு, "நநமேயம்" என்கிற ஸ்வாதந்த்ர்யாபிமாந விசிஷ்டமான மநஸ்ஸாலே அபஹ்ருதனாய்க்கிடக்கிற வடியேனிடரைக் களையவேணுமென்கிறாரென்று அவதாரிகை கண்டுகொள்வது. "இந்த்ரியாணாம் வோரம் யோமநோராஜநீசரம் | விவேகசரஜாலேந சமம்நயதி யோகிநாம்" என்னக்கடவதிறே.

"தன்" என்றதினர்த்தம் (அபிமாநித்திருக்கிற வென்றது.) "தன்" என்றத்தாலே - அவன்மதிப்புத் தோற்றுகிறதிறே. ஸமுதிவ்யாஹார தாத்பர்யம் (ராவணனாலே யித்யாதி.) ... ... ... ... ... ... ... க

இரண்டாம்பாட்டு.—( இலங்கையித்யாதி. ) அநாத்யவித்யாகர்ம வாஸநா நிவ்ருத்திகளையும் பண்ணித்தரவேணு மென்கிறாரென்று விவக்ஷித்து, ஆகஇரண்டு பாட்டுக்கும் ஸமுதாயேந க்ரோடீகரித்து அவதாரிகை யிடுகிறார் (ஆகவித்யாதி.)

மூ.—இலங்கைப்பதிக் கன்றிறையாயவரக்கர்
குலங்கெட்டவர்மாளக் கொடிப்புள் திரித்தாய்!
விலங்கற்குடுமித்திருவேங்கடம் மேய
அலங்கல்துளபமுடியா யருளாயே. ... ... உ

ப-ரை.—அன்று - முற்காலத்திலே, இலங்கைப்பதிக்கு - லங்காநகரத்துக்கு, இறையாய - ராஜாக்களாயிருந்து அரசாண்டவர்களாய், அரக்கர்குலம்-ராக்ஷஸஜாதியராய், அவர் - "நம்மைவெல்லவல்லாரில்லை" என்று செருக்கித்திரிந்த மாலிமுதலியராக்ஷஸர்கள், கெட்டு - தங்கள் நிலைமைகெட்டு, மாள - பாதாளலோகத்திற்புக்கு ஒளிக்கும்படியாக,புள்கொடி - கருடத்வஜத்தை, திரித்தாய் - சுழ [ய
ற்றிக்கொடு திரிந்தவனாய், விலங்கல் - சந்த்ரஸூர்யர்கள், விலகிப்போக வேண்டும்படி வுயர்ந்திருப்பதான, குடுமி - கொடுமுடியை யுடைத்தாய், திருவேங்கடம் - திருவேங்கட மென்னும் பேரையுடைய திருமலையிலே, மேய - நித்யவாஸம் பண்ணுமவனாய், துளபம் - திருத்துழாயாலாகிய, அலங்கல் - மாலையாலே அலங்கரிக்கப்பட்ட, முடியாய்-திருவபிஷேகத்தை யுடையவனே!, அருளாய்-[யரு
அடியேன்பக்கல் க்ருபைசெய்து ரக்ஷித்தருளவேணுமென்கிறார். ... ... (உ)

வ்யா.—(இலங்கைப்பதிக்கித்யாதி) ராவணனுக்கு முன்பு குடியிருந்துபோந்த மாலி ப்ரப்ருதிகளை நிரஸித்தபடியைச் சொல்லுகிறது. புற்றானது என்றும் துஷ்டஸர்ப்பங்கள் மாறாதே போருமாப்போலே, என்றுமொக்க ராக்ஷஸருக்குக் குடியிருப்பாயே யா [உய
ய்த்துப் போருவது. (குலங்கெட் டவர் மாள) பாதாளத்திலே புக்கொளிப்பாரும் பட்டுப்போவாருமாம்படி த்வஜமான பெரியதிருவடியைச் சுழற்றிக்கொடுதிரிந்தவனே. "கீர்த்திஸ்துதாம்பதாகாம் யோலோகே ப்ராமயதி ப்ரபு:."

(விலங்கலித்யாதி)திருவேங்கடமென்றுதிருமலைக்குப்பே[உரு
ருண்டாகையாலே, தன்மேலே ஸஞ்சரிக்கிற சந்த்ராதித்யர்களுக்கு நேர்கொடுநேர் போகவொண்ணாதே விலங்கிப்போக வேண்டும்படி ஓங்கின ஶிகரத்தையுடைய. ( அலங்கலித்யாதி ) ரக்ஷணத்துக்கு மாலையிட்டு முடிசூடி யிருக்கிற நீ இனி என்விரோதியைப்போக்குகை யென்றொன்றில்லை, என்பக்கலிலே க்ருபையைப் பண்ணி [ஙய
யருளவேணும். ... ... ... ... ... உ.

இலங்கையாகிற பதிக்கு - ஸ்தானத்துக்கு என்றும் நியமேந "இறையாயவரக்கர்" என்கைக்கு ராக்ஷஸரே ராஜாக்களாகவேணுமோ வென்ன வருளிச்செய்கிறார் (புற்றானதித்யாதி.) இத்தால் - ப்ராக்ருதமான சரீரமானால் விரோதிவர்கம் குறைவற்றிருக்கு மென்றதாய்த்து. "கெட்டு" என்றதின் வாஸனை[ஙரு
(ஒளிப்பாருமென்றது.) சுழற்றிக்கொடு - அதிலே யேறிச்சுழற்றிக்கொண்டு.

"விலங்கல்" என்று - பர்வதத்துக்கும் பேராகையாலே, "திருவேங்கடம்" என்றத்தோடு பௌநருக்த்யம் வருமென்று, விலங்குதலை யிங்குச்சொல்லுகிற தென்கிறார் (திருவேங்கட மித்யாதி.) விரோதியைப்போக்குகை யென்றொன்றில்லை யென்றது - ஸவாஹநனாய் வந்து நிரஸிக்கும்படி எதிரம்புகோ[சய
த்த விரோதி யுண்டாய்ப் போக்கவேண்டுவதில்லை யென்கை. அருளவே உருமாயுமவைகிடீர் என் விரோதிகளென்று திருவுள்ளம். ... ... உ.

மூ.—நீரார் கடலும் நிலனும்முழுதுண்டு
ஏராலமிளந்தளிர்மேல்துயிலெந்தாய் !
சீரார் திருவேங்கடமாமலை மேய
ஆராவமுதே! அடியேற்கருளாயே. ... ... ... ௩.

ப-ரை.—நீர்ஆர் - ஜலம் நிரம்பியிருக்கிற, கடலும் - ஸமுத்ரத்தையும், நில னும் - பூமியையும், முழுது - மற்றுமுள்ள எல்லாப்பொருள்களையும், உண்டு - அமுதுசெய்து, ஒன்றும் செய்யாதாரைப்போலே, ஏர் - அழகியதாய், இளம் - மிகவும்இளையதான, ஆலந்தளிர்மேல் - ஆலந்தளிரிலே, துயில் - கண்வளர்ந்த ருளினவனாய், அத்தாலே, எந்தாய் - என்போல்வார்க்கு ரக்ஷகனாயிருக்கு மவ[ம] னாய், சீர்ஆர் - ஐச்வர்யம் மிக்கிருப்பதாய், மா - பெருமைபொருந்திய, திரு வேங்கடமலை - திருமலையிலே,மேய -நித்யவாஸம்பண்ணுமவனாய்,காலமுள்ளதனை யும் அநுபவித்தாலும், ஆரா-த்ருப்திபிறவாத, அமுதே-அம்ருதம்போலே போக்ய னானவனே!, அடியேற்கு - சேஷபூதனான அடியேனை, அருளாய் - இப்போக்ய த்தையை அநுபவிப்பிக்கவேணுமென்கிறார். ... ... ... (௩)

அ.—மூன்றாம்பாட்டு.—(நீராரித்யாதி) ஸர்வரக்ஷகனாய் ஸூமி க்காக நிர்வாஹகனா யிருந்தபடியைச் சொல்லுகிறது.

வ்யா.—(நீராரித்யாதி) ஜலராஸியையுடைய கடலும், அதுக்கு உட்பட்டஸூமியும், இத்தையுடைய வயிற்றிலே வைத்து. (ஏரி த்யாதி) கண்வளர்ந்தருளுகைக்கிடான அழகை யுடைய ஆலின் [உம] முகிழ்விரிந்தவளவான தளிரிலே கண்வளர்ந்து,அந்தஅவடிதவடநா ஸாமர்த்யத்தைக் காட்டி யென்னை அநந்யார்ஹ னாக்கினவனே. (சீ ராரித்யாதி) பரமபதத்திற்காட்டிலும் ஐஶ்வர்யம் மிக்குப் போலே காணும் திருமலையிருப்பது. (ஆராவமுதே) இவ்வம்ருதம் ஸ்வர்க த்திலல்லபோலேகாணு மிருப்பது.(அடியேற்கு) இதுவேஹோந்[உரு] யமென்றிருக்கிற வென்னை இத்தையநுபவிப்பித்தருளவேணும். ௩.

வ்யா.—நாலாம்பாட்டு.—(உண்டாயித்யாதி) ஆஶ்ரித ஸ்பர்ஶமு ள்ள த்ரவ்யத்தா லல்லது யரியாதானாய், அவர்களுக்குத்தன்னைப் பே ணாதே கார்யம் செய்யும்படி சொல்லுகிறது. உறிகளிலே சேமித்து வைத்த நறுநெய்யை அம்ருதமாக ஸ்வீகரித்தாய்.

---

மூன்றாம்பாட்டு.—(நீரார்கடலுமித்யாதி.) ஒருகடலுக்குட்பட்ட லங்கையில் விரோதிகளை நிரஸநம்பண்ணின வளவேயோ, கடல்களையும் ஸூமியையும் ரக்ஷி த்திலையோ வென்கிறாரென்று ஸங்கதியருளிச்செய்கிறார் (ஸர்வேத்யாதி.)

"ஆரா" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (இவ்வம்ருதமித் யாதி.) "திருவேங்கடம் மேய" என்ற ஸமஹிவ்யாஹார ஸித்யமாகவுமாம். ௩.

நாலாம்பாட்டு.—(உண்டாயித்யாதி.) மண்ணையுண்ட பிள்ளைக்கும் வெண்ணெ யுண்டபிள்ளைக்கும் மண்ணையளந்த மாணிக்குமுள்ள ஸாயர்ம்யத்தாலே அத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

அவர்களுக்கு - இத்ராதிகளுக்கு. * வெண்ணெயுண்ட வாயனுக்குறுப்பாக வாதல், மண்ணைக்கொண்ட காலனுக்குறுப்பாகவாதல்.

மூ.—உண்டாயுறிமேல் நறுநெய்யமுதாக;
கொண்டாய் குறளாய் நிலமீரடியாலே;
விண்டோய்சிகரத்திருவேங்கடம் மேய
அண்டா! அடியேனுக் கருள்புரியாயே. ... ... ச.

தேதி...... 49, பெரி[illegible] [illegible]மட[illegible]

ப-ரை.—ஆஶ்ரிதஸுலபனான க்ர்ஷ்ணனாய் திருவவதரித்து, உறிமேல் - உறிகளிலே சேமித்து வைத்த, நறு - நல்ல, நெய் - நெய்யை, அமுதாக - அம்ர்தமாகக்கொண்டு, உண்டாய் - அமுதுசெய்தருளினவனாய், ஆஶ்ரிதரான இந்த்ராதிதேவர்கள் கார்யம் செய்கைக்காக, குறளாய் - வாமநாவதாரம் செய்தருளி, மஹாபலியிடத்தில் நீரேற்றுப்பெற்ற, நிலம் - பூமியை, ஈரடியாலே - இரண்டடியாலே, கொண்டாய் - அளந்து கொண்டவனாய், விண்தோய் - பரமபதத்தளவும் செல்லவோங்கின, சிகரம் - கொடுமுடியையுடைய, திருவேங்கடம் - திருமலையிலே, மேய - பொருந்தி யிருக்குமவனாய், அண்டா - அண்டாந்தர்வர்த்திகளான தேவர்களுக்கு நிர்வாஹகனானவனே, அடியேனுக்கு - ஶேஷபூதனான வெனக்கு, அருள்புரியாய் - உன்கைங்கர்யத்தை க்ர்பைசெய்தருளவேணு மென்கிறார். (ச)

(கொண்டாயித்யாதி) ஸர்வாதிகனான நீ வாமநவேஷத்தை பரிக்ரஹித்து, பரப்புடைத்தான பூமியை யிரண்டடியாலேகொண்டாய். (விண்டோயித்யாதி) பரமபதத்தளவும்செல்லவோங்கினஶிகரத்தையுடைய திருமலையிலே பொருந்தி நிற்கிறவனே. (அண்டா) இடையனே. அன்றிக்கே, அண்டாந்தர்வர்த்திகளுக்கு நிர்வாஹகனானவனே. (அடியேனுக்கித்யாதி) யஶோதைப்பிராட்டியும் இந்த்ரனும் பெற்ற பேற்றினையல்லாத என்னுடைய கைங்கர்யத்தைத் தந்தருளவேணும். ச.

அ.—அஞ்சாம்பாட்டு.—(தூணாயித்யாதி) இனி இரண்டுபாட்டாலே - தமக்கு உபகரிக்க வொருப்பட்டபடி சொல்லுகிறாராய், அதுக்குறுப்பாகத் திருமலையிலே வந்து நின்றபடியைச் சொல்லி, அநந்தரம் திருவுள்ளத்திற்புகுந்தபடியைச் சொல்லுகிறார்.

வ்யா.—(தூணாய்) முன்பே நரஸிம்ஹத்தைவைத்துப் பண்ணிற்றென்ன வொண்ணுதாய்த்து. "அளந்திட்ட தூணை" என்றாரிறே.

"அண்டா" என்றதுக்கர்த்தமருளிச்செய்கிறார் (இடையனேயித்யாதி.) அருளாயேயென்னுதே, "அருள்புரியாயே" என்றத்தாலே-தாதவ்யத்தின்பெருமைதோற்றிற்றென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (யஶோதையித்யாதி.) (கைங்கர்யத்தை) என்றவநந்தரம், விரோதியைப்போக்கி என்று ஶேஷம். ... ... ... ச.

அஞ்சாம்பாட்டு.—(தூணாயித்யாதி.) வாமநாவதாரத்தைக் காட்டிலும் அத்புதமானவேஷங்கொண்ட முன்புத்தை நரஸிம்ஹத்தை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது. (இனி இரண்டுபாட்டாலே) என்ற வநந்தரம், திருவநந்தாழ்வானைப்போலே என்னை யடிமைகொண்டு கைங்கர்யங் கொண்டருளவேணுமென்று ப்ரார்த்திக்க அவன் என்று இவ்வளவும் கூட்டிக்கொள்வது. இங்ஙனம் கூட்டாவிடில், இப்பாட்டிலும் நெஞ்சில் புகுந்தபடி சொல்லாமையால் சேராதிறே. அதுக்கு - உபகரிக்கைக்கு.

"தூணாயதனூடு" என்றது- தூணேயாயிருக்கிறவதிலே யென்றர்த்தமாய், இப்படி விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் (முன்பேயித்யாதி.) தூணனமையில் புரையில்லையென்கைக்கு ஜ்ஞாபகமென்னென்ன வருளிச்செய்கிறார் (அளந்திட்டவித்யாதி.)

மூ.—தூணா யதனூ டரியாய் வந்துதோன்றி,
பேணாவவுணனுடலம் பிளந்திட்டாய்!
சேணார்திருவேங்கட மாமலைமேய
கோணாகணையாய்! குறிக்கொள்ளெனை நீயே. ... ... ௫

மூ.—மன்னா! இம்மனிசப் பிறவியைநீக்கித்
தன்னாக்கித் தன்னின்னருள் செய்யுந்தலைவன்,
மின்னார் முகில்சேர் திருவேங்கடம்மேய
என்னானையென்னப்ப ¶னென்னெஞ்சிலுளானே. ௬.

---

ப-ரை.—“முன்பே நரஸிம்ஹத்தை வைத்து நட்டதூண்” என்னவொண்ணாதபடி தானே தனக்குப் பொருத்தம்பார்த்து நட்ட, தூணாய் - வெறும்தூணாயிருக்கிற, அதனூடு - அதினுள்ளே, அரியாய் - நரஸிம்ஹமாய், வந்து தோன்றி - வந்தவதரித்து, “நமக்குமேலே ஸர்வேச்வர னொருவனுளன்” என்று, பேணா - மதியாத, அவுணன் - ஹிரண்யனுடைய, உடலம் - மார்பை, பிளந்திட்டாய் - இரு பிளவாகக் கிழித்துப்பொகட்டவனாய், சேண் ஆர் - மிக்கவுயர்த்தியை யுடைத்தாய், மா - பெருமை மிக்கிருந்துள்ள, திருவேங்கடமலை - திருமலையிலே, மேய - பொருந்தி வர்த்திப்பவனாய், கோள் - மிடுக்கையுடைய, நாகம் - திருவநந்தாழ்வானை, அணையாய் - திருப்பள்ளியாக வுடையவனே!, “சென்றால்குடையாம்” என்கிற படியே ஸகலவிதபரிசர்யைகளும்பண்ணும்படி, எனை - அடியேனை, நீ - தேவரீர், குறிக்கொள் - திருவுள்ளம்பற்றி யருளவேணும். ... ... (௫)

ப-ரை.—“மின்னில் நிலையில” என்கிறபடியே, மன்னா - நிலையில்லாத, இ - இந்த, மனிசப்பிறவியை - மநுஷ்யஜந்மத்தினின்றும், நீக்கி - விடுவித்து, தன் - தனக்கு, ஆக்கி - ஆளாக்கிக்கொண்டு, தன் - தன்னுடைய, இன் அருள் - பரமக்ருபையை, செய்யும் - பண்ணாநிற்கும், தலைவன் - தலைமையையுடையனாய், மின் - மின்னலாலே, ஆர் - நிறைந்திருந்துள்ள, முகில் - மேகங்களானவை, சேர் - திரண்டு வர்த்திக்கிற, திருவேங்கடம் - திருமலையிலே, மேய - பொருந்தி யிருப்பவனாய், என் - என்னை அநுபவிப்பிக்கைக்கு, ஆனை - ஆனைபோலே அழகிய வடிவை யுடையனாய், என் - எனக்கு, அப்பன் - மஹோபகாரகனானவன், என் - என்னுடைய, நெஞ்சிலே - மநஸ்ஸிலேயே, உளான் - நித்யவாஸம் பண்ணுகிறா னென்கிறார். (௬)

---

(அதனூடு) அதினுள்ளே, நரஸிம்ஹமாய்வந்து தோற்றி. (பேணாவவுணன்) ஸர்வேஸ்வரனைப் பேணாதொழிகையாவது – ஆஶ்ரிதரை நலிகையாய்த்து; “மமப்ராணாஹி” என்றானே. ஓக்கம் மிக்கிருக்கிற திருமலையிலே நிற்கிற. (கோளித்யாதி) மிடுக்கையுடைய திருவநந்தாழ்வானைப் படுக்கையாக வுடையவனே; “ப்ரக்லீஷ்ட விஜ்ஞாநபலைகயாமநி.” (குறிக்கொளித்யாதி) ப்ராப்தியொத்திருந்தபின்பு அவன்பெற்ற பேறு நானும் பெறுவேனாகத் திருவுள்ளம் பற்ற வேணும். ... ... ... ... ... ௫.

அ.—ஆறாம்பாட்டு.—உம்முடையபக்கல் விலக்காமைக்கு அவஸரம் பார்த்திருக்கிற நாம் உம்மை இரக்கவிட்டு வைப்புதோமோ என்று இசைவு பெற்றவாறே, நெஞ்சிலேவந்து புகுந்தான்.

---

அவன் பெற்றபேறு - திருவநந்தாழ்வான் பெற்றபேறு. ... ... ௫.

ஆறாம்பாட்டு.—(மன்னாவித்யாதி.) கீழ்ப்பாட்டில் “குறிக்கொள்” என்றவர், இப்பாட்டில் “என்னெஞ்சிலுளானே” என்று தம்மிலே அநுஸந்திக்கைக்கு ஸங்கதி யருளிச்செய்கிறார் (உம்முடையவித்யாதி.)

---

¶ “என்னெஞ்சினுளானே” என்றும்பாடம்காண்கிறது.

மூ.—மானேய்மடநோக்கிதிறத் தெதிர்வந்த
ஆனேழ்விடைசெற்ற வணிவரைத்தோளா!
தேனே! திருவேங்கடமாமலை மேய
கோனே! என்மனம் குடிகொண்டிருந்தாயே. எ.

ப-ரை.—மான் - மான்விழியை, ஏய் - ஒத்திருப்பதாய், மடம் - அழகிதா யிருந்துள்ள, நோக்கிதிறத்து - திருக்கண்களையுடையளான நப்பின்னைப்பிராட்டி விஷயமாக, எதிர்வந்த - பகைத்துவந்த, ஆன் - பசுக்களுக்குள்ளே இச்சைப்படி திரியவிட்ட, ஏழ்விடை - ஏழு ரிஷபங்களையும், செற்ற - கொன்று, அத்தாலே, அணி - அழகு மிக்கிருப்பதாய், வரை - மலைபோலே திண்ணிதான, தோளா - திருத்[டு] தோள்களை யுடையனாய், தேனே - எனக்குத் தேன்போலே யினியனாய், மா - பெருமைபொருந்திய, திருவேங்கடமலை - திருமலையிலே, மேய - பொருந்தி வர்த்திக்கிற, கோனே - என்னை யடிமைகொண்டவனே, என் - அடியேனுடைய, மனம் - மநஸ்ஸை, குடிகொண்டு - வாஸஸ்தாநமாகக்கொண்டு, இருந்தாய் - நிலைபெற்றிரா நின்றாயென்று உகந்தருளிச்செய்கிறார். ... ... ... (எ)

வ்யா.—(மன்னுவித்யாதி) அஸ்திரமான இம்மநுஷ்யஜந்மத்தில் நின்றுமென்னை நீக்கி. (தன்னுக்கி)(க)தன்னோடொக்கப் பண்ணியென்னுதல்; (உ)தனக்காக்கியென்னுதல். "நிரஞ்ஜந꞉ பரமம் ஸாம்யமுபைதி." (தன்னின்னருளித்யாதி) இவ்வளவும்செய்து பின்னையும் ஒன்றும் செய்யாதானாய் தன் பேறான வருளைப் பண்ணும் தலை [உ0 மையை யுடையவன். (மின்னுரித்யாதி) மேவமும் மின்னும் சேர்ந்தவிது, பிராட்டியும் அவனும் சேர்ந்தாப்போலேயாய்த் திருப்பது. (என்னுனை) ஸதாதர்ஶநீயனா யிருக்குமவன். (என்னப்பன்) எனக்கு மஹோபகாரகனானவன். உமக்குப் பண்ணின வுபகாரந்தா னென்னென்ன (என்நெஞ்சிலுளானே) என்நெஞ்சிலேவந்து புகுந்து [உரு போகமாட்டுகிறிலன். ... ... ... சு.

வ்யா.—ஏழாம்பாட்டு.—(மானேயித்யாதி) மானேய்ந்த நோக்கையுடையளா யிருக்கிற நப்பின்னைப்பிராட்டிக்கு ஸ்பர்ஹாவிஷயமாயிருக்கைக்காக. மானினுடைய நோக்குப்போலே முக்யமான நோக்கையுடையளாய், அவ்வளவன்றிக்கே முக்தையாயிருக்குமாய்த்து. [ங0 (எதிர்வந்த) பகைத்துவந்த ரிஷபங்களேழையு மழியச்செய்த.

"தன்னோடொக்கப்பண்ணி" என்றதுக்கு ப்ரமாணம் (நிரஞ்ஜநஇத்யாதி.) *ஸ்ரீவேங்கடாத்ரி ஶிவராலய காளமேவத்தோடு ஸாம்யந்தோற்ற "மின்னுர்" இத்யாதியை யருளிச்செய்தா ரென்கிறார் (மேகமுமித்யாதி.) "உளானே" என்கிற ஏவகாரலப்யார்த்தம் (போகமாட்டுகிறிலனென்றது.) ... ... சு.

ஏழாம்பாட்டு.—(மானேயித்யாதி.) நெஞ்சிலே புகுந்து போக மாட்டாதவனவேயோ, தன் வீர்யஶாலித்தாலே லப்யையான நப்பின்னையும் தானுமாகக் குடியாயிருந்தா னென்கிறாரென்று அவதாரிகை கண்டுகொள்வது.

"மானேய் - நோக்கிதிறத்து" என்றதுக்குத் தாத்பர்யம் (மானேய்ந்தவித்யாதி)அவள் தன்வீரவாசியைக்கண்டு ஆசைப்படும்படியென்றுகருத்து. நோக் [ச0 கிலே மடப்பமுந்தோற்று மென்று விவக்ஷித்து, வாக்யஶேஷார்த்தம் (மானினுடையவித்யாதி.) முக்தையாயிருக்குமென்றது - ஸவ்யதை தோற்றவிருக்கு மென்றபடி.

(க) ஒக்கப்பண்ணுகை - ஸாம்யாபத்தியைக் கொடுக்கை. (உ) தனக்காக்குகை - தனக்குஶேஷபூதனாக்குகை.

மூ.—சேயனணிய னெனசிந்தையுள்நின்ற
மாயன்,மணிவாளொளிவெண்டரளங்கள்
வேய்விண்டுதிர் வேங்கடமாமலைமேய
ஆயனடியல்லது மற்றறியேனே. ... ... ... ௮.

---

ப-ரை.—தன்னைத்தஞ்சமாகப் பற்றாதார்க்கு, சேயன் - மிகவும் தூரஸ்தனாய், தன்னைப்பற்றினார்க்கு, அணியன் - மிகவும் ஆஸந்நனாய், என - என்னுடைய, சிந்தையுள் - மாஸஸிலே வந்து புகுந்து, நின்ற - நித்யவாஸம் பண்ணுமவனாய், மாயன் - யாவருங்கேட்டு ஆச்சர்யப்படத்தக்க செய்கைகளை யுடையனாய், வேய் - மூங்கில்களானவை, விண்டு-பிளவுபட்டு,உதிர்-சிந்திக்கிடப்பதாய்,ஒளி- [யு ப்ரகாசத்தையும், வெண் - வெண்மைநிறத்தையு முடைத்தான, தரளங்கள் - முத்துக்களையும், வாள் - ஒளியையுடைத்தான, மணி-ரத்நங்களையுமுடைத்தாய், மா - பெருமை மிக்கிருந்துள்ள,வேங்கடமலை - திருமலையிலே, மேய - பொருந்தியிருப்பவனாய், ஆயன் - இடையனான க்ர்ஷ்ணனுடைய, அடி யல்லது - திருவடிகளில் கைங்கர்யமொழிய, மற்று-பரமபதப்ராப்திமுதலியவற்றை, அறியேன்-ஒரு[யடு பொருளாக மதித்தறியே னென்கிறார். ... ... ... ... (௮)

---

(அணிவரைத்தோளா) நப்பின்னைப்பிராட்டிக்கு ஸ்ப்ருஹா விஷயமாய், ருஷபங்களுக்கு இளகாத திண்ணிதான தோளையுடையவனே. (தேனே) நப்பின்னைப்பிராட்டிக்காகத் தன்னைப்பேணாதே ருஷபங்களின் மேலே விழுந்து பண்ணின வ்யாபாரம்,அநுஸந்திக்கிறதம் நெஞ்சுக்குஇனிதாயிருக்கிறபடி. ( திருவித்யாதி ) அத்தேன் குடிகொண்டவிடமாய்த்து. (கோனே) என்னை அடிமைகொள்ளுகைக்காகத் திருமலையிலே வந்து ஸந்நிஹிதனாய், உன்னுடைய நிரதிஶய ஸௌஸீல்யத்தையைக் காட்டி என்னை அநந்யார்ஹ மாக்கினவனே. ( என்னித்யாதி ) ருஷபங்களையழியச்செய்து நப்பின்னைப்பிராட்டியை லபித்து,அவளோடேகூட, "அரவத்தமளியினோடும்" என்கிறபடியே வந்து, இனி ஒருக்காலும் பேரான் என்று தோற்றும்படி யிருந்தானாய்த்து. ௭.

௮.—எட்டாம்பாட்டு.—ருஷபங்களை யழியச்செய்து நப்பின்னைப்பிராட்டியைக் கைப்பிடித்துக்கொண்டு என்னுடைய ஹ்ருதயத்திலே வந்து புகுந்தபின்பு, இனிஇந்நார்ஹஸ்யத்துக்கு எடுத்துக்கைநீட்டு கையொழிய வேறெனக் கொன்றறியே னென்கிறார்.

---

"அணி, வரை" என்கிற விஶேஷண த்வயத்துக்கும் ப்ரயோஜநமருளிச்செய்கிறார் (நப்பின்னையித்யாதி.) இத்தால் - அவள் கண்ணாலேகாண இவன் தோளாலேதழுவினானென்றும், இவன் கண்ணழகுக்குத் தோற்றுத்தழுவ அவள் தோள்மிடுக்குக்குத் தோற்றாளென்றும் திருவுள்ளமென்று ஹ்ருதயம். "ஏழ் - [கூடு ஆன் - விடை - " ஆன்களுக்குள்ளே யதேச்சாவிஹாரம் பண்ணவிட்ட விடைகளையென்று ஸம்ப்ரதாயம் கண்டுகொள்வது. அரவத்தமளி-ஶேஷனென்கிறபடுக்கை.௭.

எட்டாம்பாட்டு.—(சேயனித்யாதி.) "ஆயனடியல்லது மற்றறியேனே" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை (ருஷபங்களையித்யாதி.) தார்ஹஸ்த்யத்துக்கு - இவ்விருவருடையகார்யத்துக்கு. எடுத்துக்கைநீட்டுகை-பரிசாரகர்த்யம். வே [சுயு றெனக் கொன்றறியே னென்றது - * மண்ணாவிம்மனிசப்பிறவியை நீங்கப்பண்ணுவித்துக்கொண்டுஅவன்வர்த்திக்கிற தேஶவிஶேஷப்ராப்தி முதலானவை யெனக்கு புருஷார்த்தமாகத் தோற்றவில்லை யிப்போதென்றபடி.

வ்யா.—(சேயனணியன்) அநாஸ்ரிதர்க்கு அத்யந்த தூரஸ்தனாய், ஆஸ்ரிதர்க்கு அத்யந்தம் ஆஸந்நனாயிருக்குமிறே ; இரண்டும், பாண்டவர்கள் விஷயத்திலும் துர்யோதநாதிகள் விஷயத்திலும் காணலாமிறே. உகப்பார்க்கு அவன்கையாளாயிருக்குமென்னுமிடம் நீரெ [ங் கேகண்டு சொல்லுகிறீரென்ன (எனசிந்தையுள் நின்றமாயன்) நான் அபேக்ஷியாதிருக்க என்னுடைய ஹ்ருதயத்திலேவந்து புகுந்து நித்ய வாஸம்பண்ணுகிற ஆஸ்சர்யபூதன். (மணியித்யாதி) வாளென்றும் (—ஒளி,) ¶ ஒளியென்றும் — ஒளி, இவைஇரண்டும் செய்வதென் னென்றால் (மணிவாள் ஒளிவெண்டரளங்கள்)ஒளியையுடைத்தான[ம ரத்நம், ஒளியையுடைத்தாய் நீர்மையை யுடைத்தாயிருக்கிற முத்து க்களை, வேய் விண்டுஉதிராநிற்கு மாய்த்து-மூங்கில்களானவை முற்றி வெடித்து முத்துக்களைச் சொரியாநிற்குமாய்த்து ; இப்படிப்பட்ட திருமலையை வாஸஸ்தாநமாகவுடைய. (ஆயன்) நப்பின்னைப்பிராட் டிக்கு வல்லபனென்னு மிடத்துக்குஸூசகமிறேயிது. (அடியித்[யாதி) இதரநிரபேக்ஷனானவன் அநந்யகதியாய்க்கொண்டு என்பக்கலி லே வந்து புகுர ஸாபேக்ஷனானநான் அவனைவிட்டுப்போவேனோ.அ.

மேலுக்கவதாரிகை (இரண்டுமித்யாதி வாக்யத்வயமும்.) (எங்கேகண்டு) என்றதுக்கு - பாண்டவர்கள் விஷயத்தில்கண்டு சொல்லுகிறீரோ வென்றபடி. இவ்வாழ்வார் "அடியேனையாட்கொண்டருளே," "அடியேனிடரைக்களையாயே," "குறிக்கொள்ளெனைநீயே" என்றுகொண்டு, அவனிருக்கும் தேசத்தில் போகை உத்தேஸ்யமாய் அவ்விடத்தில் கைங்கர்ய ததவிரோதி ப்ராப்திபரிஹாரங்களையே ப்ரார்த்தியாநிற்கவும், அவன்றனக்கு இவர் நெஞ்சில்வருகை உத்தேஸ்யமாய் இவருடைய வ்ருத்திகளிலபேக்ஷையாலே மஹிஷீ ஸஹிதனாய் அவஸரம் பெற்ற வாறேபுகுந்துகொடுநின்றான்,இத்தைக்கண்டு"எனசிந்தையுள்நின்ற மாயன்" [உரு என்கிறாரென்று விவக்ஷித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (நானித்யாதி) இங்ஙனன்றாகில், கீழ் - ஸாமாந்யேந ப்ரார்த்தித்தமைதோற்ற பாட்டுக்கள் பலவுண்டாகையாலே, நானபேக்ஷியாதிருக்க என்னக்கூடாது. ப்ரதிகப்ரஹணபூர்வகம் ப்ரஸ்நம் பண்ணுகிறார் (மணியித்யாதி.) "வாள்" என்றது - ✻ மணிவிசேஷணமாகவும், "ஒளி" என்றது-✻ தரளபதத்துக்குவிசேஷணமென்றும்ப்ரத்யுத்தரமானமை [நூய யைக்காட்டாநின்றுகொண்டு, ப்ரதீகப்ரஹண பூர்வகம் தாத்பர்யமருளிச்செய்கிறார் (மணிவாளொளியித்யாதி.) "வாள் - மணி" என்றது - ✻ வேங்கடத்துக்கு விசேஷணம். ✻ வெண்மையினர்த்தம் (நீர்மையையுடைத்தாய்) என்றது. ரத்நங்களும் முத்துக்களும் கொழிக்கிற தேசவாஸத்வத்தால் ஃபலித்தவர்த்தம் (இதரநிரபேக்ஷனையனென்றது.) ... ... ... ... அ

ஒன்பதாம்பாட்டு.—(வந்தாயித்யாதி.) " ஆயனடியல்லது மற்றறியேன் " என்று தம்மிலே தாமநுஸந்திக்கவே, எம்பெருமான், இவர் மற்றொன்று சிலவற்றை ப்ரஸங்கித்தார், அவற்றை யறிந்துவிட்டாரா யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

¶ குண்டலிதக்ரந்தம் சிலஸ்ரீகோசங்களிலில்லை.

மூ.—வந்தாயென்மனம் புகுந்தாய் ! மன்னிநின்றாய் !
நந்தாதகொழுஞ்சுடரே ! எங்கள்நம்பீ!
சிந்தாமணியே ! திருவேங்கடம்மேய
எந்தாய்! இனியானுன்னை யென்றும் விடேனே. ... கூ.

ப-ரை.—" ஆதியஞ்சோதியுருவையங்கு வைத்திங்குப் பிறந்த" என்கிறபடியே, வந்தாய் - பரமபதத்தினின்றும் நானிருந்தவிடம் தேடிவந்து, என்மனம் - என்மநஸ்ஸிலே, புகுந்தாய் - புகுந்து, மன்னிநின்றாய் - நிலைபெற்று நின்றவனாய், நந்தாத - இடை வெளியில்லாத, கொழும் சுடரே - மிக்கவொளியை யுடையவனாய், எங்கள்-ஆஸ்ரிதரான வெங்களுக்கு, நம்பீ-தஞ்சமாக விஸ்வஸிக்கத்தக்க [ம வனாய், சிந்தா - குற்றமில்லாத, மணியே - ரத்நம்போலே கண்ணுக்கு இனியனானவனாய், திருவேங்கடம் - திருமலையிலே, மேய - பொருந்தி நின்று, எந்தாய் - என்னை உனக்கே உரிமையாக்கிக்கொண்டவனாய், உன்னை - சேஷியான வுன்னை, யான் - சேஷபூதனானவடியேன், என்றும் - எக்காலத்திலும், விடேன் - விடுகிறிலே னென்கிறார். ... ... ... ... ... (கூ)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு.—(வந்தாய்) ஸ்ரீவைகுண்டம் கலவிருக்கையாயிருக்க, இவரபேக்ஷியாதிருக்கச்செய்தேயும் நானிருந்தவிடம்தேடிவந்துபுகுந்தானாய்த்து. வரவேண்டாவென்று விலக்கமாட்டாதேயிருந்தார், அதுவேபற்றாசாக ஹ்ருதயத்திலேவந்து புகுந்தான். (மன்னிநின்றாய்)முன்புபுகுரமாட்டாதேநின்றது உறவில்லாமை [உம யன்றிறே,இத்தலையிலிசைவுகிடையாமையிறே ; இனிப்போகில்புகுர அரிதாமென்று அதுவேநிலையாக நின்றானாய்த்து. இப்படியிருக்கிறவிடத்து, ஸ்ரீவைகுண்டம் கலவிருக்கையாக விருக்கக்கடவநாம் இங்கேவந்து சிறைப்பட்டோமென்னும் இன்னாப்போடன்றிக்கே, இவர் பக்கலிலேபுகுந்திருக்கப்பெற்றவிது பெறாப்பேறாய், தனக்குப் [உரு பண்டில்லாத ஐஶ்வர்யம் பெற்றானாய் உஜ்ஜ்வலனாகாநின்றானாய்த்து. (நந்தாதகொழுஞ்சுடரே) விச்சேதமில்லாதஔஜ்ஜ்வல்யத்தை யுடையவனே. (எங்கள்நம்பீ) இப்பாழும் தாறை ஒருபடி நிரப்புகை. (சிந்தாமணியே) இவன்ஒன்றை எனக்குஎன்று நினைப்பதுகாண் நாமத்தைக்கொடுக்கைக்குஎன்றிராநின்றானாய்த்து.ஜ்ஞாநம்பிறந்தாலும்[நடும

நானிருந்தவிடம் - * அஹமர்யமிருந்தவிடம். அன்றிக்கே, (இருக்கச்செய்தேயும்)என்ற வநுஸாரம், வந்தானாய்த்து என்று பூரித்துக்கொண்டு, வ்யாக்யாத்ஜிவாக்யமாக்கிக் கொள்வது. (நானித்யாதி) "புகுந்தாய்" என்றதுக்கு ஆழ்வாருடைய ஹார்தஹாவமென்று கண்டுகொள்வது.மேலுக்கவதாரிகா ஸூசகமாக தாத்பர்யமருளிச்செய்கிறார்(இப்படியித்யாதி.)பாழும்தாறை - ஆழமான பள்[நரு ளத்தை. விஜ்ஞாவிஷயஃல ப்ரதமான மணியென்றர்யமாக்கித் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இவனித்யாதி.) ஸர்வதா விஜ்ஞாவிஷயமான மணியென்றர்யமாக்கி, த்யாஜ்யமான மணியுண்டோ இப்படி விசேஷிக்கைக்கென்ன வருளிச்செய்கிறார் (ஜ்ஞாநமித்யாதி.) "ரத்நாநியநயார்யாநி" என்று - ஜ்ஞாநிக்கு த்யாஜ்யங்களுண்டிறேஎன்று திருவுள்ளம்.அன்றிக்கே, சிந்துதல்-சிதறுதலாய், அதில்லா மணி [சும யென்றர்யமாக்கி, அத்தால் ஃலிதார்யம் (ஜ்ஞாநமித்யாதி) என்றுமாம்.

மூ.—வில்லார்மலிவேங்கடமாமலைமேய
மல்லார்திரடோள் மணிவண்ணனம்மானை,
கல்லார்திரடோள் கலியன்சொன்னமாலை
வல்லாரவர் வானவராகுவர்தாமே. ... ... ௰.

---

ப-ரை.—வில்லார் - வில்லை யிடைவிடாமல் தரித்துநிற்கும் திருவேடுவர்கள், மலி - மிக்கிருக்கிற, வேங்கடமாமலை - திருமலையிலே, மேய - பொருந்தி வர்த்திப்பவனாய், மல்லூர் - மிடுக்கு மிக்கிருப்பதாய், திரள் - திரண்டிருந்துள்ள, தோள்- தோள்களையும், மணி - நீலரத்நம்போன்ற, வண்ணன் - திருநிறத்தையு முடையனை, அம்மானை - ஸர்வேச்வரன் விஷயமாக, கல் - மலைபோலே, ஆர் - திண்[௰மையையும், திரள் - திரட்சியையு முடைய, தோள் - தோள்களை யுடையரான, கலியன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்த, மாலை - மாலாரூபமான இப்பத்துப்பாட்டையும், வல்லாரவர்தாம் - பொருளோடே கற்கவல்லார்கள், வானவராகுவர் - நித்யஸூரிகளைப்போலே கைங்கர்யம் பண்ணப் பெறுவர்கள். ... (௰)

---

உபேக்ஷியாதாரக்ஷம்.(திருவேங்கடம்மேயவெந்தாய்)திருமலையிலே[௰௫ வந்துபுகுந்துஉன்னுடைய ஸ்வாமித்வத்தைக்காட்டி யென்னை அநங்யார்ஹனாக்கினவனே. (இனியித்யாதி) எனக்காகவந்து நிற்கிறநிலையை விடாய்,ஆனபின்பு நானுனக்காம்படிபற்றின பற்று விடுவேனோ.(என்றும்) இத்தால்-பரஹக்தி பர்யந்தமாகப் பிறந்ததென்றபடி. அரைக்ஷணமவனை யொழியச்செல்லாமை யுண்டாகையிறே-பரஹக்தியாவது, [௨௰ வ்யதிரேகத்தில் ஜீவியாதபடி யானார். ... ... ௯.

வ்யா.—பத்தாம்பாட்டு.—(வில்லாரித்யாதி) பரமபதத்திலே நித்யஸூரிகள் அஸ்யாநே ஹயஶங்கைபண்ணிப் பரியவிருக்கு மவனிறே ஸம்ஸாரத்திலேவந்து ஸந்நிதிபண்ணினான் ; ஸம்ஸாரமாகையாலே ஸ்யாநே ஹயமாயிருக்குமிறே யிங்கு; ஆகையாலே, அங்குத்தைத் திருவேடுவர் எப்போதும் ஏறிட்ட வில்லுந்தாமுமாய் உணர்ந்து நோக்குவர்களாய்த்து, ஸ்ரீகுஹப்பெருமாள் இராவெல்லாமுணர்ந்து நோக்கினாப்போலே. (மல்லாரித்யாதி) ஸிம்ஹம்கிடந்த முழஞ்சையாய்த்து இப்படியுணர்ந்து நோக்குகிறது. மிடுக்குமிக்க தோளையுடைய டர்ஶநீயமான வடிவையுடையனான ஸர்வேஶ்வரனை. [௩௰

---

நிற்கிறநிலையை-திருமலையில்நிற்கிறநிலையை.பற்றினபற்று-என்னெஞ்சிலேநீபற்றினபற்று. "என்றும்" என்றது - அல்பகால விவக்ஷயா வருளிச்செய்கிறார் (அரையித்யாதி.) பரஹக்தி யென்றதுக்கு - பரமஹக்தியிலே தாத்பர்யம்."புநர்விஶ்லேஷஹீருத்வம் பரமாஹக்திருச்யதே" என்னக்கடவதிறே. ... ... ௯.

பத்தாம்பாட்டு.—(வில்லாரித்யாதி.) வில்லை நிரூபகமாகவுடைய வேடரால், மலி - ஸம்ருத்யமாயிருக்கிற, வேங்கடமென்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பரமபதத்திலேயித்யாதி.) "திரள் -" மாம்ஸளமான.

(கல்லாரித்யாதி) இருவர்க்கும் அரணாகப்போரும்படியாய்த்துத் திருமங்கையாழ்வார்தோள் மிடுக்கிருக்கும்படி. (வல்லாரித்யாதி) இவற்றை அப்யஸிக்க வல்லவர்கள், நித்யஸூரிகளுடைய நித்ய கைங்கர்யமே தங்களுக்கு யாத்ரையாகப் பெறுவர்கள். ... ... ய

' அடிவரவு.—கண் இலங்கை நீர் உண்டாய் தூணாய் மன்று மானேய் சேயன் வந்தாய் வில் வானவர்.

திருமங்கையாழ்வார்திருவடிகளேசரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

ஆர்தல் -பொருந்துதலாய், கல்லோடொத்த தோளென்று விசேஷிக்கைக்குத்தாத்பர்யம்(இருவர்க்குமித்யாதி;) வேடர்க்கும் வேங்கடத்தானுக்கு மென்றபடி.... ய.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆக, திருமொழி - ய - க்கு, பாட்டு - ர.

முதற்பத்து ஸம்பூர்ணம்.





ஜீயர்திருவடிகளேசரணம்.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த

# பெரியதிருமொழிக்கு,

¶பூர்வாசார்யர்கள் அருளிச்செய்த

# வ்யாக்யாநாந்தரம்.

இவ்வாழ்வாராகிறார் - அநாதிகாலம் ஆத்மாவை வெய்யிலிலே வைத்து உடம்பை நிழலிலேவைத்துப் போந்தா ரொருவராய்த்து. ஆத்மாவை வெய்யிலிலே வைக்கையாவது — ஹேயவஸ்து விஷயத்திலே யிழியாமை ; உடம்பை நிழலிலே வைக்கையாவது - ※ ஊனுடைக் குரம்பை வாழ்க்கைக்குறுதியேவேண்டிஸ்வ்ஹாதிகளிலேப்ரவணரா[ய ய் அதுவேயாய்ப் போருகை : நிழலாவது--அவன்பாதநிழலேயிறே. [வாஸுதேவதருச்சாயா] போனபோனவிடமெல்லாம் நிழலாயிருக் கை. [நாதிஶீதாநவர்மதா] அறவவ்வலிடுதல் வேர்த்தல் செய்யா தொழிகை. [நரகாங்காரஶமநீ] தானேயேறிட்டுக் கொண்ட நரகமா கிற நெருப்பை யுட்பட அவிக்கவற்று. [ஸாகிமர்யமுந ஸேவ்யதே] [யரு ப்ராப்தமன்றென்ன வொண்ணாது, ஜுகுப்ஸநிவர்த்தகமன்றென்ன வொ ண்ணாது ; அந்நிழலிலே யிருந்துவைத்தே ஒதுங்கிற்றிலேன் என் பாரைச் செய்யலாவதில்லையே. இனி இவர் கண்ணால் காண்கிற விஷயங்களுக்கு அவ்வருகுமியாராகில் நம்மையும் விஷயங்களோ பாதியிவர்கண்ணுக்கிலக்காக்கில்விரும்பக்கூடுமென்றுபார்த்து,[உய உகந்தருளின நிலங்களிலேவந்து ஸந்நிதிபண்ணி யருளி, இவரை விஷயீகரித்து, தன்படிகளை யடையக் காட்டிக்கொடுத்து, தன்னை லல்லது செல்லாதபடி பண்ணி இவரை அநுபவிப்பித்து, இங்கே யிருந்தேபரமபதத்திலுள்ளார்படி பண்ணிஅத்தேஶப்ராப்தியையும்பண் ணிக்கொடுத்தானென்கிறது—இப்ப்ரபந்தங்க ளெல்லாவற்றிலும். ※

---

¶ மூன்றும்பத்து முதல்திருமொழி முதற்பாட்டினரும்பதத்தில் "கருமை- பெருமையாக்கி நஞ்சீயர் வ்யாக்யாநம் பண்ணியிருந்தாலும்" இத்யாதி வாக்ய த்தால் நஞ்சீயர்வ்யாக்யாந முண்டென்று தோற்றுகிறதாகிலும், இந்த வ்யா க்யாநத்தில் "இப்புடைகளிலே நினைப்பது அநேகத்தை யிறே என்று ஜீயரு ளிச்செய்வது"[க - ப - க - தி - உ - பா.], "நஞ்சீயர் ஸந்நிதியளித்தருளுகிற [ருய வன்று.....என்றருளிச்செய்வர்" [க - ப - ரு - தி - க - பா.] இத்யாதி வாக்யங்க ளுண்டாகையால்,இதுநஞ்சீயர்வ்யாக்யாநமன்று ; "வேல்வெட்டிநம்பியார், பிள்ளை யை......என்றுகேட்க" [க - ப - க - தி - க - பா.] இத்யாதி வாக்யங்களாலே- நம்பிள்ளைவ்யாக்யாநமு மன்று ; வாதிகேஸரி அழகியமணவாளச் சீயரருளிச் செய்ததா யிருக்கும் என்று சிலர் அருளிச்செய்வர் : ம்ருக்யஸ்யமாகக் கண்டு கொள்வது.

இவர்பக்கல் அத்வேஷமும் விஷயங்களினுடைய லாவவமுமே இவரை மீட்கைக்குப் பரிகாரமாகவும், இவருடைய ரஸிகத்வமே தன் வாசியறிகைக்குப் பற்றாசாகவும், அநாதிகாலம் பண்ணின பாபங்களை க்ஷமைக்கு விஷயமாக்குவோம் என்று பார்த்து, இவர் விஷயங்களின் வாசியறிந்து தன்னையறிகைக்கு, கிழிச்சீரைபோலே யநத்தைக் கொடுப்பாரைப போலே, தனக்கு வாசகமான திருமந்த்ரம் முன்னாக தன் ஸ்வரூபரூபகுணவிபூதிகளைக் காட்டிக்கொடுக்கக் கண்டு அநுபவித்து, அயோக்யனென் வென்னை அநுதானே தேறநுவாக விஷயீகரித்தான் என்று, க்ருதஜ்ஞராகையாலே, ஒருக்கால் சொன்னத்தை ஒன்பதின்கால் சொல்லிக் கூப்பிடுகிறார். ஸம வஷ்விஷயத்தில் நேர்கொடுநேர் செய்யலாவ தொன்றில்லை, செய்ய வேண்டுவது மொன்றில்லை; பண்ணின உபகாரத்துக்கு க்ருதஜ்ஞனுமித்தனையே வேண்டுவது அவிஷ்யாவ்ருத்தி தோற்ற. ... *

முதற்பாட்டு.—நம்மாழ்வார் ஸர்வேஸ்வரனை ஸாக்ஷாத்கரித்து அநுபவம் பெற்ற பேறறியாதே "இங்நின்ற நீர்மை யினியாமுறாமை" என்று - கீழ்நின்ற நிலையை அநுஸந்தித்தாப்போலே, இவரும், ஸமவஷ்விஷயீகாரம் பிறந்தபின்பும், தாம் கீழ்ப் பிரிவையெல்லா மநுஸந்தித்து (வாடினேன்) என்கிறார். * ஸாயமநாங்நிவாஸ வ்ருக்ஷத்தைப்பிரே யிழந்தது. கொம்பை யிழந்த தளிர்போலேயானேன். * தயரதன் பெற்ற மரதகமணித்தடத்தைப்பிரிந்தது. "ஜலாந் மத்ஸ்யாவிவோத்ருதௌ" என்கிறபடியே - ஜலத்தைப் பிரிந்த மத்ஸ்யம்போலே வாடினேன். "பழுதே பலபகலும் போயின வென்றஞ்சி யழுதேன்" என்றும், "தெரிந்துணர வொன்றின்மையால் தீவினையேன் வாளா விருந்தொழிந்தேன்கீழ்நாள்களெல்லாம்" என்றும், "மறந்தேனுன்னை முன்னம்" என்றும், அநாதிகாலம் இழந்த இழவை நினைத்து (வாடினேன்) என்கிறா.

(வாடி) என்கிறவிசேஷணம் இரண்டிடத்திலும் பொருள் பெற்றுக்கிடக்கிறது. அநாதிகாலம் இவ்விழவு ப்ரஸித்தமாய்ப் போந்ததென்றும்மேலேஒரநர்த்தத்தைவிளைத்ததென்றும் தோற்றுகிறது. மேல்விளைந்த அநர்த்த மேதென்ன (வருந்தினேன் மனத்தால்) மாநஸமான க்லேஸத்தை அநுபவித்துப் போந்தேன்; விஷயாநுபவத்தை யாசைப்பட்டு அதுகிடையாமையாலே அதுக்கு ஷ்டிப க்லேஸத்தைப்பட்டேன்.

(பெருந்துயரிடும்பையில் பிறந்து) இடும்பையென்றும், துயரென்றும் - து:கம் ; இரண்டாலும் - மிகவும் பெரிய து:கத்தை விளைக்கும் ஸரீரபரிக்ரஹம் பண்ணி யென்றபடி. து:கவாயதநமாய் து:கத்தை விளைப்பதுமாயிருக்கை. (கூடினேன்) அவித்ஸம்பந்தம் ஸத்தாப்ரயுக்தம் என்னலாம்படி பொருந்தினேன். (கூடினேன்) என்கையாலே- இதுதான் ஆத்மாவுக்கு ஸ்வரூபமன்று, வந்தேறி என்னு

மிடம் தோற்றுகிறது. அயஃபிண்டத்தை அக்நியினருகே வைத்தால் அக்நிபரமாணுக்கள் ஸூக்ஷ்மரூபேண அதிலே ஸங்க்ரமித்தாதல், வாஸனையாலே யாதல் இதினுடைய ஔஷ்ண்ய ஸ்வபாவத்தையும் ஸஜித்து அது தானென்னலாமாப்போலே, இவ்வாத்மாவும் அவித்[து] ஸம்ஸர்கத்தாலே அது தானென்னலாம்படி அவித்கல்பனானபடி. (கூடினேன்) ஶரீரவிஶ்லேஷம் அஸஹ்யமாம்படி பொருந்தினபடி.

(இளையவர்தம்மோடவர்தரும் கலவியேகருதி ஓடினேன்) ஶரீர ஸம்பந்தத்தால் பிறந்த அநர்த்தமிது என்கிறார். (இளையவர்) பரு வத்தால் துவக்குமவர்கள். (தம்மோடு) "ஸ்த்ரியாவாஸத்வமநுமந்[ய] மேத்" என்கிறதுவும் இங்கே. "யேநயேநதாதாகச்சதி தேநதேந ஸஹகச்சதி" என்கிறதுவுமெல்லாமிங்கேயென்கிறார். (அவர்தரும் கலவி) கிட்டினபோது சிறிது வார்த்தை சொல்லி, இவனகப்பட்டான் என்றறிந்தவாறே, தங்களைக்கொண்டு எழவாங்குவர். (தரும்கல வியேகருதி) அநுபவித்தேன் என்பது அநுஸந்தாநமுண்டாகி[லு]விறே. இன்னபடி ஸஜிக்கலாம் என்று நினைவொழிய, ஸஜிக்கத்தக்கதொன்றில்லை. ஊஷ்வங்களிலே யொன்றை ஸுவமென்று பேரிட்டுக் கொண்டாடித் திரிகிறானித்தனை இவன் ப்ராந்தியாலே.

(ஓடி) முன்பெல்லாமிப்படியாய்ப் போரச்செய்தே ஒரு நன்மை யுண்டாயிற்றென்று தோற்றுகிறது. அதேதென்னில் (உணர்வெ[ன]னும் பெரும்பதம்) "விஜ்ஞாநம்யஜ்ஞம்ப்ராப்தம்" "வரவாறொன்றில் லையால் வாழ்வினிதால்" என்கிறபடியே இங்ஙனே ஸம்பவிப்பது. (பெரும்பதம்) அவன்றான் வேண்டா, தத்விஷயஜ்ஞாநமே யமையும் என்னும்படியாயிற்று இதினுடைய பெருமை. "மறப்பின்மையான் வேண்டுமாடு" என்றும் "உனக்கேயாளாகும் சிறுகாலத்தை யுறு[மோ]" என்றும் சொல்லுகிறபடியிறே யிதினுடைய பெருமை. (திரிந்து) மீண்டு. விஷயங்களில் ஸஜிக்கலாவதொன்றில்லாமையாலே மீட்டி மீண்டு. (தெரிந்து) என்று பாடமாகில், ஜ்ஞாநம் பிறந்தவாறே எல்லாமுள்ளபடி தெரிந்தது. ஆகையாலே, அநாதிகாலம் இருளாய்ப்போந்தமை தோற்றுகிறது. (நாடினேன்) கண்டேன். கா[ல]ற்றுக்கிடப்பட்ட கலம்போலே ஓடின நான், ஜ்ஞாநம் பிறந்தவாறே, நெங்கூரம் விழப்பட்ட மரக்கலம்போலே தரித்தேனென்கிறார். நாடல் - தேடலாய், ஜ்ஞாநம் பிறந்தவாறே, நாம் கீழ்பட்டதென்? மேல் படப்புகுகிறதென்? என்கிறகேட்டம்பிறந்ததென்கிறது என்றுமாம்.

(நாடி) ஆராய்ந்து. (நான்) ஓடினநான்.— வேல்வெட்டி நம்பியார், பிள்ளையை, "இதரோபாயங்கள்போலே ப்ரபத்திக்கும் ஸஹாயாந்தராபேக்ஷையுண்டோ?" என்று கேட்க; "இது கேட்கைக்கடியென் இப்போது?" என்ன; "சக்ரவர்த்தித் திருமகன் ப்ராங்முகத்வாஸிநிய மங்களோடே ஶரணம்புக்காரே" என்ன; "அந்த உபாயத்துக்கு உடனவந்துயாயிருப்பதொன்றில்லை, உபாயபரிக்ரஹம் பண்ணினவ

ருடைய ஸ்வபாவத்தாலே வந்தது, ராக்ஷஸஜாதீயராகிறார் - தண்ணியராய் அநயிகாரிகளாயிருக்க, அவர்களிலொருவனான விபீஷணாழ்வான் 'ஸமுத்ரம் ராகவோ ராஜா ஶரணம் கந்துமர்ஹதி' என்று இவருக்கு உபதேஶித்தான், அவன்பக்கல் நியதிகண்டிலோம்.'' இத்தால்[ரு சொல்லிற்றாய்த்து - அநயிகாரி அயிகாரம் ஸம்பாதிக்கவேண்டா, அயிகாரிக்கு அநயிகாரம் ஸம்பாதிக்கவேண்டா, நின்ற நின்ற நிலைகளிலே அயிகாரிகளாமித்தனை ; ஆகையாலே, ஸர்வாயிகார மென்றபடி. ( நான் கண்டுகொண்டேன் ) கெடுத்தவன் கண்டாப்போலே யிருக்கை. (நாராயணாவென்னும நாமம்) ப்ரணவபூர்வகமாக வதுர்த்திமுடி[ய வாகாமையாலே- இதிலே பிழியவமையும் ஸலபர்யந்தமா மென்கைக்கு, ஸாங்கமாகவும் வேண்டாவென்கிறது. ( என்னும்நாமம் ) என்னும் என்கிறது-பலகால் ஆவ்ருத்தித்துச் சொல்லுகிற அநந்யபரமான நாராயணாநுவாகத்திலே சென்று கேட்டுக்கொள்ளுங்கோ ளிந்தநாமம். (நாமம்) என்கையாலே - அங்காதி நியமமில்லை யென்றபடி. ... க.

அவதாரிகை.— இரண்டாம்பாட்டு.— அநாதிகாலம், ஶப்தாதிவிஷயமென்றொன்றுண்டு என்றுமறியாதே விஷயப்ரவணராய்ப் போருகையாலே, "வாடினேன்" என்றும் "ஓடினேன்" என்றும் கிழ்நின்ற நிலையைச்சொல்லி நின்றது ; இப்படி கழிந்தகாலம் வ்யர்த்தமாகாதபடியான திருநாமத்தைக் காணப்பெற்றே னென்கிறார்.

வ்யா.—(ஆவியேஅராதே) "ஆவியேயருதே யலைகடல்கடைந்த வப்பனே" என்றும் "ஆவியே யாராமுதே" என்றும் பகவத்விஷயத்திலே சொல்லக்கடவவார்த்தையையாய்த்து இங்குச்சொல்லுகிறது. "ஜீவிதம் த்வமஸி மேஹ்ருதயம்" என்றிறே சொல்லிப்போந்தது. (என நினைந்து) "இப்புடைகளிலே நினைப்பது அநேகத்தையிறே" என்[உரு று ஜீயரருளிச்செய்வது. (உருகி) "'நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்' என்று இங்ஙனே சொல்லலாமோ?" என்று ஜீயர்க்கு விண்ணப்பஞ்செய்ய ; "நீரிவரிலும் பக்தரா யிருந்தீர்" என்றருளிச்செய்தார். (எனநினைந்துருகி) இங்ஙனே அநுஸந்தித்து நீர்ப்பண்டம்போலே மங்கிக்கிடப்பர். காலமநாதி, ஆத்மாநித்யன், [கூய பரிக்ரஹித்த ஶரீரங்களுக்கு எல்லையில்லை, அவ்வோ ஶரீரங்கள்தோறும் விஷயங்களுக்கும் எண்ணில்லை, ஆகையாலே (அவரவர்) என்னுமித்தனை. (பணைமுலைதுணையா) * வர்மாஸ்ருங்மாம்ஸ மேதோஸ்த்திமயமான மாம்ஸபிண்டத்தையிறே துணையாகப்பற்றிப்போந்தது. "ம ன்னுகுழல் கருநிறத்தென் துணையே" என்னுமாப்போலே இவற்றைத் துணையாகப்பற்றுவது. (பாவியேன்) கீழ்நின்ற நிலையை நினைத்து "பாவியேன்!" என்கிறார். (உணராதெத்தனைபகலும்) அநேககாலம். (பழுதுபோ யொழிந்தன நாள்கள்) * ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமைக்கிட்டுப் பிறந்தவனிறே இக்காலத்தைப் பாழேபோக்கினான்.

(தூவிசேரன்னம் துணையொடும் புணரும் சூழ்புனல் குடந்தையே தொழுது) தூவி - சிறகு. (துணையொடும் புணரும்) ஸஹசரத்தோடே புணர்ந்து வர்த்திக்கிற தேசம். ஸர்வஸ்ய ஜகத்ஸரண்யமான தேசம். அன்னத்தோடே ஸர்வதா ஸாம்யம் சொல்லலாயிருக்கையாலே, [௫] பெரியபிராட்டியாரோடே ஆராவமுதாழ்வார் ரமித்து வர்த்திக்கிற தேசம். (சூழ்புனல் குடந்தை) புனலாலே சூழப்படுகையாலே தாபஹரமான தேசம். (குடந்தையே தொழுது) ஆராவமுதாழ்வார் வேண்டா, அத்தேசந்தானே அமையும். (என்னாவினால்) "ஆவியேயமுதே" என்ற என் நாவினால். இத்தை யிட்டிறே "எச்சில் வாயால் தூய்மையில் தொண்டனேன் நான் சொல்லினேன் [௰] தொல்லை நாமம்" என்று அநுஸந்தித்தது. (உய்யநான்கண்டுகொண்டேன்) உஜ்ஜீவிக்கும்படி நான்கண்டுகொண்டேன். (நாராயணாவென்னும் நாமம்) முன்பிழந்த காலமும் ஸார்த்தமாகும்படியான திருநாமத்தைக் காணப்பெற்றேன்; "சென்றநாள் செல்லாத" இத்யாதி [௰௫] யிப்படியே. ... ... ... ... ... ௨

அ. — மூன்றும்பாட்டு.—அநாதிகாலம் ஸரீரத்துக்கு நன்மை வேண்டி யுழன்றடைந்தவிபோக்க நான் உஜ்ஜீவிக்கும்படி திருநாமத்தைக் காணப்பெற்றே னென்கிறார்.

வ்யா.—(சேமமேவேண்டி) "வேந்தர்களாய் ராஜாக்களுடைய பட்டா[௨௰]ல் நடந்து நலிவு வாராதொழியவேணும், எல்லாராலும் ரக்ஷை பெற்றுச் செல்லவேணும்" என்றுப்பத்து நெஞ்சால் நினைத்திருப்பது. (தீவினைபெருக்கி) ரக்ஷை பெற்றுச்செல்லவேணும் என்றிருந்தால், அது வைமாய்ப்படி அக்ரமங்களைப் பண்ணுகைக்குப் பாபத்தையே யாய்த்துக் கூடுபூரிப்பது. (தெரிவைமார் உருவமே மருவி) நல்லத்தை [௨௫] வேண்டியிருக்கும் காட்டில் அது வாராதே; செய்ததின் ஃபலமிறே வருவது. பண்ணிவைத்த பாபங்கள் கொடுபோய் விஷயங்களிலே மூட்டும். (உருவமே மருவி) அகவாய் விழியில் தூஜிக்கலாமிறே. அகவாயறிந்தால் ஸ்வகார்ய பரராயிறே யிருப்பது. அகவாயில் விழியில் அநாதமஸூக்ஷ்மம் கண்டிடாதேயாயிருக்குமிறே. வடிவில்தோஷங்களை [௩௰] மறைத்திறே வைப்பது. (மருவி) இத்தையே ஸ்வாஸ்ரயமாகமநம்பண்ணியாய்த்திருப்பது. (ஊமனார்கண்ட கனவிலும் பழுதாய்) ஊமனார் - ஊமைகள். ஊமன்கண்ட கனவிலும் பழுதாய். ஊமன்கண்டகனா வாய்விடமாட்டானாகிலும் நினைத்திருக்கும்; அங்ஙனுமன்றியே, நெடுநாளநுபவித்துப் போந்த விஷயங்களிலேபோயிருந்து, அநந்தரம் [௩௫] நினைத்திருக்கைக்கு மொன்றின்றியே யிருக்கை. அங்ஙனன்றிக்கே, ஊமைகண்ட கனா வாய்விட மாட்டிற்றிலனாகிலும் நினைத்திருக்கலாம், இவற்றை நினைத்திருக்கிறது ஸயாவஹமாகையாலே நினைக்கவொண்ணாதென்கை. ஸ்ம்ருதி விஷயமாவ தொன்றில்லை; ஸ்ம்ருதி விஷய

மாய்த்ததுண்டாகில் ஸயாவஹமாயிருக்கும். (ஒழிந்தனகழிந்தவந்நாள் கள்) "நமேஹ்வ்வ0 ப்ரியா—ஷ்ரே நமே ஷ்வ்வ0 ஹ்தேநிவா । ஏத ஷேவாநுமோஷாமி வயோஸ்யா ஷயதி வர்த்ததே" இத்யாதிப்படியே.

நீர்பற்றச்சொல்லுகிற விஷயத்துக்கு இந்தோஷங்களில்லையோ[டு வென்ன (காமஹ்ராதாதை) உருவமே மருவிலும் ஊதியம்போரும்; "ஸாக்ஷாந் மந்மதமந்மத:" (நம்முடையடிகள்) வகுத்தவிஷயம்.ஸர்வ ஸ்வாமி. (தம்மடைந்தார் மனத்திருப்பார்) வடிவைக்காட்டி அகப் படுத்திக் கையிலுள்ளதடையஷ்ரஹித்துத் தள்ளிக் கதவடைக்குமவர் களைப்போலன்றியே, தன்னைச்சேர்ந்தார் மநஸ்ஸைவிடாதே யிருப் [டு பர்; "கல்லுங்கனைகடலும்" இத்யாதி, "நிற்பது மோர்வெற்பகத்து" இத்யாதி. (நாமம் நானுய்ய நான்கண்டுகொண்டேன்) ஸ்வாமித்வ ஸௌலப்ய வாத்ஸல்ய ஸௌஶீல்யாதிகளுக்கு வாசகமான திருநாமத் தைக்கண்டுகொண்டேன்.சேமமேவேண்டித் தீவினைப்பெருக்கிப் போ ந்த நான் கண்டுகொண்டேன்.(நாராயணாவென்னும்நாமம்) குடல்[டு துடக்குடைய திருநாமம். ... ... ... ... ௩.

அ.—நாலாம்பாட்டு.—ப்ரளயங்கொண்ட பூமியை யெடுத்தாப் போலே, ஸம்ஸாரப்ரளயங்கொண்டுஅதிலேஅழுந்துகிறநான்,அவரரு ளாலே, நீர்மைமிக்க திருநாமத்தைக் காணப்பெற்றே னென்கிறார்.

வ்யா.—(வென்றியேவேண்டி) பிதாவாகவுமாம் ஆசார்யனாகவுமா ம் வென்றியாய்த்து இவன்வேண்டியிருப்பது. தன்னையொழிந்தாரை அகப்படுத்தி தான் மேலாகவாய்த்துவேண்டியிருப்பது. கோல்விழுணை மாம் விஷயத்திலேயாய்த்து வெல்ல நினைப்பது. (வீழ்பொருட்கிரங்கி) கையில்சிறிது அர்த்தமுண்டாய் அத்தாலேயிறே யிவனொருவனையும்மதி யாதிருப்பது. அது அஸ்திரமானபடியாலே அபஹ்ருதமாயிருக்குமிறே; அத்தை யிழந்து கூப்பிடாநிற்கும். கௌரவ்யராயிருப்பார் பக்கல் அபிமாநம் பண்ணக்கடவ தன்றிக்கே யிருக்க அபிமாநம் பண்ணி வர்த்தித்தும்அதுக்குமேலேஇரங்கக்கடவதல்லாததுக்குஇருந்து கண் ணநீர்பாயாநிற்கும்.அங்ஙனன்றிக்கே,தேஹாத்மாபிமாநத்தைப் பண்ணி த்தன்னையெல்லார்க்கும்மேலாகநினைத்துப்போந்து, அதுக்குமேலே,அ ஸ்திரமானவுடம்பை "நித்யமாகவேணும்" என்று போகியாநிற்குமெ ன்னவுமாம். (வேற்கணார்கலவியே கருதி) கையிலர்த்த முண்டான காலம் ஸார்யையைச் செங்கற்சீரைகட்டித்திரியவிடுமவன் அர்த்தமிழ ந்து கூப்பிடாநின்றால், அல்லாதாரோடொக்க அவளும் வினவப்புகு ரும்; அவனைக்கண்டவாறே, அவ்வர்த்தத்தை யெல்லாமிட்டு ஒரு [௩டு பணியாகப் பூட்டிக் காணப்பெற்றிலோம் என்று மநோரதியாநிற் கும். கெடுத்த பொன்னை இப்போது பூட்டத்தேடும். (நின்றவா நில்லா நெஞ்சினையுடையேன் என்செய்கேன்) உர்வஶீ ஸாலோக்யத்துக்கு நாட்டங்க ஸாயநாநுஷ்டாநம் பண்ண, நேரடியே அவள்தானே

வந்து உபஸ்தாநம்பண்ணி முன்னேநிற்க அர்ஜுநன் நமஸ்கரித்துக் கடக்க நின்றானிறே விரக்தியாலே; இப்படிப்பட்டவன், "தஸ்யாஹம் நிக்ரஹம்மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்" என்று - ப்ரதிகூல வாயுவைப் பிடித்துக்கூடுகட்டிலும் என்நெஞ்சைப்பிடிக்கப் போகாது [ரு என்றானிறே. ஒரு விஷயத்திலே அரைக்ஷணம் கால்தாழாத நெஞ்சையுடையேனான நான், என்நெஞ்சைப் பரிகரமாகக்கொண்டு உன்னைப்பெறுகைக்கீடான உபாயாநுஷ்டாநம் பண்ண என்பதொன்றுண்டோ. உன்னை பிறக்கைக்குறுப்பா மித்தனை. (என்செய்கேன்) அர்ஜுநனுக்குப்பதின்மடங்கோத்திலும் சோகத்தைஉத்பாதித்தாப்போலே கண்டதெல்லாமிவர்க்கு ஸயாவஹமாயிருக்கிறபடி.

நீரிப்படி யிருந்தீராகில் உமக்குப் பேற்றுக்கடியெத்தாலே யென்றிருந்தீரென்ன; ப்ரளயங்கொண்ட பூமி தன்னுடைய ரக்ஷணத்தில் அஸமர்த்தமாய் அத்தை ரக்ஷித்தான் யாவனொருவன் அவனாலே யென்கிறார் (நெடுவிசும்பணவும்பன்றியாயன்றுபாரகங்கீண்டபாழி[யிரு யா னாழியானருளே) ப்ரளயங்கொண்ட பூமிக்கு ஸ்வரக்ஷணத்தில் அந்வய முண்டாமன்றிறே விஷயங்கொண்ட நெஞ்சை யுடையேனா நான் எனக்கு ஹிதசிந்தைபண்ணுவது. ஆகாசாவகாசம் வெளி யடையும்படி விம்ம வளர்ந்தான். ரக்ஷ்யத்தினளவல்லாதபடி யாய்த்து ரக்ஷகனானவன் வடிவைபரிக்ரஹித்தபடி. பூமிப்ரளயத்திலே[உய் புக்கு முடிந்து போகப்புக்கவாறே, நீருக்கும் சேற்றுக்கும் இளையாத மஹாவராஹமானான்; — ஜலஸம்ப்லுதி காணப்பணைக்கும் வடிவைக் கொண்டான். [மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப்பன்றியாம்] மஹிஷி யுடம்பு பேறாதே பாசிதூர்த்தது என்றவாறே, காதலனான தான்உடம்பு பேறாதே மாசேறின உடம்பை யுடையனானான். [மானமிலா]உரு ஈச்வரத்வாபிமாநம் பின்னாட்டாதபடி யிருக்கை. மாயாம்ருகத்தை இனத்தின் மான்கள் வந்து மோந்து பார்த்து, விஸஜாதீயம் என்று கடக்கப்போய்த்தின விறே; அங்ஙனன்றியே, "ஆத்மாநம்மாநுஷம் மந்யே" என்கிற இங்கும் அநுவர்த்தித்தபடி. (பாரகங்கீண்ட) பூமிப் பரப்படங்க அண்டபித்தியோடே புக்குச்சேர்ந்தத்தைஒட்டுவிடு[க்ய வித்தெடுத்த. (பாழியான்) மிடுக்கையுடையவன். ரக்ஷிக்குமிடத்தில் ஒரு பரிகராபேக்ஷையில்லை. (ஆழியான்) ஒருபரிகரங்கொண்டு ரக்ஷிக்கப்பார்த்தானாகில் அதுக்கீடான பரிகரமுடையவன். (அருளே) அபிமாநம் பண்ணக்கடவதல்லாத விஷயங்களிலே அபிமாநம் பண்ணியும், சோகிக்கக்கடவதல்லாததுக்கு சோகித்தும், நரகாவஹமான விஷயங்களை அநுபவிக்க மநோரதித்தும், "நின்றவாநில்லா நெஞ்சினையுடையேன்" என்கிறபடியே கைகழிந்தவென்னை, இவன் தானாக மீளமாட்டான் என்று அதுவே ஹேதுவாக எடுக்கவொருப்பட்ட ஸர்வேச்வரன் க்ருபையாலே. அருளே என்னவுமாம், அருளாலே என்னவுமாம். (நன்றுநானுய்ய) "வென்றியேவேண்டி வீழ்பொருட்

திரங்கி வேற்கணார்கலவியே கருதி" என்றுபோந்தவன் ஶூந்யனு
னென்று தெரியாதபடி அஸ்பஷ்ட ஸம்ஸாரஶூந்யனும்படி யானேன்.
(நான் கண்டுகொண்டேன் நாராயணாவென்னும் நாமம்) "வென்றியே
வேண்டிவீழ்பொருட்கிரங்கி" என்று-அபிமாநமும் லோபமுமி[ரு
றே சொல்லிற்று; இப்படி போந்த நான், அமாநித்வாத்யாத்மகு
ணோபேதர் பெறும் பேற்றைப் பெற்றேன். ... ... ச.

அஞ்சாம்பாட்டு.—(கள்வனேனானேன்) பிறருகளவுகண்டவனில்
ரத்நாபஹாரம் பண்ணினவனுக்கு பாபம் ப்ரசுரமாயிருக்கும்; ஶூத்ர
யநத்தை அபஹரித்தவனில் ப்ராஹ்மணயநத்தை அபஹரித்தவ[ம
னுக்கு பாபம் விஞ்சியிருக்கும்; த்ரவ்யங்களில் தலையான ஆத்மவஸ்
துவையாய்த்து அபஹரித்தது. ஸர்வேஶ்வரனுடைமையை யாய்த்து
என்னது என்று போந்தது. (படிறுசெய்திருப்பபேன்) மிடறு தின்
றால் சொறிய வொண்ணாதாப்போலே பஶ்யதோஹரனானேன்.
நான் தேஹாத்மாபிமாநம் பண்ணிப்போந்ததுவேயன்றிக்கே, ஈஶ்வர
ஶேஷம் என்றிருப்பானொரு ஆஸ்திகனுண்டாகில், தேஹாதிரிக்த
மா யிருப்பதொரு வஸ்துவாவதென்? ஈஶ்வரனாவதென்? என்று
காணக்காணப்பறித்தேன். (கண்டவாதிரிதந்தேனேலும்) முன்னடி
தோற்றுமையாலே கைவந்தபடி பரிமாறினேனித்தனைபோக்கி, ஶா
ஸ்த்ரங்கள் ஆகாது என்று மீண்டிலேன். [நிபராஸ:] அல்லாத வற்[உம
றோடு பரிமாறுமத்தை ஜநநிபக்கலிலேயும் பரிமாறத்தேடும்.

(தெளிவியேனானேன்) இப்படியிருக்கச்செய்தே.ஸாராஸாரவிவே
கம்பண்ணி செய்யக்கடவது செய்து அல்லாதது தவிர்ந்துபோவா
ரைப்போலே விவேகமுடையேனானேன். (செல்கதிக்கமைந்தேன்)
நித்யஸம்ஸாரியாகைக் குறுப்பானவற்றைச் செய்துபோந்தநான்,[உரு
"இனி இவன் ஸம்ஸாரத்துக்கு ஆளாகமாட்டான், பரமபதத்துக்கா
ளாமித்தனை" என்னும்படி சமைந்தேன். செல்லக்கடவகதியுண்டு-பரம
பதம், அங்குத்தைக்காளாம்படி பூர்ணனானேன். "கண்டவாதிரிதந்
தேன்" என்றீர், "தெளிவியே னானேன்" என்றீர், வ்யாஹத பாஷ
ணமாயிருந்ததிதென்ன (சிக்கெனத்திருவருள்பெற்றேன்) இனிமீளா[கூம
தபடி அருளைப்பெற்றேன். நீர்பெற்ற பேறுதானேதென்ன (உள்
ளெலாமுருகிக்குரல் தழுத்தொழிந்தேன்) உள்ளு எலும்பும் நரம்பு
மறவுருகி, அதுதான் த்வநியில் தழுதழுப்பிலே தெரியும்படி யா
னேன். (உடம்பெலாம் கண்ணநீர்சோர) [ஆஹ்லாத ஶீதநேத்ராம்
பு: புளகீக்ருதமாத்ரவாந்] உடம்படங்கலும், பஞ்சஸாரமும் த்ரிஸாரமு
மிட்டாப்போலே கண்ணநீர் வெள்ளமிட்டபடி. (நள்ளிருளளவுமித்
யாதி) விஷயாநுபவம்பண்ணிக் களித்திருக்கும் போதோடு, விஷ
யாநுபவம் பண்ணுகைக்கு அர்யார்ஜநம் பண்ணும்போதோடு வாசி
யற இவனுக்குத்திருநாமம்சொல்லுகையேயாத்ரையாகப்பெற்றேன்.ரு.

அ.—ஆறாம்பாட்டு. இத்தை நீர் போர ஆதரியாநின்றீர், அதுதனக்கு அர்த்தமென்னென்ன ; சொல்லுகிறார். பாடத்தைஜபித்து அத்தாலே ஃபலம்பெறவிருத்தல், இத்தால் பாபத்தைப்போக்கி யோகத்துக்கு உடலாக்குதல் செய்கையன்றிக்கே, அர்த்தாநுஸந்தாநத்தாலே[று தமக்குப் பேறென்று பக்ஷமாகையாலே அர்த்தத்தைச் சொல்லுகிறார்.

வ்யா.— எம்பிரான்) எனக்கு உபகாரகன். (எந்தை) எனக்கு ஜநகன். (என்னுடைச்சுற்றம்) என்குடல்துடக்குடைய எல்லாவுறவுமுறையுமானவன். (எனக்கரசு) என்னை ஈராசுதவிர்த்து ஆண்டவன். (என்னுடைவாணாள்) எனக்கு ப்ராணனானவன். (அம்பினால்த்யாதி)[ஸங்கல்பத்தாலன்றிக்கே அம்பாலே, அரக்கர் நடுங்கும்படி நெருக்கி, அவர்களுயிரைப் போக்கின என் ஸ்வாமி ; “மாதாபிதாப்ராதா” இத்யாதிப்படியே. (வம்புலாஞ்சோலை) வம்பு - பரிமளம். உலாவுதல்-வர்த்திக்கை. நித்யவஸந்தமான சோலையென்றபடி. (மாமதிள்) பெரிய மதிள். (தஞ்சமா மணிக்கோயிலே வணங்கி) தஞ்சமாக, அவனுக்[ருதருளின அழகிய கோயிலிலே வணங்கி. மணி - அழகு. (நம்பிகாள்) ஜ்ஞாநவிஷயத்திலே ஞானமுற்று பூர்ணராயுள்ளீர். ஜ்ஞாநத்தில் பூர்ணராயுள்ளீரென்னுமாம். (உய்யவித்யாதி) உங்களைப்போலன்றியே, நான் உஜ்ஜீவிக்கும்படி. (நான் கண்டுகொண்டேனித்யாதி) ஸர்வவிஷயங்களுமானவனை நான் அநுபவிக்கும் உபாயமான திருநாமம். ... ... ... ... ... ௬.

அ.—எழாம்பாட்டு. அல்லாதாரிருக்கிறார்கள் அவிசேஷஜ்ஞராகையாலே, விசேஷஜ்ஞராய் என்னோடு ஸஜாதீயராய்க் கவியாடித்திரிகிற நீங்களிறக்கிறதென்னென்கிறார்.

வ்யா.—(இற்பிறப்பறியீர்) அவர்கள் மாஹாத்ம்யத்திலே நின்ற நிலை அறியீர்கோள் ; அவர்கள் ஜந்மமறியீர்கோள். (இவரிவரென்றீர்) பண்டு தரித்ரனாய் க்லேசப்பட்டுப் போந்தானொருத்தன் இப்போது ஜீவிக்கப்புக்கால், “இது இவனளவதன்றிக்கே யிருந்தது, இதுக்கு வேறே யொருவன் அடியாகவேணும்” என்று அறியமாட்டாதே ஸ்ரீயஃபதியைப்போலே பிறப்பேபிடித்து ஸ்ரீமானாய்ப்போந்தானாக நினைப்புதிகோள். அன்றிக்கே, (இவரிவரென்னீர்) என்று ஒருசொல்லாய், ஒருவாசியறியீரென்னவுமாம். (இன்னதோர் தன்மை யென்றுணரீர்) இவனுக்குள்ளவளவு இன்னது என்று அறியமாட்டீர். (கற்பகம்) நினையாதே கொடுக்கும் என்புதிகோள். (புலவர்களை கொணென்று) விசேஷஜ்ஞராயிருப்பார் சிலர் அர்த்தித்து வந்தால் ஒளித்து[நூறுப்போமவனை, “எங்களுக்கு நிர்வாஹகன்” என்பர்கள். (உலகில் கண்டவாதொண்டரைப்பாடும்) லோகத்தில் நீசவ்யக்திகளால் திரிவாரை, கண்டவாபாடும்-ப்ரதிபந்நங்களைச் சொல்லித் திரிகிற. (சொல்பொருளாளீர்) ஶப்தத்துக்கும் அர்த்தத்துக்கும் நிலவரான நீங்கள். சொல்லுடைமைக்கு உங்களிற்காட்டிலில்லை. ப்ரமேயஜ்ஞாநமுடையார் உங்களத்தனையில்லை. (சொல்லுகேன் வம்மின்) உங்கள் ப்ரமேய

ஜ்ஞானத்துக்கும் சொல்லுக்கும் பாத்தம் போரும்படியான விஷயத்தை நான்காட்டித்தர வாருங்கோள். (சூழ்புனல் குடந்தையே தொழுமின்) ஓராறும் படைவீடும் வேணுமே உங்களுக்குக் கவிபாடும் போது. ஆறும்மலையும் படைவீடு முள்ளிட்ட பரிகரங்களும்வேணு[டு]மே. (நற்பொருள்காண்மின்) நன்றான அர்த்தத்தைக் கண்டுகொள்ளுங்கோள். பேறும்தானேயாய் தன்னைத்தருவதும் தானேயாயிருக்கை. (பாடிநீருய்மினித்யாதி) வாச்யங்களில்தலையானத்தைக் காட்டித்தந்தேன், அதுக்கு வாசகமான திருநாமத்தைப்பாடி உஜ்ஜீவியுங்கோள். "யஃபரஸ்ஸமஹேச்வர:" என்றதிறே இதினுடைய ஸங்க்ர[ஹ]ஹத்தை. வாசகங்களில்தலை - அகாரம்; வாச்யங்களில்தலை - கீழ் நான்சொன்னது. ... ... ... .. எ.

அ.—எட்டாம்பாட்டு. எங்கள்பூர்வவ்ருத்தத்தைப் பார்த்தால் நீர் சொல்லுகிற அர்த்தத்துக்கு நாங்கள் அதிகாரிகளாக வல்லோமோ ? என்ன;கெடுவீர்காள்!, நானன்றோ இவ்விஷயத்துக்கு யோக்யனாய் உங்களுக்கு உபதேசிக்கும்படி யானேன், ஆனபின்பு இவ்விஷயத்துக்கு ஆளாகாதாருண்டோ என்கிறார்.

வ்யா.—(கற்றிலேன்கலைகள்) ஓராசார்யனைப் பின்சென்று அவனுச்சரிக்க அநுச்சாரணம் பண்ணிப் போராமையாலே, ஶாஸ்த்ரீய ஜ்ஞான முண்டாய்த்ததில்லை. (ஐம்புலன்கருதும்கருத்துளேதிருத்தினேன்மனத்தை) மநஸ்ஸை பரவிஷயமாக்கி விஷயங்களிலே ப்ரவணமாகிற வாஹ்யேந்த்ரியங்களை காஷாவித்கமாகவாகிலும் விஷயங்களினின்றும்மாற்றி ப்ரத்யக்விஷயமாக்கினால் நல்வழி போகைக்குறுப்பாமிறே. ஶ்ரோத்ராதீந்த்ரியங்கள் விஷயங்களிலே யிழிந்து தான் நினைத்தபடியே போக மநஸ்ஸையும் அதுக்குறுப்பாக்கிப் போந்தேன் [உரு (திருத்தினேன்மனத்தை) விஷயப்ரவணரானவர்கள் விஷயப்ராவண்யம் போராது என்று ஔஷதஸேவை பண்ணியிருப்பார்களிறே; அப்படியே, விஷயங்களிலே மநஸ்ஸை வசிய முட்டிப்போந்தேன். (பெற்றிலேனதனால் பேதையேன்நன்மை) ஶாஸ்த்ரீயஜ்ஞானமின்றிக்கே விஷயப்ரவணனாகப்போருகையாலே அறிவுகேடனாய் ஹிதவிஜ்ஞாநம் பண்ணப்பெற்றிலேன். (பெருநிலத்தாருயிர்க்கெல்லாம்செற்றமேவேண்டித்திரிதருவேன், எனக்கு நன்மை ஸம்பாதியாமையன்றிக்கே, பரஹிம்ஸை பண்ணும் விரகே விஷுித்துப்போந்தேன். (பெருநிலத்தாருயிர்க்கெல்லாம் மஹாப்ருதிவியி லாத்மாக்களுக்கெல்லாம், சினமேவேண்டி. (திரிதருவேன்) இதுவே பணியாகத்திரிந்தேன். (தவிர்ந்தேன்) ஹேது அறிந்திலேன், தவிர்ந்து கொடுநிற்கக் கண்டேன். (செல்கதிக்குய்யுமாறெண்ணி) செல்லக்கடவவழி – பரமபதம், அங்கே புக்கு உஜ்ஜீவிக்கும்படியை மநோரதித்து. ஆறு - வழி. (நல்துணையாகப்பற்றினேனடியேன்) "பாபேயம்புண்டரீகாக்ஷநாம ஸங்கீர்த்தநாம்ருதம்" என்னுமதத்தைப்பற்றினேன். (நாராயணா) ரஸாயநஸேவை பண்ணினேன். (நாராயணாவித்யாதி) "நயாமிபரமாங்கதிம்" என்கிறபடியே அக்கரைப்படுத்தும் வஸ்துவுக்கு வாசகமான நாமம். ... அ.

அ.—ஒன்பதாம்பாட்டு. நீர் இத்திருநாமத்தைப் போர ஆத ரியாநின்றீர், இதென்ன நன்மையைத் தருமென்ன; இன்ன நன் மையைத் தருமென்கிறார்.

வ்யா.—(குலந்தரும்) ஸமவத் ஸம்பந்தத்தை உண்டாக்கும்.[டு வம்ஶத்தால் தண்ணியானொருவன் வம்ஶத்தாலுயர்ந்தா னொருவனு டனே ஸம்பந்திக்க, இன்னானுடைய ஸம்பந்தி என்று இவ னையும் உயர்ந்த குலத்திலே எண்ணாநின்றதிறே. (செல்வம் தந்தி டும்) ஐஶ்வர்யத்தைத்தரும். * நின்னையேதான் வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்றன்னையே செல்வந்தான் வேண்டி வருமிறே. மோ[ம க்ஷஸ்ரீயைத் தரு மென்றுமாம். (அடியார் படு துயரித்யாதி) ஸமவ த்மோக்ஷஸாதகரா யிருப்பார் கர்மாநுரூபமாகப்படும் து:க்கங்களை யெல்லாம் ஸ்யலமேஷமாக்கும். "ஆரே துயருழந்தார் துன்பு ற்றார்" இத்யாதி. (நீள்விசும்பருளும்) பரமபதத்தைக் கொடுக்கும். (அருளொடு பெருநில மளிக்கும்) அருளுடனேகூட, பெருநிலமுண் டு – பெரியஸ்யாநம் கைங்கர்யமாகிற பெரியபதம், அத்தைத்தரும். (வளந்தரும்) "ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவி லாவடிமை செய்யவேண்டு நாம்" என்று இவனுக்கு ப்ரார்த்நீய மான கைங்கர்யத்தையும் தரும். (வலந்தரும்) என்றாலும் அதுதன் னையேகாட்டும். அங்ஙனன்றியே,(வலந்தரும்,"யஆத்மதாபலதா"[உம என்று தன்னையுங்கொடுத்து தன்னை அநுபவிக்கைக்கிடான ஶக்தி யையும் கொடுக்கும். அங்ஙனன்றிக்கே, (அருளொடு பெருநில மளிக்கும் வலந்தரும்) தன்னை ஆஶ்ரயித்தவர்கள் தங்களளவன்றிக்கே, தங்களுடனே ஸம்பந்தித்தார்க்கும், தங்களருளோடே கூட, பெருநிலமுண்டு - பரமபதம், அத்தைக் கொடுக்க வல்லராம்படி [உரு யான ப்ரஸாதத்தைப்பண்ணும். (மற்றுந்தந்திடும்) இவனுக்கு ஹித மாய் இவனறியாதவற்றையும், இவனுக்கிதுவேணும் என்று அவற் றையும் தானேகொடுக்கும். (பெற்றதாயினுமாயினசெய்யும்) "ஶரீர மேவ மாதாபிதரௌ ஜநயத:"என்று பரீரத்தளவிலேயிறே அவர்கள்; ஆத்மாவுக்கு ஸ்வரூபஜ்ஞாந விகாஸத்தைப் பிறப்பிப்பானவனே[கூம யிறே. "ஸஹிவித்யாதஸ்தம் ஜநயதி தச்ச்ரேஷ்டம்ஜந்ம" என்று – ஜ்ஞாந ப்ரதனானவனேயிறே. (நலந்தருஞ்சொல்லை) இந்த நன்மைக ளெல்லாவற்றையும் தருஞ்சொல்லை. (நான்கண்டு கொண் டேன் நாராயணாவித்யாதி) உறவறிந்த நான். ... கூ.

அ.—பத்தாம்பாட்டு. திருநாமம் சொல்லுகைக்குக்காலம்[கூரு கழிந்ததென்னவேண்டா, சரமகாலத்திலே சொல்லவுமமையும்,இந்த நன்மைகளெல்லாம் தருமென்கிறார்.

வ்யா.—(மஞ்சுலாஞ்சோலை) மஞ்சுகள்படிந்து ஸஞ்சரிக்கிற சோலை. (வண்டறைமாநீர்) "ஜலத்தினுடைய ரஸ்யதையாலே ஈக்கள்வண்டோடு மொய்ப்பது" என்று ஆற்றுவரவுகளிலே சொல்லுவர்களாய்த்துத் தமிழர். (மங்கையார்வாள்கலிகன்றி) திருமங்கையிலுள்ளார், ஆழ்வார்வாளே தங்களுக்கு பலமாகவாய்த்து நினைத்திருப்பது. (செஞ்சொலாலெடுத்ததெய்வநன்மாலை) அழகிய செஞ்சொற்களாலே தொடுத்த அப்ராக்ருதமான அழகிய மாலை. (இவைகொண்டித்யாதி) ஶரீராவஸாநத்திலே யமவஶ்யதைக்கஞ்சாதே, இத்திருநாமத்தைச்சொல்லுங்கோள். (துயர்வரில்நினைமின்) இவ்வருகுண்டான வ்யஸநங்கள் வந்தபோதும் இத்தையே சொல்லுங்கோள். (துயரிலீர் சொல்லிலும்நன்றாம்) மரணதஶையிலே சொல்லவும் நினைக்கவும் போமோவென்ன; ஶரீரக்லேஶமற்று அருகேயிருந்தார்சொல்லிலும்இவனுக்கு நன்மையபக்கும். (நஞ்சுதான்கண்டீர் நம்முடைவினைக்கு) நம்முடைய ஊஷ்கர்மங்களுக்கு, ஆற்றவொண்ணாதநஞ்சு.*தேனும்பாலுமமு[து]துமாயதிருமால்திருநாமம், நம்முடைய ப்ராரப்தகர்மத்துக்குநஞ்சு; இத்தைஊப்பிபண்ணுங்கோள். ... ... ... ய.

ஜீயர்திருவடிகளேசரணம்.

முதற்பத்து - இரண்டாந்திருமொழி - வாலி. ப்ரவேஶம்.

ஸம்ஸார ஸ்வபாவத்தையும்தம்முடையஇதரவிஷய ப்ராவ[உ]ண்யத்தையும் அநுஸந்தித்து அஞ்சினவர்க்கு, அவ்வச்சமெல்லாம் போம்படி, தன் நிர்ஹேதுகக்ருபையாலே என்னை விஷயீகரித்து, தன் ஸ்வாமித்வத்தையும் எனக்குக்காட்டியருளினானென்றார் - கீழ்த்திருமொழியில்; "அம்பினாலரக்கர் வெருக்கொள நெருக்கி" என்று ராமாவதாரம் ப்ரஸ்துதமாய்த்து, திருமந்த்ரமும் ப்ரஸ்துதமாய்த்து; இத்திருமந்த்ரத்துக்கு அர்த்தமாகிறதுதான் - ஸ்வாமித்வ ஸௌலப்யாதிகளிறே; செய்த்தலையிலே குடில்கட்டிக்கிடந்து நோக்கும் க்ஷகனைப்போலே ஆஶ்ரிதரிருந்த விடத்திலே உகந்தருளின நிலங்களிலேவந்து நின்றருளி நோக்குகையாலே ஸ்வாமித்வம்ப்ரகாஶித்தது. எதிர்த்தலைபாராதே அவஸரப்ரதீக்ஷனாய்அந்தர்யாமி ரூபத்தாலே[ரு]யிருக்குமிது ஸ்வாமித்வ கார்யமிறே. அவ்வளவன்றிக்கே, இவனபேக்ஷித்தபோதே இக்கண்ணாலே கண்டநுபவிக்கலாம்படி கோயில்களிலேவந்து நிற்கிறஇதுக்கு மேற்படவில்லையிறே ஸௌலப்யத்துக்கு; இப்படி ஸௌலப்யத்துக் கெல்லையான உகந்தருளின நிலங்க ளெங்கும்புக்கு, உகந்தருளின நிலங்களுக்கெல்லையான ஹிமவானில்[ரு]திருப்பிரிதியளவும சென்று, அவ்விடமேதுடங்கி அநுபவிப்பதாகத் திருவுள்ளத்துடனே கூட்டுகிறார். ... ... ... *

அ.— முதற்பாட்டு. கீழ்-ராமாவதாரம் ப்ரஸ்துதமாகையாலே, வாலிவதம்பண்ணின சக்ரவர்த்தித்திருமகனெழுந்தருளி யிருக்கிற திருப்பிரிதியைச் சேரலாமென்று, திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறார்.

வ்யா.—(வாலிமாவலத்து) மஹாபலத்தையுடைய வாலி. வால் என்று - மிடுக்குக்குப்பேர்; மிடுக்கையிட்டுஇவனுக்கும் பேராய்த்து. மிடுக்குக்கு இவனை யெண்ணினால் பின்னையெண்ண விரலில்லாமல்நின்றுபோமித்தனை, இவனையொக்கஎண்ணலாவாரில்லைமிடுக்குக்கு. (உடல்கெட) அவனுடைய ஶரீரம்மங்க. (வரிசிலைவளைவித்து) அழகிய வில்லை வளைத்து. வரியென்று-அழகு. ஏலம் - நறுநாற்றம், கமழாநின்றுள்ள. (தண்டடமித்யாதி) தவிர்ந்து பரந்த பொழிலையுடைய இமயத்துள். (ஆலியித்யாதி) ஆலி - சிறுதூறல். சிறுதுளியையுடைத்தான மஹாமேகங்களானவை நிர்க்ஷணத்தாலே முழங்க. ஆலிமாமுகிலதிர்தர, பீலிமாமயில் நடம்செய்யும். (அருவரை) ஒருவராலும் தாவி யேறவரிதான மலையிலே. அருவரை முகட்டிலே, பீலித்தழையை யுடைய பெரியமயில் தன் கீழ்வயிறு மலைமுகட்டிலே அழுந்தும்படி யேறிநின்று கூத்தாடும். நடம்-கூத்து. (தடஞ்சுனைப்பிரிதி) தடம் - பெருமை. பெரிய சுனைகளையுடைய திருப்பிரிதியைச்சென்றடை நெஞ்சே. ... ... ... ... ௧

அ.— இரண்டாம்பாட்டு, வாநரஜாதியைக் கொண்டு ஸேதுவைக்கட்டிப்புக்கு லங்கையை யழித்த சக்ரவர்த்தித்திருமகனிருக்கிற திருப்பிரிதியைச் சென்றடை யென்கிறார்.

வ்யா.—(கலங்கமாக்கடல்) பெரிய கடலானது கலங்க. "வாபமாநப" என்றபோது கடல் கலங்கினபடி. (அரிகுலம் பணிசெய்ய) [உரு] குரக்குத்திரள் பணிசெய்ய. குலம்–திரள். "குரக்கினப்படைகொடு" இத்யாதி, "குரக்கினத்தாலே குரைகடல்தன்னை" இத்யாதி. (அருவரையணைகட்டி) பெரிய மலைகளாலே கடலைஅணைகட்டி. "கல்லார் கடலையடைத்து" இத்யாதி. (இலங்கைமாநகர் பொடிசெய்த வடிகள்) லங்கையாகிற மஹாநகரத்தைப் பாழாகப் பொடிசெய்த ஸர்வ[ஸ்வ] ஸ்வாமிகள். (இருந்த நல்லிமயத்து) ராவணவதம் பண்ணின ஶ்ரமமாற வெழுந்தருளி யிருக்கிற அழகிய ஹிமவானிடத்து. விலங்கல்-மலை. மலைபோலே வளர்ந்து. (விறலிரும் சினத்தன வேழங்கள் துயர்கூர) பர்வதோபமமாய் மிடுக்கையுடைத்தாய் மிக்கசினத்தையுடைத்தான ஆனைகள்மிகவும் க்லேஶிக்க. (பிலங்கொள்வாளெ[யி]ற்றரியவைதிரிதருபிரிதி) பிலத்வாரம் போன்ற பெரிய வாயையும் ஒளியையுடைத்தான பற்களையு முடைய ஸிம்ஹங்கள் ஸஞ்சரிக்கிற திருப்பிரிதியை அடை நெஞ்சே. ... ... ௨.

அ.—மூன்றாம்பாட்டு. நப்பின்னைப் பிராட்டியுடைய ஸம்ஶ்லேஷ விரோதியைப் போக்கின க்ருஷ்ணனெழுந்தருளி யிருக்கிற திருப்பிரிதியை அடை யென்கிறார்.

வ்யா.—(துடிகொள்நுண்ணிடை) துடியொத்த நேரிய இடை. [ரு (சுரிகுழல்) சுருண்டகுழல். (துளங்கெயிறு) ஒளிவிடுகிற தந்தபங்க்தியையுடைய. (இளங்கொடிதிறத்து) "பதிஸம்யோகஸுலபம்வய:" என்கிறபடியே ஒருகொள்கொம்பு தேட்டமான பருவத்தையுடைய நப்பின்னை விஷயமாக. (ஆயரித்யாதி) இடையருடைய இடியொத்த வெவ்விய த்வநியையுடைய ரிஷபங்களைத் திரளாக ஒருக்காலே கொ [௰ ன்றவனிருக்கிற நல்ல ஹிமவானில். (கடிகொளித்யாதி) பரிமளம் மிக்கு நன்றான பூவைப் படுக்கையாகக் கொண்டு. அமளி-படுக்கை. மணியறை-மாணிக்கப்பாறை. அறையென்று - பாறை. மாணிக்கப்பாறையிலுதிர்ந்த நல்லவேங்கைப்பூப்படுக்கையின் மேலே. (வேழம் பிடியினோடு வண்டிசை சொலத் துயில்கொளும் பிரிதி) களிற்றானை [௰ரு பெண்ணானையுடன், வண்டுகளிசைபாட, அப்பாட்டுத் தாலாட்டாகத் துயிலும் பிரிதியை யடைநெஞ்சே. ... ... ௩.

அ.—நாலாம்பாட்டு. ஆஶ்ரிதனான ப்ரஹ்லாதன் ப்ரதிஜ்ஞாஸமயத்திலே உதவினவன் வர்த்திக்கிற தேஶத்தை அடைஎன்கிறார்.

வ்யா.—(மறங்கொளாளரியுருவென வெருவர) க்ரோதந்தானொருவடிவு கொண்டாப்போலே யிருக்கிற ஸிம்ஹவடிவைக்கொண்டு, வெருவர - பயப்பட. [மூவுலகும் பிறவுமனைத்து மஞ்ச] கேட்டார் கேட்டாரெல்லாம் பயப்பட. "பீஷணம்" என்றும் "ம்ருத்யு ம்ருத்யும்" என்றும் சொல்லுகிற வடிவுதானே பயாவஹமாயிருக்கை. (ஒருவனதகல் மார்வம் திறந்து) ஒரு...... † த்துக்கொருவன். (அகல்மார் [உ௰ வம்) திருவுகிருக்கு இரைபோரும்படி வரபலம் ஊட்டியாக வளர்ந்த மார்வு. (திறந்து) திறக்கை - நீக்குகையாய், மார்வை நீக்குகையாவது - பிளந்தென்றபடி. (வானவர் மணிமுடிபணிதர) தேவர்கள் அபிஷேகங்களுடனே வந்து திருவடிகளிலே முடிபடவிழுந்து ப்ரணாமம் பண்ணவிருக்கிற நல்ல ஹிமவானில். (இறங்கி யேனங்களித்யாதி) பன்றிகளானவை படிந்து, வளைந்த கொம்புகளாலே யிடந்திட, அருகேகிடந்து அக்நிபோலே ஜ்வலியாநிற்கும் மஹார்க்யமான ரத்நங்கள். (அருவியொடிழிதரு) அருவிகளோடே அந்த ரத்நங்கள் மலைகளினின்று மிழிகிற பிரிதி சென்றடை நெஞ்சே. ... ௪.

அ.—அஞ்சாம்பாட்டு. அவ்வவதாரங்களுக்கடியாகத் திருப் [௩௰ பாற்கடலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறபடியை அநுஸந்திக்கிறார்.

வ்யா.—(கரைசெய்மாக்கடல் கிடந்தவன்) ஸகலாத்மாக்களையும் கரையேற்றுகைக்காகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தவன். (கனைகழலமரர்கள் தொழுதேத்த) நூபுராதி த்வநியையுடைய திருவடிகளை ப்ரஹ்மேஶாநாதிகள் தொழுது ஸ்தோத்ரம்பண்ண. (அரைசெய்

---

† இவ்விடத்தில் விட்டுப்போன க்ரந்தத்தை கோஶாகாரங்களில் காண்க.

மேகலை) திருவரை பூத்தாப்போலே யிருக்கிற. (அலர்மகளித்யா தி) பெரியபிராட்டியாருடனே பொருந்தியிருக்கிற நல்லஹிமவானி லே. (வரைசெய்மாக்களிறித்யாதி) மலையை யானையாக வகுத்தாப் போலே பெரிய வடிவையுடைய ஆனைகளானவை. (இளவெதிர் [ரு வளர்முளை) வெதிரிலே-மூங்கிலிலே. வெதிர்வளர்முளை - தடிந்தெ ழுந்த மூங்கிலிடை முளைத்து வளருகிற இளங்குருத்தைப் பிடுங்கி. (அளைமிகுதேன் தோய்த்து) மலைமுழஞ்சுகளிலேவைத்தபெரிய தேனை யழித்து, அதிலே மூங்கிற்குருத்தைத் தோய்த்து. (பிரசவாரி தன் னிளம் பிடிக்கருள்செய்யும்) பிரசம்-தேன். வாரி யென்பது - வெ [ம ள்ளம். தேனிலே மூங்கிற் குருத்தைத் தோய்த்துக் கொடுத்துத் தன்னிளம் பிடிக்கு, தேன்வெள்ளத்தையும் தண்ணீராக விக்காமல் கொடுக்கு மென்னுதல்; பிரசமென்று – தேனியாய், மிக்கதேனை யழித்து அதில் ஈயை வாரிப்பொகட்டு, அத்தேனிலே இளவெதிர் முளையைத் தோய்த்துக் கொடுக்குமென்றுமாம் : அப்படிப்பட்ட [மரு பிரிதியைச் சென்றடை என்கிறார். ... ... ... ரு.

அ.—ஆறும்பாட்டு. திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளின அப்போமனியோடே இங்கே வர்த்திக்கிறபடியை யநுஸந்திக்கிறார்.

வ்யா.—(பணங்களாயிரமித்யாதி) ஸஹஸ்ர ஃபணனான அழகிய திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வே ச்வரனே! என்று. (இணங்கிவானவரித்யாதி) ப்ரஹ்மேசாநாதிகள் திர ண்டு, தங்களுடைய அழகிய அபிஷேகங்களானவை திருவடிகளி லே பணியும்படி யிருந்த அழகிய ஹிமவானில். (மணங்கொளித் யாதி) நறுநாற்றம் கமழாநின்றுள்ள குருக்கத்தி பெரிய கொடிகளைவீசி நிமிர்ந்து, அவை மேவபடித்தைச்சென்றுமேவத்தைக்கொள்கொ [உரு ம்பாகப் பற்றி. (பிணங்கு பூம்பொழில்) செருந்திக் கொடிகளும் சோலைப்பணைகளும் தன்னிலே செறிந்த பூம்பொழி லென்னுதல்; "சலங்கொண்டு மலர்சொரியும்" என்கிறபடியே - கொம்பும் கொ டியும் இசலிப்பூக்கும் பொழிலென்னுதல். (நுழைந்து வண்டிசை சொலும்) முக்தர்ஸாமகாநம் பண்ணுமாப்போலே, † இவ்வண்டுக [௬ம ளும் இப்பொழிலிலே நுழைந்து புக்கு மதுபாநம் பண்ணிக் களித் து இசைபாடும் பிரிதி சென்றடை நெஞ்சே. ... சா

அ.—ஏழாம்பாட்டு. (கார்கொளித்யாதி) தேவர்கள் புஷ்பவ்ரு ஷ்டி பண்ணி ப்ரணாமம் பண்ணும்படி ஸுலபனாயிருக்கிற திருப்பிரிதி யை நெஞ்சே அடை என்கிறார்.

வ்யா.—(கார்கொள்வேங்கைகள்) * மாமேல் மஞ்சுபடிந்தவேங்கை களென்னுதல்; காரென்று - பெருமையாய், பெருத்துத் தழைத்த வேங்கையென்னுதல். (கனவரைதழுவிய) பெரிய வரையைத்தழு விய. (கறிவளர்கொடிதுன்னி) கறியென்பது - மிளகு. பெருக்கக்காய் த்து வளருகிற மிளகுக்கொடி நெருங்கி. (போர்கொள்வேங்கைகள்)

† இங்கேவிட்டிருக்கும் சிலபதங்களை கோசாந்தரங்களில்கண்டுகொள்வது.

யானையுடனே பொருகிற வேங்கைப்புலிகளானவை. (புனவரைதழுவிய) புனங்களையுடைத்தான மலைமுழஞ்சுகளிலே, துணையுடனே யணைந்து கிடக்கும். (பூம்பொழிலிமயத்துள்) (ஏர்கொள்பூஞ்சுனைத்தடம் படிந்து) அழகியபூக்களை யுடைத்தான சுனைகளின்கரையிலே[று] யிருந்து. படிதல் – இருத்தல். (இனமலரெட்டு) * அஷ்டஸா புஷ்பங்களைச் சொல்லுதல்; கைக்கெட்டின பூக்களெல்லா மிட்டென்னுதல்; "எண்டிசையுமுள்ள பூக்கொண்டு" என்கிறபடியே. (இமையோர்களித்யாதி) தேவர்கள், ஆயிரந் திருநாமங்களையுஞ்சொல்லி ஸ்தோத்ரம் பண்ணித் திருவடித்தொழும் பிரிதிசென்றடை நெஞ்சே. ... எ.

அ.—எட்டாம்பாட்டு. ஸர்வஸ்மாத்பரனாய் ஜகத்காரணபூதனை ஸர்வேஶ்வரன் இங்கே யிருந்து ஆஶ்ரிதார்த்தமாக என்றும் ப்ரஹ்மேஶாநாதிகள்வந்துதொழுகிறபிரிதிசென்றடைநெஞ்சே என்கிறார்.

வ்யா.—(இரவுகூர்ந்து) ஆதித்ய கிரணப்ரவேஶமில்லாமையாலே ராத்ரியேயா யிருக்கும். (இருள்பெருகிய வரைமுழை) இருள்மிக்க [மிடு] மலைமுழஞ்சுகளிலே. (இரும்பசியது கூர) பெரும்பசியானது மிக. (அரவமாவிக்கும்) அம்மலைமுழஞ்சுகளிலே கிடக்கிற மலைப்பாம்புகளானவை பசியாலே இளைத்து நெடுமூச்செறியும். ஆவிக்கை-நெடுமூச்செறிகை. (அகன்பொழில் தழுவிய) உள்ளான சோலையாலே தழுவியுள்ள. ஒருவரால்ப்ரவேஶிக்கவரிய மலையாகிற ஹிமவானி[ட]லே. (பரமனித்யாதி) ஸர்வஸ்மாத்பரனாய் ஜகத்காரணபூதனா யிருந்துள்ள ஸர்வேஶ்வரன், எங்களுக்காக அழகிய காளமேகம் போன்ற வடிவழகோடேயிங்கேயெழுந்தருளியிருந்ததே! என்று, தேவர்கள், ப்ரஹ்மாவோடேகூடச்சென்று திருவடித்தொழும் ஸர்வஜ்ஞ, ரமி. (பெருந்தகை) ஸர்வஸ்வாமி; அவனிருக்கிற பிரிதிசென்றடை நெஞ்சே. அ.

அ.—ஒன்பதாம்பாட்டு. திருநாமத்தைச் சொன்னாரை ரக்ஷிக்கைக்காகத் திருப்பிரிதியிலே யிருந்தான், அவனைச்சென்றடை நெஞ்சே என்கிறார்.

வ்யா.—(ஓதியித்யாதி) ஓதியாயிரந் திருநாமமென்கிறது – நாராயண னென்ற திருநாமத்தை. *ஓராயிரமா யுலகேழளிக்கு மதிறே[ாட] அது. திருநாமத்திலே அர்த்தாநுஸந்தாநத்தை யறிந்தவர்களுக்கு. (உறுதுயரடையாமல்) வந்து கிட்டுகிற, துயர் – உத்தராவம், தம் பூர்வாவம், இவையொன்று மிவனை ஸ்பர்ஶியாதபடி யருளின ஸ்வாமி யெழுந்தருளி யிருக்கிற அழகிய ஹிமவானில் (தாதுமல்கிய பிண்டிவிண்டலர்கின்ற) பிண்டி-அசோகு. பிண்டித்தாதும் சுண்ணமும் மிக்கிருந்துள்ள பூக்கள் அலர, அதில் தேஜஸ்ஸை. (தழல்புரையெழில் நோக்கி) அக்நிஜ்வாலையை யொத்த அழகைப்பார்த்து. (பேதைவண்டுகளெரியென வெருவரு) பைதலாய் விலைவதறியாத வண்டுகள் அக்நியென்றஞ்சும் திருப்பிரிதியைச் சென்றடை நெஞ்சே. ... சு.

அ.—பத்தாம்பாட்டு. இத்திருமொழியை அப்யஸிப்பார்க்கு தாபத்ரயாதிகளால் வரும்து:க்கம் வாராதென்கிறார்.

வ்யா.—(கரியமாமுகிற்படலங்கள் கிடந்தவைமுழங்கிட) கறுத்துப்பெருத்த மேகஸமூஹங்கள் பர்வதஶிகரத்திலே கிடந்து முழங்க. படலம்-திரள். அம்முழக்கத்தைக்கேட்டு, யானைகள் பிளிறுகிறனவாகக்கொண்டு. (பெரியமாசுணம்) மாசுணமாகிறது - பெரும் பாம்பு. (வரையெனவித்யாதி) மலைநகர்ந்தாப்போலே கரிய முகிற்கணத்தை யானையாக நோக்கிப் பேர்ந்து போகிற திருப்பிரிதியிலிருக்கிற ஸர்வேஶ்வரனை. (வரிகொள் வண்டறைபைம்பொழில்) வரி-அழகு. அழகிய வண்டுகள் பாடாநின்றுள்ள அழகிய பொழில். பைம்மை - அழகும், குளிர்த்தியும், பரப்பும். இப்படிப்பட்ட பொழிலையுடைய திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகரான விவருடைய இத்திருமொழியில். (அரியவித்யாதி) அருமை - பெருமை யுடைத்தான, இனிய இசையைப்பாடும்அநந்யப்ரயோஜநர்க்கு.(அருவினையடையாவே)து:க்கங்கள் இவனைச்சேராது. ... ... ... ௰.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

முதல்பத்து - மூன்றாந்திருமொழி - முற்றமூத்து. ப்ரவேஶம்.

தந்திருவுள்ளத்தைக்குறித்து,திருப்பிரிதியை ஆஶ்ரயி என்று உபதேஶித்தார்;அதுதமக்கவரைக்கிடாகத்வரித்ததில்லை;கெடுவாய்! நாமிருக்கிறவிருப்பின்பொல்லாங்குகண்டாயே, கடுகஒருக்ஷணம்முற்பட்டதுடலாகஆஶ்ரயிக்கபாராயென்கிறார்.கீழ்-திருமந்த்ரத்தைஅநுஸந்தித்தார்; அநந்தரம்,மந்த்ரப்ரதிபாத்யமான அர்த்தத்தை அநுஸந்தித்தார்;மந்த்ரத்ரஷ்டாவானவனிருந்ததேஶத்தை ஆஶ்ரயிப்போமென்கிறார். திருமந்த்ரந்தன்னை அநுஸந்திப்பார்க்கு ப்ரதிபாத்யவஸ்துவோபாதி, ருஷிச்சந்தோ தேவதைகளென்ன,பீஜஶக்திகளென்ன,ஶோஷணதஹநாதிகளென்ன, இவையெல்லாம் அநுஸந்தேயமாகக் கடவது. அதுவேண்டுவானென்னென்னில் ; "நமோநாராயணாயவென்று-பரமாத்மனைச்சூழ்ந்திருந்தேத்துவர்" என்னும் இம்மந்த்ராநுஸந்தாநம்பண்ணுவார் நித்யஸூரிகளாய் அவர்களுடையயாத்ரையாய்த்து இது; அத்தையிறே மு-முக்ஷுக்களின்கையான ப்ரக்ருதிவஶ்யனானவிவன் அநுஸந்திக்கப் பார்க்கிறது ; ஆகையாலே அவர்களோபாதியாகத் தன்னுடைய ஶரீரத்தையும் பாவித்து அநுஸந்திக்கைக்காக ஶோஷணாதிகள் வேண்டுகிறது ; இனி ருஷிச்சந்தோ தேவதையை யநுஸந்திக்கிலும் இம்மந்த்ரத்திலுண்டான ஆதராதிஶயத்தாலே பீஜஶக்திகளை யநுஸந்திக்கிறது மோக்ஷப்ரதமென்று அவ்வழியிலே யிவனுக்கும் விஶ்வாஸம் பிறக்கைக்காக. கீழ் - "பிரிதி சென்றடை நெஞ்சே" என்றார் ;

க்ரமத்திலே செய்கிறோம் என்று ஆறியிருந்தது நெஞ்சு ; கெடுவாய் ! ப்ரக்ருதி ஸம்ஸ்ருஷ்டராயிருப்பார்க்கு அப்படி செய்கிறோம் என்றாறியிருக்கப்போமோ, அப்ராக்ருதஸரீரபரிக்ரஹம் பண்ணினார்க்கன்றோ பின்னைச் செய்கிறோமென்றாறியிருக்கலாவதுஎன்று, இங்ஙனே, ப்ரக்ருதியினுடைய அஸ்திரதையையும், விஷயங்களினுடைய தண்மையையும், பற்றப்படுகிற விஷயத்தினுடைய வைலக்ஷண்யத்தையும் சொல்லி, இருந்தபடியிதுவானபின்பு ஒருகைகால் முறியவாகிலும் ஒருக்ஷணம் முற்பட்ட துடலாக ஆஸ்ரயிக்கப் பாராயென்று திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறார். ... ※

அ·—முதற்பாட்டு. (முற்றமூத்து) ஹிமவானில் திருப்பிரிதியை யாஸ்ரயியென்று திருவுள்ளத்தைக் குறித்து உபதேஸித்தார் ; அது தம்த்வரைக்கநுரூபமாக மேல்விழாதே திமிர்த்திருந்தது ; கெடுவாய் ! அங்கே ஸ்ரீவதரியை ஆஸ்ரயிக்க வாராயென்கிறார்.

வ்யா.—(முற்றமூத்து) மூப்பதெல்லாம்மூத்து (கோல்துணை[யுடையா) முன்பு தானெல்லார்க்கும் அபாஸ்ரயமாகவிறே நினைத்திருப்பது. "துன்னுகுழல் கருநிறத்தென் துணையே" என்று ஒரு பரமசேதநனைத் துணையாகப் பற்றுகிறானுமன்றே ; ஒருவிறகையிறே துணையாகப்பற்றிற்று.—நஞ்சீயர் ஸந்ந்யஸித்தருளுகிறவன்று "உண்ஙயாரணம்பண்ணும்மந்த்ரம்—நீ எனக்குமித்ரமாய்எல்லா ரக்ஷண[உம்ங்களும் பண்ணவேணும் என்றாய்த்து ; அத்தைக்கேட்டு, ஒருஸர்வஜ்ஞன் ஸர்வஸக்தி பரமசேதநனை ஓராசார்யன் முன்னாக இவ்வார்த்தையைச் சொல்லிவைத்து இக்காஷ்டத்தையும் இவ்வார்த்தைசொல்லும்படியான இவ்வாஸ்ரம ப்ராப்திதானென் ! என்றிருந்தேன்காண்" என்றருளிச்செய்வர். (முன்னடிநோக்கிவளைந்து) வளைகிற[உடநும் ஒருஸாத்விகன் காலில் வளையாதே, தன் புறவடியை நோக்கி வளைந்தானித்தனை. (இற்ற கால்போல்தள்ளி) ஸந்திகள் கட்டுக்குலைகையாலே முறிந்த கால்போலே வசமற்றுங் கையாலே யெடுத்து முன்னே தள்ளி. (மெள்ளவிருந்து) அந்த ஆயாஸம் பொறாமல் மெள்ளஇருந்து. கோலையூன்றி, முதுகையூன்றி, முழங்காலையூன்றி, நிலத்தையூன்றி, இப்படியிறே யிருப்பது. (அங்கிளையாமுன்) அப்படியிருந்தது தான்பொறாமல் இளைக்குமாய்த்து. இக்லேஸங்கள் வருவதற்கு முன்னே. (பெற்றதாய்போல் வந்தபேய்ச்சி) யஸோதைப்பிராட்டி தேவகிப்பிராட்டியைப்போலே பாவித்து வந்தபூதனை. (பெருமுலையூடுயிரை வாய்மடுத்துண்டு) பெரியமுலைவழியே இவளுயிரைப்பாலுட[கூடுனே வற்றும்படி வாங்கி யமுதுசெய்தவனுடைய ஸ்ரீவதரியை வணங்குவோம்வா என்கிறார். ... ... ... க.

அ.—இரண்டாம்பாட்டு. நம்மை முன்பு ஆஶ்ரிதவர்கள் அநாஶ்ரிக்கும்படி ஶரீரம் ஜரிப்பதுக்கு முன்னே ஸ்ரீவதரியை வணங்குவோம்வா என்கிறார்.

வ்யா.—(முதுகுபற்றிக்கைத்தலத்தால்) நிமிரநின்றவாறே, தௌர்பல்யத்தாலே ஶரீரபாரம் பொறுக்கமாட்டாதே முதுகுநோமே, நொந்தவாறே முதுகை ஒருகையாலேபற்றி. (முன்னொருகோலூன்றி) மற்றைக்கையாலே, முன்னடியிலே ஒருகோலை யூன்றி. (விதிர்விதிர்த்து) நடுங்கி நடுங்கி. (கண்சுழன்று) கண்ணுஞ்சுழலேயிட்டு. (மேற்கிளைக்கொண்டு)மேல்மூச்செறிந்து. (இருமி) இவரிப்படி யிளைத்த[௰வாறே, கோழையாரும் முகங்காட்டுவரே, அத்தாலே இருமி. (இதுவென்னிதியாழி) ஊராத்திலே இவரைக்கண்டவாறே, இதுவென் ! - இங்குவருகிறதென் ! என்று தங்களிலே சொல்லி, கிட்டினவாறே அப்பா ! மூத்தபடியென் ! என்று சிரித்து, முன்பு இவனை யாஶ்ரித்துப் போந்த யுவதிகள் ஏசாமுன். (மதுவித்யாழி) மதுபாநம்[௰௫பண்ணி வண்டுகள் செருக்கிப் பண்பாடாநின்றுள்ள வதரியை ஆஶ்ரயிப்போம். ... ... ... ... ... ௨

அ.—மூன்றாம்பாட்டு. ஶ்ரீரத்துக்குத் தவிர்ப்பாடான நிவதரியை வணங்காயென்கிறார்.

வ்யா.—(உறியிதியாழி) ஶரீரம மாம்ஸளமாயிருக்குமே யௌவ[௨௰யத்தில் ; வார்த்தகத்திலே அதுபசையற வுலர்ந்தவாறே, உறிக்கயிறு வரிந்தாப்போலே உடம்பு நரம்பெழுமே. (ஊன்தளர்ந்து) மாம்ஸம் க்ஷயித்து. (உள்ளம்வெள்கி) நெஞ்சானது விஷயங்களிலே ஆசையிக்கு; “வெள்குதல்-காமனைப் பிபடரும்” என்றானே. அன்றியே, (எள்கி) என்று பாமானபோது, எள்குதல்-ஈடுபாடாய், நெஞ்சு[௨௫தளர்ந்தென்றபடி. (நெறியை நோக்கி) நடுங்கி நடுங்கி நின்று, போகப்புகுகிற வழியின் ஊரத்தைப்பார்த்து, அந்த ஆயாஸம் பொறுமல் கண்ணுஞ்சுழலேயிட்டு நின்று. (நடுங்காமுன்) அந்த ஆயாஸம் பொறுமல் நடுங்காமுன் ; அறிதியாகில், நெஞ்சமே ! ஸ்நேஹத்தை யுடையையாய். (அறிபரநாமமசொல்லி) அவன் திருநாமங்களிலே, வேண்டியிருந்ததொரு திருநாமத்தைச்சொல்லி. (வெறிகொள் வண்டு பண்கள் பாடும்) நாறுநாறத்தை யுடைய வண்டுகள் மதுபாநமத்தமாய் பண் பாடாநின்றுள்ள ஸ்ரீவதரியை வணங்க வாராயென்கிறார். ... ... ... ... ... ௩.

நாலாம்பாட்டு. (பீளைசோரக் கண்ணிடுங்கி) கண்கள் இமை[௩௰விழுந்து ஸங்கோசித்துப் பீளைபாய்ந்து. (பித்தெழ மூத்திருமி) பிச்சேறினைப்போலே சொல்லுந்தெரியாதே சொல்லும்படி சித்தஸ்வலநம் பிறக்கும்படி ஜரித்து. (தாள்கள் நோவத் தம்மில் முட்டி) நடக்கப்புக்கவாறே, நெகிழ்த்துக் காலிடமாட்டாதே, முழந்தாள்கள்

தன்னிலே யடித்து. (தள்ளிநடவாமுன்) இப்படிக்குத் தள்ளித்தள்ளி நடவாமுன். (காளையாகிக்கன்றுமேய்த்து) பிள்ளையாய் கன்றுகளை மேய்த்து, பக்வனால் பசு மேய்க்கவேணுமே ; * கன்று மேய்த்தினி துகந்தகாளையிறே. (குன்றெடுத்தன்று நின்றான்) இந்த்ரன் கல்வர் [ஷித்தவன்று, கல்லெடுத்துக்காத்து நின்றான். (வாளையித்யாதி) அநுக்கயமாகப் பெரிய தடாகங்களிலே வளருகையாலே ஆனைக்கன்றுபோலே செருக்கி உகளிக்கிற குளிர்ந்ததடாகங்களாலே சூழப்பட்டவதரியை வணங்குவோம் வா என்கிறார். ... ... ௪.

அ.—அஞ்சாம்பாட்டு. பால்யத்தில்விஷயாநுபவம்பண்ணின படிகளைக்கீர்த்தித்து அதுவே காலக்ஷேபமாய் முடிந்து போவதற்கு முன்னே, ஸ்ரீவதரியை யாஸ்ரயிப்போம்வா என்கிறார்.

வ்யா.—(பண்டுகாமரானவாறும்) பூர்வத்தில் தான் ஸ்த்ரீகளுக்கு ஆதரணீயனாய்ப் போந்தபடியும். (பாவையரித்யாதி) ஒருபருவத்தில் பெண்களுடைய வாயம்ருதத்தை ஸேவித்தபடியும். (வாழ்ந்தவாறும்) தான் ஜீவித்தபடிகளும். (ஒக்கவுரைத்திருமி) இருமலொக்க அவற்றையும் சொல்லி. பூர்வவ்ருத்தத்தைச் சொல்லத்துடங்கி, நடுவே இருமல் வந்தால் இருமி, அநுஸ்ரமாக விட்டுரையிலே சொல்லி, இப்படி இருமலோடொக்க உரைத்து. (தண்டுகாலா வூன்றியூன்றி) தண்டமேகாலாக வூன்றியூன்றி. (தள்ளிநடவாமுன்) இப்படி உடம் [பைத் தள்ளித்தள்ளி நடப்பதற்கு முன்னே. (வண்டுபாடுமித்யாதி) திருமேனியில் ஸ்பர்சத்தாலே மது ஸ்யந்திக்கிற திருத்துழாயிலே மதுபானம் பண்ணி வண்டுகள் பாடாநின்ற திருத்துழாய் மாலையையுடையவன் வர்த்திக்கிற திருவதரியை வணங்குவோம். ... ரு.

அ.—ஆறாம்பாட்டு. நம்மை விஷயீகரிக்கைக்கு முற்பாடனாய்வந்த ஸ்ரீவதரியை வணங்குவோம்வா என்கிறார்.

வ்யா.—(எய்த்தவித்யாதி) வார்த்தை சொல்லவும் மாட்டாதே யிளைத்து, நடுவேநடுவே யிரைக்க ஏங்கியேங்கி யிருமி, சரீரமும் தளர்ந்து. (பித்தர்போலச் சித்தம்வேறாய்) உன்மத்தரைப்போலே நெஞ்சு கலங்கி. (பேசிஅயராமுன்) சிலவார்த்தைகளை அநந்விதமாகச்சொ[ல்லி அயர்வதுக்கு முன்னே. (அத்தனித்யாதி) எனக்கு ஜநகனுமாய், உத்பாதகனுமாய், என்னை விஷயீகரிக்கவந்து நிற்கிறவன். (ஆழ்கடலைக் கடைந்த) மஹோததி என்கிறகடலை, ஒரு தாழியில் தயிரைக்கடையுமாப்போலே அநாயாஸேந கடைந்த. (மைத்தவித்யாதி) மைபோரி போன்ற தேஜஸ்ஸை யுடைய வடிவழகாலே என்னை யெழுதிக்கொண்டவன் ஸ்ரீவதரியை வணங்குதுமே. ... ... சு.

அ.—ஏழாம்பாட்டு. நம்முடைய பொல்லாங்கு சிரியாதே ஆதரி
க்குமவன் வர்த்திக்கிற வதரியை வணங்குவோம்வா என்கிறார்.

வ்யா.—(பப்ப!அப்பர்மூத்தவாறு) பப்ப! என்று குலைப்புண்டு
நடுங்குமாப்போலே நடுங்கும்படியென் ! என்று.(பாழ்ப்பது) பா[ரு
ழான ஶரீரம். (சித்திரமையொப்ப) ம்ரங்யிகள் சிமுற்றினால் இயங்கி
யிருக்குமாப்போலே யிருந்த. (ஐக்கள்போதவுந்த) சிக்கட்டிபோலே
ஶ்லேஷ்மம் தள்ள. (உன்தமர்காண்மினென்று) பருவத்தி லிவனுக்கு
நல்லராயிருந்த நீங்கள் பாரிகோள் என்று. (செப்புநேரித்யாதி) செப்
பொத்திருப்பதாய் விரஹஸஹமல்லாத மார்ஜவத்தை யுடையவர் [ம
கள்தாங்கள் சிரிப்பதுக்கு முன்னே. (வைப்பித்யாதி) நமக்குச்செய்
நிதியுமாய் ஐஶ்வர்யமுமானவன் வர்த்திக்கிற ஸ்ரீவதரியை வணங்கு
வோம்வா. ... ... ... ... ... ௭

அ.—எட்டாம்பாட்டு. அவிழைகள்பக்கலிலே, நாஶஹேது
வாம்படியான ஸ்நேஹத்தைப் பண்ணாதே, நமக்கு உஜ்ஜீவிக்கலாம்படி
ஸ்ரீவதரியிலே ஸ்நேஹத்தைப் பண்ணி வணங்குவோம்வா என்கிறார்.

வ்யா.—(கப்போமின் கைகிரேன்மின்) வருவார்க்கு விரோய
மாமே இவன் புக்கிருந்தவாறே ; அதுக்காக, சுணைகெட்டோ இங்கி
ருக்கிறதென் ? என்பர்கள். (இருமிரிளைத்தீர்) இருமலாலே போர
இளைத்தீர். (உள்ளம்கூசிரிட்டீர்) நெஞ்சு அஞ்சினீர். (என்றித்யாதி)
என்று இப்படி சொல்லுமவர்களாய், குவளைப்பூப்போன்ற கண்ணழ
கையுடையவர்கள் பக்கல், நமக்கு நாஶகரமான ஸ்நேஹத்தைத் தவிர்
ந்து. (நன்னெறிநோக்கலுறில்) நல்வழி போக வேண்டில். (வாசமித்
யாதி) பரிமளம் மிக்க திருத்துழாயை யுடையவன் வர்த்திக்கிற வதரி
யை வணங்குவோம்வா. ... ... ... ... ௮

அ.—ஒன்பதாம்பாட்டு. ஶரீரமானதுதான் ஜரித்து நெஞ்சு கல
ங்குவதுக்கு முன்னே ஸ்ரீவதரியை வணங்குவோம்வா என்கிறார்.

வ்யா.—(புலனித்யாதி) இந்த்ரியங்கள் ஸ்வம்ஸ்வம் விஷயங்களை
க்ரஹிக்கமாட்டாதபடி ஶரீரத்திலே ஜரித்து. (போந்தித்யாதி) முன்பு
ஆதரித்தவர்கள் உபேக்ஷித்து "போ" என்று தள்ள, அவர்கள் [௬ம
பக்கல் நின்றும், போந்திருந்து - ஆளற்றவிடத்திலே போந்திருந்து,
"நாம் பட்டதோ!" என்று நெஞ்சு தளர்ந்து கலங்க. (ஐக்கள்போத
வுந்தி) ஶ்லேஷ்மம் தள்ளி. (கண்டபிதற்றுமுன்) ஸ்வலித்து தோ
ற்றிற்றுச் சொல்லுவதுக்கு முன்னே. (அலங்கலாயதண்டுழாய் கொ
ண்டு) அலங்கலென்று-மாலையும், ஒளியும். செவ்வித்திருத்துழாய்[௬௫
கொண்டென்னுதல் ; தண்டுழாய் மாலையைக் கொண்டென்னுதல்.
ஆயிரம் திருநாமங்களையும் சொல்லி. (வலங்கொளித்யாதி) வலம் -
நன்மை. தங்களுக்கு வேண்டி அநந்யப்ரயோஜநரான ஸ்ரீவைஷ்ண
வர்கள் பாடுவதாடுவ தாகிற வதரியை வணங்குவோம்வா. ... ௯

அ.—பத்தாம்பாட்டு. இத்திருமொழியை அப்யஸித்தாரிட்டவ
ழக்கு பரமபத மென்கிறார்.

வ்யா.—(வண்டுத்யாதி) வண்டுகளானவைகுளிர்ந்ததேனைப்பருகி
வாழுகிற தேசவிசேஷமான வதரியிலே வர்த்திக்கிற ஸர்வேச [௯
வரனை. (கண்டலித்யாதி) கண்டல் – தாழை. தாழைவேலியாலே சூ
ழ்ந்த திருமங்கைக்கு ராஜாவான திருமங்கையாழ்வார். (நீள்விசும்
பித்யாதி) ஸர்வமாந்யுபரிதநலோகங்களில் மேலான பரமபதம் அவர்க
ளிட்டவழக்கு. அதொழிய வேறு அவர்களுக்கு ஒரு அநுபவமில்லை.ய

ஜீயர்திருவடிகளேசரணம்.

முதற்பத்து – நாலாந்திருமொழி – ஏனம். ப்ரவேசம்.

ஸ்ரீபதரி என்றும் ஸ்ரீபதரிகாச்ரமமென்றும் இரண்டு திருப்ப
தியாய், அதில் அங்குத்தை யிருப்பாகிறது – ப்ரஜையின் ரக்ஷணத்
துக் குறும்பாகத் தாய் குடிநீர் குடிக்குமாப்போலே இவ
ற்றைவழிப்படுத்துகைக் குறும்பாக தான் தபஸ்ஸுபண்ணி ஹித [ம்ரு
காமனா யிருக்கிற விடமாய்த்து; இன்றாச்ரயிக்கும் நம் குறையே
குறையாக ஆச்ரயணீயனானவன் தன்குறைவறுத்துக்கொண்டிருந்தது,
ஆனபின்பு, நாமங்கேபோய் ஆச்ரயிப்போமென்று தம் திருவுள்ளத்
தோடே கூட்டுகிறார். இங்கு, திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செ
ய்தவிடமுண்டோவென்னில்; கீழே – "வணங்குதும்" என்றும்[உம
"அறிதியாகில் நெஞ்சமன்பாய்" என்றும் சொல்லிக்கொடுபோந்து,
இதிலும் – "துணிவினியுனக்குச் சொல்லுவன் மனமே" என்று மு
டியத் திருவுள்ளத்தைக்குறித்துச் சொல்லுகிறாராயிருக்கிறது. கீழ்
தாம்பெற்றதாக ச்சொல்லி அர்த்தாநுஸந்தாநம் பண்ணிப்போந்த
மந்த்ரப்ரதனை நாராயணன் வந்திருக்கிற தேசமாயிருக்குமிறே. *

வ்யா.— முதற்பாட்டு. (ஏனமுனாகி) வராஹகல்பத்தின் ஆதியை
ப்பற்ற, (முன்) என்கிறார். (இருநிலமிடந்து) இருமை – பெருமை
மஹாவராஹமாய், ரஸாதலத்திலே அழுந்தின பூமியை யிடந்து.
(அன்றிணையடி யிமையவர்வணங்க) ராவணவதாநந்தரம் தேவர்கள்
வந்து திருவடிகளிலே வணங்க. (தானவனாகம்) ஆகம் – சரீரம்.[௩ய
(தரணியிற்புரள) பூமியிலேபுரள. (தடஞ்சிலை குனித்த வென்
தலைவன்) பெரிய வில்லை வளைத்த என்நாயகன். (தேனமர் சோலைக்
கற்பகம் பயந்த) வண்டுகள் படிந்த கற்பகச்சோலை பூத்த. (தெய்வ
நன்னறுமலர்கொணர்ந்து) அப்ராக்ருதமான செவ்விப்பூக்களைக் கொ
ண்டு. தெய்வமென்று – நறுநாற்றமாய், நறுநாற்றத்தையுடைய நல்ல
பூக்களைக் கொண்டு. (வானவர்வணங்கும் கங்கையின் கரைமேல்)
ப்ரஹ்மேசாநாதிகள்வந்து ப்ரணாமம் பண்ணுகிற கங்காதீரத்தில்.
(வதரியாச்சிராமத்துள்ளானை) ஸ்ரீபதரிகாச்ரமத்திலே நிற்கிறவன்.க

அ.—இரண்டாம்பாட்டு. மாயமானைக்கொன்ற சக்ரவர்த்தித்திருமகன் ஸ்ரீவதரிகாஸ்ரமத்திலே வர்த்திக்கிறானென்கிறார்.

வ்யா.—(கானிடையுருவை) காட்டிடத்திலுண்டான அழகிய மானை. உருஎன்று—அழகு; "உருவாய மானையமையா" என்றாரிறே. [ரு (சுடுசரம் துரந்து ஸராந்நியை ஏவி. (கண்டு) தோற்றுவது மறைவதான மானைக்கண்டு. (முன்கடுந்தொழிலுரவோன்) முன் கடிய தொழிலைச் செய்த மிடுக்கன். உரவோன் - மிடுதகன். (ஊனுடையகலத்து) மாம்ஸம் மிக்க மார்விலே. அகலம் - மார்வு. (அடுகணைகுளிப்ப) கொல்லும்படி தைக்க. அடுதல்—கொல்லல். கொல்லுகிற அம்பு [ய அழுந்தும்படி. (உயிர்கவர்ந்துகந்த வெம் மொருவன்) அவனுயிரைவாங்கி, ஆஸ்ரிதவிரோதி போகப்பெற்றோம்! என்று ப்ரீதனானவன். (தேனித்யாதி) தேன்மாறாத தாமரைப்பூவை யிருப்பிடமாக வுடைய ப்ரஹ்மாவுடனே தேவர்கள் சென்று சென்றிறைஞ்சிட. (பெருகுவானிடை முதுநீர்க் கங்கையின்கரைமேல்) ஆகாஸத்திலே பெருகி [யக ஸ்ரீ பகீரதனுடைய தபஸ்ஸாலே வந்து பெருகுகிற கங்கைக் கரைமேல் ஸ்ரீவதரிகாஸ்ரமத்திலுள்ளானவன். ... ... உ.

மூன்றாம்பாட்டு. (இலங்கையுமித்யாதி) ஒருவராலழிக்க வரிய லங்கையையும், அதுக்கு அகழான கடலையும், ஒருவரால்அடர்க்க வரிய ஸாமர்த்யத்தையுடையனாய் ஜ்யேஷ்டனான வைஸ்ரவணனைவென்று வாங்கின ஸம்பத்தையுடைய பத்மநிதிகளை யுடையனாயிருக்கிற ராவணனையும், அவனுக்கு பலமான ராக்ஷஸ ஜாதியாக நஸிக்கும்படி பண்ணி, இப்படி க்ரூரமான வ்யாபாரங்களைப் பண்ணின ராஜாவானவன். "இக்ஷ்வாகூணாமியம் பூமிஸ்ஸஸைலவநகாநநா" என்னக்கடவதிறே. (கொழுந்துசூடியித்யாதி) ஆதித்யன் சூழவருகிற மேருவிலேதாக்கி, [உடு மேல்நின்றும் விசும்பிலே வெளுத்த துகிற்கொடியை விரித்தாப்போலே அலங்கரித்துக் கொண்டு. வலம் – நன்மை. மணி - அழகு. அத்திரியத்திலவமாஹிக்க அவர்களுக்கு எல்லா நன்மைகளையும் தரும் அழகிய கங்கைக்கரையில் ஸ்ரீவதரிகாஸ்ரமத்தான். ... ௩.

அ.—நாலாம்பாட்டு. ஆஸ்ரிதவிரோதிகளைப்போக்கி இவர்களுக்கு [௩ய பரமபதத்தையும் கொடுக்குமவன் ஸ்ரீவதரிகாஸ்ரமத்திலே நின்றருளினான், அவனை யாஸ்ரயியென்று தந்திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறார்.

வ்யா.—(துணிவினியித்யாதி) என் துணிவை யுனக்குச் சொல்லுவன் கேள் நெஞ்சே!. (தொழுதெழு தொண்டர்கள் தமக்கு) [௩டு தந்திருவடிகளைத் தொழுது உஜ்ஜீவிக்கவேணும் என்றிருக்குமடியார்க்கு. (பிணியித்யாதி) ப்ராப்ய விரோதிகளையும் போக்கி, * வானவர்நாடான பரமபதத்தைத் தரும். திருவடிகளிலே தொழுத மாத்ரத்திலே யிப்படி செய்யுமோவென்னில் (பேரருளாளனெம்பெரு

மான்) பரமக்ஷேபாவானகா ணவன். என்னையு முட்படக் கைக்கொண்டவனன்றே. (அணியித்யாதி) அழகிய மலரைக் குழலிலேயுடைய ரம்பைதுடக்கமானாருடைய துகிலையும் ஆபரணாதிகளையும் வாரிக்கொடுவந்து அழகிய நீரானது தூயமாணிக்கங்களைக் கொழித்து[௫ இறட்டுகிற மங்கைக்கரையில்ஸ்ரீவதரிகாஸ்ரமத்துள்ளான். ... ௪

அ.—அஞ்சாம்பாட்டு. பூதநாஸ்தநபாநம் பண்ணி வளர்ந்த க்ருஷ்ணன் நித்யவாஸம் பண்ணுகிறான் ஸ்ரீவதரிகாஸ்ரமத்திலே; அவனை யாஸ்ரயிப்போம் வா நெஞ்சே என்கிறார்.

வ்யா.—(பேயிடையித்யாதி) தாயாய்வந்தபூதனைமருங்கிலேயிருந்து ஒக்கவருகிற. (மற்றவள் பெருமுலை சுவைத்திட) "பெருமுலையூடு" இத்யாதி; – பெரியமுலை வழியே அவளுயிரையும் வற்றும்படி உண்டவன். * தாயாய் வந்தபேயிடையிலே யிருந்து பெரிய முலைப்பாலையும், அதுவொழிந்த அவள்ப்ராணனையும் சுவைத்திட. (மற்று) என்றது-முலைப்பாலொழிய அவள் ப்ராணனையு மென்[௰௫ றபடி. (பெற்ற தாயிடைக்கிருத்த லஞ்சுவனென்று தளர்ந்திட) யசோதைப்பிராட்டி, தன் ஒக்கலையி லெடுத்துவைக்க அஞ்சாநின்றே னென்று தளர்ந்திட. (வளர்ந்த வென்தலைவன்) இப்படிக்குவளர்ந்த என்னயன். இவளஞ்சுகிறது - கண்டாரெடுத்து முலைகொடுக்க, அவர்கள் நினைவறியாதே அவர்கள் முலையை யுண்ணுநின்றதுக்கு வயிறு[௨௰ பிடித்து அஞ்சுகிறாள்; "நலமே வலிதுகொல்" இத்யாதி. (சேயித்யாதி) உயரமோங்கின ஸிகரங்களினுச்சியாலே அண்டத்தை யரிக்கிற, அழகிய பொன்னாலே செய்யப்பட்ட பர்வதமுண்டு-மஹாமேரு, அதிலே விளங்கி நிற்பதாய், இடமுடைத்தான ஸிகரத்தில் நின்று மிழிந்த மங்கைக்கரையில்வதரியாச்சிரமத்திலேவந்து ஸந்[௨௫ நிஹிதனானான். ... ... ... ... ௫.

அ.—ஆறாம்பாட்டு. நப்பின்னைப் பிராட்டியுடைய ஸம்ஸ்லேஷ விரோதியானவ்ருஷபங்களைக்கொன்றவன் வதரியாச்சிராமத்துள்ளான், அவனை ஆஸ்ரயிப்போம் வா என்கிறார்.

வ்யா.—(தேரணங்கல்குல்) தேரொத்த நிதம்பம். (செழுங்[௩௰ கயற்கண்ணிதிறத்து) அழகிய கயல்போன்றகண்ணையுடைய நப்பின்னைப்பிராட்டிதிறத்து. (ஒரு மறத்தொழில் புரிந்து) அத்விதீயமான கொடிய தொழிலை மிகுத்து. புரிதல் - மிகுதல். (பாரணங்கிமிலே றேழும் முன்னடர்த்த) பூமியிலுள்ளார், "இவற்றினுடன் க்ருஷ்ணன் பொரப்புகாநின்றான்" என்று க்லேஸிக்க. அணங்கு - [௩௫ வருத்தம். வருந்த என்றபடி. இமில் - கருத்து. (ஏறேழும்முன்னடர்த்த) வ்ருஷபங்களேழையும் முன்பு கொன்ற. (பனிமுகில் வண்ணனெம்பெருமான்) குளிர்ந்த காளமேவம்போன்ற வடிவழகாலே யென்னை அடிமைகொண்டவன். (காரணமித்யாதி) ஹீரயன்மங்கையை

பூமியிலே அவதரிப்பிக்கிறபோது நடுவழியிலே ஒருமலை தகைந்து கொண்டு நின்றதாய், அத்தை இரண்டு பிளவாம்படி குத்தி, ஆனைகளையு முருட்டிக்கொண்டு இவ்வருகே போந்திழிந்ததாகச் சொல்லக்கடவது. அதுக்கடியென்னென்றால் (காரணந்தன்னால்) தன்னுடைய தபோபலந்தாலே. பஸ்மமாய்க்கிடந்த தன் பாட்டன்மாருடைய ஶ்ரேயஸ்ஸாக கங்கையைப் பெறவேணுமென்று தபஸ்ஸுபண்ணினானிறே: அந்தப்பழமையாலே வந்த மிடுக்கை யுடைத்தான ஜலத்தை யுடைத்தான கருவரையானது. கருமை-பெருமை. ஹிமவானாகிற பெரியமலையானது பிளவெழும்படியாகக் குத்திக்கொண்டாய்த்துக் குதித்தது. (வாரணம் கொணர்ந்த கங்கை) அப்பர்வதத்திலுண்டான ஆனைகளை யுருட்டிக்கொண்டு வந்த கங்கைக்கரையில் வதரியாச்ரமத்துள்ளான். ... ௬.

அ.—ஏழாம்பாட்டு. பரமோஜநாதுபாரரான இந்த்ராதிகளுக்குங்கூட ஆஶ்வஸிப்பித்துக்கடல்கடைந்த ஸர்வேஶ்வரன் வந்து வர்த்திக்கிறான் ஸ்ரீவதரிகாஶ்ரமத்திலே யென்கிறார்.

வ்யா.—(வெந்திறலித்யாதி) சினத்தையும் மிடுக்கையு முடைய ஐராவதத்தையும், கடல்கடைந்த அம்ருதத்தையும், ஸ்வர்க்கத்துடனேகூட தேவர்களுக்கு ராஜாவாயிருக்கு மிருப்பையும் இந்த்ரனுக்குக் கொடுத்தருளி, எனக்கும் தன்னைத்தந்தருளின. (எந்தை) எனக்குஜநகன். (எம்மடிகள்) எனக்கு ஸ்வாமி. (அந்தரமித்யாதி) ஸ்வர்க்கத்தில் தேவர்கள் திருவடிகளையாஶ்ரயிக்க ஒருமுகஞ்செய்து வந்து புகில் கடல் பொறாதென்று பார்த்து, ஆயிரம்முகத்தாலே போய்ப்புகு என்று ஸர்வேஶ்வரன் திருவுள்ளமாயருளி, அப்படிமந்தரபர்வதத்தில் நின்றும் வந்திழிந்ததாய்த்து. அன்றிக்கே, கங்கைதன்னை யாஶ்ரயிக்க அதுதானருளுகையாகவுமாம். (ஆயிரமுகத்தினால்) மேருவிலே யிழிந்து, ஹிமவானிலேயிழிந்து, பலமுகமாய் வரும்படியைச்சொல்லக்கடவதிறே. ... ... ... ... ௭.

அ.—எட்டாம்பாட்டு. ருத்ரனுடைய ப்ரஹ்மஶாபத்தைப் போக்கினவன் வர்த்திக்கிறதேஶம் ஸ்ரீவதரிகாஶ்ரமமென்கிறார்.

வ்யா.—(மான்முனிந் தொருகால் வரிசிலைவளைத்த மன்னவன்) மாயமானை முனிந்து அத்தைக்கொல்ல அழகிய வில்லை வளைத்த ராஜா. வரி – அழகு. (பொன்னிறத்துரவோனூன் முனிந்து) பொன்போன்ற நிறத்தையுடையவனாகையாலே அதுவேபேராய், ஹிரண்யனென்று பேரையுடையனாய், மிடுக்கையுடையனாயுள்ளவன். (ஊன்முனிந்தித்யாதி) ஊன்-மாம்ஸம். அவனது, ஊனுடை உடலை-ஶரீரத்தை வெறுத்து, அது இருபிளவாம்படி உகிர்முனையை அழுத்தி. (அயனித்யாதி) ப்ரஹ்மாவானவன் தன்தலையை ருத்ரனறுக்கையாலே அவனை முனிந்து ஶபிக்க, அந்த ஶாபம் தவிர பிக்ஷையிட்டவன். "பிண்டி"

இத்யாதி, "ஊனமர்" இத்யாதி, "முடையடர்த்த" இத்யாதி, "சந் தார்தலை" இத்யாதி, "பாறேறியுண்ட தலைவாய் நிறைய" இத்யாதி. (தவம்புரிந்தித்யாதி) தபஸ்ஸாலே மிகவு முயர்ந்த ஸௌபரியென் கொடுக்குமங்கைக்கரையில்வதரியாச்சிராமத்துள்ளான். க்ஷத்ரியன் [நு தபோபலத்தாலே ப்ராஹ்மரிஷியானுப்போலே, இவனையும் தபோ பலத்தாலே (மாமுனி) என்கிறார். ... ... அ.

அ.—ஒன்பதாம்பாட்டு. ப்ரளயாபத்தில் ஜகத்தை யெல்லாம் வயிற்றிலே வைத்து ரக்ஷித்தவன் ஸ்ரீவதரிகாஸ்ரமத்திலே யுள்ளா னென்கிறார்.

வ்யா.—(கொண்டலித்யாதி) மேகங்கள், வாயுஸ்கந்தம், குலபர்வதங்கள். ஜலராஸியையுடைத்தாய் கோஷிக்கிற கடல், இவற்றுடனே லோகங்களையும் வைக்கப்பட்ட பெரிய வயிற்றை யுடையவன். எழுலகுமுண்டும் இடமுடைத்தாயிருக்கை. (ஒண் சுடரித்யாதி) அழகிய வந்த்ர ஸூர்யர்களையுடைத்தான உபரிதநலோ கங்களும், காலபேதமான காலமும், தான் என்று சொல்லலா ம்படியானவன். இவை ப்ரகாரமாக, தான் ப்ரகாரியாய் நின்றான். (அ ண்டமித்யாதி) அண்டமுண்டு - ப்ரஹ்மலோகம், அதினன்றே வழி கண்டுபோந்து, அதுக்கிவ்வருகிலாகாஸத்திலே யிழிந்து. எல்லா வற்றையும் பொறுக்கக்கடவ அவனியாளுண்டு-ஸூமி, அவள் [உய பொறுக்கமாட்டாதே அலமாக்கும்படி. (பெருகும் மணிமாமணி நீரித்யாதி) எங்கு மொக்கப் பரந்து பெருகாநின்றுள்ள தெளிந்த நீரையுடைய யமுனை. ... ... ... ... கூ.

வ்யா.—பத்தாம்பாட்டு. (வருந்திரையித்யாதி) பெரிய வேகத் தோடே வருகிற திரைகளை யுடைத்தான தெளிந்த ஜலத்தை [உடு யுடைத்தான மங்கையின்கரைமேல் ஸ்ரீவதரிகாஸ்ரமத்திலே நிற்கிற ஸர்வேஸ்வரனைக் கவிபாடுவது. (கருங்கடலித்யாதி) ஆற்றுநீர், ஊற்று நீர், மழைநீர், மூன்றுங்கூடித் தான் கருகியிருப்பதான கடல்வண் ணனை அநுஸந்தித்து, ஆழ்வாரருளிச்செய்த இவைதான். (வாய்ந்து செய்த) ஸமைத்த ப்ராஸஞ்லவ்யமான பத்துப்பாட்டையும் வல்ல[கூய வர்கள். (இருங்கடலித்யாதி) வெண்கொற்றக் குடைநிழலிலே பெ ரியகடல் சூழ்ந்த பூமியை யாண்டு, பின்னை ப்ரஹ்மாதி லோக ங்களையாண்டு, பின்பு நித்யஸூரிபதத்தைப் பெறுவர்கள். இத்தா ல் சொல்லிற்றாய்த்து - இவனுடைப்பட்டதெல்லாம் தருமென்றபடி. "அறிவுடையார் அபுருஷார்த்தமென்று கழற்கடைக்கொண்ட ஐஸ்[கூடு வர்யத்தை 'நீணிடேன் மனைவாழ்க்கையை' என்றும் 'போந்தேன்' என்றும் விட்டுப்போந்தவிவர், இப்போது ஐஸ்வர்யத்தை பல மாக அருளிச்செய்வானென்?" என்று ஸட்டரை ஜீயர் கேட்க; "திருமங்கையாழ்வார் திருவவதரித்தபின்பு த்யாஜ்யமானஐஸ்வர்யமும் பரமபுருஷார்த்தத்துக்குள்ளே புகுந்ததுகாணும்; - ஸர்வேஸ்வரனை யா கவுமாம், நித்யஸூரிக ளாகவுமாம், ராஜாவாகவுமாம், பரித்து ஸாம வதலோஷமாக்கலாமாகில் என்றுகாணு மிவரிருப்பது" என்றருளி ச்செய்தார். ... ... ... ... ... ய.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

ஸௌரி ஹோமத்துக்கிடாகப் பலவடிவு கொண்டாப்போலே, ஆஸ்ரிதரை அநுபவிப்பிக்கைக்காக உகந்தருளின நிலங்க ளெங்கும் ஸந்நிதிபண்ணியிருக்கும் அவன்; இனி இவர்தாமும், * தானுகந்த வூரெல்லாம் தன்தாள்பாடி யெங்கும் புக்கு அநுபவிக்கவாய்த்[ரு து ஆசைப்பட்டிருப்பது. ஒருவிஷயத்தை அநுபவிக்கப்புக்கால் அவ்விஷயத்தின் அவயவங்கள்தோறும் ஸ்பர்சித்து பண்ணுமாப்போலேயாய்த்து இவரெங்கும்புக்கு அநுபவிப்பதாகப் பாரித் திருக்கிறதும். ஆக, விரோதி நிரஸநசீலனுமாய், ஆஸ்ரித ஸம்ஸ்லேஷைகஸ்வபாவனுமாய், ப்ரஹ்மாதிகள் ஆபந்நராமன்று அவ்வாபத்துக்களைப்போக்கி அவர்களுக்கு உஜ்ஜீவநிவர்த்தகனாயிருக்குமவன், நித்யஸூரிகளுடன், தன்பக்கல் ருசியுடையாருடன், கேவலம் ப்ராஹ்மணருடன் வாசியற ஸர்வ ஸமாஸ்ரயணீயனாய்க்கொண்டு ஸ்ரீஸாளக்ராமத்திலே வந்து ஸந்நிஹிதனானான், அங்கே சென்று அவனை ஆஸ்ரயிப்போம் என்று திருவுள்ளத்தோடே கூட்டுகிறார். ... *

(முதற்பாட்டு. கலையித்யாதி) கலைகளும், யானைகளும், குதிரைகளும் வர்த்திக்கிற காட்டைக் கடந்துபோய். (சிலையுமித்யாதி) வில்லும் அம்பும் துணையாகச் சென்றான் வென்றியை யுடைத்தான ஸமரபூமியிலே. (மலையித்யாதி) பர்வதங்களைக்கொண்டு, அலை மோதுகிற கடலை அணைசெய்து. (மதிளித்யாதி) அரணான மதிளையும், [உ௫ அம்மதிளுக்கு அரணாய் அகழாயிருக்கிற கடலையு முடைய லங்கையில். (வாளரக்கரித்யாதி) ஒருதேவதையை ஆஸ்ரயித்து, அதின் பக்கலிலே ஒருவாளைப்பெற்று, அது தனக்கு ரக்ஷகமாக நினைத்திருப்பானாய், ராக்ஷஸஜாதிக்கெல்லாம் நிர்வாஹகனாயிருக்கிற ராவணன் தலைபத்தையு மறுத்து, "ஆஸ்ரித விரோதி போகப்பெற்றோம்" [உ௬ என்று உகந்தவன் வர்த்திக்கிற ஸ்ரீஸாளக்ராமத்தை அடை நெஞ்சே என்கிறார். ... ... ... ... க

இரண்டாம்பாட்டு. (கடஞ்சூழ்கரியும்) மதஜலத்தை யுடைத்தான ஆனையும். (பரிமா) குதிரை. (ஒலிமான் தேரும்) ஆரவாரத்தை யுடைய பெரிய தேரும்; "ஆனைப்புரவித்தேரொடுகாலாளணி[௩௬ கொண்ட" என்கிற சதுரங்க பலத்துடனே. (உடனித்யாதி) இவையுடனே, பணிமுடிஞுப்போலே பெருமாளையும் பரிகரத்தையும் சூழ்ந்துகொண்டதாய்த்து. (கடியிலங்கைபொடியா வடிவாய்ச் சரந்துரந்தான்) கடி-அரண். அரணையும் சதுரங்க பலத்தையு முடைய லங்கை பொடியாக. (வடிவாயித்யாதி) வடி-கூர்மை. கூரிய அம்பை ஏவி[௩௫ னான். (இடமித்யாதி) பெரிய ஆகாசத்தில் தேவர்கள் இடமடையப் புகுந்து வணங்கும். (மணங்கமழுமித்யாதி) நலுநாற்றம் கமழாநின்ற தடாகங்களை யுடைத்தாய் அழகாயிருந்துள்ள சாளக்கிராமத்தை யடைநெஞ்சே. ... ... ... ... உ.

மூன்றாம்பாட்டு. (உலவுதிரையித்யாதி) ஸஞ்சரிக்கிற திரைக் கிளப்பத்தையுடைத்தான கடலும், மலையும் துடக்கமான எட்டுதிக்கும், சிலநாள் வர்த்திக்கக்கடவராயிருக்கிற சந்த்ர ஸூர்யர்களும், அதுக்கு எதிரான இருளுமாய், இவையுடைய தான் என்கிற[று சொல்லாலே சொல்லலாம்படி தனக்கு ப்ரகாரமாக வுடையனாய்நின்றான். இத்தால் - ஜகதாகாரனாய் நிற்கும் நிலையைச் சொல்லிற்று. மேல் அஸாதாரண விக்ரஹயுக்தனாய் நிற்கிற நிலையைச் சொல்லுகிறது (வென்றிவிறலாழிவலவன்) ஆஶ்ரிதவிரோதிகளை வெல்லும் மிடுக்கையுடைய திருவாழியை வலவருகே யுடையவன். (வானோர்[ய தம் பெருமான்) கையுந் திருவாழியுமான அழகை, காட்டிலெறித்த† நிலாவாகாமே புஜிக்கும் லோகத்தார்கள். (மருவாவரக்கர்க்கு) சேராத ராக்ஷஸர்க்கு. (எஞ்ஞான்றும் சலவன்) எப்போதும் எல்லாக்காலத்தும் ஶத்ரு. (சலஞ்சூழ்ந்தழகாய) ஜலஸம்ருத்தியை யுடைத்தாய் சுற்றும் அத்தாலே ஶ்ரமஹரமாய் அழகுதன்னை வகுத்தாப்போலேயிருக்கிற சாளக்கிராமம். ... ... ... ௩.

அ.—நாலாம்பாட்டு. (ஊரான்குடந்தையுத்தமன்) அதுக்கு முன்னேயுண்டான வரவயஸ்தித்தானத்தைச் சொல்லுகிறது.

வ்யா.—(ஊரான்) திருவூரகத்தைத் தனக்கு வாஸஸ்தானமாக வுடையவன். (குடந்தையுத்தமன்) திருக்குடந்தையிலே கண்வளர்[உய ந்தருளின ஶீலகுணத்தையுடைய உத்தமன். அன்றிக்கே, திருக்குடந்தையூரான் உத்தமனென்றுமாம். (ஒருகால்) ஒருக்கால். (இருகால்சிலைவளைய) கீழ்க்காலும் மேல்காலுமான சிலை வளைய. (தோராவரக்கரித்யாதி) நாமெதிரிட்டுப் பொரப்புகுகிறது ஆரோடே? நாந்தாமார்? என்று தன்னையும் பெருமானையும் நிரூபிக்க வறியாத[உரு ராக்ஷஸஜாதியைச் செற்றவன். தேர் வெள்ளமென்று—சதுரங்கபலத்துக்கு உபலக்ஷணம். (வற்றாவித்யாதி) மாறாதே வருகிற புனலாலே சூழப்பட்ட திருப்பேர்நகரான். (பேராயிரமுடையான்) ஆஶ்ரிதர்க்கு இழிந்தவிடமெல்லாம் துறையாம்படி அநேகமாயிரம் திருநாமங்களை யுடையவன். (பிறங்கித்யாதி) மிகவும்பெரிய சிறகையுடைய[சுய வண்டுகள் பாடுகிற மாலையை யுடையவன். (தாராவயல்சூழ்ந்த) தாராவாகிற பக்ஷிகளாலே நெருங்கின வயலாலே சூழப்பட்ட சாளக்கிராமமடை நெஞ்சே. ... ... ... ... ௪.

அ.—அஞ்சாம்பாட்டு. அதுக்கு முன்னான ஸூர்ப்பணகா வைரூப்யத்தை யருளிச்செய்கிறார்.

வ்யா.—(அடுத்து) கிட்டி. (ஆர்த்தெழுந்தாள்) ஆர்த்துக்கொண்டு வந்தாள். சக்ரவர்த்தித்திருமகனை நோக்கி எழுந்து கிட்டினவள். (பிலவாய்விட்டலற) பிலத்வாரம் திறந்தாப்போலே பெரியவாய் விட்டுக்கூப்பிட. (அவள்மூக்கயில்வாளால்விடுத்தான்) அயில்—கூர்மை.

†எறித்தல் - ப்ரகாஶித்தல்.

அவளுடைய மூக்கைக் கூரின வாளாலே அம்முகத்தில் நின்றும் விடுத்தவன். "செவியொடுமூக்கு அவளார்க்கவரிந்தான்" என்னக் கடவதிறே. (விளங்குசுடராழிவிண்ணோர்பெருமான்) * பரிதிவட்டம் போலும் சுடராடலாழியிறே. விளங்காநின்றுள்ள தேஜஸ்ஸையுடைய[ரு திருவாழியையுடையனாய், விண்ணோர்க்கு நாயகனானவன். (நண்ணாரித் யாதி) ஶத்ருக்கள் முன்னே சினத்து ஆரவாரித்துக்கொண்டுவந்த மஹாவர்ஷத்தை ஒருமலையையெடுத்துக் காத்தவன். தடம்-குளம். குளங்களாலே சூழப்பட்ட சாளக்கிராமமடை நெஞ்சே ... ரு.

ஆறும்பாட்டு. (தாயாரித்யாதி) தாய்வடிவைக்கொண்டுவந்த பூதம்[ம் னையுடைய ப்ராணனையும் யஶோதைப்பிராட்டி தயிரையும் வெண் ணெயையும் அமுதுசெய்த திருப்பவளத்தை யுடையவன். (தூயவவி யுருவிற்குறளாயச்சென்று) பழிப்பற்ற அழகை யுடையனாய், அத்தா லே ஸர்வேஶ்வரியங்களையும் அபஹரிக்கும்படி அழகில் வைலத் தையுடைய ஸ்ரீவாமநனாய்ச் சென்று. (மாவலியே) மஹாவலியே நா னிரக்க. (மூவடியித்யாதி) மூவடிமண் இப்போதே தரவேணும் என்று வாங்கி, ஸப்தலோகங்களையு மளந்தவன். தாயான் - தாவி னவன்;- கடந்தவன். (காயாவித்யாதி) காயாம்பூப்போன்ற நிறத்தை யுடையவன் சாளக்கிராமமடை நெஞ்சே. ... ... சா.

அ.— ஏழாம்பாட்டு.ஹிரண்யவயவ்த்தாந்தத்தைஅநுஸந்திக்கிறார்.

வ்யா.—(ஏஞ்ஞாரஞ்ச) ஶத்ருக்கள் அஞ்ச. (வெஞ்சமத்துள்) யுத்தத்திலே. அரியாய் ஸிம்ஹமாய். (பரியவிரணியனை) வைலத் தாலே மிக்க இரணியனை. (ஊனாரகலமித்யாதி) மாம்ஸம் நிறைந்த மார்வைப்பிளந்த அத்விதீயன். (இருசுடரித்யாதி) சந்த்ரஸூர்யர்களாய், ஆகாஶமாய், அக்நியாய், காற்றாய், குலபர்வதங்களாய், கடல் [உரு சூழ்ந்த பூமியை யுடைத்தானாய், இவை யெல்லாம் தான் என்று சொல்லலாம்படி இவற்றை ஶரீரமாகக் கொண்டு தான் ஶரீரியாய். (தானுமானானித்யாதி) அஸாதாரண விக்ரஹத்தைச் சொல்லுகிறது. அப்ராக்ருத திவ்யமங்களவிக்ரஹத்தை யுடையவனுடைய சாளக்கிராம மடை நெஞ்சே. ... ... ... ... ... எ.

அ.—எட்டாம்பாட்டு. (வெந்தாரித்யாதி) ருத்ரனுடைய மஹா பாதகத்தைப் போக்கினவன் நித்யவாஸம் பண்ணுகிற ஸாளக்ராம த்தைஅடை நெஞ்சே என்கிறார்.

வ்யா.—(வெந்தாரென்பும்) *பிணங்களிடு காடதனுள் நடமாடு பிஞ்ஞகனாகையாலே, இடுகாட்டிலே வெந்தவர்களுடைய வெந்து வே வாத எலும்பைப் பூண்டு, உடம்பிலே அச்சாம்பலையும்பூசி, கையிட த்து,"மூளையார்சிரம்" என்கிறபடியே - மூட்டுவாயுடைய தலையோ ட்டைக்கொண்டு, ஸப்தலோகங்களையும் ஸஞ்சாரம் பண்ணித்திரி கிற ருத்ரன் தானே சென்று, "என்னையனே! என்பாபத்தைப் போக்கி

யருளவேணும்" என்று அர்த்திக்க.(இலங்குமதுநீர்திருமார்வில்தந்தான்) விளங்காநின்ற அழகிய திருமார்வில் மிக்கரஸத்தையுடைய நீரைத் தந்தருளினான்; "முடையடர்த்த சிரமேந்தி" இத்யாதி. சந்தனப்பொழில் சூழப்பட்ட சாளக்கிராமம். ... ... அ.

ஒன்பதாம்பாட்டு. (தொண்டித்யாதி) "வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்" என்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளும், நித்யஸூரிகளும், ப்ராஹ்மணரும். (அண்டா) பரமபதநிலயனே. அண்டமென்று—பரமபதம்; பரமபதத்தைவிட்டுஇங்கேவந்தது எங்களுக்காக என்கிறார். எங்களுக்கு வேண்டுவன தாராயென்று சேரும்கோயிற்[டு] பக்கமெல்லாம். (வண்டாரித்யாதி) வண்டுகள் மொய்க்கப்பட்ட பொழிலேயும், அழகிய நீர்நிலையானவயலும், அதினருகில் மடுவில் ஈயல்பாய, குளிர்ந்த தாமரைகள் அங்குத்தை மடவார் முகமொக்க மலரும் சாளக்கிராமமடை நெஞ்சே. ... ... ... ...கூ.

பத்தாம்பாட்டு. (தாராவாருமித்யாதி) தாராவாகிற பக்ஷிகளாலே நிறையப்பட்ட வயல்சூழ்ந்த சாளக்கிராமத்தில் ஸ்வாமிகளையாய்த்துக் கவிபாடிற்று. (காரார்புறவிலித்யாதி) மேவங்கள் நிரந்தரவாஸம் பண்ணுகிற பர்யந்தத்தையுடைய திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகரான ஆழ்வாரருளிச்செய்த தமிழ்மாலை. (ஆராரித்யாதி) லோகத்தில் ஜ்ஞாநாதிகராய் *ஆமாறறிவுடையார் யாவர்சிலர், உங்களு[உம]க்கு பரமபதத்தை ஆளவேண்டியிருந்திகோளாகில், அவனுடைய திருநாமங்களைச்சொல்லுங்கோள்; அதுமாட்டிகோளாகில், இத்திருமொழியைச்சொல்லுங்கோளென்கிறார். ... ... ... ய.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

---

முதற்பத்து – ஆறாந்திருமொழி – வாணிலா.ப்ரவேஶம்.

---

திருவுள்ளத்தைக் குறித்து, உகந்தருளின திருப்பதிகளை ஆஶ்ரயி என்று பலகாலும் சொல்லிக்கொடு போந்தார்; அதுவும் அப்படி செய்வதாக ஒருப்பட்டுநின்றது; அநந்தரம், தம்முடைய நிகர்ஷத்தை தாம் அநுஸந்தித்து, தம்முடைய பூர்வவ்ருத்தத்தையும், விஷயப்ராவண்யத்தையும், ஆர்த்தவிஷயத்தில் ஐயோ! என்னாதேபோந்தபடி[கூ]யையும், பரஹிம்ஸையே யாத்ரையாய்ப் போந்தபடியையும், இவற்றையடைய முன்னிட்டு, "ராவணோநாம துர்வ்ருத்த:" என்று விபீஷணாழ்வான் ஆகாஶத்திலே நின்று ஸ்வநிகர்ஷத்தை முன்னிட்டு ஶரணம் புக்காப்போலே, இவரும் தம்முடைய அநந்யமதித்வத்தை விண்ணப்பஞ்செய்து, நைமிஶாரண்யத்திலே நிற்கிற ஸர்வேஶ்வரன் திருவடியிலே, பெரியபிராட்டியார் முன்னிலையாகஶரணம்புகுகிறார். *

முதற்பாட்டு. (வாணிலாவித்யாதி) ஒளி பரம்பாநின்றுள்ள முறுவலையும், சிறுநெற்றியையும் ஸௌம்யதை மிக்கிருந்த தோளழகையு முடைய ஸ்த்ரீகளுடைய அழகியமுலையுடனே அணைகையாகிற ப்ரயோஜநத்தையே ஆசைப்பட்டேன். வனமென்பது – அழகு. பேணல் - ஆசைப்பாடு; அத்தை (பிழையெனக்கருதி) அதுதப்பென்று நினைத்து. (பேதையேன்) அறிவிலேன். (பிறவிநோயித்யாதி) பிறக்கையாகிற நோயை அறுக்கவேணும் என்று நினையாதே யிருந்தேன். அறிவிலியாகையாலே (எண்ணினேன்) நாம் முன்பு செய்ததென்? மேல் செய்யக்கடவதென்? என்றெண்ணினேன். எண்ணல் – ஆராய்தல். [எண்ணி) இப்படி ஆராய்ந்து. (இளையவரித்யாதி) தங்கள் பருவத்தாலே அகவாய் தெரியாதபடி மயக்கி அகப்படுத்திக்கொள்ளும் ஸ்த்ரீகளுடைய கலவியின் ப்ரகாரத்தை நினைத்து லஜ்ஜித்தேன். கலவியின்திறமாவது – அவர்களாதரிக்கும் படியும், உபேக்ஷிக்கும்படியும் இவனை வையும்படியும், குறிக்கும்படியும், பின்னை உடம்புகொடுக்கும்படியும், பிரியப்புகுகிறேன் என்று முதுகுகாட்டும்படியும், இவையிறே. (நாணினேன்) அநுதபித்தேன். (வந்தித்யாதி) அவர்களை விட்டுவந்து உன்திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய். க.

அ.—இரண்டாம்பாட்டு. திருவடிகளிலே விழுந்து ஶரணம் புக்கவாறே திருவடிகளில் ஸௌம்யதை நெஞ்சிலேபட்டது; இத்தை விட்டுப் பாழே காலத்தைப்போக்கினேனென்று இழந்த காலத்துக்கு அநுதபிக்கிறார்.

வ்யா.—(சிலம்படியுருவில்) சிலம்பாலே அலங்கரிக்கப்பட்ட அடியையும், வடிவழகையுமுடைய. (கருநெடுங்கண்ணார் திறத்தனாய்) *அஸிதேக்ஷணைகளாயிருக்கிறவர்கள் திரள்களிலே அகப்பட்டு. [உ௫ திறம் - திரள். ஒருவிஷயத்தில் பூர்ணமாக அநுபவிக்கலாவதில்லையே. (அறத்தையே மறந்து) "மறந்தேனுன்னை முன்னம்" என்கிற படியே * அறவனையாய்த்து மறந்தது. (க)அனந்தலிலும் வாய்வெருவுவது அவர்களையேயாய்த்து. "அறஞ்சுவராகி நின்ற" என்றும் "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்" என்கிற தர்மத்தை மறந்து. (புலன்படிந்துண்ணும் போகமேபெருக்கி) இந்த்ரியங்கள் விஷயங்களிலே படிந்து புஜிக்கும் ஸௌமநத்திலே ஆசைபெருக்கி. (போக்கினேன் பொழுதினைவாளா) "வாளாவிருந்தொழிந்தேன் கீழ்நாள்களெல்லாம்" என்றாரிறே ஆழ்வாரும். (அலம்புரிதடக்கையாயனே) கொள்ளுமவர்களுக்கு(உ)அலம்பாவம்பிறக்கக்கொடுக்கும்திருக்கையையுடைய க்ருஷ்ணனே. (மாயா) ஆஶ்சர்யமான குணசேஷ்டிதங்களை யுடையவனே. (வானவர்க்கரசனே) ப்ரஹ்மாதிகளுக்கு நிர்வாஹகனானவனே. மாயாவானவரென்று – நித்யஸூரிகளைச் சொல்லவுமாம். (வானோரித்யாதி) நித்யஸூரிகள் மிகவும் ஸ்நேஹித்து இறைஞ்சும் திருவடிகளையடைந்தேன், நைமிசாரணியத்துளெந்தாய்!. ... உ.

(க)அனந்தல் - நித்ரை. (உ)அலம்பாவம் - போதும் என்னும் நினைவு.

அ.—மூன்றும்பாட்டு. "போக்கினேன் பொழுதினைவாளா" என்றுரே, பொழுதுபோக்கினபடி தானென்னென்ன ; இப்படி யென்கிறுர்.

வ்யா.—(சூதினையித்யாதி) பகற்பொழுது சூதுபொருது அர்யோர்ஜநம் பண்ணியும், இரவு களவுகண்டு அர்யோர்ஜநம் பண்ணத்[து]துணிந்து புறப்பட்டும். இப்படி அர்யோர்ஜநம் பண்ணிக்கொள்ளும் காரியத்தைச்சொல்லுகிறது மேல் (சுரிகுழலித்யாதி) சுருண்டகுழலாலும் மடப்பத்தாலும் அகப்படுத்திக்கொள்ளுகிற ஸ்த்ரீகள்பக்கல் ஆசையைப் பெருக்கி. "நின்கண்வேட்கை யெழுவிப்பன்" என்னுமதுக்கு எதிர்த்தட்டாயிறே யிருப்பது. (கண்டவாதிரிந்த தொண்டனேன்) தோற்றிற்றுச்செய்து திரிந்த ஹேயன். (நமன்தமரித்யாதி) யமபடர் செய்யும் வேதனைக்கு நடுங்கி ஒடுங்கினேன். (வேலையித்யாதி) வெளுத்த திரைகளையுடைய திருப்பாற்கடலைக் கலங்கும்படி மந்தரபர்வதத்தை அதிலே நட்டுக் கடைந்த என்னுயனே!, வந்துன்திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய். ... ... ௩.

அ.—நாலாம்பாட்டு.அத்தனையோ, இன்னமும் செய்ததுண்டோவென்ன ; இன்னமும் செய்தது குவாலென்கிறுர்.

வ்யா.—(வம்புலாங்கூந்தல்) வம்பு – பரிமளம். நறுநாற்றம் கமழாநின்றுள்ள ஸ்வஸ்த்ரீயை விட்டு (பிறர்பொருளித்யாதி) பரத்ரவ்ய பரதாரங்களை ஆசைப்பட்டவர்கள் மரித்தால், அவர்களை யமபடர் தண்டிக்கும்படி சொல்லுகிறதுமேல் (நமன்றமரித்யாதி) யமபடர்வந்து பிடிக்கும்போது எல்லாக்லேசமும் பிறக்கும்படியாய்த்து வந்து பிடிப்பது. (எற்றிவைத்து இவனைப்பிடித்துத் தகர்த்துவைத்து. (எரியெழுகின்றவித்யாதி) செம்பாலே, இவனாசைப்பட்ட வடிவுபோலே ஒருபாவையைப்பண்ணி, அத்தை எரியெழக்காய்ச்சி, தங்கள் முகத்தை மாறவைத்து, "மஹாபாபீ ! சென்று தழுவிக்கொள்" என்று சொல்லும் வார்த்தை கேட்க அஞ்சி. (நம்பனே வந்துன்திருவடியடைந்தேன்) எல்லாரும்நம்பப்படுமவனே ! , *பற்றிலார்பற்றநின்றவனே,வந்துன் திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய் !. ௪.

அ.—அஞ்சாம்பாட்டு. அத்தனையோ, பின்னை யேதேனுமுண்டோவென்ன ; திருவுள்ளத்துக்கு அஸஹ்யமானவையு மெல்லாம் செய்துபோந்தே னென்கிறுர்.

வ்யா.—(இடும்பையாலித்யாதி) துஃகத்தாலே நெருக்குண்டு. ( இடுமினோதுற்றென்றிரந்தவர்க்கு ) தாரித்ர்யத்தாலே துஃகித்து, "எனக்கொரு பிடிசோறிடுங்கோள் எல்லாருமாக" என்று வந்திரந்தவர்களுக்கு. (இல்லையேயென்று) அவர்களுக்கு, இல்லை என்னும் போதும், நெடுஞ்சொல்லாலே மறுத்த நீசனேன். குளிர, இல்லை யென்பதும் செய்யாதே. நெடுமையாவது - க்ரௌர்யத்தின் மிகுதி. இவன் "இல்லை" என்ற சொல்லைக்கேட்டு, "அழகிதாக இவன்பாடே வேண்டி வந்தோம், இவன் வார்த்தை கேட்கவேண்டிற்றே, இதிற்காட்டில்

நஞ்சைத்தின்று முடிந்துபோகவமையாதோ" என்றிருந்தவன் நெஞ்சிலே புண்படும்படியாய்த்து "இல்லையே!" என்பது. (நீசனேன்) இப்படி தண்ணியேன். (நினைக்கிலேன் வினைப்பயன்றன்னை) கீழ்ப்பண்ணின பாபபலத்தை அநுஸந்திக்க மாட்டாதே யிருந்தேன். (கடுஞ்[சொலாரித்யாதி) வெட்டிய சொல்லையும் க்ரௌர்யமான செயலையுமுடையரா யிருப்பாராய், காலனுக்குஅதிமதராயிருக்கு மவர்களாலே படும், கொடுமிறையுண்டு-க்லேசம், அதுக்கு அஞ்சி, நான்வந்துஉன் திருவடியடைந்தேன் நைமிசாரணியத்து ளெந்தாய். ... ரு.

அ.—ஆறும்பாட்டு. அத்தனையோ, இன்னமும் செய்ததுண்டோ வென்ன; கைதொடனாய் பரஹிம்ஸைபண்ணிப்போந்தேனென்கிறார்.

வ்யா.—(கோடியவித்யாதி) கோடுதல்-வளைவு. வக்ரஹ்ருதயனாய், மறச்செயல்செய்து. (திரிந்துநாயினத்தொடும்திளைத்திட்டு) தண்ணியவர்களோடே இச்செயலுக்குத்துணையாயிருப்பாருடனேகளித்துத் திரிந்து (ஓடியுமித்யாதி) ஒருவனை இன்னவிடத்தேபோனால்ஹிம்ஸிக்கலாம் என்றால், அங்கேஉறவோடியும். (உழன்றும்) இப்படிக்கொத்த காரியங்களிலே உழன்றும். (உயிர்களே கொன்றேன்) ப்ராணிஹிம்ஸையே பண்ணினேன். அதுக்கடி சொல்லுகிறதுமேல் (உணர்விலேனாதலால்) அறிவிலியாகையால். (நமனூர்பாடியித்யாதி) யமபுரத்தை வென்றேன். அன்றிக்கே, கீழோடே யானபோது, இவன்பண்ணின பாப[உடைத்துக்கு இவன் நலியமாட்டான் என்று, வேறேயொரு படைவீடும் புதுக்கோமுற்றமு மிடவேணு மென்னும்படி பாபங்களையே பண்ணிப்போந்தே னென்னுதல். (பரமனே! பாற்கடல்கிடந்தாய்!) உனக்குஶேஷபூதரான ப்ரஹ்மாதிகளுக்குக் கூக்குரல் கேட்கத் திருப்பாற்கடலிலே சாய்ந்தருளினவனே. (நாடியித்யாதி) "நமக்குப்புகலேது" என்று தேடிவந்து உன்திருவடிகளை யடைந்தேன் நைமிசாரணியத்து ளெந்தாய். ... ... ... ... சா.

அ.—ஏழாம்பாட்டு. த்ரிவிதகரணங்களாலும் நான் செய்யாத அநீதியில்லை யென்கிறார்.

வ்யா.—(நெஞ்சினாலித்யாதி) நீதியல்லாதன நெஞ்சாலே நினை[நடைத்தும், வாயாலேசொல்லியும், கையாலேசெய்தும். (துஞ்சினாரித்யாதி) இவர்கள்செத்தால் கொடுபோம்வழியிற் கொடுமையைக்கேட்டு நடுங்கினேன். (விளங்கனிமுனிந்தாய்) விளவாய்நின்ற அஸுரனை முனிந்தவனே. (வஞ்சனேனித்யாதி) அநாதிகாலம் உன்னைவஞ்சித்துப்போந்தநெஞ்சில்பிரியாதே,பரமபதத்திலிருக்கிறப்போலே யிரு[நடுக்கிறவனே. (தானவர்க்கென்றும்நஞ்சனே) ஆஶ்ரிதவிரோதிகளுக்கு என்றும் நஞ்சானவனே!, வந்துஉன்திருவடி யடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய். ... ... ... ... எ.

எட்டாம்பாட்டு. (ஏவினார்த்யாதி) கலியாரென்கிறாராய்த்து - கலிகாலத்துக் கஞ்சினபடியாலே. கலியாரானவர், கலியுங்கோளென்று என்மேலே ஐந்து இந்த்ரியங்களையும் ஏவினார்; எங்ஙனே உஜ்ஜீவிக்கும்படி!. (ஐவர்கோவினாரித்யாதி) என்னையும் மநஸ்ஸையும் சுமையெடுத்துக்கொடு திரிகிற ராஜாக்கள் செய்கிற கொடிய செயலைத் திரியவிட்டேன். ஆரைப்பற்றி நீரவற்றை மீட்டதென்ன (குறுங்குடி நெடுங்கடல்வண்ணா) வேறுண்டோ, உன்வடிவழகன்றோ என்கிறார். திருக்குறுங்குடியிலே ஸந்நிஹிதனான உன்னுடைய கடல் போன்ற வடிவழகன்றோ என்னை மீட்டது. (பாவினாரித்யாதி) ஸந்தஸ்ஸுக்களாலே பூர்ணமான அழகிய சொற்களாகிற பலபூக்களையும் கொண்டு. (என்நாவினால்) இதரரை ஸ்தோத்ரம்பண்ணிப்போந்த என்நாவினாலே வந்து உன்திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய். ...அ.

ஒன்பதாம்பாட்டு. (ஊனுடைச்சுவர்வைத்து) மாம்ஸமாகிற மண்ணைக்கொண்டு சுவராகவைத்து.(என்புதூண் நாட்டி) எலும்பாகிற தூண்களைநாட்டி வீட்டைச்சமைத்து. (உரோமம்மேய்ந்து) மயிராகிற கற்றையாலே இவ்வகத்தை மேய்ந்து. (ஒன்பது வாசலித்யாதி) ஒன்பது வாசலை யுடைத்தான ஶரீரம். (பிரியும்போது) ஶரீரவியோக காலத்துக்கு. (உன்றன்சரணமே சரணமென்றிருந்தேன்) உன்திருவடியே புகலென்றிருந்தேன். என்கொண்டென்ன (தேனுடையித்யாதி) தேனையுடைத்தான தாமரைப்பூவை யிருப்பிடமாக வுடைய பெரிய பிராட்டியாருக்கு வல்லபனானவனே. (திரைகொளித்யாதி) ஸ்வஸந்நியாநத்தாலே திரைக்கிளப்பத்தையுடைய திருப்பாற்கடலிலே பள்ளிகொண்டவனே !. (நானுடைத்தவமித்யாதி) உன்னருளாலே உன்திருவடிகளை யடைந்தேன். புண்ணியனே என்று இவருடைய தபஸ்ஸாகிறது அவனருளேயிறே. நைமிசாரணியத்துளெந்தாய் !. கூ.

பத்தாம்பாட்டு. (ஏதமித்யாதி) துக்கங்கள் வந்து கிட்டாதபடி மநோரதித்து. (எழுமினோ வித்யாதி) தொழுதெழுமினோ என்று, (க) த்ரயஸ்த்ரிம்ஶத்கோடி தேவர்களுக்கு நாயகனான இந்த்ரன் வந்துஇறைஞ்சும் நைமிசாரணியத்தெந்தையையாய்த்துக் கலிபாடிற்று. (சிந்தையுளித்யாதி) நெஞ்சிலேவைத்து, பெரிய ஆசையோடே ஆழ்வா ரருளிச்செய்த இத்திருமொழியை அப்யஸித்தவர்கள். (ஓதமித்யாதி) ஶோவிந்தஸ்வாமியைப்போலே ஐஹிகபோகத்தில் ஸ்ப்ருஹையுண்டாகில் அத்தையுமநுபவித்து, நித்யஸூரிகளிலே ஒருகோவையாகவும் பெறுவர்கள். ... ... ... ம.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

(க) த்ரயஸ்த்ரிம்ஶத்கோடி - முப்பத்து முக்கோடி.

"ஒன்பதுவாசல் தானுடைக்குரம்பை பிரியும்போ துன்றன் சரணமே சரணமென்றிருந்தேன்" என்றார்; நீரிப்படி ஒருதலையிலவ்யவ ஸாயமாகச் சொல்லுகிறதென்தான்? இத்தலையில் செயலற்றவளவிலே ப்ரஹ்லாதனுடைய ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே, ப்ரதிஜ்ஞைபண்ணின அவ்விடத்தேவந்து தோன்றி, அவன்விரோதியைப்போக்கி உபக ரித்திலோமோ? அக்காலத்திலுதவாதார் இழக்க வேண்டாதபடி, "உன்னைப் பிரமாணித்தார் பெற்றபேறு" என்கிறபடியே - ஆஸ்ரித ரெல்லார்க்குமாகச் செய்த செயலன்றோ? ஆனபின்பு, உம்மைப் போலிருந்தார்க்கு இழக்கவேண்டாதபடி நீர்கிட்டி யநுபவிக்குமிது[ம வே குறையாகச் சிங்கவேழ்குன்றிலே வந்து நின்றோமே! இப்படி யிருக்க, ஒருதலையிலவ்யவஸாயமேயாக நீர்சொல்லுவானென்? என் று, தான் சிங்கவேழ் குன்றிலேவந்து ஸந்நிதிபண்ணினபடியைக் கா ட்டிக்கொடுக்க; அங்கே புருஷகாரபூதையான பெரியபிராட்டி யாருடனே கூடவிருக்கிற விருப்பை அநுஸந்தித்து ஹ்ருஷ்டராய்,[ம்ரு உத்தேஸ்யனு மிருக்கிறவன் வந்திருக்கிற தேஸமாகையாலே அங் குள்ளதடைய உத்தேஸ்யமாய், சிலரால்வந்து அணுகவொண்ணாத படி ஸுரக்ஷிதமாக எழுந்தருளியிருக்கப் பெற்றோம்! என்று ஹ்ரு ஷ்டராய் திருவுள்ளத்தோடே கூட்டித் தாமங்கேபோ யநுபவிப் போமென்று பார்க்கிறார். ... ... ... *

முதற்பாட்டு. (அங்கண் ஞாலமஞ்ச) அழகிய இடத்தை யுடை த்தான பூமியிலுள்ளார், ஹிரண்யனுடைய வரபலத்தை அநுஸ ந்தித்து, என்னாய் விளைகிறதோ! என்று அஞ்ச. அன்றியே, ஸ்ரீநர ஸிம்ஹனுடைய புறப்பாட்டை யநுஸந்தித்து, ஜகதுபஸம்ஹாரம் பிறக்கப்புகுகிறதோ! என்று பயப்பட.(அங்கோராளரியாய்)"ஆங்கே வளர்ந்திட்டு" என்கிறபடியே நரஸிம்ஹமாய். (அவுணன் பொங்கவா கம்) ஹிரண்யனுடைய அகன்ற மார்வத்தை. (வள்ளுகிரால் போ ழ்ந்த புனிதனிடம்) வள்-கூர்மை. கூரிய வுகிராலே பிளந்த புனித னிடம்.(பைங்கணானைபித்யாதி)பைம்மை-பசுமையும்,அழகும். பசுத்த கண்ணை யுடைய ஆனையைக்கொன்று அதினுடையகொம்பைப்பிடுங் ங்கிக்கொண்டு,சிவந்த கண்ணையுடைய யாளியானது, (க) ஸக்திபுரஸ் ஸரமாக (உ) அக்கோடுகளைத் திருவடிகளிலேயிட்டு வணங்கும் சிங்க வேழ்குன்றமே. ... ... ... ... க.

இரண்டாம்பாட்டு. (அலைத்தவித்யாதி) சீற்றத்தாலே கடைவா யுடனேநாக்கைஎற்றிக்கொள்ளுகிறபெரியவாயையுடைய மிடுக்கை[யு யுடைய ஸிம்ஹமாய். கோள் - மிடுக்கு. (அவுணனித்யாதி) கொலை க்கையாளனான ஹிரண்யனுடைய நெஞ்சையிடந்த கூர்த்த திருவுகிரை

(க) ஸக்திபுரஸ்ஸரமாக-ஸக்தியைமுன்னிட்டுக்கொண்டு,(உ)கோடுகளை-கொம்புகளை.

யுடையவனிடம். (மலைத்தவித்யாதி) மலைத்தல்-எதிர்பொருதல். செல் சாத்து - தீர்த்தயாத்ரை போகிற பெருங்கூட்டத்தைப் பறிக்க வந்திட்டவேடர். எறிதல் - இடுதல். (வன்துடியித்யாதி) துடிக்கு வலிமையாவது-பெருத்திருக்கை. பெரியதுடிவாயிலோசை செவிகடுக்க[டு கேட்டவர்கள் செவியும்கூசி நெஞ்சும் நடுங்க. (சிலைக்கையித்யாதி) கையும்வில்லுமாயிருக்கிற வேடருடைய, தெழிப்பு - வ்யாகுலமும், ஆர்த்துக்கொள்ளுகிற ஆரவாரமுமாய்க்கிடக்கும்சிங்கவேழ்குன்றமே.

மூன்றாம்பாட்டு. (ஏய்ந்தவித்யாதி) வடிவிற்பெருமைக்குத் தகுதியாயிருந்துள்ள பெரியவாயையுமுடைத்தாய், ஒளியையுடைத்தான பல்லையுமுடைத்தாய், மிடுக்கையுமுடைத்தான ஸிம்ஹமாய். (அவுணனித்யாதி) ஹிரண்யனுடைய மாம்ஸம்செறிந்த மார்வத்தைக் கூரிய வுகிராலே பிளந்த ஸர்வேஶ்வரனிடம். (ஓய்ந்தவித்யாதி) நிலத்திற் கொடுமையாலே அந்நிலத்தில் வர்த்திக்கிற ஆனை குதிரை துடக்கமானவையும், காட்டுத்தீக் கதுவி விண்டமலைகளும். (அன்றியும்) அதன்றியும். (நின்றித்யாதி) தன்னிலேநின்று இழைந்து நெருப்புப் பற்றி யெரிந்து மிக்க குறைக்கொள்ளியுமொழிய வேறொன்றில்லாத சிங்கவேழ்குன்றமே. ... ... ... ௩.

நாலாம்பாட்டு. (எவ்வுமித்யாதி) எவ்வம்-து:க்கம். எல்லாரையும் து:க்கயக்லேஶத்தைப் பண்ணும் கொடியவேலையுடைய ஹிரண்ய[உம் னுடைய நற்சீவனை வாங்கி; தோற்றாவிலே. (ஆகமித்யாதி) அவனுடைய நெஞ்சைக் கூரிய வுகிராலே பிளந்த ஸர்வேஶ்வரனிடம். (கவ்வுநாயும்) வேற்றாள்கண்டபோதே வந்து துடைகளிலே கடிக்கிற நாயும், அப்படிகடித்து விழவிட்ட பிணங்களைக் கவ்வும் கழுகுகளும். (உச்சிப்போதொடுகால்சுழன்று) மத்யாஹ்நத்திலே(க)சூறாவளியுமாய். கால் - காற்று. (தெய்வமல்லாலித்யாதி) தைவங்களுக்கல்லது செல்லவரிதாயிருக்கிற சிங்கவேழ்குன்றமே. ... ... ௪.

அஞ்சாம்பாட்டு. (மென்றவித்யாதி) சீற்றத்தாலேபல்லோடுமென்ற பெரியவாயையும், ஒளிவிடுகிற எயிற்றையும், மிடுக்கையுமுடைய ஸிம்ஹமாய். (அவுணன்பொன்ற) ஹிரண்யன் முடிய. (ஆகமித்யாதி) அவனுடைய மார்வத்தைக் கூரியவுகிராலே பிளந்த அம்மானிடம். (நின்றவித்யாதி) மாறாமல்நின்று எரிகிற அக்நியைச்(க)சூறாவளி முகந்து கொடு பெரிய ஆகாஶத்திலே போக. ஸ்வர்காதிலோகங்களிலுள்ள அக்நிஜ்வாலையைக்கதுவி ஸயப்பட்டுப்போக வென்றுமாம். (சென்றித்யாதி) மநுஷ்யர்க்குச் சென்று காணவரிய கோயில் சிங்கவேழ்[கடு குன்றமே. ... ... ... ... ... ரு.

(க) சூறாவளி - சுழல்காற்று.

ஆறும்பாட்டு. (எரிந்தவித்யாதி) சீற்றத்தாலே அக்நிஜ்வாலைபோல் ஜ்வலிக்கிற சிவந்த கண்ணையும், ஒளிவிடாநின்ற பெரிய வாயையும், எயிற்றையும் கண்டு. (இதென்னவுரு வித்யாதி) இதென்னவுரு! என்று பயப்பட்டு, இருவர் ஒருவழிபோகாமே (௧) இரிந்து சிதறியோடும்படி யிருந்த ஸர்வேஶ்வரனிடம். (நெரிந்த வேயினித்யாதி) நெருங்கின மூங்கிற் குத்து முழையுள் நின்று-மலைமுழஞ்சுகளில் நின்றும் புறப்பட்டு. நெருங்கின மூங்கிற்காட்டிடத்துப் பெரு வழியிலே, உழுவையுண்டு - புலி. (திரிந்த வானையித்யாதி) ஸஞ்சரிக்கிற ஆனைச்சுவடு பார்க்கும் சிங்கவேழ் குன்றமே. ... ... ௬.

ஏழாம்பாட்டு. (முனைத்த வித்யாதி) முனை - வலி. வலிய சினத்தாலே – கோபாக்நியாலே, அஸுரிஸைந்யத்தைப் போய்ச்சுடும். (மூவுலகித்யாதி) த்ரைலோக்யங்களும், மற்றுமுள்ள லோகங்களுமெல்லாம் பயப்பட, நாரஸிம்ஹமாயிருந்த அம்மானிடம். (கனைத்த வித்யாதி) செறிந்த அக்நியும் மலைகளும் வில்லுடை வேடருமாய், [௰௫ வேறொருவர்க்கும் நினைத்தலையும் சென்று கிட்டவரிய சிங்கவேழ் குன்றமே. ... ... ... ... ... ௭.

எட்டாம்பாட்டு. (நாத்தழும்பவித்யாதி) நாவானது தழும்பேறும்படி சதுர்முகனும் ருத்ரனுமாய். முன்பு ஹிரண்யனுக்கு பயப்பட்டு மநுஷ்ய வேஷங்களையே கொண்டு திரிந்தவர்கள், இப் [உ௰ போது ஹிரண்யன் பட்டவாறே, தங்கள் வேஷங்களையே கொண்டு. (முறையாலேத்த) தங்கள் ஶேஷத்வமுறையால் ஏத்த. (அங்கோரித்யாதி) ஹிரண்யனுடைய மாளிகையில் அவனிருக்கும் மண்டபத்தின் தூணிலே, மிடுக்கையுடைய ஸிம்ஹமாய்த் தோற்றின ஸர்வேஶ்வரனிருந்தவிடம். (காய்த்தவித்யாதி) காய்த்தவாகைநெற்று[உ௫ காற்றாலே கலகலென ஶப்திக்க. (கல்லதர்) மலைவழி. கல் – மலை; அதர் - வழி. மலைச்சாரல்வழியில், வேயானது–மூங்கில், ஆகாஶத்திலே கிட்டவளர்ந்து இழைந்து, தன்னிலே நெருப்புக் கொளுந்தியெரிகிற அக்நிஜ்வாலையாலே ஸ்வர்காதி லோகங்கள் சிவக்கும் சிங்கவேழ்குன்றமே. ... ... ... ... அ.

ஒன்பதாம்பாட்டு. (நல்லநெஞ்சே) எனக்குப் பாங்கான நெஞ்சே. (நாம்தொழுதும்) நாம்தொழுவோம். (நம்முடையவித்யாதி) நம்முடைய ஸம்ஸாரது:க்கம் போக, நமக்கு வகுத்த ஸ்வாமியைத்தொழுவோம். (நம்முடை நம்பெருமான்) நமக்கு ஸுலபனான நாயகன்.(அல்லிமாதர் புல்கநின்ற) * அலர்மேல்மங்கை யணைக்க[௩௰ அத்தாலே லக்ஷ்யஸ்வரூபனாய் நின்ற. (ஆயிரந் தோளனிடம்) "தோள்களாயிரத்தாய்" என்கிறபடியே – அநேகமாயிரம் திருக்கைகளையுடையவனிடம். (நெல்லிமல்கி யித்யாதி) நெல்லிமரங்களானவை கல்லிடைகளிலே முளைத்து வளர்ந்து, கல்லிடைகளிலே வேரோடியவை

(௧) இரிந்து - ஆரவாரித்துக் கொண்டு.

யாலே, அவ்வேர்கள் பருத்துக் கற்களைப்பேர்க்க. (புல்லிலை யார்த்து) மூங்கிலிலைகளானவை மேவசிக்க. (அதர்வாய்) அதர் - வழி. வழியிட்டத்து. சில்லியுண்டு - சில்லீடு, சில்லி சில்லென்று. (ஒல்லருந்) ஒல் - ஓசை. ஓசையருத சிங்கவேழ்குன்றமே. ... ௯.

பத்தாம்பாட்டு. (செங்கணாளியித்யாதி) சிவந்தகண்ணையுடைய யாளிகளானவை. (இட்டிறைஞ்சும்) யானைக்கோடுகளையிட்டுஇறைஞ்சும். (சிங்கவேழ் குன்றுடைய) சிங்கவேழ்குன்றைத் தனக்கிருப்பிடமாக வுடைய. (எங்களீசனெம்பிரானை) எனக்கு ஸ்வாமியுமாய் எனக்கு உபகாரகனுமானவனை. (இருந்தமிழ் நூற்புலவன்) பெரியமு தமிழ்நூலைச்செய்த ஜ்ஞாநாதிகன். புலவன் – வித்வான். (மங்கையாளன்) திருமங்கைக்கு நிர்வாஹகரானவர். (மன்னுதொல்சீர்) நித்யமான கல்யாணகுணங்களை யுடையருமாய். (வண்டித்யாதி) வண்டுகள் மது பாநம் பண்ணிக்களித்து ஸஞ்சரிக்கிற மாலையை யுடைய ஆழ்வார். (செங்கையாளன் செஞ்சொல்மாலை) உதாரமானஅழ[கு]டைய கையையுடைய ஆழ்வாரருளிச்செய்த திருமொழியை அப்யஸிக்க வல்லவர்களுக்கு, ஒருநாளும், தீங்குண்டு - பொல்லாங்கு, அது அவர்களுக்கு ஒருக்காலும் வாராது. ... ... ௰.

ஜீயர்திருவடிகளேஸரணம்.

---

மூதற்பத்து – எட்டாந்திருமொழி - கொங்கலர்ந்த. ப்ரவேஸம்.

விரோதிநிரஸந ஸீலனாய், ஆஸ்ரிதஸம்ஸ்லேஷ ஸ்வபாவனாய், ஸர்வாதாராத்மாவாயிருக்கிற ஹரியானவன், வாயாலே திருநாமஞ் சொன்னதொரு சிறுவனுக்குத் தமப்பன் பகையாக உதவிற்றொரு வடிவைக் கொண்டுவந்து அவன் விரோதியைப் போக்கினவன், அவனொருவனளவில் பர்யவஸிக்கையன்றிக்கே திருநாமம் சொன்னாரெல்லாருடையவும் ஸம்ஸாரதுக்கத்தைப் போக்குவதாகத் திருமலையிலேவந்து நின்றருளினான், அங்கே போய் அநுபவிப்போம் வா என்று திருவுள்ளத்தோடே கூட்டுகிறார். ... ... *

மூதற்பாட்டு. (கொங்கித்யாதி) பரிமளம் ப்ரவஹியாநின்ற பூவையுடைய குந்தாஸுரனை நிரஸித்த க்ருஷ்ணனான என் உபகாரகன்.[௩௰ (சங்குதங்கித்யாதி) ஸங்கநிதிதுடக்கமான பதார்த்தங்களை யுடைத்தாய், * தாளுந்தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பிக் கண் வளருகைக்கு வேண்டும் பரப்பை யுடைய கடலிலே கண்வளர்ந்த புண்டரீகாக்ஷன். (பொங்கித்யாதி) பெரியகிளர்த்தியோடே மிகைத்து வந்து தோற்றின பகாஸுரனைவாயைக்கிழித்து, இப்படி விரோ[௩௫ திகளைப் போக்குகை பழைதாகச் செய்து போருகிறவர் வந்து வர்த்திக்கிற ஸ்தாநம்;—மிக்க நீர்வெள்ளத்தை யுடைய சுனைகளிலே களித்துத் துள்ளுகிற அழகிய கயல்களையுடைய திருவேங்கடம்; அத்தை, நெஞ்சே! அடை. ... ... ... க.

இரண்டாம்பாட்டு. (பள்ளியாவது பாற்கடல்) ஸ்ரஹ்மாதிகளு க்காகக் கண்வளர்ந்தருளுகிற படுக்கை, திருப்பாற்கடல். (அரங்க ம்) ஸம்ஸாரரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்காகக் கண்வளர்ந்தருளுகிறது, கோயில். (இரங்க வன்பேய்) ஈடுபட்டு முடிய வலியபூதனை. [இ (முலை பிள்ளையாயுயிருண்டவெந்தை) பேய்முலையை, பிள்ளையாய் அவளுயிரையுண்ட உபகாரகன்; அவன் (பெருகுமிடம்) அவன் அபிமதம் ஸித்தித்து வளருகிற விடம். (வெள்ளியானித்யாதி) "மு ன்னைவண்ணம் பாலின்வண்ணம்" "பாலினீர்மை செம்பொனீர்மை" இத்யாதிப்படியே - வெளுத்த திருநிறத்தை யுடையவன், மணி [ம யின்நிறத்தை யுடையவன் யுமங்தோறும் என்றநுஸந்தித்து, நாள் தோறும். (தெள்ளியாரித்யாதி) ஸத்யஸத்வஸ்யரானவர்கள் - அநந்ய ப்ரயோஜநரானவர்கள் வந்தாஸ்ரயிக்கும் திருவேங்கட மடை நெஞ்சமே. ... ... ... ... ௨.

மூன்றும்பாட்டு. (நின்ற மாமருதிற்றுவீழவித்யாதி) அஸுரா [ம்ரு வேஸத்தாலே பேராதே நின்ற பெரியமருதுகள் முறிந்து விழு ம்படி. (நடந்த நின்மலன்) ※ இணைமருதிற்றுவீழ நடைகற்ற தெற்ற லிறே. (நேமியான்) ஸர்வேஸ்வரன். (என்றுமித்யாதி) "நித்யாஞ்ஜலி புடாஹ்ருஷ்டா:" என்கிறபடியே - நித்யஸூரிகள் தொழும். (இணை த்தாமரையடியெம்பிரான்) ஒன்றுக்கொன்று ஒப்பான திருவடித் [உம தாமரைகளை யுடைய என்னையன். (கன்றிமாரிபொழிந்திட) இந்த்ரன் சினந்து மிகவும் கல்வர்ஷத்தைச் சொரிய. (கடிதானிரையித்யாதி) சடக்கெனப் பசுக்களுக்கு வந்த இடரைப்போக்குகைக்காகச் செ ன்று கோவர்த்தநத்தை யெடுத்தவன் திருவேங்கடமடை நெஞ்சமே. ௩.

நாலாம்பாட்டு. (பார்த்தற்காயன்று) பார்த்தனுக்காக அன்று. [உரு (பாரதம்கைசெய்திட்டு) பாரதயுத்தத்தைக் கையுமணியும் வகுத் திட்டு. (வென்ற பரஞ்சுடர்) துர்யோதநாதிகளை வென்ற பரஞ்சுடர். (கோத்தங்காயரித்யாதி) திருவாய்ப்பாடியில் பெண்களுடனே குர வை கோத்து, மன்றிலே குரவைக் கூத்தை விரும்பி யாடினவன். பிணைதல்-விரும்பல் (கோவலன்) கோபாலன். (ஏத்துவாரித்யாதி) [௩ம தன்னை ஸ்தோத்ரம் பண்ணுமவர்கள் ஹ்ருதயத்தை விடாதே யிரு க்குமவன். (இடவெந்தையித்யாதி) எனக்கு உபகரிக்கைக்காகத் திருவிடவெந்தையிலே எழுந்தருளி நிற்கிறவன், பாவநமான ஜலத் தையும் பெரிய சோலையையு முடைய திருவேங்கடமடைநெஞ்சமே. ௪.

அஞ்சாம்பாட்டு. (வண்கையானித்யாதி) ஏற்றார்க்கு மாறுதே [௩ரு கொடுப்பானாய், அஸுரர்க்கு தேவனாயிருக்கிற மஹாபலியாகத்திலே வாமநனாய்ச் சென்று. மாண் - அழகு. (மண்கையாலிரந்தான்) ※ அ லம் புரிந்த நெடுந்தடக்கையாலே பூமியையிரந்தான். அவனுடைய

(மராமரமித்யாதி) ஸாலவ்ருக்ஷங்களேழையும் ஓரம்பாலே யெய்த வலத்தை யுடையவன். (எண்கையான்) திருவஷ்டபுயகரத்திலேயெழு ந்தருளி நின்றவன். (இமயத்துள்ளான்) ஹிமவானில் திருப்பிரி தியிலே வந்து ஸந்நிஹிதனானவன். (இருஞ்சோலையித்யாதி) ம்லே[௫ ச்ஷ்ரேஷ்டமியான தெற்கில்திருமலையிலே வந்து ஸந்நிஹிதனானவன். (திண்கையித்யாதி) திண்மையுடைய கைம்மாவின் துன்பத்தைப்போ க்கினவன் திருவேங்கடமடை நெஞ்சமே!. ... ... ௫.

ஆறும்பாட்டு. (எண்டிசையித்யாதி) எட்டுதிக்குக்களையும் திக்கு க்களுடனே ஸப்தலோகங்களையும் வாங்கி அழகிய திருவயிற்றிலே[௰ வைத்து, ஒருபவனான ஆலந்தளிரிலே கண்வளர்ந்தவன். (பால்மதி க்கிடர் தீர்த்தவன்) சந்த்ரனுக்கு யக்ஷ்மரோகம் வரும்படி வந்த ஆபத்தைப் போக்கினவன். (ஒண்டிறலித்யாதி) மிக்க பலத்தை யுடைய ஹிரண்யன்மார்விலே திருவுகிரை வைத்துப் பிளந்தவன். பிளந்தபோதை வடிவை அநுஸந்திக்கிறார் மேல் (ஒள்ளெயிறித்யாதி) "அழகியான் தானே அரியுருவன் தானே" என்கிறபடியே – அழ கிய எயிறுகளுடனே திண்ணிய மிடுக்கையுடைய வடிவுஸிம்ஹமானவன் திருவேங்கடமடை நெஞ்சமே!. ... ... ... ௬.

ஏழாம்பாட்டு. (பாருநீரித்யாதி) ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களு மாயினான். ஜகச்சரீரியாய் நிற்கிற நிலை. (பேருமித்யாதி) தான் [௨௰ கொடுத்த கரணங்களைக்கொண்டு ஆயிரம் திருநாமத்தைச் சொல்லித் தன்னை ஆஸ்ரயிக்கும்படி, கர்மவஸ்யமான பிறவியில்லாதவன் மிகவும் விரும்பி வர்த்திக்கிற தேஸம். பேருகையாவது-தேஸத்திலே ஆசை பேருகை. (காருமித்யாதி) மேகங்களும், மிக்கபனியும், பெரிய ஆகா ஸத்திடையிலேசொரிவதாய். (மாமுகிலித்யாதி) பெரியமேகங்க[௨௫ ள் படியும்படி மேகபதத்திலே சேரும்படி நீண்ட சோலை சூழப் பட்ட அழகிய திருவேங்கடமடை நெஞ்சமே. ... ... ௭.

எட்டாம்பாட்டு.(அம்பரமித்யாதி)ஜகதாகாரதையைச்சொல்லுகி றது. (அமரர்கோன்) நித்யஸூரிகளுக்கு * ஸதாபஸ்யஙிக்கு விஷய மானவடிவைச் சொல்லுகிறது. (வம்புலாமித்யாதி) நறுநாற்றம் [௩௰ கமழாநின்றுள்ள மலர்மேலே மிகவும்விரும்பி யிருப்பாளாய், மடப்ப த்தை யுடையளாய், "யுவதிஸ்ச குமாரிணீ" என்கிற பருவத்தை யுடையவளுக்கு வல்லபனானவன். (கொம்பினித்யாதி) வஞ்சிக்கொம் பன்ன இடையையும் மடப்பத்தையு முடைய குறப்பெண்கள். (நீளி தணமித்யாதி) நீண்டபரண்களிலிருந்து அழகியபுனம் காவல்கொ[௩௫ ள்ளுகிற திருவேங்கட மடை நெஞ்சமே. ... ... ... ௮.

ஒன்பதாம்பாட்டு.— (பேசுமினித்யாதி) உங்களுக்கு ஓராயாஸம் ஸம்பாதிக்கவேண்டா, பேசப்படுவதாய்இனிய எட்டெழுத்தான திருநாமத்தைச் சொல்லவமையும். (சொல்லிநின்றபின்னரும்) பேசிநின்ற பின்பும். ஒருக்கால் சொன்னோம் என்றிராதே, பின்னையும் திருநாமத்திலாசை யுடையராய்ப் பேசுவார்தங்களை. (உய்யவித்யாதி) அவர்களுக்கு உஜ்ஜீவிக்கும்படி அவர்களை ஸம்ஸாரத்தில் நின்றும் எடுத்து, அவர்கள்பிறப்பையும் போக்கும் உபகாரகன். (வாசமித்யாதி) நறுநாற்றம் கமழாநின்றுள்ள பெரியபூக்களை யுடைத்தாய், ஓங்கின பொழில் சூழப்பட்டு. (உலகித்யாதி) "திலதமுலகுக்காய்" என்கிறபடியே - லோகத்துக்கு தேஜஸ்கரமாம்படி விளங்காநின்றுள்ள திருவேங்கடமடை நெஞ்சமே. ... ... ... கூ.

பத்தாம்பாட்டு.(செங்கயலித்யாதி) அழகிய கயல்கள் களித்து வாழுகிற சுனைகளையுடைய திருமலையிலே நித்யவாஸம் பண்ணுகிற ஸ்ரீயப்பதியை. (மங்கையரித்யாதி) திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகரான ஆழ்வாரருளிச்செய்த, உதாரமாய் அழகிதான சொல்மாலைகள். (சங்கையித்யாதி) ஹலத்தை யிது தரக்கூடுமோ! என்று அதிசங்கைபண்ணாதே, தரித்துநின்று சொல்லவல்லவர்கள். (தஞ்சமித்யாதி) அறுதியாகவே, * வங்கக்கடல்சூழுலகுக்குக் காவலராகி, பின்னையும் பரமபதத்தை ஆளப்பெறுவர். ... ... ... ... ௰.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

## முதற்பத்து - ஒன்பதாந்திருமொழி--தாயேதந்தை. ப்ரவேஶம்.

திருமலையைஆஶ்ரயிக்கச்சொல்லித் திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்து நின்றார் - கீழ் ; அப்படிக்கு நெஞ்சும் பாங்காய் தாமும் திருமலையிலே வந்து புகுந்தார் ; ஸர்வஸ்வாமியுமாய் நிருபாதிகபந்துவுமானவன் வந்து இங்கே ஸந்நிதிபண்ணுகையாலே தம்முடைய அபேக்ஷிதங்களெல்லாம் பெறலாமென்று, அக்ரூரன் "மாமக்ரூரேதிவக்ஷ்யதி" என்று மநோரதித்துக்கொண்டு வந்தாப்போலவும், ஸ்ரீபுண்டரீகன்மநோரதம்போலவும், இவரும் மநோரதித்துக்கொண்டு வந்தவிடத்து, அப்படி எதிரேவருதல், அணைத்தல், ஓரின்சொல்லுச்சொல்லுதல், "க்ரியதாம்" என்று கைங்கர்யத்திலே ஏவியருளுதல் செய்யக்காணாமையாலே, ஸந்நிதியுண்டாய், நினைத்தபடிசெய்து தலைக்கட்டுகைக்கு ஶக்தியுண்டாய், ப்ராப்தி யுண்டாயிருக்க, நம் அபேக்ஷிதம் செய்யாதொழிகிறது - செய்தருள நினையாமைக் குடலாயிருப்பதொரு ஹேது இத்தலையிலே யுண்டாகையிறே என்று கைவாங்கினவர், பின்னையும் கைங்கர்யத்தி லுண்டான வாபலாதிஶயத்தாலே, மீண்டும் என்பாபங்களைப் பார்த்தால், அவைக்

யங்களபக்கலிலே வைமுக்யப்ரதிபத்தி பண்ணியும், அஸேவ்யங்களிலே ஸேவ்யதாபுத்தி பண்ணியும், பரஹிம்ஸை பண்ணியும், ஆர்த்தவிஷயங்களில் க்ருபைபண்ணுதேயும், உன்னையொழியப் புறம்பே காலம் போக்கியும் போந்தேன், இப்படிபோந்தநான் இப்போது தேவரீரையொழியச்செல்லாமையை யுடையனாய் வந்தேன், இனி விடவொண்ணுத ஸம்பந்தமுண்டாய், குற்றங்களைப்பொறுப்பிக்கைக்குப் பிராட்டிஸந்நிதி யுண்டானபின்பு என் அபராதங்களைப் பொறுத்தருளி என்ஸ்வரூபாநுரூபமான சேஷவ்ருத்தியைக் கொண்டருளவேணுமென்று, பெரிய பிராட்டியார் புருஷகாரமாகத் திருவேங்கடமுடையான்திருவடிகளிலே சரணம் புகுகிறுர். இதுதன்னை * வாணிலாமுறுவலிலே செய்ததன்றே வென்னில்; ஸூகுமாராரயிருப்பார் விடாய்த்தால் பலகாலும் கர்ப்பூரநிகரத்தை வாயிலிடுமாப்போலே, இவரும் பலகாலும் ப்ரபத்தி பண்ணுகிறுர்; "நிபபாத விபீஷண:" என்று அவன் பெருமாள் திருவடிகளிலே விழுந்து [மிரு சரணம் புக்காப்போலே. ... ... ... ※

முதற்பாட்டு. (தாயேதந்தையாதி) "மாதாபிதாப்ராதா" "ப்ராதா பர்த்தா ச" "ஏகைகலலாஸாய" என்கிறபடியே — தேவரே ஸர்வவிதபந்துவுமாயிருக்க, ஸோபாதிகபந்துக்களாய, இத்தலையில் ப்ரயோஜநமுள்ளநாள் கொண்டு இவனுக்குஉதவவேண்டுமென்று தங்களைக்கொண்டு அகலநின்று அபராதத்தைப் பண்ணுமவர்களையே பந்துக்களென்று நினைத்து அநர்த்தப்பட்டேனென்கிறுர். தாயே! என்றும், தந்தையே! என்றும், தாரமே! என்றும், கிளையே! என்றும், மக்களே! என்றும். (நோயே பட்டொழிந்தேன்) நோயென்று — பிறவிக்குப்பேர். பிறந்தே எய்த்தொழிந்தேனென்றபடி. அபந்து[உரு க்களை பந்துக்களென்று ப்ரதிபத்திபண்ணி, அத்தால் பெற்ற பேறிது என்கிறுர். வேயேய் பூம்பொழில்சூழ் விரையார் திருவேங்கடவா — உன்னைக்காண்பதோ ராசையினல் - நாயேன் வந்தடைந்தேன் என்றந்வயம். (உன்னைக்காண்பதோராசையினல்) உன்னைக்காணவேணுமென்கிற ஆசையாலே. (வேயேய்தயாதி) மூங்கிற்குருத்துக்களா[கூயி லும் அழகிய பூம்பொழில்களாலும் சூழப்பட்டு பரிமளப்ரசுரமான திருமலையிலே நித்யஸந்நிஹிதனானவனே. (நாயேன் வந்தடைந்தேன்) புறம்பேபோகில் கல்லிட்டெறிவர்கள், உள்ளேபுகுரில் தொட்டதுவும் தீண்டிற்றும் பொகடவேணும், பாலும்சோறுமிட்டு வளர்த்தவனே தீண்டிலும் குளித்து ப்ராயச்சித்தம்பண்ணவேண்டும்[கூரு படி தண்ணியேன். நல்கல் - அருட்கொடை. உன் க்ருபையாலே என்னை அடிமை கொள்ளவேணும். ... ... ... க.

அ.—இரண்டாம்பாட்டு. அபந்துக்களை பந்துக்களாக நினைத்த அபராதத்தைப் பொறுத்தருளவேணு மென்றுர்—முதற்பாட்டில்; ஸேவ்யமல்லாதவற்றிலே ஸேவ்யபுத்தி பண்ணிப்போந்தேன்,[சுமி அக்குற்றத்தைப் பொறுத்தருளவேணு மென்று சரணம்புகுகிறுர்- இப்பாட்டில்.

வ்யா.—(மானேய்கண்மடவார்) மான்போன்ற விழிகளையும் மட ப்பத்தையு முடையவர்கள். (மயக்கில்பட்டு) அவர்களோட்டைக் கல வியிலே அகப்பட்டு, மயங்கல் - கூடலும், கலத்தலும். * அவர்தருங் கலவியேகருதி ஓடுமவரிறே. (மாநிலத்து)மஹாப்ருதிவியில். (நானே நாநாவிதநரகம்புகும்பாவம்செய்தேன்) நாநாவிதநரகம் நானேபுகும் பாபம்செய்தேன். (தேனித்யாதி) வண்டுகள்மொய்த்த பொழிலாலே சூழப்பட்ட திருமலையிலே நின்றருளின. (என்னானைவந்தடைந்தேன்) எனக்கு உர்ஸ்ருநியனாயிருக்கிறவனை வந்து அடைந்தேன். ஆனையெ ன்றது-செய்ததுக்காகக் காட்சியில்லை யென்று அதுக்குக் கருத்து.[ம இப்படி மஹாபாபங்களைப் பண்ணினுனை, அதுதானே ஹேதுவாக அவனைக்கைக்கொண்டால் கேள்வியில்லை யென்றபடி. (அடியேனித்யா தி) என்னை அடிமை கொண்டருளவேணும். ... ... உ.

அ.—மூன்றாம்பாட்டு. தேவர் திருவுள்ளத்துக்கு அஸஹ்யமாம்படி பரஹிம்ஸை பண்ணிப்போந்தேனென்கிறார்.

வ்யா.—(கொன்றேன்பல்லுயிரை)மூடநடவில் விட்டிலேன். ஆர்யம் கொண்டு வந்தானாகில் பின்தொடர்ந்தியறக் கொன்று பறித்தும், வெறுங்கையிலனாய் வந்தானாகில் அவன் பக்கலிலே சில உண்டு என்று போய் அது பெறாச் சினத்தாலே அவனையும் கொ ன்றேன். (பல்லுயிரை) ஒருவரிருவரல்ல. இது பொல்லாதென்று[உம சொல்லுகிற நீர் இப்படி செய்வானென்னென்ன (குறிக்கோளொ ன்றிலாமையினால்) அதுக்கடி - பரஹிம்ஸை அநர்த்தஹேது என்று லக்ஷ்யிபண்ணுமல். (என்றேனு மித்யாதி) பசித்துவந்து அர்த்தித்த வர்களுக்குக் குளிர ஒருவார்த்தையும் சொல்லி யறியேன். இட்ட றியேன் என்பது அந்த ப்ரஸங்கமு முண்டாகிலிறே. (குன்றேயித் யாதி) குன்றுருத்த மேவமென்னுதல், குன்றிலே படிந்த மேவ [உரு மென்னுதல். கழுத்தேகட்டளையாக நீரைப்பருகினது முகட்டிலே படிந்து முழங்குகிற குளிர்மாமலைவேங்கடவா !. (அன்றே யித்யாதி) கொன்ற கை கறைகழுவாதே அன்றே வந்தடைந்தேன். (அடியே னை யாட்கொண்டருள்) * பிழைப்பராகிலும் தம்மடியார் செய்வது பொறுக்கவேணுமே. ... ... ... ... ௩.

நாலாம்பாட்டு. (குலமித்யாதி) "குலங்களாய வீரிரண்டி லொ ன்றிலும் பிறந்திலேன்" என்னுதே, குலங்களில் நான் பிறவாத குல ங்க ளில்லை; "யாதானுமோராக்கை" இத்யாதி. அநுலோம ப்ரதி லோம ரூபத்தாலே நான் பிறந்த பிறவிக்கு ஓரெல்லையில்லை. குல ங்களெல்லாவற்றிலும் பிறந்திறந்து திரிந்தேன். (எய்த்தொழிந்தேன்) இப்படி அநாதிகாலம் பிறப்பதிறப்பதாய்த் திரிந்தேன், இளைத் தேன். அப்படி பிறந்திறந்த ஜந்மங்களில்ஏதேனும் நன்மைகள் செய்த துண்டோவென்ன (நலந்தானொன்று மிலேன்) ஒருநன்மை யென்று பேரிடலாவது த்ரிவிதகரணங்களாலு மில்லை. இப்போதுதான்

ஏதேனும் நன்மை செய்ததுண்டோ வென்ன (நல்லதோரறம் செய்து மிலேன்) ஃபலவ்யாப்தமா யிருப்பதொரு ஸத்கர்மம் பண்ணப்பெற்றிலேன். (நிலமித்யாதி) பூமியிலே நீர் தோயும்படி அருவிகளாலே விழுந்து பெருகும்படி மேகங்கள்வந்து படிந்து வர்ஷிப்பதா[ரு ய். (நெறியார் திருவேங்கடவா) நித்யஸூரிகளுக்கும் முமுக்ஷுக்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் ப்ராப்யமான திருமலையிலே நிற்கிறவனே. அன்றியே, "நெறியார் குழற்கற்றை முன்னின்று" இத்யாதிப்படியே - ஸம்ஸாரத்தைத் துறந்து திருவேங்கடமுடையானைப் பெறுகைக்கு வழிப்படுகிற உபாஸகரையுடைய திருமலை யென்னுதல்.[ய (அலந்தேனித்யாதி) ஜந்ம பரம்பரைகளிலே தோள்மாறி அதிலே யிளைத்து வந்தடைந்தேன், அடியேனை யாட்கொண்டருளே. ...ச.

அஞ்சாம்பாட்டு. (எப்பாவமித்யாதி) அதிபாதகம் உபபாதகம் மஹாபாதகம் என்றாப்போலே சொல்லுகிற பஹுவிதமான பாபத்தைப்பண்ணி, தத்ஃபலத்தைக் கேட்டு க்லேசப்பட்டேன். துப்பா-[யரு ஸமர்த்தனே. இப்பாபங்களைப் போக்கி ரக்ஷிக்கைக்கு ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியுமானவனே. (நின்னடியித்யாதி) உன்திருவடிகளை விடாதே ஆஶ்ரயிக்க வல்லேனாய்த்திலேன். (செப்பார்திண்வரைசூழ்) செப்பம் – வழி, ஆர்தல். நிறைதல். வழியுடையார் வந்து நிறைந்தென்றபடி. ஸ்வரூபாநுரூபமாக வழிப்பட்டவர்கள் வந்துசேருவதா [உய ய், திண்ணிய வரைகளாலே சூழப்பட்ட. (திருவேங்கட மாமலை என்னப்பா! வந்தடைந்தேன்) திருமலையிலே யெழுந்தருளி நின்று, என் சேஷத்வத்தையும் தேவரீருடைய சேஷித்வத்தையும் (க)உதறிப் படுத்தவனே!, அடியேனை யாட்கொண்டருளே. ... ரு.

ஆறாம்பாட்டு. (மண்ணாயித்யாதி) பஞ்சபூதங்களாலே நிர்மி[உரு தமான சரீரங்களிலே புக்கு, அதுக்குறுதியே வேண்டி, அது கிடையாமல் கூப்பிட்டுத் தளர்ந்தெய்த்தொழிந்தேன். (விண்ணாரித்யாதி) ஆகாசாவகாசத்தை உடைத்து வளர்ந்த பெரிய கொடுமுடிகளையும் மிக்க பரிமளத்தையு முடைய திருமலையிலே நின்ற. (அண்ணா) கீழ் "அப்பா" என்றாரே ; இங்கே அண்ணா! என்கிறார் *தா [ஈய யேதந்தையில் விட்ட வுறவெல்லாமிவனே யாகையாலே. "மாதாபிதாப்ராதாநிவாஸ:" இத்யாதிப்படியே என்னை யாட்கொண்டருளே.சா.

ஏழாம்பாட்டு. (தெரியேனித்யாதி) * தெரிந்துணர்வொன்றில்லாமையாலே அநேகம் பொல்லாங்கு செய்து விட்டேன். (பெரியேனாகியபின்†) பக்வனானபின்பு.(பிறர்க்கேயித்யாதி) நல்லதொன்று கண்டால் தனக்கென்னத் தவிர்ந்து, விஷயங்களுக்கு வேணும் என்று அவர்களுக்குத் தேடி யிடத்திரிந்தேன் என் கையாலே. * காரியம்நல்லனகளவைகாணில் என் கண்ணனுக் கென்றிருக்குமாப்போலே, நல்லது

(க)உதறிப்படுக்கை - நிஸ்ஸம்சயமாக்குகை. † "ஆயினபின்" என்றும்பாடம்.

கண்டால் இன்னாருக்கு என்று ஸமர்ப்பித்திறே போருவது. (கரிசேரித்யாதி) ஆனைகளானவை யினம்பிரியாதே வர்த்திப்பதாய், அழகிய பொழிலாலே சூழப்பட்டு. (கனமாமலைவேங்கடவா) ஸ்வர்ணமிரியென்று பேருடைத்தாய் மஹார்ஹமான பெரியதிருமலையிலே நிற்கிறவனே. (அரியே வந்தடைந்தேன்) ஆஸ்ரிதவிரோதி நிரஸநசீலரான தேவரீரை வந்தடைந்தேன், அடியேனையாட்கொண்டருளே.

எட்டாம்பாட்டு. (நோற்றேனித்யாதி) அநேகம் ஜந்மங்கள் தபஸ்ஸு பண்ணினேன் உன்னைக்காணவேணுமென்னுமாசையினாலே. (ஏற்றேனிப்பிறப்பே) இப்பிறப்பிலே உனக்கேற்கும்படி சமைந்தேன். [டு (இடருற்றனன்) நான்நின்றநிலை சாலப்பொல்லாது என்று என்நெஞ்சிலே பட்டு சால வ்யஸநப்பட்டேன். (கோல்தேனித்யாதி) கொம்புகளிலே வைத்த தேனானது கூடுகொள்ளாதே வெள்ளமிட்டுப் பாய்ந்து அருவியாய் ஒழுகுகிற, குளிர்ந்த சோலைகள் சூழப்பட்ட வேங்கடவா !. (ஆற்றேனித்யாதி) ஜந்மபரம்பரைகளுக்கு ஆற்றமாட்[டு டாதே வந்தடைந்தேன், அடியேனை யாட்கொண்டருளே. ... அ.

ஒன்பதாம்பாட்டு. (பற்றேலித்யாதி) ஊமவத் ப்ராப்தி ஸாயநமாயிருப்பதொன்று உடையேனல்லேன். (பாவமேயித்யாதி) து:ஷ்கர்மங்களைப் பண்ணி, அதுவே எனக்கு நிரூபகமாம்படி போந்தேன். ஆத்மாவை ஜ்ஞாநத்தையிட்டு நிரூபிக்குமாப்போலே, பாபத்[உம் தையிட்டு, இவன் பாபகர்மா என்னும்படி போந்தேன். (மற்றேலொன்றறியேன்) உன்னைலபிக்கைக்கு ஒரு உபாயவிஷயஜ்ஞாநமுமறியேன் உன்னை யொழிய. (மாயனே) ஆஸ்சர்யகுண சேஷ்டிதங்களையுடையவனே. (எங்கள் மாதவனே) எனக்காகப் பெரிய பிராட்டியாரும் தேவரீரும் வந்து என்னை அவஸரம்பார்த்து விஷயீகரிக்க[உடு நிற்கிறவனே. (கல்தேனித்யாதி) மலைத்தேனானவை முழைஞ்சுகள் கொள்ளாதே வழிந்து புறப்பட்டுச் சோருமாப்போலே ஒழுகுவதாய், தாமரைத்தடாகங்களை யுடைத்தான திருமலையிலே நிற்கிறவனே. (அற்றேனித்யாதி) தேவரீருக்கு அநந்யார்ஹ சேஷபூதனானேன், அடியேனை யாட்கொண்டருளே. ... ... கூ.

பத்தாம்பாட்டு. (கண்ணாயித்யாதி) எனக்கு ஸப்தலோகங்களுக்கும் நிர்வாஹகனுமாய், யாரகனுமாய், மேகம்போன்ற வடிவையுமுடையவனை. (விண்ணோரித்யாதி) நித்யஸூரிகள் ஸ்தோத்ராதிகளைப்பண்ணும்படி பெரிய திருமலையிலே நின்றருளின வேதைகவேத்யன். பொழிலென்று – பெருமைக்குப்பேர். (திண்ணரித்யாதி) திண்மை மிக்க மாடங்களும் மாளிகைகளும் சூழப்பட்ட திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகரான ஆழ்வார் பண்ணிலே பூர்ணமாகப் பாடின பாடல் பத்தையும் அப்யஸிப்பார்க்கு, விரோதி பாபங்களொன்றுமில்லை. ... ... ... ... ... ௰.

ஜீயர்திருவடிகளேசரணம்.

தம்முடைய வெறுமையைச் சொல்லி கைங்கர்யலாபத்துக்காக சரணம் புக்கார் - இத்திருமொழியில்; பாஷ்யகாரர் சரணம் புக்க வநந்தரம், "ஸ்தூலஸூக்ஷ்ம ரூபமான ப்ரக்ருதியைக் கழித்துத் தரவேணும், அஹங்கார மமகாரங்களைக் கழித்துத்தரவேணு[டு ம், விரோதியைப் போக்கித் தரவேணும், பரபக்த்யாதிகளைப் பிறப்பிக்கவேணும்" என்று அபேக்ஷித்தாப்போலே, இவரும், விரோதிநிரஸந சீலனாய் ஸர்வரக்ஷகனாய் ஆச்ரிதஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தாலல்லது தரியாதானாய் ஆச்ரிதஸம்ச்லேஷைகஸ்வபாவனாய் ஸர்வஸுலபனாயுமுள்ள ஸர்வேச்வரனே, என் விரோதியைப் போ[ய க்கித்தரவேணும், உன்னாலல்லது செல்லாமையைப் பிறப்பிக்க வேணும் என்றபேக்ஷிக்க; உம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களும் செய்யவன்றோ நாமிங்கேவந்து நிற்கிறது என்று திருமலையில் நின்ற நிலையைக்காட்டி, அநந்தரத்திலே இவர் திருவுள்ளத்திலே புகுந்து இவர்க்கு பரபக்த்யாதிகளைப் பிறப்பித்தா னென்கிறது - இத்திருமொழியில். ப்ரபந்நனுக்கும் பக்தியோகநிஷ்டனுக்கும் பக்தியுண்டே; "நமஸ்யந்தச்ச மாம் நித்யம்" என்று இரண்டிடத்திலும் சொல்லா நின்றதிறே. ... ... ... ... ... ✽

முதற்பாட்டு. (கண்ணாரித்யாதி) கண்ணென்று - இடம். இடமுடைய கடலென்றபடி. பெரிய கடலை அகழாக வுடைய லங்கே[உய சுவரனுடைய. (திண்ணாகமித்யாதி) திண்ணிய நெஞ்சு பிளக்கும்படி சரத்தை யேவினான். (விண்ணோரித்யாதி) நித்யஸூரிகள் வந்து கைங்கர்யம் பண்ணுகிற திருமலையிலே நிற்கிறவனே. (அடியேனித்யாதி) என்னுடைய கைங்கர்ய விரோதியைப் போக்கி யருளவேணும். க.

இரண்டாம்பாட்டு. (இலங்கையித்யாதி) "என்னது லங்கை, [உரு என்னதுலங்கை" என்றுலங்கையாகிறபடைவீட்டுக்கு அபிமாநிகளாக, ராக்ஷஸருடையதிரள்கெட்டுநசிக்கும்படி, கொடியான திருவடிதிருத்தோளிலே நல்தரிக்க விருந்து ஒருசாரிகை வந்தாய். விலங்கல்-மலை. குடுமி - உச்சி. திருவேங்கடமலை யுச்சியிலே மேவிநின்ற. அலங்கல்-மாலை. திருத்துழாய்மாலையைத் திருவபிஷேகத்திலே யுடைய[கூய தேவரீர், அடியேன்விரோதியைப்போக்கியருளவேணும். ... உ.

அ.—மூன்றாம்பாட்டு. (நீராரித்யாதி) ப்ரளயத்தில் ஜகத்து நசியாதபடி வயிற்றிலேவைத்து ரக்ஷித்தாப்போலே, ஸம்ஸாரமாகிற ப்ரளயத்தில் நான் நசியாதபடி ரக்ஷிக்கவேணுமென்கிறார்.

வ்யா.—(நீராரித்யாதி) நீர்மிக்க கடலும், மண்ணும், அக்நியு[ந.டு ம், வாயு, ஆகாசாதிகளெல்லாம் அமுதுசெய்த. (ஏராலமித்யாதி) ஏர் - அழகு. அழகிய ஆலிலைமேலே கண்வளர்ந்தவனே. (சீராரித்யாதி) சீர் - அழகு. அழகிய திருமலையிலே நித்யவாஸம் பண்ணி நிற்கிற ஆராவமுதே! அடியேற்கருளாயே. ... ... ந.

அ.—நாலாம்பாட்டு. (உண்டா யித்யாதி) ஸ்ரீவாமநனாய் இந்த்ரனுக்கு ராஜ்யலாபத்தைப் பண்ணிக்கொடுத்தாப்போலே, எனக்கும் கைங்கர்ய லாபத்தைப் பண்ணித்தரவேணு மென்கிறார்.

வ்யா.—(உண்டாயித்யாதி) உறிகளிலே சேமித்து வைத்த நல்ல நெய்யைக் களவுகண்டு இனிதாக அமுதுசெய்தாய். (கொண்டா யித்யாதி) ஸ்ரீவாமநனாய் "என்காலாலே மூவடி தரவேணும்" என்று ஸூமியை யீரடியாலே அளந்து கொண்டாய். (விண்டோயித் [ரு யாதி) ஆகாஸாவகாஸமடைய வளர்ந்த ஸிலெர்ங்களையுடைய திரு வேங்கடம் மேய. (அண்டா) பரமபத நிலயனே !, அடியேனுக்கு க்ஷீபையைப் பண்ணியருளவேணும். ... ... ச.

அ.—அஞ்சாம்பாட்டு. ப்ரஹ்லாதனுடைய விரோதியைப்போ க்கினாப் போலே, என் விரோதியைப் போக்கி ரக்ஷிக்க வேணு [ம் மென்கிறார்.

வ்யா.—(தூணாயித்யாதி) தூணதுக்குள்ளே. (அரியாய் வந்து தோன்றி) "அளந்திட்ட" இத்யாதி. அத்தூணுக்குள்ளே, நரஸிம் ஹமாய் வந்து தோன்றி. (பேணாவித்யாதி) பின்னை, ப்ரஹ்லாதனை ப்பேணாத ஹிரண்யன்மார்வைப் பிளந்திட்டாய். (சேணித்யாதி) [மரு சேண் – உயர்த்தி. உயர்த்தி மிக்க திருமலையிலே பொருந்தினவனே. (கோணாகணையாய்) கோள்–மிடுக்கு. ஸர்வேஸ்வரனும் பெரியபிராட்டி யாரும் துகைத்தேறிப் பரிமாறாநின்றால், அந்த ஹோமவெள்ளத் தை யாற்றியறுக்கத் திருவநந்தாழ்வானைப் படுக்கையாக வுடையவ னே !, அடியேனைத் திருவுள்ளம்பற்று. ... ... ரு.

அ.—ஆறாம்பாட்டு. இவருடைய இசைவுபெற்றவாறே, இவர் திருவுள்ளத்தே புகுந்தான், அவன் புகுந்தபடியை யருளிச்செய்கிறார்.

வ்யா.—(மன்னாவித்யாதி) அஸ்திரமான ஜந்மத்தைத் தவிர்த்து. (தன்னாக்கி) தன்னுடையவனாக்கி. (தன்னின்னருளித்யாதி) தன் நிர்ஹேதுகக்ஷீபையைப் பண்ணின என்னையன். (மின்னாரித்யா [உரு தி) மின்னையுடைத்தான மேவங்கள் வந்து சேருகிற திருவேங்க டம் மேவின. (என்னானை) இவர் கவிபாடின ஆனையாய்த்து. (எ ன்னப்ப னென் நெஞ்சினுள்ளானே) எனக்கு ஜநகனானவன், என் நெஞ்சினுள்ளே புகுந்தான். ... ... ... சு.

அ.—ஏழாம்பாட்டு. நப்பின்னைப்பிராட்டியாருடைய ஸம்ஸ்லேஷ விரோதியைப் போக்கினாப்போலே, என் விரோதியையும் போ க்கியருளவேணு மென்கிறார்.

வ்யா.—(மானேயித்யாதி) மானொத்த நோக்கையும் மடப்பத் தையு முடைய நப்பின்னைகலவிக்கு விரோதியா யெதிர்ந்து வந்த ஆன்விடை யேழையும் வென்ற அழகிய வரை போன்ற தோளை [கூரு யுடையவனே. ஆனென்று – எருது; ஆன்விடையென்றும் – எரு து; விடையென்றும் – எருது. ஆன்விடை யேழையும் செற்ற என்றபடி. (தேனே) "எனக்குத் தேனேபாலே" இத்யாதி. (திருவே ங்கடமித்யாதி) திருவேங்கட மாகிற பெரியதிருமலையிலே நிற்கிற ஸர்வநிர்வாஹகனே. (என்மனமித்யாதி) என்ஹ்ருதயத்திலே, "அர வத்தமளியினோடும்" இத்யாதிப்படியே எழுந்தருளி யிருந்தாயே. எ.

எட்டாம்பாட்டு.(சேயனித்யாதி) அநாஸ்ரிதர்க்கு உத்ராஸ்யனுமாயும், ஆஸ்ரிதர்க்கு எளியனுமா முள்ளவன். எங்கேகண்டோமென்ன (என சிந்தையுள் நின்றமாயன்) என்னெஞ்சிலே நின்ற ஆஸ்சர்யபூதன். (மணிவாளொளிவெண்தரளங்கள்) வாளென்றும்-ஒளி ; ஒளியென்[று றும் - ஒளி. ஒன்று மணிக்கும், ஒன்று முத்துக்குமாகக்கடவது வேயீன்ற ஒளியையுடைய வெண்முத்தும், ஒளியையுடைத்தான ரத்நங்களையு முடைத்தான திருமலையிலே நின்ற. (ஆயனித்யாதி) க்ருஷ்ணன்திருவடிக ளொழிய வேறொன்றறியேனே. ... ... அ.

ஒன்பதாம்பாட்டு.(வந்தாயித்யாதி) பரமபதத்தில்நின்றும் வந்து என்ஹ்ருதயத்திலே புகுந்து ஸ்தாவரப்ரதிஷ்டையாக நின்றாய். (நந்தாதகொழுஞ்சுடரே) நந்துதல் - நசித்தல். நித்யமாய் அத்யுஜ்ஜ்வலமான அழகிய தேஜஸ்ஸை யுடைய எங்கள்ஸ்வாமீ.(சிந்தாமணியே) சிந்தாமணி என்கிற ரத்நம் எல்லார்க்கும் எல்லாம் கொடுக்குமாப்போலே, எல்லார்க்கும் எல்லாபுருஷார்த்தங்களையும்கொடுக்குமவ[ன்]று னே. எங்கேநின்றென்ன; திருவேங்கடம் மேய என்னையனே. (இனியானுன்னையென்றும்விடேனே) என்விரோதியைப் போக்கி என் அபேக்ஷிதங்க ளெல்லாம் செய்வாயானபின்பு இனியொருநாளும் உன்னைவிடேனே. ... ... ... ... கூ.

அ.—பத்தாம்பாட்டு. இத்திருமொழியை அப்யஸிக்கவல்லார்[உய நித்யஸூரிகள் வரிசையைப் பெறுவரென்கிறார்.

வ்யா.—(வில்லாரித்யாதி) * வேடார் திருவேங்கடமிறே. வில்லையுடைய வேடர் மிக்குள்ள திருமலையிலே நின்ற. அன்றியே, (வில்லார் மணி) என்று பாடமானபோது, ஒளிமிக்க மணிகளையுடைய திருமலை என்றாகக்கடவது. (மல்லார்திரடோள்) மிடுக்குமிக்கு த்திரண்ட தோள்களையுடைய. (மணிவண்ணனெம்மானை) நீலரத்நம் போன்ற வடிவழகாலே என்னையெழுதிக் கொண்டவன். (கல்லாரித்யாதி) மலைபோன்ற திரண்டுயர்ந்த தோள்களையுடைய ஆழ்வாரருளிச்செய்த இச்சொன்மாலை. (வல்லாரவர்) வல்லார் யாவர்சிலர். (வானவராகுவர்தாமே) பரிசேஷராக நித்யஸூரிகள் வரிசையைப் பெறுவர். ... ய.

ஜீயர்திருவடிகளேசரணம்.

முதற்பத்து ஸம்பூர்ணம்.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

## இரண்டாம்பத்து - முதல்திருமொழி - வானவர். ப்ரவேஶம்.

### வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் வ்யாக்யாநம்.

வானவர் ப்ரவேஶம். "அடைந்தே னடியேனை யாட்
கொண்டருள்" என்றும் "இனியானுன்னை யென்றும் விடேனே"[ரு
என்றும், கைங்கர்ய லா஭த்துக்காகத் திருவடிகளிலே விழுந்து
ஶரணம் புக்கு, இக்கைங்கர்யம் நித்யமாய்ச் செல்லவேணுமென்று
இதிலே ப்ரேமம் பிறந்ததாய் நின்றது - கீழ்; நமக்கிப்படி இந்த
ஸமாயிதான் பிறக்கைக்கடியென்? என்றுராய்ந்த விடத்து, "மந ஏவ
மநுஷ்யாணாம்" என்கிறபடியே-நாட்டார் வாஹ்யராயும் குத்ஸித[ய
டிகளாயும் அநர்த்தப்பட்டுப் போகாநிற்க, நமக்குக் கைங்கர்யலா஭
த்துக்காகத் திருவடிகளிலே ஶரணம் புகுகையும் அதுதான் நித்ய
மாய்ச் செல்லவேணு மென்னும் படியான ருசி பிறக்கைக்கும்

### பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.

"அடைந்தே னடியேனை யாட்கொண் டருளே" என்[யரு
றும் "இனியா னுன்னை யென்றும் விடேனே" என்றும் கைங்கர்ய
லா஭த்துக்காகத் திருவடிகளிலேவந்து ஶரணம் புக்கு, இக்கைங்
கர்யந்தான் நித்யமாய்ச் செல்லவேணு மென்னும்படி அதிலே ப்ரே
மம் பிறந்ததாய்நின்றது; நமக்கிப்படி யிந்தஸமாயிதான் பிறக்கைக்கடி
யென்? என்றுராய்ந்து பார்த்தார் உபகாரஸ்ம்ருதிக்காக; அத்தை
ஆராய்ந்தவாறே, "மநஏவ" என்கிறபடியே - நாட்டார் வாஹ்ய
ராயும் குத்ஸிதஷ்டிகளாயும் அநர்த்தப்பட்டுப் போகாநிற்க நமக்கு கைங்
கர்யலா஭த்துக்காகத் திருவடிகளிலே விழுந்து ஶரணம் புகுகையும்,
அதுதான் அவிச்சிந்நமாய்ச் செல்லவேணு மென்னும்படியான

அ.—வானவர் ப்ரவேஶம்.—முதற்பத்தால் - திருமந்த்ரலாபத்தையும், மந்த்
ரார்த்தாநுஸந்தாநஞ் செய்தருளினபடியையும், மந்த்ரம் விளைந்த நிலத்தில் தம
க்குண்டான ப்ராவண்யத்தையு மருளிச்செய்து, மற்றும் ஸ்ரீஸாளக்ராம ஸ்ரீநை
மிஶாரண்ய ஸ்ரீஅஹோபில ஸ்ரீவேங்கடாசலங்களில் ப்ராவண்யத்தாலே அவற்
றை யநுபவியாநின்றுகொண்டு, தமக்கு பகவத்விஷயத்தில் ப்ரீதிகாரித நித்ய
கைங்கர்யமே புருஷார்த்தமென்று அறுதியிட்டாராய்த்து; இனி,இரண்டாம்பத்[தூ
தால் - திருவேங்கடம், திருவெவ்வுளூர், திருவல்லிக்கேணி, திருநீர்மலை, திருக்
கடல் மல்லை, திருவிடவெந்தை, திருவட்டபுயகரம், ஸ்ரீபரமேச்சுரவிண்ணகரம்,
திருக்கோவலூர், இவற்றிலே உகந்தெழுந்தருளி யிருக்கு மெம்பெருமான்களை
அபிநிவேஶாதிஶயத்தாலேபாடாநின்றுகொண்டு,தம்முடைய ஸ்வரூபந்தான் பரம
பதஶேஷத்வபர்யந்தமா யிருக்கும்படியைச்சொல்லி, கீழ்ப்பத்தில் ப்ரார்த்தித்த[கூடு
கைங்கர்யந்தானும் அவன்நினைவாலே வரவேணுமென்கிற அர்த்தத்தை வெளியிட்டு,
அப்புருஷார்த்தத்தை ஓடவைக்கிறாரென்று இப்பத்துக்கு ஸங்கதி கண்டுகொள்வது.
கீழிரண்டு திருமொழிகளோடு ஸங்கதி யருளிச்செய்கிறார் (அடைந்தேனித்
யாதி.) "பொங்குபோதியும்" "துவரியாடையர்" என்கிற பாட்டுக்களைக் கடாக்ஷி
த்து (நாட்டாரித்யாதி.)

மூ.-வானவர்தங்கள்சிந்தைபோலவென்னெஞ்சமேயினிதுவந்து, மா
மானவர்தங்கள்சிந்தை யமர்ந்துறைகின்றவெந்தை, [தவ
கானவரிடுகாரகிற்புகை யோங்குவேங்கடம் மேவி மாண்குற
ளானவந்தணற்கின்றடிமைத்தொழில் பூண்டாயே. க.

---

ப-ரை.—மா-மிக்க, தவம்-தபஸ்ஸையுடைய, மானவர்தங்கள் - மநுஷ்யர்களுடைய, சிந்தை - நெஞ்சில், அமர்ந்து-பொருந்தி, உறைகின்ற - நித்யவாஸம் பண்ணுகிற, எந்தை - என்ஸ்வாமியாய்; கானவர் - வேடர்கள், கார் - வயிரம் பற்றிக்கறுத்த, அகில் - அகில் மரங்களைவெட்டி, இடு - நெருப்பிலிடுகையாலுண்டான, புகை - புகையானது போய் வ்யாபிக்கும்படி, ஓங்கு - உயர்ந்த, வேங்[ு]கடம் - திருமலையிலே, மேவி - நித்யவாஸம் பண்ணுமவனாய்; மஹாபலிபக்கல் நீரேற்றவன்று, மாண் - அழகிய, குறளான - வாமநவேஷங்கொண்ட, அந்தணற்கு - ப்ராஹ்மணனான என்ஸ்வாமிக்கு; வானவர்தங்கள் - நித்ய ஸூரிகளுடைய, சிந்தைபோல - ஹ்ருதயத்திற்போலே, இனிது - இனிதாக, உவந்து - உகந்துவந்து, இன்று-இப்போது, அடிமைத்தொழில்-கைங்கர்யம் பண்ணுகையில், பூண்டாயே- அந்வயித்தாயே!, என்னெஞ்சமே! - எனக்குப் பாங்கான மநஸ்ஸே! என்று தந்திருவுள்ளத்தோடேகூடி இனியராகிறார். ... ... ... க.

---

இதெல்லாவற்றுக்கும்அடி என்னெஞ்சிறேஎன்று, தம்திருவுள்ளத்தைக்குறித்து, உன்னாலே இஸ்ஸம்ருத்தியெல்லாம் பெற்றேனென்று திருவுள்ளத்துடனே கூட்டி யினியராகிறார். ... ... *

மூதற்பாட்டு. (வானவர்தங்கள்சிந்தைபோல) நித்யஸூரிகள் ஹ்ருதயத்திற்போலே உகந்துவந்து. (மாதவமித்யாதி) மஹாதபஸ்ஸையுடையரா யிருக்கிற மநுஷ்யருடைய ஹ்ருதயத்திலே நித்யவாஸம் பண்ணுகிற என்ஸ்வாமி. கானவருண்டு-வேடர், அவர்கள்

---

ருசிபிறக்கையும், இஸ்ஸம்ருத்திக்கடி யென்னெஞ்சிறேயென்று, தந்திருவுள்ளத்தைக்குறித்து, உன்னாலே யெனக்கு இஸ்ஸம்ருத்தியெல்லாமுண்டாய்த்தென்று திருவுள்ளத்தோடே கூட்டி யினியராகிறார். *

மூதற்பாட்டு.— (வானவரித்யாதி) நித்யஸூரிகள் ஹ்ருதயத்திற்போலே என் ஹ்ருதயத்திலான. (மாதவமானவர்தங்கள் சிந்தை யமர்ந்துறைகின்ற வெந்தை) மஹாதபஸ்ஸையுடையரா[ந]ய் யிருக்கிற மநுஷ்யர்களுடைய ஹ்ருதயங்களிலே அநந்ய ப்ரயோஜநராய்க்கொண்டு நித்யவாஸம் பண்ணுகிற ஸ்வாமி. (கானவரித்யாதி)

---

"என்னெஞ்சமென்பாய்!" என்றத்தைப்பற்ற (திருவுள்ளத்தோடேகூட்டி யென்றது.) இனியராகிறார் - உபகாரஸ்ம்ருதிபண்ணி யுகக்கிறாரென்கை. ... *

மூதற்பாட்டு.—(வானவரித்யாதி.) "என்னெஞ்சிலுளானே" என்றும் "என்மனம் குடிகொண்டிருந்தாயே" என்றும் "எனசிந்தையுள்நின்ற மாயன்" என்றும் "என்மனம் புகுந்தாயே" என்றும் சொல்லுகிறபடியே - அவன் தன் திருவுள்ளத்தில் அமர்ந்து வர்த்திக்கிறமையை அநுஸந்தித்து, இப்படி மஹாதபஸ்விஹ்ருதயகமலநிலயனாயிருக்கும் "அந்தணற்கு - அடிமை - பூண்டாயே" என்று நெஞ்சைக்குறித்தருளிச்செய்கிறாரென்று அவதாரிகை கண்டுகொள்வது.

ஹ்ருதயத்திலானவென்றது - * எந்தைக்கு விசேஷணம். இப்பக்ஷத்தில், "இனிதுஉவந்து" என்றதுக்கு - இனிதாக வுகந்திருக்கிற என்று ஸ்வதார்யமாக்கிக் கொள்வது.

மூ.—உறவுசுற்றமென்றொன்றிலாவொருவனுகந்தவர்தம்மை, மண்மி
பிறவியே கெடுப்பானதுகண்டென்னெஞ்ச மென்பாய்!, [சைப்
குறவர்மாதர்களோடுவண்டுகுறிஞ்சிமருளிசைபாடும் வேங்கடத்
தறவனாயகற்கின்றடிமைத்தொழில்பூண்டாயே. உ.

---

ப-ரை.—உறவு - கர்மநிபந்தநமான பந்துக்கள், சுற்றம் - ஜ்ஞாதிகள், என்று - என்று இங்ஙனேயுள்ள, ஒன்று-ஒருவுறவையும், இலா-உடையனல்லாத, ஒருவன் - ஒப்பற்றவனாய் ; உகந்தவர்தம்மை - தானுகந்தவர்களை, மண்மிசை - பூமியில், பிறவி - பிறக்கையாகிற ஸம்ஸாரஜந்மத்தை, கெடுப்பான் - போக்குமவனாய் ; குறவர் மாதர்களோடு - குறப்பெண்களோடே, வண்டு - வண்டுகள், குறிஞ்சி [மி மருள் - குறிஞ்சி என்னும் பண்ணை, இசைபாடும் - இசைத்துப்பாடுகிற, வேங்கடத்து - ஸ்ரீவேங்கடாத்ரியில் நித்யவாஸம் பண்ணுகிற, அறவன் - பரமதார்மிகனை, நாயகற்கு - ஸர்வேச்வரனுக்கு, அதுகண்டு - அவன்ஸ்வபாவத்தை அநுஸந்தித்து, என்னெஞ்சம் என்பாய்! - என் நெஞ்சு என்கிற நீ, இன்று - இப்போது, அடிமைத்தொழில்பூண்டாயே—. ... ... ... ... உ.

---

தங்கள் புனங்களில் மரங்களை வெட்டித்திரட்டி நெருப்பையிடுவர்கள் ; அது அகில்மரமாகையாலே அகிற்புகை ஓங்காநின்றுள்ள திருமலையிலே மேவி. (மாணித்யாதி) அழகிய குறளாய் ப்ராஹ்மண வேஷம் கொண்டவற்கு இன்று கைங்கர்யம் பண்ண ஏன்று கொண்டாயே. ... ... ... ... க.

---

கானவருண்டு – அங்குத்தைத் திருவேடுவர், அவர்கள் தங்கள் புனங்களிலுண்டான மரங்களைவெட்டித் திரளவிட்டு நெருப்பையிடுவர்கள் ; அதுதான் அகில்மரமாகையாலே அகிற்புகையானது போய் ஆகாசாவகாசத்தை யிடமடைக்கும்படி யோங்கின சிலரத்தையுடைய திருமலையிலே பொருந்தி வர்த்திக்கிற. (மாண்குறளான [உடு வந்தணற்கு) தன்னுடைமையைப்பெறுகைக்குத் தன்னை யிரப்பாளனாக்கினவற்கு. அந்தணற்கென்றது—ப்ராஹ்மணற் கென்றபடியிறே. மஹாபலிக்கு கொடுத்தல்லது நிற்கவொண்ணாதபடி விநீதவேஷத்தோடே சென்றானாய்த்து. (மாண்குறளான வந்தணற்கு – வானவர் தங்கள்சிந்தைபோலவென்னெஞ்சமே யினிதுஉவந்து-அடிமைத் [கூம் தொழில் பூண்டாயே) நித்யஸூரிகளுடைய ஹ்ருதயம் ஸமவத் கைங்கர்யத்திலே ப்ரவணமாயிருக்குமாப்போலே, நீ இவன்றிருவடிகளிலே உகப்போடே அந்வயித்தாயே. (மாணித்யாதி) அவனடிமை கொள்வதாக வந்து இரந்துநிற்கிறபின்பு நீயும்அவன் நினைவின்படியே போகப்பெறுவதே!. ... ... ... ... க.

---

புனங்களில் - நிலங்களில், ( போய் ) என்ற வாக்யசேஷம், வ்யாபிக்கும்படியான என்று சேஷம். சிலரத்தை யுடையவென்றது - அர்த்த ஸித்யார்த்தம். யோஜநாஹேதும் (மாணித்யாதி.) இப்பக்ஷத்தில், '' உவந்து '' என்று - வ்யஸ்தபதம். ''மாண்குறள்'' என்றதுக்குத் தாத்பர்யாநுஸாரம் (அவனித்யாதி.) அதாவது - மண்ணிரக்கமுன்பு மாண்குறளான வளவன்றிக்கே தம்மை யடிமை கொள்ளுகைக்குத் தம் நெஞ்சிலிப்போதொரு வாமநவேஷங்கொண்டானென்றிருக்கிறாரென்கை. அன்றிக்கே, இப்போது இவ்வவதாரத்தை யநுஸந்திக்கைக்குத் தாத்பர்ய கல்பநாபேண இவ்வாக்யம் ப்ரஸ்துதமானதென்று ஏகதாத்பர்யமாகவுமாம், ... ... ... ... ... ... க.

இரண்டாம்பாட்டு. (உறவித்யாதி) கர்மநிபந்தநமான ஒருறவு ஜ்ஞாதிகள் என்று ஒன்றுமில்லாத அத்விதீயன். (உகந்தவரித்யாதி) தானுகந்தவரை யென்னுதல், தன்னையுகந்தவ ரென்னுதல். (மண்மிசை யித்யாதி) பூமியிற்பிறவாமலதுகண்டு, என்னெஞ்ச மென்[று கிற நீ. (குறவர்மாதரித்யாதி) குறவர் பெண்களுடனே, அவர்கள் குழலிலே யிருந்து வண்டுகளானவை குறிஞ்சியிசையையும் பாடும் வேங்கடத்தே நிற்கிற.(அறவன்)ஸ்வரூபன்.அறம்—ஸ்வம்.நாயகன்—ஸர்வஸ்வாமி; அவனுக்கடிமைசெய்ய ஏறிட்டுக்கொண்டாயே. உ.

---

இரண்டாம்பாட்டு.—( உறவித்யாதி ) பந்துக்கள், ஜ்ஞா[ய திகள் என்று இங்ஙனே கர்மநிபந்தநமாகச் சொல்லலாவ தொரு உறவையுடையனல்லாத அத்விதீயன். (உகந்தவரித்யாதி) தான் சிலரை யுகந்து அவர்கள்பக்கலுகப்பாலே அவர்களுக்குப் பாபத்தைப் போக்குதல் ஃபலத்தைக்கொடுத்துவிடுதல் செய்கையன்றிக்கே, ஸம்ஸாரஜந்மத்தைப் போக்கிக்கொடுக்கிற ஸ்வபாவத்தை அநுஸந்தித்து. (உகந்தவர்) தன்னை யுகந்தவர்க்கென்றுமாம். (என்னெஞ்சமென்பாய்) அவனைச் சொல்லுவதோ, உன்னைச் சொல்லுவதோ, உன்னை ஆராரென்றுசொல்லுவேன். ஸம்போதநப்ரகாரமிருக்கிறபடி. என்னெஞ்சமென்றபடி. (குறவரித்யாதி) குறப்பெண்களோடே கூட வண்டுகளானவை,குறிஞ்சி இந்தளம்என்கிற பண்களைப் பாடாநிற்கிற. (வேங்கடத்தறவனாயகற்கு)தண்ணீர்ப்பந்தல்வைத்து நம்மடிமைபெறுகைக்குத் தம்மை நமக்குத் தந்துகொடுநிற்கிற பரமதார்மிகன். நம்மை யடிமைகொள்வதாகத் திருமலையிலேவந்து ஸந்நிதிபண்ணின பரமதார்மிகனுக்கு. (அடிமைத்தொழில் பூண்டாயே) அவன் திருமலையிலேவந்து நிற்கிற நிலையை நீயொருபடி ஸஃபலமாக்கினாயே...உ.

---

இரண்டாம்பாட்டு.—(உறவித்யாதி.) நெஞ்சானது, நீர்நம்மைக் கொண்டாடாநின்றீர், அடிமைத்தொழில் நமக்கு நித்யமாகக் கிடைக்குமோ, விரோதிவிஶிஷ்டியிலன்றோ நாமிருப்பதென்ன; அவனுடைய மோக்ஷப்ரதத்வத்தைச் சொல்லிக் கொண்டாடுகிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

* தாயேதந்தையிலே அவனை ஸர்வவிதபந்துவாக அநுஸந்தித்தவர்தா[மே உறவும் சுற்றமுமா யிருக்க, அத்தை இல்லை என்கிறதென்னென்ன; தாத்பர்யமருளிச்செய்கிறார் (பந்துக்களித்யாதி.) "பிறவியே" என்கிற ஏவகாரவ்யாவர்த்யம் காட்டாநின்றுகொண்டு, பாவமருளிச்செய்கிறார் (தானித்யாதி.) ஃபலத்தை - ஐஹிகாமுஷ்மிக ஃபலத்தை. "அதுகண்டு -" அத்தைக்கண்டென்றாய், ஃபலிதார்த்தம் (அநுஸந்தித்தென்றது.) ஸம்பாவனை-கொண்டாட்டம். என்னெஞ்சம் - அண்ணிமைவிளி. அதாவது - ஸமீபஸ்தத்தை யழைக்கை. கீழுக்கு விவரணம் (நம்மையித்யாதி.) ... ... ... ... ... உ.

மூன்றாம்பாட்டு.— (இண்டையித்யாதி.) நித்யவிபூதியில் நித்யகைங்கர்யத்தை யாசைப்படுகிற நெஞ்சை ஆதரத்தாலே மீளவும் கொண்டாடுகிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

[சுய

மூ.—இண்டையாயினகொண்டுதொண்டர்களேத்துவாருறவோடும் வா
கொண்டுபோயிடவுமதுகண்டென்னெஞ்சமென்பாய்!, [னிடைக்
வண்டுவாழ்வடவேங்கடமலைகோயில்கொண்டதனோடும் மீமிசை
யண்டமாண்டிருப்பாற்கடிமைத்தொழில் பூண்டாயே. ௩.

ப-ரை.—என்நெஞ்சமென்பாய்! - எனக்குப் பாங்கான நெஞ்சே, இண்டைஆயின - பூமாலைகளை, கொண்டு - கையில் ஏந்திக்கொண்டு, ஏத்துவார் - வாயாலே ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டு அடிமைசெய்கிற, தொண்டர்கள் - பேரகூதரையும், உறவோடும் - அவர்கள் ஸம்பந்த முடையாரையும், கொண்டுபோய் - இங்குநின்றும் கொடுபோய், வானிடை - பரமபதத்திலே, இட - வைக்க, அதுகண்டு - அத்தைக்கண்டு; வண்டு-வண்டுகள், வாழ் - வாழாநின்றுள்ள, வடவேங்கடமலை - திருமலையை, கோயில் கொண்டு - தனக்கு வாஸஸ்தாநமாகக் கொண்டு, அதனோடும் - லீலா விபூதியையும், மீமிசைஅண்டம் - பரமாகாசமான நித்ய விபூதியையும், ஆண்டு இருப்பாற்கு - ஆண்டுகொண்டிருக்கிறவற்கு, அடிமைத்தொழில் பூண்டாயே—. ... ... ... ... ... ௩.

மூன்றும்பாட்டு. (இண்டையித்யாதி) இண்டையென்று - தாம[ம்டு
ரையும், பூமாலையும். பூமாலைகள் கொண்டென்னுதல்; "எண்டிசையுமுள்ள பூக்கொண்டு" என்கிறபடியே. அவர்களை, "ஸபுத்ரபௌத்ரஸ்ஸகணஃப்ரேத்ய" என்கிறபடியே பரமபதத்தேறக்கொண்டு போகக் கண்டு. (என்நெஞ்ச மித்யாதி) என் நெஞ்சமான நீ,

மூன்றும்பாட்டு.—(இண்டையித்யாதி) இண்டையென் [உம்
று - பூமாலைக்குப்பேர். ஆக, பூமாலையென்று பேர்பெற்றவற்றைக் கொண்டு; "எண்டிசையுமுள்ள பூக்கொண்டேத்தி" என்கிறபடியே. (தொண்டர்களேத்துவார்) ஜமவத்விஷயத்தி லடிமைசெய்யுமவர்கள் கையிலே பூமாலைகளைக்கொண்டு வாயாலே யேத்தாநின்று கொண்டுஅடிமைசெய்கிறவருடைய.(உறவோடும்வானிடைக்கொ[உரு
ண்டு போயிடவும்)அவர்களோடு ஸம்பந்திஸம்பந்திகளோடு ஒருநாள் கார்யம்செய்தவர்களோடு வாசியற எல்லாரையுமொக்கக் கொண்டுபோய் நித்யவிபூதியிலேவைக்கும் நீர்மையை யநுஸந்தித்து, என்னெஞ்சமே! இங்குத்தையிருப்புத்தன்னையு மிழக்கிறோமோ என்றஞ்சவேண்டியிருக்க அவ்வருகே போய்அடிமைசெய்யவேணு[௩ம்
மென்னுமாசையை யுடையையாவாயே நீ.

"உறவோடும்" என்கிற உகாரம் அநுக்தஸமுச்சய மாக அருளிச்செய்கிறார் (ஒருநாளித்யாதி.) "வானிடை, அடிமைத்தொழில்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து, "என்பாய்" என்று கொண்டாடுகிறவருடைய ஹார்த்தபாவம் (இங்குத்தையித்யாதி.) அஞ்சவேண்டியிருக்க வென்றது - லௌகிகரஞ்சாநிற்க [௩இ
என்றபடி. இத்தால் - இஹலோகஹோமத்தை யிழக்கவேணுமே! என்று லௌகிகர் மோக்ஷத்துக்கு யத்நம்பண்ணார்களென்கை.

மூ.—பாவியாது செய்தாயென்னெஞ்சமே! பண்டுதொண்டுசெய்தாரை மேவியாட்கொண்டுபோய்விசும்பேறவைக்குமெந்தை, [மண்மிசை கோவிநாயகன், கொண்டலுந்துயர்வேங்கடமலையாண்டு, வானவ ராவியாயிருப்பாற் கடிமைத்தொழில் பூண்டாயே. ச.

ப-ரை.—என் நெஞ்சமே—, பாவியாது - நிரூபியாமல், செய்தாய்—; பண்டு - முனபு, தொண்டுசெய்தாரை - அடிமை செய்து போந்தவர்களை, உஜ்ஜீவிப்பிக்கைக்காக, மண்மிசை - இந்த பூமியிலேவந்து, மேவி-திருவவதரித்து, ஆள்கொண்டு - அவர்களை அடிமைகொண்டு, போய் - இங்குநின்றும் அர்ச்சிராதி மார்க்கத்தாலே கொண்டுபோய், விசும்பேறவைக்கும் -பரமபதத்திலே வைக்கு[மவனும், கோவி நாயகன் - ஸ்ரீகோபீஜந வல்லபனும், எந்தை - எனக்கு ஸ்வாமியானவனும், கொண்டல்-மேகங்கள், உந்து - ஒன்றை மற்றொன்று தள்ளாநிற்கும், உயர் - உயர்த்தியை யுடைத்தான, வேங்கடமலை - திருமலையிலே, ஆண்டு - இரண்டு விபூதியையும் அரசாண்டு, வானவர் - நித்யஸூரிகளுக்கு, ஆவியாயிருப்பாற்கு - ப்ராணபூதராயிருக்குமவற்கு - அடிமைத்தொழிலை பூண்டாயே—. ச.

என்னையுமறியாமே,(வண்டித்யாதி) வண்டுகளானவை மதுபாநம்பண்ணி வாழாநின்ற தமிழெல்லையான வடவேங்கடமலை கோயிலாகக் கொண்டு. (அதனொடுமித்யாதி) அவ்வைஶ்வர்யத்துடனே, அறமேலான அண்டமுண்டு – பரமபதம், அத்தையுமாண்டு இருக்கிறவற்கு அடிமைத்தொழிலை ஏறிட்டுக்கொண்டாயே. ... ... ரு.

(வண்டித்யாதி) வண்டுகளானவை மதுபாந மத்தமாய்க்கொண்டு வாழாநின்றுள்ள திருமலையைத் தனக்கு நித்யவாஸத்துக்கு ஸ்தாநமாகக் கொண்டு. (அதனொடும் மீமிசையண்ட மாண்டிருப்பாற்கு) உபயவிபூதியுக்தனை ஸர்வேஶ்வரனுக்கு. அண்டமென்று - ஆகாஶத்துக்குப்பேர். வெறுமண்டமென்னில் ஸ்வர்காதிகளிலு மேறுமென்று, (மீமிசையண்டம்) என்று-பரமபதத்தைச் சொல்லுகிறது; "மஹாகாஶம், பரமாகாஶம்" என்னக்கடவதிறே. உபய விபூதியுக்தனை ஸர்வேஶ்வரனுக்கு. (அடிமைத்தொழில் பூண்டாயே) அவாப்த ஸமஸ்தகாமனுடைய குறையை ஒருபடி நிரப்பினாயே. திருமலையிலேவந்து புகுந்து இவரை யடிமைகொள்வதற்கு முன்பு உபய[விபூதியோமத்தால் வந்த ஐஶ்வர்யத்தை யொன்றாக நினைத்திலன் காணுமவன்; யநுலுப்யன், ஒருகாசு விழுந்தவிடத்திலே கையெல்லாம் புழுதியாகத் தேடாநிற்குமிறே. ... ... ... ரு.

"அதன்" என்றது - திருமலையாய், அது உபலக்ஷணமாய், லீலா விபூதியைச் சொல்லுகிறது; அத்தை யருளிச்செய்கிறார் (உபயேத்யாதி.) (என்னக்கடவதிறே) என்றவநந்தரம், ஆகையாலே என்றுகூட்டுவது. இவரடிமை செய்யாவிட்டால் அவனுக்குக்குறையோவென்ன வருளிச்செய்கிறார் (திருமலையிலேயித்யாதி.) ரு.

நாலாம்பாட்டு.—(பாவியாதித்யாதி.) "தணிவினியுனக்குச் சொல்லுவன் மனமே தொழுதெழு தொண்டர்கள்தமக்குப்|பிணியொழித்தமரர் பெருவிசும்பருளும் பேரருளாளன்" இத்யாதியாலே பலபடி உபதேஶித்தவராயிருந்தீர், [ச அத்தாலேயன்றோ நான் மோக்ஷ விசாரம் பண்ணுகிறேன், என்னை நீர் பலகாலும் கொண்டாவோனென்னென்னும் ஶங்கையிலே; நானெத்தனை உபதேஶித்தாலும் வாஸநாபலத்தாலே, "உபதேஶோநிரர்த்தக:" என்னும்படி பண்ணாதே கடுக இசைந்தாயே!என்றுநெஞ்சைக்கொண்டாடுகிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

நாலாம்பாட்டு. (பாவியாதித்யாதி) அத்தைச்செய்வோமோ இத்தைச்செய்வோமோ என்று விசாரியாதே நீ இதிலே துணிவதே என் நெஞ்சமே!. (பண்டித்யாதி) முன்பு ஸம்ருத்தியிலே அநந்ய ப்ரயோஜநராய் கைங்கர்யம் பண்ணினவர்களை அடிமைகொண்டு பரமபத[ரு]த்திலே வைக்கும் ஸ்வாமி. (கோவிலித்யாதி‡) தனக்கொரு நிர்வாஹகனில்லாத நாயகன்-அநாயகனான நாயகன். (கொண்டலித்யாதி) மேவபயத்திற் செல்ல வோங்கி அவற்றைத் தள்ளாநின்றுள்ள உயர்ந்த திருவேங்கடமலையிலே நின்று எல்லாரையு மடிமைகொண்டு.

நாலாம்பாட்டு.—(பாவியாதித்யாதி) அத்தைச் செய்[யி]வோமோ, இத்தைச்செய்வோமோ என்றிங்ஙனே அலமாவாக்கிடவாதே—நிரூபியாதே, இப்படியிலே அத்யவஸிப்பதே!. என்ன அலம்யலாஹமோ!, ஸம்ஸாரத்திலே அத்யவஸிப்பதே!. ஶப்தாதிகளை அநுபவித்திருப்புதோமோ!, ஹமவத் கைங்கர்யம் பண்ணுவோமோ! என்று இங்ஙனே விசாரியாதே, நீயிதிலே துணிவதே!, உன்னாலேயிறே இப்பேறெல்லாம் பெற்றது. (பண்டித்யாதி) முன்பு அடிமை செய்தவர்களை, தான் ஸம்ஸாரத்திலே வந்தவதரித்து, "இவனென்தோழன், எனக்கு மைத்துனன்" என்று சொல்லலாம்படி அவர்களோடே பொருந்தி, அவர்களுக்கு கைங்கர்ய ருசியைப் பிறப்பித்து அடிமையைக்கொண்டு, அதுதான் அவிச்சிந்நமாய்ச் செல்லவே[உம்]ணுமென்று, அதுக்குறுப்பாக பரமபதத்திலே கொடுபோய் வைக்கும் ஸ்வாமி. (கோவி நாயகன்) ஸ்ரீமோபிமாருடன் கலக்குமாப்போலே ஆஸ்ரிதரோடு பரிமாறுமவன். (கொண்டலுந்துயர் வேங்கடம்) மேவங்களைச் சென்று தள்ளும்படி அவ்வளவும் வளர்ந்த ஶிவரங்களையுடைய திருமலையை வாஸஸ்தாநமாகக் கொண்டு. (வானவ[உரு]

"பாவியாது" என்றது - ஹாவியாதே யென்றும், நிரூபியாதே செய்தாயென்றுருயோஜனை யருளிச்செய்கிறார் (அத்தை யித்யாதி.) அலமாவாக்கிடவாதே-தடுமாறிக் கிடவாதே. இதுக்கு விவரணம் (நிரூபியாதே யென்றது.) இப்படியிலே - இந்த ப்ரகாரத்திலே. "செய்தாய்" என்றதின் ஹலிதார்யம் (அத்யவஸிப்பதே யென்றது.) இத்தால் - அநாதி வாஸநா பலத்தாலே விஷயங்களை விட[நம்]மாட்டாதே, என்னுபதேஶபலத்தாலே ஹமவத்விஷயத்தையும் விடமாட்டாதே கிடவாதே, கடுக த்வரியாநின்று யென்றதாய்த்து. "பாவியாது" என்றது - நீட்டிக்கிடக்கிறதாய், ஹவியாதது - ஸம்ஹவியாதது, செய்தாய் என்றர்யாஜர மருளிச்செய்கிறார் (என்னவித்யாதி.) இத்தால் - "துணிவினியுனக்குச் சொல்லுவன்" என்னவே நீ அந்தஹமவத்விஷயத்திலேதானே துணிவதே, இது இந்தவிஷ்ருதியில் கிடைப்பதொன்றோ என்றதாய்த்து. முந்தின அர்யத்தை விவரிக்கிறார் (ஶப்தாதிகளை யித்யாதி.) அன்றிக்கே, அடிதுடங்கி ஏகார்யமேயாய், ஆழ்வாருடைய ஈடுபாட்டைப் பலவகையா லருளிச்செய்கிறு ரென்றுமாம். முன்பு - முற்காலத்திலே, க்ஷதாதிகளிலே யென்றபடி. தோழன் - ஸ்ரீ ஸுஹப்பெருமாள். மஹாராஜராகவுமாம். மைத்துநன்-அர்ஜுநன். இவன் ஸ்வர்மஸ்யனுனேயாகி[சுமி]லும் மோக்ஷருசி பிறந்தால் அவனோடேதானே "மோக்ஷயிஷ்யாமி" என்றவன் அவனுக்குக்கொடுக்கமாட்டாதே யிராநிறே; அத்தைப்பற்ற (பரமபதத்திலேகொடுபோய் வைக்கும் ஸ்வாமியென்றது.)

‡ "கோஇல்நாயகன்" என்று இந்தவ்யாக்யாநத்திற்பாடம்.

மூ.-பொங்குபோதியும்பிண்டியுமுடைப்புத்தர்நோம்பியர் பள்ளியுள்ளு
தங்கள்தேவரும்தாங்களுமேயாக வென்னெஞ்சமென்பாய்!, [றை
எங்கும்வானவர்தானவர்நிறைந்தேத்தும்வேங்கடம்மேவிநின்றருள்
அங்கணாயகற்கின்றடிமைத்தொழில் பூண்டாயே. ரு.

ப-ரை.—என் நெஞ்சமென்பாய் - என்னுடைய மநஸ்ஸென்று அபிமாநிக்க லாம்படியான நீ, பொங்கு-கொம்பும்கிளையுமாகப்பருத்து வாராநின்றுள்ள, போதியும் - அரசமரத்தையும், பிண்டியும் - அசோகவ்ருக்ஷத்தையும், உடை - தங்களுக்குத் தஞ்சமாக வுடைத்தான, புத்தர் - பௌத்தரும், நோன்பியர் - அமணரும், பள்ளியுள்-தங்கள் தேவாலயங்களிலே, உறை - வசித்த, தங்கள் - தங்களு[டை டைய, தேவரும் - தேவதையும், தாங்களுமேயாக-தாங்களுமேயாகி விடாநிற்கச் செய்தே; எங்கும் - நாற்புறத்திலும், வானவர் - தேவர்களும், தானவர் - அஸுரர்களும், நிறைந்து - நெருங்கி, ஏத்தும் - ஸ்தோத்ரம் பண்ணுகின்றுள்ள, வேங்கடம் - திருமலையிலே, மேவிநின்று - பொருந்தியிருந்து, அருள் - ஆஶ்ரிதரிஷ்டங்களைச்செய்தருளுமவனாய், அங்கண்-அழகிய திருக்கண்களை யுடையனாய்,[டிரு ணாயகற்கு - ஸர்வஸ்வாமியானவனுக்கு, இன்று அடிமைத்தொழில் பூண்டாயே—. ... ... ... ... ... ... ரு.

(வானவரித்யாதி) நித்யஸூரிகளுக்கு யாரகனாயிருக்கிற வவனுக்கு அடிமைசெய்ய ஏறிட்டுக் கொண்டாயே. ... ... ச.

அ.—அஞ்சாம்பாட்டு. (பொங்கித்யாதி)நீரென்னைக் கொண்[உடு டாடுகிறதென்னென்ன; இத்தாலே யென்கிறார்.

ரீத்யாதி)"ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" என்கிறபடியே-ஜ்ஞாநிகளைத்த னக்கு ஆத்மஸூதராகவுடையனாயிருக்கிறவனுக்குநீயுமாவியானாயே!.

அ.—அஞ்சாம்பாட்டு.—"பாவியாது" என்று - நீ யிப்படி விசாரியாதே துணிவதே! என்று, என்னைக் கொண்டாட வேண்டின[உரு ஹேது வென்னென்ன; (பொங்கு போதியு மித்யாதி) விசாரிக்க வேண்டும்படி யெத்தனை விஷயம் புறம்பே கிடக்கிற தென்கிறார்.

"தைவீஸம்பத்விமோக்ஷாய" என்கிறபடியே வானவர்கள் தேவர்களென்னத்தக்க ஜ்ஞாநிகளை ஆவியாகவுடையவற் கென்றருளிச் செய்கிறார் (ஜ்ஞாநீத்யாதி.) வானவர்க்காவியாயென்றர்யம்கொள்ளுமளவில்,ப்ரக்ஜதத்துக்கு அத்யந்த மநபேக்ஷி[கூடு தமிறே யென்று திருவுள்ளம்.நீயுமாவியானாயென்று - ஆதரவிஷயமானா யென்னுமர்யம் கூடாதிறே. ... ... ... ... ... ரு.

அ.—அஞ்சாம்பாட்டு.—(பொங்குபோதியுமித்யாதி.) ஶஸ்த்ராதிகளுடைய அல்பாஸ்திரத்வாதி தோஷங்கள் ப்ரத்யக்ஷிக்கலா யிருக்க, இவற்றை விட்டு நித்யமான புருஷார்த்திலே துணிந்ததுக்கே நீராஸ்சர்யப்படுகைக்கு ஹேதுவென்னென்னில் என்கிற ப்ரஸ்நாநுவாதம்பண்ணி ஸங்கதியைக்காட்டுகிறார் (பாவியாதித்யாதி.) ப்ரதிவசநம் தோற்றும்படி ஸாவமருளிச்செய்கிறார் (விசாரிக்கவித்யாதி) மதிகெட்டுப்போம்படி யித்தனைதுர்மதிகளுண்டேயென்று கருத்து. எத்தனைவிஷயம் - அஸங்க்யாத விஷயமென்றபடி.

வ்யா.—விஸ்த்ருதமாகப்பணைத்த அரசும்; பிண்டி- அசோகு; இவையிரண்டையும் தங்களுக்கு ப்ரயோஜநமாக நினைத்திருக்கும் வௌத்தரும், ஆர்ஹதரும். (புத்தர் நோன்பியர்) வௌத்தரையும், அமணரையும் சொன்னபடி. (பள்ளியித்யாதி) தங்க ளிருப்பிடங்களிலே [ஙு] யுறைகிற. (தங்கள் தேவரும் தாங்களும்) அவர்கள் தங்கள் தேவதாஸ்தாநங்களிலே வரித்த தேவதைகளும் தாங்களுமேயாக. அல்லாதாரடைய முக்தராகலாம்படியாகவாய்த்து. என்னெஞ்சமான நீ. (எங்குமித்யாதி) எங்குமுண்டான தேவர்களும் அஸுரரான ஸ்ரீவைஷ்ணவர்களும் நிறைந்தேத்தும் வேங்கடம்மேவிநின்றருள். (அங்கணித்யாதி) புண்டரீகாக்ஷனை ஸர்வேஶ்வரனுக்கு அடிமை செய்ய ஏறிட்டுக்கொண்டாயே. ... ... ... ... ரு.

---

வ்யா.—(பொங்கு போதியும்) விஸ்த்ருத மாகாநின்றுள்ள அரசும். (பிண்டியும்) அசோகவ்ருக்ஷமும். இவையிரண்டையு மாய்த்துத் தங்களுக்கு ப்ரயோஜநமாக நினைத்திருப்பது வௌத்தார்ஹதர்கள்.[ஙு] (புத்தர் நோன்பியர்) வௌத்தரையும் அமணரையும் சொன்னபடி. (பள்ளி யுள்ளுறை தங்கள் தேவரும் தாங்களுமேயாக) அவர்கள், தங்களுடைய தேவஸ்தாநங்களிலே வரித்த தேவதைகளும் தாங்களுமாக. அல்லாதாரடங்கலும் முக்தராம்படியாக வாய்த்து. (என்னெஞ்சமித்யாதி) இவருடைய திருவுள்ளம் அவற்றை அநாதரித்து ஐமவத்விஷயத்திலே ப்ரவணமாய்த்த தென்றால், பின்னை லோகமாக அவற்றை அநாதரித்து இங்கே ப்ரவணமாம்போலே காணும்.(எங்குமித்யாதி) எங்குமொக்க, தேவர்களும் அஸுரர்களும் நெருங்கிநின்று ஏத்தாநின்றுள்ள. அன்றிக்கே, தானவரென்கிறது – ஸ்தாநத்திலுள்ளாராகவுமாம். (அங்கணாயகற்கு) அக்கண்ணில் குளிர்த்திக் கிலக்காவதே !. அக்கண்ணழகிலே "ஜிதம்" என்றெழுதிக்கொடுத்தாயாகாதே !. (அடிமை) "ஜிதம்" என்றெழுதிக் கொடுத்தாருடைய வ்ருத்தியிலே அந்வயித்தாயோ. ... ... ... ரு.

---

நோன்பியர் - அஸதஸ்யராய், அமணரைச்சொல்லுகிறது. பள்ளி - அவர்களுடைய தேவதாலயமென்றருளிச்செய்கிறார் (அவர்களித்யாதி.) "தாங்களுமேயாக" என்றதுக்கு - லோகமெல்லா மவர்களேயாய்க் கெட்டுப்போக என்று அவதாரிகையிலே யருளிச்செய்த தாத்பர்யம் தவிர, தாங்களுமேயாக - தாங்கள் மாத்ரமேயாம்படி யென்று தாத்பர்யாக்ஷரம் விவக்ஷித்து, உட்கருத்தருளிச் செய்கிறார் (அல்லாதாரித்யாதி.) இவ்வாக்யார்த்தைத் தெரியவருளிச்செய்கிறார் (இவருடையவித்யாதி.) தாத்பர்யாக்ஷரம் (அக்கண்ணழகிலேயித்யாதி.) ... ரு.

ஆறும்பாட்டு.—(துவரியித்யாதி.) புத்தர்முதலானார் மாத்ரமன்றிக்கே வைராக்ய ஸூசகவேஷங்கொண்டு அத்யாயம் படிப்பார்படியைக் கேளாயென்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

மூ.—துவரியாடையர் மட்டையர் சமண்தொண்டர்கள் மண்டியுண்டு
தமருந்தாங்களுமேதடிக்க, என்னெஞ்சமென்பாய்!, [பின்னரும்
கவரிமாக்கணம்சேரும்வேங்கடம் கோயில்கொண்டகண்ணார்விசு
அமரநாயகற்கின்றடிமைத்தொழில் பூண்டாயே. [ம்பிடை

ப-ரை.—துவர் - காவி ஏறின, ஆடையர் - வஸ்த்ரத்தை யுடையராய், மட்டையர் - மொட்டைத்தலையராய், சமண்தொண்டர்கள்-க்ஷபணமதத்தை ஆச்ரயிக்குமவர்கள், மண்டி - ஒருவர்க்கொருவர் மேல்விழுந்து, உண்டு - பூஜித்து, பின்னரும் - பின்னையும், தமரும் - தங்கள் பந்துக்களும், தாங்களுமே - தாங்களுமாக, கைவந்தபடி புஜிக்கையாலே, தடிக்க-உடம்பு பருத்தவராநிற்க: என்[டி
நெஞ்சமென்பாய்! - என்னெஞ்சமானநீ, கவரிமா - சௌரிம்ருகங்களின், கணம் - திரள்களானவை, சேரும் - வந்து சேருகிற, வேங்கடம்-திருமலையை, கோயில் கொண்ட - வாஸஸ்தாநமாக வுடையனும், கண்ஆர் - இடம்உடைத்தான, விசும்புஇடை - பரமபதத்தில் வர்த்திக்கிற, அமரர் - நித்யஸூரிகளுக்கு, நாயகற்கு-தலைவனானவனுக்கு, இன்று அடிமைத்தொழில் பூண்டாயே—. ... ... (௩)

ஆறும்பாட்டு. (துவரியித்யாதி) துவர்பிடித்த புடவையுடையவர். (மட்டையர்) மயிர்பறிக்கையாலே மட்டையான தலையை யுடைய அமணர். சமண் – க்ஷபணர். (மண்டியித்யாதி) அவர்கள் மேல்விழுந்து பூஜித்து, பின்னையும், தங்களுக் குறவாய் தந்நிஷ்டரா யிருக்கிறவர்களும் தாங்களும் இவ்வாஹோஜநம் பண்ணி ஸ்தூலகா[உடை
யராக; என்னெஞ்சாவது, கவரிமா திரண்டு வர்த்திக்கிற திருமலையைக் கோயிலாகக் கொண்டு. (கண்ணாரித்யாதி) அகல்விசும்பில் நித்யஸூரிகளுக்கு நாயகனானவனுக்கு இன்று அடிமைசெய்ய ஏறிட்டுக்கொண்டாயே. ... ... ... ... ௩.

ஆறும்பாட்டு.—(துவரியித்யாதி) துவரூட்டி யிருந்துள்ள சிவந்த ஆடையை யுடையராய், தலைமயிரைப் பறித்துப் போகட்டிருக்கிற, சமண்தொண்டருண்டு-அமணராகிறவர், அவர்கள் தாங்கள் கண்டபடி மேல்விழுந்து பூஜித்து, அதுக்குமேலே, தங்களோடொத்துத் தங்கள் தர்சநத்திலே ருசியுடையராய் அந்தவேஷதாரணத்தையும் பண்ணியிருக்கிறவர்களும் கடவராயிருக்கிற தாங்களும், சரீரமானது தடிக்கும்படியாக. (என்னெஞ்சம்) அவர்கள் செய்தபடிசெய்ய, வ்யாவ்ருத்தமானபடியை யுடைய வுன்னைத்தானென்பன்!. (கவரியித்யாதி) கவரிகளை யுடைத்தான ம்ருகங்களுடைய திரள் வந்துசேருகிற திருமலையை வாஸஸ்தாநமாக வுடையவன். (கண்ணாரித்யாதி) இடம் மிக்கிருந்துள்ள, விசும்புண்டு – த்ரிபாத்[ரூடு
விபூதி, அதிலேயுண்டான அநந்தவைநதேயாதிகளுக்கு நிர்வாஹகனானவனுக்கு. (அடிமையித்யாதி) அமணருடையவ்யாபாரத்தை அநாதரித்து நித்யஸூரிகளுடைய யாத்ரைகளிலே அந்வயித்தாயே. ௩.

கண்டபடியென்றது - கண்டவிடமெல்லாமென்றபடி. "பின்னரும்" என்றது-பின்னையுமென்றாய், அதினர்த்தம் (அதுக்குமேலேயென்றது.) கவரிகளை - சாமரங்களை. "மா" என்றதினர்த்தம் (ம்ருகங்களென்றது.) ... ... ௩.

மூ.-தருக்கினாற்சமண்செய்துசோறுதண்டயிரினால்திரளைமிடற்றிடை
நெருக்குவாரலக்கணதுகண்டென்னெஞ்சமென்பாய்!,
மருட்கள்வண்டுகள்பாடும்வேங்கடம் கோயில்கொண்டதனோடும்வானி
அருக்கன்மேவிநிற்பாற்கடிமைத்தொழில் பூண்டாயே. [டை

ப-ரை.—தருக்கினால் - வீண்தர்க்கத்தாலே, சமண்-தங்களுடைய க்ஷமணக ஸித்தாந்தத்தை, செய்து - நிலைநிறுத்தி, தண் - சீலாக்யமான,தயிரினால்-தயிரைச்சேர்த்துக்குழைத்த, சோற்றுத்திரளை - சோற்றின்திரளையை, மிடற்றிடை - தங்கள் மிடற்றிலே, நெருக்குவார் - கண்பிதுங்கும்படி நெருக்குமவர்கள் படுகிற, அது - அந்த, அலக்கண் - துக்கத்தை, கண்டு - பார்த்து; என் நெஞ்ச மென்[டு பாய்!—, வண்டுகள் - வண்டுகளானவை, மருள்கள் - மருள்முதலான இசையை, பாடும் - பாடாநின்றுள்ள, வேங்கடம் - திருமலையை, கோயில்கொண்டு - வாஸஸ்தானமாகக் கொண்டு, அதனோடும் - அத்தோடேகூட, வைதிகர் ஆச்ரயிக்கும்படி, வானிடை - ஆகாசத்தில்ஸஞ்சரிக்கிற, அருக்கன்-ஆதித்யனுக்கு,மேவிநிற்பாற்கு- அந்தராத்மாவாயுள்ள ஸர்வேச்வரனுக்கு, அடிமைத்தொழில் பூண்டாயே—.

ஏழாம்பாட்டு. (தருக்கித்யாதி) கேவல தர்க்கத்தாலே தங்கள் ஸித்தாந்தத்தை ஸ்தாபித்து. "வேதசாஸ்த்ரா விரோதிநா | யஸ்தர்க்கேணாநு ஸந்தத்தே ஸ தர்மம்வேத" என்கிறபடியே – ப்ரமாணாநுகூலமான தர்க்கங்கொண்டு அர்த்தநிஷ்கர்ஷம் பண்ணுகையன்றிக்கே, சுஷ்கதர்க்கங்களைக் கொண்டு அவைதிகமான ஸித்தாந்தஸ்தாபநம்பண்ணி. (சோறித்யாதி) பெருஞ்சோறு என்று ஒன்றுண்டிறே அவர்கள் ஜீவித்துப்போருவது. தயிரும் சோறுமாகத் திரட்டி வ்ரதத்துக் குறுப்பாகக் கண்பிதுங்கும்படி மிடற்றிலே நெருக்குவர்கள்; அப்போது படும் அலக்கணுண்டு – துக்கம், அத்தைக்கண்டு, என்

ஏழாம்பாட்டு.— (தருக்கினாற் சமண்செய்து) கேவலதர்க்[உடு கத்தாலே தங்களுடைய ஸித்தாந்தத்தை ஸ்தாபித்து. "வேதசாஸ்த்ராவிரோதிநா|யஸ்தர்க்கேணாநுஸந்தத்தே ஸதர்மம்வேதநேதர:" என்கிறபடியே ப்ரமாணாநுகூல தர்க்கங்கொண்டு அர்த்தத்தை நிர்வஹிக்கை யன்றிக்கே, சுஷ்கமான கேவலதர்க்கங்கொண்டு அவைதிகமாக ஸித்தாந்த ஸ்தாபநம்பண்ணி. (சோறித்யாதி) † வேகுசோறு என்[கூய றொன்றுண்டிறே அவர்கள் ஜீவித்துப்போருவது. தயிரும் சோறுமாகக்குழைத்துத் திரட்டி வ்ரதத்துக் குறுப்பாகக் கண்பிதுங்கும்படி மிடற்றிலே நெருக்குவர்கள்; அப்போதுபடும்அலக்கணுண்டு-

ஏழாம்பாட்டு.—(தருக்கினாலித்யாதி.) "தமரும் தாங்களுமே" என்கைக்கு துர்மதஸ்தாபகர் சிலரும் அதுக்குட்பட்டார் சிலருமா யிருக்கைக்கு நிமித்தந் தன்னை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

சமண் - க்ஷமணகஸித்தாந்தம். விவரணம் (வேஹேத்யாதி.) வேகுசோறு - அவர்களுடைய ஸங்கேதம். (வெஞ்சோறு) என்றும் ஸ்ரீகோசங்களிலே யுண்டு. தயிரின் சோற்றை ரஸக்ரஹணம் பண்ணவொண்ணாமையாலே விழுங்குவர்கள். இத்தால் - அவர்களுடைய துராசாரம் சொல்லிற்றாய்த்து. ... ... எ.

† அரும்பதத்துக் கநுகுணமாக "வெஞ்சோறு "என்று சிலஸ்ரீகோசங்கள்.

என்னுதல்;படுதல் உண்டாகையாய், மாதுளத்துக்கு உத்பத்திபிங்கே யென்னுதல்.(துணையித்யாதி)சேர்த்தியழகையுடைய முலையில் சந்தன மிடுகிறிலள். சாந்து – சந்தனம். (குளமித்யாதி) அழுக்கற்ற கயத்து அலர்ந்தகுவளைப்பூப்போன்றகண்களில்அஞ்ஜநமெழுதுகிறிலள்.(கோலமித்யாதி) மிகவுமழகிய பூ, குழலிலணிகிறிலள்.

ஆக, தன் கைபார்த்திருக்கிற தோழிமாரைப் பட்டினிகொள்ளாநின்றாள். இவள் நாயகனோட்டை ஸம்ஶ்லேஷத்தால்வந்த ஹர்ஷந் தோற்ற ஸ்மிதம்பண்ணினால அதுவே யாரகமாகவாய்த்து அவாக ளிருப்பது.

(துணைமுலையித்யாதி) நாயகனையும் பட்டினிகொள்ளாநின்றாள். (துணைமுலை)புறம்பு உபமாநமின்றிக்கே தன்னில்தானேயுபமாநமாகசொல்ல வேண்டும்படியிருக்கிறமுலைகள். (சாந்துகொண்டணியாள்)இவள் அவன்வரவை உத்தேஶித்து முலைகளைச்சாந்துகொண்டு அலங்கரிக்கப் புக்காளிறே "இவளுக்கிது அபேக்ஷிதமாகாதே." என்று அவனுக்கு கிஞ்சித்கரிக்கைக்கு அவகாஶமுள்ளது ; ஆகையாலே, அவனுக்கு அவ காஶப்ரதாநம் பண்ணுகிறிலள்.

(குளமித்யாதி) அழுக்கயத்தில்நின்று அலர்ந்த குவளைபோன்ற கண்களை, மங்களார்த்தமாக அஞ்ஜநங்கொண்டு அலங்கரிக்கிறிலள். ரத்நாகரம்போலே* மநோஹரமானவஸ்துவை அநுபவிக்கிற கண்[உடை]யாகையாலேஒன்றுகொண்டுஅலங்கரிக்கவேண்டாவிறே.இனி,அஞ்ஜநங்கொண்டு அலங்கரிப்பது மங்களார்த்தமாகவிறே ; இவள் அஞ்ஜநத்தாலே அலங்கரிக்கப்புகுமன்றிறே அவனுக்கு கிஞ்சித்கரித்தானாக அவகாஶமுள்ளது ; அது செய்கிறிலள்.

(கோலமித்யாதி) கலம்பகனல்லது தனிப்பூச்சூடப்பொறாத குழலை, புஷ்பங்கொண்டு அலங்கரிக்கிறிலள். * வாசஞ்செய் பூங்குழலாளாகையாலே புஷ்பங்கொண்டலங்கரிக்க வேண்டாவிறே ; மங்களார்த்தமாக புஷ்பங்கொண்டலங்கரிக்கிறிலள். நாயகனாவிரும்பியிருக்குமிடங்களை இவளலங்கரியாதொழிகையாவது – அவனுடைய யாரகத்ரவ்யத்தை விலக்குகையிறே.

ஜீவநமானபடியைஉபபாதிக்கிறார (இவளித்யாதி.) "தோழியர்க்கருளாள்" என்று-தோழிமாருடையயாரகத்தையழித்தாளென்னும்ப்ரகரணத்துக்குச்சேர, "குழற்கணியாள்" என்னுமளவுச்கும்தொகுத்தஹாவம் (நாயகனித்யாதி.) விஶ்லேஷதசையிலே சாந்துகொண்டு அலங்கரிக்கப்ரஸக்தியுண்டோ அதவனுக்குயாரகமாய் அத்தையழிகைக்கென்னவருளிச்செய்கிறார (இவளவன்வரவையித்யாதி.) "கொங்கைமேல்குங்குமத்தின்குழம்பழியப்புகுந்தொருநாள் - தங்குமேலென்னாவி தங்கும்" என்றாளிறே சூடிக்கொடுத்தாள் என்றுதிருவுள்ளம். இத்தால் - இவளலங்கரித்திருந்தால் அவனுபகரித்திருப்பனென்றதாய்த்து.

அழுக்கயம் - ஜலஸம்ருத்திமாறுதலுமிசும், "குளம்படுகுவளை"என்று த்ஜஷ்டார்த்தவிஶேஷணத்தாலேஃலித்தஅர்த்தத்தை விவரியாநின்றுகொண்டு, "மங்களார்த்தமாக" என்றத்தைஸ்பஷ்டீகரிக்கிறார் (ரத்நேத்யாதி.)

(வளம்படுமித்யாதி) நன்றான கடல்சூழ்ந்தபூமியை முன்பு மஹாபலிபக்கலிலேவாங்கி அளந்துகொண்ட பெரியோனேயென்னும்; வ்யாமுக்தனேயென்னுமென்றுமாம். (மாலினமொழியித்யாதி) மிகவும் கலங்கினபேச்சையுடையளாய் மிகவும்பாலையான இவளுக்குச் செய்தருள நினைத்ததென். ... ... ... உ.

---

(வளம்படுமித்யாதி) ஸர்வஸாதாரணமான ரக்ஷணத்தைப்பண்ணுமவன் என்னளவிலே நெகிழ இராநின்றான். (வளம்படுமுந்நீர்) ரத்நாகரமென்னுதல்; (வளம்படும் - வையம்) என்று - வஸுமதி என்னுதல். (மாலென்னும்) தன்னுடைய ரக்ஷகத்வத்தினுடைய[ய] ரக்ஷணத்தில் பிச்சேறியிருக்குமவன் இவ்வ்யக்தியொன்றையும் உபேக்ஷித்திராநின்றான். (மாலினமொழியாள்) தன்னுடையவ்யாமோஹத்துக்குச்சேர்ந்த பேச்சையுடையவள். வ்யாமோஹம் வழிந்து புறப்பட்டு அதுசொல்லாறுப்போலேயிருக்கை.

(இளம்படியிவளுக்கு) இளைதானபடியையுடைய இவளுக்கு. [ம்ரு]ம்ருதுஸ்வபாவையான இவளுக்கு; - உம்முடையபக்கலில் நின்றும் பிரித்து பத்துமாஸம் அசோகவநிகையிலே வைத்தவிடத்திலும், பின்னையும் "தத்தஸ்ய" என்றிருந்தவவள்படியல்லாத மார்த்தவத்தையுடைய இவளுக்கு. பட்டருமருளிச்செய்தாராகப்ரஸித்தமிறே-"உண்ணவும் பொறாதே பட்டினிவிடவும் பொறாதேயிருக்கும் ஸுகுமாரனைப்போலே, அதிகமான ஸம்ஶ்லேஷ விஶ்லேஷம் பொறுக்கமாட்டாதபடியான திருமங்கையாழ்வார் மார்த்தவமிருக்கும்படி" என்று. (இவளுக்கித்யாதி) இவளுடையப்ரக்ருதியறிந்து கலக்கைக்காகத் திருவிடவெந்தையிலே வந்திருந்தருளியிருக்கிறநீ, உன்னுடைய திருவுள்ளத்தாலே நினைத்திருக்கிறதென்? ... ... ... உ.

---

நாடகவிளத்தில் அவர் "அளந்தமால்" என்னக்கூடுமோவென்னவருளிச்செய்கிறார் (ஸர்வேத்யாதி.) "இனம்" என்றது-ஒப்பாய், அதினர்த்தம் (சேர்ந்தவென்றது.)

"படி"என்று - ஶரீரமென்று கீழருளிச்செய்து, அர்த்தாந்தரம் (ம்ருதுஸ்வபாவையானவித்யாதி) இத்தைவிவரிக்கிறார் (உம்முடையவித்யாதி.) மார்த்தவம்இவளுக்கு ஸ்வாபாவிகமென்னுமத்தை ஆப்தவாக்யத்தாலே ஸ்திரீகரிக்கிறார் (பட்டரித்யாதி.) இத்தால் - ஸ்ரீஜநகராஜன்திருமகள், விஶ்லேஷத்திலாறியிருக்கவும் ஸம்ஶ்லேஷத்திலநுபவிக்கவும் வல்லள்; ஸ்ரீபராங்குஶநாயகியார், விஶ்லேஷத்தில் "கடியன்கொடியன்" என்னவும், ஸம்ஶ்லேஷத்தில் க்ரமப்ராப்தி பொறுக்கமாட்டாதேபதறவும் வல்லராயிருப்பர்; ஸ்ரீகுலஶேகரர் பிராட்டியார், தன்ராஜகுலத்தாலே அடைவுவிஷயத்தில் விஶ்லேஷத்தில்தணிவின்றிக்கேயிருக்கவும் வல்லர்; பெரியாழ்வார் பெண்பிள்ளையாகில், விஶ்லேஷத்தில் தன்னைஅலங்கரித்துக்கொண்டிருந்தும் ஸம்ஶ்லேஷத்தில் அவனைக்கண்டகாட்சியிலே தணியுமவளாயிருப்பள்; திருமங்கைநங்கை, கலக்கவும்பொறாது பிரியவும்பொறாது,மார்த்தவமேப்ரக்ருதியாயிருக்குமென்றதாய்த்து. "பிரான்" என்றதுக்குப்ரயோஜநாபயோகம்காட்டாநின்றுகொண்டு, தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவளுடையவித்யாதி.) உ.

சாந்தமும்பூணும் சந்தனக்குழம்பும் தடமுலைக்கணியிலும்தழலாம்,
போந்தவெண்டிங்கள்கதிர்சுடமெலியும்,பொருகடலபுலம்பிலும்புலம்பும்,
மாந்தளிர்மேனிவண்ணமும்பொன்னும், வளைகளுமிறைநில்லா,என்ற
னேந்திழையிவளுக்கென்நினைந்திருந்தாயிடவெந்தைபெந்தைபிரானே.

ப - ரை.—சாந்தமும் - சாந்தும், பூணும் - முத்தாரமும்,சந்தனக்குழம்பும்—, தடம்முலைக்கு - பெரியமுலையிலே, அணியிலும்—, தழலாம் - நெருப்பாகாநின்றது; போந்த - எல்லார்தாபமுமாற்றுகைக்குத்தோற்றின, வெண் - வெளுத்த, திங்கள் - சந்த்ரகிரணங்கள், கதிர்சுட - அக்நிபோலேதஹிக்க, மெலியும் - அத்தாலே நோவுபடாநின்றாள்;பொரு - அலைபொருகிற,கடல் - ஸமுத்ரமானது, புலம்[பு]பில - கோஷிக்கப்புக்கால, புலம்பும் - இவளும்கூப்பிடாநின்றாள்;மாந்தளிர் - மாந்தளிர்போன்ற, மேனி - திருமேனியின், வண்ணமும் - நிறமும், பொன்னும் - விவர்ணமாகாநின்றது ; வளைகளும் - முன்கைவளைதடக்கமான வளைகளும், இறை - சற்றேனும், நில்லா - தொங்குகிறனவில்லை; என்றன் - என்னுடைய , ஏந்து - தரிக்கப்பட்ட,இழை-ஆபரணத்தையுடைய,இவளுக்கு என்நினைந்திருந்தாய் இடவெந்தை பெந்தைபிரானே!—. ... ... ... ... ... (௩)

மூன்றும்பாட்டு. (சாந்தமுமித்யாதி) "சந்தனமாஞ்சாந்தஞ்சந்து." சாந்தென்று - சந்தனத்திலே யொருஹேதுமை, பச்சை வெட்டை என்றாப்போலே சில ஹேதுங்களுண்டே; அந்தஹேதுத்தையிட்டு,சாந்தென்கிறது. பூண்—முத்துவடம். சந்தனக்குழம்பும். தடம்-பெருமை. பெரியமுலையிலே அணியிலும், தழலாம் - அக்நியாம்.

மூன்றும்பாட்டு.—( சாந்தமுமித்யாதி ) எங்களால் நோக்கலாமெல்லைகழிந்தது. பழகப்புதைத்து ஆறிக்குளிர்ந்தசாந்தும், முத்தாரமும், சந்தனக்குழம்பும். (தடமுலைக்கணியிலும்) "நிஷாநமறியாதே, நாமிருந்து ஒருபரிஹாரம் பண்ணுகையாவதென்" என்று முன்புஎல்லாரும் கைவாங்கியிருப்பார்கள்; பின்னையும்,இவள்பக்கலொருவாசியின்றிக்கே நோவுபடக்காண்கையாலே,"இனிநாட்டார்செய்யுமவற்றையாகிலும்செய்துபார்ப்போம்" என்று இவற்றைக்கொண்டுசேஷிரோபசாரம்பண்ணப்புகுவர்கள்;புககால்,அவைதானே(க)இந்தனமாகவேவாநிற்கும். (பூண்)என்ன-முத்தாரமென்று தோற்றுமோவென்னில்;[ருடி]ஆச்வாஸகரமாகப்பண்ணுகிறதாகையாலே முத்தாரமாயிருக்குமிறே.

மூன்றும்பாட்டு.—(சாந்தமுமித்யாதி.) வடகனிடத்திலும் வெறுப்போடிருந்தவளவன்றிக்கே, விரஹஜ்வரம்கிளர்ந்து சாச்ரயமடையாநின்றாளென்கிறான்றாலொன்று ஸங்கதி.

"அணியிலும் தழலாம்" என்கைக்குஹார்தஹாவம் (எங்களாலித்யாதி.) சாந்து-குங்குமம்கஸ்தூரிமுதலானபரிமளவஸ்துவோடே மாதித்ததென்றும்,சந்தனக்குழம்பும் - கேவலசந்தனபங்கமென்றும் ஹேதும் கொள்ளுவது. தோழிமார்களித்தனைபோதும் சாந்துகொண்டணியாதிருக்கத்தாங்களாறியிருந்தவநந்தரம் அணியவந்ததுக்குக்கருத்தென்னென்னவருளிச்செய்கிறார் (நிஷாநமித்யாதி.)

(க) இந்தனம் - விறகு.

(போந்தவித்யாதி) எல்லாரையும் தாபமாற்றப்போந்த சந்த்ரகிரணம் தஹிக்கும்; அத்தாலே நோவுபடும். (பொருகடலித்யாதி) அலைபொருகிற கடலோசைபொறுக்கமாட்டாமை கூப்பிடும். (மாந்தளிரித்யாதி) மாந்தளிர்போன்ற வடிவழகும் பொன்பயந்தது. வண்ணம்-நிறமும், அழகும்.

சாந்து வெவ்வியபதார்த்தமன்றேயென்னில்; அதுக்காகவிறே-ஆறிக்குளிர்ந்த என்றது. சாந்தென்னுங்காட்டில் இஸ்ஸம்ஸாரங்களோடே † கூடினதென்று தோற்றுமோ வென்னில்; ஸிஸிரோபசாரத்துக்குறுப்பாகச் சொல்லுகிறதாகையாலே வரும், பூணென்றவிடத்தில்-முத்தாரமென்றாப்போலே. (சாந்தமுமித்யாதி) வயிரமும் வயிரத்தோடும் ஒன்றாக வேமாப்போலே யாய்த்து இவையெல்லாம் ஒன்றாக வேகிறபடி. உலர்ந்தவிறகிலே நெருப்பைக்கொளுத்தினாப்போலே, விரஹக்லேஸமான ஸரீரத்திலேயிவைபட்டவாறேபற்றியெரியாநின்றதாய்த்து.

(போந்தவித்யாதி) அப்போது தோற்றின சந்த்ரனுடைய இளநிலாவானது பட, அத்தாலே மெலியாநின்றாள். நிலாச்சுடப்புக்கால் விலக்கலாவதொன்றில்லையே!. இனித்தான் கூடியிருந்தபோது, "முன்னம் முகிழ்த்த முகிழ்நிலா" என்று அநுகூலமாமிறே.— (பொருகடல்) திரையோடுதிரை பொராநின்றுள்ள கடல் வெள்ளமானது எதிர்க்கப்புக்கவாறே, எதிரேயொருகடல் ஸ்பர்ஸித்துக் கூப்பிடுமாப்போலே தானுமொக்கக்கூப்பிடாநிற்கும். (மாந்தளிரித்யாதி) மாந்தளிரினுடைய நிறம்போலேயிருக்கிற நிறமும் விவர்ணமாகாநின்றது.

(வெவ்வியபதார்த்தமன்றோ) என்றதுக்கு-குங்குமகஸ்தூரிகளின் ஔஷ்ண்யம்கலந்திராதோவென்றபடி. (ஸம்ஸாரங்கள்) என்றதுக்கு-நஞ்சும்குட்டியுமாயிருக்கும்ஸம்ஸாரத்தைப்போலே அநேகவிஸேஷங்களென்றபடி. ப்ரதிகம்ரஹணபூர்வகம் ஒருத்ருஷ்டாந்தமருளிச்செய்கிறார் (சாந்தமுமித்யாதி.) அஜ்ஞாதமானத்தை யுருவாக்கேதானேயுதறினால் அதிலேபிறந்த நெருப்புப்பொறியாலே யெல்லாம் வெந்துபோமாப்போலே, இவளுடம்பில்பிறந்தவிரஹாக்நிதானே இவளுடையசாந்துமுதலானவற்றையும் எரிக்கிறதென்றுதாத்பர்யம். அன்றிக்கே, வயிரமும் அதின்தோலுங்கூடப்பச்சையாயிருக்கச்செய்தேயும் மரத்திலேயுலர்ந்த கொம்பிழைந்துபிறந்தஅக்நியாலேயெல்லாம் வேமாப்போலே யென்றுயோஜிக்கவுமாம்; இத்தை விவரிக்கிறார் (உலர்ந்தவித்யாதி.)

இப்பெண்பிள்ளை தாபமாற்றுகைக்காக அம்ருதஸஹஸ்தனை ஔஷதியான்வந்து கையாலே குளிரத்தடவப்புக்கான், அதுதானும் ஒருநெருப்பாய்அதுக்குமெலிகிறாயாநின்றாளென்றுவிவக்ஷித்தருளிச்செய்கிறார்(அப்போதித்யாதி.)"அப்போதுதோற்றின"என்கிறவிஸேஷணத்துக்கு-இப்படிதாத்பர்யம் கொள்ளவேணுமிறே. அநுகூலமே ப்ரதிகூலமானால் செய்யத்தக்கதுண்டோ என்னு மீடுபாட்டையருளிச்செய்கிறார் (நிலாவித்யாதி.) சந்த்ரனைக்கண்டவாறே கடல்முழங்கத்தொடங்கிற்று, அதுதானும் நெருப்பையுருக்கி வார்த்தாப்போலேயிருக்கையாலே புலம்பப்புக்காளென்னும் பாவத்தை ஸூசிப்பிக்கிறார் (திரையோடித்யாதி.) (ஸ்பர்ஸித்து) என்றதால் இவ்வர்த்தம் ஸூசிதமிறே. "கடலுமாலுமாலோ" என்று பாயசகோடிவடிதமிறே.

---

† "இஸ்ஸம்ஸ்காரங்களோடே" என்றும்பாடம்.

மூ.—ஊழியிற்பெரிதால் நாழிகையென்னும்,
ஒண்சுடர்துயின்றதாலென்னும்,
ஆழியும்புலம்புமன்றிலுமுறங்கா,
தென்றலும் தீயினிற்கொடிதாம்,
தோழியோவென்னும், துணைமுலையரக்கும்,
சொல்லுமினென்செய்கேனென்னும்,
ஏழையென்பொன்னுக்கென்னினைந்திருந்தா
யிடவெந்தை யெந்தைபிரானே. ௪.

ப - ரை.—நாழிகை-ஒருநாழிகைப்பொழுது, ஊழியில்-ஒருகல்பத்தைக்காட்டிலும், பெரிது - மிகநெடிதாகின்றது, என்னும்-என்றுசொல்லாநின்றாள்; ஒண்- மிக்க தேஜஸ்ஸையுடையனான, சுடர் - ஆதித்யன், துயின்றது - அஸ்தமித்தான், என்னும் —; ஆழியும் - ஸமுத்ரமும், புலம்பும் - கோஷியாநின்றது; அன்றிலும்-அன்றில் பறவையும், உறங்கா - உறங்காதேகதறுகின்றன; தென்றலும் - தென்றல்காற்றும், தீயினில்-நெருப்பைக்காட்டிலும், கொடிதாம்-கொடிதாகவீசாநின்றது;[மிகு] தோழி - பாங்கீ!, ஓ! என்னும் - ஓ! என்று கூப்பிடாநிற்கும்; துணைமுலை - இரண்டு முலைக்கண்களையும், அரக்கும் - அரக்காநின்றாள்; என்செய்கேன் - என்னசெய்வேன், சொல்லுமின் - சொல்லுங்கோள், என்னும்—; ஏழை - அதிசபலையான, என் - என்னுடையவயிற்றிற்பிறந்தவளாய், பொன்னுக்கு-ச்லாக்யையான இப்பெண்விஷயத்தில், இடவெந்தையெந்தைபிரானே! என் நினைந்திருந்தாய்சொல்லு—.

(வளைகளுமித்யாதி) முன்கைவளை தொடக்கமான ஆபரணங்களும் சற்றும்தொங்கா. (என்றனிதயாதி) என்னுடைய பரிக்கப்பட்ட ஆபரணத்தையுடையவளுக்கு என்னினைந்திருந்தாய். ... ... ௩.

நாலாம்பாட்டு. (ஊழியித்யாதி) ஒருநாழிகை ஒருகல்பத்தில்

---

(வளைகளுமிறைநில்லா) ஆகாரத்திலே நிற்பதொரு வளையில்லையே. [ஸையிலயமிபயாந்த்யாஸ கரேஷவலயாந்யபி] க்ருஷ்ணனேயன்றிக்கே இன்னமிவற்றிலவனுக்கு வாசியுண்டு ; - அவன் " பிரியேன்." என்று பிரிவையுணர்த்தியாகிலும் போமிறே, இவை சடக்கெனப் போய்க்கொடு நின்றது.

(என்றனேந்திழை) என்னுடைய, பரிக்கப்பட்ட ஆபரணத்தையுடையவள். இவள் ஆபரணங்களாலே அலங்க்ருதையாயிருக்குமிருப்பைக் கண்டுகொண்டிருக்குமிதுவே தாரகமாகக் காணும் இவள்தான் நினைத்திருப்பது. இவளாபரணம் பூண்டிருக்குமிருப்பைக் கண்டநுபவிக்கை, எனக்கிவ்வளவோடே பர்யவஸிக்குமாப்போலே யிருந்தது. (இடவெந்தை) "நைவார்யைர்நவஸஞ்ஞுஷிணேः" என்னும்படி பண்ணுகைக்கோ நீயிங்குவந்திருக்கிறது ; ராமாவதாரத்திலிழவு தீர்க்கைக்காகவன்றோ இங்குவந்திருக்கிறது. ... ௩.

நாலாம்பாட்டு.—(ஊழியில்பெரிதால் நாழிகையென்னும்) ஒரு கல்பமாகிலும் ஸம்ஹ்ருதமாய்க்கிடக்கிறது பாடாற்றலாம்,

---

"வளைகளுமிறைநில்லா" என்றதுக்கு ஸம்வாதம் (ஸைமிலயமித்யாதி.) "ஆபர"[சுரு] என்றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிறார் (க்ருஷ்ணனேயித்யாதி.)

இப்போது ஆபரணங்களுண்டோவென்ன (இவளித்யாதி. "என்னினைந்திருந்தாய்" என்றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிறார் (இவளாபரணம் பூண்டித்யாதி.) "பிரானே" என்றதுக்குக்கருத்து (ராமாவதாரத்திலித்யாதி.) ... ௩.

நாலாம்பாட்டு.—(ஊழியிலித்யாதி.) கீழ்ப்பாட்டில்புலம்புதலேமுக்தகண்ட[சுரு]மாகக் காட்டுகிறாரென்று ஸங்கதி.

"ஊழி-" ப்ரளயகாலமாய், அப்போது நாயகனையறிய யோக்யதையில்லாமையாலும், போக்யபதார்த்தங்களில்லாமையாலும் பாடாற்றலாம்; அதிலுங்க்ரூரம் இந்நாழிகை என்னுமபிப்ராயத்தை யருளிச்செய்கிறார் ( ஒருகல்பமித்யாதி. )

பெரிதென்னும் ; ஆதித்யன் அஸ்தமித்தானென்னும். (ஆழியுமித்யாதி) கடலும் கதறும ; அன்றிலும் உறங்காதேகதறும்.

---

அந்நாழிகைகளைக் காணலாயிருக்கிறதில்லை. "நேதிநேதி" என்கையொழிய, இன்னத்தோடொக்குமென்று சொல்லவொண்ணாது. ஊழி பெருத்து நாழிகை சிறுத்திருக்கக்கடவதான மர்யாதைகுலைந்தது !.— (ஒண்சுடர்துயின்றதாலென்னும்) நாழிகையைஅளந்து தருகிறஆதித்யனும் போய் முடிந்தானென்னாநின்றாள். கல்பத்திலும் உபஸம்ஹ்ருதமாய் பதார்த்தங்களோடே ஸம்ஹார்யனுமவனிறே ஆதித்யன்; இப்போது அங்ஙனன்றிக்கே உளனாய் ஸஞ்சரியாநிற்கச்செய்தேயும்[ம] கார்யம்பிறக்கக்காணகிறிலோம். தன்னுடைய ஸந்நிதியாலே ராத்ரி வ்யஸநத்தையடையப் போக்கிக்கொடுவந்து தோற்றக்கடவ ஆதித்யனும் வந்து தோற்றுகிறிலன். "பீஷோதேதி ஸூர்ய:" என்கிற ஈஶ்வராஜ்ஞையும் குலைந்ததுபோலே !. நித்ரையைநினைத்தல், தீர்வுநித்ரையை நினைத்தல.

(ஆழியும்புலம்பும்) "நம்மில் சிறியவன்வாயகனாநிற்க நாந்தாம் பேசாதிருக்கிறதென்?" என்று, கடலானது வாயகமாகப்புக்கது. பேரளவுடைய கடலானது தைர்யஹங்கம்பிறந்து புலம்புகிறபடி. பேரளவுடையவன் தன்னளவிலே தைர்யஹங்கம்பிறந்து பேசும்பேச்சுக்கு ஸ்மாரகமாய் நலியாநின்றதாய்த்து.—(அன்றிலுமுறங்கா)அன்றிலினுடைய உறங்காமை, ஸம்ஶ்லேஷஸமயத்தில் நாயகனுடைய நித்ராவிரஹத்துக்கு ஸ்மாரகமாகாநின்றதாய்த்து. (தென்றலும்தீயினிற்கொடிதாம் ) தென்றலினுடைய குளிர்த்தியானது, காந்தனுடைய கரஸ்பர்ஶத்துக்கு ஸ்மாரகமாய் வாயகமாகாநின்றது. தென்றலினுடைய வெம்மை ஆற்றவேண்டில், கேவலாக்நியிலேபொகட்டு ஆற்றவேண்டும்படியிராநின்றது.

---

"பெரிது" என்கையாலே - "இப்படியன்று, இப்படியன்று" என்று சொல்லுகையால்,ஸத்ருஶமாகச்சொல்லப்போகாதென்னுமது தோற்றுகிறதென்கிறார்(நேதீத்யாதி.) "ஆல்!" என்ற ஆஶ்சர்யத்துக்குஹாவம்(ஊழிபெருத்தித்யாதி;) விஷாதஸூசகமாய், அத்தாலே ஸூசிதமாகவுமாம்.

"பெரிதால் நாழிகை" என்றவநந்தரம் சொன்னதுக்குக்கருத்தருளிச்செய்கிறார் (நாழிகையையித்யாதி.) (முடிந்தான்) என்றது - (தீர்வுநித்ரை) என்னும் பக்ஷத்திலே ; "முடிந்தான்" என்கைக்குஜ்ஞாபகமென்னென்ன வருளிச்செய்கிறார் (கல்பத்திலுமித்யாதி.)கேவலநித்ரையானபக்ஷத்திலே தாத்பர்யமருளிச்செய்கிறார் ( தன்னுடையவித்யாதி. ) அன்றிக்கே, கீழ்வாக்யம் கேவலநித்ராபக்ஷத்துக்கு உபபாதகமாய், இவ்வாக்யம் உண்மையைச் சொன்னதுக்குத்தாத்பர்யத்தைச்சொல்லுகிறதாகவுமாம். "ஆல்" என்றதின்கருத்து (பீஷோதேதீத்யாதி.)

சிறியவன் - ஸூர்யன். வாயகமாம் வழியைக்காட்டுகிறார் ( பேரளவுடையவித்யாதி.)

"தீயினிற்கொடிதாம்" என்றதுக்குத்தாத்பர்யம் (தென்றலினுடையவித்யாதி.)

(தோழியோவென்னும்)என்தோழியெங்கே? என்னும்.(துணைமுலையரக்கும்)வாய்வாய் என்பாரைப்போலே முலைக்கண்ணை அரக்கும்; என்செய்கேன், சொல்லவல்லிகோளேயென்னும். (ஏழையித்யாதி) அதிசபலையான என்பெண்பிள்ளைக்குச் செய்தருள நினைத்ததென். சு.

(தோழியோவென்னும்) தனக்கொன்று வ்யஸநமானால் "அம்மே!" என்கைக்கு நான்ஸாம்யம்பண்ணிற்றிலேன்!. "அவனோடே சேரவே ஸகலபதார்த்தங்களும் அநுகூலமாய்க்குடநீர்வார்க்குங்காண்" என்று சொன்னாயே பாவீ! நீ, ஊர்பகையாம்படிபண்ணினாயே!.— இவள் "தோழியோ"என்னப்பார்த்திராதே பருவம் (துணிமுலையர[ம]க்கும்) முலைகளானவை "எனக்கடைத்தவிஷயத்தை நீகாட்டு" என்று நலியப்புக்கவாறே, க்ஷாமகாலத்தில் ப்ரஜைகள் "சோறு, சோறு" என்றால், "வாய், வாய்" என்பாரைப்போலே, முலைகளை அரக்காநிற்குமாய்த்து. [முன்னிருந்து மூக்கின்று]காணக்காணப் பருவம் கழியாநின்றதாய்த்து. பருவம்கழிவதானால் பின்னையிவை மூதுகிலேயானாலாகாதோ!.— (சொல்லுமின் என்செய்கேனென்னும்) தென்றல்துடக்கமான பதார்த்தங்கள்போலுமன்றிறே முலைகள் நெருக்கப்புக்காலுண்டானநலிவு. அவை வ்யஸநமாகிறபோது, "தோழியோ!" என்றாள்; இவை வ்யஸநமாகப்புக்கவாறே, தோழிமாரோடு தாய்மாரோடுவாசியற எல்லாரையும்சேர்த்து, சொல்லுங்கோளென்கிறாள்.— (ஏழை) "கிடையாதுகாண்" என்றால், கிடைக்குமதிற்போலே சாபலத்தைப் பண்ணுமவளாய்த்து.

(என்பொன்னுக்கு)"இவளும் தன்சாபலமும்பட்டதுபடுகிறாள்" என்று கைவாங்கியிருக்க வொண்ணாதபடி ச்லாக்யையாயிருக்குமவள். (இடவெந்தை) உக்தியாலே தன்சாபலம் தோற்றவிருக்கிற இவளைப்போலன்றிக்கே, க்ரியையாலே சாபலம்தோற்றவிருக்கிற நீ நினைத்திருக்கிறதென்?. ... ... ... ... சு.

லோகத்திலே இடறினால் அம்மே! என்னக்கண்டோமே, இத்தனை வ்யஸநங்கள் நலிந்தால், இவள் "தோழீ" என்கிறதென்னென்னவருளிச்செய்கிறார் (தனக்கித்யாதி.) அவனைத்தான்ஸந்தோஷிக்கைக்குக் கருதினமுறுவல் தோழியர்க்கருளாதவளவன்றோவென்ன (அவனோடேயித்யாதி.) குடநீர்வார்க்கும் - குளிரப்பண்ணும். "ஓ!" என்றதுக்குத்தாத்பர்யம் (ஊர்பகையித்யாதி.)

மேலுக்கவதாரிகை (இவளித்யாதி.) இவள்க்லேசத்தைப்பார்த்து நில்லாதே முலைகளென்றுகருத்து. வாய்வாயென்கை - கபோலதாடநம் பண்ணுகை. அரக்காநிற்கும் - அடக்காநிற்கும். இவளடக்கும்படி முலைகள்வளருமோவென்ன (முன்னித்யாதி.) "மூக்கின்று" என்றதுக்குத்தாத்பர்யம் (காணவித்யாதி.) "முன்னிருந்து" என்றதுக்கு ஸார்வபாவம் (பருவமித்யாதி.)

"தோழீ" என்றுஏகவசநமாகச்சொல்லியிருக்க,இங்கே"சொல்லுமின்"என்று பஹுவசநப்ரயோகம் பண்ணுகைக்கு ஹேதுபூர்வகம் பாவமருளிச்செய்கிறார் (தென்றலித்யாதி.)

(க்ரியையாலே)என்றது-திருமுலைத்தடத்தில் திருமுகத்தைவைத்துக்கொண்டேயிருக்கையாலே யென்கை. ... ... ... ... சு.

மூ.—ஓதிலுமுன்பேரன்றிமற்றோதாள்,
உருகும்நின்திருவுருநினைந்து,
காதன்மைபெரிது,கையறவுடையள்,
கயல்நெடுங்கண்துயில்மறந்தாள்,
பேதையேன்பேதைபிள்ளைமைபெரிது,
தெள்ளியள்வள்ளிநுண்மருங்குல்
ஏதலர்முன்னாவென்நினைந்திருந்தா
யிடவெந்தையெந்தைபிரானே. ரு.

ப - ரை.— ஓதிலும் - வாய்திறந்து வார்த்தைசொல்லும்போது, உன்பேர[ன் ]றி - உன்பேரையொழிய, மற்று - மற்றொருவர்பேரையும், ஓதாள் - சொல்லுகிறிலள்; நின் - உன்னுடைய, திருவுரு - வடிவழகை, நினைந்து - நினைத்து, உருகும்- உருகாநின்றாள்; காதன்மை - உன்விஷயத்திலுண்டான ஆசையானது, பெரிது- மேன்மேலனப்பெருகாநின்றது; அத்தாலே, கைஅறவுஉடையள் - கைப்பொருளிழந்தாரைப்போலே வருத்தமுறாநின்றாள்; கயல்-கயல்போன்ற, நெடு - நீண்டி[ரு]ந்துள்ள, கண் - கண்கள், துயில் - நித்திரைகொள்ளுகையை, மறந்தாள்-மறந்துவிட்டாள்; பேதையேன்பேதை - மிகவும்சபலையான எனபெண்ணினுடைய, பிள்ளைமை - பிள்ளைத்தனம், பெரிது - பெரிதாயிராநின்றது; உம்மளவில்வந்தால், தெளியள் - மிகதெளிவுடையளாயிராநின்றாள்; வள்ளி - வள்ளிக்கொடிபோன்று,நுண்-நுண்ணிதாயிருந்துள்ள, மருங்குல்-இடையையுடையளான விவ [உயி]ரை, இடவெந்தையெந்தைபிரானே!—, ஏதலர்முன்னா - உகவாதார்முன்னே, என்நினைந்திருந்தாய் - செய்யநினைத்திருக்கிறதென என்றாள். ... ... (ரு)

அஞ்சாம்பாட்டு. (ஓதிலுமித்யாதி) வாய்திறந்து வார்த்தைசொன்னாளாகிலும் உன்பேரன்றிச்சொல்லாள். (உருகுமித்யாதி) உன்னுடைய வடிவழகைநினைத்து உருகாநிற்கும். (காதன்மைபெரிது) ஆசைபெரிது. (கையறவுடையள்) கையறல் - செயல்மாட்சி.

அஞ்சாம்பாட்டு.— (ஓதிலும்) முதல்தன்னிலே வார்த்தைசொல்லாதேயிருக்கும்போதே பெரியது; சொன்னாலோ (உன்பேரன்றி மற்றோதாள்) "ஐயர், ஆசசி" என்னத்தவிர்ந்தாள்.— (உருகும்நின் திருவுருநினைந்து) நாமஷ்வாராயர்மியை அநுஸந்தியா, நீர்ப்பண்டம் போலே மங்கியிருக்கும் †.—(காதன்மைபெரிது வடிவழகினளவல்ல வாய்த்து ஆசையின்பெருமை.— (கையறவுடையள்) ஆசையினளவல்ல வாய்த்து இழவின்கனம்.— இழவுககு அவயியென்னென்னில்

அஞ்சாம்பாட்டு.— (ஓதிலுமித்யாதி.) "சொலலுமினனசெய்கேன" என்று அவள்கேட்டவாறே, நீங்களெல்லாருங்கூடிப் போதுபோககாகில கரியாவஸேஷங்களைச்சொல்லிக்கொண்டுநெஞ்சைஅந்யபரமாக்கியுமதாங்கப்பண்ணினாலாமே! என்னும்ஆகாங்க்ஷையிலே சொலலுகிறாளென்கிறாளொன்று ஸங்கதி.

ஓதுகையாவது - சொல்லுகையாய், அதுதானும பெண்பிள்ளைக்குஸ்வாவஸ்யையிலவார்த்தைகற்கையாய், அத்தசையிலும் உனபேரன்றி மற்றறியாளென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (முதல்தனனிலேயித்யாதி.) பெரியது - தெரியாதது. ஓதும்போதிலுமென்று பாவஷார்த்தம். யர்மியை - விர்ஹவிஶிஷ்டனுடைய நாமரூபாயனே. வடிவென்றது - ஈஸ்வரன்வடிவென்றபடி. "கை" என்று - கையில் பொருளைச்சொல்லிற்று, "அறவு" என்று - இழக்கையைச்சொல்லிற்று, "உடை" என்கிறது - ஷஷ்டிமாவிலேயாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆசையித்யாதி.)

† "உக்கியிருக்கும்" என்று சில ஸ்ரீகோசங்கள்.

(கயலித்யாதி)கயல்போன்றபெரிதான கண்களுறங்காள்.(பேதைபித்யாதி) மிகவும் அபலையான என்பெண்பிள்ளை.பிள்ளைத்தனம்பெரிது.(தெள்ளியள்) உம்மளவில் சாலத்தெளிவையுடையவள். வள்ளிபோன்றபடி. வள்ளிக்கொடிபோன்றநுண்ணிய இடையையுடையவள். (ஏதலர்த்யாதி)உகவாதார்முன்னே இவளைநீர்செய்ய நினைத்திருக்கிறதென். ரு.

(கயலித்யாதி)கயல்போலேமும்யமாய்ப்பரப்புடைத்தாயிருக்கிற கண். பெரியவூர்கள் குடிவாங்கிறாப்போலே, கண்ணில்பரப்படங்கலும் நித்ராதத்வம் குடிவாங்கிற்று.—(பேதையேன்பேதை) அறிவுகேடியான என் பெண்பிள்ளை. விளைவதறியாதே இவளைப்பெற நோன்புநோற்[ற]கும்படியான அறிவுகேட்டையுடைய ; "நெடுங்காலமும்கண்ணன் நீண்மலர்ப்பாதம்" என்கிறபடியே. (பிள்ளைமைபெரிது)பருவத்தினளவல்லவாய்த்து மௌக்த்யத்தின்பெருமை.லோகயாத்ரையிலவந்தால், தன்பருவத்திலுள்ளார்க்குள்ள வறிவுபோராது.—(தெள்ளியள்) உம்மளவில்வந்தால், ஸ்ருதோபநிஷத்கராளிலுமல்லள்.— (வள்ளிநுண் மருங்குல்) இவள் ஸ்வபாவத்தை யநுஸந்தித்துக்கைவிடவொண்ணாதபடியாய்த்து வடிவில்பசை. பிள்ளைத்தனமும் தெள்ளிமையும் அப்ரயோஜகம், வடிவுபோருமாய்த்து உமக்குக்கைவிடவொண்ணாமைக்கு.

( ஏதலர்முன்னா ) "ஆசைப்பட்டாயிறே ! அழகிதாகவுண்டாயிறே!" என்றுஏசுகிற ஶத்ருக்கள்முன்பே.(என்நினைந்திருந்தாய்)[உம்] [த்வஷ்ம்ரேஶரணமதாநா0பராஷவ:] "உகவாதார்முன்பே நம்முடையார் நோவுபடவிட்டுப்பார்த்திருக்குமது நமக்குப்போராது" என்றிருக்கக்கடவநீர், இவளிடையாட்டத்தில் நினைத்திருந்ததென். [நதே உருபம்] ஸ்ரீவைகுண்டநாயனுக்காகிலபோருமென்னவுமாம்;இப்படி கைவிட்டிருக்குமது உமக்குப்போராது. ... ... ரு.

"பேதை" என்று சொல்லிவைத்து, "பிள்ளைமை" என்றதுசுருக் கருத்தருளிச்செய்கிறார் ( பருவத்தினித்யாதி. ) இப்படி மௌக்த்யத்தைச்சொன்னால், "தெள்ளியள்" என்று மேலே சொல்லுமத்தோடு விரோதியாதோவென்னவருளிச்செய்கிறார் (லோகேத்யாதி.) வள்ளிக்கொடிபோலே நுண்ணிதானஇடையையுடையவளென்று ஸம்ஹார்யமாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவளித்யாதி.)(அநுஸந்தித்து) என்றவநுஷ்ரம், கைவிடநினைத்தாலும் என்றுகூட்டுவது.

"நாயு! ந - அநுரூபஃ" என்னவேயமைந்திருக்கவும், "தே" என்கையாலே - அர்ச்சாவதாரமாக விருக்கும்தேவர்க்கு என்று தாத்பர்யமாகையாலே அருளிச்செய்கிறார் (ஸ்ரீவைகுண்டேத்யாதி.) (என்னவுமாம்) என்றது - சொல்லலாமென்றபடி; பக்ஷாந்தரஸூசகமன்று. ... ... ... ... ரு.

ஆறும்பாட்டு.— (தன்குடிக்கித்யாதி.) தரும்புநறுக்கில் ஸாயுஜ்யமாமென்று துணிந்திருக்கு முங்கள்வயிற்றிற்பிறந்தபெண்பிள்ளை என்பேசா யோதுகிறதும் என்னுருவை நினைத்து உருகுகிறதும் செய்தாளென்றால் இது மெய்கொள்ளப் போமோ என்று அவனுக்குக்கருத்தாக; சொல்லுகிறாளென்கிறதொன்று ஸங்கதி.

மூ.—தன்குடிக்கேதும் தக்கவா நினையாள்,
தடங்கடல்நுடங்கெயிலிலங்கை
வன்குடிமடங்கவாளமர் தொலைத்த
வார்த்தைகேட்டின்புறும், மயங்கும்,
மின்கொடிமருங்குல் சுருங்கமேல்நெருங்கி
மென்முலைபொன்பயந்திருந்த
என்கொடியிவளுக்கென் நினைந்திருந்தா
யிடவெந்தையெந்தைபிரானே. ௬.

ப - ரை.—தன்-தன்னுடைய, குடிக்கு - குலத்துக்கு, தக்கவா - தகுந்தமார்[யி]க்கம், ஏதும் - ஒன்றும், நினையாள் - ஆராய்ந்தறிகிறிலள்; தடம்-பெரிய, கடல் - கடலையும், நுடங்கு - வளைந்திருந்துள்ள, எயில் - மதிளையுமுடைய, இலங்கை - லங்கையிலுள்ள, வன் - வலியராக்ஷஸருடைய, குடி - குலமாக, மடங்க - அழியும்படி, வாள் அமர்-கொடியயுத்தத்திலே, தொலைத்த-நிரஸித்த, வார்த்தை-வ்ருத்தாந்தத்தை, கேட்டு—, இன்புறும் - ஆநந்திக்கும்; திரியட்டும், மயங்கும்-மயங்காநிற்கும்; மின் - மின்னலையும், கொடி - வஞ்சிக்கொடியையுமொத்த, மருங்குல் - இடையானது, சுருங்க - நுடங்கும்படி, மேல் - மேலே, நெருங்கி-நெருக்கமாக, பொன் பயந்திருந்த - பொன்நிறமானபசலைபூத்துக்கிடக்கிற, மென் - மெல்லிய, முலை - ஸ்தநங்களையுடையாளான, என்கொடிஇவளுக்கு - என்பெண்ணானஇவள்விஷயத்தில், இடவெந்தையெந்தைபிரானே! என் நினைந்திருந்தாய் சொல்லு—. (௬)

ஆறும்பாட்டு. (தன்குடியித்யாதி) ப்ரபந்நக்குடிதனக்கும் தன் குடிக்கும் சேரும்சேராதுஎன்றறிகிறிலள்.

ஆறும்பாட்டு.—(தன் குடிக்கேதும்) (தன்குடி) நங்குடிஎன்னாதே, (தன்குடி) என்கிறுளாய்த்து, “எம்பெருமானார்தரிசநம” என்னுமாப்போலே. நம்பிரதிபத்தியாலே சொன்னோமாகையன்றிக்கே, பெருமாள் “இராமாநுசனுடையார்” என்றே அருளிச்செய்வர். “பெருவிலைபனாயிருப்பதொரு ரத்நத்தை நடுவேயிட்டுக்கோத்தால் முன்னும் பின்னுமொக்க விலைபோமாப்போலேகாண்” என்று பிள்ளான். (தன் குடிக்கேதும் தக்கவாநினையாள்) இவள் நிலையிருந்தபடியிது, நீரினி உம்முடையமர்யாதையைநோக்கிக்கொள்ளப்பார்த்தீரோ இல்லையோ[நாயி]ன் என்கிறுள். இவளைத்தொடங்கிக்காணும் இக்குலமர்யாதை நடத்துவதாக நினைத்திருந்தது; தன்னைத்துடங்கி குலமர்யாதைநடத்துவதாக நினைத்திருக்க, தாலித்தைக் கடலிலே கவிழ்க்கப்பார்க்கிறுள். (தன் குடிக்கு) “ஜநகாநாம்குலே” என்கிறபடியே இவள்பிறந்தபின்பாய்த்து இக்குடியில் முன்பில்லாதனவற்றமெல்லாமுண்டாய்த்து.

திருக்கோட்டியூர்நம்பி “எம்பெருமானார்தரிசநம்” என்று எல்லார்க்கும் ப்ரதிபத்திபிறக்கும்படி தம் ப்ரதிபத்தியாலே யருளிச்செய்தமாத்ரமன்றோ வென்ன (நம்ப்ரதிபத்தியாலேயித்யாதி.) முன்புள்ளாரும் பின்புள்ளாருமிருக்க இவரையிட்டே நிருபிக்கைக்குஹேது வென்னென்ன வருளிச்செய்கிறுர் (பெருவிலையனித்யாதி.) உம்முடையமர்யாதை என்றது - இவள்ஸ்வயத்நத்திலே மூளுவதற்குமுன்னே முகங்காட்டுகையென்கை. தன்குடியின்மர்யாதைகளைச்செய்ய நினையாளென்னாதே, “குடிக்கு - தக்கவா” என்றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிறுர் (இவளையித்யாதி வாக்யத்வயத்தாலே.) (நினைத்திருக்க)-திருத்தாயார் நினைத்திருக்க. குலமர்யாதை முன்புதானே நடந்துகொண்டுவாராதோ, இவளைத்தொடங்கி நடத்துவதென்றதாலே? என்னும் ஶங்காபரிஹாரார்த்தம் ப்ரதிசம்ஹாரணம் (தன்குடிக்கென்று.)

(தடமித்யாதி) பெரியகடலையும் வளைந்தமதிளையுமுடைய லங்கையில், வன்குடியுண்டு - பொல்லாவரக்கர்குடி மாளயுத்தத்திலே தொலைத்த வார்த்தைகேட்டு இன்புறும்,

ஒருநாள்பட்டர்இனிதாகவாசித்தவற்றைக்கேட்டருளி†எம்பாரெழுந் திருந்து நின்று கண்ணநீரை விழவிட்டு ஸ்ம்ஸிலாஞ்சலிகாணராய், பட்ட ரைக்காட்டி, ''ஜநகாநா0குலேகீர்த்திமாஹரிஷ்யதிமேஸுதா'' என் றருளிச்செய்தாராம். ''தத்தஸ்ய'' என்கிறபடியே – நம்முடைய பேற் றுக்குநமக்கு வருந்துகைக்கு ப்ராப்தியில்லை, ''அவனாலேபேறு'' என் றிருக்கும் குடியாய்த்து. ''பெறுவதவனையாகில் இக்க்ரமங்கொண்டு[ெ] கார்யமென்'' என்றிராநின்றாளவள் ; '' மூகத்திலே விழுந்துக்கொடு நின்று க்ரமம்பார்க்கவமையாதோ'' என்றிராநின்றாளிவள். (ஏதும் தக்கவாநினையாள்) மடலைக்கடைக்கணிப்பது, வேண்யுத்ம்ரயநத்தி லே யொருப்படுவதாகாநின்றாள். (நினையாள்) திருத்தாயார்தான்இவள் நினைவையும் அடியொத்துகிறாள்காணும் இவளை யிழக்கமாட்டா[மையு] மையாலே.

(தடங்கடலித்யாதி) வேண்யுத்ம்ரயநத்திலொருப்பட வேண்டாத படி வந்துதவும்படியை யநுஸந்தித்து இனியளாகாநிற்கும் ; அதி லே யொருப்பட்ட வளவிலே வந்துதவினவனிறே. பரப்புடைத்தான கடலை அகழாகவுடைத்தாய், ஶத்ருக்கள் கேட்டபோதே நடுங்கும் படியான மதிளையுடைத்தாய. அன்றிக்கே, புரிப்புடைத்தான மதிளெ ன்னுதல். ( இலங்கைவன்குடிமடங்க ) ஊரிலரணையன்றிக்கே, வர வலத்தாலே பல்கிப்பரந்திருந்துள்ள குடியானது திரியட்டும் முடி ந்துபோம்படியாக ; ராக்ஷஸரைப்போலே மாயையாலன்றிக்கே, நிற முடைத்தான பூசலிலே வன்குடிமடங்கத் துலைந்தவார்த்தையுண்டு- ஸ்ரீராமாயணவ்ருத்தாந்தம், அத்தைக்கேட்டு. (இன்புறும்) '' நம்மவஸ் யையையுடையளா யிருப்பாளொருத்திக்கு உதவினபோதே யினி நமக்கும் உதவினவனன்றோ'' என்று அத்தாலே இனியளாம்.

---

இந்தத்திருத்தாயாரைப்போலேசொன்னார்தானுண்டோவென்னவருளிச்செய்கிறார் (தத்தஸ்யேத்யாதி.) ஆனால் த்வரிக்கவேண்டுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (பெறுவதித்யாதி.) இது - ஸம்ஶயம். '' ஏதும்'' என்கைக்குத்தாத்பர்யம் (மடலையித்யாதி.) '' நினையாள்'' என்கைக்கு-அவள் நினைவுதெரியுமோவென்னவருளிச்செய்கிறார் (திருத்தாயாரித்யாதி.)

அதிலே - வேண்யுத்ம்ரயநத்திலே. நுடங்கும்படியான - நடுங்கும்படியான வென்றபடி. '' எயில்''என்றதினர்யம்(மதிளென்றது.)புரிப்புடைத்தான - கோ[டிரு] ணமாகவளைப்புடைத்தான. '' வாள்'' என்று - ஒளியாய், அதாவது-செவ்வையான பூசலென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (ராக்ஷஸரைப்போலேயித்யாதி.)

---

† '' வாசித்தபடியைக்கேட்டருளி'' என்று சில ஸ்ரீகோஶங்கள்.

திரிய மயங்கும். (மின்கொடியித்யாதி) மின்போலவும் கொடிபோலவுமிருக்கிற இடை நுடங்கும்படி மேலேநெருங்க, அழகிய முலை பொன்பூக்கவிருந்த என் பெண்பிள்ளையான இவளுக்கு என்நினைந்திருந்தாய். ... ... ... ... ... ௬.

---

(மயங்கும்) "உதவாதவன் உதவாதொழிகையன்றிக்கே உதவும்ஸ்வபாவனுமிருந்துவைத்து, நம்தசையுமிதுவாயிருக்கஉதவாதொழிவதே!" என்றுமோஹிக்கும். "நம்தசையையுடையாளொருத்திக்கு உதவினவனன்றோ" என்று அந்தஅண்ணுமையையநுஸந்தித்தினியளாம்; "அணித்தாக வுதவினவன் நமக்குதவாராதொழிவதே!" என்று மயங்கும்.

(மின்கொடியித்யாதி) மயங்கின் மெழுக்கலாமவளோ இவள். மின்கொடிபோலேயிருக்கு மிடையானது சுருங்கும்படியாக மேலே நெருங்காநிற்குமாய்த்து. மேலேயிருந்து கீழேவெட்டுவாரைப்போலே தன்குடியிருப்பை யழியாநின்றதாய்த்து. (மென்முலை) முலைக்கு கார்ஙியம் ஸ்வபாவமாயிருக்கச்செய்தே, "மென்முலை" என்கிறது-[விரு விரஹஸஹமல்லாமையாலே. (பொன்பயந்திருந்த) இதனுடைய மண்ணீடாய்க் கழிந்ததாய்த்து. (என்கொடி) இவளுடைய வைவர்ண்யத்துக்கு உதவாதொழியிலும், தன்வயிற்றிற்பிறப்புக்குஉதவாதொழிய வொண்ணுதென்றிருக்கிறுள். (இவளுக்கென் நினைந்திருந்தாய்) இவளுடைய வைவர்ண்யமும், அத்யவஸாயமும், செல்லாமையும், வடிவழகும், பிறப்பிருந்தபடியாலும், உமக்குஉதவாதொழியப்போமோ. (இடவெந்தை) இவளிற்காட்டிலுமக்குண்டான வைவர்ண்யத்யோதகமிறே திருவிடவெந்தையிலிருப்பு; உடம்புவெளுப்பன்றுகில் ஸ்ரீவைகுண்டத்திலே யிருக்கவமையுமிறே. உம்முடைய வைவர்ண்யந்தோற்றத் திருவிடவெந்தையிலே வந்தெழுந்தருளியிருக்கிற நீர் இவளிடையாட்டத்தில் நினைத்திருந்ததென். ... ... ... ௬.

---

வார்த்தைகேட்கை இரண்டுக்கும் ஹேதுவாமோவென்ன வருளிச்செய்கிறுர் (நம்தசையையித்யாதி.)

சுருங்கமேல் நெருங்குகை-இடையொடியும்படி முலைமேலே பணைக்கைஎன்று விவக்ஷித்தருளிச்செய்கிறுர் (மேலேயிருந்தித்யாதி.) ... ... ௬.

ஏழாம்பாட்டு.— (உளங்கனிந்தித்யாதி.) உங்கள்குலமர்யாதைகளைப்பேணச்சொல்லி நீங்கள் பெண்பிள்ளையைமிரட்டி நிறுத்தினிகோளாகில் அவள்தானே ஆறியிராளோ, என்னைக்கேட்கிறதென்னென்ன ; அங்ஙன்செய்யவொண்ணுதபடியிறே அவள்தசையென்கிறுளென்கிறுரென்று ஸங்கதி.

பெண்பிள்ளையை "என்நினைந்திருந்தாய்" என்று நாங்கள்கணக்கமறமாற்றம் சொல்ல, நினைந்துஉன்னையேத்தமென்னவமைந்திருக்கவும், "இருக்கும்" என்கையாலே - வாய்விடமாட்டாதே. திருவுள்ளம் கனிந்திருக்குமென்று தாத்பர்யம்

மூ.—உளங்கனிந்திருக்கு முன்னையேபிதற்று
முனக்கன்றியெனக்கன் பொன்றிலளால்
வளங்கனிபொழில்சூழ் மாலிருஞ்சோலை
மாயனேயென்று வாய்வெருவும்
களங்கனிமுறுவல் காரிகைபெரிது
கவலையோடவலம் சேர்ந்திருந்த
இளங்கனியிவளுக்கென் நினைந்திருந்தா
யிடவெந்தை யெந்தைபிரானே. எ.

ப - ரை.—இப்பெண்பிள்ளை, உன்னையேயெப்பொழுதும் நினைக்கையாலே,[ம உளம்கனிந்திருக்கும்-ஸத்த்வஷ்டசித்ததையாயிராநின்றாள்; வாய்விட்டுப்பேசப்புகில், உன்னையே - ஸம்ச்லேஷத்துக்கு விஷயபூதனனவுன்னையே, பிதற்றும் - அடைவு கெடப் பேசாநின்றாள்; உனக்கன்றி - உன்விஷயத்திலல்லாமல், எனக்கு - நெ டுங்காலம் நோற்றுப்பெற்ற என்விஷயத்திலே, ஒன்று - அல்பமும், அன்பிலள் - ஸ்நேஹமில்லாதவளாயிராநின்றாள்; வளம்-மிக்கஇனிமையுடைத்தான, கனி-[மரு கனிகளையுடைய, பொழில் - சோலைகளாலே, சூழ் - சூழப்பட்ட, மாலிருஞ்சோலை- திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கிற, மாயனேஎன்று - ஆச்சர்ய பசக்தியுக்தனேயென்று, வாய்வெருவும்-வாய்பிதற்றாநின்றாள்; களங்கனி-களங்கனி போலேயினிதான, முறுவல் - புன்சிரிப்பையும், காரிகை - அழகையுமுடைத்தான என்பெண்ணானவள், பெரிதுகவலையோடு - மிக்கமநோவருத்தத்தோடே, அவலம் சேர்ந்திருந்த - அழகழிந்திருக்குமவளாய, இளங்கன்னி-சிறுப்பெண்பிள்ளையான, இவளுக்கு - இவள்விஷயத்தில், இடவெந்தையெந்தைபிரானே'—, என்நினைந்திரு ந்தாய்—, சொல்லு என்கிறாள். ... ... ... ... (எ)

ஏழாம்பாட்டு.(உளமித்யாதி) உன்னளவிலே நெஞ்சுடையளாயிரு க்கும்; உன்னையல்லது வாய்புலத்தாள்.

---

ஏழாம்பாட்டு.— (உளங்கனிந்திருக்கும்) உள்ளமானது இங்ங னே பக்வமாய், அகவாயிலேயோடுகிறது வாய்விடமாட்டாதேயிருக்கும். ஹ்ருதயம் பக்வமாகையாவதென்னென்னில்; ஸஜ்ஜிக்கக்கடவவன் ஸஜ் ஜித்தவில்லையாகில் ஆஶ்ரயமில்லையாயிருக்கை.—(உன்னையேபிதற்றும்) "இதுதான் ஸாவபங்யத்தாலேயோ" என்றிருந்தாள் இவள் வாய்[நடம விடுமளவும் திருத்தாயார்; உம்முடையபக்கலிலுமொருஅபிஸந்தியின் றிக்கே, "ஜாமடிம்ங்யஸ்யஜல்பதஃ" என்கிறபடியே - அடைவுகேடாகச் சொல்லாநின்றாள். ஒருஅபிஸந்திபூர்வகமாக வந்ததாகில் அடைவு பட்டிருக்குமிறே.

---

விவக்ஷித்தருளிச்செய்கிறார் (உள்ளமானதித்யாதி.)ஆஶ்ரயமில்லையாயிருக்கையென் றது - பழமானது ஸஜ்ஜியாதபோது அழிந்துபோமாப்போலே ஈஶ்வரன் அநுஸஜ் யாதபோது அழியும்படியிருக்கையென்கை. இதுதானென்றது - உளங்கனிந்திருக் கைதானென்றபடி. தான் "என்நினைந்திருக்கிறாய்" என்றதுக்கு வாய்விடாதேயிரு ந்தது அவனிடத்தில் ஸ்நேஹத்தாலே என்றிருந்தாள் திருத்தாயார், நெஞ்சழிந்து வாய்புலத்தப்புக்காள் பெண்பிள்ளை, அத்தைவிட்டு "உன்னையேபிதற்றும்" என்கிறு ளென்னும் ஸாவத்தையருளிசெய்கிறார் (இதுதானித்யாதி.)

உன்னையொழியப் பெற்ற என்பக்கல் ஒரு ஸ்நேஹமில்லை. (வளமித்யாதி) நன்றான ஃபலாதிகளையுடைய பொழில்சூழப்பட்ட திருமாலிருஞ்சோலையிலே நின்றருளின ஆச்சர்யபூதனையென்று வாய்வெருவும். (களங்கனியித்யாதி) களாம்பழம்போன்ற முறுவலையுடைய[நு

(உனக்கித்யாதி) "நம்மையுமொருக்கால்சொல்லாளோ" எனனும்நசையறுத்தாள். அவனுக்காமபடியிவ்வளவாக்கினார் பக்கலிலேயாதல், அவன்பக்கலிலேயாகலிறே பாவபந்யமிவளுக்கு.

(வளமித்யாதி)இவ்வளவான பரேமத்துக்கு அவன்க்ஷேபிபண்ணினபடியைசசொல்லி வாயவெருவும். ஸம்ருத்தமானஃபலங்களையுடை[ய]த்தான பொழிலாலே சூழப்பட்ட திருமலையிலே, ஆரியர்களிகழ்ந்த ம்லேச்சபூமியிலுள்ளார்க்கு முகங்கொடுத்து நிற்கிற ஆச்சர்யசேஷ்டிதங்களை அநுஸந்தித்து, பின்னைவாஸனையே உபாத்யாயராகச் சொல்லுமதொழிய உணர்த்தியுடன் சொல்லுவதொருவார்த்தையில்லை. (வாய்வெருவும்) [விவிந்த்யவாசாஸ்ருவதீதமேவ] மூற்பட அநுஸந்தியா, பின்னை அதுதானும் மாட்டாதே வாஸனையாலே சில சொல்லுமித்தனை.

(களங்கனிமுறுவல்) பிள்ளாய் ! ஆர் வாய்வெருவக்கடவத்தை ஆர்வாயவெருவுகிறாள். "ஸீதேதிவாருஹாஸீம்" என்று அவனிறே வாய்வெருவுவான். "எதிர்த்தலையைத் தோற்பித்தோமாக வேணும்" என்றிருக்கிறவர்களாகவாய் இப்படிவிலக்ஷணமாய் பக்வமாய்த்தோற்றினது போலேயாய்த்து முறுவலிருப்பது.

[அஸ்மிந்]முன்புதாமும்பிராட்டியுமாய் ஜலக்ரீடாதிகள் பண்ணிஸரஸமாகப்பரிமாறிறறேரிடத்திலே, பிராட்டியைப்பிரிந்துதாமும் இளையபெருமாளுமாய்த் தேடிக்கொடுவாராநிறகசசெய்தே, அவ்விடத்தைக்

உட்கருத்தையருளிசசெயகிறா (நம்மையுமித்யாதி;) பின்னையுமொருக்கால் சொல்லாளோஎன்னுமாசை. "எனக்கனைபொன்றிலள்" என்னபரஸக்தியெனனனேயென்ன (அவனுககிதயாதி.)

"ராமேதிராமேதி ஸதைவபுத்த்யாவிசிந்த்யவாசாஸ்ருவதீதமேவ." இதுக்கர்த்தமருளிச்செயகிறா (முறபடவிதயாதி.) "வாய்வெருவும், களங்கனிமுறுவல்" என்ற ஸமஹிவ்யாஹாரதாத்பர்யம் (பிள்ளாயித்யாதி.) பிளளாயென்னுமது - பூஜ்யவாசகமாகையாலே, இடவெந்தைபிரானை யங்ஙனே ஸம்போதிக்கிறாளென்று கருத்து. வாய்வெருவும்படியான பாகம் மூடுகினவிவளை குலமர்யாதையிலே நிறுத்துகைக்கு பஹிஷ்காரமென்று கருத்து. "களங்கனிமுறுவல" எனற வளவுக்குத் தாத்பர்யம் (எதிர்த்தலையித்யாதி.) களாப்பழம் போனறமுறுவலென்று ஸாம்யதா[ந]ுமாத்ரத்திலே த்ருஷ்டாந்தமெனறு திருவுள்ளம். "களம்" என்று-கலமென்றதாய், அவ்யக்தமதுரமெனறபடி; இதுவ்யாக்யாநாந்தரத்திலர்த்தம். "வாருஹாஸீம்" என்றது அழகிபஹாஸங்களையுடையவளென்றபடி. தோற்பித்தோமாகவேணுமென்றிருக்கிறவர்கள் - பிராட்டிமார்.

அவன் பிராட்டிமுறுவலுக்குத்தோற்றமைக்குப்ரமாணாந்தரம் காட்டிக்கொண்டு வயாக்யானம் பணணுகிறார் (அஸமிநித்யாதி.)

பெரி-வ்யா.—கண்டு இளையபெருமாளைப்பார்த்தருளிச்செய்கிறார்[அஸ்மிந்]இப்படிவெளுந்தறையாயிருக்கிறவிடத்திலேகாண் அன்றுநாமெடுப்பெடுத்தது. [மயாஸார்த்யம்] ப்ரணயயாளையில் தம்மைத்தாம் சால ம்ஷித்திறேயிருப்பது.நாமுங்கூட காணவந்தசோழரோபாதியாகக் கடக்கநிற்கும்படி அவளுடைய அளவுடைமையும் விஷயமாகப் பரிமாறினபடியுங்காண். [உதாரஶீலா] படைவீட்டிலிருந்தநாள், மாமனார் மாமியார்க்குக் கூசிப் படிவிடுவாரோபாதி அளவுபடவாய்த்து ஹோமம் செல்லுவது ; இப்போது, அவ்வளவன்றிக்கே, ஏகாந்தஸ்தலமாகையாலே தன்னை முற்றூட்டாக ஸர்வஸ்வதாநம் பண்ணிக்கொண்[டு]டிருந்தாளாய்த்து.[ஶிலாதலேபூர்வம்]ஜலக்ரீடைபண்ணுகிறதோரிடத்திலேஶிலாதலமாய் இளைத்தவிடத்திலேயதிலேயேறுவதாகப் பெருமாள் முற்கோலிக்(க)கணிசிக்க,"ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்துகோஸலா:" என்கிற அதிலேயுமொரு ஸம்பந்தமுண்டிறே யிவளுக்கு ; அத்தை யிவருடைய இங்கிதாதிகளைக்கொண்டறிந்து இவரையிளைப்பிக்கவேணும் என்று பார்த்து, பெருமாளேறுவதாகக்கணிசித்த துறையையடைத்துக்கொண்டிருந்தாள். [உபோபவிஷ்டா] அப்படியாயிருக்குமிறே யெங்கும். [காஞ்ஸ்மிதா] வெறும்புறத்திலேதானே துவக்கவல்லவள் ; முறுவலைச்சேர்த்தாப்போலேயாய்த்து முகந்தானிருப்பது. அதுக்குமேலே, அப்போது பிறந்தவெற்றியாலே * ஜாதஹாஸையானளாய்த்து. [த்வாமாஹ] இதுக்குமுன்பு, துடங்கினவற்றில் தலைக்கட்டாதே மீளுமதில்லையிறே பெருமாள் ; இதொன்றும் தலைக்கட்டப் பெற்றதில்லை ; அத்தாலே லஜ்ஜித்துக்கவிழ்தலையிட்டார் பெருமாள்; அவரைவிடா, இவரைப் (உ) போரப்பொலியச் சொல்லிக்கொண்டாடும் இளைய பெருமாள் முகத்தைப்பார்த்தாள்; "பாரீரோ தம்பியார்! நீங்கள் நினைத்ததெல்லாம் தலைக்கட்டினிகோளிறே ; நீங்கள், வல்லவலிய ஆண் பிள்ளைகள் ; நாங்கள், பெண்பெண்டுகள் ; நீங்கள், வேட்டைக்கும்

எடுப்பு-நிக்ஷேபம். அஸ்மத்ஸம்ஶ்ரதாத்பர்யமருளிச்செய்து, தஜ்ஜீயை அப்ரயாஸேயாய், ஜலக்ரீடாரஸாநுபவத்திலிருக்கும் ப்ராயாஸ்யத்தையருளிச்செய்கிறார்(நாமுங்கூடவித்யாதி.)காணவந்தசோழரோபாதி-மல்லயுத்தம்பார்க்கவேணுமென்றுவந்தசோழராஜாக்களோபாதியென்றபடி."பூர்வம்" என்னுமது-இதுக்குபூர்வமென்னவேண்டுகையாலே,அத்தை யருளிச்செய்கிறார்(ஜலக்ரீடையித்யாதி.)"உப,உப" என்கிறத்விருக்தியாலே - ஸமீபத்தில் துறைதுறை தோறுமிருந்தாளென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (அத்தையித்யாதி.) "ஜாதஹாஸா" என்று - காதாசித்கஹாஸம்போலன்றிக்கே, "காஞ்ஸ்மிதா" என்று சொன்னதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் [கூடு(வெறும்புறத்திலேயித்யாதி வாக்யத்வயத்தாலே.) ப்ரணயரோஷையில் பெருமாளோடு வார்த்தைசொல்ல ப்ரஸக்தியுண்டாயிருக்க, இளையபெருமாளோடு வார்த்தையருளிச்செய்கைக்குக் கருத்தருளிச்செய்கிறார்(இதுக்குமுன்பித்யாதி.) வாக்யஜாதந்தானென்னென்ன (பாரீரோவித்யாதி.)

(க) கணிசிக்க - உபக்ரமிக்க. (உ) போரப்பொலிய - மிகவும் பூர்ணமாக.

மூ.—அலங்கெழுதடக்கையாயன் வாயாம்பற்
கழியுமாலென்னுள்ள மென்னும்,
புலங்கெழுபொருநீர்ப் புட்குழிபாடும்,
போதுமோநீர்மலைக் கென்னும்,
குலங்கெழுகொல்லிக் கோமளவல்லிக்
கொடியிடை நெடுமழைக்கண்ணி
இலங்கெழில்தோளிக் கென்னினைந்திருந்தா
யிடவெந்தையெந்தை பிரானே. அ.

ப-ரை.—என் பெண்ணானவள், அலம்-ஹலம்எனனும்ஆயுதம், செழு-விளங்காநின்றுள்ள, தடம்-பருத்த, கை-திருக்கைகளையுடைய, ஆயன்-இடையனான க்ர்ஷ்ணனுடைய, வாய்-திருப்பவளத்தில்வைத்தூதுகிற, ஆம்பற்கு-இலைக்குழலோசைக்கு, என்னுள்ளம்-என்மநஸ்ஸானது, அழியும்-அழியாநின்றது, என்னும்-என்றுசொல்லாநின்றாள்; புலம்-இந்த்ரியங்களெல்லாவற்றையும், கெழு-தன்பக்கல் சேர்த்துக்கொள்ளும்படியான, பொரு-அலைபொருகிற, நீர்-நீரையுடைய, புட்குழி-திருப்புட்குழிவிஜயராகவன்விஷயமான காதைகளை, பாடும்-பாடாநின்றாள்; நீர்மலைக்கு-திருநீர்மலைக்கு, போதுமோ-போவ்கோள், எனனும்-என்றுசொல்லாநின்றாள; கொல்லி-கொல்லிமலையிலுண்டானபாவைபோன்று, செழு-ச்லாக்யமான, குலம்-குலத்திற்பிறந்தவளாய், கோமளம்-அழகிதான, வல்லி-கொடிபோல்மென்மைத்தன்மையளாய், கொடி-வஞ்சிக்கொடியையொத்த, இடை-இடையையுடையளாய், நெடுமழை-பெருமழைபோலே நீர்த்தாரைகள்இடைவிடாமல்ப்ரவஹிக்கிற, கண்ணி-கண்களையுடையளாய், இலங்கு-விளங்காநின்றுள்ள, எழில்-அழகிய, தோளிக்கு-தோள்களையுடையளான இப்பெண் விஷயத்தில், இடவெந்தையெந்தைபிரானே—, என்நினைந்திருந்தாய்—, சொல்லு என்கிறாள். ... ... ... ... ... ... (அ)

காரிகை மிகவும் நெஞ்சுகலக்கத்துடனே அழகழிந்திருக்கும். கவலை-ஊஹ்வம். (இளங்கனியித்யாதி) மிகவும் சிறுப்பெண்பிள்ளையளவில் நினைத்திருக்கிறதென். ... ... ... ... எ.

வினைக்கும்போய் வ்யாபரிக்குமவர்கள்; நாங்கள், வீடுவிட்டுப்புறப்பட்டறியோம்; உங்களுக்கு நினைத்தவகைகளெல்லாம் தலைக்கட்டலாயிறே, உங்கள்தமையனார் வென்றாரிறே'' என்று வைஹூமூலமாகக் கொண்டு இவ்வார்த்தையருளிசசெய்தாளாய்த்து.

(காரிகை) நிருபாயிகஸ்த்ரீத்வமுடையவள்.—(பெரிதித்யாதி) கவலையும் அவலமுமாகிறது-மாநஸமாயும் ஶாரீரமாயும்வரும் வ்யஸையை. கவலையாகிறது-நெஞ்சில்தடுமாற்றம்; அவலமாகிறது-வடிவுநைவைப்பேறுமை. (இளங்கனி†) நீர்வில்லைமுறித்துச்சென்று கைப்பிடித்த ஸ்ரீஜநகராஜன்திருமகளிலும் மிளையளிவள். உம்மைப்பிரிந்தால், அவளைப்போலே "ஸமாஷ்வாஸதக்ராஹம்" என்று ஆசையிட்டுப்பரிக்கவல்லவளன்று. இப்படி பருவமிளையளாகில் முன்பே ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாகிலன்றே இப்படி படக்கடவதென்னில்; இயற்கையிலே அவன் கலந்துவைக்குமே, அத்தைத்தாயாரறியாளே.(என்னித்யாதி) ஸ்ரீஜநகராஜன்திருமகளைக் கைப்பிடிக்கைக்காக ஸ்ரீமிதிலையில் புறச்சோலையிலே விட்டுக்கொண்டிருந்தாப்போலே, இவளைப் பெறுகைக்காகத் திருவிடவெந்தையிலே விட்டுக்கொடிருக்கிற நீர் இவளிடையாட்டத்தில் என்நினைந்திருந்தீர். ... ... எ.

இயற்கையிலே-உத்யாநாதி ஸ்தலங்களிலே, யாத்ருச்சிகஸம்ஶ்லேஷத்திலே. எ.

எட்டாம்பாட்டு.—(அலமித்யாதி.) "உனக்கன்றி யெனக்கன்பொன்றிலன்" என்று நீசொல்லும்படியாகமுகிழ்ந்தஎன்னை வாய்வெருவினாளேயாகிலும்தாயா

† "இளங்கனி-இளங்கன்னி; இளங்கன்னிகையென்றபடி" என்றுஅரும்பதார்த்தம்.

எட்டாம்பாட்டு. (அலமித்யாதி) ஹலம்பொருந்தியிருந்துள்ள பெரிய திருக்கையையுடைய க்ருஷ்ணன் திருப்பவளத்திலிலைக்குழலுக்கு என்னெஞ்சமழியுமென்னும். (புலமித்யாதி) டிர்ஸநீயமாய் ஸர்வேந்த்ரியங்களையும் தன்பக்கலிலே சேர்த்துக்கொள்ளும்படியான

---

எட்டாம்பாட்டு.— (அலமித்யாதி) நெஞ்சிலழிவைமறைக்க ப்ராப்தமாயிருக்க, நெஞ்சிலழிவைத் தாயானவென்முன்னே சொல்லாநின்றாள். அலமென்று - ஹலம்; கலப்பைசேர்ந்திருந்துள்ள சுற்றுடைத்தான கையையுடைய க்ருஷ்ணனுடையவாயில் குழலோசையிலே,ஒன்றுக்கழியாத என்னெஞ்சழியாநின்ற தென்னுநின்றாள். வயிரமுமுருக்குங்காணும் வாயில் குழலோசை. இலைக்குழலென்று நிர்வஹிக்கிறருமுண்டு. ஹலத்தையுடைய என்கிறவிதுக்குக் கருத்தென்னென்னில்; கையிலாயுதத்துக்கு எதிரிகளழியுமாப்போலே, குழலோசைக்கு இவளழியாநின்றாளென்கை. "தாய் தமப்பனுக்கு பாதந்த்ரமுகையாலே குறித்தகாலத்திலே வரப்பெற்றிலேன்" என்றாப்போலே சிலவற்றைக் குழலோசையிலே தோற்றவைத்திறே யூதுவது; "ஜயௌகளபத௦ ஸௌரிஸ்தாரமந்த்ரபதக்ரமம்। ரம்ய௦ கீதத்வநி௦ ஸ்ருத்வாஸந்த்யஜ்யாவஸத௦ஸ்ததா" என்று சொல்லுகிறபடியே. அன்றிக்கே, ஆறுநீர்வர முன்னே சிறையாறுபடுமாப்போலே, க்ருஷ்ணன் வரவுக்குறிப்பாக முன்னேவரும்(க)நம்பி மூத்தபிரான் குழலோசையாகவுமாம்.

அதிற்காட்டிலு மழிக்கும்போலேகாணும் அதுக்கிவ்வருகில்உகந்தருளின நிலத்திலிலே. (புலம்) என்று - வெளிநிலத்தை† ச்சொல்லிற்றாகவுமாம். அன்றிக்கே, கண்டாருடைய இந்த்ரியங்கள் பிணிப்புண்ணும்படியாய்,

---

வுன்னைக் கண்டபோதே அஞ்சி உனக்கு மறைக்க அவளுக்கு ப்ராப்தமாகாதோ, ஆகையாலே குலமர்யாதையிலே நிறுத்தலாமே என்று ஹ்ருதயாபிப்ராயமாக; என்னைத் தாயென்றுமறியாதே, தோழியோபாதியாக எண்ணி என்முன்னேதானே வாய்விட்டாளென்கிறாரென்று ஸங்கதி.

பூர்வார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நெஞ்சிலித்யாதி.) "செழு" என்றதினர்த்தம் (சேர்ந்திருந்துள்ளவென்றது.) வயிரமுமுருக்குமென்றது - வஜ்ரத்தையுமுருக்குமென்றபடி. "ஆம்பல்" என்றதுக்கு - மூங்கிற்குழலென் றருளிச்செய்து, இலைக்குழலென்ற அர்த்தாந்தரமருளிச்செய்கிறார் (இலையித்யாதி.) குழலோசைக்கிவளழிவானென்னென்ன வருளிச்செய்கிறார் (தாயித்யாதி.) குழலோசைக்கு ஈடுபட்டிருப்பர்களோவென்ன வருளிச்செய்கிறார் (ஜயாவித்யாதி.) தாரமென்றும் மந்த்ரமென்றும் சொல்லுகிற ஸ்வரவிசேஷங்களையுடைய பதங்களினுடைய க்ரமத்தையுடையவென்றபடி.

மேலுக்கவதாரிகை (அதிலித்யாதி.) அதிற்காட்டிலும் - விபவாவதாரங்களிற்காட்டிலும். செழுமை - சேருகையாய், அதினர்த்தம் (பிணிப்புண்ணும்படியாயென்று.)

---

(க) நம்பிமூத்தபிரான்-பலராமன். † "விளைநிலத்தை" என்று சிலஸ்ரீகோஸம்.

அலைபொருகிறநீரையுடைய திருப்புட்குழியைப்பாடும். போரிதோள் திருநீர்மலைக்கென்னும். (குலமித்யாதி) குலோத்தாரகையாய்,உருவகுப் புக்குகொல்லிமலையிலே நிற்பதொருபாவையைத்ருஷ்டாந்தமாகத்தமி ழ்கொண்டுபோருவர்கள். (இலங்கெழிலித்யாதி) விளங்காநின்றஅழ[கு]கியதோளையுடைய விவளளவில் நினைத்திருந்ததென். ... அ.

தன்னில்தான் பொராநின்றுள்ள ஜலஸம்ருத்தியையுடைய திருப்பு ட்குழியிலே நிற்கிற நிலையை அநுஸந்தித்தவாறே, நான்தாயென்று பாராதே வாய்விட்டுப்பாடாநின்றாள்.

(போதுமோ நீர்மலைக்கென்னும்) "நம்முடையிருந்தபடியால் திரு நீர்மலையிலேபோய்ப் புக்கேவிடுவோம்போலேயிருந்ததீ !" என்று, விலக்க நினைக்கிற தாயாரோடே,தோழிமார்க்குச்சொல்லுமாப்போலே சொல்லாநின்றாள்.

(குலமித்யாதி) கொல்லிமலையிலே யொருபாவையுண்டு - வகுப் பழகிதாயிருப்பது; அதுபோலேயாய்த்து இவளுக்குண்டானஏற்ற[மு]டு மும், பிறப்பும்,அநுகூலருமடித்துப பார்க்கப்பொருத ஸௌகுமார்ய மும். "என்னுடைக் கோமளக்கொழுந்து" என்னக்கடவதிறே.(கொடி யித்யாதி) கொடிபோலேயிருந்துள்ள இடையையுடையளாய், ஒரு க்கால் கண்ணாலே நோக்கினால் ஒருபாட்டம் மழைவிழுந்தாப்போலே இலக்காநார் தழைக்கும்படியான நோக்கையுடையளாய், உஜ்ஜ்வல மாகாநிற்பதாய் கீழ்ச்சொன்னதுகளெல்லாம் மேலே அழகிதான தோள்களையுடையளான விவளுக்கு. (என்னித்யாதி) "ராவணோ உர்ஹதிவைதேஹீம" என்னும்படியே உமக்குத் தகுதியாம்படியிருக் கிறஇவளிடையாட்டத்தில் நீர் நினைத்திருக்கிறதென். ... அ.

தாயாரோடேயென்றது - தாயாரான வென்னோடேயென்றபடி.

நல்லகுலத்திலே சேர்ந்தவளாய் கொல்லிப்பாவைபோலேயானவளென்று ஸம்தார்யமாய், வ்யுத்க்ரமேண அர்மருளிச்செய்கிறா (கொல்லியித்யாதி.)வகுப் பு - அவயவஸம்ஸ்தாநம். ஏற்றமும் - ஸௌகர்யாதிசயமும்." வேதஸம்ஸாலோகி தை ரஞ்ஜலாதி" என்னுமதத்தையுட்கொண்டு, "கோமளவல்லி" என்றதுக்குத்தாத் பர்யம்(அநுகூலருமித்யாதி.) (பிறப்பும், ஸௌகுமார்யமும்-அதுபோலேயாய்[கூ]டி த்து) என்றுஅந்வயம். கொல்லிமலைப்பாவைக்கு மலைஉதக்ஜேஷ்டதேசமாகையால் ஆபிஜாத்யமும்கூடும், பாவையிலேயும் ஸௌகுமார்யம் தோற்றும்படியிருக்கை யால் ஸௌகுமார்யமுண்டென்று திருவுள்ளம். ... ... அ.

ஒன்பதாம்பாட்டு.—(பொன்னித்யாதி.)" நான் ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைச் செய்ததும், திருமாலிருஞ்சோலை, திருப்புட்குழி, திருநீர்மலை, திருவிடவெந்தை, இவற்றிலே முகங்கொடுத்துக்கொண்டிருந்தது மிவளுக்காகவன்றோ ? இங்ஙனே யிருக்கச்செய்தேயும் இப்படி வாய்வெருவிக்கொண்டு விரஹக்லேசம் தலையெடுக் கைக்கு நிதானமேது ? அத்தைச்சொல்லில் அதுசெய்கிறோம்"என்று எம்பெருமா னுக்குக்கருத்தாக ; அவளிப்படி விவர்ணையானாள், எதிலேயீடுபட்டாளோ எனக் குத்தெரிகிறதில்லை, நீரே திருவுள்ளத்தில் விசாரித்துத் தீர்த்தருளவேணுமென்று தான்கைவிட்டுநிற்கிறாள் திருத்தாயாரென்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

மூ.—பொன்குலாம்பயலை பூத்தனமென்தோள்,
பொருகயற்கண் துயில் மறந்தாள்,
அன்பினலுன்மே லாதரம்பெரிதிவ்
வணங்கினுக்குற்றநோ யறியேன்,
மின்குலாமருங்குல் சுருங்கமேல் நெருங்கி
வீங்கியவன முலையாளுக்
கென்கொலாம்குறிப்பிலென் னினைந்திருந்தா
யிடவெந்தையெந்தை பிரானே. ௯.

ப - ரை.— மெல் - மெல்லிய, தோள் - தோள்களானவை, பொன்-பொன்[நி]
றத்தை, குலாவும் - கொண்டாடாநின்றுள்ள, பயலைபூத்தன - வைவர்ண்யத்தை
யுற்றன ; பொரு - தம்மில் ஒன்றோடொன்று பொராநின்றுள்ள, கயல் - கயல்
மத்ஸ்யம்போன்ற, கண் - கண்கள், துயில் - நித்ராகொள்ளுகையை, மறந்தாள்-
மறந்துவிட்டாள் ; உன்மேல் - உன்விஷயத்திலுண்டான, அன்பினல் - ஸ்நேஹத்
தாலே, ஆதரம் - அபிநிவேஶமானது, பெரிது - மேன்மேலனப்பெருகாநின்றது ;
இவ்வணங்கினுக்கு - அழகையுடையளான இப்பெண்பிள்ளைக்கு, உற்ற-நேர்பட்ட,
நோய் - வ்யாதியை, அறியேன் - அறிகிறிலேன்; மின்-மின்போலே, குலாம்-வளை
யாநின்றுள்ள,மருங்குல்-இடையானது, சுருங்க-சுருங்கும்படியாக, மேல்-மேலே,
நெருங்கி—, வீங்கிய-வளராநின்றுள்ள,வனம் - அழகிய, முலையாளுக்கு - முலைகளை
யுடையவளுக்கு, என்னும்-யாதாய்முடியும்;இடவெந்தையெந்தைபிரானே!—, குறி
ப்பில்-திருவுள்ளத்திலே, என்நினைந்திருந்தாய்—, சொல்லுளன்கிறள். (௯)

ஒன்பதாம்பாட்டு. (பொன்குலாமித்யாதி)மிருதுவான தோளானது
பொன்பூத்தன. குலாவல் – சொல்லல். பொன்பூத்ததென்று சொல்ல
ப்படுகை. ( பொருகயற்கண்துயில்மறந்தாள் ) கயல்பொருதாப்போ
லேயிருக்கிற கண் துயில்மறந்தாள். ( அன்பினலித்யாதி ) ஸ்நேஹத்
தாலே உன்பக்கலிலே அபிநிவேஶம் பெருகவுடையவள்.

ஒன்பதாம்பாட்டு.—(பொன்னித்யாதி) பொன்னை, குலாவாநின்
றுள்ள – கொண்டாடாநின்றுள்ள, வைவர்ண்யத்தை ஸஜித்தவிர
ஹஸஹமல்லாத தோள். ( பொருகயலித்யாதி ) பொராநின்றுள்ள
கயல்போலே மும்யமாயிருந்துள்ள கண்ணில் நித்ராதத்வம் அடியே
பிடித்து வ்யுத்பத்திபண்ணவேண்டும்படியாக வாஸனையோடே மறந்
தாள்.—(அன்பினலித்யாதி) ஸங்கமடியாக உம்முடையபக்கல் பிறந்த
காமமானது அறப்பெரிது.

பொராநின்றுள்ள கயல்போலே என்றது - யுத்யோந்முகமான இரண்டு
மத்ஸ்யங்கள்ஒன்றுக்கொன்றுநேரேயிருக்குமாப்போலேயிருக்கிறஸந்நிவேஶ[த்து]
ஸௌந்தர்யத்தைப்பற்ற.

மூ.—அன்னமும்மீனுமாமையுமரியுமாய வெம்மாயனேயருளாய்
என்னுமின்தொண்டர்க்கின்னருள் புரியுமிடவெந்தையெந்தைபிரானை
மன்னுமாமாடமங்கையர்தலைவன் மானவேற்கலியன்வாயொலிகள்
பன்னியபனுவல்பாடுவார்நாளும் பழவினைபற்றறுப்பாரே. ௧௦.

ப - ரை.—அன்னமும் - ஹம்ஸாவதாரமும், மீனும் - மத்ஸ்யாவதாரமும், ஆமையும் - கூர்மாவதாரமும், அரியுமாய - ந்ருஸிம்ஹாவதாரமும் செய்தருளின, எம்மாயனே - ஆஸ்சர்யசக்தியுக்தனான என்னுடையஸ்வாமீ ; அருளாய் - க்ருபை செய்தருளவேணும், என்னும் - என்றுப்ரார்த்திக்கிற, இன் - விலக்ஷணரான, தொண்டர்க்கு-தாஸபூதருக்கு, இன் அருள் புரியும்-பரமக்ருபைசெய்தருளுமவனான, இடவெந்தையெந்தை பிரானை - திருவிடவெந்தையில் நித்யவாஸம் பண்ணுகிற நித்யகல்யாணன்விஷயமாக ; மன்னும் - ப்ரளயத்திலும் அழியாததாய், மா - பெரிய, மாடம் - மாடங்களையுடைத்தான, மங்கையர்-திருமங்கையிலுள்ளார்க்கு, தலைவன்-நிர்வாஹகராய், மானம் - அசன்ற இலையையுடைத்தான, வேல் - வேலை தரித்த, கலியன் - ஆழ்வாருடைய, வாய்-திருப்பவளத்திலுண்டாய், ஒலி-ப்ரவஹித்தமாம்படி, பன்னிய - விஸ்தரித்தருளிச்செய்த, பனுவல்கள்-பாட்டுக்களை, பாடுவார்-ப்ரீதிப்ரேரிதராய் அப்யஸிக்கவல்லவர்கள், நாளும் - எந்நாளும், பழவினை - தங்களுடைய பூர்வகர்மங்களினுடைய, பற்று - ஸம்பந்தத்தை, அறுப்பார் - ஸவாஸநமாகப்போக்கப்பெறுவர்கள். ... ... ... ... (௧௦)

பத்தாம்பாட்டு. (அன்னமித்யாதி) விஜாதீயமான அவதாரங்களான என்னுயனே அருளாய். மத்ஸ்யாத்யவதாரங்களெல்லாமான ஆஸ்சர்யபூதனே. இவ்வவதாரங்களெல்லாம் தமக்காக அவதரித்தருளினனென்றிருக்கிறார். (அருளாயென்னுமித்யாதி) அருளவேணும் என்றபேக்ஷித்த ஸேஷபூதர்க்கு நல்லவருளைப்பண்ணும் இடவெந்தையெந்தைபிரானை. (மன்னுமித்யாதி) பர்வதங்கள்போலே ஸ்திரமாயான மாடங்களையுடைய திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகர்.

பத்தாம்பாட்டு.—(அன்னமித்யாதி) அறிவு அழிந்துபோய் கெடாவுபட தமக்கறிவுகொடுத்த அவதாரங்களை நினைக்கிறார். (இன்தொண்டர்க்கின்னருள்புரியும்) இப்படிப்பட்டருசியுடையாராய் அவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களுடைய இழவு தீர்க்கைக்காகத் திருவிடவெந்தையிலே வந்து நிற்கிற உபகாரகனையாய்த்துக் கவிபாடிற்று. மன்னுமாமாட மங்கையர் தலைவனாய்த்துக் கவிபாடினார்;- ப்ரளயத்துக்குங்கூட அழியாத மாடங்களையுடைய திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வார்.

பத்தாம்பாட்டு.—(அன்னமித்யாதி.)இப்போது வேறுசிலஅவதாரங்களையருளிச்செய்யலாகாதோவென்ன, கருத்தருளிச்செய்கிறார் (அறிவித்யாதி.) "அன்னமும் மீனுமாமையு மரியுமாயவெம்மாயனேயருளாய்" என்றும் தம்மைப்போலேயிருக்கிற இனியதொண்டர்க்கு இனிதான அருளைக்கொடுக்குமென்று பலஸ்ஜார்யம திருவுள்ளம்பற்றி தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படியித்யாதி.) இப்படிப்பட்டருசியுடையராயென்றது-தம்மைப்போலேருசியுடையராயென்றபடி. "(எந்தைபிரானை)- உள்ளீடாகச்சொன்ன" என்றுகூட்டி, ஆழ்வார்விஸேஷணமாகத்திருவுள்ளம் பற்றியருளிச்செய்கிறார்(உபகாரகனையாய்த்துக்கவிபாடிற்றென்று.)

**வேல்கொள்கைத்தலத்தரசர்வெம்போரினில்விசயனுக்காய் மணித்தேர்க்
கோல்கொள்கைத்தலத்தெந்தைபெம்மானிடம்குலவுதண்வரைச்சாரல்
கால்கொள்கண்கொடிக்கையெழக் கமுகிளம்பாளைகள்கமழ்சாரல்
சேல்கள்பாய்தருசெழுநதிவயல்புகு திருவயிந்திரபுரமே. ௧.**

ப - ரை.—கைத்தலத்து - கையில், வேல்கொள்-வேலையுடையரான, அரசர்-துர்யோதநாதிகளுடைய, வெம் - பயாவஹமான, போரினில் - பாரதயுத்தத்தில், விசயனுக்கு ஆய் - அர்ஜுநனுக்கே அநுகூலனாய், அவனுடைய, மணித்தேர் - அழகிய தேர்முன்னே, கோல் - உழவுகோலை, கைத்தலத்து -கையில், கொள்-கொண்டு நின்ற, எந்தை - என்குலநாதனான, பெம்மான் - ஸர்வேஸ்வரனுக்கு, இடம்-[ம்] இடமாவது; - குலவு - எல்லாராலும் கொண்டாடப்படுகிற, தண் - குளிர்ந்த, வரைச்சாரல் - பர்வதபார்ஸ்வத்தில், கால் - வெற்றிலைக்கால்கள், கண்கொள் - கண்தோறும்கிளைக்கிற, கொடி - கொடியானது, கையெழ - கைஎழாநிற்குமதாய், கமுகு-பாக்குமரங்களின், இளம்பாளைகள் - இளைதானபாளைகள், கமழ்-பரிமளியாநிற்கிற, சாரல் - பர்யந்தத்தையுடைத்தாய், சேல்கள் - சேல்மத்ஸ்யங்கள், பாய்தரு-பாய்கிற, செழுநதி - அழகிய ஆறானது, வயல்புகு - வயலில்பாயாநின்றுள்ள, திருவயிந்திரபுரமே— ... ... ... ... ... (௧)

திரைகொண்டுவந்து சேருகிற அழகிய ஆறு வயலிலேபாய்கிற திருவயிந்திரபுரமே. ... ... ... ... அ.

ஒன்பதாம்பாட்டு. (வேலித்யாதி) வேலைக்கையிலேயுடைய துர்[உ]யோயநாதிகளுடைய யுப்யத்திலே

(நிரையித்யாதி) வர்ஷித்தவாறே, மலையருவிகளானவை ஆனைக்கொம்பையும் அகில்மரத்தையும் முறித்து தன் திரைகளாகிற கைகளாலே யேந்திக்கொண்டு வயலிலே வந்துபுகுருமாய்த்து. அளவுபட்ட வாய்த்தலைகளாலேயாதல், கைவாய்க்காலாலேயாதல் புகுருகையன்றிக்கே, விளைவில்லாக்கடலிலே போய்ப்புகுகையுமன்றிக்கே, ஆறுதானே வயலிலேவந்துபுகுருமாய்த்து. ... ... ... அ.

ஒன்பதாம்பாட்டு.— (வேலித்யாதி) ஸமுத்தனில் குறைந்தாரில்லையிறே அங்கேயினபேரில்; * பார்யுமஸஞ்ஹாஷ்யபண்ணவேண்டும்படியிறே. (அரசர்) பரிகரம்நூசியேற ராஜாக்கள்கடக்கநிற்கையன்றிக்கே,ராஜாக்களை நூசியேறின போராய்த்து.(வெம்போர்)ஸாரஸமரமென்றால் கேட்டவர்களுக்கும் வயிறெழுகவேண்டும்படியான யுப்யத்திலே. காணவந்தசோமர்க்கும் தங்களை நோக்குகைக்குக்கையிலேஓராயுயம்பிடித்துக்கொண்டு நிற்கவேண்டும்படி ஸயாவஹமிறே.

ஒன்பதாம்பாட்டு.— (வேலித்யாதி.) மலையெடுத்து மழைதடுத்தானென்று க்ருஷ்ணாவதாரம் ப்ரஸ்துதமானவாறே,அவனுடையஆஸ்ரிதபக்ஷபாதத்தை யநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி.

போரில்வருமரசர்க்கு ஆயுயங்களநுக்தஸிய்யமன்றே, விஸேஷிப்பானென்னென்ன; கருத்தருளிச்செய்கிறார் (ஸமுத்தனித்யாதிவாக்யத்வயத்தாலே;)"உர ஸாயாரயாமாஸபார்யஸஞ்ஹாஷ்யமாயவ:" என்கிறபடியே-ஸமுத்தன்விட்ட அஸ்த்ரத்தைக்க்ருஷ்ணன்திருமார்விலேற்று அர்ஜுநனைரக்ஷிக்கவேண்டிற்று, அவனிலும்மிகுத்த அரசர்வேல்கள் க்ரூரங்களென்கைக்காகவிஸேஷித்தாரென்று கருத்து.

அர்ஜுநனுக்காய். (மணித்தேரித்யாதி) அழகியதேரிலே உழவுகோலைக் கையிலேகொண்டு தேரைநடத்தின எம்பரமஸேஷியிடம். குலவல் – கொண்டாடல். சாரலழகு. எல்லாரும்கொண்டாடப்படுகிற பர்வதபார்ஸ்வத்தில், (கால்களித்யாதி) வெற்றிலைக்கால்களிலே கண்[டு]தோறும் பல்லிபற்றின கொடி கைமாறெழ, கமுகிளம்பாளைகள் மணங்கமழுகிற சாரலையுடைத்தாய். (சேல்களித்யாதி) களித்துஉகளிக்கிற அழகியஆறு வயலுக்குப் பாய்கிற திருவயிந்திரபுரம். ... ௬.

(விசயனுக்காய்) அர்ஜுநனுக்காகத் தன்னை அழிவுக்கிட்டு. ரதியைச்சிறினவன் ஸாரதியையிறே யழியச்செய்வது. உடம்புக்கு (க)[டு] ஈடிடாதே தன்னை அழிவுக்கிட்டு நின்றானாய்த்து. தான்கொண்ட விஜயமும் அர்ஜுநன்றலையிலே கிடக்கும்படி தன்னைத்தாழவிட்டு வைத்தானாய்த்து; "மலைபுரைதோள்" இத்யாதி. (மணியித்யாதி) ஸ்லாக்யமான தேரிலே, கையிலே உழவுகோலைக்கொண்டு நின்ற எம் குலநாயனுடைய ஸ்தாநம்.

(குலவித்யாதி) கொண்டாடப்பார்த்தால் தன்னையேகொண்டாடும்படியாயிருக்கிற குளிர்ந்த மலைச்சாரலிலே – பர்யந்தத்திலே. (கால் கொள்கண்கொடி) காலுண்டு - வெற்றிலைக்கால்; அநுமறையும்படியாகக்கண்தோறும் பல்லிபற்றுமாய்த்து வெற்றிலைக்கொடி; அக்கொடிகள், கமுகுகளினுடைய இளம்பாளைகள் விரிந்தபரிமளத்தாலே[உ]யெருவிட்டாப்போலே யிருக்க, கையெழாநிற்கும். கையென்று-வெற்றிலைக்கிளைகளிறே. இப்படிப்பட்ட சோலையையுடைத்தாய், இச்சோலைக்கணித்தாயிறே ஆறுமிருப்பது; அப்பரிமளத்திலே மதுபாநம் பண்ணினாப்போலே களித்து சேல்கள் பாயாநிற்குமாய்த்து; இப்படியிருக்கிற அழகிய நதியானது வயலிலே புகுமாய்த்து. அதாவது – இவ்வயலளவுமாய்த்து ஆறாய் வருவது; இங்கேவந்தவாறே வயலிலே புகுந்தாய்த்துப் போவது.

---

"விசயன்மணித்தேர்க்கோல்கொள்" என்றதாலே - தன்மேன்மையழிந்து ஸாரதியாய் தன்னைஅம்புக்கிலக்காக்கினமை தோற்றுகிறதென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (அர்ஜுநனுக்காகவித்யாதி.) ரதிக்கன்றோ அதுவென்னவருளிச்செய்கிறார் (ரதியையித்யாதி.) "விசயனுக்காய்" என்றது - விஜயனுக்கேயாயென்று ஸாவதாரணமாக்கித்தாதபர்யமருளிச்செய்கிறார் (உடம்புக்கித்யாதி;) ஸ்வாகந்த்ர்யமாக உடம்பிலே கவசம்போடாமலிருந்தானென்று கருத்து. பார்த்தர்க்காயென்னாதே, "விசயன்" என்று அவனைநிருபித்ததுக்குக்கருத்தருளிச்செய்கிறார் (தானித்யாதி) தான்கொண்டவிஜயம் அவன்மேலேயேறிட்டதுக்கு ப்ரமாணம் (மலையித்யாதி.) "அலைவலை"என்கையாலே - தான்செய்தவிஜயத்தையெல்லாம் அர்ஜுநன் மேலேயேறிட்டு தானே கொண்டாடினானென்று கருத்து.

குலவுதல் - குலாவுதலாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (கொண்டாடவித்யாதி.) வெற்றிலைக்காலென்றது - வெற்றிலைக்கொடி வளரும்படியான கொள்கொம்பு. பல்லிபற்றுகை - கிளைக்கை. ... ... ... ... ௬.

---

(க) ஈடிடாதே - கவசந்தரியாதே.

மூ.—மூவராகியவொருவனை மூவுலகுண்டுமிழ்ந்தளந்தானைத்
தேவர்தானவர்சென்றுசென்றிறைஞ்சத்தண்டிருவயிந்திரபுரத்து
மேவுசோதியை வேல்வலவன்கலிகன்றி விரித்துரைத்த
பாவுதண்டமிழ்பத்திவைபாடிடப் பாவங்கள்பயிலாவே. க0.

ப-ரை.— மூவர்ஆகிய - ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகளுக்கு அந்தராத்மாவாய், ஒருவனை - அவரவர்கள் காரியம்நடத்துகிற அத்விதீயனை, மூஉலகு - மூன்றுலோகங்களையும், உண்டு - அமுதுசெய்து, உமிழ்ந்து - வெளிநாடுகாணப்புறப்படவிட்டு, அளந்தானை - மஹாபலிபக்கலில் நின்றும் மீட்டளந்துகொண்டவனை, தேவர் - தேவர்களும், தானவர்-அஸுரர்களும், சென்றுசென்று-பலகாற்சென்று, இறைஞ்ச-ஆச்ரயிக்கலாம்படி, தண் - பரமஹாமான, திருவயிந்திரபுரத்து - திருவயிந்திரபுரத்திலே, மேவு - நித்யவாஸம்பண்ணுகிற, சோதியை - ஸர்வஜோதிவிஷயமாக; வேல்வலவன் - வேலாலே எதிரிகளைஜயிக்கவல்ல, கலிகன்றி - ஆழ்வார், எல்லாரும் அறியும்படி, விரித்து - விஸ்தரித்து, உரைத்த - அருளிச்செய்ததாய், பாவு-பரந்த, தண் - அழகிய, தமிழ்-தமிழ்ப்பாஷையான, இவைபத்து-இப்பத்துப்பாட்டுடையும், பாடிட - பாட, பாவங்கள் - பாபங்கள், பயிலா - சேரமாட்டா. (க0)

பத்தாம்பாட்டு. (மூவராகியவித்யாதி) ஸ்ரஹ்மருத்ரேந்த்ராதிகளுக்கு அந்தராத்மாவாய் அவ்வவர்கள்காரியம் நடத்துகிற அத்விதீயனை. (மூவுலகித்யாதி) த்ரைலோக்யமெடுத்து அமுதுசெய்து, அவற்றை வெளிநாடுகாண உமிழ்ந்து மஹாபலிபக்கலில்நின்றும் மீண்டளந்தவனை. (தேவர்தானவரித்யாதி) தேவாதிகள் தங்கள் காரியங்களுக்குச்சென்றுஆச்ரயிக்கும்படி திருவயிந்திரபுரத்திலே

ஆக, ஸாரதம் யாரயத்துக்குள்ளே மறைந்திருக்கும் க்ஷேமமாய்த்து. தான் வேலைச்செய்தேயும் "அர்ஜுநன்வென்றான்" என்று சொல்லலாம்படி க்ருஷ்ணன் அவனுக்குப்பரிகரமாய் அநுஷ்டித்து நிற்குமாபோலே, தான் விளைவிக்கச்செய்தே "வயல்விளைந்தது" என்று சொல்லலாம்படியாய்த்திருப்பது. ... ... க.

பத்தாம்பாட்டு.—(மூவரித்யாதி) ப்ரஹ்மருத்ராதிகளுடைய ஶரீரத்துக்கும் ஆத்மாவுக்கும் அந்தராத்மதயாநின்று ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப்பண்ணுகையாலும்; ஸ்வேநரூபேண நின்று பாலநத்தைப்பண்ணுகையாலும்; (மூவராகிய ஒருவனை) "ப்ரஹ்மவிஷ்ணுஶிவாத்மிகாம்." ஆக, ஸர்வநியந்தாவாய்த்து. (மூவுலகித்யாதி) ஆபத்ஸகனுமாய்த்து. (தேவரித்யாதி) "தேவாநாம்தாநவாநாஞ்ச" என்கிறபடியே-தன்னாலே ஸ்ருஜ்யரானவவர்களிரண்டுதிறத்தார்க்கு மொத்திருக்கையாலே தந்தாமுடைய அபேக்ஷிதஸித்யர்த்தமாக தேவர்களுக்கும் அஸுரர்களுக்கு மடையச் சென்றாச்ரயிக்கலாம்படி திருவயிந்திரபுரத்திலே

பத்தாம்பாட்டு.—(மூவரித்யாதி.) "ஸ்ருஷ்டி ஸ்திதிஸம்ஹாரங்கள் மூன்றும் விஷ்ணுவேபண்ணுகிறான்" என்றதுக்கு ப்ரமாணம் (ஸ்ரஹ்மேத்யாதி;) "ஸ்ருஷ்டிஸ்தித்யந்தகரணீம் ப்ரஹ்மவிஷ்ணுஶிவாத்மிகாம்| ஸஸம்ஜ்ஞாம் யாதி பகவாநேக ஏவ ஜநார்த்தந:" என்று ப்ரமாணமோக்ஷம்.

நித்யவாஸம்பண்ணுகிறஸர்வஸேஷியை.(வேலித்யாதி)வேலாலேஎதிரிகளைஜயிக்கவல்ல ஆழ்வார் எல்லாரும்உஜ்ஜீவிக்கும்படி யாகஅருளிச்செய்த. பாவுதல் - பரம்புதல். (தண்டமிழ்) அழகியதமிழ். (பத்தித்யாதி) இப்பத்துப்பாட்டையும்பாடப் பாவங்கள் சேரா. ... க0.

நஞ்ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

நித்யவாஸம்பண்ணி, அத்தாலே பரமபதத்திற்காட்டிலு முஜ்வலனாயிருக்கிறவனை. எல்லாமில்லையிறே பரமபதத்தில் ; இவர்களுக்கு அபேக்ஷிதஸம்ஶ்லேஷம்பண்ணுகையால்வந்தவேற்றமுண்டிறே யிங்கு.

(வேல்வலவன்) "ஆழிவலவன்" என்னுமாப்போலே. (விரித்துரைத்த)சொல்லுகிறலக்ஷணங்களுண்டாம்படிசொன்ன. "விரித்துரைத்த" என்றும், "தொகுத்துரைத்த" என்று முண்டிறே. இவிட்டென்ன நெஞ்சிலேபடும்படி பண்ணுகையும், இவர்களுக்குப்பரக்கச் சொல்லுகையும், இவையெல்லாம் வேணுமிறே. (பாவு) பரந்து ஸபாதலக்ஷமாயிருக்கை யன்றிக்கே பத்தாய்த்து. (பாவங்கள் பாரிமுருலாவே) பாபாநுபவம் பண்ணுகைக்காகவிறே ஸம்ஸாரத்திலே பிறக்கிறது; அவை யநுபவிக்கவந்த விக்ரஹத்திலே இத்தையதிகரிக்கில்,அவைதான்"நமக்கிருப்பிடமல்ல"என்று விட்டோடிப்போம். க0.

அடிவரவு.— இருந்தண் மின் வையம் மாறு கூன் மின் விரை வேல் மூவர் ஊன்.

திருமங்கையாழ்வார்திருவடிகளேஶரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேஶரணம்.

---

எல்லாமில்லையிறேயென்றது-அநுகூலப்ரதிகூல விபாகமில்லையிறேயென்கை.

நெஞ்சிலேபடும்படி ஸங்க்ரஹமாக வுரைக்கவென்கையாய்த்து, விரித்துரைப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (விரித்தித்யாதி;) அநதிஸங்க்ரஹவிஸ்தரமாயுருக்கச் சொன்னாரென்கை. ... ... ... ... ... ௪0.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மூன்றாம்பத்து - இரண்டாந்திருமொழி - ஊன்வாட., ப்ரவேஶம்.

(நஞ்சீயர்படி.)

"அடியவர்க்குமெய்யனாகியதெய்வநாயகன்"என்று ஆஶ்ரிதஸுலபத்வார்த்தமாகத் திருவயிந்திரபுரத்திலே ஸந்நிஹிதனானானென்றார்-கீழ் ;

---

(பெரியவாச்சான்பிள்ளைவ்யாக்யாநம்.)

"அடியவர்க்கு மெய்யனாகியதெய்வநாயகன்" என்று ஆஶ்ரிதர்க்கு ஸுலபனாகைக்காகத்திருவயிந்திரபுரத்திலேஸந்நிஹிதனானானென்றார்;

---

ஊன்வாடப்ரவேஶம்.— திருவயிந்திரபுரத்திலே * அடியவர்க்கு மெய்யனாய் தெய்வநாயகனிருக்கையால் அங்கேதானே ஆஶ்ரயிக்கச்சொல்லலாயிருக்க,"திருச்சித்திர கூடத்தில் சென்று சேர்மின்கள்" என்று உபதேஶிப்பானென்னென்கிற ஶங்கையிலே ஸங்கதி யருளிச்செய்கிறார் (அடியவர்க்கித்யாதி.) ஆஶ்ரிதர்க்கென்றது-திருமேனியோடிருக்கு மாஶ்ரிதர்க்கென்றபடி. ... ... *

ரூ.—வெம்புஞ்சினத்துப் புனக்கேழலொன்றாய்
விரிநீர்முதுவெள்ளமுள்புக்கழுந்த
வம்புண்பொழில்சூழுலகன்றெடுத்தா
னடிப்போதணைவான் விருப்போடிருப்பீர்!
பைம்பொன்னுமுத்தும் மணியுங்கொணர்ந்து
படைமன்னவன்பல்லவர்கோன் பணிந்த
செம்பொன்மணிமாடங்கள் சூழ்ந்த தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. ௩

ப - ரை.—வம்பு - புதிதாய், உண் - ஊணுக்கு விஷயமான, பொழில் - சோலைகளை, சூழ் - சூழ்ந்த, உலகு - பூமியானது, விரி - பரந்த, முதுநீர்வெள்ளமுள் - மஹாஜலமான கடலிலே, புக்கு அழுந்த - மக்னையாக, அன்று - அப்போது, வெம்பும் சினம் - மிக்க கோபத்தையுடைத்தாய், புனம் - காட்டிலே வர்த்திக்கிற, ஒன்று - ஒப்பற்ற, கேழலாய் - மஹாவராஹமாய்க்கொண்டு, அத்தை, எடுத்தான் - இடந்தெடுத்தவனுடைய, அடிப்போது - திருவடித்தாமரைகளை, அணைவான் - சேரவேணுமென்கிற, விருப்போடு - ஆதரத்தோடே, இருப்பீர் - வர்த்திக்கிறவர்களே!; பைம் - அழகிய, பொன்னும் - பொற்பூக்களையும், முத்தும் - முக்தாக்களையும், மணியும் - மாணிக்கங்களையும், கொணர்ந்து - கொண்டுவந்து, படை - பரிகரத்தோடேகூட, மன்னவன் - ராஜாவான, பல்லவர்கோன் - பல்லவராஜா, பணிந்த - ஆச்ரயிந்ததாய், செம்பொன் - அழகியபொன்னாலும், மணி - மாணிக்கங்களாலும் செய்யப்பட்ட, மாடங்கள் - மாடங்களால், சூழ்ந்த - சூழப்பட்ட, தில்லைத் திருச்சித்திரகூடம் சென்று சேர்மின்கள்—, ... ... ... ... ... ௩)

மூன்றாம்பாட்டு. (வெம்பித்யாதி) மிக்க சினத்தையுடைத்தான காட்டிலே வர்த்திக்கும் வராஹமாய். (விரிநீரித்யாதி) பரந்தமஹாஜலத்திலே பரிமளப்ரசுரமான பொழில்சூழ்ந்த பூமியைத்தெடுத்தவன் திருவடித்தாமரைகளைச் சேரவேணுமென்றிருக்கிற ஆதரமுடையீர். (பைம்பொனித்யாதி) அழகிய பொற்பூக்களையும் முத்து மாணிக்கங்களையும்கொண்டு ஸபரிகரமாகவந்து பல்லவர்கோன் பணிந்த. (செம்பொனித்யாதி) அழகிய பொன்னாலும் மாணிக்கங்களாலும் செய்யப்பட்ட மாடங்கள்சூழ்ந்த தில்லை. ... ... ... ௩.

மூன்றாம்பாட்டு.—(வெம்புமித்யாதி) மிக்க சினத்தையுடைத்தாய் புனத்திலேவர்த்திக்கும் மஹாவராஹமொன்றாய், பரந்திருந்துள்ள கடலிலே பூமியழுந்த, அப்போது ஸௌரப்யத்தையுடைத்தான பொழில்சூழ்ந்த பூமியையெடுத்தவனுடைய திருவடித்தாமரைகளை யணையவேணுமென்னும் விருப்பத்தோடே வர்த்திப்பீர்!.—(பைம்பொன்னித்யாதி) ரத்நாதிகளைக்கொண்டு பரிகரத்தோடும் பல்லவர்கோன் பணிவதும்செய்து, செம்பொன்னாலும்மணியாலும்செய்த மாடங்கள் சூழாநின்றுள்ள தில்லை. ... ... ... ௩.

மூன்றாம்பாட்டு.— (வெம்புமித்யாதி.) "தவம்செய்யவேண்டா, திருச்சித்திரகூடம் சேர்மின்கள்" என்றீர், நாங்கள் ஸம்ஸாரப்ரளயத்திலழுந்திக்கிடக்க உஜ்ஜீவிப்பதென்ன; ப்ரளயார்ணவமக்னையான பூமியை யெடுத்தாப்போல் உங்களை உஜ்ஜீவிக்கவல்லவனென்கிறாரென்று ஸங்கதி.

வம்பு - புதிசாய், உண் - ஊணுக்குவிஷயமாய், அவற்றையுடைத்தான பொழிலென்று விசேஷித்தருளிச்செய்கிறார் (சேலேத்யாதி.) பைம்பொன் - அழகிய பொற்பூக்கள். ... ... ... ... ... ௩.

மூ.—கோமங்க வங்கக்கடல்வையமுய்யக்
குலமன்னரங்கம் மழுவில்துணியத்
தாமங்கமருள்படைதொட்டவென்றித்
தவமாமுனியைத்தமக்காக்க கிற்பீர் !
பூமங்கைதங்கிப் புலமங்கைமன்னிப்
புகழ்மங்கையெங்கும் திகழப் புகழ்சேர்
சேமங்கொள்பைம்பூம் பொழில்சூழ்ந்ததில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. ரு.

ப - ரை.—கோ - ராஜாக்கள், மங்க - அடங்கவும், வங்கம் -மரககலங்கள் நிறைந்த, கடல் - கடல்சூழ்ந்த, வையம் - பூமியிலுள்ளார், உய்ய - உஜ்ஜீவிக்கும படியாகவும், குலமன்னர் - ராஜாக்களுடைய, அங்கம் - சரீரமானது, மழுவில் - மழுவிலே, துணிய-துணியும்படியாகவும், தாம் - தாமே, அமருள்-யுத்தத்திலேபுக்கு, படைதொட்ட - ஆயுதமேந்தி, வென்றி - ஜயிக்குமவனும், தவம் - பின்பு தபஸ்ஸுபண்ணப்புக்க, மாமுனியை-மஹாமுனியான ஸ்ரீபரசுராமாழ்வானை, (நீங்கள்) தமக்கு - தங்களுக்கு, ஆக்ககிற்பீர்-ஆக்கிக்கொள்ளவேணடியிருப்பீர் !; பூமங்கை-பெரியபிராட்டியார், தங்கி-திருமார்விலேதங்கியும், புலமங்கை - ஸ்ரீபூமிப்பிராட்டி, மன்னி-இடவருகேபொருந்தவும்,அத்தாலே,புகழ்மங்கை—, எங்கும்-எங்குமொக்க, திகழ - உஜ்ஜ்வலமாய்விளங்காநிற்க, புகழ்சேர்-புகழையுடைத்தாய், சேமங்கொள்-அரணையுடைத்தான,பைம்பூம்பொழில்சூழ்ந்த-பரந்தபூத்தசோலையாலசூழப்பட்ட, தில்லைத் திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்கள்—. ... ... (ரு)

அஞ்சாம்பாட்டு. (கோமங்கவித்யாதி) ராஜாக்களென்று பேர்பெற்றார் அடங்க. ராஜாக்கள் ஶரீரமானது மழுவிலேதுணிய. (தாமங்கவித்யாதி) தாமேயுத்தத்திலேபுக்கு ஆயுதமேந்தி அவர்களையறுத்துப் பொகட்டுச் சினந்தீர்ந்தபின்பு தபஸ்ஸுபண்ணப்புக்க மஹாமுனியை உமக்காகவேணுமென்றிருப்பீர் !.— (பூமங்கைவித்யாதி) பெரியபிராட்டியாரும், ஸ்ரீபூமிப்பிராட்டியாரும் நித்யவாஸம்பண்ணுகையாலே புகழ்மங்கைஎங்கும் உஜ்ஜ்வலமாய் விளங்காநின்ற. (புகழ்சேரித்யாதி) மிக்கபுகழையும் அரணையும் அழகியபொழில்சூழ்ந்த தில்லை. ரு.

அஞ்சாம்பாட்டு.— (கோமங்கவித்யாதி) ராஜாக்களென்று பேர்பெற்றாரடங்கலும் மங்க, கடல்சூழ்ந்தபூமி உய்ய, ராஜாக்களுடைய ஶரீரம் மழுவிலேதுணித்தவிடத்திலும் கோபம்மாறாதே ஆயுதம் தொட்ட அதிமாத்ரமான மஹாவீர்யத்தையுடையவனான ஸ்ரீபரஶுராமாழ்வானைத் தந்தாமுக்காக்கிக்கொள்ள வேண்டியிருப்பீர் !.— (பூமங்கைவித்யாதி) பெரியபிராட்டியாரும் ஸ்ரீபூமிப்பிராட்டியும் நித்யவாஸம்பண்ணி, புகழ்மங்கை யெங்குமுஜ்ஜ்வலமாய் வர்த்திப்பதும் செய்து, புகழையும் காப்பையுமுடைய பொழில்சூழ்ந்த தில்லை. ரு.

**அஞ்சாம்பாட்டு.— (கோமங்கவித்யாதி.) இக்ஷ்வாகுக்குவிரோதியாய் உதாரனானமஹாபலிபோலேயோ எங்களுடைய ப்ரபலவிரோதிகள் என்னும் ஜிஜ்ஞாஸுக்களுக்கு விரோதிநிரஸநஶீலதையை யருளிச்செய்யக்கோலி, ஸ்ரீவாமநாவதாரத்துக்கு அநந்தரபாவியான ஸ்ரீபரஶுராமாழ்வான் வீரசரிதத்தையருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.**

**மழுவில்துணித்தபின்பும் படைதொட்டிருக்கையால் ஶமித்தவர்யம் (கோபம் மாறாதேயென்று.) ... ... ... ... ... ரு.**

மூ.— நெய்வாயழலம்புதுரந்து முந்நீர்

துணியப்பணிகொண்டணியார்ந் திலங்கும்

மையார்மணிவண்ணனையெண்ணி நுந்தம

மனத்தேயிருத் தும்படிவாழவல்லீர்!

அவ்வாயிளமங்கையர் பேசவுந்தா

னருமாமறையந்தணர் சிந்தைபுகச்

செவ்வாய்க்கிளி நான்மறைபாடு தில்லைத்

திருச்சித்ரகூடம் சென்றுசேர்மின்களே. ௬.

ப - ரை.—நெய - கூரிய, வாய் - வாயையும, அழல-அக்நிபோன்ற தேஜஸ்[ஸை]யுமுடைய, அம்பு - அம்பை, துரந்து - விட்டு, முந்நீர் துணிய - கடலும்சலங்கி ராவணனும் பரிகரமும்துணிய,பணிகொண்டு - அதனைச்சாரியுங்கொண்டு, அணி- ஆபரணமாய், அதனாலே, ஆர்ந்து - பூர்ணமாய், இலங்கும் - விளங்காநிற்பதாய், மைஆர - கருமைமிக்க, மணிவண்ணனை - மணிபோன்றவடிவழகையுடையவனை, எண்ணி - அநுஸந்தித்து, நுந்தம - உங்களுடைய, மனத்தே - நெஞ்சிலே, இருத்துமபடி - நித்யவாஸம்பண்ணும்படி, வாழவல்லீர் - வாழவேண்டியிருப்பீர்!; அவ்வாய் - அவ்விடத்தில, இளமங்கையர - சிறுபெண்கள், தமப்பன்மார்அத்யயநம்பண்ணக்கேட்டிருக்கையாலே, அருமாமறை - வேதத்தை, பேசவும் - சொல்லவும், அப்பெண்களுடனேகூட, செவ்வாய்க்கிளி - சிவந்தவாயையுடையகிளிகள், அந்தணர்சிந்தைபுக - ப்ராஹ்மணர்ஹ்ருதயத்திலே புகும்படி, நால்மறை - நான்குவேதங்களையும், பாடு - பாடுகிற, தில்லைத்திருச்சித்ரகூடம் சென்றுசேர்மின்கள்—.

ஆரும்பாட்டு. (நெய்வாயித்யாதி) நெய் - கூர்மை. கூரியவாயையும் அக்நிபோன்ற தேஜஸ்ஸையுமுடைய அம்பைவிட்டு. (முந்நீரித்யாதி) கடலும்சலங்கி ராவணனும் பரிகரமும் துணியப் பணிகொண்டு. (அணியித்யாதி) ஆபரணங்களாலே அலங்க்ருதமாய் விளங்காநிற்ப[உரு]தான நீலமணிபோன்ற வடிவழகை யுடையவனை,உங்கள்நெஞ்சிலே வைத்து வாழவேண்டியிருப்பீர்!— (அவ்வாயித்யாதி) அவ்விடத்திற் சிறுபெண்கள், தமப்பன்மார் அத்யயநம்பண்ணக்கேட்ட செவியேற்றாலே, அப்பெண்களுடனேகூட, சிவந்தவாயையுடைய கிளிகளானவையும் ப்ராஹ்மணர்ஹ்ருதயத்திலே புகும்படி நாலுவேதங்களையும் பாடும். இளமங்கையர் அருமாமறைபேச, கிளி நான்மறைபாட என்று கொள்வது. ... ... ... ... ... ௬.

ஆரும்பாட்டு.— (நெய்வாயித்யாதி) கடைந்து நெய்யிட்ட வாயையுடைத்தாய், நெருப்பையுமிழுகிற அம்பையேவிக் கடலைத் துணித்து, அதனைப்பணிகொண்டு, உஜ்ஜ்வலமாய் கருமைமிக்கிருந்துள்ள மணிபோலேயிருக்கிற திருநிறத்தோடேகூடின விக்ரஹத்தை யுடையவனை அநுஸந்தித்து, உங்களுடைய ஹ்ருதயத்திலே நித்ய வாஸம்பண்ணும்படி வாழவல்லீர்!.— (அவ்வாயென்றுதுடங்கி) தன்வாயில் பழுப்புப்போலேயிருக்கிற பாலைகளான பெண்கள் ஓத்துக்கேட்ட செவியேற்றாலே சொல்லவும் ப்ராஹ்மணருடைய ஹ்ருதயத்துக்கேற, சிவந்தவாயையுடைத்தான கிளியானது நல்ல ஸ்வரத்தோடே நாலுவேதத்தையும் பாடாநின்றுள்ள தில்லை. ௬.

ஆரும்பாட்டு.—(நெய்வாயித்யாதி.)மேலாத்தலைதாட்டராஜாக்களைவென்றாகிலும் எங்களுடையஅபாரஸம்ஸாரஸமுத்ரத்தைவெல்லவல்லனோவென்ன; அந்தராவதாரத்தில்கடலைக்கலக்கினஅதிமாநுஷசேஷ்டிதத்தையருளிச்செய்கிறாரென்றுஸங்கதி.

அணி - ஆபரணமாய், அத்தாலே, ஆர்ந்து-பூர்ணமாய், இலங்குமதாயென்று விக்ரஹவிசேஷணமென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (உஜ்ஜ்வலமாயென்று.) "அவ்வாயிளமங்கையர் - அருமாமறை - பேசவும், அந்தணர்சிந்தைபுக, செவ்வாய்க்கிளி - தான்-நான்மறைபாடு" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னித்யாதி.) ... ... ...

மூ.—மௌவல்குழலாய்ச்சி மென்தோள்நயந்து
மகரம்சுழலச் சுழல்நீர்பயந்த
தெய்வத்திருமாமலர்மங்கைதங்கு
திருமார்வனைச் சிந்தையுள்வைத்துமென்பீர்!
கௌவைக்களிற்றின் மருப்பும்பொருப்பில்
கமழ்சந்துமுந்தி நிவாவலங்கொள்
தெய்வப்புனல்சூழ்ந் தழகாய தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. எ.

ப-ரை.— மௌவல - முல்லைமலரை, குழல் - கருகுழலையுடைய, ஆய்ச்சி - நப்பின்னைப்பிராட்டியுடைய, மென் - மார்த்தவமான, தோள் - திருத்தோளோடே, நயந்து - கலந்து, மகரம் - மகரமத்ஸ்யம் தொடக்கமானவை, சுழல - சுழலும்படி, சுழல - சுழன்றுவருகிற, நீர்பயந்த - கடல்பெற்ற, தெய்வம் - அழகிய, திருமாமலர்மங்கை - பெரியபிராட்டியார், தங்கு - தங்குகிற, திருமார்வனை - திருமார்வையுடையவனை, சிந்தையுள் - நெஞ்சிலே, வைத்துமென்பீர் - வைக்கவேண்டியிருப்பீர்!; ஸிம்ஹத்தோடே பிணங்குகையாலே, கௌவை - பிளிறுகிற, களிற்றின் - யானையின், மருப்பும் - கொம்பையும், பொருப்பில் - பர்வதத்திலே, கமழ் - நறுநாற்றம் கமழுகிற, சந்தும் - சந்தநத்தையும், உந்தி - தள்ளிக்கொண்டுவருகிற, நிவா - வெள்ளாறு, வலங்கொள - வலங்கொள்ளாநிற்கிற, தெய்வம் - அழகிய, புனல்சூழ்ந்து - ஜலம்சூழ்ந்து, அழகாய - தர்ஸநீயமான, தில்லைத்திருச்சித்ரகூடம் சென்றுசேர்மின்கள்—. ... ... ... ... (எ)

ஏழாம்பாட்டு. (மௌவலித்யாதி) மௌவற்பூவைக் குழலிலே யுடைய நப்பின்னையுடைய ம்ருதுவான தோளுடனே கலந்து. (மகரமித்யாதி) மகரமென்கிற மத்ஸ்யவிசேஷந்தொடக்கமானவை சுழன்று வருகிற கடல்பெற்ற பெரியபிராட்டியார் தங்குகையாலே திருமார்வனென்னும் திருநாமத்தையுடையவனை நெஞ்சிலே வைக்கவேண்டியிருப்பீர். கவ்வை - ஆரவாரம். யானைகள்பிளிறி ஆரவாரிக்க, யாளிகள்கொன்றுபறித்த கோடுகளும் பர்வதத்தில் நறுநாற்றம்கமழுகிற சந்தனத்தையும் கொண்டுவந்துதள்ள நிவாஎன்கிற ஆறு சூழப்பட்டு அழகிய புனல்சூழ்ந்து அழகிய தில்லை. ... ... எ.

ஏழாம்பாட்டு.— (மௌவலித்யாதி) மௌவலோடேகூடின திருக்குழலையுடைய நப்பின்னைப்பிராட்டியுடைய ம்ருதுவான திருத்தோளிலே கலந்து, அங்குண்டான மத்ஸ்யங்கள் சுழலும்படி சுழன்றுவருகிற கடல்பெற்ற பெரியபிராட்டியார்தங்கும் திருமார்வையுடையவனை ஹ்ருதயத்திலே வைத்துக்கொள்வோமென்பீர்!.—(கௌவையித்யாதி) ஸிம்ஹத்தோடு பிணங்கிப் பிளிறுகிற ஆனையினுடைய கொம்பும், மலையில்பரிமளிதமான சந்தநத்தையும் தள்ளி, நிவாஎன்கிற ஆறு வலங்கொள்ளாநிற்கிற விலக்ஷணமான புனல்சூழ்ந்து தர்ஸநீயமான தில்லை. ... ... ... ... ... எ.

ஏழாம்பாட்டு.— (மௌவலித்யாதி.) “ஸ ஸாரஸமுத்ரத்தைக் கலக்கவல்லவனிருக்கிறதேஸத்தில் சென்று சேர்மின்கள்”என்னாநின்றீர், எங்களால்கிட்டப்போமோவென்ன ; புருஷகாரபூதர் அருகேயுண்டு, பிற்காலியாதேசென்று சேருங்கோளென்கிறாரென்று ஸங்கதி.

மௌவலோடேயென்றது - முல்லைமலரோடேயென்றபடி. அங்குண்டானவென்று - மேலேசொல்லப்படுகிற ஸமுத்ரத்திலுண்டானவென்றபடி. கௌவை - ஆரவாரமாய், (பிளிறுகிற) என்றருளிச்செய்கிறார். ... ... எ.

மூ.— மாவாயினங்கம் மதியாதுகீறி
மழைமாமுதுகுன்றெடுத் தாயர்தங்கள்
கோவாய்நிரைமேய்த் துலகுண்டமாயன்
குரைமாகழல்கூடும் குறிப்புடையீர் !
மூவாயிரநான்மறையாளர் நாளும்
முறையால்வணங்க வணங்காயசோதித்
தேவாதிதேவன் திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. அ.

ப - ரை.— மா - கேசி என்னும் குதிரையின், வாய்-வாயையும், அங்கம்-[மு] உடலையும், மதியாது - ஒருசரக்காகநினையாதே, கீறி - பிளந்துபொகட்டு, இந்திரன் வர்ஷிப்பித்த, மழை - கல்வர்ஷத்துக்கு, மா - எல்லாரும் ஒதுங்க இடம்போரும்படிபெரிதாய், முது - பழையதான, குன்று - கோவர்த்தநமென்னும் மலையை, எடுத்து - குடையாக எடுத்து, ஆயர்தங்கள்கோவாய் - இடையர்க்குத்தலைவனாய், நிரை - பசுத்திரளை, மேய்த்து—; ப்ரளயாபத்திலே, உலகு - லோகத்தை, உண்ட - திருவயிற்றிலேவைத்த, மாயன் - ஆச்சர்யபூதனுடைய, குரை - ஆபரணங்களால் சப்திக்கிற,மா-பெருமைதங்கிய,கழல்-திருவடிகளை, கூடும்-சேரவேணுமென்னும், குறிப்புஉடையீர்! - நினைவுடையீர் !; மூவாயிரம் - அநேகம், நான்மறையாளர் - ப்ராஹ்மணர், நாளும் - நாள்தோறும், முறையால் - ஸ்வரூபத்துக்குத்தக்கபடி, வணங்க - ஆச்ரயிக்க, அணங்காய - அப்ராக்ருதமான, சோதி - தேஜஸ்ஸையுடைய, தேவாதிதேவன் - ஸர்வேச்வரன், திகழ்கின்ற - விளங்குகிற, தில்லைத் திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்கள்—. ... ... ... (அ)

எட்டாம்பாட்டு. (மாவாயித்யாதி) கேசிவாயையும் அதினுடலையும் ஒருசரக்குப்பண்ணாதேபிளந்து. (மழையித்யாதி) ஆயர்கோவாய், மழைக்கு, யானைகளையுடைய பெரியமலையையெடுத்து அவற்றை மேய்த்து. (உலகுண்டவித்யாதி) ப்ரளயாபத்திலே லோகம் நசியாமே வயிற்றிலே வைத்து ரக்ஷித்தஸர்வேச்வரன் நூபுராத்யாபரணங்களாலே சப்திக்கிற பெரியதிருவடிகளைச் சேரவேணுமென்னும் நினைவுடையீர் !.— (மூவாயிரமித்யாதி) மூவாயிரம் ப்ராஹ்மணர் நாள்தோறும் ஸ்வரூபாநுரூபமாகவணங்குகிற அப்ராக்ருதமானதேஜஸ்ஸையுடைய ஆதிதேவன் விளங்குகிற. ... ... ... அ.

எட்டாம்பாட்டு.— (மாவாயித்யாதி) கேசியுடைய வாயோடேகூட உடம்பை அநாயாஸேந இரண்டாகக்கிழித்து, இந்த்ரனால்வந்த மழையிலே பெருத்துப் பழைதான கோவர்த்தநத்தையெடுத்து, ஆயர்தலைவனாய்ப்பசுமேய்த்து,லோகத்தைத்திருவயிற்றிலேவைத்த ஆச்[சர்]யபூதனுடைய, ஆபரணவொலியையுடைத்தாய் ஸௌந்தர்யத்தை மிக்க திருவடிகளைக் கூடவேணுமென்று குறிப்புடையீர் !.— (முறையால்வணங்க அணங்காயசோதி) சாஸ்த்ரங்களில் சொல்லுகிறபடியே ஆச்ரயிக்க, அவர்களுக்காச்ரயணீயனாய் தேஜஸ்ஸையுடைய ஸர்வேச்வரன். ... ... ... ... ... அ.

எட்டாம்பாட்டு.— (மாவாயித்யாதி.) கீழ்ப்பாட்டிற்சொன்னபுருஷகாரஸந்நிதானமுன்னிட்டாச்ரயித்தார்க்கு விரோதிபாபங்களைப்போக்கி உபப்லவவர்ஷத்தை நீக்கித்தன்வயிற்றிலே வைத்துநோக்கவல்லனென்னுமதுக்கு த்ருஷ்டாந்தமான அபதானங்களைஸூசிப்பித்து, அவனிருக்கும் க்ஷேத்திலே சேருங்கோளென்கிறாரென்று ஸங்கதி.

அணங்காய - அப்ராக்ருதமான, சோதியென்றாய், அத்தையருளிச்செய்கிறார் (தேஜஸ்ஸையுடைய வென்று.) ... ... ... ... அ.

மூ.— செருநீலவேற்கண் மடவார்திறத்துச்
சினத்தோடுநின்று மனத்தால்வளர்க்கும்
அருநீலபாவமகலப்புகழ்சே
ரமரர்க்குமெய்தாத வண்டத்திருப்பீர் !
பெருநீர்நிவாவுந்தி முத்தங் கொணர்ந்தெங்கும்
வித்தும்வயலுள்கயல்பாய்ந்துகளத்
திருநீலநின்று திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. ௯.

ப - ரை.—செரு - யுத்தத்துக்குப்பரிகரமான, வேல் - வேல்போலேகூரிதாய், நீலம் - நீலம்போலேகுளிர்ந்த, கண் - கண்ணழகையுடையராய், மடவார்திறத்து- மடப்பத்தையுமுடைய ஸ்த்ரீகளிடத்தில், புசிக்கநினைத்தபோகங்களைவிலக்குவார் பக்கல், சினத்தோடு - கோபத்தோடே, நின்று - இருந்து, மனத்தால் - நெஞ்சினாசையாலே, வளர்க்கும் - வளர்த்து வருமதாய், அரு - போக்கவொண்ணாத, நீலம் - தண்ணிய, பாவம் - பாபமானது, அகல-போம்படி, புகழ்சேர்-புகழை[யுடை யுடைய, அமரர்க்கும் - ப்ரஹ்மாதிகளுக்கும், எய்தாத - கிட்டவரிய, அண்டத்து- பரமபதத்தில், இருப்பீர்! - இருக்கவேண்டியிருப்பீர்!, பெருநீர்-மிக்கநீரையுடைய, நிவா - வெள்ளாறு, முத்தம்கொணர்ந்து - முத்துக்களைக்கொணடுவந்து, உந்தி- தள்ளி, வித்தும் - விதைக்கிற, வயலுளெங்கும் - வயல்தோறும், கயல - கயல மத்ஸ்யங்கள், பாய்ந்து உகள - குதித்துத்தள்ள, திருநீலம்-அழகியசெய்தல்மலர், நின்று -எங்குமொக்கப்பரந்து, திகழ்கின்ற - விளங்குகிற, தில்லைச் திருச்சித்திர கூடம் சென்றுசேர்மின்கள்—. ... ... ... ... (௯)

ஒன்பதாம்பாட்டு. (செருவித்யாதி) செருவேல்போலவும் நீலம் போலவும் கூர்த்துக்குளிர்ந்த கண்ணழகையுடையருமாய் மடப்பத்தை யுடைய ஸ்த்ரீகள்விஷயமாக ஸம்ஶ்லேஷிக்க நினைத்தபோகங்களுக்கு ப்ரதி பந்தகரானவர் பக்கல் சினத்தாலே வளர்த்துவந்த உங்கள் நெஞ் சை யிருளப்பண்ணினபாபமகல. (புகழித்யாதி) புகழையுடைய ப்ரஹ் மாதிகளுக்கும்கிட்டாதபரமபதத்தேயிருக்கவேண்டியிருப்பீர். (பெரு நீரித்யாதி) மிக்கநீரையுடைய நிவாவந்து முத்துக்களைக்கொண்டுவந்து தள்ளி வயல்தோறும்வித்த, அத்தாலே அவ்வயலிற்கயல்கள் கல்லிட் டெறிந்தாப்போலே பயப்பட்டுத்துள்ளிப்போக. (திருநீலமித்யாதி) அழகிய நீலமானது விளங்காநின்றவயலையுடைய தில்லை. ௯.

ஒன்பதாம்பாட்டு.— (செருவித்யாதி) யுத்தத்துக்குப் பரிகரமாய் நீலமானநிறத்தையுடைய வேல்போலேயிருக்கிற கண்ணையுடைய ஸ்த் ரீகள்திறத்தில், அதுக்கு ப்ரதிபந்தகர்பக்கல் சினத்தோடே நெஞ்சி லாசையாலே வளர்ந்து பரிஹரிக்கவொண்ணாதே தண்ணிதானஸம் பந்தப்ரதிபந்தகமானபாபம்போக ப்ரஸித்தரானப்ரஹ்மாதிகளுக்கும் கிட்டவரிய பரமபதத்திலே யிருக்கவேண்டியிருப்பீர் !.— (பெருநீரெ ன்றுதுடங்கி) மிக்கநீரையுடைய நிவாஎன்கிற ஆறு முத்தைக் கொடு வந்துவித்துகிற வயலிலே விக்ஷிதமானகயல்கள் பாய்ந்து தாவித்திரிய தர்ஶநீயமான நீலம் நின்று திகழாநின்றுள்ள தில்லை. ... ௯.

ஒன்பதாம்பாட்டு.— (செருவித்யாதி.) தாமுபதேஶித்த ஆஶ்ரயணத்துக்கு ஸ்வரூபந்தான் ப்ராப்யாநுரக்திஜத்தி பூர்வகஸம்பந்தப்ராப்தி என்றுஸௌ ரபத்தை நெஞ்சில்படுத்துகிறுரென்று ஸங்கதி.

"நீலம்" என்று - கறுப்பாய், அத்தால் - தண்ணிமையைச்சொல்லுகிறதென் றருளிச்செய்கிறுர் (தண்ணிதானவென்று.) விக்ஷிதமானவென்றது - முத்தைவித்து கையாலேகல்விட்டெறிந்தாப்போலே பயப்பட்டிருக்கிறவென்றபடி. நீலம்-செய்தல்.

மூ.— சீரார்பொழில்சூழ்ந் தழகாய தில்லைத்
திருச்சித்திரகூடத் துறைசெங்கண்மாலுக்
காராதவுள்ளத்தவர் கேட்டுவப்ப
வலைநீருலகுக்கருளே புரியும்
காரார்புயற்கைக்கலிகன்றி குன்றா
வொலிமாலையோ ரொன்பதோடொன்றும்வல்லார்
பாராருலகமளந்தானடிக்கீழ்ப்
பலகாலம்நிற்கும்படி வாழ்வர்தாமே. ௧௦.

ப - ரை.—சீர் ஆர் - அழகுமிக்க, பொழில்சூழ்ந்து - சோலையால்சூழப்பட்டு, அழகாய - அழகையுடைத்தான, தில்லைத் திருச்சித்திரகூடத்து—, உறை - நித்ய வாஸம்பண்ணுகிற, செங்கண்மாலுக்கு - சிவந்த கண்ணழகையுடைய ஸர்வேச்வரன்விஷயமாக, ஆராத - பகவதநுபவத்தில்திருப்தி பிறவாத, உள்ளத்தவர்-நெஞ்சையுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள், கேட்டு—, உவப்ப - ஸந்தோஷிக்கும்படியாக, அலைநீர் - அலையெறிகிற ஜலத்தையுடைய கடலால் சூழப்பட்ட, உலகுக்கு - பூமியிலுள்ளார்க்கு, அருளே - ப்ரஸாதத்தையே, புரியும் - பண்ணும் ஸ்வபாவத்தையுடையராய், கார்ஆர் - மிகவும்பெருத்த, புயல் - மேகம்போலே, கை-உதாரரான, கலிகன்றி - ஆழ்வார், குன்றா - குறையாத,ஒலி - ஓசையையுடைத்தாம்படியருளிச்செய்த, மாலை - ஸப்தஸந்தர்ப்பத்தையுடைய,ஓரொன்பதோடொன்றும் - பத்துப்பாட்டையும், வல்லார் - அர்த்தத்துடன் கற்கவல்லவர்கள், பார் ஆர் உலகம் - பூமியையும், ஸ்வர்க்காதிலோகங்களையும், அளந்தான் - அளந்துகொண்டவனுடைய, அடிக்கீழ் - திருவடிகளிலே, பலகாலம் - ஸர்வகாலமும், நிற்கும்படிவாழ்வர்- அடிமைசெய்து வர்த்திக்கும்படியான வாழ்வைப்பெறுவர்கள். ... (௧௦)

பத்தாம்பாட்டு. (சீராரித்யாதி) அழகார்ந்தபொழிலாலே சூழப்பட்டு அழகிய தில்லைத்திருச்சித்ரகூடத்திலே நித்யவாஸம்பண்ணுகிற புண்டரீகாக்ஷனைச்சொன்ன. (ஆராதவித்யாதி) பகவதநுபவத்தால் ஒருக்காலுமாராத த்ருஷ்ணையத்தையுடைய ஸூரிகள்கேட்டுகக்க. (அலைநீரித்யாதி) கடல்சூழ்ந்தபூமிக்கு அருளேபண்ணும். (காராரித்யாதி) கார் - பெருமை. மிகவும்பெருத்த மேகம்போலே வரையாதேகொடுத்தகையையுடைய ஆழ்வாரருளிச்செய்த பத்துப்பாட்டையும் வல்லார்.

பத்தாம்பாட்டு.— (சீராரித்யாதி) அழகுமிக்க பொழில்சூழ்ந்து தர்சநீயமான தில்லையில் நித்யவாஸம்பண்ணுகிற ஸர்வேச்வரனுக்கு, ஒருநாளும் ஆராத ஸ்நேஹத்தையுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள்கேட்டு ஸந்தோஷிக்க, கடல்சூழ்ந்தபூமிக்கு ப்ரஸாதத்தைப்பண்ணும் ஸ்வபாவராய், கார்காலத்து மேகம்போலே பரமோதாரரான திருமங்கையாழ்வார்குறையாதவோசையையுடைத்தாகவருளிச்செய்த திருமொழி பத்தும் வல்லார் ;

பத்தாம்பாட்டு.— (சீராரித்யாதி.) "உள்ளம்" என்கிறபதம் லக்ஷணயா ஸ்நேஹத்தைச் சொல்லுமென்றருளிச்செய்கிறார் (ஸ்நேஹத்தையென்று.) "அருளே புரியும்" என்கிற அவதாரணலப்யார்த்தம் (ஸ்வபாவராயென்றது.) ௧௦.

ஜீயர்திருவடிகளேசரணம்.

(பாராதித்யாதி) பூமியையும் ஸ்வர்காதிலோகங்களையுமளந்தவன்திரு வடிகளிலே ஸர்வகாலமுமடிமைசெய்து நிற்கும்படியான வாழ்ச்சியை ப்பெறுவர். ... ... ... ... ௧0.

நஞ்ஜீயர் திருவடிகளே ஶரணம்.

ப்ருதிவீப்ரபூதமானலோகத்தை யளந்தவன்றிருவடிகளின்கீழே கால மெல்லாம் வர்த்திக்கும்படியான வாழ்வைப்பெறுவர். ... ௧0.

அடிவரவு.— ஊன் காய் வெம்பு அருமா கோ நெய் மௌவல் மாவாய் செருச் சீரார் வாட.

திருமங்கையாழ்வார்திருவடிகளேஶரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேஶரணம்.

ஆக, திருமொழி - ௨௨ - க்கு, பாட்டு - ௨௨0.

மூன்றாம்பத்து - மூன்றாந்திருமொழி-வாடமருதிடை. ப்ரவேஶம்.

திருவவதரித்தபோது துடங்கி விரோதிநிரஸநஶீலனான க்ருஷ்ணன் பூதநாஶகடயமளார்ஜுநாதிகளை நிரஸித்தாப்போலே த்வதீநு ஸவிரோதியான அவித்யாதிகளைப்போக்க ஆஶ்ரிதஸுலபனாய்க்கொண்டு திருச்சித்ரகூடத்திலே க்ருஷ்ணன் நித்யவாஸம்பண்ணுநின்றான், அவனை நீங்கள் சென்றாஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோளென்கிறார். *

க்ருஷ்ணாவதாராதிகளிலிழவுதீரத் திருச்சித்ரகூடத்திலே வந்து ஸந்நிஹிதனானான், எல்லாருமாஶ்ரயியுங்கோளென்கிறார். ... *

அ.— வாடமருதிடைப்ரவேஶம்.— கீழ்த்திருமொழியில் ராமக்ருஷ்ணாதிவிப வங்களிலபதாநங்களை யாஶ்ரயிக்கைக் குறுப்பாகச்சொல்லி, "திருச்சித்திரகூடத் தில் சென்று சேர்மின்கள்" என்றார்; இதுகேட்டசேதநர்க்கு விபவத்தில்நெஞ்சு சென்று அங்கே ஆஶ்ரயிக்கையில் ருசிபிறந்து அதுகாலாதீதமென்று பிற்காலிக்க வும் கூடுமென்று திருவுள்ளம்பற்றி, அந்தவிபவங்களில் விரோதிநிரஸநஶீல தையை பஹுமுகமாகவருளிச்செய்துகொண்டு, அவனே திருச்சித்திரகூடத்து ள்ளானென்று ஸம்ஸாரிகள்நெஞ்சில்படுத்துகிறாரென்னும்ஸங்கதியை ஸங்க்ரஹேண ஸூசிப்பிக்கிறார் (க்ருஷ்ணாவதாரேத்யாதி.) ஆதிஶப்தத்தாலே - ராமாவதாரமும், நரஸிம்ஹாவதாரமும் சொல்லுகிறது. ... ... ... *

மூ.—வாடமருதிடைபோகி மல்லரைக்கொன் றொக்கலித்திட்
டாடல்நன்மாவுடைத் தாயராநிரைக்கன்றிடர்தீர்ப்பான்
கூடியமாமழைகாத்த கூத்தனென வருகின்றான்
சேடுயர்பூம்பொழில்தில்லைச் சித்திரகூடத்துள்ளானே. க.

ப - ரை.— கம்ஸன்வரவிட்ட விரோதிகளான, மருதிடை - இரண்டுமருதமரங்களின்நடுவே, வாட - அவைமுறிந்து விழும்படி, போகி - தவழ்ந்துபோய்; மல்லரை - சாணூரமுஷ்டிகராகிறமல்லவர்க்கத்தை, கொன்று - நிரஸித்து; ஒக்கலித்திட்டு - நடைபழகினதாய், ஆடல் - ஆடிக்கொண்டு வருமதாய், நல் - அழகிதான, மா - குதிரைவடிவுகொண்டு வந்த கேஶியை, உடைத்து-கொன்று; அன்று-இந்த்ரன்வர்ஷிப்பித்தவன்று, ஆயர் - இடையருடைய, ஆநிரைக்கு - பசுக்கூட்டத்துக்குவந்த, இடர் - துக்கத்தை, தீர்ப்பான் - தீர்க்கைக்காக, கூடிய - திரண்ட, மாமழை-கல்வர்ஷத்தை, சோவர்த்தநமலையையெடுத்து, காத்த-ரக்ஷித்த, கூத்தன் என-மநோஹாரிசேஷ்டிதத்தையுடையவன் என்று எல்லாரும் சொல்லும்படி, வருகின்றான் - வருமவன்; சேடு - இளகிப்பதித்ததாய், உயர்-ஓங்கின, பூம்[யெரு]பொழில் - அழகியசோலைகளையுடைய, தில்லைச்சித்திரகூடத்து - தில்லைத்திருச்சித்திரகூடத்திலே, உள்ளான்-நித்யவாஸம்பண்ணுகின்றான்; அவனை ஆஶ்ரயியுங்கோளென்கிறார். ... ... ... ... ... (க)

முதற்பாட்டு. (வாடமருதிடையித்யாதி) சாணூரமுஷ்டிகரைக்கொன்று, ஆவாலங்கொட்டி ஆடதர்ஶநீயமான குதிரைவடிவுகொ[உம]ண்டுவந்த கேஶியைக்கொன்று. (ஆயரித்யாதி) இடையருடைய பசுநிரைக்கு இந்த்ரனாலே ஆபத்துவந்தவன்று, இடர்தீர்ப்பான். (கூடியவித்யாதி) திரண்டகல்வர்ஷத்தை மலையெடுத்துக்காத்த கூத்தனென வருகின்றான். (சேடித்யாதி) சேடு - திரட்சியும், இளமையும். இளகிப்பதித்து ஓங்கின பொழிலையுடைய தில்லை. ... ... க.

முதற்பாட்டு.— (வாடவித்யாதி) அஸுராவேஶத்தாலே வந்த மருதாகையாலே இவன்கிட்டக்கிட்ட அவைவாட, மருதின்நடுவே போய். (மல்லரைக்கொன்று) சாணூரமுஷ்டிகரைநிரஸித்து; ஆவாலம்கொட்டி; (ஆடல்) தன்ஸஞ்சாரத்திலேயிவன் அந்யபராகும்படி ஆடிக்கொண்டுவந்து தோற்றின கேஶியைக்கொன்று, இடையருடைய பசுநிரைக்கு அன்றிடர்தீர்க்கைக்காக இந்த்ரன்ப்ரேரித்த புஷ்கலாவர்த்தகாதிமேகங்களெல்லாம் கூடிவர்ஷித்தபெருமழையைக்காத்த மநோஹாரிசேஷ்டிதத்தையுடையவன் என்று எல்லாரும்சொல்லவருகிறவன்.—(சேடு) இளமையும், திரட்சியும். ... ... ... க.

முதற்பாட்டு.— (வாடவித்யாதி.) "இணைமருதிற்றுவீழ" என்னுமாப்போலே-முறிந்து விழுகையைச்சொல்லவேண்டியிருக்க, "வாட" என்றதுக்கு - வாடும்போது போனானென்று விவக்ஷித்து, ஹேதுபூர்வகம் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அஸுரேத்யாதி.) ஒக்கலித்திட்டு - பழகின, ஆடலுடைத்தாய் நல்லதானமாவென்று ஸ்வாரஸ்யமாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆவாலமித்யாதி.) ஆவாலங்கொட்டுகை - குதிரைநடைபழக்குகைக்குக்கொட்டுகை. ... க.

௨.— பேய்மகள் கொங்கைநஞ்சுண்ட பிள்ளைபரிசிது வென்றால்
மாநிலமாமகள் மாதர்கேள்வனிவனென்றும் வண்டுண்
பூமகள்நாயகனென்றும் புலன்கெழு†கோவியர்பாடித்
தேமலர்தூவவருவான் சித்திரகூடத்துள்ளானே. ௨.

---

ப - ரை.— பேய்மகள் - பேயான பூதனையுடைய, கொங்கை - முலையில், நஞ்சு - விஷத்தை, உண்ட - அமுதுசெய்தருளின, இது - ஆச்சர்யமான விச்செயல், பிள்ளைபரிசு என்றால் - பிள்ளையுடைய ப்ரகாரம் என்றால்; இவன்—, இளம்பிள்ளையல்லன், மா - பஞ்சாஸத்கோடிவிஸ்தீர்ணையான, நிலமாமகள்மாதர் - ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு, கேள்வன் என்றும்-வல்லபன் என்றும்,வண்டு-வண்டுகள்,உண்-[ம] மதுபானம் பண்ணவிழிகிற,பூமகள் - தாமரைப்பூவைப்பிறந்தகமாகவுடையபெரியபிராட்டியார்க்கு, நாயகன் என்றும் - பதிஎன்றும், புலன்கெழு - கண்டார்நெருசைக்கவரும் வடிவையுடைய, கோவியர் - இடைப்பெண்கள், பாடி - ஸ்தோத்ரபூர்வகமாகப்பாடி, தேன்மலர் - செவ்விகுன்றாதபூவை, தூவ-பணிமாற, வருவான்-வருமவன், சித்திரகூடத்துள்ளான்—. ... ... ... (௨)

---

இரண்டாம்பாட்டு. (பேய்மகளித்யாதி) பூதனைமுலையில் நஞ்சையுண்ட பிள்ளைப்ரகாரமிது வென்றால். (மாநிலமித்யாதி) இவனிளம்பிள்ளையல்லன், லக்ஷ்மீஸஹீமிகளுக்குவல்லபனிவனென்று. (புலமித்யாதி) கண்டாருடைய இந்த்ரியங்கள் பிணிப்புண்ணும்படி அழகையுடைய பெண்கள் இவனைப்பாடிச் செவ்விப்பூவைப் பணிமாறவரும் க்ருஷ்ணன் சித்ரகூடத்துள்ளான். ... ... ... ௨.

---

இரண்டாம்பாட்டு. — (பேய்மகளித்யாதி) பிள்ளையுடையபடி—பேயாய்வந்தஸ்த்ரீயினுடைய முலையில்நஞ்சையுண்ட ஆச்சர்யமான செயலென்றால், " இவன் கேவலம் பிள்ளையல்லன், ஸ்ரீஸஹீமிப்பிராட்டிக்குவல்லபன், பெரியபிராட்டியார்க்கு நாயகன்" என்று, கண்டாருடைய இந்த்ரியங்களைப்பிணிக்கும் வடிவையுடைய இடைப்பெண்கள்பாடி, செவ்விப்பூவைத்தூவ வருமவன். (பொலன்கெழுகோவியர்) என்று - பொன்னாலே செய்த ஆபரணத்தையுடைய கோவியரென்னவுமாம். ... ... ... ... ௨.

---

இரண்டாம்பாட்டு.—(பேயித்யாதி.)நோவர்யநோய்யாளுதி அதிமாநுஷ[சேஷ்டி]தங்களைச்செய்தவனே சித்ரகூடத்துள்ளானென்றறிந்து நிர்ணயிக்கும்படியெங்ஙனே? என்னும் ஜிஜ்ஞாஸையிலே; இடைப்பிள்ளையாயிருக்கச்செய்தே ஸ்ரீய:பதியென்று நிர்ணயித்தார் இடைப்பெண்கள் கண்டீர்களே, அங்ஙனே நீங்களும் கொள்ளுங்கோளென்கிறாரென்று ஸங்கதி.

"பிள்ளைபரிசு - பேய்மகள்கொங்கைநஞ்சுண்ட - இதுவென்றால், மாநிலம்" இத்யாதி என்றந்வயம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (பிள்ளையித்யாதி.) (பிள்ளையுடையபடி) என்று சில ஸ்ரீகோசங்களிலுண்டாயிருக்கும்; அப்போது, அந்வயத்திலே திருவுள்ளம். அன்றிக்கே, சிலஸ்ரீகோசங்களில் (பிள்ளையுடையபடியே) என்று முண்டு; அப்போது, பிள்ளையைப்போலே மாநுஷ்யமானபடியே! என்றாய், "பேய்" என்றும் "மகள்" என்றும்சொன்னபதத்வயத்துக்கும்-பேயானது மநுஷ்யவேஷங்கொண்டதென்று கருத்தருளிச்செய்கைக்கு த்ருஷ்டாந்தமென்று கொள்ளவேணும் ; இப்போது, யதாவஸ்திதமேயந்வயம். பொலன் - ஆபரணம், கெழுமுகை - சேருகையாய், அருளிச்செய்கிறார் (பொலனித்யாதி.) ௨.

---

† "பொலன்கெழு" என்று பாடாந்தரம்.

மூ.— பண்டிவன்வெண்ணெயுண்டானென்றாய்ச்சியர்கூடியிழிப்ப‡
எண்டிசையோரும்வணங்கவிணைமருதூடு நடந்திட்
டண்டரும்வானத்தவரு மாயிரநாமங்களோடு
திண்டிறல்பாடவருவான் சித்திரகூடத்துள்ளானே. ௩.

ப - ரை.— இவன - இச்சிறப்பிள்ளை, வெண்ணெய்உண்டான் என்று - வெண்ணெயைக்களவுகண்டு அமுதுசெய்தான் என்று, ஆய்ச்சியர் - இடைப்பெண்கள், கூடி - திரண்டு, இழிப்ப - பழிக்க ; எண்திசையோரும் - எட்டுதிக்கிலுள்ளாரும், வணங்க - ஸேவிக்கும்படியாக, இணைமருதூடு - ஒன்று என்னலாம்படி சேர்ந்து நின்ற இரண்டுமருதின்வடிவுகொண்ட அஸுரர்களின்நடுவே, நடந்திட்டு-தவழ்ந்துபோய், அண்டரும் - நித்யஸூரிகளும்,வானத்தவரும் - ப்ரஹ்மாதிகளும், ஆயிரநாமங்களோடு - ஸஹஸ்ரநாமங்களையுஞ்சொல்லி, அவனுடைய, திண் - திண்ணிதான, திறல் - ஆண்பிள்ளைத்தனத்தை, பண்டு—, பாட—, வருவான் - வருமவன், சித்திரகூடத்துள்ளான்—. ... ... ... ... (௩)

மூன்றாம்பாட்டு. (பண்டித்யாதி) பண்டு வெண்ணெயைக் களவுகண்டு அமுதுசெய்தானென்று இடைச்சிகள் திரண்டுகூப்பிட. (எண்டிசையித்யாதி) எட்டுதிக்கிலுள்ளாரும் வணங்க, சேரநின்றமருதுகள் நடுவேபோய். (அண்டருமித்யாதி) நித்யஸூரிகளும் ப்ரஹ்மாதிகளும் ஆயிரந்திருநாமங்களைச்சொல்லி, திண்டிறல்பாடவருவான். ௩.

மூன்றாம்பாட்டு.— (பண்டித்யாதி) "இவன்வெண்ணெயுண்டான்" என்று இடைப்பெண்கள் கூடியேச, எட்டுதிக்கிலுள்ளாரும் திருவடிகளிலே வணங்கும்படியாக, நிர்விவரமானமருதினுள்ளிட்டுப்போய், இடையர்களும் தேவர்களுமாய் ஆயிரந்திருநாமங்களைச் சொல்லிக்கொண்டு, தன்னுடைய ஆண்பிள்ளைத்தனத்தைப்பண்டுபாடவருவான்.

மூன்றாம்பாட்டு.— (பண்டித்யாதி) பேய்முலையுண்டபடியைக்கண்ட இடைப்பெண்கள் மேன்மைபேசினாராகிலும், வெண்ணெயுண்டபோது இடைப்பிள்ளையென்றே ஏசவுங்கண்டோமே! என்ன ; வெண்ணெயுண்டுகட்டுண்டு நின்றபோதே, நின்றமருதிறுத்து தேவராலும் இடையராலும் கொண்டாடப்பட்டான் கண்டீரென்று நெஞ்சிலுறைக்கச்சொல்லுகிறாரென்று ஸங்கதி.

அழைக்கை-கூப்பிடுகையாய், ஃலித்தவர்த்தம்(ஏசவென்றது.) "இவன்" என்று தொடங்கி "திண்டிறல் - பண்டு - பாடவருவான்" என்றந்வயம். ௩.

நாலாம்பாட்டு.— (வளையித்யாதி.) மருதிறுத்தவளவன்றிக்கே பாம்பின்படத்தில்தானேபோய் நடமாடின அபதாநத்தாலும் அவர்கள் பரனென்றிருந்தார்களென்று மியாமகாஜர மருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

‡ "அழைப்ப" என்று நஞ்ஜீயர்படியிலும் அரும்பதத்திலும் பாடம்.

மூ.—வளைக்கைநெடுங்கண்மடவாராய்ச்சியரஞ்சியழைப்பத்
தளைத்தவிழ்தாமரைப்பொய்கைத்தண்டடம்புக்கண்டர்காண
மூளைத்தவெயிற்றழல்நாகத்துச்சியில்நின்றதுவாடத்
திளைத்தமர்செய்துவருவான் சித்திரகூடத்துள்ளானே. ச.

ப - ரை.— வளை-வளைகளாலே அலங்கரிக்கப்பட்ட, கை - கைகளையும், நெடு-நீண்ட, கண் - கண்களையும், மடவார் - மடப்பத்தையுமுடையாரான, ஆய்ச்சியர்-ஸ்ரீகோபிமார்கள், அஞ்சி - பயப்பட்டு, அழைப்ப - கூப்பிட; தளை அவிழ் - கட்டு அவிழுகிற, தாமரைப்பொய்கை - தாமரைத்தடாகத்தின், தண்- குளிர்ந்த, தடம்-கரையிலே, புக்கு - போய், அண்டர் - இடையர், காண-காணும்படியாக, மூளை[மு]த்த—, எயிறு - பற்களையும், அழல் - விஷாக்நியையுமுடைய, நாகத்து உச்சியில்-காளியனுகிற பாம்பின்தலையிலே, நின்று - ஒருபடிப்படநின்று, அது வாட - அது இளைக்கும்படி, திளைத்து - களித்து, அமர்செய்து - பூசல்பண்ணி, வருவான் - வருமவன், சித்திரகூடத்துள்ளான்—. ... ... ... (ச)

நாலாம்பாட்டு.(வளைக்கையித்யாதி)வளைகளாலே அலங்க்ருதமான கையையும் அழகிய கண்ணையுமுடையராய், மடப்பத்தையுமுடைய ஸ்ரீகோபிமாரஞ்சிக்கூப்பிட.(தளைத்தவிழித்யாதி)தளைஅவிழுகிற-கட்டு அவிழுகிற,தாமரைப்பொய்கையில் குளிர்ந்தகரையிலேசென்று,அண்டர்காண – இடையர்காண, மூளைத்தபல்லையும் விஷாக்நியையுமுடைய காளியன்தலையிலேநின்று, அதுவாட – அது இளைக்க, அதினுச்சியிலே நின்று திளைத்துப் பூசல்பண்ணிவருவான். ... ... ச.

நாலாம்பாட்டு.—(வளைக்கையித்யாதி)வளையாலேஅலங்க்ருதமான கையையும், லீலைகளாய்ப்பார்க்கும் நோக்கையுமுடைய இடைப்பெண்கள் அஞ்சிக்கூப்பிட, கட்டவிழ்ந்தலர்ந்த தாமரைப்பொய்கையினுடைய ம்ருமஹரமான கரையிலேசென்று; இடையர்காண,மூளைத்த வெயிற்றையுடைய பாம்பினுடைய வுச்சியிலேபுக்குநின்று, அதுவாடும்படி கூடவிளையாடி அமர்செய்துவருமவன். ... ... ச.

“ தளைத்தவிழ்” என்றவிடத்தில், “அத்து” - சாரியைச்சொல்லாய், “தளை-அவிழ்” என்று யருளிச்செய்கிறார் (கட்டவிழ்ந்தலர்ந்தவென்று.) அமர்செய்து-யுத்தம் பண்ணி. ... ... ... ... ... ... ச.

அஞ்சாம்பாட்டு.—(பருவமித்யாதி.) கீழ்நாலுபாட்டாலும் - அவனதிமாநுஷ சேஷ்டிதங்களைச்சொல்லி, அத்தால் அவன் பரன்என்றாப்போலே நீங்களுமவனை நிர்ணயித்தாச்ரயியுங்கோளென்றார் ; இனிமேல்பாட்டுக்களில் - நப்பின்னைமுதலானார்க்கு விரோதிநிவர்த்தநமுவத்தாலே யுதவினாப்போலே உங்களுக்கு முதவுவானென்பாராய், அதில் நப்பின்னைக்குதவினவித்தை யிதிலருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

மூ.---பருவக்கருமுகிலொத்து முத்துடைமாகடலொத்து
அருவித்திரள்திகழ்கின்ற வாயிரம்பொன்மலையொத்து
உருவக்கருங்குழலாய்ச்சிதிறத் தினமால்விடைசெற்றுத்
தெருவில்திளைத்துவருவான் சித்திரகூடத்துள்ளானே. ௫

எய்யச்சிதைந்ததிலங்கை; மலங்கவருமழைகாப்பான்
உய்யப்பருவரைதாங்கி யாநிரைகாத்தானென்றேத்தி
வையந்தொழுவரும்‡வணங்க வணங்கெழு மாமலைபோலே
தெய்வப்புள்ளேறிவருவான் சித்திரகூடத்துள்ளானே. ௬

ப - ரை.— பருவம் - கார்காலத்திலுண்டான, கருமுகிலொத்து - காளமேகம் போலேயும், முத்துஉடை - முத்துக்களை உடைய, மா - கறுத்த, கடலொத்து - கடல்போலேயும், அருவித்திரள் - அருவிகளாலே, திகழ்கின்ற - விளங்காநின்றுள்ள, ஆயிரம் பொன்மலையொத்து - அநேகமாந பர்வதங்கள்போலேயுமாய், உருவம் - அழகிய வடிவையும், கரு - கறுத்த, குழல் - திருக்குழலையுமுடைய, ஆய்ச்சிதிறத்து - நப்பின்னைப்பிராட்டிக்காக, இனம் - ஒன்றாய்த்திரண்ட, மால்விடை - பெரிய ரிஷபங்களை, செற்று - நிரஸித்து, தெருவில் - வீதியிலே, திளைத்து - களித்துவிளையாடி, வருவான் - வருமவன், சித்திரகூடத்துள்ளான்—. ... ... (௫)

ப - ரை.— எய்ய - * எரிசித்ரமசரத்தாலே இவனெய்தபோது, இலங்கை - லங்கையானது, சிதைந்தது - அழிந்தது; திருவாய்ப்பாடியிலுள்ள இடையரும், ஆநிரை - பசுத்திரளும், மலங்க - கலங்கும்படி, வரும் - வருகிற, மழை - மழையை, காப்பான் - போக்குகைக்காக, உய்ய - அவை உஜ்ஜீவிக்கும்படி, பருவரை - பெரிய மலையை, தாங்கி - எடுத்து, அவற்றை, காத்தான் என்று - ரக்ஷித்தான் என்று, வையம் - பூமியிலுள்ள, எவரும் - எல்லாரும், ஏத்தி - ஸ்தோத்ரம்பண்ணி, வணங்க - ஆச்ரயிக்கும்படியாக, அணங்கெழு - தேவாவிஷ்டமான, மா - பெரிய, மலைபோலே - மலையைப்போலே, தெய்வம் - அழகிய, புள் - பெரியதிருவடிமேலே, ஏறி - ஏறிக்கொண்டு, அரைதலையாக்கலைந்து, வருவான் - வருமவன், சித்திரகூடத்துள்ளான்—.

அஞ்சாம்பாட்டு. (பருவமித்யாதி) கார்காலத்தில் காளமேகத்தை யொத்து, முத்துப்படுகிற கருங்கடலொத்து. மா - கறுப்பு. (அருவியித்யாதி) அருவிகளாலே விளங்காநின்ற அநேகம் பர்வதங்களையொத்து. உருவம் - அழகு. அழகியகருங்குழலையுடைய நப்பின்னை[நிமித்தமாகப்]பொருட்டு இனமான பெரிய விடைகளைச்செற்று, வீதியிலே செருக்காலே யாடிவருவான். ... ... ... ... ௫.

அஞ்சாம்பாட்டு.— (பருவமித்யாதி) வர்ஷாகாலவலாஹகம்போலேயும், முத்துடைய பெருங்கடல்போலேயும், அருவித்திரள்களாலே விளங்காநின்றுள்ள ஆயிரம் பொன்மலைபோலேயுமாய், அழகிய வடிவையும், கறுத்த திருக்குழலையுமுடைய நப்பின்னைப்பிராட்டி யிடையாட்டத்துக்காக, திரண்டு பெருமையையுடைய ரிஷபங்களைக்கொன்று, தன்பருவத்திற்பிள்ளைகளோடே தெருவிலே கூடிவிளையாடிவருமவன்.

நப்பின்னை க்ருஷ்ணனோடொத்தநிறமுடையவளென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (வர்ஷ்கேத்யாதி) பொன்மலைபோலேயுமென்றது - ஆபரணச்சேர்த்தியாலே.

ஆறும்பாட்டு.— (எய்யவித்யாதி.) இதில் - பிராட்டிக்கும் பசுக்களுக்கும் முதலிலுப்போலே யுதவுமவனென்றருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

‡ "வையத்தவரும்" என்றும் பாடம்.

மூ.—ஆவரிவைசெய்தறிவாரஞ்சநமாமலைபோலே
மேவுசினத்தடல்வேழம் வீழமுனிந்தழகாய
காவிமலர்நெடுங்கண்ணார் கைதொழவீதிவருவான்
தேவர்வணங்குதண்டில்லைச் சித்திரகூடத்துள்ளானே. ௭.

ப-ரை.— ஆஶ்ரிதர்க்காக, இவை - இப்படிப்பட்ட (க) ஆனைத்தொழில்களை, செய்தறிவார்ஆர்?-செய்தார்ஒருவருமில்லை; அதாவதென்னென்னில்; மா-பெரிய, அஞ்சநமலைபோலே - அஞ்ஜநகிரிபோலேயாய், சினம்-கோபத்தை, மேவு-ஸ்வபாவமாகவுடைத்தாய், அடல் - மிடுக்கையுடைய, வேழம் - குவலயாபீடம் என்னும் யானை, வீழ - விழும்படி, முனிந்து - சீறியருளி, அழகாய-அழகையுடைத்தாய், காவிமலர்-நீலோத்பலம்போலே கறுத்த, நெடு - நீண்ட, கண்ணார் - கண்களையுடைய ஸ்த்ரீகள், கைதொழ - ஸேவிக்கும்படியாக, வீதி - திருவீதியிலே, வருவானை - எழுந்தருளுமவனை; தேவர்வணங்கு - தேவர்கள்வந்து ஆஶ்ரயிக்குமதாய், தண் - ஶீதளமான, தில்லைச்சித்திரகூடத்துள்ளான்—. ... ... ... (௭)

ஆறாம்பாட்டு. (எய்யவித்யாதி) இவன்கிட்டினவளவிலே லங்கை அழிந்தது. (எய்ய) அம்புஎய்யவென்னுதல். (மலங்கவித்யாதி) திருவாய்ப்பாடியிலிடையருமிடைச்சிகளும் கலங்கும்படி வந்த மழையைக்காக்கைக்காக. (உய்யவித்யாதி) பஶ்வாதிகளெல்லாம் உஜ்ஜீவிக்கும்படி பெரியமலையையெடுத்து ரக்ஷித்தானென்று ஸம்ஸாரிகளும் மற்றுள்ளாரும் ஏத்திவணங்க. (அணங்கித்யாதி) தைவாவிஷ்டமானதொரு மலைபோலே அப்ராக்ருதமான புள்ளை மேற்கொண்டு வருவான். ௬.
ஏழாம்பாட்டு. (ஆவரிவைத்யாதி) இவ்வரியதொழில் செய்தார்

ஆறாம்பாட்டு.— (எய்யவித்யாதி) இவன்பண்டு எய்ய, லங்கை அழிந்தது; பசுக்களுமிடையரும் மலங்கும்படியாக வருகிற மழையைக் காக்கைக்காக, அவைஉய்யும்படிக்காகப் பெரியமலையையெடுத்துக் காத்தானென்றேத்தி, பூமியிலுள்ளாரெல்லாரும்வணங்க, தைவாவிஷ்டமான மலைபோலே பெரியதிருவடிமேலே ஏறிவருமவன். ௬.
ஏழாம்பாட்டு.—(ஆவரித்யாதி) எவரிவைசெய்தறிவார்?;

(பூமியிலுள்ளாரெல்லாரும்) என்றதுக்கு "வையத்தவர்" என்கிறபடிக்கு தாமஸ ராஜஸர்களைச்சொல்லிற்றேயாகிலும், ஸத்வப்ரசுரரான வைஷ்ணவப்ராஜ்ஞர்களெல்லாரையும்சொல்லுமென்று திருவுள்ளம். ... ... ... ௬.

ஏழாம்பாட்டு.— (ஆவரித்யாதி.) ஆனைகாத்தவளவேயன்றிக்கே, ஸ்ரீமதுரையில் பெண்களுக்குக் களிறுதருபுணர்ச்சிகொடுத்தவனுங்களுக்குதவுவனென்கிறாரென்று ஸங்கதி. அதாவது-ஆனையால்வந்த ஆபத்தைப்போக்கித் தன்னைக்கண்ணாரக்கண்டநுபவிக்கக் கொடுத்தானென்கை. கஜேக்ஷணன்மேலே யானைவருமதுவே பெண்களுக்காபத்திறே.

(எவரிவைசெய்தறிவார்) என்றதுக்கு - மூன்றுயோஜநை. அதாவது - செய்தவினை - குவலயாபீடநிரஸநாதி வ்யாபாரங்களை, எவரறிவார் - ஒருவருமறிவாரில்லை என்று ஆழ்வார் தம்மிலே தாம்நொந்து எத்தனைநாளுபதேஶித்தாலும் திருந்தவாரிதாயிருந்ததென்று கூப்பிடுகிறாரென்னுதல்; அன்றிக்கே, ஆஶ்ரிதர்க்காக

(க) ஆனைத்தொழில்கள் - அதிமாநுஷசேஷ்டிதங்கள்.

மூ.—கருமுகில்போல்வதோர்மேனி கையனவாழியும்சங்கும்
பெருவிறல்வானவர்சூழவேழுலகும்தொழுதேத்த
ஒருமகளாயர்மடந்தை யொருத்திநிலமகள் மற்றைத்
திருமகளோடும்வருவான் சித்திரகூடத்துள்ளானே. ௯.

ப - ரை.—கருமுகில்போல்வது - காளமேகம்போலேகறுத்த, ஓர் - ஒப்பற்ற, மேனி-வடிவழகையுடையனாய், ஆழியும்-திருவாழியாழ்வானையும், சங்கும்-ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானையும், கையன - திருக்கைகளிலுடையனாய், பெருவிறல் - மிக்கமிடுக்கையுடைய, வானவர்-தேவர்கள், சூழ-சூழ்ந்து ஸேவித்துநிற்கவும், ஏழுலகும்-ஏழுலோகங்களிலுள்ளாரும், தொழுது-ஸேவித்து, ஏத்த - ஸ்தோத்ரம்பண்ணும்படிக்கீடாக; ஒருமகள் ஆயர்மடந்தை - நப்பின்னைப்பிராட்டியோடும், ஒருத்தி நிலமகள் - ஸ்ரீபூமிப்பிராட்டியோடும், மற்றை—, திருமகளோடும்-பெரியபிராட்டியாரோடுங்கூட, வருவான்-வருமவன், சித்திரகூடத்துள்ளான்—. (௯)

ஒருக்கால். (பொன்பெயரோனித்யாதி) ஹிரண்யனஞ்சும்படி அங்கவனுடைமலைந்திட்டு ஆயிரந்தோள்களும் தோற்ற வ்யாபரித்து. (பைங்கணித்யாதி) பசுத்த கண்களிரண்டும் அக்நிஜ்வாலையாய்நிற்க, நீண்ட எயிறுகள் பெரியவாயையுமுடைய ஸ்ரீநரஸிம்ஹமாய்வந்தவன். அ.

ஒன்பதாம்பாட்டு. (கருமுகிலித்யாதி) காளமேகமொத்தவடிவு; கையன ஸங்கசக்ரங்கள்; மிகமிடுக்கையுடைய தேவர்கள் ஸேவிக்க ஸப்தலோகங்களிலுள்ளாரும் தொழுது ஸ்தோத்ரம்பண்ண. (ஒருமகளித்யாதி) ஒருத்தி நப்பின்னைப்பிராட்டி, ஒருத்தி ஸ்ரீபூமிப்பிராட்டி, மற்றைப் பெரியபிராட்டியாருடனே வருகிறவன். ... ௯.

ஹிரண்யனை வெருவும்படிசீறி, அவ்விடத்திலே அவனுடைய உடம்பை யளைந்து, ஆயிரந்தோள்தோற்ற வ்யாபரித்த, ஜாத்யுசிதமாக எரிகான்றபசுமையையுடைய கண்ணும், நீண்ட எயிறும், பெரிய வாயுமுடைமான ஸிம்ஹரூபத்தைப்புடையனாய்வருமவன். பொங்குதை-மிகுதி. அ.

ஒன்பதாம்பாட்டு.— (கருமுகிலித்யாதி) காளமேகம்போலேயிருக்கும் வடிவையும், கையில்திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுமுடையனாய், பெரியமிடுக்கையுடையப்ரஹ்மாதிகள்சூழ்ந்துஸேவிக்க, ஸப்தலோகத்திலுள்ளாரும் திருவடிகளிலே விழுந்தேத்த, பிராட்டிமார் மூவரோடுங்கூட வருமவன். ... ... ... ௯.

பொங்குதை-மிகுதியாய், கோபத்தால வந்த மிகுதியாய, ஸலிததவர்யம் (சீறியென்றது.) கான்ற-உமிழ்ந்த. ... ... ... ... ... அ.

ஒன்பதாம்பாட்டு.— (கருமுகிலித்யாதி.) கீழ் - எம்பெருமானுடைய அபதாநங்கள்சொல்லிக்கொண்டுமமிக்கை ஆச்ரயணீயயுக்தமாகச்சொல்லி, இவையொன்றுமில்லாவிட்டாலும் விடலாமோ விவனுடையஸௌந்த்யதையென்று திருவுள்ளம்பற்றி, வடிவழகும் ஆயுதச்சேர்த்தியழகும் பிராட்டிமாரோட்டைச்சேர்த்தியும் கண்டு ஈச்வராதிகளான ப்ரஹ்மாதிகளும் வணங்கும்படி பாரீரென்று உபதேசிக்கிறாரென்று ஸங்கதி. ... ... ... ... ... ௯.

மூ.—தேனமர்பூம்பொழில்தில்லைச் சித்திரகூடமமர்ந்த
வானவர்தங்கள்பிரானை மங்கையர்கோன்மருவார்
ஊனமர்வேல்கலிகன்றியொண்டமிழொன்பதோடொன்றும்
தானிவைகற்றுவல்லார்மேல் சாராதீவினைதானே‡. ௧௰.

ப - ரை.—தேன் - வண்டுகள், அமர் - மொய்த்த, பூ - அழகிய, பொழில்- சோலையையுடைய, தில்லைச்சித்திரகூடம் - தில்லைத்திருச்சித்திரகூடத்திலே, அமர்ந்த - நித்யவாஸம்பண்ணுகிற, வானவர்தங்கள் பிரானை - அயர்வறுமமரர்களுக்குத்தலைவனானவனை விஷயமாக; மங்கையர்கோன் - திருமங்கையிலுள்ளார்க்குராஜாவாய், மருவார் - ஶத்ருக்களுடைய, ஊன - ஶரீரத்தில், அமர் - பொருந்தினதக்கும்படி, வேல்-வேல்தொழிலில்வல்லரான, கலிகன்றி- ஆழ்வார், அருளிச்செய்த, ஒண்டமிழ்-அழகியதமிழ்பாஷையாலான, இவை ஒன்பதோடொன்றும்-இப்பத்துப்பாட்டையும், கற்று-அர்த்தத்துடன் அப்யஸித்து, வல்லார்மேல்-அதிகரிக்கவல்லவர்கள் பக்கல், தீவினை - பாபங்கள், சாரா - கிட்டமாட்டா. ... ... (௧௰)

பத்தாம்பாட்டு. (தேனமரித்யாதி) வண்டுகள் மொய்த்து அழகியபொழிலையமர்ந்த தில்லைத் திருச்சித்ரகூடமமர்ந்த * அயர்வறுமமரர்களதிபதியை. (மங்கையரித்யாதி) திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகராய், ஶத்ருக்களுடம்பிலே தைக்கும் வேலைவல்ல ஆழ்வாரருளிச்செய்த பத்துப்பாட்டையும் கற்றவர்கள்மேல்சாராவினைகள். ௧௰.

நஞ்ஜீயர் திருவடிகளே ஶரணம்.

பத்தாம்பாட்டு. (தேனித்யாதி) வண்டுகள்படிந்து பூத்த பொழிலையுடைய தில்லையில் சித்திரகூடத்திலே யமர்ந்த* அயர்வறுமமரர்களதிபதியை, திருமங்கைக்குராஜாவாய் ஶத்ருக்கள்ஶரீரமேதனக்கு உறையாகவுடைய வேலையுடைய ஆழ்வாரருளிச்செய்த அழகிய தமிழான விப்பத்துமப்யஸித்தவர்கள்பக்கல், அவர்கள்பண்ணினபாபம் மெய்யாநுஸந்த்துக்காகச் சாரா. ... ... ... ௧௰.

அடிவரவு.— வாடப் பேய் பண்டு வளை பரு எய் ஆவா பொங்கிய கருமுகில் தேனமர் ஒருகுறள்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேஶரணம்.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேஶரணம்.

பத்தாம்பாட்டு.— (தேனித்யாதி.) கீழ்ப்பாட்டில் "வானவர்" என்றபதத்தை ஆஶ்ரயிப்பார்க்குறுப்பாக ப்ரஹ்மாதிகளும் வந்தாஶ்ரயிக்ககண்டீர்களே யென்னவேண்டுகையால், அதுக்காக ப்ரஹ்மாதிகள் பரமாக்ஷரேயாகிலும்,இப்பாட்டில் "வானவர்" என்றதுக்கு - "தங்கள்" என்று அஸாதாரண்யம் தோற்றச்சொல்லுகையாலும், ஆழ்வார்க்கு ப்ரஹ்மாதிகளுக்குப் பிரானென்றது-அதிஶயமாய்த் தோற்றாமையாலும், "அமரர்க்குமெய்தாதவண்டத்திருப்பீர்" என்றுஃபலஸ்வரூபத்தைக் கீழ்த்திருமொழியிலருளிச்செய்தத்தோடு இத்திருமொழிக்கு ஏகவாக்யத்தைச்சொல்லுகையாலே ப்ராப்யம்கோட்டுவெடுத்தான நித்யஸூரிகளேயாகவேணுமென்றருளிச்செய்கிறார்(அயர்வறுமமரர்களதிபதியையென்று;)இப்பதத்துக்கு அருளிச்செய்த) என்றத்தோடன்வயம். "மருவார்" என்றதினர்த்தம் (ஶத்ருக்களென்றது.) ௧௰.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

‡ "சாரகில்லாவினைதானே" என்று சில ஸ்ரீகோஶங்கள்.

## மூன்றாம்பத்து — நாலாந்திருமொழி — ஒருகுறள். ப்ரவேசம்.

நீங்களவனைப்பெறுகைக்குறுப்பாகப் பண்ணும ஸாயநாநுஷ்டாநத்தை அவன்றானுங்களைப் பெறுகைக்குறுப்பாக ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப் பண்ணிக்கொண்டு வந்தான், அவற்றுக்குப்பிற்பாடருமிழக்க வேண்டாதபடி அர்ச்சாவதாரஸுலபனாயநின்றான், அவனிருபடியிதுவானபின்பு, அர்த்தித்வம்துடக்கமாக மேலுள்ளவற்றை அவன் தலையிலேயேறிட்டு நீங்கள அவனுகந்தருளுகிற ஸ்ரீராமவிண்ணகரை ஆஸ்ரயியுங்கோளென்கிறார். ... ... ...

முதற்பாட்டு. (ஒருகுறளாயித்யாதி) அத்விதீயமான குறள்வடிவைக்கொண்டு, மஹாப்ருதிவியை "மூவடிமண்" என்றுவேண்டி.[மு

---

நீங்கள் அவனைப்பெறுகைக்குறுப்பாகப் பண்ணும ஸாயநாநுஷ்டாநத்தை அவன்றான் உங்களைப்பெறுகைக்குறுப்பாக அவதாராதிமுகங்களாலே பண்ணிக்கொண்டு இங்கேவந்து நின்றானென்றார்; அவன் படியிதுவானபின்பு, அர்த்தித்வம் துடக்கமாக மேலுள்ளவற்றையெல்லாம் அவன்கையிலேயேறிட்டு நீங்கள் அவனுகந்த ஸ்ரீராமவிண்ணகரையாஸ்ரயியுங்கோளென்கிறார். இவன்பரமஸக்ருத்பர்யவஸாநமாகப் பண்ணினாலும் அதடைய ப்ராதிகூல்ய நிவ்ருத்திமாத்ரம்மிலே நிற்கும்படியிறே பேற்றினுடைய வைலக்ஷண்யத்தைப்பார்த்தாலிருப்பது.

முதற்பாட்டு.— (ஒருகுறளாய) வடிவைக்கண்டபோதே சொல்லிற்றடையக் கொடுக்கவேண்டும்படியான அத்விதீயவாமநனாய. (இருநிலம்) பரப்பையுடைத்தான பூமியை. (மூவடிமண்வேண்டி) தனக்கென்னக் காலபாவுகைக்கு ஓரிடமில்லாதாரைப்போலே இத்தையவனுக்காக்கி, அவன்பக்கலிலே யிரந்து. இந்தலோகங்களுடைய இரண்டடி

---

அ.—ஒருகுறளின் ப்ரவேசம். கீழிரண்டுதிருமொழிகளாலுமாக - நீங்களொரு ஸாயநாநுஷ்டாநம பண்ணவேண்டா, சித்ரகூடத்துள்ளானை யாஸ்ரயியுங்கோளென்றுநின்றீர்; பேற்றினகனத்தைப்பார்த்தால இவ்வளவினாலே ஃபலம கைபபடுமென்று நாங்கள் விஸ்வஸிக்கும்படி யெங்ஙனே யென்னும் ஸங்கையிலே, வகுத்த ஸ்வாமியாகையா லுங்களைப் பெறவேணுமென்று, ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்குகப்பானுமவனாயிருக்கையா லுங்களுக்கு விஸ்வஸிக்கத்தட்டென், அவனிலும் அவனுகந்தவூரை யாஸ்ரயிக்கையே யமையுமென் றருளிச்செய்கிறாரென்னும் ஸங்கதியையருளிச்செய்கிறா(நீங்களித்யாதி.)அர்த்தித்வமாத்ரமாகிலும் இவன பக்கலிலேவேண்டாவோ, இதையு மவன்தலையிலேயேறிட்டு நிர்ப்பரனாயிருக்கக் கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (இவனித்யாதி;) பேற்றுக்கு அப்ரதிஷேதமேவேண்டுவது அதுக்குமேற்பட்ட அர்த்தித்வம் முதலானவையெல்லா மிவனுக்கு வேணுமென்கிற நிர்பந்தமில்லையென்று கருத்து. ... ...

முதற்பாட்டு.—(ஒருகுறளித்யாதி.) "மூவடிமண்வேணுமென்று-இருநிலத்தை-வேண்டி" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி தாத்பர்யமருளிச்செய்கிறார் (தனக்கென்னவித்யாதி.)

மூ.—ஒருகுறளாயிருநில மூவடிமண்வேண்டி
யுலகனைத்துமீரடியாலொடுக்கி யொன்றும்
தருகவெனுமாவலியைச் சிறையில்வைத்த
தாடாளன்தாளணைவீர் ; தக்ககீர்த்தி
யருமறையின்திரள்நான்கும் வேள்வியைந்து
மங்கங்களவையாறு மிசைகளேழும்
தெருவின்மலிவிழாவளமும் சிறக்கும்
காழிச்சீராமவிண்ணகரே சேர்மினீரே. க.

ப-ரை.— ஒரு - அத்விதீயமான, குறளாய்-வாமநவடிவைக்கொண்டு, மஹாபலியக்ஞத்திலே சென்று, இருநிலம் - பரந்தபூமியிலே, மூவடிமண் - மூன்று அடி மண், வேண்டி - தரவேண்டுமென்று இரந்து, கையிலநீர்வீழ்ந்தவாறே, உலகனைத்தும்-லோகங்களெல்லாவற்றையும், ஈரடியால்-இரண்டடியாலே, ஒடுக்கி-அடக்கி, ஒன்றும்-மற்றையோரடியும், தருக எனும் - தரவேண்டுமென்று, மாவலியை - மஹாபலியை, சிறையில்வைத்த - பாதாளமாகிற சிறையிலே வைத்தவனாய், தாடாளன்-ஆச்ரிதர்க்காகத் தாழ்ந்தான் என்னும் பெருமையையுடையவனது, தாள்-திருவடிகளை, அணைவீர்-கிட்டவேண்டியிருப்பீராகில்; தக்க - அவனுக்குத்தகுதியான, கீர்த்தி-பெருமையையுடைத்தாய், அரு-காணவொண்ணாத, மறையின்-வேதங்களின், திரள் - திரள்கள், நான்கும் - நாலும், ஐந்துவேள்வியும் - பஞ்சமஹாயஜ்ஞங்களும், ஆறு அங்கங்களும்—, ஏழிசைகளும்—, மலி-மிக்கிருப்பதாய், விழா - உத்ஸவங்களின், வளமும்-அழகும், சிறக்கும் - சிறக்கப்பெற்றதான, தெருவின் - வீதிகளையுடைய, காழி-காழியில், சீராமவிண்ணகர் - ஸ்ரீராமவிண்ணகரத்தை, நீர்-நீங்கள், சேர்மின் - ஆச்ரயியுங்கோளென்கிறார். ... ... ... ... ... (க)

லோகங்களெல்லாவற்றையும் இரண்டடியிலே அடக்கி. (ஒன்றுமித்யாதி) சேஷித்தவோரடியும்தரவேணுமென்று மஹாபலியைச்சிறை[உரு யிலேவைத்த தாடாளன்திருவடிகளைச் சேரவேண்டியிருப்பீர் ; அவனுக்குத்தகுதியானகீர்த்தியை கீர்த்திக்கிற ப்ரகாரத்தையுடைய வேதங்கள்நாலும், பஞ்சமஹாயஜ்ஞங்களும், ஆறங்கங்களும், ஏழிசைகளும், தெருவிலேமிக்க உத்ஸவங்களிலழகும் சிறக்கும் சீராமவிண்ணகரே சேர்மினீரே. ... ... ... ... க.

யாலேஅடக்கி, "மூன்றடிதருகிறேன் என்றாய், மற்றை ஓரடியும்தாராயோ" என்று. (மாவலியைச்சிறையில்வைத்த) அநந்தரம், இந்த்ரபதம் அவன்பெறக்கடவனாக அவனைபாதாளத்திலேவைத்த. (தாடாளன்தாளணைவீர்) "ஆச்ரிதார்த்தமாகத் தாழ்ந்தான்" என்னும் மேன்மையையுடையவன்திருவடிகளைக் கிட்டவேண்டியிருப்பீர்.— (தக்கவித்யாதி) அபௌருஷேயத்வநிர்வாஹமான கீர்த்தியையுடைய வேதங்களினுடையதிரள்கள்நாலும், பஞ்சமஹாயஜ்ஞங்களும், ஆறங்கங்களும், ஏழிசைகளும், தெருவிலேமிக்கிருந்துள்ள உத்ஸவத்தால்வந்த அழகும், இவையெல்லாமடையச் சிறக்கும்படியான காழியில் சீராமவிண்ணகரை யாச்ரயியுங்கோள். ... ... ... ... க.

தாடாளன்-ஸர்வாதிகன். சிறக்கும்படியான-ஸம்ருத்தமாம்படியான. ...

மூ.—நான்முகனுள்மிகத்தருக்கை யிருக்குவாய்மை
நலமிகுசீருரோமசனால் நவிற்று நக்க
னூன்முகமார்தலையோட்டூணொழித்தவெந்தை
யொளிமலர்ச்சேவடியணைவீர் ; உழுசேயோடச்
சூல்முகமார்வளையளைவா யுகுத்தமுத்தைத்
தொல்குருகுசினையெனச்சூழ்ந்தியங்க எங்கும்
தேன்முகமார்கமலவயல் சேல்பாய்
காழிச்சீராமவிண்ணகரே சேர்மினீரே. ௨

ப - ரை.— நான்முகன் - ப்ரஹ்மாவினுடைய, நாள்-ஆயுஸ்ஸு, மிக - அதிசயிக்க, அத்தாலவனுக்குண்டான, தருக்கை - கர்வத்தை, இருக்கு - ரிக்வேதத்தை, வாய்மை - உச்சரியாநின்றவனாய், நலம்மிகுசீர் - மிக்க ஆசாரத்தையுடையனான, உரோமசனால்-ரோமசரகவானாலே, நவிற்று-போக்குவித்து; நக்கன்-நக்நனான ருத்ரனுடைய கையிலே ஒட்டியதாய், ஊன்ஆர் - மாம்ஸளமான, முகன்தலையோடு-ப்ரஹ்மகபாலத்தில், ஊண்-இரந்துண்கிறஊணை, ஒழித்த-போக்கின, எந்தை-ஸர்வ ஸ்வாமியினது, ஒளிமலர்-செவ்விமலர்போன்ற, சேவடி-சிவந்ததிருவடிகளை, அணைவீர்-சேரவிரும்புவீர்களானால்; உழு - உழுகிற, சே - எருதுகள், ஓட-செருக்காலேஓட, சூல்முகமார்-ப்ரஸவகாலமாயிருக்கிற, வளை-சங்குகள், அளைவாய் - வங்குகளில், உகுத்த-ஈன்ற, முத்தை-முத்துக்களை, தொல்குருகு-பெரியகுருகுகளானவை, சினை என-தங்களுடையமுட்டைஎன்று, சூழ்ந்துஇயங்க-சூழப்பறவாநிற்பதாய், அக்காற்றாலே, எங்கும்-பார்த்தவிடமெல்லாம், தேன்-தேன்வெள்ளத்தை, முகமார் - முகத்தாலே சொரிகிற, கமலம்-தாமரைமலர்களையுடைத்தாய், சேல்-சேல்மத்ஸ்யங்கள், பாய்-பாயாநின்றுள்ள, வயல் - வயல்களையுடைய, காழிச்சீராமவிண்ணகரே சேர்மினீரே—.

இரண்டாம்பாட்டு. (நான்முகனித்யாதி) நாளென்பது - ஆயுஸ்ஸு, ப்ரஹ்மாவானவன் "நம்மில்மிக்க ஆயுஸ்ஸுடையாருண்டோ?" என்று, தன்ஆயுஸ்ஸைப்பார்த்துமிகவும்கர்விக்க, அந்தகர்வத்தை, ஸ்ரீவேதம்உச்சரியாநின்றவனாய் ஆசாரப்ரயாநனான ரோமஶமஹர்ஷியாலே

இரண்டாம்பாட்டு.— (நான்முகனித்யாதி) ரோமஶமஹர்ஷியான், "ப்ரஹ்மாக்களென்று சிலர் நீர்க்குமிழிபோலே தோற்றுவது மறைவதாய்ப்போகக்கடவது எத்தனைபேர்" என்றுரைத்து. சதுர்முகனுடைய ஆயுஸ்ஸின்மிகுதியாலுண்டான அபிமாநத்தை, வேதங்களை உச்சரியாநிற்பானாய் ஆசாரப்ராதாந்யத்தால்வந்த வேற்றத்தையுடையனான ரோமஶமஹர்ஷியாலே,

---

இரண்டாம்பாட்டு.—(நான்முகனித்யாதி.)தன்னை யிரப்பாளனாக்கி ஆஶ்ரிதர்க்கரியனசெய்யுமவன் வந்திருக்கும் காழிச்சீராமவிண்ணகரை யாஶ்ரயியுங்கோளென்னச்செய்தேயும் ஆறியிருந்தீர்கள், இதுக்கடி - உங்களுடைய ஸ்திரத்வமுமியும் பெருமையுமன்றோ, ப்ரஹ்மாவினாயுஸ்ஸின்படி கேட்டீகோளே, ருத்ரனெளிவரவையும் கண்டீகோளேயென்கிறாரென்று ஸங்கதி.

(என்றுரைத்து)என்றவநூஸரம், அந்த புராணப்ரஸித்தியைக்கொண்டருளிச்செய்கிறாரென்று ஶேஷம். நான்முகனுடைய, நாளானது-ஆயுஸ்ஸானது, மிக-[அதிசயிக்க, அத்தாலுண்டான, தருக்கை - கர்வத்தை என்று ஸ்வாபதேசமருளிச்செய்கிறார் (சதுர்முகனித்யாதி.) "இருக்கு" இத்யாதிக்கு ஸ்வாபதேசமருளிச்செய்கிறார் (வேதங்களையித்யாதி.)

போக்குவித்து, ருத்ரனுடைய கையில் மாம்ஸப்ரவஹமான தலை யோட்டிலிருந்தூணிறவினையொழித்தவெந்தை செவ்விமலர்போன்ற திருவடியைச் சேரவேண்டியிருப்பீர்!. (உழுசேவித்யாதி) உழுகிற எருதுகளானவை ஸர்வத்தாலேயோட, "இப்போது, பின்னை" என்னும்படி பாலவகாலமாயிருக்கிற சங்குகள் அளைவாயிலே புகுந்த முத்தை, பெரியகுருகுகள் முட்டையென்று நினைத்து விட்டுப்போகமாட்டாதே அடைப்பறவாகிற்பதுமாய்,

---

"சதுர்முகஸஹஸ்ரங்களுக்கும் கடவேன், என்னைப்போதி ஆயுஸ்ஸுடையாருண்டோ" என்கிற அபிமானத்தைத் தவிர்ந்து. (நக்கனித்[ய யாதி) ருத்ரனுடைய பிதாவுமாய லோககுருவுமாயிருக்கிறவனைத் தலையையறுத்து அந்தாலே பாதகியாய் மாம்ஸப்ரவஹமான தலையோட்டிலேயிரந்து அதிலே ஜீவித்துத்திரிகிற எளிவரவைத்† தவிர்த்த ஸ்வாமி. ஜகத்துக் கீச்வரர்களாக ப்ரஸித்தியிருவருமிறே; அவர்களிருவருடையவும் அபிமானத்தைக் கழித்தானாய்[ய]ருந்து. (தாமலர்ச்சேவடியனைவீர்) அவனுடைய ஸ்வாபாவிகமான ஐச்வர்யத்தாலுவந்த புகரையுடைய திருவடிகளைப் பெறவேண்டியிருப்பீர் — (உழுசேவித்யாதி) ஆனைபோலேயாய் பெரியமிடுக்கையுடைய சேக்களையிட்டுப்பூட்டியுழுவது. அவைதவழுவோடினவாறே, "அப்போது பாலவித்தநு, இப்போது பாலவித்தநு" என்னுந்தோன்றும்படி தொட்டார்மேலேயோஹமாம்படியிருக்கிற சங்குகள், தான்கிடக்கிற வங்குகளினுடையவாசலிலேபுகுந்துக்கவாயின்றன; அவற்றை, தொல்குருகுகண்டு- என்றும்மொக்கப்பழகச்செய்தேயும் "இது முத்து, இது முட்டை" என்று வாசியறியமாட்டாதபடிமுத்துக்குருகுகள், அவை, தன்னுடைய முட்டையாகக்கொண்டுவிட்டுப்போகமாட்டாதே சுற்றும்படியாகிற்குமாய்த்து;

---

"நவிற்று" என்றது - சொல்லுவிக்கையாய், அதுதானும் நீர்க்குமிழிபோலே யெத்தனைபேர் ப்ரஹ்மாதிகளென்ற வார்த்தையாய், அத்தால்பலித்த ஸர்வநிவ்ஜத்தியை யருளிச்செய்கிறார் (நதாநுகீர்த்யாதி.) "முகம்" என்றது - முகன் என்றாய், நான்முகனான ப்ரஹ்மாவாய, நக்கனுடைய முகனூர்தலையோட்டினூனை யொழித்தவெந்தை என்றந்வயமாய்; தாத்பர்யமருளிச்செய்கி [நூய ரார் (ருத்ரனுடையவித்யாதி) * மனக்களுழறிவருமிறே. "நக்கனுடைய" என்றதுக்கு, "ஊண்" என்றத்தோடந்வயம். இவ்வளவுக்கு முட்கருத்தை யருளிச்செய்கிறார் (ஜகத்துக்கித்யாதி.) ப்ரஹ்மருத்ராதிகள் போன்ற சேக்களைக் கொண்டு பத்தியுழுமவனான எம்பெருமான் பழம்புனமான ஜகத்தை ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுவிக்க, அவர்கள் "ஈச்வரோஹம்" என்று கைகழியவோட, நம்பூர்வர்கள்போன்ற சங்குகள் ஸ்வஸ்வரூபவரைப்பெறுவிக்க ஆதிமூலமான எம்பெருமான் தனக்கஸாதாரணபுத்ரத்வப்ரதிபத்தியாலே யிவர்களிடத்தில் வ்யாமுக்தனாயிருக்க, அத்தால் கமலமலர்மேலபாவைமுகக்கமலம்விகஸித்து, அநுராகாதிசயம் வெள்ளமிட, அதிலேதுள்ளாநிற்பர் நித்யஸூரிகளென்னும் வ்யங்க்யார்த்தத்துக்கு ஸூசகமாக, திருப்பதிக்குச்சிறப்பையருளிச்செய்கிறாரென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (ஆனைபோலேயித்யாதி.) "வளை" என்றதினர்த்தம் (சங்குகளென்றது.) அளை - வங்குகள். உகுத்த - ஈன்ற. உ.

---

† "திரிகிறவனுபத்தை" என்று சில ஸ்ரீகோசங்கள்.

மூ.— வையணைந்தநுதிக்கோட்டு வராகமொன்றாய்
மண்ணெல்லாமிடந்தெடுத்து மதங்கள்செய்து
நெய்யணைந்ததிகிரியினால் வாணன்திண்டோள்
நேர்ந்தவன்றாளணைகிற்பீர் ! நெய்தலோடு
மையணைந்தகுவளைகள் தங்கணகளென்றும்
மலர்க்குமுதம்வாயென்றும் கடைசிமார்கள்
செய்யணைந்து களைகளையாதேறும் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மினீரே.

ப - ரை.— வைஅணைந்த - கூர்மைபொருந்திய, நுதி-முனையையுடைய, கோடு-கொம்பையுடைத்தான, ஒன்று - ஒப்பற்ற, வராகமாய் - பன்றியுருக்கொண்டு,மண் எல்லாம் - பூமிமுழுவதையும், இடந்து - பிளந்து, எடுத்து - தூக்கிக்கொண்டு, ஏறி, ஈஸ்வரத்வத்தால் வந்தசெருக்காலே, மதங்கள் - மதகார்யமான வ்யாபாரங்களை, செய்து - பண்ணி, வாணன் - பாணாஸுரனது, திண் - த்ருடமான, தோள் - புஜங்களை, நெய்அணைந்த - கூர்மைமிகும்படி நெய்பூசிய, திகிரியினால் - திருவாழியாலே, நேர்ந்தவன் - துணித்தஎம்பெருமானுடைய, தாள் - திருவடிகளை, அணைகிற்பீர்- சேரவிரும்புமவர்களே !; கடைசிமார்கள் - பள்ளப்பெண்கள், நெய்தலோடு - நெய்தல்மலரையும், மைஅணைந்த - கருமைமிகுந்த, குவளைகள்-குவளைமலரையும், தம் கண்களென்றும் - தங்கள்கண்களாகவும், குமுதமலர்-சிவந்த ஆம்பல்மலரை, தம் வாயென்றும் - தங்கள் வாயாகவும் எண்ணி, செய் - வயல்களில், அணைந்து - களை பறிக்க இழிந்து, களைகளையாது - களைபறியாமல், ஏறும் - வெறுமனே கரையேறுகின்ற, காழிச்சீராமவிண்ணகரே சேர்மினீரே—. ... ... ௩

---

தேன்வெள்ளத்தைத் தன் முகத்தாலேசொரிகிற தாமரைத்தடங்களையும் வயலையும் சூழவுடைத்தாய்ச்சேல்பாய்கிற சோலையுமுடைத்தாய் காழிச்சீராமவிண்ணகரைச்சேருங்கோள். ... ... ௨.

மூன்றாம்பாட்டு. ( வையணைந்தவித்யாதி ) வை -- கூர்மை. கூரிய முனையையுடைய கோட்டு வராஹமொன்றாய், மண்ணெல்லாமிடந்தெடுத்து, ஈஸ்வரத்வச் செருக்காலே மதகார்யமான வ்யாபாரங்களைப் பண்ணி.

அவை பறக்கிறகாற்றாலே, பார்த்தபார்த்தவிடமெல்லாம், பக்வமாய்த் தலையிலே மிக்க தேனையுடைத்தாயிருக்கிற தாமரைப்பூக்களலராநிற்குமாய்த்து; அந்தமதுவைப் பாநம்பண்ணின கயல்களானவை பாயாநிற்குமாய்த்து. ... ... ... ... ... ௨.

மூன்றாம்பாட்டு.—(வையித்யாதி) கூர்மை மிக்கிருந்துள்ள முனையையுடைய கொம்பையுடைத்தான அத்விதீயமஹாவராஹமாய், பூமிப்பரப்படைய இடந்தெடுத்துக்கொண்டேறி, ஈஸ்வரத்வத்தால்வந்த செருக்காலே மதகார்யமான வ்யாபாரங்களைப்பண்ணி.

---

மூன்றாம்பாட்டு.— ( வையணைந்தவித்யாதி.) நீங்கள் ப்ரளயாபத்ஸகனானவன்படியறிந்தாஸ்ரயிக்காவிடில் வாணன்பட்டது படுவீர்களென்கிறாரென்று ஸங்கதி.

மூ.—பஞ்சியமெல்லடிப்பின்னை திறத்து முன்னாள்
பாய்விடைகளேழடர்த்துப் பொன்னன்பைம்பூண்
நெஞ்சிடந்துகுருதியுக வுகிர்வேலாண்ட
நின்மலன்றாளணைகிற்பீர்! நீலமாலைத்
தஞ்சுடையவிருள்தழைப்பத் தாளமாங்கே
தண்மதியின்நிலாக்காட்டப் பவளந்தன்னால்
செஞ்சுடர்வெயில்விரிக்கு மழகார் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மினீரே. ௪.

ப - ரை.—பஞ்சிய - செம்பஞ்சூட்டிய, மெல்அடி - ம்ருதுவான திருவடிகளை யுடைய, பின்னைதிறத்து - நப்பின்னைப் பிராட்டிக்காக, முன்நாள் - முற்காலத்தில், பாய் - கண்டார்மேலே விழுகின்ற, எழ்விடைகள் - ஏழுரிஷபங்களையும், அடர்த்து-அழித்து; பொன்னன் - ஹிரண்யனது, பைம்பூண் - அழகிய ஆபரணங்கள் நிறைந்த, நெஞ்சு - மார்பை, இடந்து - பிளந்து, குருதி - ரக்தம், உக - சிதறிப்புறப்பட, உகிர்வேல் - நகங்களாகிறவேலை, ஆண்ட - காரியங்கொண்ட, நின்மலன் - பரிசுத்தனான எம்பெருமானது, தாள் - திருவடிகளை, அணைகிற்பீர் - அணையவிரும்புமவர்களே!; நீலம் - மாடங்களிற்பதித்த நீலரத்நங்கள், மாலை - அந்திப்பொழுதை, தஞ்சுஉடைய - தனக்குத் தஞ்சமாகவுடைய, இருள்-இருட்டை, தழைப்ப - தழைக்கவும், ஆங்கு - அவற்றின் நடுவேயழுத்தின, தாளம் - முத்துக்கள், தண் - குளிர்ந்த, மதியின - சந்த்ரனது, நிலா - நிலவை, காட்ட - காட்டவும், பவளம் - பவழங்கள், தன்னால் - இடையிடையே தாங்களழுத்தப்பட்டிருப்பதினால், செஞ்சுடர் - ஸூர்யனது, வெயில் - காந்தியை, விரிக்கும் - பரப்பவும், அழகு ஆர் - இவற்றாலுண்டாகு அழகையுடைய, காழிச்சீராமவிண்ணகரே சேர்மின்நீர்—. (௪)

(நெய்யாரியாதி) நெய் - கூர்மை. கூர்மையுடைய திருவாழியாலே, வாணனுடைய திண்ணிய தோள்களைத் துணித்தவன்தாள்[உரு அணைகிற்பீர். (நெய்தலிந்யாதி) நெய்தலோடு மையணைந்த குவளைகளைத் தங்கள் கண்களென்றும். (மலரித்யாதி) மலர்க்குமுதத்தை வாயென்றும் கடைசிமார்கள் செய்யைச்சேர்ந்து களைபறிக்க என்று களைபறியாதேபோகும் காழிச்சீராம விண்ணகரைச் சேருங்கோள். ௫.

(நெய்) கூர்மை. கூர்மையுடைய திருவாழி. கடைந்துநெய்யிட்டிருந்துள்ள திருவாழியாலே, தேவதாந்தரபஜநத்தைப்பண்ணி அத்தாலேதனக்கு மிடுக்காகநினைத்திருக்கிற வாணனுடையதிண்ணியதோள்களை நேர்த்தவன்திருவடிகளைக் கிட்டவேண்டியிருப்பீர்!.—நெய்தற்பூவோடேகூட கறுப்புமிக்கிருந்துள்ள குவளைகளைத் தம் கண்களென்றும், மலரையுடைத்தான அரக்காம்பலைத் தந்தாமுடைய வாயென்றும், கடைசிமார் களைபறிப்பதாக அடுத்துவயலிலேயிழிந்து, கண்ணுக்கும் வாய்க்கும் அவற்றோடுண்டான ஸர்வயாஸாம்யத்தாலே களைபறியாதே போந்தேறுகிற காழியில். ... ... ... ... ௫.

"நெய்" என்றதினர்த்தத்தையும் தந்த்ரேணவருளிச்செய்கிறார் (கூர்மையித்யாதி.) "நேர்த்த" என்றது - துணித்தவென்றபடி. அரக்காம்பல் - சிவந்தஆம்பல். கடைசிமார் - கடைசியான ஜந்மத்தையுடைய பள்ளச்சிகள். ... ௫.

நாலாம்பாட்டு. (பஞ்சியவித்யாதி) பஞ்சொத்தமெல்லடி யென்னுதல் ; செம்பஞ்சியிட்டமெல்லடி யென்னுதல். பஞ்சொத்த மெல்லிய வடியையுடைய பின்னைபொருட்டு, பண்டு பொருகிற ஸைஹங்களேழையும் அடர்த்து.(பொன்னனித்யாதி) ஹிரண்யனுடைய அகன்ற மார்வைப்பிளந்து குருதிகொழிக்கும்படி உகிராகிறவேலையாண்ட ஹேயப்ரத்யநீகன்தாளணைவீர். (நீலமித்யாதி) அவ்வூரில் மாடங்களிலழுத்தின நீலரத்நமானது, மாலையைத்தஞ்சமாகவுடைய ராத்ரியைத்தனக்கபாஸ்ரயமாகவுடைத்தாயிருக்கிற விருளைத்தழைக்க ; நடுநடுவே யழுத்தின முத்தானது, குளிர்ந்தவந்த்ரனுடைய நிலவைக்காட்ட ; பவளமானது,நடுநடுவேகிடந்து புகரையுடைய ஆதித்யனுடைய செவ்வந்தேடரைக்காட்டாநிற்க ; இத்தால் - எல்லாக்காலத்திலும் இருவரும் வந்த்ரோதயமும் வெய்யிலுமொக்கக்கண்டநுபவிக்கலாம் தேசமென்றபடி. ச.

நாலாம்பாட்டு.— (பஞ்சியவித்யாதி) செம்பஞ்சுபோலே மிருதுவான திருவடிகளையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காக, பண்டொருநாள், கண்டார்மேலேவிழுகிற ஸைஹங்களேழையு மழியச்செய்து ; ஹிரண்யனுடைய ஆபரணங்களாலே அலங்க்ருதமான நெஞ்சை அநாயாஸேந கிழித்துப்பொகட்டு ; ரக்தமானது சொரிந்துப்புறப்படும்படியாக, ஆயிட்டுச்செய்தல் ஆயுதத்தாலே அழியச்செய்தல் செய்கையன்றிக்கே, ஆஸ்ரிதவிரோதியைத் தானே கைதொட்டுத் திருவுகிராகிற வேலாலே யழியச்செய்து அத்தாலவந்த ஸௌலப்யத்தையுடையவன் திருவடிகளைக் கிட்டவேண்டியிருப்பீர் !.— (நீலமித்யாதி) அவ்வூரில் மாடங்களிலழுத்தின நீலரத்நம், மாலையைத்தனக்குத் தஞ்சமாகவுடைய, அதாவது - ராத்ரியைத்தனக்கபாஸ்ரயமாக வுடைத்தாயிருக்கிற விருளைத்தழைப்ப ; நடுவே யழுத்தின முத்தானது, குளிர்ந்த வந்த்ரனுடைய நிலாவைக் காட்ட ; இடையிடையே யழுத்தின பவளமானது, புகரையுடைய ஆதித்யனுடைய ப்ரகாஸத்தைக் காட்டாநின்றது.—ஆக, ஏககாலத்திலே இருவரும் வந்த்ரோதயமும் வெய்யிலுமொக்கக் கண்டநுபவிக்கும்படியான தேஸமாய்த்து. ... ச.

---

நாலாம்பாட்டு.— (பஞ்சியவித்யாதி.)வாணனைப்போலே கைகழிகைமாத்ரமன்றிக்கே ஹிரண்யன் பட்டதுபடுவீர்கள் அவனையாஸ்ரயியாவிடில், ஆஸ்ரயித்தால் நப்பின்னையிடத்திற்போலே வ்யாமுக்தனுவனென்கிறுரென்று ஸங்கதி.

“ தனக்குத்தஞ்சமாகவுடைய ராத்ரியை” என்றதுக்கு விவரணம் (தனக்கபாஸ்ரயமித்யாதி.) “அழகார்” என்றதின் தாத்பர்யமருளிச்செய்கிறுர் (ஆகவித்யாதி.)

மூ.—தெவ்வாயமறமன்னர் குருதிகொண்டு
திருக்குலத்திலிறந்தோர்க்குத் திருத்திசெய்து
வெவ்வாயமாகீண்டு வேழமட்ட
விண்ணவர்கோன்றாளணைவீர் ! விகிர்தமாத
ரவ்வாயவாணெடுங்கண் குவளைகாட்ட
அரவிந்தம்முகங்காட்ட வருகேயாம்பல்
செவ்வாயின்திரள்காட்டும் வயல்சூழ் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மினீரே. ரு.

ப - ரை.—தெவ் ஆய - ஶத்ருக்களாகிய, மறம்மன்னர்-வீரமுள்ள ராஜாக்களுடைய, குருதிகொண்டு - ரக்தத்தாலே, திருக்குலத்தில் இறந்தோர்க்கு - தன் வம்சத்தில் முடிந்தவர்களுக்கு, திருத்திசெய்து - உதகக்ரியையால் திருப்திசெய்வித்து; வெம் - க்ருரமான, வாய - வாயையுடைய, மா - குதிரையுருவாய்வந்த கேசியினுடையவாயை, கீண்டு - கிழித்து, வேழம்-குவலயாபீடமென்னும் யானையை, அட்ட - முடித்த, விண்ணவர்கோன்-அயர்வறுமமரர்களதிபதியினுடைய, தாள் - திருவடித்தாமரைகளை, அணைவீர் - சேரவிரும்புமவர்களே !; விகிர்தம் - விலக்ஷணவேறுபாடுள்ள, மாதர் - ஸ்த்ரீகளுடைய, அவ்வாய - அப்படிப்பட்ட, வாள் - ஒளிபொருந்திய, நெடு - காதளவும் நீண்ட, கண் - கண்களை, குவளை - நீலோத்பலமலர்கள், காட்ட - காட்டவும், அரவிந்தம் - தாமரைமலர்கள், முகம் - முகத்தெளிவை, காட்ட - காட்டவும், அருகே - ஸமீபத்திலுள்ள, ஆம்பல் - செவ்வல்லிமலர்கள், செவ்வாயின் - சிவந்த வாயின், திரள் - கூட்டங்களை, காட்டும் - தோற்றுவிக்கிற, வயல்சூழ் - கழனிசூழ்ந்த, காழிச்சீராமவிண்ணகரே சேர்மின்கள்—. ... ... ... ... ... ... (ரு)

அஞ்சாம்பாட்டு. (தெவ்வாயவித்யாதி) ஶத்ருக்களாய் மறத்தையுடையராஜாக்களுடைய ரக்தத்தாலே தன்வம்சத்தில் முடிந்தவர்களுக்கு உதகக்ரியைபண்ணவி; "மழுவியறல்" இத்யாதி. (வெவ்வாயவித்யாதி) வெவ்வியவாயையுடைய கேஶியைப்பிளந்து, குவலயாபீடத்தை முடித்த விண்ணவர்கோன் தாளணைவீர்.

அஞ்சாம்பாட்டு.—(தெவ்வாயவித்யாதி) ஶத்ருக்களாய் மறத்தையுடையராயிருக்கிற ராஜாக்களையழியச்செய்து, அவர்களுடைய ருதிரவெள்ளத்தைக்கொண்டு, வம்சத்திலே முடிந்துபோனார்க்கு உதகக்ரியைகளைப்பண்ணவி. இவ்வளவாலே-ஸ்ரீபரசுராமாழ்வானை நினைக்கிறது. வெவ்விதான வாயையுடைத்தாய்க்கொண்டு ஐயாவஹமாம்படி தோற்றின ஆஶ்ரிதவிரோதியானகேசிவாயை அநாயாஸேந கிழித்து, குவலயாபீடத்தை முடித்து, *அயர்வறுமமரர்களதிபதியாயிருந்துவைத்து, இப்படி ஆஶ்ரிதவிரோதிகளைக் கைதொட்டுப்போக்குமவன் திருவடிகளைக் கிட்டவேண்டியிருப்பீர் !.—

அஞ்சாம்பாட்டு.— (தெவ்வாயவிதயாதி.) ஹிரண்யனைப்பேலே தானபட்டுப்போனவளவன்றிக்கே, "மூவெழுகால்கொன்ற" என்கிறபடியே ப்ராதிகூல்யரைக் குலமாக அழிக்குமவன்கிடீர், அவன்விஷயத்திலநுகூலித்து ஜீவித்துப்போங்கோளென்கிறாரென்று ஸங்கதி.

திருத்தி-த்ருப்தியென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (உதகேத்யாதி.) "அட்ட" என்றதினர்த்தம் (முடித்தென்றது.)

ஏ.—பைங்கண்விறல்செம்முகத்து வாலிமாளப்
படர்வனத்துக்கவந்தனொடும் படையார்திண்கை
வெங்கண்விறல்விராதனுக விற்குனித்த
விண்ணவர்கோன்தாளணைவீர் ! வெற்புப்போலும்
துங்கமுகமாளிகைமே லாயங்கூறும்
துடியிடையார்முகக்கமலச் சோதிதன்னால்
திங்கள்முகம்பனிபடைக்கு மழகார் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மினீரே. சு.

ப-ரை.—பைங்கண் - பசுமையான கண்களையும், விறல் - மிடுக்கையும், செம்முகம் - கோபத்தால் சிவந்தமுகத்தையுமுடைய, வாலி - வாலியென்னும்வாநரம், மாள - முடியும்படியாகவும், படர்-பரந்த, வனத்து - காட்டிலுள்ளஜந்துக்களுடங்கலும் வாரிவாய்ப்பெய்த, கவந்தனொடும்-கபந்தனென்னும் அரக்கனும், திண் - த்ருடமான, படை - ஆயுதங்கள், ஆர்-நிறைந்த, கை-கைகளையும், வெம்கண்-உக்ரமான கண்களையும், விறல் - வெற்றியையுமுடைய, விராதன் - விராதனென்னும் ராக்ஷஸனும், உக - உயிர்விடும்படி, வில் குனித்த-வில்லைவளைத்த, விண்ணவர்கோன் - தேவதேவனான சக்ரவர்த்தித்திருமகனது, தாள்-பாதபங்கஜத்தை, அணைவீர்-கூடவிரும்புமவர்களே !; வெற்புப்போலும் - மலைகள்போலே, துங்கம்-உயர்ந்த, முகம் - முன்ப்ரதேசத்தையுடைய, மாளிகை - மாளிகைகளின், மேல் - மேல்நிலத்திலே நின்று, ஆயம் கூறும்-தோழமைசொல்லியழைக்கின்ற, துடி-உடுக்கைபோலும், இடையார்-மத்யதேசத்தையுடைய ஸ்த்ரீகளது, முகக்கமலம்-முகபங்கஜங்களினுடைய, சோதி தன்னால் - காந்திகளினாலே, திங்கள் - ஆகாசத்திலுலாவும் சந்த்ரனது, முகம் - வதநமானது, பனி - துக்கத்தாலுண்டான கண்ணீரை, படைக்கும் - இடைவிடாமற்கொண்டிருக்கும்படி, அழகு ஆர் - அழகுநிரம்பிய, காழிச்சீராம விண்ணகரே சேர்மின்நீரே—. ... ... ... .. ... (சு)

---

(விக்ருதமித்யாதி) வேறுபட்டவழகையுடைய ஸ்த்ரீகளுடைய ஒளியையுடைத்தான கண்களையும் முகத்தையும் வாயையும், அவ்விடத்தே நின்ற குவளை கண்ணழகையும் தாமரை முகவழகையுங்காட்ட, அருகேநின்ற ஆம்பலானது வாயழகைக்காட்டும் வயல்சூழ்ந்த காழி.

---

(விக்ருதமாதர்) விஸஜாதீயஸ்வபாவைகளாயிருந்துள்ள ஸ்த்ரீகளுடைய அப்படிப்பட்ட ஒளியையுடைத்தான பரந்தகண்களைக் குவளைகளானவை காட்ட, தாமரைப்பூவானது முகத்தில்தேஜஸ்ஸைக்காட்ட, அருகேஅலர்ந்துநின்ற அரக்காம்பலானது சிவந்த அதரத்தினுடைய திரளைக்காட்டுகிற. ... ... ... ... ரு.

---

"விக்ருதம்" என்றது-விலக்ஷணவிகாரமுடைய என்றாய், ஹலிதமருளிச்செய்கிறார் (விஸஜாதீயேத்யாதி.) ... ... ... ... ... ரு.

ஆறும்பாட்டு.— (பைங்கணித்யாதி.) ராஜலோகத்தைவென்றவளவேயன்றிக்கே வரபலத்தாலே பெருமிடுக்கனாய் எதிரின்றிக்கேயிருந்த வாலியையும் வென்ற மிடுக்கன்கிடீரென்று ராமாவதாரத்தில் வீரசரிதத்தை யினி யிரண்டுபாட்டாலே யநுஸந்தித்து, இவனிருந்ததேசத்தைப் பற்றினவாறே உய்யலாமென்கிறாரென்று ஸங்கதி.

ஆரும்பாட்டு. (பைங்கணித்யாதி) ஜாதிப்ரயுக்தமான கண்ணிற்பசுமையையும், மிடுக்கையும், சீற்றத்தாலே சிவந்தமுகத்தையுமுடைய வாலிபட ; பரந்தகாட்டிலேயுண்டான ஸத்த்வங்களையுடைய இரண்டுகையாலும்வாரி ஸங்க்ரஹித்துக்கொண்டுவருகிற கபந்தனுடனேகூட, வெவ்வியகண்ணையும் மிடுக்கையுமுடைய விராதன் முடியும்படியாக வில்லை வளைத்த விண்ணவர்கோன் தாளணைவீர். மலைபோலேயோங்கின முகத்தையுடைத்தாயிருக்கிற மாளிகை மேல்நிலத்திலேநின்று அயல் மாளிகையில் தோழிமாரை விளையாடவழைக்கிற பெண்களுடைய முகச்சோதியாலே சந்த்ரமுகம் பனிப்பையுடைத்தாம். பனியென்று-து:க்கத்துக்கும், நடுக்கத்துக்கும், குளிர்த்திக்கும்பேர் ; இவர்கள் முகத்திற்சோதிக்கு சந்த்ரன் முகங்கெட்டபடி. ... ௬.

---

ஆரும்பாட்டு.— (பைங்கணித்யாதி) ஜாதிப்ரயுக்தமான கண்ணில் பசுமையையும், மிடுக்கையும், சீற்றத்தாலே சிவந்த முகத்தையுமுடைய வாலி முடியும்படியாக, பரந்தகாட்டிலேயுண்டான ஸத்த்வங்களையுடைய இரண்டுகையாலும் வாரி ஸங்க்ரஹித்துக்கொண்டுவருகிற கபந்தனோடேகூட. (படையார் திண்கை) திண்ணியபடையார்ந்த கை, வெவ்விய கண்களையும் மிடுக்கையுமுடைய விராதன் முடியும்படியாக, வில்லை வளைத்த. (விண்ணவர்கோன் தாளணைவீர்) விரோதியைப்போக்கி தேவஜாதிக்குக் குடியிருப்பைப் பண்ணிக்கொடுத்த சக்ரவர்த்தித்திருமகன் திருவடிகளை ஆச்ரயிக்கவேண்டியிருப்பீர் !— (வெற்பித்யாதி) மலைபோலேயோங்கின முகத்தையுடைத்தாயிருக்கிற மாளிகைகளின் மேல் நிலத்திலேநின்று தோழமையைச் சொல்லியழைத்து விளையாடுகிற துடிபோன்ற இடையையுடையரான ஸ்த்ரீகளுடைய முகமாகிற கமலத்திலுண்டான தேஜஸ்ஸாலே சந்த்ரனுடைய முகமானது து:க்கத்தை ப்ராப்தியாநிற்கும் ; - "நாமென்ன ஜீவநம் ஜீவிக்கிறோம், இவர்களோடொப்புச் சொல்லாநிற்கச்செய்தே ஒப்புப்போராதபடியிருப்பதே!" என்று து:க்கப்படாநிற்குமாய்த்து. சந்த்ரனுக்கு சந்த்ரனிவர்கள்; தேஜஸ்ஸை சந்த்ரனுக்குண்டாக்குமவர்களென்னவுமாம்.

---

"படர்வனத்து" என்று விசேஷிக்கைக்கு வேறு கபந்தனுண்டோவென்ன ; அதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பரந்தவித்யாதி.) ஸத்த்வங்களை-ஜந்துக்களை. விராதனுக்கு விறலைவிசேஷணமிட்டிருக்க, "திண்கை" என்னவேணுமோ வென்னும் சங்கையிலே அந்வயங்காட்டுகிறார் (திண்ணியவித்யாதி.) கபந்தனிடத்தில் வில்குனித்ததில்லையாகிலும், வில்குனித்தது உபலக்ஷணமாய், வாள்பிடித்தமையும் சொல்லக்கடவது. "ததஸ்தௌ தேசகாலஜ்ஞௌ கட்காப்யாமேவ ராகவௌ | அச்சிந்ததாம் ஸுஸம்ஹ்ருஷ்டௌ பாஹூ தஸ்யாம்ஸதேசத:" என்றிறே ப்ரமாணமதி. முகத்தை - அப்ரப்ரதேசத்தை. "ஆயங்கூறும்" என்றதினர்த்தம் (தோழமையைச்சொல்லியழைத்தென்றது.)

"பனி" என்று - கண்ணீராய், அத்தால் தோற்றின து:க்கத்தின் ப்ரகாரத்தையருளிச்செய்கிறார் (நாமென்னவித்யாதி.) "பனி" என்றதால் - குளிர்த்தியாய், ப்ரஸாதத்தை விவக்ஷித்து, அது படைக்குமென்றர்த்தாந்தரத்தையருளிச்செய்கிறார் (சந்த்ரனுக்கித்யாதி வாக்யத்வயத்தாலே.) ... ... ... ௬.

மூ.— பொருவில்வலம்புரியரக்கன்முடிகள்பத்தும்
புற்று மறிந்தனபோலப் புவிமேற்சிந்தச்
செருவில்வலம்புரிசிலைக்கைமலைத்தோள்வேந்தன்
திருவடிசேர்ந்துய்கிற்பீர்! திரைநீர்த்தெள்கி
மருவிவலம்புரிகைதைக்கழியூடாடி
வயல்நண்ணி மழைதருநீர்த்தவழ்கால்மன்னித்
தெருவில்வலம்புரி தரளமீனும் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மின்நீரே. எ

ப - ரை.—பொரு இல் - ஒப்பு இல்லாத, வலம் - பலத்தை, புரி-கொண்ட, அரக்கன் - ராவணனுடைய ராக்ஷஸனது, முடிகள்பத்தும் - கிரீடம் ஒளிரும் பத்துத்தலைகளும், புற்று மறிந்தனபோல-புற்றை வெட்டித்திருப்பின் புரைபுரையாய்த்தோற்றுவனபோல, புவிமேல் - யுத்தபூமியிலே, சிந்த - சிதறிக்கிடக்க, செருவில் - யுத்தத்தில், வலம் - வெற்றியை, புரி - தரத்தக்க, சிலை - ஸ்ரீ கோதண்டத்தைத் தரித்த, கை - கையையும், மலை - ஒருவராலுமசைக்கவொண்ணாப் பர்வதம்போன்ற, தோள - புஜங்களையுமுடைய, வேந்தன் - ராஜபுத்ரரான பெருமானது, திருவடி - சரணாம்புஜத்தை, சேர்ந்து - கிட்டி, உய்கிற்பீர் - உஜ்ஜீவிக்கக்கடவீர்கள்!; வலம்புரி - சங்கங்கள், திரை - அலைகடலை, நீர்த்து - விட்டு, எள்கி - இளைத்து, போந்தேறி, கைதைக்கழி-கைதைக்கழியை, மருவி-அடைந்து, ஊடி-உக்கழிந்தவை, ஆடி-அங்குமிங்குமுலாவி, பின்பு, வயல் - கழனிகளில், நண்ணி-ப்ரவேசித்து, மழைதருநீர் - மழைஜலம், தவழ் - வந்துவிழுகிற, கால் - வாய்க்காலிலே, தெருவில் மன்னி - தெருக்களில்புக்கு, நீர்வடிந்தவாறே,வலம்புரி-சங்கங்களையும், தரளம்-முத்துக்களையும், ஈனும்-பெற்றுத்தருகின்ற,காழிச்சீராமவிண்ணகரே சேர்மின்நீரே—.

ஏழாம்பாட்டு. (பொருவிலித்யாதி) ஒப்பில்லாத பலத்தைப் பண்ணுகிற ராவணன்தலைபத்தும் புற்றுமறிந்தாப்போலே விழுந்து சிதற. (செருவிலித்யாதி) யுத்தத்திலே வெற்றியைத்தருகிற ஸ்ரீசார்ங்கத்தையும் கையிலேயுடையனாய், மலைபோன்ற தோள்வலியையுடைய சக்ரவர்த்தித்திருமகன்திருவடிகளைச்சேர்ந்து உஜ்ஜீவிக்கவேண்டியிருப்பீர்.

ஏழாம்பாட்டு.— (பொருவிலித்யாதி) ஒப்பில்லாத பலத்[த]ை பண்ணுகின்றுள்ள ராவணனுடைய தலைகள் பத்தும், புற்றுமறிந்துகிடக்குமாப்போலே, தேவதைகளுடைய வரத்தாலே பூண்கட்டினவை ஊமியிலே சிதறும்படியாக, அவனைப்போலே வதுநந்தாலன்றிக்கே யுத்தத்திலே பலத்தைப பண்ணுகின்றுள்ள வில்லையுடையனாய், ஶத்ருக்களால் வலிப்பிக்கவரிதான தோளையுடைய சக்ரவர்த்தித்திருமகனைக்கிட்டி, அவன் விரோதியைப்போக்க அவன்திருவடிகளை ஆஶ்ரயித்து உஜ்ஜீவிக்கவேண்டியிருப்பீர் !.—

ஏழாம்பாட்டு.— (பொருவிலித்யாதி.)புற்றுமறிந்து கிடக்குமாப்போலேயென்றது - புற்றைவெட்டித்திருப்பினால் புரைபுரையாயிருக்குமாப்போலே யென்கை. புரை - பாழி.

பத்தாம்பாட்டு. (செங்கமலமித்யாதி) அழகிய தாமரைப்பூவை யிருப்பிடமாகவுடைய ப்ரஹ்மாவை யொத்தப்ராஹ்மணர்வர்த்திக்கிற காழிச்சீராமவிண்ணகரிலே நிற்கிற என்செங்கண்மாலை. (அங்கமலமித்யாதி) அழகியதாமரைப்பூவையுடைய தடாகங்களையும் வயலையுமுடைத்தான திருவாலிநாடன், அருள்பொழியும்மேகம். (அரட்டித்யாதி) பாஹ்யஸமயங்களில் மிடுக்கைப்போக்குமவராய், ஶத்ருக்களுக்கு ஸிம்ஹம்போலே அநபிபவநீயராய். (கொங்கித்யாதி) தேன்வெள்ள மிடுகிறமலரைக் குழலிலேயுடையஸ்த்ரீகளுக்குக்காமனைப்போன்றவர். (மங்கையித்யாதி) திருமங்கைக்கு ராஜாவாய், வெற்றிவேலையுமுடைய

---

பத்தாம்பாட்டு.— (செங்கமலமித்யாதி) "வால்மீகிர் பகவாந் ருஷி:" என்னுமாப்போலே. பெருமாளுக்கு வல்லபனாயிருப்பானொரு திருவிளக்குப்பிச்சன் பலரையும் திருமுன்பே க்ஷேபிக்கிற ப்ரகரணத்திலே, ஆழ்வார்களைத்திருவுள்ளமாய், "நம் பக்தர்களுக்கொரு குறைசொல்லிக்காணாய்" என்று திருவுள்ளமானாராய்; இப்பாட்டை விண்ணப்பஞ்செய்து, "நாயந்தே! 'தேவரைக்கவிபாட' என்று தொடங்கி தம்மைக்கவிபாடிக்கொண்டார்" என்ன; "அதுவும் நம்மையன்றோ சொல்லிற்று" என்று திருவுள்ளமானார். சதுர்முக ஸமரான ப்ராஹ்மணர் திரண்ட தேஶத்தில் சீராமவிண்ணகரிலே நித்யவாஸம்பண்ணுகிற புண்டரீகாக்ஷனைக் கவிபாடிற்று; அழகிய தாமரைகளாலே அலங்க்ருதமான தடாகங்களையுடைத்தான வயலாலே சூழப்பட்ட திருவாலிநாட்டுக்கு ப்ரபுவானவர்; அநுகூலவர்கத்துக்கு ஸர்வஸ்வதாநம்பண்ணுமவர்; எதிரிட்ட ஶத்ருக்கள் தலையெடாதே அழும்படி பண்ணுமவர்; ஶத்ருக்களுக்கு வந்தணுகவொண்ணாதபடி ஸிம்ஹம்போலே அநபிபவநீயரானவர்; எல்லார்க்கும் ஸ்ப்ருஹணீயரானவர்; திருமங்கைக்கு ப்ரபுவாயுள்ளவர்; ஸர்வேஶ்வரன் ஆயுதம்பிடித்தாப்போலே ஆஶ்ரிதரக்ஷணத்துக்காகப்பிடித்த வேலையுடையராய்,

---

மர்மம்.— (செங்கமலமித்யாதி.) எம்பெருமானைக்கவிபாடுகிறவர் தம்மைத் தாமே கொண்டாடுவானென்னென்ன; ஆப்திக்குடலாகக்கொண்டாடினாரென்று விவக்ஷித்து, அதுக்குத்ருஷ்டாந்தமுகத்தால் பரிஹரிக்கிறார் (வால்மீகிரித்யாதி.) ஆப்தக்குடலானமாத்ரமன்றிக்கே அதுதானே பகவத்ஸ்துதியென்று பரிஹாராந்தரத்தை [illegible] அருளிச்செய்கிறார் (பெருமாளுக்கித்யாதி.) நம்மையன்றோசொல்லிற்றென்றது - நம்மநுபவத்தால் வந்த ஏற்றத்தால் தம்மைக்கொண்டாடினால் அதுநம்மைக் கொண்டாடினபடியன்றோ வென்றபடி.

"கொங்குமலர்க்குழலியர்வேள்" என்றதுக்கு - தேன் வெள்ளமிடுகிற மலரைக்குழலிலேயுடைய ஸ்த்ரீகளுக்குக் காமனைப்போலே அநுகூலர்க்கெல்லாம் ரூபகுணத்தாலும் த்ரஷ்டவ்யரென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (எல்லார்க்குமித்யாதி.)

ஆழ்வாரருளிச்செய்த. (சங்கமித்யாதி) தமிழுக்குக்கடவராயிருந்தாரிரு ந்தவிடத்தே கொண்டாடும்படியான இத்தொடைபத்தையும் வல்லார், பெரியகடல் சூழ்ந்தவுலகில் தலைவராவர். ... ... ௧௦.

நஞ்ஜீயர் திருவடிகளே ஶரணம்.

ப்ரதிபக்ஷத்துக்கு ம்ருத்யுவான ஆழ்வாரருளிச்செய்த, †தமிழுக்குக் கடவார் திரளவிருந்தால்இத்தையே யெப்போதுமொக்கக் கொண்டாட வேண்டும்படியிருக்கிற இத்தொடையல்பத்தும்வல்லார். (தடங்கடல் சூழுலகுக்குத்தலைவர்தாமே) ஸர்வேஶ்வரனைப்போலே எல்லார்க்கும் தாங்களே ஆஶ்ரயணீயராவர். ... ... ... ௧௦.

ஆடிவரவு.— ஒரு நான் வை பஞ்சி தெவ்வாய் பைங்கண்
பொரு பட்ட பிறை செங்கமலம் வந்து.

திருமங்கையாழ்வார் திருவடிகளே ஶரணம்.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

அரட்டமுக்கி அடையார்சீயமாகையாலே பாகாலனென்று பேர்பெற்றனென் னுமதுதோன்ற பௌருஷத்தைக்காட்டுகிறார் (ப்ரதிபக்ஷத்துக்கித்யாதி.) ௧௦.
ஜீயர்திருவடிகளே ஶரணம்.

மூன்றாம்பத்து-அஞ்சாந்திருமொழி வந்துனதடியேன். ப்ரவேஶம்.

எல்லாரும் தந்தாமுக்கு நன்மைவேண்டியிருக்கில் ஸர்வேஶ்வரன் பக்கலிலே ந்யஸ்தபரராய்க்கொண்டு ஶ்ரீராமவிண்ணகரை யாஶ்ரயியுங் கோளென்றார் - கீழ்; அங்ஙனன்றிக்கே, தம்மளவிலே வந்தவாறே, திருவாலியையிருப்பிடமாகக் கொண்டு அங்கேயெழுந்தருளியிருக்கிற ஆலிநகர்க்கதிபதிதானே ஸ்வயம்வரித்துக்கொண்டு வந்திருக்கிறப டியை யநுஸந்தித்து, "பரமப்ராப்யனாயிருக்கிற நீ என்பக்கல ர்த்தித் வமின்றிக்கே யிருக்கச்செய்தே என்ஹ்ருதயத்திலே புகுந்திருந்தாய்,

எல்லாரும் தந்தாமுக்குநன்மைவேண்டியிருக்கில் ஸர்வேஶ்வரன் பக்கலிலே ந்யஸ்தபரராய்க்கொண்டு ஶ்ரீராமவிண்ணகரை யாஶ்ரயியு ங்கோளென்றார் ; அங்ஙனன்றிக்கே, தம்மளவில்வந்தவாறே, திருவா லியையிருப்பிடமாகக்கொண்டுஅங்கேயெழுந்தருளியிருக்கிறஸர்வேஶ் வரன் தானே ஸ்வயம்வரித்துக்கொண்டு வந்திருக்கிறபடியை யநுஸந் தித்து."பரமப்ராப்யனாயிருக்கிறநீஎன்பக்கலர்த்தித்வமின்றிக்கேயிருக்கச் செய்தே என்ஹ்ருதயத்திலே புகுந்திருந்தாய், எனக்குன்னையொழியச்

௨.—வந்துனதடியேன் ப்ரவேஶம்.— கீழ் பரோபதேஶத்தில் ப்ரவ்ருத்தரா னவர் இப்போது திருவாலியமமானைக் குறித்துத் தம் த்வரையையறிவிப்பிக்கிற தென்னென்கிற ஶங்கையிலே ஸங்கதியையருளிச்செய்கிறார் (எல்லாருமித்யாதி.) அங்ஙனன்றிக்கேயென்றது-தமக்குத்தாம் நன்மைதேடுகையும், ஒருவருபதேஶிக்க ஒருதிவ்யதேஶத்தைப் பற்றியிருக்கையுமன்றிக்கே யென்றபடி. தம்மளவில்வந்த வாறே - தம்மைத்தாமே விசாரித்தவாறே.

† சங்கம் - ஸமூஹம், மோக்ஷமியானது, அத்வைத, முகங்கொண்டு - எதிர்கொ ண்டு அநுபவிக்கும்படியிருக்கை.

முதற்பாட்டு. (வந்துனதித்யாதி) "புகுர விட்டவழியடியானென்று" இத்யாதிப்படியே - அடியானென்று பேரிட்டுக்கொண்டாய்த்து புகுந்தது. (புகுந்ததற்பினித்யாதி) ஶத்ருவேயாகிலும் தன்க்ருஹத்திலே புகுந்தால் ஆஸநமிடுமாப்போலே, புகுந்தபின்பாய்த்து வணங்கிற்று; "யஸ்யார்ஹம் கேஶவேவ்ஷத்திமவஸாஹப்ரதிபேதிரே" என்னுமாப்போலே. (என்சிந்தனைக்கினியாய்) என்னெஞ்சுக்கு நிரவதிகபோக்யனானவனே.

த்விபாதூரசரக்குக்களிரண்டும்தன்னிலேஸங்கதமாமிடத்தில்இரண்டும் பாதிபாதிவழிவந்துகூடுதல் (க) ஒன்றேவருதல் செய்யுமிறே; அதில், இவருடையபேற்றுக்கு இவ்வளவாக வழிவந்தானிவனாய்த்து. (உனதடியேன்)வருகிறபோதுபுகுருகைக்கடியாகஅவன்கைமேலேகொடு வந்த ப்ரமாணம். "அடியானிவனென்றெனக்காருள்செய்யும்" என்னுமாப்போலே-நீயோஉன்கார்யத்துக்குக்கடவாய், நான்காண் என்று, தானே ஸர்வபாரங்களையும் நிர்வஹிப்பானாகவாய்த்து ஏறிட்டுக்கொண்டு புகுந்தது. வந்துபுகுரப்புக்கால், இசையாதே, "அல்லேன்" என்னாதைக்கு வாய்த்தலையான நெஞ்சிலேவந்து புகுந்தானாய்த்து. அவன்புகுந்த பின்பு இவர்செய்ததென்னென்னில் (வணங்கும்) ஶத்ருக்ருஹமேயாகிலும், புகுந்தால் ஆஸநமிடுவர்களிறே; அவ்வோபாதி, பின்னைவணங்கினாராய்த்து; "யஸ்யார்ஹம் கேஶவேவ்ஷத்திமவஸாஹப்ரதிபேதிரே" என்னுமாப்போலே. (என்சிந்தனைக்கினியாய்) இப்படிபுகுந்தவன்தானே "போவேன்" என்றாலும் விடவொண்ணாதபடியாய்த்து நெஞ்சுக்கினியனானபடி.

"அபேக்ஷாமாத்ரமுமின்றிக்கே"என்றதை விவரியாநின்றுகொண்டு, "புகுந்தாய்" என்னவமைந்திருக்கவும்,"வந்து"என்கையாலே வருகையில் ஊர்த்தகாலத் தோற்று கிறதென்றுவிவக்ஷித்து,திருவாலியம்மானுக்குத்தம்முடைய வைமுக்யத்தால்நெடுந் தூரமாய்த்தோற்றுமென்றும்,இப்படியிருக்க,வருகைக்குப்ரயோஜநத்தையும்காட்டி க்கொண்டு வ்யாக்யாதாவிருக்கிறார் (த்விபாதூரேத்யாதி.) அதிலென்றது-ஒன்றே வருமிடத்திலென்றபடி."உனதடியேன்"என்ற-இவர்ஸ்வரூபஜ்ஞாநமே பிறந்தவராக த்தம்மையநுஸந்திக்க,அபேக்ஷாநிரபேக்ஷமாகவந்தானென்னச்சேருமோவென்னுமின்ன; வாஸ்தவாகாரத்தைப் பற்றி அவன்நினைத்தபடியை யருளிச்செய்கிறாரென் கிறார் (வருகிறவித்யாதி. "உனதடியேன்" என்ற ஆழ்வாருடைய பாசுரமானது ஸர்வேஶ்வரன் கையதானப்ராமாண்யமாகையாலே அவன்கையிலேயெழுத்தை த்தாம் கண்டு அர்த்தத: அநுஸந்தித்தாரித்தனையாகையால் இந்தபாசுரம் ப்ரமாண மென்று கருத்து. "அடியேன்" என்னவேயமைந்திருக்க, "உனது" என்கைக்குக் கருத்தருளிச்செய்கிறார் (நீயோவித்யாதி.) "மனம்" என்றதுக்குக்கருத்து (வந்து புகுரவித்யாதி.) "புகுந்ததற்பின்வணங்கும்" என்கையாலே - அவ்யவஹிதகாலத் திலேஸ்வரூபஜ்ஞாநகார்யமானவணக்கமிவருக்குவரஸம்பாவனையில்லையேயென்று ஶங்காநுவாதம் பண்ணுகிறார் (அவனித்யாதி.) இதுக்குத்தரம் (ஶத்ருவித் யாதி.) "வணங்கும்" என்கிறப்ராதிகம் ஸங்கைக்கு முற்றறஅநுஸந்திப்பது. இவர் வசமாகவணங்கினாராகிலும் அவன் சிந்தனைக்கினியனானபடியால் எல்லைநிலத்தைக் காட்டுகிறார் (இப்படியித்யாதி.)

(க) ஒன்றேவருதல் - சரக்குப்பிடிக்கிறவனே முற்றும்போகை.

(மணியித்யாதி) அழகிய செங்கழுநீரானது பக்கத்திலே அலரா நின்ற. (வயலாலிமணவாளன் பணியறியேன்) இங்கேவரவிருக்கிறானே, அன்றிக்கே, ஜாம்பவதிபோல்வார்க்குப் பூப்பறித்துத்தொடாநிற்குமோ, அறியேன். அன்றிக்கே, ஶகுந்தலையை உபேக்ஷித்த துஷ்யந்தனைப்போலே அறியாமை பாவித்திருக்குமோ, அதுவுமறியேன் ; நீ சென்று

(மணிகழுநீரித்யாதி) அழகியசெங்கழுநீர்களானவை அலராநின்றுள்ள பர்யந்தங்களையுடைத்தான வயலாலே சூழ்ந்த திருவாலியிலே வந்திருந்தவன். அன்றிக்கே, நீர்களானவை கொழித்தெறடாநின்றுள்ள மணிகளையும் செங்கழுநீரையுமுடைத்தான பர்யந்தங்களென்றுமாம். (வயலாலிமணவாளன்பணியறியேன்) என்னையணைக்கையே தொழிலாய் இங்கேறவருகையிலே யொருப்பட்டிருக்கிறானே ; அன்றிக்கே, ஜாம்பவதிபோல்வார்க்குப் பூப்பறித்துத்தொடாநிற்குமோ, அறியேன். அன்றிக்கே, பணியென்று-ஶகுந்தலையையுபேக்ஷித்த துஷ்யந்தனைப் போலே அறியாமைபாவித்திருக்குமோ, அதுவுமறியேன். அன்றிக்கே, நாவிலும்பல்லிலும் நீரற்று "என்செய்தாள்? என்பட்டாள்?" என்று கேட்கிறானோ ; உக்தியிலும், க்ரியையிலும் கொள்ளக்கடவது.

அவன்படி நிஶ்சயிக்கவொண்ணாவிட்டாலும் நமக்கவனையொழியச் செல்லாதிறே (நீசென்று) நமக்கு முன்னமவனைப்போலே யிருக்கவொண்ணாதிறே. அவனுக்கு நம்மையொழியச்செல்லுமென்ன, நமக்குமவனையொழியச்செல்லாதே. (நீசென்று) முறைகெடவாகிலும் நீ முற்படச்சென்று. அவன்தானே வரப்பெறவிருக்குமதாய்த்து முறை.

* மணிபதத்துக்கு அர்த்தத்வயங்காட்டி, த்விதீயார்த்தானுகுணமாக ஸமுதாயார்த்த மருளிச்செய்கிறார் (அழகியவித்யாதி.) முந்தினவர்த்தத்தில் - மணிகள்வருகைக்குஹேதுவைக் காட்டாநின்றுகொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார் (அன்றிக்கேயித்யாதி.) "பணி" என்று - வ்யாபாரமும், உக்தியுமாகையாலே, வ்யாபார பக்ஷத்தில் - மூன்றர்த்தமும் ; உக்திபக்ஷத்தில் - ஓரர்த்தமுமாக வருளிச்செய்கிறார் (என்னையித்யாதி.) "மணவாளன்" என்றதுக்கு-தன்மணவாளனென்று விவக்ஷித்து, முந்தினவர்த்தமும் நாலாமர்த்தமும், நாயகாந்தரத்துக்குமணவாளனென்று இரண்டர்த்தமுமாகக் கண்டுகொள்வது. (பாவித்திருக்குமோ) என்றது - மாநஸக்ரியையென்றுகருத்து. ஶகுந்தலையென்கிற கண்வர்புத்ரியை துஷ்யந்தனென்கிற ராஜா வேட்டைக்குப்போனவிடத்திலே காந்தர்வவிவாஹம்பண்ணி ஒரு பிள்ளைபிறந்தவுடனே "திரும்பிவருகிறோம்" என்று தன்னூரேபோக, அநேகநாள்வாராகையாலே இந்தப்பெண்ணை அங்கேபோகவிட, அப்போது இவளைக்கண்டு அறியாதது மை பாவித்திருந்தானென்று கதைகண்டுகொள்வது. (ஶகுந்தலையை) என்றவாக்யத்துக்குமுன்னேயிருக்கிற (பணியென்று) என்றபதத்தை, (உக்தியிலும்) என்ற வாக்யத்துக்கு அடியிலே கூட்டுவது.

மேலுக்கவதாரிகை(அவனித்யாதி.) விவரணம் (அவனுக்கித்யாதி.)

௯.— நீர்வானம் மண்ணெரிகாலாய் நின்றநெடுமால் தன்
தாராய நறுந்துளவம் பெறுந்தகையேற்கருளானே
சீராரும்வளர்பொழில்சூழ் திருவாலிவயல் வாழும்
கூர்வாயசிறுகுருகே குறிப்பறிந்து கூறாயே. ௯.

ப - ரை.— மண்நீர்எரிகால் வானம்ஆய் - ப்ருதிவ் அப்பு தேஜஸ்ஸு வாயு ஆகாசமாகிய பஞ்சபூதங்களுமாகி, நின்ற-அவற்றுக்குக்கார்யயோக்யதையுண்டாம்படி அந்தர்யாமியாய்நின்ற, நெடுமால - ஸர்வேஸ்வரனானவன், தன்-தன்னுடைய, தாராய - மாலிகைபாகிய,நறும்துளபம்-செவ்வித்திருத்துழாயை, பெறுந்தகையேற்கு - பெறில்ஜீவிக்கும்ஸ்வபாவத்தையுடைய அடியேனுக்கு,அருளானே-தாரானோ; சீராரும்-ஊர்வளப்பத்தைக்காட்டும்பெருமைமிருந்த, வளர்பொழில் - வளரவளர முதமையன்றிக்கேயிருக்கும்சோலை, சூழ்-சுற்றுஞ்சூழ்ந்த, திருவாலி-திருவாலியென்னும்நகரின், வயல் - சழனியில், வாழும்-வாழுகிற, கூர்வாயசிறுகுருகே - கூரியவாயலகையுடைத்தான சிறுத்தபக்ஷியே, குறிப்புஅறிந்து-அவன்கருத்தையறிந்துகொண்டுவந்து, கூறாய் - நான்தரித்திருக்கும்படி அச்சொல்லைச் சொல்லவேணும் என்று, வண்டைத்தூதனுப்பின அநந்தரம் பக்ஷியைத்தூதுவிடுகிறாள். (௯)

என்வடிவில் வைவர்ண்யத்தைச் சொல்லவேணும். ... உ.

அங்குப்போனால் சொல்லுமதுதானேதென்னில் ( என்பயலைநோயுரையாயே) "த்ருஷ்டாஸீந்நிஷ்ப்ரஹோத்யர்யம் ராஷஸம்ரஸ்த இவாம்ஸுமாந்†" என்று-பெருமாளுடைய ஆற்றாமையை மஹாராஜர்க்கு[உம் இளையபெருமாளறிவிக்க, அவ்வார்த்தை செவிப்பட்டு அழிந்தவழிந்த வளவுதோறு முடம்பு வெளுத்து வந்ததிறே ; அப்படியே, என்னுடம்பில் வைவர்ண்யமு மவனுடம்பிலேகாணும்படிவார்த்தைசொல்லு. (பயலைநோயுரை) * வாவாமமோவரமிறே இவளுடைய வைவர்ண்யந்தான். வாக்குக்கு அவிஷயமானவற்றுக்கும் பாசுரமிட்டுச்சொல்லவற்றுக்காணும்இவைதான்.(என்பயலைநோயுரையாயே)என்னுடம்படைய வைவர்ண்யம் பரந்திருக்கிறபடியைச சொல்லு. உன்னுடைய சொல் கலந்த விடமடைய வைவர்ண்யம் பரக்கும்படியாகச் சொல்லிப்போரு என்கிறாள். (என்பயலைநோயுரையாயே) ஸ்வதந்த்ரர்படி கொண்டு காரியமென் நமக்கு, நீசென்றுஇத்தனையுமறிவித்துப்போராய். உ.

"உரையாய்" என்றது-வருகைக்குஹேதுவான உரையாகவேண்டுகையாலே,அதின் கருத்தைஸஷ்டாந்தமுபபாதிக்கிறார் (த்ருஷ்டாஸீதித்யாதி.)வைவர்ண்யத்தில் ப்ரகாரவிசேஷம்சொல்லாமையால்ஃலித்தவர்யமருளிச்செய்கிறார் (வாவாமித்யாதி.)ஸப்தார்யம் (என்னித்யாதி.) ஜாம்பவதிபோல்வார்க்குப் பூப்பறித்துக்கொடுத்துக்கொண்டுஅவனிருந்தால்அவனுடம்பில் வைவர்ண்யமேறும்படி சொல்லுகையெங்ஙனே? அவர்கள் ஸந்நியாலே வைவர்ண்யமேறுமோவென்ன வருளிச்செய்கிறார் (உன்னித்யாதி.) தூஷ்யதனைப்போலே உபேக்ஷித்தால் என்செய்வோமென்ன வருளிச்செய்கிறார் (ஸ்வதந்த்ரரித்யாதி.) ... ... ... ... உ.

† "ராஹுக்ரஸ்த இவாம்ஸுமாந்" என்றுசில ஸ்ரீகோசங்கள்.

மூன்றாம்பாட்டு. (நீர்வானமித்யாதி) ப்ருதிவ்யாதிபூதங்களைத் தனக்குப்ரகாரமாகக்கொண்டு தான்ப்ரகாரியாய் நிற்கிறஸர்வேஶ்வரன், தன் தாராயநறுந்துழாயாகிலும்

---

மூன்றாம்பாட்டு.—(நீர்வானம் மண்ணெரிகாலாய்நின்றநெடுமால்) ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களையும் கார்யயோக்யமாம்படி ஒன்றோடொன்றைச்சேர்த்து, அவற்றுக்கொரு வஸ்துத்வமும் நாமமுமுண்டாம்படி தானவற்றுக்குள்ளேபுக்குநின்று, பின்னை அவற்றைச்சொன்னசொல் தன்னளவிலேவந்து பர்யவஸிக்கும்படிநிற்கிற பெரும்பிச்சன். தன்னுடைமையைவிடமாட்டாமையாலே வேறுபடாதே கலந்துநிற்கிறவன். (நீர்வானமித்யாதி) ஆசையில்லாத ஜகத்தையும் தானாசைப்பட்டுமேலாய்த்து. ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களையுமுண்டாக்கி, அவற்றுக்கு கார்யயோக்யதையுண்டாம்படி, நீரையும் சருகையும் மண்ணையுங் கூட்டிக்குழைத்து கடசராவாதி கார்யங்களாக நிர்மிக்குமாப்போலே அத்தோடே சேதநஸமஷ்டியைக்கூட்டி தேவாதி கார்யத்தையுண்டாக்கி, உண்டானவிவற்றினுடைய ஸத்தாஹேதுவாக தான் அந்தராத்மதயா அநுப்ரவேசித்து, அவற்றைச்சொல்லுஞ்சொல்லு தன்னையே சொல்லும்படி நிற்கும் நிலையைச் சொல்லுகிறது. நாட்டில் வைபாடாஸிஜநார்த்தங்கள் பரமாத்ம பர்யவஸாயியாநம் பண்ணியல்லவிராநின்றோ [தத்ஸ்ருஷ்ட்வா இத்யாதி] இவற்றை ஸ்ருஷ்டித்து, இவற்றினுள்ளே அநுப்ரவேசித்து, அந்த அநுப்ரவேசத்தாலே ஸச்சும் த்யச்சும் தானென்று சொல்லலாம்படி நிற்கிறவனாய்த்து. (நெடுமால்) தன்பக்கல் ஆநுகூல்யலேசமில்லாத ஜகத்தின் பக்கலிலும் தான் மிக்கவ்யாமோஹத்தைப்பண்ணி யிருக்குமவன்.— (தன்தாராயநறுந்துழாய் பெறுந்தனைப்பெறுநாளோ) தன்பக்கலாசையில்லாதாரையும் விடமாட்டாதேயிருக்கிறவனுக்கு நான் பிரிந்திருந்தாசைப்பட்டுத் துடிக்கிறதோ குற்றம். தான் விஷயீகரிக்கில் உளேனாய், இல்லையாகில் இல்லையாம்படியிருக்கிறவெனக்கு.

---

மூன்றாம்பாட்டு.— (நீரித்யாதி.) வண்டாணத்தி, * மென்மலர்ப் பள்ளியின் வாய்ப்பாலும், உநமத்தங்காய்போலேபிச்சேற்றவல்லபவையின்மயக்குக்களாலும், மந்நுக்ருகைடாலுண்டான பாரவர்ஶ்யத்தாலும், * ஊனமையேராடு செகுடர்வார்த்தை போலேபாயப் போகையாலே, அவற்றைவிட்டு, கூர்வாயச்சுருகைக் கூறச்சொல்லித் தூதுவிடுகிறாளென்று ஸங்கதி.

பிச்சுத்தானென்னென்ன வருளிச்செய்கிறார் (தனையித்யாதி.) ஆசை என்று- ஞீக்காய், மத்யஜராமில்லாத என்று பாடம். விவரணம் (ப்ருதிவ்யாதீத்யாதி.) சதுகு - கூளம். ஶராவம் - மடக்கு. ப்ரமாணங்காட்டுகைக்காக அடிக்கோலுகிறார் (நாட்டிலித்யாதி.) ப்ரமாணார்யம் (இவற்றையித்யாதி.)

அருளாநமக்கு ஹேதுவேதென்ன, "கூறாய" என்ற பதத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (தன்பக்கலித்யாதி;) இதுபோக்கி வேறுகுற்றம் காணேனென்று கருத்து. வேறுகுற்றமில்லையோவென்ன (தானித்யாதி.)

நாம்பெறுமளவு மருளாயே. (சீராருமித்யாதி) அழகார்ந்து வளர்ந்து வருகிற பொழிலாலே சூழப்பட்ட திருவாலிவயலிலே வாழுகிற,

தன்தோளிலிட்ட செவ்விமாலைபெறில் ஜீவித்து, பெறுவிடில் முடியும் படியாயிருக்கிற வெனக்கு. (தன்தாராயநறுந்துளபம் பெறுமதனையே ற்கு)என்று-தம் ஸ்வரூபத்தைச் சொன்னபடி யென்தான்!.(அருளாயே) ப்ராணயிநியார்த்தி பரிஹரிக்குமதுபோறல், நாட்டொப்பானவருளு மின்றிக்கே யொழியவேணுமோ !. ( தன்தாராயவித்யாதி ) தனக்கே அஸாதாரணமாய் தாரையுடைத்தாயிருந்துள்ள செவ்வித் திருத் துழாயைப்பெறில் உளேனாய், இல்லையாகில் இல்லையாம்படியிருக்கிற என்பக்கல் க்ருபைபண்ணாயே. கந்தல்கழிந்தால், பின்னை திருத்துழா யோபாதி, கௌஸ்துபத்தோபாதி ஸ்பர்ஹணீயமாயார்த்து வஸ்து ஸ்வபாவமிருப்பது. (அருளாயே) ஸாமாந்யரக்ஷணம் தப்பநில்லாத வன் விசேஷரக்ஷணத்திலே தப்புகிற்குமோ !. ஆசையில்லாத ஜகத் தையும் ரக்ஷிக்குமவன், தன்னைப்பெறில் உளேனாய் இல்லையாகிலு கில் இல்லையாம்படியிருக்கிற வென்விஷயத்தில் நெகிழநிற்குமோ !. அவனுடையப்ராணயித்வத்துக்கு விஷயமாய்த்திலோமாகிலும அவனு டைய க்ருபைக்கு விஷயமாகாதொழிவதோமோ !.

(சீராருமித்யாதி) வாழ்ந்தார்க்குக் கெட்டாரை நெடுக்கவேணுண் டாவோ. (சீராரும்வளர்பொழில்சூழ்) "ஊர்வளம் கிளர்சோலை"[உ] என்கிறபடியே -ஊரில் ஸம்ருத்தியடையச் சோலையே கோடிகொள்வி த்தரும்படியாயிருக்கை. (வளர்பொழில்) "வளர்இளம்பொழில்" என் னுமாப்போலே — வளரவளர முதுமையின்றிக்கே இளகிப்பதித்திரு க்கை. ஐச்வர்யத்தினுடைய ஸம்ருத்தியைத் தெரிவிக்கின்றன வளர் ந்தபொழிலாலே சூழப்பட்ட திருவாலியிலே வாழுகின்ற சிறுதருகே. அங்குத்தைவர்த்தந்தானே வாழ்ச்சியாயிருக்கை; கோயில்வாஸம் போலே.

கீழ்வாக்யவிவரணம் (தன்தோளிலித்யாதி.)வ்யாக்யாதாவின் நடையே(தனதாராயவித் யாதி.)நாயிகையானவள்,வாராநின்றேனென்றதே"அருளாயே" என்னைக்கூட்டுமோவென் னவருளிச்செய்கிறார்(ப்ரணயிநியித்யாதி. வாக்யார்த்தம்(தனக்கேயித்யாதி.) ஆவத் தைப்பெறுகைக்குயோக்யமான ஸ்வபாவத்தையுடைய வென்றபஸ்வார்த்தமாய்க் கீழருளிச்செய்து, துளவத்தினுடைய, பெறும்தகையேற்கு - எம்பெருமான் லபி க்கும்படியான ஸ்வபாவம்போன்ற ஸ்வபாவத்தையுடைய வெனக்கு என்று பஸ்வ ார்த்தமாக்கி, தாத்பர்யார்த்த மருளிச்செய்கிறார் (கந்தலித்யாதி.) வஸ்து - ஆத்ம வஸ்து. "அருளாயே" என்றது - பிரிநிலையேகாரமாய, அருளும் என்றுக்கி ஒரு தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸாமாந்யேத்யாதி.) விவரணம் ( ஆசையில்லாதவித் யாதி.) விசேஷரக்ஷணத்தில் தப்பநில்லாதாகில் உனையிப்பாடுபடுத்தினவன் நான்போனபின்பு தப்பினாலோவென்ன வருளிச்செய்கிறார்(அவனுடையவித்யாதி;) ப்ரணயத்தாலே வாராவிடிலும் உபாயநுவாகையாலே என்ஹார்த்தியைக்கேட்டுவரு மென்று கருத்து.

தாத்பர்யத்தையருளிச்செய்து, பஸ்வார்த்தம் (ஐச்வர்யத்தினித்யாதி.)

மூ. — தானாகநினையானேல் தன்னினைந்து நைவேற்கோர்
மீனாயகொடிநெடுவேள் வலிசெய்ய மெலிவேனோ
தேன்வாயவரிவண்டே திருவாலிநகராளும்
ஆனாயற்கென்னுறுநோ யறியச்சென்றுரையாயே. ச.

ப - ரை.—தான்ஆக - அவன்தானாகவே, நினையானேல் - தன்னுடைமையான வெனனை நினையானாகிலும், தன்நினைந்து - தரிக்கைக்குஹேதுவாகிய அவனையே நினைத்துக்கொண்டு, நைவேற்கு- கரையுமெனனை, ஓர்மீனாயகொடிநெடுவேள் - அத்விதீய மகரத்வஜனான மந்மதன், வலிசெய்ய - பீடிக்கும்படி, மெலிவேனோ - நான் இளைத்துப்போவேனோ ; தேன்வாய - இனியபேச்சையுடைய, வரிவண்டே-ரேகை [யு]சிறந்தவண்டே !, திருவாலிநகர் ஆளும்-திருவாலியென்னும் திவ்யதேசத்திலே வர்த்திக்கிற, ஆனாயற்கு-ஸ்ரீக்ருஷ்ணனாகத்திருவவதரித்த ஸர்வேச்வரனுக்கு, என் உறுநோய் - மேலெழப்போமன்றிக்கே ஏகாந்தமான நோவை, சென்று - நீபோய், அறியஉரையாய் - அவனறியும்படி சொல்லவேணும் என்று பின்னும் மவ்வண்டையே தூதுவிடுகிறாள். ... ... ... ... (ச)

---

கூர்வாயையுடைய சிறுகுருகே. (குறிப்பு) அவன்நினைவை யறிந்து சொல்லவேணும். ... ... ... ... ரு.

---

(கூர்வாயசிறுகுருகே) கூரிய வாயலகையுடைய சிறுகுருகேயென்றுதல் ; அன்றிக்கே, அறுதியபாடுடைத்தான வார்த்தைசொல்லவல்ல குருகேயென்றுதல். ராஜபுத்ரர்களைக்கண்டஞ்சி நாலுமூன்று[உ]யோஜனை ஓடிப்போன மஹாராஜர்வந்துகிட்டி, "ஏகஞ்ஜாங்வெம் ஸங்வெதுநெ" என்று நிற்கும்படிக்கீடாகவிறே வார்த்தைசொல்லிற்று.

(குறிப்பறிந்துகூறியே) அவன்கருத்தறிந்து வந்து எனக்குச்சொல்லென்றுதல் ; நானாற்றாமையாலே கண்ணழிந்தகுழலையிட்டுச்சொன்னவற்றையெல்லாம் அங்குச்சொல்லாதே, அவனறிக்கும்படி அளவறிந்து வார்த்தைசொல்லென்றுமாம். நீசொல்லிலவனைக்கிடையாது, அவன்னாப்ராயத்தை யறிந்துவந்து சொல்லென்றதுக்குக் கருத்தென்னென்னில் ; நம்முடைமையயறிவித்தால் "நமக்கந்தலைவேணும்" என்றானாகில் நம்மாற்றாமை பாராதேயாகிலும் நாம்ஜீவித்துக்கிடக்க, வேண்டா என்றானாகில் நாம்முடிந்துபிழைக்கும்படி. ... ரு

நாலாம்பாட்டு.— (தானாகநினையானேல்) "வேம்பு" என்பாரைப்போலே.

---

அறுதப்பாடுடைத்தான - தீக்ஷ்ணவைலக்ஷ்யயாலுண்டான. ... ரு.

நாலாம்பாட்டு.—(தானாகவித்யாதி.) கீழ்ப்பாட்டில் குருகைக்குறித்து "கூறுய்" என்றவாறே வண்டானது வந்து முகங்காட்டி "நீயெங்களைத் தூதுவிட நாங்கள் மெய்மறந்திருந்தோமல்லோம், அவன் உன்படியறிந்துவைத்தும் இப்பாடுபடவிட்டு நினையாதிருந்தான், நாம் போனாலும் பற்கடித்திருந்தால் என்செய்வோமெனறிருந்தோமித்தனை" என்று இனிதாகச்சொல்லிக்கொண்டுவர, அத்தைப்பார்த்து வார்த்தை சொல்லுகிறாளென்று ஸங்கதி.

தாத்பர்யமருளிச்செய்கிறார் (வேம்பித்யாதி;) "வேம்பின்புழு வேம்பன்றியுண்ணாது" என்றவிடத்தில், அவன்குற்றத்தையிட்டு வேம்பென்று குறைசொன்னாப்போலே அவன் தன்னை நினையாதிருக்கை குற்றமென்று அவனுக்குக் குறைசொல்லுகிறாளென்று கருத்து.

நாலாம்பாட்டு. (தானுகவித்யாதி) நஞ்ஜீயருடைய நோவிலே பெற்றி அறியப்புகுந்து, “இந்நுத்தைக்குவேண்டியிருக்கிறதென்?” என்று கேட்க; “* தூவிரியமலருழக்கிப்பாட்டுக் கேட்கவும், பெருமாளெழுந்தருளப் பின்னும் முன்னும் சுற்றிலேவந்து ஸேவிக்கவேண்டியிராநின்றேன்” என்றருளிச்செய்தருளினார்; அப்போதே பெருமாளுக்குச் சென்று விண்ணப்பஞ்செய்ய; பெருமாளும் ஜீயர்க்கருளப் பாடிட்டு * தூவிரியமலருழக்கி கேளாநிற்க, “மீனுயகொடிநெடுவேள்வலிசெய்யமெலிவேனோ” என்கிறவளவிலே வந்தவாறே, “காமசரங்களாலே ஏவுண்பதற்கு முன்னே வாராவிட்டாலும் பட்டபுண் பரிஹரிக்கவாகிலும் வந்தாலாகாதே” என்றருளிச்செய்தார். (தானுகவித்யாதி) தானும்படி செய்யானாகில், தானப்படி செய்யானாகிலென்றபடி. அப்படிசெய்யாதபோது யாது வர்ப்யாதே. (தன்னினைந்தித்யாதி) தன்னைநினைந்துஸ்ம்ருதியில்லையாகிறவென்னை ஒருமகரத்வஜன் நலிய மெலியக்கடவேனோ.

---

உடைமையை அவனாக நினைக்குமது கிடையாதாகில், முறைசெய்யானாகில். அவனுக்கு ஆஸ்ரிதரை நினையாமை ஸத்தாப்ரயுக்தமாகில்; தன்ஸத்தையுண்டாகைக்கிடாக நினையானாகிலென்றுமாம். (தன்னினைந்து நைவேற்கு) நாமவனைப்போலே யாகமாட்டோமே; நாமும் நினையாமைக்கொருநெஞ்சுபடைக்கப் பெற்றிலோம். பெறவுமுமாய்த் தவிரவுமாயிருக்கும் விஷயமாகிலிறே அநுஸந்தித்தால் மறக்கலாவது; இதரவிஸஜாதீயமாயிருக்கும் விஷயமானவாறே அநுஸந்தித்தவநந்தரம் நோவுபடுமத்தனையிறே. (ஓர்மீனுயகொடிநெடுவேள் வலிசெய்ய மெலிவேனோ) தன்னையாசைப்பட்டு நைகிறவென்னை மகரத்வஜனோ நலிவான். அவஸ்யம்நாங்கள் நோவுபடுகை தவிரோமாகில், “கருளக்கொடியொன்றுடையீர்” என்கிற தாங்கள் நோவுபடுத்த நோவுபட்டாலென்செய்யவேணும். ஜீயர்வார்த்தையை நினைப்பது.

---

ஸங்க்ஷாரம் (உடைமையையித்யாதி.) தானுகவே நினைக்கக் குறை, அது செய்யாமல் போனானாகிலென்று நிர்வஹித்துச்செய்து, தானுகைக்காகவென்றும் ஸங்க்ஷாரம் விவக்ஷித்து, தாத்பர்யமருளிச்செய்கிறாரர் (அவனுக்கித்யாதிவாக்யத்வயத்தாலே;) ஸத்தையுண்டாகைக்காகநினைக்கவேணுமது செய்யாமற்போனானாகிலென்றும், ஸத்தையுண்டாகைக்காக நினையாதேயிருந்தானாகிலென்றும், மூன்றாம் தாத்பர்யத்தை யிரண்டுவிதமாக யோஜித்துக்கொள்வது. நினையாதவனை நாம் நினைப்பானென்னென்ன (நாமித்யாதி.) மாட்டாமைக்கு ஹேதுவென்னென்ன (நாமுமித்யாதி.) ஒரு நெஞ்சு - பேர்சொல்லப்போகாத கல்நெஞ்சு. நினைத்தால் நைவானென்னென்ன வருளிச்செய்கிறார் (பெறவுமித்யாதி வாக்யத்வயத்தாலே.) விரஹிணிகளைமதனன்வலிசெய்யுமது லோகப்ரஸித்தமாயிருக்க, “மெலிவேனோ” என்று க்லேஶிக்கக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (தன்னையித்யாதி;) யத்வா “வேள்வலிசெய்ய” என்னவமைந்திருக்க, “ஓர்மீனுய கொடி” என்றதுக்குக் கருத்தாகவுமாம். ஜீயர்வார்த்தை-பட்டர்வேப்பதுவார்த்தை.

ரூ.— வாளாயகண்பனிப்ப மென்முலைகள் பொன்னரும்ப
நாளாய நின்னைந்து நைவேற்கோ! மண்ணளந்த
தாளாளா! தண்குடந்தை நகராளா! வரையெடுத்த
தோளாளா! என்றனக்கோர் துணையாளனாகாயே. ௫.

பதவுரை.— மண் அளந்த - பூமியையளந்த, ஓ! தாளாளா - திருவடிகளையுடையவனே!, ஓ! தண்குடந்தை நகராளா - ஸ்ரமஹரமான திருக்குடந்தையில் கண் வளர்ந்தருள்பவனே, வரை எடுத்த-கோவர்த்தநத்தைக்குடையாவெடுத்துப்பிடித்த, ஓ! தோளாளா - திருத்தோள்களையுடையவனே!, வாளாயகண்பனிப்ப-வாள்போன்ற கண்களில்நின்றும் நீர்பெருகவும், மென்முலைகள் பொன் அரும்ப-ம்ருதுவான ஸ்தநங்களில் வைவர்ண்யம் தோன்றவும், நாள்நாளும் - ப்ரதிதிநமும், நின் நினைந்து - உன்குணங்களை நினைத்துக்கொண்டு, நைவேற்கு என்தனக்கு-வருந்துகின்ற எனக்கு, ஓர் துணையாளன் ஆகாய் - ஒப்பற்ற ஸஹாயபூதனாகவேண்டும் என்று, பாவநாப்ரகர்ஷத்தாலே அவன்முன்னே வார்த்தைசொல்லுகிறாள். (௫)

(தேனிதயாதி) இனியபேச்சையுடைய அழகியவண்டே, திருவாலிநகராளுமவர்க்கு சென்று நீபோய் அவனறியும்படி சென்றுசொல்லவேணும் ... ... ... ... ... ௬.

(தேன்வாயவரிவண்டே) இனியபேச்சையுடையவண்டே. பிராட்டி அசோகவநிகையிலே திருக்குழலைக்கொடுபோய் பிணைக்கப் புக்க ஸமயத்திலே அவளுக்குதவி, "அவஹாஹ்யார்ணவம்ஸ்வப்[உய] ஸ்யே" என்கிற ஸமயத்திலே யிவருக்குவந்துதவி, இரண்டுதலையும் முன்பாம்படியாக வார்த்தைசொல்லவற்றாயிருக்கை. அவனித்தலையில் வாராதொழிந்தாலும் உங்கள்பேச்சினினிமையிலே துவக்குண்டு வரும்படி வார்த்தைசொல்லவல்லிகோளிறே.

(திருவாலிநகராளுமவற்கு) திருவாய்ப்பாடியில் ஸம்பத்தோடே திருவாலியில் ஸம்பத்தையும் கையடைப்பாக்கிறால், பின்னை அவனுக்கு நெருக்காரை "ஹேயா!" என்ன அவஸரமுண்டோ. (என்னுடம்பில் மெலிவுப்போமதன்றிக்கே பரிராதேமான நோவை (அறியச்சென்றுரையாயே) அறியாமைவாராதொழிந்தானத்தனை, நீபோய் அவனறியும்படிசொல்லு. அன்றிக்கே, (அறியச்சென்றுரை) உன்நடையில் தளர்த்தியில் பித்தலையிலாற்றமையடைய வலையறிந்து, நாவிலும் பல்லிலும் நீரற்று உடம்புவெளுக்கும்படி சென்று சொல்லென்றுமாம்.

அஞ்சாம்பாட்டு.— (வாளாயவித்யாதி) அத்தலையித்தலையாய்த் தன்னைப் பெறவேணுமென்று நாளுசைப்பட்டு நோவுபடாநிற்க தான் தன்னைக் கொண்டருமைப்படுத்தினுமென்று சொல்லுங்கோளென்று ஊதுக்கு வார்த்தைசொல்லப்புக்கு, அதுதான் போய், பாவநாப்ரகர்ஷத்தாலே அவன் முன்னே நின்றாகக்கொண்டு அவன்றனக்கு வார்த்தைசொல்லிச் செல்லுகிறது — மேலிற்பாட்டுக்கள். ஸ்ரீராமாயணத்திற்படிபோலே யிருக்கிறதாய்த்திதுவும். ஊதுக்கு வார்த்தை சொல்லாநிற்கச்செய்தே, பாவநாப்ரகர்ஷத்தாலே அவன்றன் ஸந்நிதியைக்கொண்டு அவனுக்குவார்த்தைசொல்லுகிறாளிறே!. "க்ஷமமேஷதம் மயேபதே" என்னுமாப்போலே.

அவனினையாமைக்கு ஹேதுவைக்காட்டுகிறதாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருவாய்ப்பாடியிலித்யாதி.) ... ... ... ... ௭.

அஞ்சாம்பாட்டு.— வாளித்யாதி) கிழெல்லாந்தூதுவிட்டவள் இப்போது முன்னிலையாகச்சொல்லி நோவுபடுகைக்கு நிபந்தனமென்ன; பேடிகோஸங்கதியருளிச் செய்கிறார் (அத்தலையித்யாதி.)

அஞ்சாம்பாட்டு. (வாளாயவித்யாதி) வாள்போன்ற கண்கள் துளிக்க, மிருதுவான முலைகள் பொன்பூக்க,

(வாளாயகண்பனிப்ப) அத்தலையித்தலையானபடி. எதிர்த்தலையிலே காணக்கடவ கண்ணநீரிறே இவள்கண்ணிலே காண்கிறது!. பிறரைத் தோற்பிக்கைக்கிடான பரிகரமுண்டாயிருக்கக்கிடீர் நானிப்படிபட்டது!. கையிலே ஆயுதமிருக்க முடிந்து கிடப்பாரைப்போலே. அவன் போகவொருப்பட்ட ஸமயத்திலே, "போகாதேகொள்" என்று கண்ணாலே விலங்கிட்டு அநுபவிக்கலாயிருக்க, லஜ்ஜையாலே கவிழ்ந்திருந்து "கெட்டேன்!" என்கிறாள். அப்போது அவனைக்கடாக்ஷித்துவிட்டேனாகில் அவன்றான் தாநுவிடவிருக்கலாய்த்தே!. (வாளாயகண்பனிப்ப) ஓராளுமொருநோக்கும்நேரான கண்கள் படு மெளிவரவே!. புரியாய் வைத்து உகிர்மூறிந்தேன் என்கிறாள். திருத்தாயார் சொல்லுமாப்போலே சொன்னாளே தன்னைத்தானே; எல்லார்க்கு முள்ளது சொல்லலாயிருக்குமிறே. அவன்றான் "இதொருகண்ணழகே!" என்று[ம்]சொல்லக்கேட்டிருக்குமே!. அத்தலைக்குறுப்பான ஸ்வஸ்வரூபமும் ப்ராப்யாநுகுணமாயிருக்குமிறே. (மென்முலைகள் பொன்னரும்ப) முலைக்கு காடிந்யம் ஸ்வபாவமாயிருக்கச்செய்தேயும், மென்முலை என்கிறது - விரஹஸஹமல்லாதபடியாலே. விரஹஸஹமல்லாத முலைகள் பயலைமைபூக்க.

(வாளாயகண்பனிப்ப மென்முலைகள் பொன்னரும்ப) தன்னைக் கண்டுகொண்டிருக்க வமைந்திருக்கிறதுகாணு மிவள்தனக்கும். இவள்தனக்குமமையும், அவன்றனக்குமமையும். * ஸௌபரீஸுக்ஷி: இறே. [ஆஹ்லாதசீதநேத்ராம்பு:] ஸம்லேஷத்தாலே ஸஞ்ஜாதஹர்ஷப்ரகர்ஷத்தாலே குளிர்ந்த கண்ணநீருந்தானுமாயிருக்கை. [புளகீக்ருதகாத்ரவாந்]த்ரிஸரமும் பஞ்சஸரமுமிட்டாப்போலே. [பரகுணாவிஷ்ட:]

வ்யாக்யாதாவினுடைய ஈடுபாடு (அத்தலையித்யாதிவாக்யத்வயம்.) தாத்பர்யம் (பிறரையித்யாதி.) கண்ணானது ஆயுதமாகிற வழியென்னென்ன வருளிச்செய்கிறார் (அவனித்யாதி.) ஹார்த்தபாவமருளிச்செய்கிறார் (அப்போதித்யாதி.) ஸௌந்தர்யமும் (ஓராளுமித்யாதி.) "குவளையங்கண்ணி" "பனிநெடுங்கண்ணீர்ததும்ப" என்று திருத்தாயார் சொன்னாப்போலே என்று வ்யாக்யாதா அருளிச்செய்கிறார் (திருத்தாயாரித்யாதி.) தாய்சொல்லிற்றைத் தான் சொல்லலாமோவென்ன வருளிச்செய்கிறார்(எல்லார்க்குமித்யாதி.) தன் கண்ணழகு தான கண்டபடியெங்ஙனேயென்ன (அவன்றானித்யாதி.) தான்சொல்லப்போமோ என்றதுக்குப்பரிஹாராநுதாம் (அத்தலைக்கித்யாதி.)

"பனிப்ப" என்றும் "அரும்ப" என்றும் சொன்னத்தால் ஜனித்த அழகினெல்லைநிலத்தை யருளிச்செய்கிறார் (தன்னையித்யாதி.) ஸம்பந்தஸம்பந்திகளுடைய வடிவு வைத்தகண் வாங்கவொண்ணாதிருக்குமென்கைக்கு ப்ரமாண மருளிச்செய்கிறார் (ஸௌபரீத்யாதி. ஆஹ்லாதசீதநேத்ராம்பு: - விச்லேஷக்ஷணத்திலும் விழுகையாலும் புளகீக்ருதகாத்ரவானானென்று விவக்ஷித்து, த்ருஷ்டாந்தமருளிச்செய்கிறார்(த்ரிஸரமுமித்யாதி.)முத்தாத்தார்வடங்கள் குளிர்த்தியால் மயிர்கூச்சுண்டாகப் பண்ணுமென்று திருவுள்ளம்.

நாள்தோறு முன்னைநினைந்து நைகிறவெனக்கு.

உள்ளீடுமுண்டாயிருக்கை, [த்ரஷ்டவ்யஸ்ஸர்வதேஹிபி:] இப்படியிருப்பாரொருவனுளனானால, அவனைக்காண்கையாய்த்து சரீரபரிக்ரஹம் பண்ணினவத்தால் ப்ரயோஜநம். [ஸதா - த்ரஷ்டவ்ய:] இனி ஸதாதர்சநத்துக்கொரு தேசவிசேஷந்தேடிச் சோறுபொதிந்துகொண்டு அறுகாதப்பயணம் போகவேண்டா. அவனுக்குப்பொருளவையிற்பிரிய வேண்டா, பிரிகிறதுதான் பொருளுக்காகவே. "இம்முத்தையும் பொன்னையுங்கொள்" என்று பாரித்துக்காட்டிறுப்போலே யாய்த்து கண்ணநீருமுடம்பில்வைவர்ண்யமுமிருக்கிறபடி ; "ஒண் முத்தும் பைம்பொன்னுமேந்தி" என்னக்கடவதிறே.

(நாளுநாளுமித்யாதி) வரவுதாழ்க்கைக்கு உன்னையொருநாள் நினைத்து மற்றொருநாள் மற்றொன்றை நினைக்கிறேனோ. (நாளுநாளும்) ஒருநாள் நோவுபட்டு ஒருநாள்ஸுகித்திருக்கிறேனோ. (நின்னினைந்து நைவேற்கு) என்னையன்றோ நீயறியாதது, உம்மைநீரறிவீரோ. "நம்மைப்பிரிந்தார்தரித்திருக்கமாட்டார்கள்" என்றிருக்கவேண்டாவோ. உன்னைக் கண்ணுறைப்புறத்து நீயுங்கண்டறியாயோ. (நின்நினைந்துநைவேற்கு) அநுஸந்தியா மடியோற்குமவளோநான். "தேஹமே" என்கிற விது ஆற்றாமையிலே கிடக்கிறது.

மண்ணளந்ததாளாளா) அபேக்ஷையில்லாதார் தலைமேலே வைத்த திருவடிகள் இப்பொன்பூத்தமுலைகளுக்கு அரிதாவதே!.

வைளியவொருவனம்பூடைபோலே கண்ணீராய், இதுக்குஹேதுவான ஹ வஸ்தான்யவம் உள்ளீடாகநாமனை மென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (உள்ளீடித்யாதி). வினைமேல் பிரிவென்றும், பொருள்மேல்பிரிவென்றும் சிலபிரிவுண்டு; அதில், வினைமேல் பிரிவாவது-ப்ரணயிநியைவிட்டுப்போக வேணும்படி வேறொரு கார்யத்தைக்குறித்துப்பிரிகை ; பொருள்மேல்பிரிவாவது - ப்ரணயிநியோட்டை போகத்துக்குறுப்பாக த்ரவ்யார்ஜநம்பண்ணப்போகை ; அவற்றில் வினைமேல் பிரிவில்லை என்னுமதனைக் கீழருளிச்செய்தாராய், பொருள்மேல் பிரிவும்வர ஸம்பாவநையில்லை யென்னுமதனை உபபாதிக்கைக்காக, இரண்டுவ்யமான பிரிவு ப்ரஸக்தியில்லையென்கிறார் (அவனுக்கித்யாதி.) பொருளவையில்-பொருள் வினை யென்று சொல்லப்படுமவையில.

"நாளுநாளும்" என்றத்தை "நினைந்து" என்றத்தோடுகூட்டி தாத்பர்யமருளிச்செய்து, "நைவேற்கு" என்றத்தோடுகூடி தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (ஒருநாளித்யாதி.) "நின்" என்றதுக்குக்கருத்து (என்னையித்யாதி.) "நைவேற்கு" என்று-நைகிறவெமக்கு என்றுய்†, எமக்கு என்கிற பஹுவசநத்தால் தோற்றுகிற கௌரவத்தை யருளிச்செய்கிறார் (உம்மையித்யாதி.) * யாவராஜஸ்ரீகௌரவ மன்றோ, நீ "துணையாளாகாயே" என்று ப்ரார்த்திக்கிறதேயென்ன வருளிச்செய்கிறார் (தேஹீத்யாதி.)

"மண்" என்றபதம்- லக்ஷணயா மநுஷ்யரைச்சொல்லிற்றாய், உட்கருத்தை யருளிச்செய்கிறார (அபேக்ஷயித்யாதி.

† இந்தவாக்யம் யோஜநீயம்.

(ஓர்மண்ணளித்யாதி†) ஓரடியாலே பூமியையளந்த திருவடிகளையுடையவனே. (வரையெடுத்ததோளாளா) *குடந்தையெங்கோவலனிறே. * குன்றமெடுத்தாநிரைகாத்தவனிறே.

(ஓ! மண்ணளந்ததாளாளா ஆரபேக்ஷிக்கத்தான் நீ அன்றெல்லார் தலைமேலும் திருவடிகளை வைத்தது!. ஆர்கண்ணில் கண்ணநீரும் ஆருடம்பின் வைவர்ண்யமும் கண்டுதான் திருவடிகளைக்கொண்டுவந்து வைத்தது!. உன்னைப்பெறாதே விவர்ணமாயிருக்கிற இம்மூலைமேலே திருவடிகளை வைத்தாலாகாதோ!.

(தண்குடந்தைநகராளா) அதுக்குப்பிற்பாடருமிழவாமைக்கு வந்திருக்கிற தன்னேற்றந்தான் பெறலாகாதோ!. (தண்குடந்தைநகராளா) "இன்னமெல்லைநடப்பித்துக்கொள்வாராரேனுமுண்டோ" என்று ப்ரமஹாரமான திருக்குடந்தையிலேவந்து சாய்ந்தபடி.

(வரையெடுத்ததோளாளா) அங்ஙன் "பிற்பாடர்" என்கிற பொதுவன்றிக்கே, விசேஷித்து என்பருவத்திற்பெண்களையுமிடையரையும் ரக்ஷித்தவனன்றோ!. (வரையெடுத்ததோளாளா) பசுக்களும் இடையரும் வர்ஷத்திலே தொலையப்புக, மலையையெடுத்துப் பரிஹரித்தாயைத்து. ஆஸ்ரிதர்க்குப்பணிசெய்த தழும்பாயாய்த்துத் திருமேனியடையக்கிடப்பது; "தழும்பிருந்த" இத்யாதி. "நம்மைச்சிலர் கட்டுண்ணையாவதென், நாம் சிலர்க்குக் கட்டுண்ணையாவதென். இதுபின்னை நாடறி[உம கையாவதென்" என்று, அத்தை மறைக்கப்புக்கான்; ஒருதழும்பாகிலன்றோ உன்னால் மறைக்கலாவது, உன்னுடம்படங்கலும் ஆஸ்ரிதர்க்காகக் காரியம்செய்ததால் வந்த தழும்பன்றோ என்கிறான் [தழும்பிருந்த சார்ங்கநாண் தோய்ந்தவாமங்கை] அழகிய திருக்கையானது, *ஜ்யாகிணகர்க்கசமாய்க்கிடக்கும்; அழகிய திருக்கையானது. ஸ்ரீஸார்ங்கத்தைப்பிடிக்கையால்வந்ததழும்பைச்சுமந்தது; திருவடிகளானவை, ஶகடாஸுரநிரஸநம்பண்ணி அத்தால்வந்த தழும்பைச் சுமந்தது; இனி, *வீங்கோதவண்ணர்விரல் செய்ததென்னென்றால் [பூங்கோதையாளித்யாதி] கிளர்த்தியையுடைத்தான ஓதம்போலே யிருந்துள்ள வடிவையுடையரானவருடைய திருவிரலானது, பிராட்டிக்காகவிறே சிறுக்கனுக்கு விரோதியான ஹிரண்யனைப்பிளந்து பொகட்டது; அப்படிப்பட்டவனுங்கூட, விளைவதறியாதே "இதென்னோ புகுகிறதோ" என்று அஞ்சும்படி ஹிரண்யன் மார்வைப்பிளந்து பொகட்ட தழும்பிருந்த. உன்னையழித்து ஆஸ்ரிதர்க்காகப்பார்த்தநீ.

---

"ஓ!" என்றவ்யாஹ்ருதத்தினபடியை விவரிக்கிறார் (ஆர்த்யாதி.)

உட்கருத்தையருளிச்செய்து, கீழ்ப்படித்தோட்டை ஸமபிவ்யாஹாரதாத்பர்யகதநபூர்வகம் ஶங்கார்யமருளிச்செய்கிறார் (இன்னமித்யாதி.)

வரையெடுத்தமை தோளாலேயாயிருக்க, "தோளாளா" என்று விசேஷிக்கையால், திருமேனியெல்லாம் ஆஸ்ரிதர்க்காகச் செய்தசெயலில் தழும்பேறினமை தோற்றுகையாலே விசேஷித்தாரென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ஆஸ்ரிதர்க்கித்யாதி.) எடுத்தபாசுரத்துக்குவ்யாக்யாநம் பண்ணுவதாகக் கீழ்ப்பாட்டோடு ஸங்கதிகாட்டுகிறார் (நம்மையித்யாதி.)

---

† "ஓர்மண்ணளந்த" என்று நஞ்சீயர்படியில் பாடம்.

மூ.—தாராயதண்டுளவ வண்டுழுதவரைமார்பன்
போரானைகொம்பொசித்த புட்பாகனென்னம்மான்
தேராரும்நெடுவீதித்திருவாலிநகராளும்
காராயனென்னுடைய கனவளையுங்கவர்வானே. ௬.

ப - ரை.— வண்டு - வண்டுகளானவை, தாராய - மாலிகையாகிய, தண்துளபம் - திருத்துழாயிலுள்ள, தேனும் சுண்ணமும் வாஸனையுங் கொண்டு, உழுத - சேருக்கின, வரைமார்பன்-அகன்றதிருமார்பையுடையனும், போர்ஆனை - யுத்தோன்முகமான குவலயாபீடத்தின், கொம்புஒசித்த - தந்தத்தைமுறித்தவனும், புள்பாகன - பெரியதிருவடியை வாஹநமாக உடையனும், என்அம்மான் - எனக்கு ஸ்வாமியானவனும், தேர்ஆரும் - ரதங்களையுடைத்தாய், நெடு - தனக்கும் தன்பரிகாரத்துக்கு மிளைப்பொழுந்தருளப்போருமான, வீதி - திருவீதியையுடைய, திருவாலிநகர்ஆளும்-திருவாலிநகரத்தில் நித்யவாஸம்பண்ணுகிறவனும், காராயன் -ஸ்ரமஹரமான திருமேனியையுடைய ஸ்ரீக்ர்ஷ்ணனுமான ஸர்வேச்வரன், என்னுடைய - தன்னையே நினைந்து நைகையுமடியேனுடைய, கனவளையும் - கையிலிட்டபொன்வளைகளையும், கவர்வானே - அபஹரியாநிற்பனே! என்று தன்னிலே தான் நொந்து படுகிறாள். ... ... ... ... ... ... (௬)

(என்றனக்கிந்யாதி) உன்னையன்றித் துணையில்லா வெனக்குத் துணையாகாயே. ... ... ... ... ... ரு.

ஆறும்பாட்டு. (நாராயவித்யாதி) துளவத்தாரில் தாதும்சுண்ணமும் தேனுலே சேறாய் வண்டுகள்புக்கு உழக்கியுழுத வரைமார்வன்.

(என்றனக்கோர் துணையாளனாகாயே) அந்நொய்யமோவர்யநதிரியைப் பொகட்டு,என்னூற்ருமையிலே பாதியைச்சுமக்கவல்லையே!. (துணையாளனாகாயே) என்றது - ஆகவேணுமென்றபடி. ... ரு.

ஆறும்பாட்டு. — (தாராயவித்யாதி, வரைமார்பன்) தனக்கஸாதாரணமான திருத்துழாய்மாலையானது மடைவெள்ளமிட்டுச் சேறாயாய்த் திருந் திருமார்விருப்பது. திருமார்விலசாத்தின திருத்துழாய்மாலையில் தேனும் சுண்ணமும் பரிமளமும் புறப்பட்டுத் திருமார்வடங்கலும் வண்டலிட்டு வண்டுகளுழுது சேறுசெய்து கிடக்குமாய்த்து. இனி இவர் பொன்னரும்பின முலைகளைக் கொண்டுவந்து நடுகைக்கு நல்லவளவாய்த்து ; இளமுலைகளைக் கொண்டுபோய் நடுமத்தனை.

அந்நொய்ய - அந்தநொய்ப்பமான, தன்னோயைப்பார்த்தால் மலை ஸூக்ஷ்மமென்னலாமென்று கருத்து. பாதியென்றது - "துணை" என்றதைப்பற்ற. ... ரு.

ஆறும்பாட்டு.— (தாரித்யாதி.) கீழ்ப்பாட்டில் - "துணையாளனாகாயே" என்று முன்னிலையாகச் சொல்லாநிற்கச்செய்தேயும், அது உருவுவெளிப்பாடு மாத்ரமாகையாலே கைவளைகழலக்கண்டபடியாலே, முன்னிருந்தவன்கழற்றிக்கொண்டு மறைந்தானென்று தன்னிலே தான்நொந்து படுகிறாளென்று ஸங்கதி.

"தண்டுளவவண்டு" என்னவமைந்திருக்க, "தாராய" என்றதாலே - "மதுவிரிதுழாய்முடி" என்னுங்கிருபகமாயிருக்குமென்றருளிச்செய்கிறார் (தனக்கித்யாதி.) சேறுகைக்கு மண்வேண்டாவோவென்னவருளிச்செய்கிறார் (திருமார்விலித்யாதி.)

(போரானையித்யாதி) யுத்தோந்முகமான குவலயாபீடத்தின் கொம்பை முறித்த மஹாபலவான், என்ஸ்வாமி. (தேராருமித்யாதி) தேரும் பரிகரமும்வரும்போது நெருக்குப்படாமல் வரலாம்படியான பெரிய திருவீதியையுடைய திருவாலிநகரை ஆளும் பெரிய க்ருஷ்ணன்[று என்னுடைய பொன்வளையும் கொள்வானோ. கனம் – பொன். ௫.

---

ஆசையில்லாதாரே வேணும்போலேகாணும் மார்வுக்கு ; எப்போது மொக்க அணைக்கலாம்படியாய்த்து அம்மார்விருப்பது.

(போரானைகொம்பொசித்த) யுத்தோந்முகமான குவலயாபீடத்தின் கொம்பை அநாயாஸேந முறித்தவன் வருமிடத்தில் வழியில் ப்ரதிபந்தகந்தானுண்டோ. (புட்பாகன்) பெரியதிருவடியை வாஹநமாகவுடையவன், விரோதிநிரஸந ஸ்வபாவனுமாய், தான் வரும்போதே தூரத்திலேகண்டு விடாய்தீரலாம்படியான பரிகரத்தையுடையவன். (என்னம்மான்) சோளேந்த்ரஸிம்ஹனிருப்பைக் காட்டியாய்த்து இவளை அநந்யார்ஹையாக்கிற்று.

(தேராரும்நெடுவீதி) தனக்கும் தன் பரிகரத்துக்கும் இணைந்து வருகைக்குவேண்டும் பரப்புப்போருமாய்த்துத் திருவீதி. * தன்னை ராயிரம் பிள்ளைகளோடே வரலாமாய்த்து. (காராயன்) ஶ்யாமளமான வடிவைக்காட்டி பஞ்சலக்ஷம்குடியிற் பெண்கள் வளை கவர்ந்தவன், என் கையில் வளைபெறாவிடில் உண்டதுருக்காட்டானாயிராநின்றான். ஸமகாலத்தில் பிறவாதார் வளையும் கொள்ளவேணுமோ. இவனுக்கு ஒருராக வளைகொண்டதுவும் உண்டதுருக்காட்டுகிறதில்லைகாணும் இவள் கையில் வளை சேஷிக்கில் !. ... ... ... ௬.

---

இளமுலைநடுமத்தனையானால் நடலாகாதோ, "வளை கவர்வானோ" என்று நோவுபட விடுவானென்னென்னவருளிச்செய்கிறார் (ஆசையித்யாதி;) இதுவாடு-ம. ஆசையுடையனானாலாகாதோ, ஆசையில்லாதாரேவேணுமோ என்று த்வநி ; யத்வா, ஸம்ஶ்லேஷிக்கவேணு மென்னுமாசையில்லாதவண்டேயாகவேணுமோ என்றும் த்வநியாகவுமாம்.

"புட்பாகன்" என்றபதஸமபிவ்யாஹாரதாத்பர்யம் (சோளேந்த்ரேத்யாதி;) ஸ்ரீஶத்ருஞ்ஜயன் என்றாப்போலே, சோளேந்த்ரஸிம்ஹனென்று - நம்பெருமாளானைக்குத் திருநாமம். "ஜஜேந மஹதாயாதும்" என்று-அயோத்யாஜநங்களை யீடுபடுத்தினாப்போலே, கோயில் பெருமாளும் அரங்கன் திருமுற்றத்தடியாரை யீடுபடுத்துவர்; அப்படியே இவளும் பெரியதிருவடிமேலிருப்பிலீடுபட்டாளென்றுகருத்து.

"ஆயன்" என்றபதத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் ( தன்னைரித்யாதி. ) "வளையும்" என்ற உகாரதாத்பர்யம் (ஸமகாலத்திலித்யாதி.) வ்யாக்யாதாவினீடுபாடு (இவனுக்கித்யாதி.) ... ... ... ... ... ௬.

ஏழாம்பாட்டு.—(சொண்டித்யாதி.) கீழ்ப்பாட்டிலே "கனவளையும் கவர்வானோ" என்று தன்னிலேநொந்தவாறே, கழற்றிக்கொண்டுபோனவளையைக் குலுக்கிக்கொண்டு முன்னேதோற்ற, அவனைப்பார்த்து, என் வளைக்கு நான் கடவளல்லேனோ என்று பறிக்கத்துடங்குகிறாளென்று ஸங்கதி.

மூ.—கொண்டரவத்திரையுலவுகுரைகடல்மேல்குலவரைபோல்
பண்டரவினணைக்கிடந்து பாரளந்தபண்பாளா
வண்டமரும் வளர்பொழில்சூழ்வயலாலிமைந்தா என்
கண்டுயில் நீகொண்டாய்க்கென்கனவளையுங்கடவேனோ. ௭.

ப - ரை.—பண்டு - மஹாபலிமுதலானவர்களால் இப்பூமிக்கு அநர்த்தமுண்டாவதற்கு முன்னே, அரவம்திரைஉலவு - கோஷத்தையும் அலைகளையுமுடைய, குரைகடல்மேல் - பரந்ததிருப்பாற்கடலில், அரவினணை-திருவநந்தாழ்வான்மேலே, குலவரைபோல்-ஓர்பெரியநீலபர்வதம் சாய்ந்திருந்தாப்போல், கொண்டுகிடந்து-இத்தேசம் ஆஸ்ரிதரக்ஷணத்துக்கு ஏகாந்தஸ்தலமென்று திருவுள்ளத்திற்கொண்டு கண்வளர்ந்தருளி, பின்பு அம்மஹாபலியால் அநர்த்தம் விளைந்தவாறே, பாரளந்த பண்பாளா - பூமியை அளந்து அவனுண்டவுலகைமீட்டு இந்திரனுக்குக்கொடுத்த நீர்மையையுடையவனே, வண்டு அமரும் வளர்பொழில்சூழ் - வண்டுகள்படிந்து ஓங்கினமரச்சோலைசூழ்ந்த, வயல் - கழனியையுடைய, ஆலி-திருவாலியிலிருக்கிற, மைந்தா - யுவாவானவனே, என்கண்துயில் - என்தூக்கத்தை, நீகொண்டாய்க்கு-முற்றுமபஹரித்தவனுக்கு, என் கனவளையும்-என்கையிலுள்ளபொன்வளையும், கடவேனோ - இழக்கக்கடவேனோ! என்று அவன்விரும்பப் புக்கவாறே என்னதென்று ஒருதலை தானும்பற்றுகிறாள். ... ... ... ... (௭)

ஏழாம்பாட்டு. (கொண்டரவித்யாதி) ஆரவாரித்துக்கொண்டு திரைகள் ஸஞ்சரிக்கிற பரந்த கடல். குரை-பரப்பு. (குலவரையித்யாதி) பெரியவரைபோலேயிருக்கிற திருவநந்தாழ்வான்மேலே பண்டு கண்வளர்ந்து பூமியையளந்த ஸ்வபாவத்தையுடையவனே. (வண்டித்யாதி) வண்டுகளாலே மொய்த்து வளரப்பட்டபொழிலாலே சூழப்பட்ட வயலாலிமைந்தா!,

ஏழாம்பாட்டு.— (கொண்டு) ரக்ஷணத்துக்குப்பாங்காய் ஆர்த்தருடைய கூக்குரல் கேட்கும் தேசமிதுவென்று திருவுள்ளத்திலே கொண்டு. இவ்விடம் ஆஸ்ரிதரக்ஷணம் பண்ணுகைக்கு ஏகாந்தமான ஸ்தலமென்று திருவுள்ளத்திலே கொண்டு. ஆரவாரத்தையுடைத்தாய்-கோஷியாநிற்பதாய், திரைகளானவை ஸஞ்சரியாநிற்பதாய், பரப்பையுடைத்தான திருப்பாற்கடலிலே ஒருகுலகிரிசாய்ந்தாப்போலே யாய்த்துத் திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிறபடி. குரையென்று - பரப்புக்குப்பேர். அக்கடல் பாழ்த்திரும்படி ஒருகுலகிரிசாய்ந்தாப்போலே. (பண்டு)மஹாபலிபோல்வாரால் பூமிநோவுபடுவதற்கு முன்பாய்த்து அப்படுக்கையில் கண்ணுறங்குவது. (பாரளந்த பண்பாளா) படுக்கையை விட்டுவந்து இத்தையடைய அளந்து கொண்டானாய்த்து. ஆக, மஹாபலியாலே அபஹ்ருதமான பூமியைமீட்டு இந்திரனுக்குக்கொடுத்த நீர்மையையுடையவனே.

(வண்டமருமித்யாதி) அந்நீர்மைக்குப் பிற்பாடரானாருமிழவாமைக்காகவாய்த்துத் திருவாலியிலே வந்துநிற்கிறது. பரிமளம்படிந்தாப்போலேவண்டுகள்படிந்து மதுபானம்பண்ணுகின்றுள்ளஓங்கினபொழிலாலே சூழப்பட்டவயலையுடைத்தான திருவாலியிலே நிற்கிறவனே.

விவரணம் (இவ்விடமித்யாதி.) "அரவம்" என்றதினர்த்தம் (ஆரவாரத்தையென்றது.)

மூ.—குயிலாலும் வளர்பொழில்சூழ்தண்குடந்தைக்குடமாடி!
துயிலாதகண்ணிணையேன் நின்னினைந்து துயர்வேனோ;
முயலாலுமிளமதிக்கேவளையிழந்தேற்கிதுநடுவே
வயலாலிமணவாளா கொள்வாயோமணிநிறமே. ௮.

ப - ரை.—குயில ஆலும் - மதுவுண்டு களித்துக் குயில்கள் ஆலாநின்றுள்ள, வளர்பொழில் சூழ் - ஓங்கின சோலைசூழ்ந்த, தண்குடந்தை - குளிர்ந்த திருக்குடந்தையில்வர்த்தியாநிற்கிற, குடமாடி - குடக்கூத்தாடினவனே, துயிலாத - உறக்கங்கொள்ளாத, கண்ணிணையேன் - கண்ணிணையுடைய அடியேன், நின்னினைந்து - உன்னையே நினைத்துக்கொண்டு, துயர்வேனோ - துக்கிக்கக்கடவேனோ?; முயலாலும் இளமதிக்கே - தன்னுடம்பில்துள்ளாநிற்கிறமுயலைப்போக்கமாட்டாமலும் பருவம் நிரம்பாமலுமிருக்கும் சந்த்ரனுக்கே, வளையிழந்தேற்கு - வளைகளையிழந்தவடியேனுக்கு, வயலாலிமணவாளா - கழனிசூழ்ந்ததிருவாலியிலுள்ள ஸ்வாமியே, இதுநடுவே - இப்பாதகவர்க்கத்தினடுவே, நீயும்வந்து, மணிநிறமேகொள்வாயோ - அழகியநிறத்தையும் கைக்கொண்டு அபஹரிக்கப்பண்ணுவாயோ! என்கிறாள். (௮)

என்காண்டுமிலைக் கொண்டவுனக்கு என்பொன்வளையும் கடவேனோ. எ.

திருப்பாற்கடலில் நின்றும் ஸ்ரீவாமநனாயவதரித்து ஸர்வேச்வரனையகப்படுத்திக்கொண்டாப்போலேயாய்த்து திருவாலியிலேவந்துநின்று தன்யௌவநத்தைக்காட்டி யிவரையகப்படுத்தினபடி. (என்காண்டுமிலைக் கொண்டாய்க்கு) திருவாலியிலே உத்தேச்யவஸ்து ஸுலபமாய்த்தென்றவாறே, கண்ணுறக்கம் குடிபோய்த்தாய்த்து. (என்பொன்வளையும்கடவேனோ) என்னுடம்பிலுள்ளது வேறுமாமிலே கொள்ளுகிறாய், நான்பொன்னிட்டுக் கொண்ட வளையிலென்ன ப்ராப்தியுண்டு. அவனும் பொன்கொடுத்திறே கொண்டுபோகிறது. இவனுக்கும் இவளுடம்பிலுள்ளது கொள்ளும்போது இவள் (க) மேலெழுத்திடவேண்டாகாணும். ஸ்வாபாவிகமானத்தோடு ஔபாதிகமானத்தோடு வாசியின்றிக்கே, என்னதென்னுமித்தனையோ நீகொள்ளுகைக்கு வேண்டுவது. அவனித்தை விரும்பப்புக்கவாறே, என்னது என்று ஒருதலை தானும் பற்றுகிறாள். ... ... ... ... எ.

உடம்பிலுள்ளது - நித்ரை. கடவனால்லேனோ எனது பாவதாரியும் விவக்ஷித[ரூய] தருளிச்செய்கிறார் (நானித்யாதி.) ஸ்த்ரீயுநமான பொன்னிட்டுக்கொண்டவளையை அவன் கொள்ளக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (அவனுமித்யாதி.) பொன்கொடுத்து - வைவர்ண்யத்தைக்கொடுத்து. ஆகில், இவளிசைவு வேண்டாவோவென்ன (இவனுக்குமித்யாதி;) ப்ராப்தனுகையால் அவன் பொன்னிட்டே அவள் கைவளையைக்கொண்டானென்று கருத்து. அவனப்படி கைக்கொண்டால இவள் என்னது என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (அவனித்யாதி.) எ.

(க) மேலெழுத்திடுகை - ஸம்மதிக்கையென்றபடி. "மேலெழுத்து வேண்டாகாணும்" என்று சில வ்யாக்யாந ஸ்ரீகோசங்களில்பாடம்; அநுக்கநுகுணமாக, "மேலெழுத்த வளையைக் கொள்ளவேண்டுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (இவனுக்குமித்யாதி வாக்யத்வயத்தாலே.)மேலெழுத்தது வேண்டாகாணுமென்றது-ஸாமாந்யமானதாகாது, ஸௌந்தர்யமானவளையாகவேணுமென்றபடி" என்று அரும்பதார்த்தம்.

எட்டாம்பாட்டு. (குயிலாலுமித்யாதி) குயில்களானவை சோலையில் மலங்களையாஜித்து ஆலிக்கிற வளர்பொழிலாலே சூழப்பட்ட ப்ரமஹாமான திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிற குடக்கூத்தனே. (துயிலாதவித்யாதி) கண்ணுறக்கமற்று உன்னையாசைப்பட்டு ஈடுபடக்கக்கடவேனோ.

---

எட்டாம்பாட்டு.— (குயிலாலுமித்யாதி) அவ்வூரில்குயில்கள் ஸஙக்ராமங்கீத்தம் பண்ணாநிற்குமாய்த்து. அவ்வூரில் குயில்களானவைமயூபாநம்பண்ணிக் களித்தாலியாநிற்குமாய்த்து ; இவ்வூரில் குயில்களொன்றுமிறே உருவிக்கிடக்கிறது. இடைப்பெண்களுடைய க்ஷீராவாம்படி மன்றிலே குடக்கூத்தாடி தன்னழகை ஸர்வஸ்வதாநம்பண்ணினவன் பிற்பாடரிழவாமைக்காகத் திருக்குடந்தையிலே ஸஙவமூருறு கொண்டவாறே, கண்ணுறக்கம் குடிபோய்த்தாய்த்து. அவன் ப்ரத்யாஸந்நருறுமென்றவாறே உறக்கம்குடிபோய்த்தாய்த்திவளுக்கு. உறங்காமைக்கு † இரண்டிலக்ஷ்மணர்களைப்போலேயாய்த்துக் கண்களிரண்டும். இளையபெருமாள்பிறந்த முஹூர்த்தத்திலேயாய்த்து இவள்கண்களும் பிறந்தது. "ஜஹௌ" என்று ஒருநாளாக விடவேண்டாவாய்த்து, ஆஜ்ஞாரக்ஷிஷ்டியுமுறங்காதபடி பண்ணவேணுமோ. இக்கண்ணுக்கிலக்காகாவிட்டால் ※உட்கண்ணுக்கிலக்காகவேணுமோ. "நெஞ்சென்னுமுட்கண்" என்னக்கடவதிறே. அதுக்கவொட்டாவிட்டால் அகவாய் பெரியதிருநாளாய்ச் செல்லவேணுமோ. (துயர்வேறு) மறந்துபிழைத்தாலோ நாங்கள்.

---

எட்டாம்பாட்டு.— (குயிலித்யாதி.) இப்பாட்டில் "என்கணவனையும் கடவேன்" என்று தாமொருதலைபற்றிமன்றாடாநிற்குமளவிலே வந்தோதயமாக, அவனிருந்த உத்ஸவகுழாயிலியவே கையவனைக்கண்டுயிற, அவ்வளவிலும் அவனைக்கொண்டுபோகாமல் முன்னிலையாய்த் தோற்றின்றபடியைக்கண்டு நிறையழக்கிறவளுமாய், அவனைப்பார்த்து நீகிறக்கேடாக்கிக்கொள்வாயோ என்று சொல்லுகிறுமொன்று லைப்பர்.

அவ்வூரில் - திருக்குடந்தையிலென்றபடி. ஹேதுபூர்வகம் விவரிக்கிறுர் (அவ்வூரிலித்யாதி,) உட்கருத்து (இவ்வூரிலித்யாதி.) துயிலாதநான் என்னவமைந்திருக்கவும், கண்ணிணைகள்துயிலாததென்று விசேஷித்து, அதுக்குஸஂக்ஷேபஜ்ஞ தாத்பர்யமருளிச்செய்கிறுர் (உறங்காமைக்கித்யாதி;) காண்கையிலாசை கண்களுக்கு ஸ்வாதந்த்ர்யேண பிறந்ததென்று கருத்து. இளையபெருமாள் பிறந்தமுஹூர்த்தத்திலே பிறந்தனவாகில், பிறந்தநாள்தொடங்கி உறங்காதவரன்றிக்கே காட்டுக்கெழுந்தருளினபோதன்றோ நித்ரையின்றிக்கே யிருந்ததென்ன; ஆம், இங்குவிசேஷமுண்டென்று விசேஷத்தையருளிச்செய்கிறுர் (ஜஹாவித்யாதி.) "நினைந்து" என்றபதத்துக்குத்தாத்பர்யம் (ஆஜ்ஞரேத்யாதிவாக்யசதுஷ்டயமும்.) பிழைத்தாலோ-பிழைத்தாலாகாதோவென்றபடி.

*இருக்கரைப்போலேயாய்த்து" என்று சில ஸ்ரீகோஶங்கள்.

மூ:—நிலையாளாநின்வணங்க † வேண்டாயேயாகிலு மென்
முலையாளவொருநாளுன்னகலத்தாலாளாயே
சிலையாளா மரமெய்ததிறலாளா திருமெய்ய
மலையாளா நீயாளவளையாளமாட்டோமே. ௬.

ப - ரை.—சிலைஆளா - ஸ்ரீகோதண்டக்கையனே,மரம்எய்த்திறல்ஆளா - மராமரம் வேரோடுவிழக் கணைவிடவல்லவனே,திருமெய்யமலைஆளா- திருமெய்யத்தில் கண்வளருமவனே,நிலையாளாநின்வணங்க-நான்அநந்யப்ரயோஜனையா யுன்னை ஆஶ்ரயிக்க,வேண்டாயேஆயினும்-வேண்டேனென்றிருந்தாயேயாகிலும்,என்முலையாள-என்முலைகளாட்செய்யும்படி, ஒருநாள்-ஒருநாளாகிலும், உன்அகலத்தால் ஆளாய்-உன் அகன்றமார்பா லணைத்து என்னைநிர்வஹிக்கவேணும்; நீஆள - நீபரிக்ரஹித்தபின், வளையாளமாட்டோமே - வளைகளைநிர்வஹிக்கஶக்திதேடமாட்டோமே. (௬)

( முயலாலுமித்யாதி ) முசலகவாயிருக்கிற இளம்பிறைக்கு வளையிழந்திருக்க மதிகேடணுயிறே யிவள்வளையைவாங்கிற்று. (இதனடுவே) இவ்வாயகவர்மத்தின் நடுவே. (வயலாலிமணவாளா) ஆலிங்நகரியிலே நீவந்திருக்கிறது என்னுடைய அழகிய நிறத்தைக் கொள்கைக்கோ. ... ... ... ... ... அ.

(முயலாலுமித்யாதி) நீ கைதொடணுய் நலியவேண்டும்படியோ என் தசையிருக்கிறபடி !. தன்கறைகழுவவும் மாட்டாதே தன்குறை பரிஹரிக்கவும்மாட்டாத சந்த்ரனுக்கு வளையிழந்தன்றோ நானிருக்கிறது. தன்னுடம்பிலே துள்ளுகிற முயலைப்போக்கவும் மாட்டாதே, பருவம்நிரம்பாதே யிருக்கிறவனுக்கு வளையிழந்தேற்கு. (இதுநடுவே யித்யாதி) விஶாகியையிட்டு நலிகைய்ன்றிக்கே, நீரும்தூசியேறப்புக்கீரோ ;—போரிலே த்வந்த்வயுத்தம்பண்ணாநிற்கச்செய்தே நடுவே வந்து பொருவாரைப்போலே. விடுநகமும் சம்மட்டியுமிட்டு நலியாநிற்க "அதுபோராது" என்று உடையவன் தானே நலியுமாப்போலே, விஶாகியையிட்டு நலிகைதவிர்ந்து நீதானே கைதொடணுய் நலியப்பார்த்தாயோ. ( கொள்வாயோ மணிநிறமே ) அவன் கூடவிருந்தபோது, "இதொருநிறமே !" என்று வாய்புலத்தக்கேட்டிருக்குமே; அல்லது, தன்வடிவைத் தானே ஶ்லாகிக்கிறாளன்றே. ... அ.

"இளமதிக்கே" என்கிற அவயாரணதாத்பர்யமருளிச்செய்கிறார் (நீயித்யாதி.) கைதொடணுய் - ஸஹாயமாய். * மதிக்கு விசேஷணமிட்டத்தால் ஸித்தவர்யமருளிச்செய்கிறார் (தன்னித்யாதி.) வாக்யார்யமருளிச்செய்கிறார் (தன்னுடம்பிலே யித்யாதி.) முயலை - ஶஶத்தை. விஶாகி என்றது-சந்த்ரனை. கீழ்வாக்யவிவரணம் (போரிலேயித்யாதி.) விடுநகம் - விரல்கிட்டி. ... ... ... அ.

† "வேண்டாயேயாயினும்" என்று சில ஸ்ரீகோஶங்கள்.

ஒன்பதாம்பாட்டு. (நிலையித்யாதி) ஆத்மாநுமாக உன்திருவடிக ளிலே கைங்கர்யம்பண்ணவாய்த்து இத்தை வகுத்தது ; அது திருவு ள்ளத்தாலே வேண்டா என்றிருந்தாயாகிலும்.(என்முலையாளவித்யாதி) என்முலையானது ஆட்செய்ய,

ஒன்பதாம்பாட்டு.— ( நிலையாளாவித்யாதி ) ஸத்தையுள்ளதனையு மவன்றிருவடிகளிலே வணங்கி வர்த்திக்குமிதுவேயாய்த்து ஸ்வரூபத் தோடு சேர்ந்தசெயலாவது. (நின்னித்யாதி) அதப்படியேயானாலும், "இவனுமிப்பேற்றைப்பெறுவான்" என்று அவன் நினைக்கிலிறே அது ஸித்திப்பது.( நிலையாளா நின்வணங்க † வேண்டாயேயாகிலும்);கிடை க்கில் பெறவேண்டியிருப்பது இதுகாணும். கடக்கநின்று ஒரு ப்ர யோஜநங்களைக்கொண்டுபோகையன்றிக்கே, கிட்டநின்று அவன்றிருவ டிகளிலே நித்யகைங்கர்யம்பண்ணவாய்த்து ஆசைப்படுவது. ஸ்ராஹ் மணர் பிச்சேறினாலும் ஓத்துச்சொல்லுமாப்போலே, தலைமகளான ஸமயத்திலும் சேஷத்வாநுரூப வ்ருத்தியையே யாசைப்படுகிறாளிறே. (நிலையாளாநின்வணங்க) என்றத்தாலே - ப்ராப்யநிஷ்கர்ஷம் பண்ணி ற்று ; ( வேண்டாயேயாகிலும் ) என்கையாலே – ப்ராபகநிஷ்கர்ஷம் பண்ணிற்று. அவன்வேண்டியிராதவன்று இப்பேறு கிடையாதிறே. இது நமக்கு உபேக்ஷாவிஷயம் – வேம்பென்றிருந்தாயேயாகிலும். ( என்முலையாள ) நான் ஸத்தைகொண்டு நிர்வஹித்தேனும்படியாக.

ஒன்பதாம்பாட்டு.— (நிலையாளாவித்யாதி.) கீழ்ப்பாட்டில் - "கொள்வாயோ மணிநிறமே" என்னச்செய்தேயும், அவனிவளுக்கு முன்னிலையாய்த் தோற்றின மாத்ரமாகையாலே ஒருபடியேதோற்றிக்கொண்டு நிற்க, அது முன்னிலையாகத் தோற்றின மாத்ரமென்றறியாதே, அவன்தானே தன்னை வேண்டாதிருக்கிறானாகக் கொண்டு தான் திருமுலைத்தடங்கள் அணைக்கையிலே கணிசிக்க, செய்வதறியாதே அவனைக்கலவியிரக்கிறாளென்று ஸங்கதி.

நிலைநின்ற ஆளாய்க்கொண்டு நின்னைவணங்கி நித்யகைங்கர்யம்பண்ண உன க்கு வேண்டா விட்டாலும் என்ற ஸ்வார்த்தமாய், தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஸத்தையித்யாதி.) கைங்கர்யத்தைவேண்டுமவர் தாமாயிருக்க, அவனை " வேண் டாயேயாகிலும்" என்கிற தென்னென்ன வருளிச்செய்கிறார் ( அதுவித்யாதி. ) "ஆகிலும்" என்றதுக்குத் தாத்பர்யம் (கிடைக்கிலித்யாதி;) நிலையாளாய் வணங்கு கையே பரமபுருஷார்த்தம், அது கிடையாமையால் "அகலத்தால் - ஒருநாள் - ஆளா ய்"என்கிறாளென்று கருத்து. விவரணம் (கடக்கவித்யாதி.)ஒருப்ரயோஜநமென்று- ஸ்வார்த்தமான காதாசித்க ஸம்ஸ்லேஷமென்றபடி. நாயிகையாயிருக்குமிவளுக்கு ஸம்ஸ்லேஷத்தை ப்ரார்த்திக்கையே புருஷார்த்தமாயித்தனைபோக்கி, சேஷவ்ருத்தி யையபேக்ஷிக்கக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (ஸ்ராஹ்மணரித்யாதி.) ப்ரா ஸங்கிகமாக ப்ரமேயஸிக்ஷைசெய்தருளி, வேண்டாயாகிலும் என்னுதே "வேண் டாயே" என்கிற ஏவகாரத்துக்குக் கருத்தருளிச்செய்கிறார் (இதுநமக்கித்யாதி.) வேம்பென்றது - தாத்பர்யார்த்தம். அதாவது - த்யாஜ்யமென்றபடி.

† "வேண்டாயேயாயினும்" என்று சில ஸ்ரீகோஸங்கள்.

உன்திருமார்விலே அவற்றை யடிமைகொள்ளாயாகில். (சிலையாளா) ஸ்ரீஸாரங்கத்தையடக்கி யாளுகிறவனே. (மரமித்யாதி) மராமரம் ஏழையுமெய்த பெருமிடுக்கனே.

---

“கொங்கைகிளர்ந்து குமைத்து” என்று-க்ஷாமகாலத்தில் ப்ரஜைகள் “சோறு, சோறு” என்று அலைக்குமாப்போலே, இம்முலைகளுக்காற்ற மாட்டாதே நோவுபடுமது தவிர்ந்து என்னுடைய ஸ்த்ரீத்வங்கொண்டு நிர்வஹித்தேனும்படி. (என்முலையாள) மத்தகஜத்தைநக்காட்டி யாள் வாரைப்போலே என்முலையை நான் நிர்வஹிக்கைக்காக. நமக்கபே க்ஷையின்றிக்கே யிருக்கச்செய்தே உன்ப்ரயோஜநத்துக்காக நம்மை யிப்படிசெய்யச்சொன்னாலதுசெய்யப்போமோவென்ன (ஒருநாள்) நித் யமாய்வருமதுதவிருகிறது; ஒருநாள் பிறருகந்தவனகாலிலே பரிமாறி னாலாகாதோ.(ஒருநாள்) பலநாள்வேணுமென்றிருக்கவேண்டா, ஒருநா ளாகிலுமமையும். அவ்வொருநாள் என்னெஞ்சிலிலையாகில் செய்ய ப்போமோ வென்ன (உன்னகலத்தாலாளாயே) உன்னெஞ்சை நீயுகந் தார்பக்கலிலேவைத்து உடம்பைக்கொண்டணையவமையும்.

நெஞ்சை நினைத்தார்க்குவைப்பது, வேறுமார்வாலெங்கிலணைவ வது, இப்படிதான் செய்யவேண்டுகிறதென், வேண்டியிராதவிஷயத் திலே யொருநாள்தான் செய்யவேண்டுகிற தென்னென்ன (சிலையாளா) என் ஆர்த்தத்வநிகேளாமைக்காக.“க்ஷத்ரியைர்தார்யதே” என்கிறபடியே – ஆர்த்தத்வநிகேளாமைக்கன்றோ நீர்விற்பிடித்திருக்கிறன்று, க்கிறது. நாம் விற்கொண்டெங்கே காரியங்கொள்ளக்கண்டி விருக்கிற தென்ன (மரமெய்ததிறலாளா) உன்னைவிச்வஸியாதாக்கும் மஹா வேந்திக்காரியம் செய்யுமவனன்றோ; உன்னை ஆச்ரயித்த மஹாராஜ ரார்த்தி போக்குகைக்காக மராமரங்களையெய்து மஹாவேந்திக்கொடுத் திலையோ.

---

கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் (கொங்கையித்யாதி.) மேலுக்கவதாரிகை (நமக்கித்யாதி.)

(உபேக்ஷாவிஷயம்) என்றத்தைப்பற்ற - “ஒருநாள்” என்றதுக்குத்தாத்பர்ய மருளிச்செய்து, (வேம்பு) என்ற தாத்பர்யாநுகுணமாக, “ஒருநாள்” என்றதுக்கு-உக்திப்ரத்யுக்திரூபேண வருளிச்செய்கிறார் (வேண்டியித்யாதி.) வேண்டியிராத விஷயத்தில் - வேம்பான விஷயத்தில், ஒருநாள்தானென்றது - ஒருநாளாகிலு மென்றபடி.

ஒருநாளாகிலுமமையு மென்றது - உனக்கு வேம்பானாலும் வேப்பங்குடிநீர் போலே ஸ்வீகரிக்கலாமென்றபடி. இத்தால் - உனக்குக்கைத்யம், எனக்கு இனித் தானத்தைச்செய்யவேணுமென்று ப்ரார்திக்கிறாளென்றதாய்த்து, பராங்முகமாக வாகிலும் செய்யவேணும் என்னும் நினைவுவேண்டாவோ என்னும் சங்கையையநு வதித்து, “அகலத்தால்” என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவ்வொரு நாளித்யாதி.)

அநுவாதபூர்வகம் மேலுக்கவதாரிகை (நெஞ்சையித்யாதி.) கீழ்ப்பண்ணின ப்ரச்நத்துக்குத்தரம் (ஆர்த்தத்வநிகேளாமைக்காகவென்றது.) இவ்வர்த்தம் இந்த பக்ஷத்தில் ஸலிக்குமோ வென்ன வருளிச்செய்கிறார் (க்ஷத்ரியைரித்யாதி.)

(திருமெய்யமலையாளா) திருமெய்யத்தில் நீசாய்ந்தருளிற்று எங்களுடைய ரக்ஷணீயமாகவன்றோ. அம்மங்கியம்மாளுடைய வரமஷுஸையிலே, நஞ்ஜீயரறியவெழுந்தருளினவர், அவர்படுகிறக்லேசத்தைக்கண்டு, "இங்குத்தை ஆசார்யஸேவையும் ஸமவத்ஸஹணங்களோடே போதுபோக்கினபடியுமெல்லாங்கிடக்க, அல்லாதாரைப்போலே இப்படிபடவேண்டுவதே!" என்ன; "'நீயாளவளையாளமாட்டோமே' என்றன்றோ-ஸமவத்பரிக்ரஹமானால் க்லேசப்பட்டே போமித்தனைகாணும்" என்றார்.

பின்னை நீரும் அவ்வவதாரத்திலே வந்துதவிற்றிலீரேயென்ன(திருமெய்யமலையாளா) அவ்விழவு தீர்க்கைக்காகவன்றோ திருமெய்யத்திலே வந்து சாய்ந்தருளிற்று. இருந்தபடியால் உன்பரிக்ரஹமாகையும் கையில்வளை தொங்குகையு மென்றொரு பொருளுண்டோ. இப்போது தன்னுற்றாமையாலே யொன்றைச்சொல்லுகிறாளத்தனைபோக்கி ஒருக்காலும் கையில்வளை தொங்குகைக்கு விரகில்லைகாணும். கிட்டினால் தானே ஹர்ஷத்தாலே பூரித்து நெரிந்திற்றுப்போம்; பிரிந்தாலில் தானே கழன்றுபோம்.உன்னுடையபரிக்ரஹமாய்எங்களுடைய ஸ்த்ரீத்வங்கொண்டு நோக்குகையென்றொருபொருளுண்டோ.

அம்மங்கியம்மாளுடைய வரமஷுஸையிலே நஞ்ஜீயரறியவெழுந்தருளினவர், அவர்படுகிற க்லேசங்களைக்கண்டு, "இங்குத்தை ஆசார்யஸேவைகளும் ஸமவத்ஸஹணங்களைக்கொண்டு போதுபோக்கினபடிகளுமெல்லாம் கிடக்க அல்லாதாரைப்போலே யிப்படி படவேண்டுவதே!" என்ன; "'நீயாள வளையாளமாட்டோமே' என்றன்றோ-ஸமவத்பரிக்ரஹமானால் க்லேசப்பட்டேபோமித்தனைகாணும்" என்றார்.

"நீயாள" இத்யாதிக்குக்கருத்து (இருந்தபடியாலித்யாதி.) இருந்தபடியாலென்றது-நீ மெய்யமலையாளனாயவைத்தும் என்முலையாளவொருநாளாளாதேயிருந்தபடியாலென்றபடி. நீயென்னையாளவும் நானவனையாளவும் இருவரும் மாட்டோமே யென்று ஸம்போதார்யமாகையால், அவனிவளையாளமாட்டினால்அத்தால்இவள் இவ்வளையை ஆளவல்லளோவென்ன; வ்யாக்யாதாபரிஹரிக்கிறார் (இப்போதித்யாதி;) ஆற்றாமையால் சொல்லும்பாசுரமத்தனையென்றுகருத்து. நான்திருமெய்யமலையாளனாய்உன்போல்வார்க்குவந்திருக்கிறேனென்றறிந்துவைத்து, "உனைகலத்தாலாளாயே" என்று நான்மற்றுச்சொல்லுகை உன்ஸ்த்ரீத்வத்துக்குச் சேருமோவென்னும் ஶங்கைக்குப் பரிஹாரமாக, "நீயாளமாட்டோம்" என்கிறாளென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னுடைய வித்யாதி;) நீயாளுகையாலே நாங்களவனையாண்டிருக்க மாட்டோமென்று ஸம்போதார்யம். இத்தால் - ஸஹணைஹிகவிஷயமாகையால் ஆதியிருக்கமாட்டோமென்கை.

"வளையாளமாட்டோமே" என்கிற அவதாரணத்துக்கு - ஸமவத்பரிக்ரஹமானார்க்கு ஊரவமேஸோஷிக்குமென்று கருத்தாய், அதுக்கு ஸம்வாதம்காட்டுகிறார் (அம்மங்கியித்யாதி.) இப்படி படவேண்டுவதே என்றது - ஆசார்யஸேவை,ஸமவத்ஸஹணநுஸவம், இவையே காலக்ஷேபமாகவிருக்கிற உமக்கு, அதுக்கவகாசமில்லாதபடி ஸம்ஸாரிகளைப்போலே நோவுபடவேண்டிற்றேயென்கை.

மூ.— மையிலங்கு கருங்குவளை மருங்கலரும் வயலாலி
நெய்யிலங்கு சுடராழிப் படையானை நெடுமாலைக்
கையிலங்கு வேற்கலியன் கண்டுரைத்த தமிழ்மாலை
ஐயிரண்டு மிவைவல்லார்க் கருவினைக ளடையாவே ௧௦.

ப - ரை.— கையிலங்குவேல்கலியன் - ப்ரகாசிக்கிற வேலைக்கையிலேயுடைய ஆழ்வார், மையிலங்குகருங்குவளை - அஞ்சனம்போல விளங்கும் கறுத்த குவளைமலர்கள், மருங்கு - பார்ச்வத்திலே, அலரும் - விகஸியாநின்றுள்ள, வயல் - கழனி சூழ்ந்த, ஆலி-திருவாலியிலேயிருக்கிற,நெய் - கூர்மையுடைத்தாய், இலங்கு - விளங்காநின்ற, சுடர் - புகரையுடைய, ஆழிப்படையானை நெடுமாலை - திருவாழியைக் கையிலேந்திய ஸர்வேச்வரனை, கண்டு - எதிரில் கண்டு, உரைத்த-அருளிச்செய்த, தமிழ்மாலை ஐயிரண்டும் இவைவல்லார்க்கு - தமிழ்த்தொடையாகும் நன்றாக அறிய வல்லவர்களுக்கு, அருவினைகள் - துஷ்கர்மங்கள், அடையாவே-சேரவேமாட்டா என்று நிசமிக்கிறார். ... ... ... ... ... (௧௦)

புறப்பட்டபின்பு, நஞ்சீயர்,பிள்ளையைப்பார்த்து, "முடிகிற விவ்வளவிலு மிவ்வார்த்தைசொல்லுகிறது - விச்வாஸத்தின் கனமான ஹாவபங்யத்திலூற்றமிறே" என்றருளிச்செய்தார்.

ஆக, இப்பாட்டால் - ப்ராப்ய நிஷ்கர்ஷமும், ருசியுடையரானபடியும், ஶரண்யனானவனுக்கு ரக்ஷகத்வம கண்ணழிவற்றபடியும், இத்தலையிலபேக்ஷை குறைவற்றிருக்கிறபடியும், இவையெல்லாவற்றையும சொல்லுகிறது. (நிலையாளா) என்கையாலே-ப்ராப்யமென்னுமிடம் சொல்லிற்று; (மரமெய்த) என்கையாலே-ரக்ஷகத்வம் கண்ணழிவற்றபடியும், இத்தலையிலபேக்ஷை குறைவற்றிருக்கிறபடியும், இவையெல்லாவற்றையும் சொல்லுகிறது. ... ... ... ௬.

புறப்பட்டபின்பு, நஞ்சீயர், பிள்ளையைப்பார்த்து, "முடிகிற விவ்வளவிலேயுமிவ்வார்த்தைசொல்லுகிறது - விச்வாஸத்தின் கனமான ஹாவபங்யத்திலூற்றமிறே" என்றருளிச்செய்தார்.

ஆக, இப்பாட்டால் - ப்ராப்யநிஷ்கர்ஷமும், ருசியுடையார்படியையும், ஶரண்யன்படியையும், அவனுக்கு ரக்ஷகத்வம் கண்ணழிவற்றிருக்கிறபடியையும், இத்தலையில் அபேக்ஷை குறைவற்றிருக்கிறபடியையும், இவையெல்லாவற்றையும் சொல்லுகிறது (நிலையாளா) என்கையாலே - நித்யகைங்கர்யம் பெறுகையே ப்ராப்யமென்னுமிடம சொல்லுகிறது; (வேண்டாயேயாகிலும்) என்கையாலே - உபாயஹாவமுமவன்பக்கலிலே யென்னுமிடம் சொல்லிற்று; (என்முலையாளவொருநாள்) என்கையாலே - ருசியுடையார்படி சொல்லிற்று; (நிலையாளா) என்கையாலே-ஶரண்யதைசொல்லிற்று; (மரமெய்த) என்கையாலே-ரக்ஷகத்வம் கண்ணழிவற்றிருக்கிறபடியையும், இத்தலையிலபேக்ஷை குறைவற்றிருக்கிறபடியையும்,இவையெல்லாவற்றையும்சொல்லுகிறது.

"க்லேஶப்பட்டேபோமித்தனை" என்னப்போமோவென்ன; ஹாவபங்யத்திலுறைப்பாலே அங்ஙன்சொன்னதென்று கருத்தை வெளியிட்டபடியையுங் காட்டுகிறார் (புறப்பட்டவித்யாதி.) ... ... ... ... ... ௧.

பத்தாம்பாட்டு. (மையிலங்கித்யாதி) மைபோலேவிளங்காநின்ற கருங்குவளையானது பர்யஶத்திலே அலருகிற வயலையுடைய திருவாலி. (நெய்யித்யாதி) நெய் - கூர்மை. கூர்மையையுடைத்தாய் விளங்காநின்ற புகரையுடைய திருவாழியைக்கையிலேயுடைய ஸர்வேஶ்வரனை.

---

பத்தாம்பாட்டு.—(மையிலங்கித்யாதி) இதுவாய்த்து பயிரேறாதே தரிசான நிலமிருக்கும்படி. ஊரில்தரிசுகிடக்கும் நிலமிருக்கும்படியிதுவாய்த்து. மையானது மிகவும் விளங்காநின்றுள்ள கறுத்தகுவளைப்பூக்களலர்ந்து கிடக்குமாய்த்து பர்யஶங்களையுடைய. நாள்செல்ல நாள் செல்லக்குறைந்துவருகையன்றிக்கே நிறமுஜ்ஜ்வலமாகாநின்றுள்ளகருங்குவளைகளானவை அலருகிற பர்யஶங்களையுடைத்தான வயலையுடைய திருவாலி. (நெய்யிலங்கித்யாதி) புறம்பு அவையும் உள்ளில் அவனுடைய நிறமுமாய் முன்னடிதோற்றாதாய்த்து கையில் திருவாழியன்றாகில். (நெய்யிலங்கித்யாதி) வடிவிலிருட்சிக்கும், குவளைப்பூவால்வந்த விருட்சிக்கும், கையில் திருவாழியால்வந்த வொளியல்லவாகில் முன்னடி தோற்றாதுகாணும். (நெடுமாலை) தூதுவிடவும் வார்த்தைசொல்லவும் மாட்டாதே நிற்கிறான்போலேகாணும். தூதுவிடமாட்டாதபடியாய்த்து அகப்பட்டுக்கிடக்கிறது. இத்தலை "ஊர்த்வம்மாஸாந்நஜீவிஷ்யே" என்றால், "நஜீவேயம்" என்னுமித்தனையிறே அத்தலை.

---

பத்தாம்பாட்டு.— (மையித்யாதி.) உட்கருத்தை முதலாறவருளிச்செய்கிறார் (இதுவித்யாதி.) செங்கமலங்களுண்டாயிருக்கலாமே, இதுவே என்று சொல்லுகைக்கு நிமித்தமென்னென்னவருளிச்செய்கிறார் (ஊரிலித்யாதி;) தேஶவிப்ரக்ருஷ்டமான பரமபதமன்றிக்கே, காலவிப்ரக்ருஷ்டங்களான விபவங்களுமன்றிக்கே, கரணவிப்ரக்ருஷ்டமான அந்தர்யாமியுமன்றிக்கே, தாமிருந்த திருவாலியிலிருந்தவனைக்குறித்துத் தூதுவிடுகையும், அவன் முன்னிலையாகத் தோற்றினானாகக்கொண்டு தன் உடைமையை அறிவிக்கையுமாம்படி ஜ்ஞாநவிபாககார்யமான அஜ்ஞாநம் விளைந்தமைக்கு த்ருஷ்டாந்தமாக, குவளைகளின் ஸம்ருத்தியைச்சொல்லுகிறாரென்று கருத்து. ஒருபடிக்கைகயில் பிரிவுபிறந்தாப்போலே இவர்க்கு இத்திருமொழியிலுறையும்; அத்தைக்கொண்டு வ்யாக்யாதா ஈடுபடுகிறாரென்று கொள்ளுவது. "ஊர்" என்கையாலே - ஆழ்வார்தாமும் அப்படியிருக்கிறாரென்று ஸூசிதமாகிறது; இங்ஙனன்றாகில் இரண்டுவாக்யமும் புநருக்தமாமிறே. இவ்வாழ்வாருடைய ஜ்ஞாநகார்யமான அஜ்ஞாநத்தின் ஸீமாவதிக்குப்போரும்படி குவளைக்குள்ள நிறத்தின் மிகுதியைச்சொன்னத்தை நியாமகமாகக்காட்டுகிறார் (மையானதித்யாதி.) "குவளை" என்றபோதே கருமைதோற்றுமே, இங்ஙனிருக்கச்செய்தேயும், "கரும்" என்றும் "மையிலங்கு" என்றும் விஶேஷணத்வயமிடுகையாலே தம்முடைய உமைக்கு த்ருஷ்டாந்தமாகச் சொன்னாரென்னுமிடம் ஸூசிதமிறே யென்று திருவுள்ளம். வாக்யார்த்தமருளிச்செய்கிறார் (நாளித்யாதி.) இப்போது * சுடராழியையிட்டு விஶேஷிக்கைக்கு உட்கருத்தருளிச்செய்கிறார் (புறம்பித்யாதி.) இத்தால் - விஶ்லேஷித்தாராக வெண்ணியிருக்கிற தம்படியாலும் அவனும் வ்யாமோஹாதிஶயத்தாலே "*மயர்வறமதிநலம்பெற்றவர் இங்ஙன் விஶ்லேஷித்துப் படுகிறபாடுகாண்கையாலே நான்றானும் விஶ்லேஷித்தேனாகவேணும்" என்றுகலங்கித் தூதுவிடவும் மாட்டாதே உருவுவெளிப்பாட்டால் வாய்விடவும்மாட்டாதே யிருக்கிறநிலையிலே, நெஞ்சறியுமவனை திருவாழியாழ்வான் இருவருக்கும் வெளிச்சிறப்பைக் கொடுத்தானென்றநுஸந்திக்கிறாரென்று திருவுள்ளம். மேல்வாக்யத்தைவிவரிக்கிறார் (வடிவிலித்யாதி.)

(கையிலங்கித்யாதி) கையிலே விளங்காநின்ற வேலையுடைய ஆழ்வார் ஸர்வேஶ்வரனைக்கண்டுசொன்ன தமிழ்மாலைபத்தும் வல்லவர்களுக்கு அருவினைகள் சேரா. ... ... ... ... க0.

நஞ்ஜீயர் திருவடிகளே ஶரணம்.

(கையிலங்கு)பட்டர்,"ஸர்வேஶ்வரன் திருமங்கையாழ்வார்க்குப் பக்கக் குதிரையேறிப்போமாகாதே!,அவன்கையில்திருவாழிஅழகுக்குடலாக வொப்பித்திருக்குமத்தனை, இவர்கையில் வேல் ஶத்ருநிரஸநத்தாலே கறைகழுவ அவஸரமின்றிக்கேயிருக்குமாய்த்து." அவன் ஶேஷித்வ ஸூசகமாகத் திருவாழியைப்பிடித்தாப்போலேயாய்த்து இவர் ஶேஷத்வஸூசகமாகத் திருவேலைப்பிடித்தபடி. (கண்டுரைத்த) ஈஶ்வரர்க்கு வார்த்தை சொன்னபடிகேட்டு அவன் முன்னேவந்து நிற்கக்கண்டு சொன்ன. (அருவினைகளடையாவே) அவனைப்பிரிந்து நோவுபட்டுத் தூதுவிடுகைக்கு ஹேதுவான பாபங்கள் கிட்டாது. ஸர்வேஶ்வரனைப் பிரிந்து தூதுவிடப்புக்கு அதுதானுங்கூட மாட்டாதேபடும் வ்யஸநம்படவேண்டா இப்பத்தையுமப்யஸித்தார்க்கு.தூதுவிடுவானவன்று ஞய்த்து. ... ... ... ... ... க0.

அடிவரவு.— தூவிரிய பிணி நீர் தான் வாள் தாராய கொண்டு குயில் நிலை மையிலங்கு கள்வன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேஶரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேஶரணம்.

இவ்வாழ்வார் திருவாலியம்மானை விஶ்லேஷித்தாராகக்கொண்டு நோவுபடு கிறவேளையிலே திருவாழியாழ்வான் செய்யூட்டிய புசர்பனைத்துத் திருவுள்ளத் தைக் குடிசொள்ள, இவர் அவ்வழகில் கண்வைத்த அவனுள்ளத்தையுங்கண்டு ஈஜ தார்யராய், "இச்சேர்த்திக் கென்வருகிறதோ" என்று கையில் வாள்பற்றியிருக் கிறாரென்று விவக்ஷித்து, "கெய்யிலங்கு" என்று விஶேஷணமிடாமையாலே ஶஸித்தகறையைச் சொல்லுகையாலே இப்படிசொல்லலாமென்று ஸம்வாதம் காட்டுகிறார் (பட்டரித்யாதி, இருக்குமாய்த்து என்னுமளவும்.) ஶத்ருநிர ஸநத்துக்குடலாக வேலைப்பிடித்தாரென்றருளிச்செய்து, சேவகனுக்கு வேல்சிறு பகமென்று ஸஹ்ருதயர்களும் தாத்பர்யாகாரமருளிச்செய்கிறார் (அவனித்யாதி.) பாட்டுக்களெல்லாம் கண்டு சொன்னதுகளன்றேயென்ன வருளிச்செய்கிறார் (ஈஶ்வரர்க்கித்யாதி.) ... ... ... ... ... ச0.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மூன்றாம்பத்து - ஆறாந்திருமொழி ஸம்பூர்ணம்.

ஆக, திருமொழி - உசு - க்கு, பாட்டு - உசு0.

மூ. — முதலைத்தனிமாமுரண்டீர வன்று
முதுநீர்த்தடத்துச் செங்கண்வேழமுய்ய
விதலைத்தலைச்சென்றதற்கேயுதவி
வினைதீர்த்தவம்மானிடம்; — விண்ணணவும்
பதலைக்கபோதத் தொளிமாடநெற்றிப்
பவளக்கொழுங்காலபைங்காற்புறவம்
மதலைத்தலைமென்பெடை கூடு நாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. ௨.

ப - ரை. — அன்று - அக்காலத்திலே, முதுநீர - பழையநீரையுடைய, தடத்து - தடாகத்திலே, யானையின்காலைக்கவ்வின, தனிமா முதலை - ஒப்பற்றபெரியமுதலையினது, முரண்தீர - கரைகாணவொண்ணாத மிடுக்கறும்படியாகவும், செங்கண் வேழம் - சீற்றத்தாற் சிவந்த கண்களையுடைய அவ்யானை, உய்ய - உஜ்ஜீவிக்கும்படியாகவும், விதலைத்தலைச் சென்று - நடுங்கியதசையிலேவந்து, அதற்கே உதவி - அந்த யானைக்குபகரித்து, வினைதீர்த்த - அதின் வ்யஸநத்தைத்தீர்த்த, அம்மான் - ஸர்வேச்வரனுடைய, இடம் - ஸ்தாநமாய்; விண் அணவும் - ஸ்வர்க்கத்திலே சென்ற ளக்கத்தையும், பதலை - கும்பங்களையும், கபோதம் - கபோதவொழுங்குகளையும், ஒளி - காந்தியையுமுடைத்தான, மாடநெற்றி - ஸௌதாக்ரங்களிலே, பவளக்கொழுங்கால - பவளம்போற்சிவந்து கொழுவிதான காலையுடைத்தாய், பைங்கால் புறவம் - பசுமைநிறத்தையுமுடைய புறவானது, மதலைத்தலை - பிள்ளைத்தூண் களின்தலையிலே, மென்பெடை - ம்ருதுவாயிருக்கும்பெருத மார்துவான தன் பேடையோடே, கூடும் - கூடிக்கலந்திருக்கிற, நாங்கூர் - திருநாங்கூரிலேயுள்ள, மணிமாடக்கோயில் - திருமணிமாடக்கோயிலை, என்மனனே - என்மநஸ்ஸே, வணங்கு - நீ போய் வணங்கு என்கிறார். ... ... ... (௨)

இரண்டாம்பாட்டு. (முதலைத்தனிமா வித்யாதி) அத்விதீயமான வலத்தையுடைய பெரியமுதலையின் மிடுக்கறும்படியாக. (அன்று) ஆனையிடர்பட்டவன்று. (முதுநீர்த்யாதி) பெரியநீரையுடைய தடாகத்திலேயழுந்துகிற சிவந்தகண்களையுடைய ஆனை உய்ய,

இரண்டாம்பாட்டு. — (முதலையித்யாதி) ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆபத்துக்குப்போக்கினவன் திருமணிமாடக்கோயிலிலே நின்றருளிநான், நெஞ்சே! உன்டுக்கமெல்லாம்கெட அங்கே சென்றநுபவியென்கிறார்.

வ்யா. — (முதலையித்யாதி) முதலையினுடைய, உபமாநரஹிதமாய் கரைகாணவொண்ணாத மிடுக்கறும்படிக்கிடாக. (முதுநீர்த்தடத்து) பழைதானநீரையுடைத்தென்று ப்ரஸித்தமிறே. (செங்கண் வேழமுய்ய) மிடுக்கையுடைத்தாயிருக்கச்செய்தே, தன்நிலமல்லாமையாலே அம்மிடுக்குக்கொண்டு வ்யாபரிக்கவொண்ணாதபடியால் வந்த சீற்றத்தாலே சிவந்தகண்ணையுடைத்தான ஆனை உய்யும்படி. செங்கணென்று - செயலறுதியாலேசிவந்தகண்ணையுடைய ஆனையென்றுமாம்.

இரண்டாமபாட்டு. — (முதலையித்யாதி.) ஸங்க்ரஹிக்கிறார் (ஸ்ரீகஜேந்த்ரேத்யாதி.) "ப்ரஹ்மாதிகளான ப்ரயோஜநாந்தரபரராச்ரயிக்குமளவன்றிக்கே" என்று வாக்யாதியில் கூட்டுவது.

(செயலறுதியாலே) என்றவிடத்தும், வந்தடுக்கத்தாலே என்று கூட்டுவது.

அது துதிக்கைஅழுந்தி நடுங்குகிறவளவிலே சென்று அதின்நடுக்கத்தைப்போக்கி முதலையின்வினையைத்தீர்த்த அம்மானிடம். விதலை—நடுக்கம். “இரண்டும்போயிரண்டின்வீடு” என்கிறபடியே-முதலை ஶாபமோக்ஷமும் கஜேந்த்ரன் ஸாக்ஷாந்மோக்ஷமுமிறேபெற்றது. (விண்ணணித்யாதி) ஸ்வர்கத்திலேசென்று கிட்டுகிற. பதலை — கும்ஹநிரையையும் கபோதவொழுங்குகளையுமுடைத்தாய், நவரத்நஶோபிதமாய் ஒளிவிடுகிற புலிமுகவாசலையுடைய. நெற்றி - முகவாசல். (பவளக்கொழுங்காலபைங்கால்புறவம்) பவளம்போற்சிவந்து அழகிதான காலையும் பசுமையுமுடைத்தான புறுவானது, பிள்ளைத்தூண்தலையிலே, மென்பெடைகூடும்நாங்கூரில். ... ... ... ... ௨.

(சென்று)கைகழிந்தசென்று மீளாதேஆபத்திலேபுகவி. (விதலைத்தலை) விதனப்படுகிறவளவிலே. (வினைதீர்த்தவம்மானிடம்) அதினுடைய வ்யஸநத்தைப்போக்கின ஸர்வேஶ்வரனுடைய ஸ்தாநம். வினைதீர்க்கையாகிறது-அது நினைத்தபடியே திருவடிகளிலே பூவைப்பணிமாறலாம்படி சென்று முகங்காட்டுகை.

(விண்ணணவுமித்யாதி) ஸ்வர்கத்திலேசென்ற ஓக்கத்தையுடைத்தாய், கும்ஹநிரைகளையும் கபோதவொழுங்குகளையுமுடைத்தாய், பொன்னாலும் ரத்நங்களாலும் சமைக்கையாலே ஒளியையுடைத்தான மாடத்தினுடைய, நெற்றியுண்டு — புலிமுகங்களில். பதலையென்று — கும்ஹநிரை. (பவளக்கொழுங்காலபைங்கால்புறவம்) பவளம்போலே சிவந்து கொழுவிதான காலையுடைத்தாய் பசுமையையுடைத்தான புறுவானது. (பதலைத்தலை) பிள்ளைத்தூண்களின் தலையிலே. (மென்பெடைகூடும்) ஸம்ஶ்லேஷிக்கவும்பெறுத மிடுக்கான பேடையோடேகூடக் கலந்து வர்த்திக்கிற திருநாங்கூரிலே. ... ... ௨.

அவதாரிகை. மூன்றாம்பாட்டு.—ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு விரோதியான முதலையைப்போக்க அத்தாலே ப்ரீதையானபிராட்டி வைரவயத்திற்போலேயணைக்க, அவளோட்டை ஸம்ஶ்லேஷத்தைப் பெற்ற எம்பெருமான் திருமணிமாடக்கோயிலிலே நின்றருளினான், நெஞ்சே! அங்கேசென்றநுஸந்தியென்கிறார்.

---

விதனப்படுகிற - வ்யஸநப்படுகிற.

கும்ஹநிரை - மாடங்களின்மேலில் மகுடாகாரங்களான கும்ஹபங்க்தி. (புலிமுகங்களில்) என்றதைக்கீழ், (புறுவானது) என்றத்தோடு அந்வயம். பிள்ளைத்தூண்-தூண்மேலே நிற்கிற சிறுதூண். ... ... ... ... ௨.

மூன்றாம்பாட்டு.—(சொலையித்யாதி.) கீழ்ப்பாட்டில் ஸ்ரீகஜேந்த்ரரக்ஷணகுணத்தையநுஸந்தித்துக்கொண்டு, அத்தால் திருமுகம் பெற்றானென்னும் ஸங்கதியைக்காட்டுகிறார் (ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கித்யாதி.)

மூ.—கொலைப்புண்டலைக்குன்ற மொன்றுய்யவன்று
கொடுமாமுதலைக் கிடர்செய்து கொங்கா
ரிலைப்புண்டரீகத் தவளின்பமன்போ
டணைந்திட்டவம்மானிடம் ;- ஆளரியா
லலைப்புண்டயானைமருப்புமகிலு
மணிமுத்தும்வெண்சாமரையோடு பொன்னி
மலைப்பண்டமண்டத்திரையுந்து நாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. ௩.

ப - ரை.— அன்று - அக்காலத்தில ; கொலை-கொலைத்தொழிலையும், புண்[ய தலை - பாகன்றோட்டியாற் குத்துண்டபுண்தலையையுமுடைய, குன்றம் ஒன்று - ஓர்பெருமலைபோலும் கஜேந்த்ராழ்வான், உய்ய - உஜ்ஜீவிக்கும்படியாக, அதின் காலைக்கவ்வின, கொடுமாமுதலைக்கு - க்ரௌர்யத்தையும் மிக்கபலத்தையுமுடைத் தான முதலைக்கு, இடர்செய்து - துக்கத்தைப்பண்ணி, பின்னுமிவ்வாறே ஆச்ரித ரக்ஷணம் பண்ணிக்கொண்டு, கொங்கு இலை ஆர் - தேனும் இலைகளும் மிக்கிருந் துள்ள, புண்டரீகத்தவள் - தாமரைப்பூவிலிருக்கும் பெரியபிராட்டியாருடைய, இன்பம் - ஸம்ச்லேஷஸுகத்தை, அன்போடு அணைந்திட்ட - ஸ்நேஹாதிக்யத்தோ டநுபவித்துக்கொண்டிருக்கிற, அம்மான் - ஸர்வஸ்வாமியானவனது, இடம்- வாஸஸ்தானமாய் ; பொன்னி - காவேரியானது, ஆள் அரியால் - பௌருஷமுள்ள ஸிம் ஹங்களாலே, அலைப்புண்ட - ஸம்ஹரிக்கப்பட்ட, யானை-யானைகளினுடைய,[உய மருப்பும் - தந்தங்களையும், அகிலும் - அகருவ்ருக்ஷங்களையும், அணிமுத்தும்-அழகிய முத்துக்களையும், வெண்சாமரையோடு - வெளுத்த சாமரங்களையும், மலைப்பண்ட மண்ட - பர்வதங்களில மற்றுமுண்டான வஸ்துக்களையுமடைய, திரை உந்து - அலைகளாலே தள்ளிக்கொண்டுவந்து கொடுக்கிற, நாங்கூர்—. ... (௩)

மூன்றாம்பாட்டு. (கொலைப்புண்) கொலைத்தொழிலையும் புண்ணை யுடைய தலையையுமுடைய, குன்றுபோன்ற ஆனை உய்ய, அன்று கொடிதான பெரியமுதலைக்கிடர்செய்து.

வ்யா. — (கொலைப்புண்தலைக்குன்றமொன்று) கொலை - கொலைத் தொழிலையும்,புண்ணாறுத்தலையையுமுடைய,குன்றம்போலேயிருக்கிற, ஆனையுண்டு-ஸ்ரீகஜேந்த்ராழ்வான். துறேட்டியிட்டுக்கொத்துகையாலே புண்ணாறுமென்னுதல்;காட்டானையாகையாலே ஆனைகளோடேபொருது புண்ணாறுயிருத்தல் ; ஜாதிப்பண்பாகையாலே சொல்லிற்றாகவுமாம். (உய்ய) அகப்பட்டவன்று அது உஜ்ஜீவிக்கும்படியாக. (கொடுமா முதலைக்கிடர்செய்து) க்ரௌர்யத்தையும்மிக்கபலத்தையுமுடைத்தான முதலைக்கு து:க்கத்தைப்பண்ணி. (கொங்காரித்யாதி) ப்ரஜைகளி[ரு னுடையது:க்கத்தைப்போக்கித்தாய்பாடேமுகம்பெறுவாளைப்போலே.

துறேட்டி - அங்குசம். ஸத்த்வஸ்யரான ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு புண்தலை கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (ஜாதிப்பண்பித்யாதி.) "அன்று - உய்ய' என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (அதித்யாதி.)

(கொங்காரித்யாதி) அழகியஇலையையும் பரிமளத்தையுமுடைய தாமரையாளுடன் ஸ்நேஹத்துடனே இன்பமுண்டாகக் கலந்த அம்மானிடம். கொங்கென்று-தேனுக்கும்பேர். (ஆளரி) அரியென்றும் ஆளரியென்றும் – ஸிம்ஹத்துக்குப்பேர். ஸிம்ஹத்தாலே கொலையுண்ட ஆனைக்கோடும், அகிலும், யானைமஸ்தகத்திலுதிர்ந்த அழகிய முத்தும், வெண்சாமரங்களும், இவற்றைத் திரட்டிக்கொண்டுவந்து, பொன்னியானது, பர்வதங்களில் பொன்துடக்கமான மலைப்பண்டங்களைக் கொண்டுவந்து, அண்ட - சேர, திரைகொடுவந்து தள்ளுகிற நாங்கூர். ... ... ... ... ... ௩.

(கொங்கார்) கொங்கென்று - தேனுதல், பரிமளமாதல். தேனாலே மிக்கிருப்பதாய். (இலைப்புண்டரீகத்து) மநோஹரமான இலையையுடைத்தான தாமரைப்பூவை யிருப்பிடமாகவுடைய. (அவளின்பமிதயாதி) பெரியபிராட்டியாரோட்டை ஸம்ச்லேஷஜநிதமான, தன்னுடைய ப்ரேமமுண்டு - ஸ்நேஹம், அத்தோடேகூட அநுபவித்த ஸர்வேச்வரனுடைய ஸ்தாநம்.

(ஆளரியித்யாதி) ஆண்பிள்ளைத்தனத்தையுடைத்தான ஸிம்ஹங்களானவை ஆனைகளைப்பிடித்து அலைத்திட்டுவைக்கும். அலைக்கை - கொல்லுகை. அவ்வளவிலே ஆறுநீர் வந்து கொம்புகளைப் பறித்துக் கொண்டுபோய்த்தது. (அகிலுமணிமுத்தும்) அதின் மஸ்தகத்தில் நின்று முதிர்ந்த அழகிய முத்துக்களும் வெண்சாமரைகளையுங்கொண்டு. (பொன்னியித்யாதி) காவேரியானது, சொல்லிச்சொல்லாத மலைச்சரக்குக்களையும் கொண்டுவந்து, கொள்ளைச்சரக்குக் கொடுப்பாரைப் போலே திரைக்கைகளாலே கொண்டுவந்து கொடாநின்றதாய்த்து; அப்படிப்பட்ட திருநாங்கூர். ... ... ... ௩.

அவதாரிகை. நாலாம்பாட்டு.— (சிறையித்யாதி) மாலி ஸுமாலி துடக்கமான ராக்ஷஸரையுடைய பண்டு லங்கையிலேவென்ற ஸர்வேச்வரன் திருமணிமாடக்கோயிலிலே வந்து நின்றருளினான், நெஞ்சே! அங்கேசென்றநுபவியென்கிறார்.

---

“அண்ட” என்றதுக்கு - சேரவென்று அர்யம்திருவுள்ளம்பற்றி, அத்தால் - எல்லாமென்றாய், அத்தையருளிச்செய்கிறார் (சொல்லியித்யாதி.) ... ௩.

நாலாம்பாட்டு.— (சிறையித்யாதி.) ஒருநீர்ப்புழுவை வென்றவளவன்றிக்கே, ப்ரபலரான மாலிமுதலானாரை வென்றான்கிடாயென்று, வீரவாசிபறியுமவராகையாலே அத்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதியைஸூசிப்பிக்கிறார் (மாலியித்யாதி.)

மூ.— சிறையாருவணப்புள்ளொன்றேறியன்று
திசைநான்கும் நான்கு மிரியச்செருவில்
கறையார்நெடுவேலரக்கர்மடியக்
கடல்சூழிலங்கைகடந்தானிடந்தான்
முறையால்வளர்க்கின்ற முத்தீயர்
நால்வேத மைவேள்வியாறங்கரேழினிசையோர்
மறையோர்வணங்கப்புகழெய்து நாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. சு.

ப - ரை.— அன்று-சொப்பனமிருந்தகாலத்திலே, சிறை-சமநஸாதநமான[ம]சிறகுகள், ஆர் - நிறைந்திருந்துள்ள, ஒன்று - ஒப்பற்ற, உவணப்புள்-கருடனென்னும் பெரியதிருவடியின்மேலே, ஏறி - ஏறிக்கொண்டெழுந்தருளி, செருவில்-யுத்தத்திலெதிர்த்த, கறை ஆர்நெடுவேல் - கறைகழுவவொண்ணாதபடியாய் நெடிதான வேலையுடைய, அரக்கர்-ராக்ஷஸர்கள், திசைநான்கும்நான்கும்-எட்டுத்திக்குக்களிலும், இரியமடிய - ஓடி ஓடி மடியும்படி, கடல்சூழ் - கடலாகிய அகழாற் சூழப்பட்ட, இலங்கை - லங்கையென்னும் நகரை, கடந்தான் - ஜயித்தவனான எம்பெருமானுடைய, இடம் - ஸ்தாநமாய்; முறையால்-வேதோக்த க்ரமத்தாலே, வளர்க்கின்ற—, முத்தீயர் - மூன்றுஆக்நியையுடையராய், நால்வேதர்-அப்படியேநாலுவேதங்களையும் அதிகரித்திருப்பாராய், ஐவேள்வி ஆறு அங்கர்-பஞ்சமஹாயஜ்ஞஷடங்கவான்களாய், ஏழினிசையோர் - ஸப்தஸ்வரங்களையுமுள்ளபடியே அறிந்திருப்பவருமான, மறையோர் - விலக்ஷணரான ப்ராஹ்மணர்கள், வணங்க - ப்ரணமபூர்வகமாக அநுஸரிப்பதினாலே, புகழெய்தும்-மிக்க புகழ்பெற்றிருக்கிற, நாங்கூர்—. (சு)

நாலாம்பாட்டு. (சிறையாரித்யாதி) சிறையென்று - சிறகு. சிறையார்ந்திருக்கிற உவணமாகிற புள்ளையூர்ந்து. உவணமென்று-பருந்துஜாதிக்குப்பேர். புள்ளென்று - பக்ஷிஸாமாந்யத்துக்குப்பேர். (உவணமித்யாதி) அதுவனைமேற்கொண்டு அன்றுதிக்குக்களெட்டும் சிதற, யுத்தத்திலே. (கறையாரித்யாதி) கறைகழுவாத நெடியவேலையுடைய ராக்ஷஸர் முடிய,

வ்யா.—(சிறையாருவணப்புள்) சிறையென்று - சிறகு. கமநஸாதநமான சிறகு குறைவற்றிருந்துள்ள. (உவணப்புள்) உவணமாகிற புள். உவணமென்று - பெரியதிருவடிக்குப்பேர். புள்ளென்று - பருந்துஜாதிக்குப்பேர்† (ஒன்றேறி) அத்விதீயமான புள்ளையேறி. (திசைநான்கும் நான்குமிரிய) எட்டுதிக்குக்களும் இரியும்படியாக. (செருவில்) யுத்தத்திலே. (கறையாரித்யாதி) கறைகழுவவொண்ணாதபடியாய் நெடிதானவேலையுடைய ராக்ஷஸஜாதி மடிய. ஒளித்துப்போவாரும், முடிவாருமாகை.

---

எட்டுதிக்குக்களும் - எட்டுதிக்குக்களிலும். இரியும்படி - சிதறும்படி. "இரியும்படி" என்றதால் ஹலிதார்யமருளிச்செய்கிறார் (ஒளித்தித்யாதி.)

---

† "புள்ளென்று - ஜாதிக்குப்பேர்" என்று சில ஸ்ரீகோஶங்கள்.

மூ.—இழையாடுகொங்கைத் தலைநஞ்சமுண்டிட்
டிளங்கன்றுகொண்டு விளங்காயெறிந்து
தழைவாடவன்தாள்குருந்த மொசித்துத் தடந்
தாமரைப்பொய்கை புக்கானிடந்தான்;—
குழையாடவல்லிக் குலமாடமாடே
குயில்கூவநீடு கொடிமாடமல்கு
மழையாடுசோலை மயிலாலுநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. (௫).

ப - வுரை.— இழை - ஆபரணங்கள், ஆடு-ஆடாநின்ற, கொங்கைதலை-பூதனை யின் ஸ்தநாக்ரத்திலுள்ள, நஞ்சம்-விஷத்தை, உண்மிட்டு - உண்டு, விளங்காய்-விளங்காயாய் நின்ற அஸுரன்மேல், இளம்கன்று கொண்டெறிந்து - சிறுகன்றாய் வந்த அஸுரனைத்தூக்கி அவ்விருவருமிருமிறம்படிமோத, வன்தாள் - வலிய தாளையுடைய, குருந்தம்-குருந்தமரத்தை, தழைவாட - அதன் தழைகளெல்லாம் வாடி யுலரும்படி, ஒசித்து - முறித்து, பின், தடம் - பெரிதான, தாமரைப்பொய்கை-பத்மஸரஸ்ஸிலே, புக்கான் - போய் அங்கு க்ரீடை பண்ணும் [illegible] பண்ணின கண்ணனுடைய, இடம்-ஸ்தாநமாய்; குழை - [illegible], ஆட - மந்தமாருதத்தாலசைந்தாடுவதினால், வல்லிகுலம் - [illegible]மேல படர்ந்த புஷ்பக்கொடிக்கூட்டங்கள், ஆட-ஆடவும், மாடு-[illegible], குயில்-கோகிலங்கள், கூவ-கூவவும், மழையாடு - மேகங்கள் ஸஞ்சரிக்கிற, சோலை - சோலையிலே, மயில்ஆலும் - மயில்கள் நர்த்தம் பண்ணப்பெற்றதுமாய், நீடு-[illegible], கொடி-த்வஜங்கள் நாட்டப்பட்ட, மாடம்-ஸௌதங்கள், மல்கும்-நெருங்கியிருக்கப் பெற்றதுமான, நாங்கூர்—. ... ... ... ... (௫)

கடல்சூழ்ந்தலங்கையில்ராக்ஷஸரைக்கொன்றவனிடம். (முறையாலித் யாதி) த்ரேதாக்நிகளையும் ஶாஸ்த்ரவோதிதமானபடியே வளர்க்கிறவர்களாய். நாலுவேதத்தையும் பஞ்சாக்நிகளையும் [illegible] வோதிதமானபடியே வல்ல மறையோர் வணங்கப் புகழ்சேரும் திருநாங் கூரில் மணிமாடக்கோயில் வணங்கென்மனமே. ... ௮.

(கடல்சூழ்ந்த்யாதி) கடலாலே சூழப்பட்டிருப்பதாய், புறங்கள் பாம்பமுறுதேயிருக்குமாப்போலே ஊர்வரங்கள்சேரும்படியான லங்கை யைக்கடந்தான். மாலி, ஸுமாலி, மால்யவான்துடக்கமானவரை, பெரிய திருவடிமேலே யெழுந்தருளி நிரஸித்ததாகச்சொல்லக்கடவதிறே. (கடந்தானிடந்தான்) அவ்வூரைஜயித்தவன் வாஸஸ்தாநம்.

(முறையாலித்யாதி) ப்ராப்தமானபடியேயென்னுதல்; வேதோ க்தமான க்ரமத்தாலே வளர்க்கின்ற அக்நித்ரயங்களையுமுடையராய், நால்வேதர் - அப்படியேநாலுவேதத்தை உச்சரித்திருப்பாராய், பஞ்ச மஹாயஜ்ஞாநுஷ்டாநங்களில் வைகல்யமின்றிக்கே அங்கங்களாலும் கைவந்திருப்பாருமாய், ஸப்தஸ்வரங்களையு முள்ளபடியேயறிந்திருக் கும் ப்ராஹ்மணர். (வணங்கவித்யாதி) இப்படிப்பட்ட விலக்ஷணா ராஶ்ரயியாநின்றார்களென்கிற புகழையுடைத்தான திருநாங்கூர். ௬.

"முறையால்" என்றது - மேலெல்லாமநுஷங்கிக்கிறதென்று திருவுள்ளம்பற்றி (அப்படியேயென்றது.) ... ... ... ... ... ௬.

அஞ்சாம்பாட்டு. (இழையாடித்யாதி) பெற்ற தாய்போலே ஒப்பித்துவந்த பூதனையுடைய ஆபரணமசைந்த முலைத்தலையில் நஞ்சை யமுதுசெய்து, இளங்கன்றைக்குணிலாகக்கொண்டு விளவாய்நின்ற அஸுரனையெறிந்து விழவிட்டு, தழைத்துநின்ற வலிதான தாளையுடைய குருந்தைமுறித்து, பெரியதாமரைப்பொய்கையிலே.

அவதாரிகை. அஞ்சாம்பாட்டு.— ப்ரதிகூலவர்கத்தைப்போக்கி இடைப்பெண்களோடே ஸம்ச்லேஷித்தவன் திருமணிமாடக்கோயிலிலே நின்றருளினான், நெஞ்சே! அத்தேசத்தை யாச்ரயியென்கிறார்.

வ்யா.—(இழையாடித்யாதி) இழையென்று - ஆபரணம். ஆபரணங்களாடாநின்றுள்ள கொங்கைத்தலைநஞ்சையுண்டு. பூதனை பேய் வடிவைமாற்றி யசோதைப்பிராட்டிவடிவாக வொப்பித்துவர, அந்த ஆபரணங்களாலே அலங்க்ருதமான முலையில்நஞ்சை யுண்டானாய்த்து. (இளங்கன்றித்யாதி) கன்றாய்நின்ற அஸுரனைக்கொண்டு விளாவாய்நின்ற அஸுரனையெறிந்து, இருவரையும் தங்களிலே முடியும்படி பண்ணி. (தழைத்யாதி) அஸுராவேசத்தாலே உயிரையுடைத்தாயிருந்த மரமானது இவன்கிட்டச்சென்றவாறே தழைவாடிற்றாய்த்து. வலிய தாளையுடைத்தான குருந்தைமுறித்து. (தடந்தாமரையித்யாதி) தனக்கும் பெண்களுக்கும் ஜலக்ரீடைபண்ணுகைக்கு யோக்யமான இடத்தைக் காளியன்புக்கு தூஷித்துக்கிடக்க, அங்கேபோய்ப் புக்கானாய்த்து; பெண்கள் நீராடப்புக்க விடத்தையுமுடைத்தாய் தாமரையையுமுடைய பொய்கையிலே புக்கு அவர்கள் துகிலை வாங்கினபடியாகவுமாம்; அவன் வர்த்திக்கிற தேசம்.

(தழையித்யாதி) தழைகளானவையும் பூங்கொடிகளும் மந்தமாருதத்தாலே அசைந்துவர. (மாடே குயில்கூவ) பர்யந்தங்களிற் சோலையில் புஷ்பங்களினுடைய பரிமளத்தை ஆக்ராணம்பண்ணி, முக்தர் ஸாமகானம்பண்ணுமாபோலே குயில்கள் கூவாநின்றனவாய்த்து. (நீடுகொடிமாடமல்கு) நெடியகொடிகளையுடைத்தான மாடங்களாலே நெருங்கியிருப்பதாய்.

அஞ்சாம்பாட்டு.— (இழையித்யாதி.) யாத்வப்ரகாசமான பெரியதிருவடி மேலேறி மாலிமுதலானாரை வென்றவீரத்திலும் பிள்ளைச்சேவகத்தில் திருவுள்ளம் குடிபோயநுபவிக்கிறானென்று ஸங்கதி திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (ப்ரதிகூலேத்யாதி.) பெண்களோடேயென்றது-"தாமரைப்பொய்கைபுக்கான்" என்றதைப்பற்ற.

"தழைவாட" என்று விசேஷித்ததுக்கு பாவம் (அஸுரேத்யாதி.) விரோதிநிரஸநப்ரகரணாநுகுணமாக காளியன்பொய்கையாக விவக்ஷித்து, அப்போது "தாமரை" என்றுவிசேஷிப்பானென்னென்னவருளிச்செய்கிறார் (தனக்குமித்யாதி;) ஸ்நாநாதிக்ரியைக்கநுகுணமாக விசேஷித்தாரென்று கருத்து. அர்த்தாந்தரம் (பெண்களித்யாதி.)

மூ.—பண்ணேர்மொழியாய்ச்சியரஞ்ச வஞ்சப்
பகுவாய்க்கழுதுக் கிரங்கா தவள்தன்
உண்ணா முலை மற்றவளாவியோடுமுடனே
சுவைத்தானிடம் ;-ஓங்குபைந்தாள்
கண்ணார்கரும்பின் கழைதின்றுவைகிக்
கழுநீரில்மூழ்கிச் செழுநீர்த்தடத்து
மண்ணேந்திளமேதிகள் வைகுநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. ௬.

---

ப - ரை.— பண்ணேர் - காநதத்தோடொத்த, மொழி-பேச்சையுடைய, ஆய்ச்சியர் - இடைச்சிகள், அஞ்ச - பயப்படும்படி, தாயுருக்கொண்டுவந்த,வஞ்சம்-வஞ்சனையையும், பகுவாய் - பெருத்தவாயையுமுடைய, கழுதுக்கு - பூதனையினிடத்தில், இரங்காது-தான்நோவுபடாமல், அவள்தன்-அப்பூதனையினது,உண்ணா-விஷம்தடவியிருப்பதால் அயலாராலுண்ணமுடியாத, முலை - முலைப்பாலை, அவள்ஆவியோடும் - அவளுயிருடனேகூட, உடனேசுவைத்தான் - ஏககாலத்திலே அமுதுசெய்த ஸ்ரீக்ர்ஷ்ணனுடைய, இடம் - ஸ்தானமாய் ; இளமேதிகள் - எருமைநாகுகள், ஓங்கு - உயர்த்தியையும், பைந்தாள் - பசிய தாளையும், கண்ஆர் - குறுகினகணுக்களையுமுடைய, கரும்பின் - இக்ஷுதண்டங்களின், கழைதின்று - தலையாடியைத்தின்று, வைகி-சிலகாலம் அவ்விடத்திலேயேகிடந்து,பின அவ்வெம்மையாற்றுகைக்காக, கழுநீரில - செங்கழுநீர்ப்பணையில், மூழ்கி-புக்குமுழுகி, உகந்தாம்.[உய செழுநீர்த்தடத்து-அழகிய நீரையுடைய தடாகத்திலே, போய்முழுகி, மண்ணேந்துவைகும் - கோட்டுமண்கொண்டு கரையேறுதேங்கடக்கிற, நாங்கூா—. (௬)

(குழையித்யாதி) மேவங்கள் ஸஞ்சரிக்கிற சோலையையும், அவ்விடத்தில் மேவதர்ஸநத்தாலே யாடுகிறமயிலையுமுடைய நாங்கூர். ... ௫.

ஆறும்பாட்டு. (பண்ணேரித்யாதி) பண்ணொத்தபேச்சையுடைய ஆய்ச்சியரஞ்சும்படி,

---

( மழையாடுசோலை மயிலாலுநாங்கூர் ) உயர்ந்தசோலையின் தலையிலே மேவங்கள்ஸஞ்சரிக்க அவற்றைக்கண்டு வர்ஷாவாகக்கொண்டு சோலையில் வர்த்திக்கிற மயில்களானவை ஆடத்துடங்கும் ; இப்படிப்பட்ட திருநாங்கூரில். ... ... ... ... ... ௫.

அவதாரிகை. ஆறும்பாட்டு.— பூதனையை அப்போதே ப்ராணன் போம்படி முலையுண்ட ஸர்வேஸ்வரன் திருமணிமாடக்கோயிலிலே நின்றருளினான், நெஞ்சே ! அங்கே சென்றநுஸவியென்கிறார்.

வ்யா.— ( பண்ணேர்மொழியாய்ச்சியரஞ்ச ) பண்ணோடொத்த மொழியையுடைய இடைச்சிகளஞ்சும்படி.

---

வர்ஷாவாக - வர்ஷத்துக்காக. ... ... ... ௫.

ஆறும்பாட்டு.—(பண்ணேரித்யாதி.) பிள்ளைச்சேவகங்களில்வைத்துக்கொண்டு கேவலம் பால்யத்திற்செய்த சேவகமாகையாலே பூதநாநிரஸநம் பின்னாட்டிற்றென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (பூதனையையித்யாதி.)

வஞ்சத்தையும் பெரியவாயையுமுடைய பேய்க்கு ஈடுகொடாதே, அவள் தன்னுடைய, ஒருவருமுண்ணாத விஷத்தைப்பொதிந்தமுலைப்பாலையும் அதுக்குவேரானப்ராணனையுங்கூடவுண்டவனிடம்.(ஓங்கித்யாதி) ஓங்கிவளர்ந்து பரந்த அடியையும் பலகண்களையுமுடைய, கரும்பின் கழையுண்டு-குருத்து, அத்தைத்தின்று, அதிலேதங்கி, அவ்வுஷ்ணமாறச் செங்கழுநீரோடையிலே முழுகி, அதினின்றும்போந்து, பெரிய நீரையுடைய தடாகத்திலே விடாயெல்லாங்கெட்டுக் கரையிலேயேறிக் கரைபொருது, கோடுகளில் மண்ணையும் யரித்துக்கொண்டு இளவெருமைகள் தங்குகிற நாங்கூர். ... ... ... ௬.

---

(வஞ்சமித்யாதி) வஞ்சநத்தையுடையளாய், பயாவஹமாம்படி ஜாத்யுசிதமான பெரியவாயையுடையளான, கழுதுண்டு - பேய், அதுக்கிரங்காதே. இரங்குகையாவது-நோவுபடுகையாய், அதின்கையில் தான் நோவுபடாதே. (அவள்தனுண்ணுமுலை) விஷமாகையாலே வேறுசிலருண்டாரில்லையிறே; அப்படிப்பட்ட முலை. (மற்றவளாவியோடுமுடனே சுவைத்தானிடம்) விஷத்தை வாங்குகையன்றிக்கே, அதுக்காச்ரயமான ப்ராணனையுங்கூட ஒருக்காலே அமுதுசெய்தவன் வர்த்திக்கிற தேசம்.

(ஓங்குபைந்தாளித்யாதி) உயர்த்தியையுடைத்தாய் பசுமையையுமுடைத்தாய் தாளையுமுடைத்தாய் கண்குறுகின கரும்பினுடைய, கழையுண்டு - தலையாடி, அத்தைத்தின்று, தன்னளவல்லாதபடி மிகத்தின்கையாலே ஸஹிக்கமாட்டாமை அவ்விடந்தன்னிலே இடம்வலங்கொண்டு விடாயாறி, பின்னைப்போய் அந்த உஷ்ணமாறும்படி செங்கழுநீர்ப்பணையிலே புக்குமுழுகி. (செழுநீரித்யாதி) அழகிய நீரையுடைத்தாயிருக்கிற தடாகத்திலே புக்குமுழுகி, * கோட்டுமண்கொண்டு, அந்தைச்சுமந்து கிளருமாய்த்து மஹாவராஹம் கிளர்ந்தாப்போலே. (வைகுநாங்கூர்) பின்னை அடித்து ஏறவிடவும் போகாதபடி அவ்விடந்தன்னிலேகிடக்குமாய்த்து; அப்படிப்பட்ட திருநாங்கூரில்.— இவ்விடத்தை பிள்ளைவிழுப்பரையரும் ஆப்பானுங்கூட அநுஸந்தித்து, "இரண்டிடத்திலே 'வைகி' என்றுண்டாயிருந்தது, இது செய்யும்படி யென் ?" என்று பட்டரைக்கேட்க ; "ஸௌகுமார்யத்தாலே யிரண்டிடத்திலுங்கிடந்தது" என்றருளிச்செய்தார். ... ௬.

---

"பரு" என்றதினர்த்தம் (பெரியவென்றது.) "மற்று" என்றதாலே - வைலக்ஷண்யம் தோற்றுகையாலே, அத்தைப்பற்றவருளிச்செய்கிறார் (அதுக்காச்ரயமானவென்று.)

ஆர்தல் - மிகுதியாய், அதினர்த்தம் (குறுகினவென்றது.) தலையாடி - கொழுந்தாடை, "வைகி" என்றதுக்குத்தாத்பர்யம் (தன்னளவித்யாதி.) பணையிலே-நீர்நிலத்திலே. (கிளருமாய்த்து) என்றவநுஸாரம், இளமேதிகள்-எருமைநாகுகள் என்று கூட்டுவது.

இதுசெய்யும்படி யென்னென்றது - இரண்டிடத்திலுங்கிடந்து காலத்தைப் போக்கிற்றென்றத்தால் ப்ரயோஜநமென்னென்ன வென்றபடி. ... ௧.

மூ.— தளைக்கட்டவிழ்தாமரைவைகுபொய்கை
தடம்புக்கடங்காவிடங்காலரவம்
இளைக்கத்திளைத் திட்டதனுச்சிதன்மே
லடிவைத்தவம்மானிடம் ;-மாமதியம்
திளைக்கும் கொடிமாளிகைசூழ்தெருவில்
செழுமுத்து வெண்ணெற்கெனச்சென்று முன்றில்
வளைக்கைநுளைப்பாவையர் மாறுநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. எ.

ப - ரை.— தளைத்தாமரை - மொட்டுத்தாமரையும், கட்டவிழ்தாமரை-அல ர்ந்ததாமரையும், வைகு - தங்குகிற, பொய்கைத்தடம் - ஸரஸ்ஸிலே, புக்கு-ப்ர வேசித்து, அதனுள்ளேயிருந்த, அடங்கா - அடங்காத கொழுந்து..., விடம்கால் - விஷத்தைச்கக்குகின்ற, அரவம் - காளியன், இளைக்க - இளைத்துப் போம்படி, திளைத்திட்டு - வ்யாபரித்து, அதனுச்சிதன்மேல - அதின் ஶிரஸ்ஸிலே, அடிவைத்த - திருவடிகளையிட்டுகர்வபங்கம்பண்ணின, அம்மான் - ஸர்வேஶ்வர னுடைய, இடம் - ஸ்தானமாய் ; வளைக்கை - வளையலணிந்தகையையுடைய, நுளை ப்பாவையர்-நுளைச்சிகள்,மாமதியம்-சந்திரனானவன், திளைக்கும்-தானடிபடப்பாயும் பெருந்தேவிளையாடுகிற, கொடி-கொடிகளையுடைய, மாளிகைசூழ்-மாளிகைகளாலே சூழப்பட்ட, தெருவில் - வீதிகளிலே, செழுமுத்து - பெருமுத்துக்களை, வெண்ணெ ற்கு - வெளுத்தநெல்லுக்கு, என - தருகிறோமென்று, கூவிக்கொண்டேபோக, ஒரு வருங்கேளாமையாலே, முன்றில் - ஒவ்வொருவர்வீட்டுவாசல்தோறும், சென்று மாறும் - தாமேவலியப்போய்மாற்றித்திரிகிற, நாங்கூர்—. ... (எ.)

ஏழாம்பாட்டு. (தளைக்கட்டவிழ்த்யாதி) மொட்டித்த தாமரை யும் கட்டவிழுகிற தாமரையும் தங்குகிற பொய்கைக்கரையிலே

அவதாரிகை. ஏழாம்பாட்டு.— காளியனுல்வந்த ஆபத்தைப்போ க்கின எம்பெருமான் திருமணிமாடக்கோயிலிலே நின்றருளினான், நெஞ்சே! அங்கே சென்றநுபவி என்கிறார்.

வ்யா.— (தளைக்கட்டவிழ்தாமரைவைகு பொய்கைத்தடம்புக்கு) தளைத்தாமரையும் கட்டவிழ்தாமரையும்;-மொட்டுத்தாமரையும் அல ர்ந்த தாமரையும், தங்குகிற பொய்கைக்கரையிலே புக்கென்னுதல்;

ஏழாம்பாட்டு.—(தளையித்யாதி.) கீழ்ச்சொன்ன பூதநாஸ்தநவிஷம் அம்மேதமெ ன்னும்படி பஹுமூலமாக விஷத்தைக் கக்குகிற காளியன்தடத்திலே "அஹியா தாப்ரஹர்த்தாஶ" என்கிறபடியே தானேபோய் நிரஸித்த செயலாகையாலே இவ்வபதாநத்திலே நெஞ்சுசென்று அநுஸவிக்கிறதென்னும் ஸங்கதியை ஹ்ருதிக ரித்துக்கொண்டு, தாத்பர்யமருளிச்செய்கிறார் (காளியனுலித்யாதி.)

கீழ்ச்சொன்னவிரண்டையும் க்ரமேண விவரியாநின்றுகொண்டு, "தடம்" என்று - கரையாக வருளிச்செய்கிறார் (தளையித்யாதி.) "புக்கு" என்ற பதத்தின் ஸ்வாரஸ்யத்தைப் பற்ற, "தடம்" என்றதுக்கு - இடம் என்றாய், அத்தால

சென்று. தடம் - கரை. ஒருவர்க்கு மடங்காதே விஷத்தை உமிழுகிற காளியனினைக்க, அதின் தலையிலே பாய்ந்து நின்று ந்ருத்தம் பண்ணினவனிடம். (மாமதியமிக்யாதி) பெரிய வந்த்ரனானவன் மாடங்களில் ஸௌம்யதையாலும் அலங்காரத்தாலும் ஊகவநாஜ்ஞையாலே ஸஞ்சரிக்கிறவன், அத்தைமறந்து துவக்குண்டு இங்கே விளையாடுமாய்த்து. கொடிமுடிந்து வழியிலிட்டால் அவனாலும் போகவொண்ணாதே. (தெருவிக்யாதி) திருவீதியிலே அழகிய முத்துக்களை யெடுத்துக்கொண்டு வந்து கழியருடைய பெண்கள் சென்று முற்றங்களிலே புக்கு முத்து நெல்லுக்கு மாறும் நாங்கூர். ... ... ஏ.

பொய்கையினுள்ளே புக்கென்னுதல். (அடங்காவிடங்காலரவம்) அடங்காதேகிளர்ந்தெழாநிற்பதாய், விஷத்தைக் காலாநின்றுள்ள, அரவமான்டு-காளியன், அது இளைக்கும்படி வ்யாபரித்து அத்தோடே விளையாடி, "அடிச்சியோம் தலைமிசைநீயணியாய்" என்று ப்ரார்த்திக்கும்படியான திருவடிகளை அதின்தலையிலேபாய்ந்துவைத்தது. (அம்மானிடம்) இப்படி ஸர்வரக்ஷணங்களையும் பண்ணும் ஸர்வேஸ்வரன் வர்த்திக்கிறதேசம்.

(மாமதியமிக்யாதி) வந்த்ரனானவன் ஜமஷ்ரக்ஷணத்துக்காக ஸஞ்சரிக்கிறவன் கொடிக்களிலே துவக்குண்டு, போகப்பெறாதே அவற்றோடே விளையாடுமாய்த்து; இப்படியேயிருக்கிற கொடிக்களையுடைத்தான மாளிகைகளாலே சூழப்பட்ட தெருவில். (செழுமுத்து வெண்ணெற்கென) "பொகங்கிற செல்லமையும், அழகியமுத்து" என்றுநின்றார்கள். (வெண்ணெற்கென) செந்நெல்வேண்டா, வெண்ணெல்லமையும் என்றுநின்றார்கள். (சென்று) வந்துகொள்வாரில்லைமிகுதியாலே; கொண்டுசென்று விற்குமித்தனையாய்த்து. முன்றில்[உடு]களிலே - வாசல்களிலே. (விளக்கைநுளைப்பாவையர்மாறும்) இடைச்சிகள் ஒப்பித்துத்தயிர்கடையுமாப்போலே, நுளைச்சிகளும் ஒப்பித்தாய்ந்து முத்துவிற்கப்போவது; இப்படி அலங்க்ருதைகளான நுளைச்சிகள் முத்துவிற்கைக்கு ஸஞ்சரிக்கிற திருநாங்கூரிலே. ஏ.

மெலித்தது-ஸப்தம்யர்த்தமாய், அத்தையருளிச்செய்கிறார் (பொய்கையித்யாதி.) காலாநின்றுள்ள - கக்காநின்றுள்ள. "இளைத்திட்டு" என்றதினர்த்தம் (விளையாடியென்றது.) மிதித்தவென்னாதே, "அடிவைத்த" என்றதால் தோன்றின ஈடுபாட்டையருளிச்செய்கிறார் (அடிச்சியோமித்யாதி.) அதிப்ரதிகூலன் தலையிலும் திருவடிகளை வைக்கைக்குஹேது அம்மானாகை என்று விவக்ஷித் தருளிச்செய்கிறார் (இப்படியித்யாதி.)

வெண்ணெல்லமையு மென்றது - அஸ்லாக்யமான செல்லமையு மென்கை.

ரு.— துளையார்கருமென்குழலாய்ச்சியர்தம்
துகில் வாரியும் சிற்றில் சிதைத்தும் முற்றா
விளையார்விளையாட்டொடு காதல்வெள்ளம்
விளைவித்தவம்மானிடம் ;—வேல்நெடுங்கண்
முளைவாளெயிற்று மடவார்பயிற்று
மொழிகேட்டிருந்து முதிராதவின்சொல்
வளைவாயகிள்ளை மறைபாடுநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. அ.

ப-ரை.— துளை ஆர் கருமென் குழல்-துளைமிக்கிருந்து கறுத்தும்ம்ருதுவான கூந்தலையுடைய, ஆய்ச்சியர்தம்-கோபஸ்த்ரீகளின், துகில்வாரியும்-வஸ்த்ரங்களை அபஹரித்தும்,சிற்றில் சிதைத்தும்-அவர்கள்சிற்றில்களைச் காலாலே பழித்தும்,முற்றாவிளையார் விளையாட்டொடு - மிக்கயௌவநம் வாராத பாலிகரோடுண்டான பாலக்ரீடையோடே, காதல்வெள்ளம்- ப்ரேமஸாகரத்தை,விளைவித்த-பிறப்பித்தும்இனைதுமிவை போலும் பலவிசித்ரகார்யங்களைச்செய்த, அம்மான்-ஸர்வேஸ்வரனது, இடம்-ஸ்தாநமாய் ; வேல் - வேல்போலே கூர்மையுடைத்தாய், நெடுங்கண - நெடிதான கண்களையும், முளை - முளைக்கிறவளவாய், வாள் - காந்தியையுடைத்தான, எயிற - தந்தபங்க்தியையுமுடைய, மடவார் - வைதிகஸ்த்ரீகள்,பயிற்று-அப்யஸிப்பிக்கிற, மொழி - வேதபதங்களை, கேட்டுஇருந்து - கேட்டுக்கொண்டிருந்து, பின்அவர்கள் அப்பால் அகன்றவாறே, முதிராத இன்சொல்-கடினமாகாத இனியசொல்லையும, வளைவாய - வளைந்தவாயையுமுடைய, கிள்ளை-கிளிகள், மறைபாடும் - வேதபாராயணம் பண்ணுகிற, நாங்கூர்—. ... ... ... ... (அ)

எட்டாம்பாட்டு. (துளையித்யாதி) துளையாநிற்கிற கருமென்குழலாய்ச்சியர்

அவதாரிகை. எட்டாம்பாட்டு.— திருவாய்ப்பாடியிற் பெண்களோடே நிரவதிகஸம்ஶ்லேஷத்தைப் பண்ணின க்ருஷ்ணன் திருமணிமாடக்கோயிலிலே நின்றருளினான், நெஞ்சே ! அங்கே சென்றநுபவியென்கிறார்.

வ்யா.— (துளையார்கருமென்குழலாய்ச்சியர்தம்) துளையாரென்று—துளைமிக்கிருக்கை. அதாவது-சுருண்டு கறுத்து ம்ருதுவான [கூய] குழலையுடையராய், கரையிலே பரியட்டங்களை யிட்டுவைத்து முழுகியேறும் பருவமாயிருந்துள்ள இடைப்பெண்களுடைய.

எட்டாம்பாட்டு.—(துளையாரித்யாதி.) அஞ்சாம்பாட்டில் ப்ரஸ்துதமான "தடந்தாமரைப்பொய்கைபுக்கான்" என்றதுக்கு இரண்டு தாத்பர்யத்தாலே யருளிச்செய்தாராகையாலே முந்தினதாத்பர்யத்தைக் கீழ்ப்பாட்டி லருளிச்செய்தார் ; இரண்டாம்தாத்பர்யத்தை யிப்பாட்டிலே வெளியிடுகிறாரென்றுதல்; அன்றிக்கே, கீழ்ப்பாட்டில் பொய்கைபுக்கது ப்ரஸ்துதமாகையாலே ஸமநந்தரமான வஸ்த்ராபஹரணத்தை யநுஸந்திக்கிறாரென்றுதல் ஸங்கதிதிருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (திருவாய்ப்பாடியிலித்யாதி.)

துகில் வாரியுமென்றபடி. இப்பொருள் சால அழகிது. துகில் வாரியு மென்கிற ப்ரகரணத்துக்குப் போரச்சேரும். துளை யென்பது - தலைக்கோலம். தலைக்கோலத்தை யுடைத்தாய், கருகி ம்ருதுவான குழலையுடைய ஆய்ச்சியர். அன்றியே, துளை-மூங்கிலாய், துளையான தோளும். கரு .மென்குழலாய்ச்சியரென்றுமாம். (ஆய்ச்சியரித்யாதி) இடைப்பெண்கள் பரியட்டங்களை விட்டுவைத்துக் குளிக்கப்புக, அவற்றை வாரிக்கொண்டு குருந்திலே யேறியும், அவர்கள் சிற்றிலிழைத்து விளையாட அத்தையழித்தும், மிகவும் சிறுப் பெண்களுடனேவிளையாடி அவர்களுக்குத் தன் பக்கலிலே ஆசைவெள்ளத்தை விளைவித்த அம்மானிடம். (வேலித்யாதி) வேல்போன்ற கூர்மையையும் புகரையும் ஒழுகுநீட்சியையுமுடைய கண்ணையும், முளைக்கிறவளவாய் ஒளியையுடைய தந்தபங்க்தியை யுடையருமாய், மடப்பத்தையுடைய பெண்கள் அந்யோந்யம் பேசுகிறபேச்சைக் கிளிகள்பேசுகிறதோஎன்றுகேட்டிருந்து, வளைந்தவாயையுடையகிளியானது பண்டு தனக்கு வாஸிதமான மறையைப்பாடும் நாங்கூர். அ.

துளையாநிற்கிறஎன்றுமாம். (துகில்வாரியும்சிற்றில்சிதைத்தும்) அவர்கள் கரையிலேயிட்டுவைத்தபரியட்டங்களை, "மசிமையிலீகூறைதாராய்" என்னும்படி வாரிக்கொடுபோய்க்குருந்திலே யேறியும், "தீமைசெய்யும் சிரீதராஎங்கள் சிற்றில் வந்து சிதையேல்" என்னும்படி சிற்றில்சிதைத்தும். (முற்றுவிளையார்விளையாட்டொடு) விளையாட்டுக்கு அவ்வருகு காரியங்கொள்ள வொண்ணாதபடியான பருவத்தையுடையவர்கள். யௌவநம் (க) ஊசாடாதபருவம்; அவர்களோடேயுண்டான விளையாட்டோடேகூட. (காதலித்யாதி) அவர்களுக்கு ப்ரேமஸாகரத்தை விளைத்த ஸர்வேஶ்வரனுடைய வாஸஸ்தாநம்.

(வேல்நெடுங்கணித்யாதி) வேல்போலே கூர்மையையுடைத்தாய் நெடிதான கண்களையுமுடையராய் முளைக்கிறவளவாய் ஒளியையுடைத்தான தந்தபங்க்திகளையுமுடையரான ஸ்த்ரீகளானவர்கள். (பயிற்றும்மொழிகேட்டிருந்தும்) அவர்கள் "முக்தமிடர்" என்றுப்போலே சிலவார்த்தைகள் சொல்லிக்கற்பிப்பார்களே, அவற்றைக்கேட்டிருந்தேயும்; அவைவிடக்கச்செய்தே. (முதிராதவித்யாதி) முற்றாதேயிருக்கையாலே ம்ருதுவாய் இனிதான சொல்லையுடைத்தாய் வளைந்த வாயையுமுடைத்தான கிளியானது. (மறைபாடும்) தனக்கு வாஸிதமான வேதத்தைப் பாடாநிற்கும். அவ்வூரிலுள்ளார் வேதபாராயணம் பண்ணிப்போருகையாலே அதுவேயிறே யிவற்றுக்குவாஸிதமாயிருப்பது; ஆகையாலே இவர்கள் சொல்லுகிறதுகிடக்க அவற்றைச்சொல்லாநின்றனவென்னுதல். அன்றிக்கே, இவர்கள்தாங்கள் உபாத்யாயருடைய பெண்களாகையாலே வேதபதங்களை அப்யஸிப்பிக்க, அவற்றைச்சொல்லாநின்றன வென்னுதல். (முதிராதவின்சொல்) கற்பிக்கிறவர்கள் பேசுப்போலே யன்றிறே இவற்றினுடையபேச்சு; இப்படியிருக்கிற திருநாங்கூர். ... ... ... அ.

துளையாநிற்கிற - ஜலத்திலே துளையாநிற்கிறவர்களான வென்றபடி. அ

(க) ஊசாடுதல் - ஊடாடுதல, நடமாடுதல.

மூ.— விடையோடவென்றாய்ச்சிமென்றோள்நயந்த
விகிர்தா விளங்குசுடராழியென்னும்
படையோடுசங்கொன்றுடையாயெனநின்
றிமையோர்பரவுமிடம்;-பைந்தடத்துப்
பெடையோடுசெங்காலவன்னம் துகைப்பத்
தொகைப்புண்டரீகத்திடைச்செங்கழுநீர்
மடையோடநின்றுமதுவிம்முநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. ௯.

ப - ரை.— விடை - ஸம்ச்லேஷத்துக்குபாதகமானஸப்தரிஷபங்களும், ஓட - ஓடிநசிக்கும்படி, வென்று - அவற்றைஜயித்து, ஆய்ச்சி-நப்பின்னைப்பிராட்டியின், மெனதோள் - ம்ருதுபுஜாலிங்கநத்தை, நயந்த - விரும்பின, விகிர்தா - வ்யாவ்ருத்தமான செயல்களையுடையவனே, விளங்கு - விளங்காநின்றுள்ள, சுடர் - புகரையுடைய, ஆழிஎன்னும்படையோடு-திருவாழியாகிற ஆயுதத்தோடேகூட, சங்குஒன்றுஉடையாய் - அத்விதீயமாயிருக்கும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுடையவனே, என நின்று-என்று சொல்லாநின்றுகொண்டு, இமையோர்-ப்ரஹ்மாதிதேவர்கள், பரவும்-இடைவிடாதேஸ்தோத்ரம்பண்ணுகிற, இடம் - ஸ்தாநமாய் ; பெடையோடு-பெட்டையோடுகூடின, செங்கால - சிவந்தகாலையுடைய, அன்னம்-அன்னமானது, மதுபாநத்தால்முன்னடி தோற்றாமையாலே, பைந்தடத்து-அழகியதடாகத்திலேயுள்ள, தொகைப்புண்டரீகம் - திரண்டதாமரைப்பூக்களை, துகைப்ப-துகைக்க, அத்தாலே, இடை - அத்தாமரைகளின்நடுவேயுள்ள, செங்கழுநீர்- செங்கழுநீர்பூக்களானவை, மடைஓட -மடைகள்நிரம்பியோடும்படி, நின்றுமதுவிம்மும்-மதுவெள்ளமிடாநின்றுள்ள, நாங்கூர்—. ... ... ... ... ... (௯)

ஒன்பதாம்பாட்டு. (விடையித்யாதி) நப்பின்னைப் பிராட்டியுடன் ஸம்ச்லேஷிக்கைக்கு விரோதியாய்நின்ற ரிஷபங்களேழையும் கொன்று, அவளுடனே ஸம்ச்லேஷித்து வ்யாவ்ருத்தமான செயல்களைச் செய்தவனே

அவதாரிகை. ஒன்பதாம்பாட்டு.— நப்பின்னைப்பிராட்டிக்காக எருதேழடர்த்தசெயலையும் திவ்யாயுதங்களோட்டைச் சேர்த்தியழகையும் சொல்லி தேவர்களேத்தத்திருமணிமாடக்கோயிலிலேநின்றருளிறுன், நெஞ்சே ! அங்கேசென்றநுபவியென்கிறார்.

வ்யா.— (விடையோட) நப்பின்னைப்பிராட்டியோட்டை ஸம்ச்லேஷத்துக்குப்ரதிபந்தகமான ரிஷபங்கள் ஓடும்படிவென்று. (ஆய்ச்சிமென்தோள்நயந்த விகிர்தா) அவளுடைய ம்ருதுவான தோளை விரும்பின வ்யாவ்ருத்தமான செயல்களையுடையவனே.

ஒன்பதாம்பாட்டு.—( விடையித்யாதி. ) பலகாலும் க்ருஷ்ணாவதாரத்தோடு ஐக்யம் சொல்லாநின்றீர், மணிமாடக்கோயிலிலிருக்குமவன் க்ருஷ்ணனோவென்ன ; ப்ரஹ்மாதிகள் அங்ஙனேத்துகிறார்கள் கேளாயென்கிறாரென்று ஸங்கதியுட்கொண்டருளிச்செய்கிறார் (நப்பின்னையித்யாதி.)

ஒடும்படி - தோற்கும்படி.

பத்தாம்பாட்டு. (வண்டாரித்யாதி) வண்டுகள்மொய்த்த பொழிலாலே சூழப்பட்ட நாங்கூர் மணிமாடக்கோயில் நெடுமாலுக்கு என்றும் தொண்டுபட்ட பெரியசீரையுடைய திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகரான ஆழ்வாரருளிச்செய்த தமிழ்மாலையை அப்யஸிக்க வல்லார். (கண்டார்வணங்கவித்யாதி)கண்டார் கண்டவிடத்திலே வணங்கும்படி, மதயானைமேலே, கடல்சூழ்ந்த பூமிக்கு அத்விதீயநிர்வாஹகராய், ஆகாசத்திலேசெல்ல ஓங்கின வெண்கொற்றக்குடைநிழலிலே. (விரிநீரித்யாதி) கடல்சூழ்ந்த பூமியிடத்திலுள்ளார் கொண்டாடப்படுவர். ஆண்டென்பது-அவ்விடமென்றபடி. விரிநீருலகத்திடத்தாரென்றபடி. கடல்சூழுலகுக்கொரு காவலராயென்று - கடல்சூழுலகு முன்பே சொல்லுகையாலே, விரிநீருலகென்று அது தன்னையே சொல்லில் புநருக்தமாம்.

"ஐச்வர்யத்தைபுருஷார்த்தமாகச் சொல்லுவானென்?" என்று பட்டரை நஞ்ஜீயர்கேட்க; "ஈச்வரனேயாகிலும் ஒருக்கால் பிறந்து

---

அவதாரிகை. பத்தாம்பாட்டு.—இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லுகிறது.

வ்யா.—(வண்டார்பொழில்சூழ்ந்து) சோலையென்று பேர்மாத்ரமாய், மயர்பாரம்பண்ண இழிந்த வண்டேயாய்க் கிடக்குமாய்த்து. (அழகாயவித்யாதி) தர்சநீயமான திருநாங்கூரில் திருமணிமாடக்கோயிலிலே நித்யவாஸம்பண்ணுகிற ஸர்வேச்வரனுக்கு. (என்றும் தொண்டாய கொல்சீர்) நித்யகைங்கர்யத்திலே அபிநிவிக்கையாலே வந்த நிரவதிகஸம்பத்தை யுடையராய். (வயல்மங்கையர்கோன்) நல்லவயலையுடைய திருமங்கைக்கு ராஜாவான ஆழ்வார். (ஒலிசெய் தமிழ்மாலை வல்லார்) ஓசையையுடைத்தாக அருளிச்செய்த தமிழ்த்தொடையாகிற இத்திருமொழியைக் கற்றவர்கள். (கண்டார்வணங்க) அநுகூல ப்ரதிகூலோதாஸீநரென்று வாசியின்றிக்கே, லோகமாகத் தங்கள்காலிலே வந்து விழும்படி மத்தகஜத்தின்மேலேயேறி. (கடல்சூழுலகுக்கொருகாவலராய்) க்ஷத்ரியஜந்மத்திலேபிறந்து * சதுஸ்ஸாகரபர்யந்தையான பூமிக்குத்தாங்களே நிர்வாஹகராய். (விண்டோயித்யாதி) ஆகாசத்திலேசென்று கிட்டும்படியான முத்துக்குடையின் கீழே கடல்சூழ்ந்த பூமியையாண்டு, விரும்பப்படுவர்; நிரவதிகப்ரீதியுக்தராவர்கள்.

"ஐச்வர்யத்தை புருஷார்த்தமாகச் சொல்லுவானென்?" என்று பட்டரைக்கேட்க; "'ஈச்வரனேயாகிலும் ஒருக்கால் பிறந்துஅபி

---

கிமம்.—(வண்டாரித்யாதி.) "விரும்புவர்" என்றதுக்கு - எல்லாராலும் விரும்பப்படுவரென்றர்த்த மருளிச்செய்து, விருப்பத்தையுடையவரென்றர்த்தாந்தரமருளிச்செய்கிறார் (நிரவதிகேத்யாதி.)

அபிஷேகம் பண்ணவமையும் ஸாமவததேஸஷமாக்கலாமாகில் என்று காணும் ஆழ்வார்திருவுள்ளமிருப்பது'' என்றருளிச்செய்தார். கO.

நஞ்ஜீயர் திருவடிகளே ஸரணம்.

ஷேகம்பண்ணவமையும் ஸாமவததேஸ மாக்கலாமாகில்' என்று[ரு காணும்திருமங்கையாழ்வாரிருப்பது'' என்றருளிச்செய்தருளினார். கO.

அடிவரவு.— நந்தா முதலை கொலை சிறை இறை பண் தளை துளை விடை வண்டார் சலம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேஸரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேஸரணம்.

(இருப்பது, என்றவதாரம். இனி தம்முடைய ப்ரஸங்கம் கற்றவர்க்கு ஸாமவத கைங்கர்யபர்யாயமான மங்களாஸிஸாஸநம் வேண்டாவென்றிருப்பரோ என்று இவ்வளவு ஆறித்துக்கொள்வது. ... ... ... ... கO.

ஜீயர்திருவடிகளேஸரணம்.

மூன்றாம்பத்து - ஒன்பதாந்திருமொழி - சலங்கொண்ட. ப்ரவேஸம்.

அபிமதவிஷயத்தை யநுபவிக்குமிடத்தில் அவயவங்கள்தோறும் விரும்பி அநுபவிக்குமாப்போலே அங்குள்ளதெல்லா முத்தேஸ்ய மாய், ஆபத்ஸகனாய், ஸர்வலோக ரக்ஷகனான ஸர்வேஸ்வரன், ரக்ஷணத்துக் குப்பாங்கான தேஸமென்று விரும்பிவர்த்திக்கிறதேஸமாகை யாலே, அங்குண்டான திர்யக்குக்களுங்கூட, முக்தரநுபவம் பண்ணுகிறாப்போலே களித்துவர்த்திக்கிற தேஸம்; ஆனபின்பு நீயுமத்தேஸத்தைப்ராபி யென்று திருவுள்ளத்தைக்குறித் தருளிச் செய்கிறார். ... ... ... ... ... *

அபிமதவிஷயத்தை யநுபவிக்குமிடத்தில் அவயவங்கள்தோறும் விரும்பியநுபவிக்குமாப்போலே, அங்குள்ளதெல்லாமுத்தேஸ்யமாய், ஆபத்ஸகனாய் ஸர்வஜகத்துக்கும் ரக்ஷகனாயிருக்கிற ஸர்வேஸ்வரன் "ரக்ஷணத்துக்குப்பாங்கான தேஸம்'' என்று விரும்பி வர்த்திக்கிற தேஸமாகையாலே, அங்குண்டான திர்யக்குக்களுமகப்பட, முக்தர் ஸாமவநுபவத்தாலே களிக்குமாப்போலே களித்துவர்த்திக்கும் தேஸ மானபின்பு நீயுமத்தேஸத்தைப்ராபி என்று திருவுள்ளத்தைக்குறித் தருளிச்செய்கிறார். ... ... ... ... *

* சலங்கொண்டவினப்ரவேஸம்.— திருநாங்கூரில் திருமணிமாடக்கோயிலை யநுபவித்த ஆழ்வார் அங்குள்ள மற்றைத்திருப்பதிகளையுமநுபவிக்கிறார் இனிப் பத்துத்திருமொழியாலேயென்று திருவுள்ளம்பற்றி, அவையெல்லாவற்றுக்கும் ஸங் கதியருளிச்செய்கிறார் (அபிமதேத்யாதி.) அங்குள்ளதெல்லாம் - திருநாங்கூர் திரு ப்பதிகளெல்லாம். (உத்தேஸ்யமாய்) என்றவதாரம், தோற்றி என்று ஸேஷம். இத்திருமொழியில் ப்ரமேயத்தையருளிச்செய்கிறார் (ஆபத்ஸகனாயித்யாதி.) *

மூ.—சலங்கொண்ட விரணியன தகல்மார்வங்கீண்டு
தடங்கடலைக்கடைந்தமுதங்கொண்டுகந்தகாளை
நலங்கொண்டகருமுகில்போல் திருமேனியம்மான்
நாடோறும் மகிழ்ந்தினிது மருவியுறைகோயில்
சலங்கொண்டு மலர்சொரியும் மல்லிகையொண்செருந்தி
செண்பகங்கள் மணநாறும் வண்பொழிலினூடே
வலங்கொண்டுகயலோடி விளையாடு நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. க.

ப - ரை.— சலம்கொண்ட - மத்ஸரித்துக்கொண்டுதிரிகிற, இரணியனது - ஹிரண்யனுடைய, அகலமார்வம் - விசாலவக்ஷஸ்தலத்தை, கீண்டு - அநாயாஸேந கிழித்துப்பொகட்டும், தடம்கடலை - பெரியதிருப்பாற்கடலை, கடைந்து - மதித்து, அமுதம் - அதில்பிறந்த அம்ருதத்தை, கொண்டு - தேவதைகளுக்குப் பங்கிட்டுக் கொடுத்தும், இன்னுமிவ்வாறே ஆச்ரிதரக்ஷணம் பண்ணிக்கொண்டு, உகந்த - ஸந்தோஷயுக்தராயிருந்த, காளை - யுவாவாய், நலங்கொண்ட கருமுகில்போல் - அழகிய நீலமேகம்போன்ற, திருமேனி அம்மான் - திவ்யதேஹத்தையுடையனான ஸர்வேச்வரன், நாடோறும் - ப்ரதிதினமும், மகிழ்ந்து - ஸந்தோஷித்துக்கொண்டு, இனிது - ஆச்ரிதருக்கினிதாம்படி, மருவியுறைகோயில் - ஆநந்யப்ரயோஜநனாய் நித்யவாஸம்பண்ணுகிற தேசமாய்; கயல் - நீரைவிட்டால் தரிக்கமாட்டாத கயல் மத்ஸ்யங்கள், ஓடி - தனக்குவாஸஸ்தாநமான நீரைவிட்டுஓடி, சலங்கொண்டு மலர்சொரியும் - இசலிஇசலி மலரைச்சொரிகிற, மல்லிகைஒண்செருந்திசெண்பகங்கள் - அழகியமல்லிகைகளும் செருந்திகளும் சம்பகங்களும், மணம்நாறும் - வாஸனையைப்பரப்புவிக்கிற, வண்பொழிலினூடே - வளமிருந்தசோலையிலே, வலங்கொண்டுவிளையாடும் - அப்புஷ்பவாஸநாக்ராணபலத்தாலே துள்ளி விளையாடுகிற, நாங்கூர்—. ... ... ... ... ... ... (ச)

முதற்பாட்டு. (சலங்கொண்டவித்யாதி) ஸ்ரீப்ரஹ்லாதன்பக்கலிலே சீற்றத்தையுடைய ஹிரண்யனுடைய அகன்றமார்வைப்பிளந்து, பெரிய கடலைக்கடைந்து அம்ருதத்தை

முதற்பாட்டு.— (சலங்கொண்ட) சீற்றத்தையிட்டாய்த்து வருத்தது. சீற்றத்தையுடையனாயிருக்கிற ஹிரண்யனுடைய, வரபலத்தாலே திண்ணியதாய் அகன்றமார்வை, தன்னுடைய சீற்றத்தைக் காட்டி வெதுப்பிப் பதஞ்செய்யப்பண்ணி பின்னை அநாயாஸேந கிழித்து, ஒருவரால்பரிச்சேதிக்கவொண்ணாத கடலை ஸ்வாச்ரயபதார்த்தங்களைப்போலே பரிச்சேதித்துக்கடைந்து, அதில் நல்லுயிரான அம்ருதத்தை

முதற்பாட்டு.— (சலமித்யாதி.) "சலங்கொண்ட" என்று அவனைவிசேஷித்ததுக்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (சீற்றத்தையிட்டித்யாதி.) வாக்யார்த்தம் (சீற்றத்தையுடையனாயித்யாதி.) "அது" என்றதினர்த்தம் (வரபலத்தாலேயித்யாதி.) பிளந்துஎன்னாதே, "கீண்டு" என்று - அநாயாஸம் தோற்றச் சொன்னதுக்கு பாவம் (சீற்றத்தைக்காட்டியித்யாதி.) தடம் - விஸ்தாரமென்றருளிச்செய்கிறார் (ஒருவராலித்யாதி.)

தேவர்களுக்குக்கொடுத்துகந்தகாளை. (நலங்கொண்டவித்யாதி) அழகையுடைத்தான காளமேகம்போன்ற திருமேனியையுடைய ஸர்வேச்வரன், நாள்தோறும் ஆநந்தித்து இனிதாகப்பொருந்தி நித்யவாஸம் பண்ணுகிறகோயில். (சலங்கொண்டித்யாதி) ஒன்றுக்கொன்று இசை[ந்து] விச் சொரிகிற மல்லிகை, அழகியசெருந்தி, செண்பகங்கள், இவை நறுநாற்றம் கமழுமழகியசோலையுள்ளே, அச்சோலையில் மடுவெள்ளத்திலே புக்கு அத்தாலே வலமுடைய கயல்களானவை விளையாடும் நாங்கூர். ... ... ... ... ... க.

வாங்கி, "நம்மை ஆச்ரயித்ததேவஜாதிகார்யம் தலைக்கட்டப்பெற்[றோ]ம்!" என்று அதுபெற்றால் அவர்களுக்கு வருமுகப்பைத் தானுடையனாய், அவ்வமிர்தத்தைஸ்ருஜித்தார்க்குக்கழியக்கடவ ஜராதிகளைத்தானுடையனாயிருக்கிறவன். (நலங்கொண்டவித்யாதி) அவ்வமிர்தத்தைநாய்க்கிடாய் என்னும்படியான வடிவையுடையவன். "யஸ்யமேகோபமோ" என்கிறபடியே உபமாநமானவடிவையுடையமேகம் திருமேனிக்கொப்பாகப்போராமையாலே வ்யாவ்ருத்தமான வழகையுடைத்தாய், ச்யாமளமாயிருப்பதொரு மேகம்போலே திருமேனியையுடையனாய், அத்தாலே "இவனேஸர்வேச்வரன்" என்று தோற்றும்படியிருக்கிறவன். ப்ரஹ்லாதன்கள் புகுந்தபோதாக ஹிரண்யனை நிரஸிக்கவும் கடனுடையனுமொண்ணாது என்று ஏற்கவேவந்து, பெரிய ஹர்ஷத்தோடே நித்யவாஸம் பண்ணுகையாலே ஆச்ரிதர்க்கு இனிதானதேசம்.

(சலங்கொண்டித்யாதி) அதுக்குஹேது விருக்கிறபடி. "ஸங்கதாஸ்ஸுமநஸ:" என்கிறபடியே - இசலியிசலி மலரைச்சொரிகிற மல்லிகை, அழகிய செருந்தி, அப்படிப்பட்ட செண்பகம், இவை[உடு] பாமனத்துக்குப் புறப்படவிட. (வண்பொழிலித்யாதி) நீரிலேகிடந்தால் கிளிக்கையுடைத்தாய்க் கரையிலே யேறினால் அதின்றிக்கே யிருக்கக்கடவ மத்ஸ்யங்களானவை, அந்நீர்தானும் உத்தும்படி அதிற்காட்டிலும் நிலமிடத்தானே நன்றாயிருக்கையாலே அச்சோலையில் மணத்தைத்துகளாக்கண்பண்ணி அத்தாலே மிடுக்குடைத்தாய், முக்தர் ஸாமவேதகானத்தைப் பண்ணி "அஹமந்நமஹமந்நம்" என்று களிக்குமாப்போலே கயல்களானவை அங்கேயிங்கேதுள்ளி விளையாடாநின்றுள்ள திருநாங்கூர். ... ... ... ... க.

"காளை" என்று இப்போது சொல்லுகைக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவ்வமிர்தத்தைஸ்ருஜித்தார்க்கித்யாதி.) ஸமஹிவ்யாஹாரதாத்பர்யம் (அவ்வமிர்தத்தைநாய்க்கிடாயித்யாதி.) "நாடோறும்மகிழ்ந்து - மருவியுறை - இனிது - கோயில்" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (பெரியவித்யாதி.)

அதுக்கு - எம்பெருமான் பெரியஹர்ஷத்தோடேவர்த்திக்கைக்கு. கயல்கள் பொழிலில்விளையாடக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (நீரிலேயித்யாதி.) க.

மூ.—திண்ணியதோரரியுருவாய்த் திசையனைத்தும்நடுங்கத்
தேவரொடுதானவர்கள் திசைப்பவிரணியனை
நண்ணியவன்மார்வகலத் துகிர்மடுத்தநாதன்
நாடோறும்மகிழ்ந்தினிது மருவியுறைகோயில்
எண்ணில்மிகுபெருஞ்செல்வத் தெழில்விளங்குமறையும்
ஏழிசையும்கேள்விகளு மியன்றபெருங்குணத்தோர்
மண்ணில்மிகுமறையவர்கள் மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. உ.

ப-ரை.— திசையனைத்தும் - திக்கிலுள்ளவர்கள், நடுங்க - பயப்படவும், தேவரொடுதானவர்கள் - தேவதாநவாதிகள், திசைப்ப-கலங்கவும், திண்ணியதோர் அரிஉருவாய் - த்ருடமாய்அத்விதீயமான ந்ருஸிம்ஹரூபியாய், இரணியனை - ஹிரண்யாஸுரனை, நண்ணி - கிட்டி, அவன் - அவ்வஸுரனது, மார்வகலத்து - விசால வக்ஷஸ்தலத்தில், உகிர்மடுத்த - நகங்களையூன்றிக்கிழித்த, நாதன்-ஸ்வாமி, நாடோறும்மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில்—; எண்ணில்மிகுபெருஞ்செல்வத்து - கணநாதீதமஹத்ஸம்பத்தையுடைத்தாய், எழில்விளங்கு - அழகுவிளங்காநின்றுள்ள, மறையும் - வேதங்களும், ஏழிசையும் - ஸப்தஸ்வரங்களும், கேள்விகளும்-அங்கங்கள்முதலானவற்றால்வரும்கேள்விகளும், இயன்ற - நிறைந்த, பெருங்குணத்தோர்- ஆத்மகுணஸம்பந்நராய், மண்ணில்மிகு - பூஸுரருக்குள்சிறந்தவரான, மறையவர்கள் - ப்ராஹ்மணர்கள், மலிவெய்தும் - நெருங்கிவர்த்திக்கிற, நாங்கூர்—. (உ)

இரண்டாம்பாட்டு. (திண்ணியவித்யாதி) ஹிரண்யனைக்கண்டு பிற்காலியாதபடி திண்மையுடையதொரு ஸிம்ஹமாய், திக்குக்களிலுள்ளாரெல்லாரும் நடுங்க, தேவர்தாநவர்கள் கலங்க, ஹிரண்யனைக் கிட்டி அகன்றமார்விலே உகிரைநட்டுப்பிளந்த ஸர்வேச்வரன் நாள்தோறும் அழகழிந்து ஸ்நேஹித்துப்பொருந்தி வர்த்திக்கிறதேசம். (எண்ணிலித்யாதி) எண்ணிறந்த ஐச்வர்யமும், நிர்தோஷத்வத்தால் வந்த அழகுவிளங்காநின்ற வேதமும், ஸப்தஸ்வரங்களும்,

இரண்டாம்பாட்டு.— (திண்ணியதோரரியுருவாய்) ஹிரண்யனுடைய சீற்றமென்றால் பிற்காலியாதபடியான நரஸிம்ஹமாய், திக்குக்களெல்லாமஞ்ச, அநுகூலப்ரதிகூலவிபாகமின்றியே எல்லாருமொக்கக் கலங்க. (இரணியனைநண்ணி) எரிகிற பெருநெருப்பிலே சென்றுகிட்டுவாரைப்போலே க்ரூரனை பையலைத்தீண்டி. (அவன்மார்வகலத்துகிர்மடுத்த ) போக்குத்தேடி இடங்காணமையாலே சுழித்துவருகிற ருயிரவெள்ளத்துக் கொருவழிகண்டு விட்டாப்போலே, அவனுடைய பரந்தமார்பிலே திருவுகிரையூன்றி அவனையழியச்செய்து, [கூடு] தன்னுடைய ஈச்வரத்வத்தை நிலைநிறுத்தினவன் நித்யவாஸம்பண்ணுகிறதேசம்.

( எண்ணில்மிகுவித்யாதி ) எண்ணிறந்திருப்பதாய் நிர்தோஷத்வாதிகளால் வந்த நிரயிகஸம்பத்தையுடைத்தாய், அவ்வழியாலே அழகு விளங்காநின்றுள்ள வேதமும், ஸப்தஸ்வரங்களும்,

இரண்டாம்பாட்டு.— (திண்ணியதோரித்யாதி.) கீழ்ப்பாட்டில் ப்ரஸ்துதமான ஹிரண்யநிரஸநத்தை ஸப்ரகாரமாகவநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

மூ.—அண்டமுமிவ்வுலகடனு மவனிகளுமெல்லாம்
அமுதுசெய்ததிருவயிற்ற னரன்கொண்டுதிரியும்
முண்டமதுநிறைத் தவன்கண் சாபமதுநீக்கும்
முதல்வனவன் மகிழ்ந்தினிது மருவியுறைகோயில்
எண்டிசையும் பெருஞ்செந்நெ லிளந்தெங்குகதலி
யிலைக்கொடியொண் குலைக்கமுகோடிசலிவளம்சொரிய
வண்டுபலவிசைபாட மயிலாலுநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. ௩.

ப - ரை.— அண்டமும் - அண்டங்களையும், இவ்வுலகடனும் - ஸ்தாவர்ஐஸா ங்களையும், அவனிகளுமெல்லாம் - ஸப்தத்வீபபூமிகளெல்லாவற்றையும், அமுது செய்த - கபளீகரித்த, திருவயிற்றன் - திருஉதரமுடையவனும், அரன் - பாபத்தா லுபஹதனான ருத்ரன், கொண்டு-பரிக்ரஹித்துக்கொண்டு,திரியும் - திரிகிற, முண் டமது நிறைத்து - தலையோட்டைநிறைத்து, அவன்கண் சாபமதுநீக்கும் - அவனை யொருபோதும் விடாதேயிருக்கிறபாபத்தைப்போக்கியருளிய, முதல்வனவன்-ஸர்வ நியந்தாவானஸ்வாமி, மகிழ்ந்தினிது மருவியுறைகோயில்—; எண்டிசையும் - பார் த்தபார்த்தவிடமெங்கும், பெரும்செந்நெல் - பெரியசெந்நெற்களும்,இளம்தெங்கு- இளமையையுடைத்தான நாரிகேளங்களும், கதலி - வாழைகளும், இலைக்கொடி- வெற்றிலைக்கொடிகளும், ஒண்குலைக்கமுகோடு - அழகிதாகக்காய்த்த கமுக மரங்களோடே, இசலி - ஸ்பர்த்தித்துக்கொண்டு, வளம்சொரிய - ஸம்ருத்தியைச் சுரக்க, இவற்றிலேபுக்குமதுபானம்பண்ணி,வண்டு-வண்டுகள்,பலவிசைபாட-அநேக ராகங்களைப்பாடாநிற்க, அவற்றைக்கேட்டு, மயில்ஆலும் - மயூரங்கள் ந்ருத்தம் பண்ணுகிற, நாங்கூர்—. ... ... ... ... ... (௩)

இவற்றிலோர்த்ரவணத்தால்வந்த ஆத்மகுணங்களையுமுடையராய். (மண்ணிலிதயாதி)ஹூமியில் விஷ்வான்களில் மிக்க வேதத்தையுடைய ஸ்ராஹ்மணர் மிக்க தேசம். ... ... ... உ.

அங்கங்களும்,மற்றுமுள்ளவற்றால்வரும்கேள்விகளும்,இவற்றைவாஸ னைபண்ணி அதனால் வந்த ஆத்மகுணங்களால் மிக்கிருப்பாராய். (மண்ணில்) “ ஹூமியிலிதுக்கிவனேகடவான், இதுக்கிவனே கட வான்” என்னும்படி சமைந்த ஸ்ராஹ்மணர் நெருங்கிவர்த்திக்கிற தேசம். ... ... ... ... ... உ.

“ஏழிசை” என்றது - ஆறங்களுக்கும் மீமாம்ஸாதிகளுக்குமுபலக்ஷண மென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (அங்கங்களும்மற்றுமென்று.) “கேள் வி-” ச்ரவணமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (உள்ளவற்றாலித்யாதி.) வாஸனைபண்ணியென்றது - மநநத்தை; இது, “இயன்ற” எனறதினர்யம். உ.

மூன்றும்பாட்டு.— (அண்டமித்யாதி.) ஓராஸ்ரிதனைப்ரஹ்லாதனுக்குதவின வளவன்றிக்கே, ஸகலலோகங்களையும் வயிற்றிலேவைத்து தன்னாலேதானேயிடர் பட்ட ருத்ரனுக்குமுதவினனென்று ஸௌலப்யத்தையருளிச்செய்கிறு ரென்று ஸங்கதி.

மூன்றாம்பாட்டு. (அண்டமித்யாதி) அண்டமும், அலைமோதுகிற கடலும், ஸமுமிகளும், இவற்றையெல்லாமமுதுசெய்த திருவயிற்றன். (அரனித்யாதி) ஹரன் கையிலே கொண்டுதிரிகிற தலையோட்டைநிறைத்து அவனிடத்து ஸாபத்தைப்போக்கின ஸர்வேஶ்வரன், மகிழ்ந்து ஸ்நேஹித்து நித்யவாஸம்பண்ணுகிற கோயில். (எண்டிசையுமித்யாதி) எட்டுதிக்கும், பெரியசெந்நெலும் இளந்தெங்குகளையும் வாழைகளையும் வெற்றிலைக்கால்களையும் அழகிய தாறுகளையுடைய கமுகுகளையுமுடைத்தாய், இவைதான் ஒன்றுக்கொன்று இசலி நன்மைகளைச்சொரிய, வண்டுகள் பல இசைகளைப்பாட, மயில்கள் ஆலித்து ஆடும் நாங்கூர். ... ... ... ... ௩.

நாலாம்பாட்டு. ( கலையித்யாதி ) மேகலைவிளங்காநின்ற அகன்ற அல்குலையுடைய ஸமுர்ப்பணகையை

---

மூன்றாம்பாட்டு.— (அண்டமித்யாதி) அண்டமும், இந்தலோகத்தைச் சூழப்போந்து அலையெறிகிற கடலும், ஏ்விபங்களையுமெல்லாம் அமுதுசெய்த திருவயிற்றையுடையவன். (அரனித்யாதி) ஸாபத்தாலே உபஹதனாயிருக்கிற ருத்ரன் கொண்டுதிரிகிற தலையோட்டை நிறைத்து, அவனை யொருநாளும்விடாதேயிருக்கிற ஸாபத்தைப்போக்கி, இப்படி ஸர்வநியந்தாவானவன் வர்த்திக்கிறகோயில்.

(எண்டிசையித்யாதி) பார்த்த பார்த்தவிடமெங்கும், பெரிய செந்நெல், முக்தர் பக்ஷுவி0ஸதிவார்ஷிகராயிருக்குமாப்போலே இளைதாயிருக்கிற தெங்கு, வாழை, வெற்றிலைக்கொடி, அழகிதாகக் காய்த்த கமுகுகளோடேகூடி, ஒன்றுக்கொன்று இசலி ஸம்ருத்தியையச் சுரக்க, இவற்றிலே புக்கு மதுபானம்பண்ணி, உள்ளுப்புக்க த்ரவ்யம் இருந்தவிடத்திலிருக்கவொட்டாமையாலே வண்டுகளானவை பல இசைகளையும்பாட, அவற்றைக்கேட்டு மயில்களானவை ஆடாநின்றுள்ள. ௩.

நாலாம்பாட்டு.— (கலையித்யாதி) விளங்காநின்றுள்ள பரியட்டத்தையுடைத்தான அகன்ற நிதம்ப ப்ரதேஸத்தையுடையளாய்க்கொண்டுதோற்றின, ராக்ஷஸஜாதியாகக்கொண்டாடும்படியிருக்கிறபெண்ணை.

"அண்டமும்" என்றது - ஆகாஸமென்றாய், உபரிதநலோகங்களையெல்லாமசொல்லுகிறது. ... ... ... ... ... ௩.

நாலாம்பாட்டு.—(கலையித்யாதி.)நாட்டார்பழிக்கைப்போக்கினவனன்றிக்கே, * நித்யாநபாயினியான பிராட்டிக்கு உதவினவனென்றநுஸந்தித்து, அந்தப்பிராட்டிபிரிவுவருகைக்கடியான ஸமுர்ப்பணகையின் மூக்கறுத்ததோள்வலியை யிப்பாட்டிற்சொல்லி, மேலிற்பாட்டிலே பிராட்டிக்குதவினமையை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

மூ.—கலையிலங்குமகலல்கு லரக்கர்குலக்கொடியைக்
காதொடுமூக்குடனரியக் கதறியவளோடித்
தலையிலங்கைவைத்து மலையிலங்கைபுகச்செய்த
தடந்தோளன்மகிழ்ந்தினிது மருவியுறைகோயில்
சிலையிலங்குமணிமாடத்துச்சிமிசைச்சூலம்
செழுங்கொண்டலகடிரியச சொரிந்தசெழுமுத்தம்
மலையிலங்குமாளிகைமேல் மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. ச.

---

ப - ரை.— இலங்குமகலை - விளங்காநின்றுள்ள பரியட்டத்தையும், அகல் அல்குல - அகன்ற நிதம்பப்ரதேசத்தையுமுடையளாய்க்கொண்டுதோற்றின, அரக்கர்குலம் - ராக்ஷஸகுலத்திற்பிறந்த, கொடியை - கொடிபோலுமிடையையுடைய சூர்ப்பநகையினது, காதொடுமூக்கு - கர்ணநாஸிகைகளை, உடன் அரிய - ஏககாலத்திலே அறுக்க, அவள் - அச்சூர்ப்பநகையானவள், கதறி-கோவெனக்கூப்பிட்டு, தலையில - தனதலைமேலே, அம்கைவைத்துஓடி - அழகியகையைவைததுக்கொண்டு ஓடோடி, மலை - மலையின்மேல இருக்கிற, இலங்கைபுகச்செய்த - லங்கையிலேபுகுமபடிபண்ணின, தடம்தோளன - மஹாபாஹுவான சக்ரவாத்திதிருமகன், மகிழ்ந்தினிது மருவியுறைகோயில—; சிலையிலங்கு - ஒளிவிளங்குகிற, மணிமாடத்து உச்சிமிசை - மணிமாடசிகரத்தினமேலே இருக்கும், சூலம் - சூலங்கள், செழுங்கொண்டல - ஸமுத்ரத்திறபுக்கு உதகங்களையும் முத்துக்களையுமுடைய வாரிக்கொண்டு தொட்டாரமேலே தோஷமாமபடி மெள்ளமெள்ள நகழ்ந்துவருகிற மேகங்களினுடைய, அகடுஇரிய - கீழ்வயிற்றைப்பேதிக்க, உடனே, சொரிந்த-ஸ்ரவித்த, செழுமுத்தம-அழகியமுத்துக்களானவை, மாளிகைமேல - மாளிகைகளின்மீது, மலையிலங்குமலிவெய்தும - ஒருமலைமேலே மலைசெய்துவைத்தாப்போற குவிந்துகிடக்கிற, நாங்கூர்—. ... ... ... ... ... ... (ச)

---

மூக்கையும செவியையுமறுத்துவிட, அவள்தலையிலே கையைவைத்துக் கூப்பிட்டுக்கொண்டோடி மலைமேலேயான லங்கையிலேபுகும்படி செய்தபெரியதோளையுடைய அசசக்ரவர்த்தித்திருமகன் மகிழ்ந்துவிரும்பிவாத்திக்கிறதேசம்.

---

தனக்கொரு பரியட்டமும் பெண்மையுமுடையளாய் வந்து தோற்றினளாயத்து. (காதித்யாதி) அவளேறிட்டுக்கொண்டு வந்தவடிவை ப்போககித் தானும்படிபண்ணிவிட்டானாய்த்தது. (கதறியித்யாதி) அநேரம் அவளும கூப்பிட்டுககொடு தலையிலே கையைவைத்து மலையின் மேலேயான லங்கையிலே புகும்படிபண்ணின தோள்வலியையுடையவன் நித்யவாஸம்பண்ணுகிற கோயில்.

---

ராக்ஷஸியையிவரிப்படி வர்ணிக்கைக்கு ப்ரக்ஸ்தோபயோகமென்னென்ன வருளிச்செயகிறார(தனக்கித்யாதி;)ஏறிட்டுக்கொண்டுவந்தவடிவையென்றது-அலங்கரித்துக்கொண்டு ஆஹிரூபயத்தோடுவநதவடிவையென்றபடி. தானும்படி-விரூபையாம்படி. ராக்ஷஸிகளுக்கு வைரூப்யம்ஸஹஜமென்று திருவுள்ளம். இத்தால் - கள்ளவேஷத்தைக்காதலித்துக் காட்டிவிட்டானென்றதாய்த்து. அக்கையென்றது- "அங்கை" என்றுமெலலொற்றாகக்கிடக்கிறதாய், சூர்ப்பணவியென்று பேர்பெம்படி வோரமானகையெனறுதல், அம என்று - அழகாய், விபரீதலக்ஷணயாவோரமானகைஎன்றுதல் ஸ்வாரஸ்யம் கண்டுகொள்வதென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (தலையிலேகையைவைத்தென்று.)

மூ.—மின்னனையநுண்மருங்குல் மெல்லியற்காவிலங்கை
 வேந்தன்முடியொருபதும் தோளிருபதும்போயுதிரத்
தன்னிகரிற்சிலைவளைத்தன்றிலங்கைபொடிசெய்த
 தடந்தோளன்மகிழ்ந்தினிது மருவியுறைகோயில்
செந்நெலொடுசெங்கமலம் சேல்கயல்கள்வாளை
 செங்கழுநீரொடுமிடைந்து கழனிதிகழ்ந்தெங்கும்
மன்னுபுகழ்வேதியர்கள் மலிவெய்துநாங்கூர்
 வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. ரு.

ப-ரை.—அன்று-அக்காலத்திலே; மின்னனைய-கொடிமின்னலையொத்த, நுண்மருங்குல்-சிற்றிடையையும், மெல்லியற்கா-மிருதுஸ்வபாவத்தையுமுடையளான பிராட்டிக்காக, இலங்கைவேந்தன-லங்காதிபனான ராவணனுடைய, முடியொருபதும்-கிரீடமிலகும் பத்துத்தலைகளும், தோளிருபதும்-இருபதுகைகளும், போயுதிர-ஏகதேசகலங்களாயுதிர்ந்துபோம்படி, தன்னிகரில்சிலைவளைத்து-ஒப்பற ஓங்கிய தன் கோதண்டத்தைவளைத்து, இலங்கை - லங்காநகரத்தை, பொடிசெய்த - பொடியாக்கின, தடம்தோளன் - மஹாபாஹுவான சக்ரவர்த்தித் திருமகன், மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில்—, செந்நெலொடு-செந்நெற்களும், செங்கமலம் - செந்தாமரைப்பூக்களும், சேல்கயல்கள்வாளை -சேல்மீன் கயல்மீன் வாளைமீன்களும், ஆகியஇவைகள், செங்கழுநீரொடு- செங்கழுநீர்ப்பூக்களுடனே, மிடைந்து-சேர்ந்துகொண்டு, கழனியெங்கும் - கழனிகளிலெல்லாம், திகழ்ந்து - ப்ரகாசிக்கவும், மன்னுபுகழ் - நித்யநிர்தோஷமானகீர்த்தியையுடைய, வேதியர்கள் - ப்ராஹ்மணர்கள், மலிவெய்தும்-வீதியெங்கும்நெருங்கி வர்த்திக்கும்படியாகவுமிருக்கிற, நாங்கூர்—. (ரு)

(சிலையிலங்கித்யாதி) மலைபோலே விளங்காநின்றுள்ள மணிமயமான மாடங்களின்மேல் நின்ற சூலங்களானவை, அழகிய கொண்டலானவை கடலிலேபுக்கு திரையும் முத்தையும் முகந்துகொண்டு கனத்தாலே நகழ்ந்து நகழ்ந்து வருகிறவற்றினுடைய கீழ்வயிற்றைப்பற்றி. அவை கோணிகை வாய்விட்டாப்போலே சொரிந்த நல்ல முத்துக்களானவை. (மலையிலங்கித்யாதி) மாளிகைகளின்மேலே, மலைமேலே மலை செய்துவைத்தாப்போலேயாய்த்துக் குவித்துக்கிடப்பது. ... ௬.

( சிலையித்யாதி ) சிலையென்று - வில்லுக்கு பர்யாயசப்தமாய், வில்லென்று - ஒளியாய், ஒளிவிளங்காநின்றுள்ள மணிமயமான மாடங்களி னுச்சியின்மேலேயுண்டான சூலமும். இதாய்த்து அவ்வூரில் ம்ஹோங்களுடைய விருக்கும்படி. மேவங்களானவை கடலிலேபோய்ப் புக்கு முத்தையடைய வாரிக்கொண்டு (க) நகழ்ந்து நகழ்ந்து நடக்கமாட்டாதேவரும் ; மாளிகைகளில் சூலங்களானவை இவற்றினுடைய கீழ்வயிற்றைப்போழும் ; முன்பே தொட்டார்மேலே ஷோஷமாயிருக்கிறவவை முத்தைச்சொரியும். (மலையிலங்குமாளிகைமேல்மலிவெய்தும்) அப்போது ஒருமலைமேலே மலைசெய்துவைத்தாப்போலேயாய்த்துக் குவித்துக்கிடப்பது. ... ... ... ௬.

சூலமும் - ம்ஹோலங்காரமான பொற்குடங்களின்நுனியும், பேரழும்-பொருக்கும்; பீறமென்றபடி. ... ... ... ... ... ௬.

(க) நகழ்தல் - நகர்தல் - ஊர்தல்.

அஞ்சாம்பாட்டு. (மின்னித்யாதி) மின்னொத்த இடையையும் மார்தவத்தையுமுடைய ஸ்ரீஜநகராஜன்றிருமகளுக்காக, லங்கேஶ்வரனான ராவணன் தலைபத்தும் தோளிருபதும் அற்றுவிழ. (தன்னிகரித்யாதி) தனக்கொப்பில்லாத ஸ்ரீஶார்ங்கத்தை வளைத்து லங்கையைப் பொடியாக்கின பெரியதோள்களையுடைய சக்ரவர்த்தித்திருமகன் விரும்பி வர்த்திக்கிற தேஶம். (செங்கெலித்யாதி) செந்நெலுடனே, செந்தாமரை, சேலும், வாளையும், செங்கழுநீரோடே நெருங்க, கழனி, இவற்றாலே விளங்கும். (மன்னுபுகழித்யாதி) நித்யநிர்தோஷமான புகழையுடையவேதத்துக்கு வ்யாஸபதம்செலுத்தும் ப்ராஹ்மணர் மிக்க தேஶம். ... ... ... ... ... ௫.

ஆறும்பாட்டு. (பெண்மையித்யாதி) மிக்க ஸ்த்ரீத்வத்தையுடையளாய்வந்த பெரியபேயினுடைய வுயிரானது மாளவுண்டு, பெரிய பேய்ப்பெண்ணை

அஞ்சாம்பாட்டு.— (மின்னனையவித்யாதி) மின்போலே யிருக்கிற நேரியஇடையையுடையளாய் ம்ருது-ஸ்வபாவையாயிருக்கிற பிராட்டிக்காக, லங்கைக்கு நிர்வாஹகனாயிருக்கிற ராவணனுடைய பத்துத்தலையும்இருபது தோளும் போயுதிரும்படியாக, தனக்கு ஒப்புண்டாகிலும் உபமாநரஹிதமாயிருக்கிற வில்லைவளைத்து அன்று லங்கையைப் பொடிபடுத்தின தோள்வலிமிகையையுடையவன். பிராட்டிக்குப்பண்ணின வ்யாபாரத்தை ஆஸ்ரிதரெல்லார்க்கு மொக்கப் பண்ணிற்றாக அவன் ப்ரீதியோடே வர்த்திக்கிற தேஶமாகையாலே, கண்டார்க்கெல்லாமினிதாமபடியிருக்கும்தேஶம்.

(செந்நெலித்யாதி) இதுவாய்த்து கழனியானப்ரதேஶமடையவிருக்கும்படி. செந்நெலோடேகூட, தாமரை, சேல், கயல்கள்,வாளை, செங்கழுநீரோடு மிடைந்து விளங்காநிற்குமாய்த்து வயலடங்க. (மன்னுபுகழித்யாதி) இதுவாய்த்து ஸ்தலமான ப்ரதேஶமிருக்கும்படி. நித்யமான புகழையுடையராயிருக்கிற ப்ராஹ்மணர்மிக்கிருக்கிற. இதுவாய்த்து ஊரும் பிடாகையுமிருக்கும்படி. ... ... ௫.

ஆறும்பாட்டு.— (பெண்மையித்யாதி) * நாரீணாமுத்தமையான யஶோதைப்பிராட்டிவடிவைக்கொண்டு வந்தபூதனையை,

அஞ்சாம்பாட்டு.— (மின்னித்யாதி.) மிடைதல - நெருங்கி. பிடாகையும் - வயலும். ... .. ... ... ... ... ௫.

ஆறும்பாட்டு.— (பெண்மையித்யாதி.) இதிலே-நரஸிம்ஹாவதாரமும், அநந்தரம், ராமாவதாரமுமாக வநுஸந்தித்தார்; அநந்தராவதாரமாய் ஆழ்வார்களையெல்லாமீடுபடுத்தும் க்ருஷ்ணாவதாரத்தை மேல் மூன்றுபாட்டாலுமநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

மூ.—பெண்மைமிகுவடிவுகொடு வந்தவளைப் பெரிய
பேயினது வுருவுகொடுமாளவுயிருண்டு
திண்மைமிகுமருதொடு நற்சகடமிறுத்தருளும்
தேவனவன் மகிழ்ந்தினிது மருவியுறைகோயில்
உண்மைமிகுமறையொடு நறகலைகள் நிறைபொறைகள்
உதவுகொடையென்றிவற்றினொழிவில்லாப்பெரிய
வண்மைமிகுமறையவர்கள் மலிவெய்துநாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்குமடநெஞ்சே. ௬.

ப-ரை.—பெண்மைமிகுவடிவுகொடு-உத்தமஸ்த்ரீசரீரத்தைதரித்துக்கொண்டு, வந்தவளை-வஞ்சிக்கவந்தபூதனையானவள், பெரியபேயினது உருவுகொடு-தன்நிஜமானவிக்ர்தரூபவம்கொண்டு, மாள-மாயும்படி,உயிர்உண்டு-அவள்ப்ராணனைஸ்வீகரித்தும்,திண்மைமிகு-அஸுராவேசத்தால்மிக்கதிண்மையையுடைய, மருதொடு -மருதமரத்தையும், நற்சகடம் - துடங்கினகார்யத்தைமுடிக்கத்தக்கசக்திவல்லமைகதியையுடைய சகடத்தையும், இறுத்து - முறித்தும், அருளும் - இன்னமிப்படியே துஷ்டநிக்ரஹம்பண்ணியருளிய, தேவனவன - நந்தநந்தனனான ஸ்ரீக்ர்ஷ்ணன், மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில— ; உண்மைமிகுமறையொடு - யதாபூதவாதிகளான வேதங்களும், நற்கலைகள் அவற்றின்நல்ல அங்கங்களும், நிறை - இவற்றின்அப்யாஸத்தாலவந்த குணபூர்த்தியும், பொறைகள் - க்ஷமைமுதலானவைகளும்,உதவுகொடை என்றிவற்றின் - உபகாரி ஔதார்யமென்கிறவிவற்றினுடைய, ஒழிவிலலாப்பெரிய வண்மை - ஓயாதேமிக்கிருந்துள்ளவளங்களும், மிகு - நிறைந்த, மறையவாகள்- ப்ராஹ்மணர்கள், மலிவெய்தும் - நெருங்கிவர்த்திக்கிற, நாங்கூர்—. (௬)

---

மிகுத்த தாயுருக்கொண்டு வந்தவளைப் பின்னையுருவைகொண்டு அவளுயிரை மாளவுண்டு.(திண்மையித்யாதி) நிலையுடையமருதுகளுடனே நல்ல சகடத்தையும் முறித்தருளும் க்ருஷ்ணன மிகவும் விரும்பிவர்த்திக்கிறதேசம்.

---

பெரியபேயின்வடிவையுடையளாய்க்கொண்டுமுடிந்துபிணமாய்க்கிடக்கும்படியாகஅவளைமுடித்து,அஸுராவேசத்தாலே மிக்கதிண்மையையுடைய மருது, துடங்கினகார்யத்தைமுடிக்கத்தக்கவல்லசக்தியையுடையசகடம், இவற்றையிறுத்தருளி, “ விரோதிபோகப்பெற்றோமிறே!” என்று அத்தாலே தீப்தனான ஸர்வேச்வரன் விரும்பிவர்த்திக்கிறதேசம்.

---

சகடத்துக்கு நன்மையேதென்ன ; நல்லபாம்புஎன்னுமாப்போலேக்ரௌர்யாதிசயத்தைச்சொல்லுமென்றருளிச்செய்கிறார் (துடங்கினவித்யாதி.) “அவன்”என்றத்தால் தோற்றின வேதாந்தப்ரஸித்தியையபற்றவருளிச்செய்கிறார் (ஸர்வேச்வரனென்று.)

மூ.— விளங்கனியையிளங்கன்று கொண்டுதிரவெறிந்து
வேல்நெடுங்கணாய்ச்சியர்கள்வைத்ததயிர்வெண்ணெய்
உளங்குளிரவமுதுசெய் திவ்வுலகுண்டகாளை
யுகந்தினிது நாடோறும் மருவியுறைகோயில்
இளம்படிநற்கமுகுகுலைத்தெங்கு கொடிச்செந்நெல்
ஈன்கரும்புகண்வளரக் கால்தடவும்புனலால்
வளங்கொண்டபெருஞ்செல்வம் வளருமணிநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. ௭.

ப - ரை.—இளங்கன்றுகொண்டு-வத்ஸாஸுரனைத்தூக்கி, விளங்கனியையுதிர எறிந்து- விளாவாயநின்ற அஸுரன்உதிர்ந்துஉயிர்மாயும்படிவீசி, வேல்-வேல்போல, நெடுங்கண் - நீண்டகண்களையுடைய, ஆய்ச்சியர்கள் - கோபஸ்த்ரீகள், வைத்த - தங்களகத்திலேசேமித்துவைத்த, தயிர்வெண்ணெய்-ததிநவநீதாதிகளை, உளம்குளிர- தந்திருவுள்ளம்குளிரும்படி, அமுதுசெய்து - உண்டு, பின்னும், இவ்வுலகுண்ட - இந்தலோகத்தையடையவமுதுசெய்த, காளை - நவயௌவநன், உகந்தினிது நாடோறு மருவியுறைகோயில—; இளம்படிநற்கமுகு - இளமையைஸ்வபாவமாகவுடைய நல்லகமுகுமரங்களும், குலைத்தெங்கு-குலையையுடைத்தான தென்னமரங்களும், கொடி - வெற்றிலைக்கொடிகளும், செந்நெல் - செந்நெற்களும், ஈன்கரும்பு- இனிய கரும்புகளும், ஆகிய இவைகள், கண் வளர - நித்ரைவாத்தியடையும்படி, கால்தடவும் - கால்தடவாநின்ற, புனலால்வளங்கொண்ட பெருஞ்செல்வம் - ஜலஸம்ருத்திமூலமான த்ரவ்யஸாம்ராஜ்யங்கள், வளரும் - வ்ருத்தியடையாநின்றுள்ள, அணிநாங்கூர்—. ... ... ... ... ... (௭)

---

(உண்மைமிக்யாதி) யதாஸாங்கவாதியான வேதங்களுடனே, அவற்றினுடைய நன்றான அங்கங்கள், இவற்றில் வாஸனையாலேவந்த ஆத்மகுணங்கள், க்ஷமை, அர்த்திகளர்த்தித்தபோதேகொடுக்கும் ஔதார்யம், இப்படியால்அமரும் ஔதார்யமும் மிக்க ப்ராஹ்மணர் மிக்க நாங்கூர்.

(உண்மைமிக்யாதி) யதாஸாங்கவாதியான வேதங்களோடேகூட, அவற்றினுடைய நன்றான அங்கங்கள், இவற்றினுண்டானவாஸனையாலே வரக்கடவ ஆத்மகுணங்களையுடைய அடக்கம், க்ஷமை, அர்த்திகளர்த்தித்தபோதே அபேக்ஷிதங்களைக் கொடுக்கையாகிற ஔதார்யம், என்றுப்போலே சொல்லுகிறவிவற்றாலொழிவின்றிக்கேயிருக்கிற உதாரரானவர்கள் மிக்கிருக்கிற. வண்மை - ஆத்மஸமர்ப்பணம். ௯.

“நிறை” என்றதினர்த்தம் (அடக்கமென்றது.) உதவுகொடை - உதவும்படியான கொடையென்றர்த்தமருளிச்செய்கிறார் (அர்த்திகளித்யாதி.) கீழே ஔதார்யத்தைச் சொல்லி, மீளவும், உதாரரான என்றால புநருக்தமன்றோவென்ன வருளிச்செய்கிறார் (வண்மையித்யாதி.) ... ... ... ...

ஏழாம்பாட்டு. (விளங்கனியித்யாதி) விளவாய்ப்பழுத்து நின்ற அஸுரனை, கன்றாய்த்துள்ளிவந்த அஸுரனையிட்டு உதிரவெறிந்து, வேல்போலே நெடியகண்ணையுடைய ஆய்ச்சியர்வைத்த தயிரையும் வெண்ணெயையும் வயிறுகுளிர அமுதுசெய்து, இந்த லோகத்தையு மமுதுசெய்த தலைவன். காளையென்று – தலைவனுக்குப்பேர். உகந்து இனிதாக நாள்தோறும் பொருந்திவர்த்திக்கிற தேசம். இளமையை ஸ்வபாவமாகவுடைய நல்ல கமுகு, குலைகளையுடைய தெங்கு, வெற்றிலைக்கொடி, செந்நெல், இனியகரும்பு நாள்தோறும் ஒருகண்வைத்து வளர, புனல், கால்நடவும்-அடியிலேநடவிவரும்; இப்படியால்வந்த நன்மையையுடைய பெரிய ஐஸ்வர்யம் வளரும் அழகியநாங்கூர். எ

ஏழாம்பாட்டு.— (விளங்கனியித்யாதி) வத்ஸாஸுரனைக்கொண்டு விளாவாய் நிற்கிற அஸுரன்மேலே உகிரும்படியெறிந்து, வேல்போலே பரந்த கண்ணையுடையராயிருக்கிற இடைச்சிகள் சேமித்துவைத்த தயிரையும் வெண்ணெயையும், ஆஸ்ரிதஸ்பர்ஶமுள்ளதொரு த்ரவ்யமாகையாலே திருவுள்ளமானது குளிரும்படியாக அமுதுசெய்து, அநந்தரம், இந்தலோகத்தையடையத் திருவயிற்றிலேவைத்து, ராஜ்யாவர்மத்தினுடைய ரக்ஷணத்தைப்பண்ணுகையாலே இளகிப்பதித்திருக்கிறவன்.

(இளம்படி.) இளமையைஸ்வபாவமாகவுடைத்தாயிருக்கிற கமுகு, குலையையுடைத்தாயிருக்கிற தெங்கு, வெற்றிலைக்கொடி, செந்நெல், இனியகரும்பானது கண்வளரும்படியாகப் புனலானது கால்நடவாநிற்குமாய்த்து. கரும்பானது நாள்தோறும் ஒருகண்ணேறிவரும்படி கால்நடவுமாய்த்துப் புனலானது. நிரவதிக ஸம்பத்தானது மாறாதே செல்லுகிற. ... ... ... ... ... எ.

ஏழாம்பாட்டு.— (விளங்கனியித்யாதி.) "வேல" என்றதால - நெடுமைதாயுமாயிருக்க, நெடுமையைச்சொன்னது லக்ஷணயா ஸ்வபுலயவாதியென்று (பரந்த) என்கிறார். தயிரும்வெண்ணெயுமமுது செய்தால உள்ளம்குளிருகை அர்யஸியமாயிருக்க, விஶேஷித்ததுக்கு ஹாவம் (ஆஸ்ரிதேத்யாதி.)

இன்கரும்பு என்றது நீட்டிக்கிடக்கிறதாய, அருளிச்செய்கிறார் (இனிய கரும்பென்று.) கால்நடவாநிற்குமென்றது - வாடை; ஸ்வபாவார்யம் - காலவழிகளாலே பரம்பாநிற்குமென்று. "கண்வளரும்" என்றதுக்கும் வாட்வர்யம் ஸ்பஷ்டமென்று திருவுள்ளம்பற்றி, ஸ்வபாவார்யத்தையருளிச்செய்கிறார் (கரும்பானதித்யாதி.) அணிநாங்கூராகைக்குஹேது கீழ்ச்சொன்னதெல்லாமென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (நிரவதிகேத்யாதி.) ... ... எ,

மூ.—ஆறுதசினத்தின் மிகுநரகனுரமழித்த
 அடலாழித்தடக்கைய னலர்மகட்குமரற்கும்
கூறுகக்கொடுத்தருளும் திருவுடம்ப னிமையோர்
 குலமுதல்வன் மகிழ்ந்தினிது மருவியுறைகோயில்
மாறுதமலர்க்கமலம் செங்கழுநீர்ததும்பி
 மதுவெள்ளமொழுக வயலுழவர்மடையடைப்ப
மாறுதபெருஞ்செல்வம் வளருமணிநாங்கூர்
 வைகுந்த விண்ணகரம் வணங்குமடநெஞ்சே. ௮.

ப-ரை.— ஆறுத - ஒருக்காலாறக்கடவதன்றிக்கேயிருக்கிற, சினத்தின் - கோபத்தையுடையனாய், மிகு - மிகைத்துவாரா நின்றுள்ள, நரகன் - நரகாஸுரனது, உரம் - மிடுக்கை, அழித்த—, அடல்ஆழி - யுத்தோந்முகமான திருவாழியை, தடக்கையன் - தன் பெருங்கையிலேயுடையனாய், அலர்மகட்கும் - பெரியபிராட்டியாருக்கும், அரற்கும் - ருத்ரனுக்கும், கூறு ஆக - என்னதென்று கூறிட்டநுபவிக்கலாம்படி, கொடுத்தருளும் திருவுடம்பன் - தன் திருமேனியைக்கொடுத்துக்கொண்டிருக்கிற ஶீலத்தையுடையவனாய், இமையோர் குலமுதல்வன் - நித்யஸூரிகள்திரளுக்கு நிர்வாஹகனான ஸர்வேஶ்வரன், மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில்—, மாறுதமலர்க்கமலம் - இடைவிடாதமலரையுடையதாமரை, செங்கழுநீர் - செங்கழுநீர்முதலியபூக்கள், ஆகிய இவைகளினின்றும், ததும்பி மதுவெள்ளமொழுக - நெருங்கிப்புறப்பட்ட தேன்வெள்ளமெங்குந்தலைதெரியாதபடி பாய்வதினால், உழவர் - கர்ஷகர், வயல்மடையடைப்பமாறுத - தங்கள் தங்கள் கழனிமடைகளை அடைக்க அடைக்கவுமாறாதே வளர்ந்துகொண்டுவருகிற, பெருஞ்செல்வம்வளரும் - மிக்கநீர்ச்செல்வம்நிறைந்த, அணிநாங்கூர்—. ... ... ... ... ... (௮)

எட்டாம்பாட்டு. (ஆறுதவித்யாதி) ஆறுதசீற்றத்தையும் மிக்க வலத்தையுமுடைய நரகாஸுரனைக்கொன்ற மிடுக்கையுடைய திருவாழியைப் பெரியகையிலேயுடையவன். (அலர்மகளித்யாதி) பெரியபிராட்டியார்க்கும் ருத்ரனுக்கும் கூறுகக்கொடுத்தருளும் திருவுடம்பன். (இமையோரித்யாதி) நித்யஸூரிகள்திரளுக்கு தாரகாதிகளெல்லாம் தானேயானவன், ப்ரீதி ப்ரகர்ஷத்துடனே நித்யவாஸம்பண்ணுகிறகோயில்.

எட்டாம்பாட்டு.—(ஆறுதவித்யாதி) ஒருக்காலாறக்கடவதன்றிக்கேயிருக்கிற சினத்தையுடையனாய் மிகைத்து வாராநின்றுள்ள நரகனுடைய மிடுக்கையழித்த யுத்தோந்முகமான திருவாழியைக் கையிலேயுடையவன், பெரியபிராட்டியார்க்கும் ருத்ரனுக்கும் என்னதென்று கூறிட்டநுபவிக்கலாம்படி திருமேனியைக் கொடுத்துக்கொண்டிருக்கிற ஶீலத்தையுடையவன், நித்யஸூரிகள் திரளுக்கு நாயகனானவன்.

எட்டாம்பாட்டு.— (ஆறுதவித்யாதி.) "உரம்" என்றதினர்த்தம் (மிடுக்கையென்றது.) "அலர்மகட்கு" என்றத்தாலே - மஹத்வமும், "அரற்கு" என்றதுஜ்யேஷ்டியாலே - அவனுடைய ஸ்வோத்கர்ஷாபிமாநமும், "கூறுக" என்கையாலே- மந்தஸம்ஶ்லேஷமும் தோற்றுகையாலே யருளிச்செய்கிறார் (ஶீலத்தையுடையவனென்று.)

மூ.—வங்கமலி தடங்கடலுள் வானவர்களோடு
மாமுனிவர்பலர் கூடிமாமலர்கடூவி
எங்கள்தனிநாயகனே யெமக்கருளாயென்னும்
ஈசனவன் மகிழ்ந்தினிது மருவியுறைகோயில்
செங்கயலும் வாளைகளும் செந்நெலிடைக்குதிப்பச்
சேலுகளும் செழும்பணைசூழ்வீதிதொறு மிடைந்து
மங்குல் மதியகடுரிஞ்சு மணிமாடநாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்குமடநெஞ்சே. கூ.

ப-ரை.— வங்கம்மலி - மரக்கலங்களாற்குறைவற்றிருக்கிற, தடங்கடலுள்- பெரியதிருப்பாற்கடலிலே, வானவர்களோடு மாமுனிவர்பலர்கூடி - தேவர்களோடேஸநகாதிகளுங்கூடிக்கொண்டுவந்து,முன்பு,மாமலர்கள்தூவி -புஷ்பாத்யுபகரணங்களைத்தூவி, பின்பு, எங்கள் தனிநாயகனே-எங்களுக்குநாதனான ஸர்வேஶ்வரனே, நீர், எமக்கு அருளாய் - எங்கள்பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணும், என்னும்- என்று ப்ரார்த்திக்கும்படியிருக்கிற, ஈசனவன் - ஸ்வாமி, மகிழ்ந்தினிதுமருவியுறை கோயில்— ; செங்கயலும் - செவ்வியகயல்மத்ஸ்யங்களும், வாளைகளும்-வாளைமத்ஸ்யங்களும்,குளிர்த்தியைப்பற்ற, செந்நெலிடை-செந்நெற்பயிர்களினிடையே, குதிப்ப-தாவ,சேலுகளும்-அப்பயிரினிடையேயிருந்தசேல்மத்ஸ்யங்களும் பகையின்றிக் கூடவேகளித்து வர்த்திக்கிற, செழும்பணைசூழ் - மருதநிலம் சூழ்ந்திருப்பதாய், வீதிதொறும் - தெருக்கள்தோறும், மிடைந்துமங்குல்மதி - ஆகாஶத்திலே ஸஞ்சரிக்கிற சந்த்ரனுடைய, அகடுரிஞ்சும் - கீழ்வயிறுதேயும்படியாயுயர்ந்த, மணிமாடம் - மணிமயமானமாடங்களையுடையதாயிருக்கிற,நாங்கூர்—. ... (கூ)

மாறாதபடி தாமரைப்பூவும் செங்கழுநீர்ப்பூவும் மதுததும்பிவெள்ளமிடப்பெருக, வயல்கள் பயிர்செய்கிற உழவர் வயல்களில் மடைகளைத் தேன்வெள்ளம்புகப்பயிரழியாதபடி மடைகளைச்செம்ம. இப்படி மாறாத பெருஞ்செல்வம்மிக்கு வருகிற நாங்கூர். ... ... அ.

(மாறாதவித்யாதி) மாறாதமலரையுடைத்தானதாமரை, செங்கழுநீர், இவற்றால்மிக்கு மது-வெள்ளமிட்டுப்பாய, வயலிலுண்டான கர்ஷகரானவர்கள் பயிரழிய வெள்ளம்போமளவானவாறே மடைகளையடைப்பர்கள். (மாறாதபெருஞ்செல்வம்வளரும்) "அங்கேயுடைந்தது, இங்கேயுடைந்தது கிடாய்" என்று "ஸஹ்யப்பெருக்குக் கிடாய்" என்று கூப்பிடுகிற ஆரவாரமேயாய்க்கிடக்குமாய்த்து. அ.

"ததும்பி" என்றதினாலும் (மிக்கு என்றது.) கீழ்ச்சொன்னதுக்கதுபலக்ஷணமாக செல்வத்தைவிசேஷிக்கிறார் (அங்கேயித்யாதி.) ... ... ... அ.

ஒன்பதாம்பாட்டு.— (வங்கமித்யாதி.) கீழ்ப்பாட்டில் ஸௌஶீல்யத்தையநுஸந்தித்தவுடனே அவனுடையபரத்வம் திருவுள்ளத்திலூற்றிருந்து அத்தையருளிச்செய்கிறாரென்றுதல், கீழ் க்ருஷ்ணாவதாரம் ப்ரஸ்துதமாகையால் "நாமபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோமதுராம்புரீம்" என்கிறபடியே - அதுக்கடியான திருப்பாற்கடலையநுஸந்திக்கிறாரென்கிறாரென்றுதல் ஸங்கதி.

ஒன்பதாம்பாட்டு. (வங்கமித்யாதி) மரக்கலங்கள் மிக்க பெரிய கடலிலே, ப்ரஹ்மேசாநாதிகளுடனே ஸநகாதிகளுங்கூடித் தாமரைப் பூக்களைப்பணிமாறி, மாமலர் – தாமரை. (எங்கள்தனிநாயகனே யெமக்கருளாயென்னும்) எங்களுக்கு அத்விதீயனான நிர்வாஹகனே! [ரு] எங்களைரக்ஷியாய் என்னும் ஸர்வேஸ்வரன் மகிழ்ந்து இனிதாக வர்த்திக்கிற தேஸம்.(செங்கயலுமித்யாதி) அழகியகயல்களும் வாளைகளும் செந்நெற்சோலைகளில் குளிர்த்தியைப்பற்ற நடுவேகுதிப்ப,சேல்களானவைகளித்துஉகளிக்கும் பெரியமருதநிலம்சூழ்.(வீதிதொறுமித்யாதி) ராத்ரியிலே ஸஞ்சரிக்கிற சந்த்ரன் கீழ்வயிறு தேயும்படி ஓங்கின மாடங்களாலே நேர்போகமாட்டாமல் வீதிகள்தோறும் வழிதேடித் திரியும். அன்றிக்கே, வீதிகளெல்லாம் மங்குல்மதி அகடுரிஞ்சும் மணிமாடமென்றுமாம். ... ... ... ... ௯.

பத்தாம்பாட்டு. (சங்கித்யாதி) ஸங்கசக்ராதி திவ்யாயுதங்களை தரிக்கும் புண்டரீகாக்ஷனான ஸர்வேஸ்வரன்றான் நித்யவாஸம் பண்ணுகிறகோயில்.

---

ஒன்பதாம்பாட்டு.— (வங்கமித்யாதி) மரக்கலங்களால் குறைவற்றிருக்கிற பெரியதிருப்பாற்கடலிலே.மலைக்குச்சிறப்பாக ஆனையையிட்டுச்சொல்லுமாப்போலே, கடலுக்குச்சிறப்பாக மரக்கலங்களையிட்டுச்சொல்லக்கடவது. தேவர்களோடே ஸநகாதிகளுங்கூட புஷ்பாத்யுபகரணங்களைத்தூவி, "எங்களுக்குநாயகனானஸர்வேஸ்வரனே, எங்கள்பக்கலிலே க்ருபையைப்பண்ணியருளவேணும்" என்னும் ஸர்வேஸ்வரன் ப்ரீதிபூர்வகமாக நித்யவாஸம்பண்ணுகிறதேஸம்.

(செங்கயலித்யாதி) அழகிய கயலும் வாளைகளும் குளிர்த்தியைப் பற்றச்செந்நெலிடையிலேதாவ, சேல்களானவை களித்து வர்த்தியா நின்றுள்ள மருதநிலம் சூழ்ந்திருக்குமாய்த்து. தெருவுகள்தோறும் ஆகாஸத்திலே ஸஞ்சரிக்கிற சந்த்ரனுடைய கீழ்வயிறு தேயும்படியான மணிமயமான மாடங்களையுடைய. ... ... ௯.

பத்தாம்பாட்டு.— (சங்கித்யாதி) ஆஸ்ரிதார்த்தமாக ஸ்ரீபஞ்சாயுதங்களையும் தரித்துக்கொண்டிருக்கிற புண்டரீகாக்ஷனான ஸர்வேஸ்வரன் நித்யவாஸம்பண்ணுகிறதேஸம்.

---

வங்கங்களைச்சொன்னதுக்கு ப்ரசஞ்சோபயோகமென்னென்ன வருளிச்செய்கிறார் (மலைக்கித்யாதி.) கவிஸமயியாலே சொன்னாரென்று கருத்து.

(தெருவுகள்தோறும்) என்றவாஞ்ஞாம், மிடைந்திருக்கிற-நெருங்கியிருக்கிற என்று கூட்டியநுஸந்திப்பது. "மங்குல்" என்றதினர்த்தம் (ஆகாஸத்திலேயென்றது.) ௯.

பத்தாம்பாட்டு.— (சங்கித்யாதி.) சங்கும், மலிவுடைய - மிடுக்கின்மிகுதியுடைய, தண்டும், சக்கரமும், முதலென்றதாலே - மற்றை வாளும் வில்லுமான வ்வற்றைக்கொண்டு கண்முன்னே பூவேந்திருப்போலே தரித்துக்கொண்டிருக்கிற தாமரைபோன்ற நெடியகண்ணுடைய பிரான்றானென்று வாக்யார்த்தமுட்கொண்டு

மூ:— சங்குமலிதண்டுமுதல் சக்கரமுனேந்தும்
தாமரைக்கண்ணெடியபிரான்றானமரும்கோயில்
வங்கமலிகடலுலகில் மலிவெய்து நாங்கூர்
வைகுந்த விண்ணகர்மேல் வண்டறையும்பொழில்சூழ்
மங்கையர்தம்தலைவன் மருவலர்தமுடல்துணிய
வாள்வீசும்பரகாலன் கலிகன்றிசொன்ன
சங்கமலிதமிழ்மாலை பத்திவைவல்லார்கள்
தரணியொடுவிசும்பாளும் தன்மைபெறுவாரே. ௧௦.

ப - ரை.— சங்கு - சங்கமும், மலி - திருடமான, தண்டு - கதையும், சக்கரம் - சக்கரமும், முதல் - இவை முதலான சட்காயாங்கங்களும், ஆகிய இவற்றை, முன் - தன் முன்னே, ஏந்தும் - தரித்துக்கொண்டிருக்கிற, நெடிய - நீண்ட, தாமரைக்கண் - தாமரைபோன்றதிருக்கண்களையுடைய, பிரான் - மஹோபகாரகரான ஸர்வேச்வரன், அமரும்கோயில் - நித்யவாஸம்பண்ணும் திவ்யதேசமாய், வங்கம் - மரக்கலங்கள், மலி - நிறைந்த, கடல் - கடல்சூழ்ந்த, உலகில் - பூமியில், மலிவெய்து - ஸம்ருத்தமிக்கிருக்கிற, நாங்கூர் - திருநாங்கூரில், வைகுந்தவிண்ணகர்மேல் - வைகுந்தவிண்ணகர் விஷயமாக; வண்டு - வண்டுகள், அறையும் - சப்தியாநின்றுள்ள, பொழில் - பொழிலாலே, சூழ் - சூழப்பட்ட, மங்கையர்தம் - திருமங்கையிலுள்ளார்க்கு, தலைவன் - ப்ரதானராய், மருவலர்தம் உடல் - சத்ருக்கள் சரீரங்கள், துணிய - சின்னம் பின்னமாம்படி, வாள் வீசும் - கட்கத்தை வீசுகிற, பரகாலன் - சத்ருமர்த்தனராய், கலி கன்றி - கலிவைரியான ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்ததாய், சங்கம் மலி - கவிஸங்கம் கொண்டாடத்தக்க, தமிழ்மாலை - த்ராவிடப்ரபந்தஸந்தாபத்தையுடைத்தான, இவைபத்து - இப்பத்துப்பாட்டுக்களையும், வல்லார்கள் - அப்யஸிக்கவல்லவர்கள், தரணியொடு - பூமியையும், விசும்பு - பரமாகாசத்தையும், ஆளும் - ஆளும்படியான, தன்மை - அதிசயத்தை, பெறுவார் - உடையராகப்பெறுவர்கள். (௧௦)

(வங்கமித்யாதி) கடல்சூழ்ந்தபூமியில் மரக்கலம் மிக்குடைத்தான திருநாங்கூரிலே வைகுந்தவிண்ணகர் விஷயமாக. (வண்டறையுமித்யாதி) வண்டுபாடும் பொழில்சூழ் திருமங்கையிலுள்ளார்க்கு தலைவர் ஆனவர். (மருவலரித்யாதி) சத்ருக்களுடல் துணியும்படி வாள்வீசும் பரகாலன்கலிகன்றிசொன்ன. (சங்கமித்யாதி) சங்கத்தார் கவிக்கொண்டாடும்படியான தமிழ்மாலையிப்பத்தையும் அப்யஸிக்கவல்லவர்கள்,

---

மரக்கலத்தையுடைத்தான கடல்சூழ்ந்த பூமியில் ஸம்ருத்தி மிகுந்திருக்கிற திருநாங்கூரிலே வைகுந்தவிண்ணகரிலே கவிபாடிற்று. கவிபாடினவர் — மதோன்மத்தமான வண்டுகள் த்வனியாநின்றுள்ள பொழிலாலேசூழப்பட்ட திருமங்கையிலுள்ளார்க்கு ப்ரதானரான[ரூடு] ஆழ்வார், சத்ருக்களுடல் துணியும்படியாக வாள்வீசுகிற, பரகாலன் - ஆழ்வார் அருளிச்செய்த, சங்கப்புலவர்கள் திரளவிருந்து தமிழ்கொண்டாடப்புக்கால் இத்தையேகொண்டாடவேண்டும்படியான தமிழ்த்தொடை பத்தையும் வல்லவர்கள்,

---

தாத்பர்யமருளிச்செய்கிறார் ( ஆஸ்ரீதேத்யாதி. ) சங்கப்புலவரென்றது - கவி[சமு ஸங்கத்தையுடைத்தான சங்கப்பலகையில் வித்வான்களென்றபடி. ... ௧௦.

ஜீயர்திருவடிகளேசரணம்.

உபயவிபூதியையுமாளும்படியான வைபவத்தைப்பெறுவர். ௧0.

நஞ்ஜீயர் திருவடிகளே ஶரணம்.

உபயவிபூதியும் தாங்களிட்டவழக்காம்படியான ஸ்வபாவத்தை யுடையராகப்பெறுவர். ... ... ... ... ௧0.

அடிவரவு.— சலம் திண்ணிய அண்டம் கலை மின் பெண்மை விளங்கனி ஆறு வங்கம் சங்கு திரு.

திருமங்கையாழ்வார்திருவடிகளேஶரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேஶரணம்.

மூன்றாம்பத்து - பத்தாந்திருமொழி - திருமடந்தை. ப்ரவேஶம்.

ஆஶ்ரிதவிரோதிநிரஸநஶீலனாய், ஆஶ்ரிதருடைய ஸர்வாபராத ஸஹனாய், ஶ்ரிய:பதியாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், ஸர்வ ஶக்தியான ஸர்வேஶ்வரன், பிராட்டிமாருடனே, ஆஶ்ரிதார்த்தமாக அரி மேயவிண்ணகரிலே யெழுந்தருளியிருக்கிற ஶீலகுணப்ராசுர்யத்தை யநுஸந்தித்து, "இவனுமொருவனே! இதுவுமொருகுணமே!"[ம்ரு என்று நித்யஸூரிகளிருப்பட்டு ஸ்தோத்ரம்பண்ணுகிற ஸர்வேஶ்வர னெழுந்தருளியிருக்கிற அரிமேயவிண்ணகரிலே நீசென்றாஶ்ரயி யென்று திருவுள்ளத்தைக் குறித் தருளிச்செய்கிறார். ... ✱

ஆஶ்ரிதவிரோதிநிரஸநஶீலனாய் ஆஶ்ரிதர்க்கு ஆபத்துக்களிலே தவும் ஸ்வபாவனுமான ஸர்வேஶ்வரன், தான் ஶரண்யனாமிடத்தில் புருஷகாரமாம் பிராட்டிமாரோடேகூடவந்து நிற்கிறபடியை யநுஸந் தித்து, நித்யஸூரிகள் "இதொருஶீலகுணப்ராசுர்யமிருந்தபடியென்!" என்று இழிலேயிருப்பட்டு ஆஶ்ரயிக்கும்படியாக அரிமேயவிண்ணக ரிலே நித்யவாஸம்பண்ணாநின்றான், ஆனபின்பு நீயுமங்கேசென்று அவ னையாஶ்ரயித்து உன்னுடைய குறைகளெல்லாவற்றையும் தீர்த்துக்[உரு கொள்ளப்பாராயென்று திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்கிறார். ✱

திருமடந்தைப்ரவேஶம்.— ஸ்ரீவைகுந்தவிண்ணகரில் நரஸிம்ஹராமக்ருஷ்ண வதாரசேஷ்டிதங்கள் முதலானவற்றை யநுஸந்தித்தஆழ்வார், அடுத்த அரிமேய விண்ணகரிலிருக்குமவனையுமநுபவிக்கவேணுமென்னுமாசையால்அவ்வபதானங்களை மாறிமாறிப்பேசாநின்றுகொண்டு அநுபவிக்கிறா ரென்னும் ஸங்கதியை யுட்[௬௰ கொண்டு, திருமொழியில் ப்ரமேயத்தை உபஸம்ஹரிக்கிறார் (ஆஶ்ரிதவிரோதிநிரஸ னேத்யாதி.) இத்திருமொழியில் நரகாஸுரப்ரஹ்ருதிகளை நிரஸித்தபடிகளைப் பற்ற (விரோதிநிரஸநஶீலனாயென்றது.) "கடலைக்கடைந்தமுதமளிக்கும்" "உண்ட பிரான்" என்றும், "சிறுகுறளாய்" என்றும் சொன்ன அபதானங்களைப்பற்றவருளி ச்செய்கிறார் (ஆபத்துக்களிலேவந்துதவும் ஸ்வபாவனுமானவென்று.) முதற்பாட் டைப்பற்றவருளிச்செய்கிறார் (தானித்யாதி.) ... ... ...

மூ.— திருமடந்தைமண்மடந்தை யிருபாலுந்திகழத்
தீவினைகள்போயகல வடியவர்கட்கென்றும்
அருள்நடந்திவ்வேழுலகத்தவர் பணிய வானோர்
அமர்ந்தேத்தவிருந்தவிடம் பெரும்புகழ்வேதியர்வாழ்
தருமிடங்கண்மலர்கண்மிகு கைதைகள் செங்கழுநீர்
தாமரைகள் தடங்கடொறு மிடங்கடொறுந்திகழ
அருவிடங்கள் பொழில்தழுவியெழில் திகழுநாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. க.

---

ப-ரை.— திருமடந்தை - பெரியபிராட்டியாரும், மண்மடந்தை - ஸ்ரீபூமிப்பிராட்டியும், இருபாலும் - இரண்டுபார்ச்வங்களிலும், திகழ - ப்ரகாசிக்க, அடியவர்கட்கு - ஆச்ரிதர்பக்கல், என்றும் - எப்போதும், அருள்நடந்து - க்ருபைபண்ணி, அத்தாலே, தீவினைகள்-கொடியபாபங்கள், போய் அகல-விட்டோடும்படி, இவ்வேழ் உலகத்தவர் - இந்தஸப்தலோகங்களிலுள்ளாரும், பணிய-ஆச்ரயிக்கவும்,வானோர்-நித்யஸூரிகள், அமர்ந்து - இஸ்ஸம்ஸாரவிபூதியில்சால்பொருந்தி, ஏத்த - ஸ்தோத்ரம்பண்ணவும், இருந்த - நித்யவாஸம்பண்ணுகிற, இடம் - திவ்யதேசமாய்; பெரும்புகழ் - மஹாப்ரஸித்தரான, வேதியர் - ப்ராஹ்மணர், வாழ்தரும் - வர்த்திக்கிற, இடங்கள்-இடங்களையுடைத்தாய், மலர்கள்மிகு - புஷ்பஸம்ருத்தியையுடைய, கைதைகள்-தாழைகளும், செங்கழுநீர்-ரக்தோத்பலங்களும்,தாமரைகள்-தாமரைகளும்,தடங்கள்தொறும்-தடாகங்கள் தோறும்,இடங்கள்தொறும்-பார்த்த பார்த்தவிடமெல்லாம், திகழ-விளங்கவும், பொழில்-சோலையானது, அருவிடங்கள்-ஆகாசாவகாசமடைய, தழுவி - இடைமடைத்துக்கொண்டு ஓங்கி, எழில்திகழும்-அழகுவிளங்காநின்றுள்ள, நாங்கூர்-திருநாங்கூரில், அரிமேயவிண்ணகரம் - அரிமேயவிண்ணகரில் எம்பெருமானை, மடநெஞ்சே - எனக்குவிதேயமான நெஞ்சே, வணங்கு-ஆச்ரயி என்று தந்திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்கிறார். (க)

---

முதற்பாட்டு. (திருமடந்தையித்யாதி) புருஷகாரபூதையான பெரியபிராட்டியாரும்ஸ்ரீபூமிப்பிராட்டியாரும் எழுந்தருளியிருந்து விளங்க, தீவினைகளானவை விட்டகல,

---

முதற்பாட்டு.— (திருமடந்தைமண்மடந்தையிருபாலுந்திகழ) "நகஸ்சிந்நாபராத்யதி" என்று-குற்றத்தைப்பொறுப்பிக்கும்பிராட்டியும், "முதலிலேகுற்றந்தன்னைக்காண்கிறதென், பின்னைப்பொறுப்பிக்கிறதென்" என்று, குற்றங்கண்டு பொறுக்கையுங்கூட மிகையாம்படியிருக்கிற ஸ்ரீபூமிப்பிராட்டியும், இரண்டிடத்திலும்விளங்க. குற்றத்தைப்பொறுப்பிக்கைக்குப் பிராட்டி; குற்றங்கண்டு கைவிடவொண்ணாதவிடத்தில், "குற்றம்கணக்கிடுகிற விதுக்குஷலமென்" என்றிருக்கும் ஸ்ரீபூமிப்பிராட்டி. (தீவினைகள்போயகல) இப்படிப்பட்டபிராட்டிமாருடைய நித்யஸந்நிதியாலே, ஸர்வேஸ்வரனுக்கு ஆச்ரிதவிஷயத்து "ஸம்ஸாரேஷு நராதமாந் | க்ஷிபாமி" என்கைக்கு விஷயமற்றிருக்குமாய்த்து.

---

முதற்பாட்டு.— (திருவித்யாதி.) "தீவினைகள் போயகல" என்றபதத்தைக் கடாக்ஷித்து, பிராட்டிமாரிருவரையும் சொன்னதுக்கு உட்கருத்தையருளிச்செய்கிறார் (நகஸ்சிதித்யாதி.) இவர்களுக்கிவை ஸ்வாபாவிகங்களோவென்ன (குற்றத்தையித்யாதி.)

ஆஶ்ரிதர்க்கு, என்று மருள்நடந்து-நாடோறுமருள்பண்ணி. (இவ்வே ழுலகித்யாதி) இந்தஸப்தத்வீபவதியான லோகத்திலுள்ளா ராஶ்ரயிக்க. நித்யஸூரிகள் விடாதேநின்று ஸ்தோத்ரம்பண்ண விருந்தவிடம். (பெரும்புகழித்யாதி) மிக்கபுகழையுடைய ப்ராஹ்மணர் வாழுகிற[ு] விடம். வாழ்தருமிடங்கள்' (மலரித்யாதி) பூக்கள்மிக்க தாழைகள், செங்கழுநீர், தாமரைகள், தடங்கள்தோறும் பார்த்தபார்த்தவிட மெல்லாம் மிக. (அருவிடம்) ஆகாஶம். ஸூக்ஷ்மதையாலே, அரு விடமென்று-ஆகாஶத்தைச்சொல்லுகிறது. ஆகாஶாவகாஶமெல்லாம் பொழில்வளர்ந்து இப்படிப்பட்டஅழகுவிளங்காநின்றுள்ள நாங்கூர். க.

பொறுப்பிக்குமவளும் பொறைக்கு உவாத்தானவளும் எப்போது மொக்க அருகேயிருக்கையாலே ஆஶ்ரிதர்பக்கல் எப்போது மவ ளருளேநடந்து, அத்தாலே கொடிய அபராதங்கள் † "இவ்வோ விடங்கள் நமக்கிருப்பிடமல்ல" என்றுவிட்டோட, "இப்படியிருக்கிற விவனல்லது லோகத்திலேவேறு ஆஶ்ரயணீயரில்லை" என்று ஏழு[ம]டு வகைப்பட்டலோகங்களிலுள்ளாருமடைய ஆஶ்ரயிக்க, தேவர்களுங்கூட க்கால்பொருந்தவரிதாம்படியான இஸ்ஸம்ஸாரவிபூதியிலே அஸம் ஶ்லிஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகள்பொருந்தி ஆஶ்ரயிக்கும்படி யாக விருக்கிறவிடம்.

(பெரும்புகழித்யாதி) இவனை யநுஸந்திக்கையே யாத்ரையாம்படி சமைகையாலே மிக்கபுகழையுடைய ப்ராஹ்மணர் வர்த்திக்கிறவிடங் களையுடைத்தாய், மலர்கள் மிகு கைதைகள் துடக்கமானவற்றையுடைத் தாயிருக்கிற திருநாங்கூரென்னுதல்; வாழ்தருமிடங்களிலேயுண்டாய் அவர்களுக்குமுப்பாயிருக்கிற மலர்கள் மிகு கைதைகள் துடக்கமான வற்றையுடைத்தாயிருக்கிற வென்னுதல். பூக்கள் மிக்கிருந்துள்ள தா ழைகள், செங்கழுநீர், தாமரைகள், இவை, பரந்தபொய்கைகள்தோ றும் அவகாஶங்கள்தோறும் விளங்க. இங்கிடமில்லாமையாலே சோலை யானது ஆகாஶத்திற்பரப்பையடைய இடமடைத்துக்கொண்டோங்கி அழகு விளங்காநின்றுள்ள. அருவிடமென்று-ஸூக்ஷ்மதையைப்பற்ற ஆகாஶத்தைச்சொல்லுகிறது. ... ... ... க.

"திருமடந்தை மண்மடந்தை யிருபாலுந்திகழ - அடியவர்கட்கு என்று மருள் நடந்து - இவ்வேழுலகத்தவர் பணிய - வானவர்கள் சந்தி செய்ய என்றும் ... வேழுலகு" இத்யாதியாலே அந்வயம்திருவுள்ள ம்பற்றி, தற்துடக்கமாக வாக்யார்த மருளிச்செய்கிறார் (பொறுப்பிக்குமித்யாதி.)

அவர்களுக்குமுப்பாய் - அவர்கள் பண்ணும் ஸமாராதநங்களுக்குமுப்பாய். "தழுவி" என்றதினர்த்தம் (பரப்பையித்யாதி.) நஸ்ஸ்பதநி என்று தோற்றுகை யாலே மூர்த்தமான ஆகாஶத்தை "அரு" என்று அமூர்த்தமாகச்சொல்லக்கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (அருவிடமென்றித்யாதி.) ... ... க.

† "அபராதங்கள்" என்கிறவிடத்தில் "பாபங்கள்" என்று சில ஸ்ரீகோஶங் களிற காண்கிறது.

உ.— வென்றிமிகு நரகனுரமது வழியவிசிறும்
விறலாழித்தடக்கையன் விண்ணவர்கட்கன்று
குன்றுகொடு குரைகடலைக்கடைந்தமுதமளிக்கும்
குருமணியென்னாரமுதம் குலவியுறைகோயில்
என்றுமிகு பெருஞ்செல்வத்தெழில்விளங்குமறையோர்
ஏழிசையும் கேள்விகளுமியன்றபெருங்குணத்தோர்
அன்றுலகம் படைத்தவனேயனையவர்கள் நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. உ.

ப - ரை.— வென்றிமிகு-ஜயம்மிக்க, நரகன்-நரகாஸுரனுடைய, உரம்-பலம், அழிய - நசிக்கும்படி, விசிறும் - வீசாநின்றுள்ள, விறல் - மிடுக்கையுடைய, ஆழி-திருவாழியை, தடம் - பெரிய, கையன்-திருக்கையிலேயுடையனாய், அன்று - கடல் கடைந்து அம்ருதம்வாங்கித் தரவேணுமென்று தேவஜாதி அர்த்திக்கவன்று, விண்ணவர்கட்கு - இந்த்ராதி தேவர்களுக்காக, குன்று கொடு - மந்தரபர்வதத்தை நட்டு, குரைகடலை - கோஷிக்கிற ஸாகரத்தை, கடைந்து - மதநம்பண்ணி, அமுதம் - அம்ருதத்தை, அளிக்கும் - அவர்களுக்கு க்ருபைபண்ணின, குருமணி - ச்லாக்யமான மணிபோன்ற,என்னார் அமுதம்-என்னுடைய அதர்ப்தாம்ருதமானவன், குலவி உறை - விரும்பிவர்த்திக்கிற, கோயில் - திவ்யஸ்தாநமாய்; என்றும் - ப்ரதிதிநமும், மிகு-மிகுத்துவருகிற,பெருஞ்செல்வத்து-நிரவதிகஸம்பத்தையுடையதாய், எழில்விளங்கும்-அழகுவிளங்காநிற்பாராய், மறையோர்-வேதத்தைத்தங்களுக்கு நிரூபகமாகவுடையராய்,ஏழிசையும்-ஸப்தஸ்வரங்களும்,கேள்விகளும்-மற்றுமுண்டான அங்கோபாங்கங்களும், இயன்ற-அதிசரித்த, பெருங்குணத்தோர்-மஹாகுணப்ரசுரராய், அன்று—, உலகம் படைத்தவனே அனையவர்கள் - ஜகத்ஸ்ருஷ்டிபண்ணின ப்ரஹ்மாவைப் போலே ஸ்வாபாநுக்ரஹஸமர்த்தரான ப்ராஹ்மணர் வர்த்திக்கிற,நாங்கூர்—. (உ)

இரண்டாம்பாட்டு. (வென்றியித்யாதி) புக்கபோரில் வென்றி மிகும்படிபொரும் நரகனுடையபலமழியவீசும்மிடுக்கையுடையதிரு வாழியைப் பெரியகையிலேயுடையவன். (விண்ணவரித்யாதி) இந்த்ராதிகளுக்காக மந்தரபர்வதத்தைக் கடலில்நடுநெருசிலே நட்டு அது கதறக்கடைந்து அவர்களுக்கு அம்ருதத்தைக்கொடுத்தருளும்.

இரண்டாம்பாட்டு.—(வென்றியித்யாதி)புக்கபுக்க துறைதோறும் வெற்றிகொள்ளக்கடவனாய் இந்த்ராதிகள் குடியிருப்பழித்துத்திரிகிற நரகாஸுரனுடைய மிடுக்கழியும்படியாக வீசாநின்றுள்ள மிடுக்கை யுடைய திருவாழியைத்திருக்கையிலேயுடையவன்.நரகாஸுரனைநிரஸி த்து தேவஜாதிக்குக்குடியிருப்புப் பண்ணிக்கொடுத்துவிட்ட வளவன் றிக்கே, அவர்கள் "எங்களுக்குக் கடல் கடைந்து அம்ருதத்தைவாங்கி த்தரவேணும்" என்ன ; அவர்களுக்காக மந்தரத்தைநட்டு, கோஷ த்தையுடைத்தாயிருக்கிற கடலைக்கடைந்து, அவர்களுக்கு அம்ருதத் தைக் கொடுத்தவன்.

இரண்டாம்பாட்டு.— (வென்றியித்யாதி.) முதற்பாட்டிற்சொன்ன தீவினைகள் போயகலப் பண்ணுகைக்குறுப்பான விரோதிநிரஸநசீலதையையும், ஏழுலகத்த வர் பணிகைக்கு உபயுக்தமான உதவிகளையும் மேற்பாட்டுக்களிலே யருளிச்செய்ய க்கோலி, அதில், கீழ்த்திருமொழியில் "ஆறுதகினைத்தில்" என்கிறபாட்டிலும் முதற் பாட்டிலும் ப்ரஸ்துதமான நரகநிரஸநத்தையும் அம்ருதமதநத்தையுமருளிச்செய் கிறாரிப்பாட்டிலென்று ஸங்கதி.

"உரமது" என்றவிடத்தில் உத்கர்ஷத்தையருளிச்செய்கிறார் (இந்த்ராதிகளி த்யாதி.)

மூ.—உம்பருமிவ்வேழுலகுமேழ்கடலுமெல்லாம்
உண்டபிரானண்டர்கள்முன்கண்டுமகிழ்வெய்த
கும்பமிகுமதயானைமருப்பொசித்துக் கஞ்சன்
குஞ்சிபிடித்தடித்தபிரான்கோயில் மருங்கெங்கும்
பைம்பொனொடு வெண்முத்தம் பலபுன்னைகாட்டப்
பலங்கனிகள் தேன்காட்டப் படவரவேரல்குல்
அம்பனையகண்மடவார்மகிழ்வெய்துநாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. ௩.

ப - ரை.— உம்பரும் - தேவர்களும், இவ்வேழுலகும் - இந்தஸப்தலோகங்களும், ஏழ்கடலும் - ஸப்தஸமுத்ரங்களும, ப்ரளயத்தில் நோவுபடப்புக அவை நசியாதபடி, எல்லாம் - இவையெல்லாவற்றையும், உண்ட - அமுதுசெய்த, பிரான் - உபகாரகனாய், க்ர்ஷ்ணனாய்வந்தவதரித்த, அண்டர்கள் - இடையர்கள், கண்டு மகிழ்வெய்த - கண்டுகளிக்கும்படி, முன் - அவர்கள்முன்னே, கும்பம்மிகு - குடம் போன்ற பெரிய மஸ்தகத்தையுடைய, மதயானை - மதமுதிதமான குவலயாபீடத்தின், மருப்பு - கொம்பை, ஒசித்து - முறித்து, கஞ்சன் - கம்ஸனுடைய, குஞ்சி பிடித்து - மயிரைப்பிடித்து, அடித்த - தலைகீழாகத்தள்ளி முதுகிலேஅறைந்து அவனை முடியச்செய்த, பிரான் - உபகாரகனுடைய, கோயில் - ஸ்தாநமாய்; மருங்கு எங்கும் - பக்கமெல்லாம், பலபுன்னை - பலவானபுன்னைகள், மொட்டும் பூவுமாய்ப்பூத்து நின்று, பைம்பொனொடு - அழகியபொன்னையும், வெண்முத்தம் - வெளுத்தமுத்துக்களையும் கூட்டினாற்போல், காட்ட - காணப்பட, பலங்கனிகள் - பலாப்பழங்கள், தேன்காட்ட - மதுசொரிந்துகாட்ட, படம் - படத்தையுடைய, அரவு ஏர் - ஸர்ப்பம்போலும் அழகிய, அல்குல் - நிதம்பத்தையும், அம்பு அனைய - சரங்கள் போலும், கண் - கண்களையுமுடைய, மடவார் - ஸ்த்ரீகள், அவற்றைக்கண்டு, மகிழ்வெய்தும் - ஸந்தோஷிக்கிற, நாங்கூர்—. ... ... ... (௩)

குருமணி—ச்ரேஷ்டமான மணிபோன்றபடி. என்னாரமுதம் ———— கிற கோயில். (என்றுமிகுவித்யாதி) நாள்செல்ல நாள்செல்ல மிக்கு வாருகிற ஐச்வர்யத்தையும் அழகு விளங்காநின்ற மறையும் ஸப்தஸ்வரங்களும் இவற்றில் ச்ரவணத்தாலேசேர்ந்த ஆத்மகுணங்களையுடையராய். (அன்றுலகமித்யாதி) ப்ரஹ்மாவைப்போலே ஸாமர்த்யமுடையரான ப்ராஹ்மணர் வர்த்திக்கிற. ... ... ௨.

(குருமணி) அவர்கள் "நீவேண்டா, எங்களுக்கு உப்புச்சாறமையும்" என்ன; பெருவிலையனை தன்படியொன்றும் பாராதே, தன்தோள் நோவும்படி கடலைநெருக்கிக்கடைந்து அவர்களுக்கு அம்ருதத்தை உபகரித்தவன். (என்னாரமுதம்) அவர்களம்ருதம்போலன்றிக்கேதம்முடைய அம்ருதமிருக்கிறபடி. கொண்டாடிக்கொண்டுவர்த்திக்கிறதேசம்.

(என்றுமித்யாதி) நாள்செல்ல நாள்செல்ல மிக்குவாராநின்றுள்ள த்ரவ்யாதிகஸம்பத்தையுடையராய், அத்தாலேஅழகுவிளங்காநிற்பாராய், வேதத்தைக்கரைகண்டிருப்பாராய், ஸப்தஸ்வரங்களையும் மற்றுமுண்டான அங்கங்களையும் "இவர்களில் மேற்பட அதிகரித்தாரில்லை" என்னும்படி அதிலுண்டான வாஸனையாலே ஆத்மகுணப்ரசுரருமாய், தனித்தனியே ஜகத்ஸ்ருஷ்டிக்ஷமருமானவர்கள் வர்த்திக்கிற திருநாங்கூரில். ... ... ... ... ... ௨.

ச்ரேஷ்டமானமணி - ச்லாக்யமான மணியென்றாய், அர்த்தமருளிச்செய்கிறார் (அவர்களித்யாதி.) "குலவி" என்றதுக்கர்த்தம் (கொண்டாடிக்கொண்டென்றது.) (௨)

மூன்றும்பாட்டு. (உம்பருமித்யாதி) தேவஜாதியும் ஸகலலோகங்களும் ஸப்தஸமுத்ரங்களும் ப்ரளயத்திலே நசியாதபடி அமுதுசெய்த உபகாரகன். அண்டர் – இடையர், கண்டுகக்க,க்ருஷ்ணனாய்வந்தவதரித்து, குடம்போன்ற பெரியமஸ்தகத்தையுடைய மதமுதிதமான குவலயாபீடத்தின்கொம்பை முறித்து, கம்ஸன்மயிரைப்பிடித்து விழவிட்டு, அவனைத்தகர்த்த உபகாரகன். கோயிற்பக்கமெல்லாம். (பைம்பொனித்யாதி)அழகியபொன்னுடனே வெண்முத்தைப்புன்னைகாட்ட, பலாப்பழங்கள் தேன்சொரிய. (படவரவித்யாதி) அரவின்படத்தையொத்த அல்குலையும் அம்புபோன்ற கண்ணையுமுடையராயிருக்கிற ஸ்த்ரீகள், "இன்னதிலே யின்னதுண்டாகக்கடவது என்று வ்யவஸ்தையின்றிக்கேயிருந்ததீ !" என்று இவைகண்டு ஆச்சர்யப்படுகிற ஊர். ... ... ... ... ... ௩.

மூன்றும்பாட்டு.— (உம்பருமித்யாதி) தேவஜாதியும், இந்த ஏழுவகைப்பட்டலோகங்களும், இத்தைச் சூழப்போந்திருக்கிற கடல்களேழும்,இவையடைய ப்ரளயத்திலே நோவுபடப்புக வயிற்றிலே வைத்துநோக்கின உபகாரகன்;க்ருஷ்ணனாய்வந்தவதரித்து இடையர் கண்டு ப்ரீதராம்படியாக, குடம்போலே பெரியமஸ்தகத்தையுடைத்தாய் மதமுதிதமாயிருந்துள்ள குவலயாபீடத்தினுடையகொம்பைமுறித்து, அநந்தரம் கம்ஸனுடைய மயிரைப்பிடித்துத் தலைகீழாகத்தள்ளி முதுகிலே யறைந்து அவனையழியச்செய்த உபகாரகனுடைய கோயில்.

பரிஸரமடைய. (பைம்பொனொடுவெண்முத்தம்பலபுன்னைகாட்ட) புன்னைகளானவை மொட்டும்பூவுமாய்ப்பூத்துநின்றபோது பொன்னிலே முத்தையழுத்தினாப்போலே காட்டாநின்றது ; பலாப்பழங்கள் தேன் காட்டாநின்றது ; படத்தையுடைத்தான அரவுபோலே அழகிய அல்குலையுமுடையராய், அம்போடொத்த கண்களையுமுடையரான ஸ்த்ரீகளானவர்கள், " இன்னபோதின்னது, இன்னதிலின்னதுண்டாம் என்னும் வ்யவஸ்தையின்றிக்கே யிருந்ததீ!" என்று அவற்றைக்கண்டு த்ருப்தைகளாகிற. ... ... ... ... ௩.

மூன்றும்பாட்டு.— (உம்பரித்யாதி.) கீழ்த்திருமொழியில் "அண்டமும்" என்கிறபாட்டில் - ஆபத்ரக்ஷணமும், "வெண்மைமிகு" என்கிறபாட்டில் - ப்ரஸ்துத பூதநாநிரஸநத்தால் அவனோடொத்த கம்ஸநிரஸநமும் திருவுள்ளத்தில் தோன்றி,அவற்றையிப்பாட்டிலே யருளிச்செய்கிறாரென்று முதற்பாட்டோடே ஸங்கதி.

"அண்டர்கள்" என்றதினர்த்தம் (இடையரென்றது.)

"ஏர்" என்றதினர்த்தம் (அழகியவென்றது.) "காட்ட - மகிழ்வெய்தும்" என்ற வர்த்தமாநநிர்தேசத்தால் - எப்போதும் பழுத்து மதுசொரிந்திருக்குமென்கை ஸித்திக்கையாலே யருளிச்செய்கிறார்(இன்னபோதின்னதென்றது.)"புன்னை-பொன்-முத்தம் - காட்ட" என்கையாலே (இன்னதிலின்னதென்றது.) ... ௩.

நாலாம்பாட்டு.— (ஓடாதவித்யாதி.) கீழ்த்திருமொழியில் முதற்பாட்டிலும் இரண்டாம்பாட்டிலும் ப்ரஸ்துதமான நரஸிம்ஹாவதாரத்தாலே - விரோதிநிரஸநமும் ஆச்ரிதரக்ஷணமும் முகமாக.... ஆச்ரிதருபத்துக்குதவினமையுமருளிச்செய்கிறாரென்று, இதுக்கும்முதற்பாட்டோடே ஸங்கதி.

மூ.—ஓடாதவாளரியி னுருவமதுகொண்டன்
றுலப்பில்மிகு பெருவரத்தவிரணியனைப்பற்றி
வாடாதவள்ளுகிரால்பிளந் தவன்றன்மகனுக்
கருள்செய்தான்வாழுமிடம் மல்லிகைசெங்கழுநீர்
சேடேறுமலர்ச்செருந்தி செழுங்கமுகம்பாளை
செண்பகங்கள் மணநாறும் வண்பொழிலினூடே
ஆடேறு வயலாலைப்புகைகமழுநாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. ௬.

ப - ரை.—அன்று-ப்ரஹ்லாதனை நிர்ப்பந்திக்கிறகாலத்திலே; ஓடாத - ஹிரண்யனுடைய பலத்தைக்கண்டு பிற்காலியாத, ஆளரியின்உருவம் கொண்டு - நரஸிம்ஹமான வடிவைக்கொண்டு, உலப்புஇல்-ஸங்க்யாரஹிதமான, மிகுபெருவரத்த-மிகவும் பெரியவரங்களையுடைய, இரணியனை-அந்தஹிரண்யனை, பற்றி-பிடித்து, வாடாத - வளையாத, வள் - தீக்ஷ்ணமான, உகிரால் - நகங்களால், அவன்மார்வை, பிளந்து - இருபிளவாம்படி பண்ணி, அவன்றன்மகனுக்கு - அவன்பிள்ளையான ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு, அருள் செய்தான் - அருளைப்பண்ணின ஸ்வாமி, வாழும் இடம்-வர்த்திக்கிற ஸ்தானமாய்; மல்லிகை - மல்லிகைகளும், செங்கழுநீர் - ரக்தோத்பலங்களும், சேடேறுமலர் - திரளப்பூத்தபூவையுடைய, செருந்தி-சுரபுன்னைகளும், செழு - அழகிய, கமுகம்பாளை - பாக்குப்பாளைகளும், செண்பகங்கள் - செண்பகப்பூக்களும், மணம்நாறும் - பரிமளம்கமழுகிற, வண்பொழிலினூடே - அழகிய சோலையினடுவே, ஆடேறுவயல்-கரும்பாடுகைக்காக ஏறினவயலில், ஆலைப்புகை கமழும் - ஆலைப்புகைபரிமளிக்கிற, நாங்கூர்—. ... ... (௬)

நாலாம்பாட்டு. (ஓடாதவித்யாதி) ஹிரண்யனுடைய பலத்தைக் கண்டு பிற்காலியாத நரஸிம்ஹமான வடிவைக்கொண்டு, முடிவில்லாத தேவர்கள்கொடுத்த வரத்தையுடைய ஹிரண்யனைப்பிடித்து. [உகு (வாடாதவித்யாதி) வளையாதவுகிராலே அவன்மார்வைப்பிளந்து அவன் மகனுக்கு அருள்செய்தான் வாழுமிடம்.

நாலாம்பாட்டு.— (ஓடாதவித்யாதி) ஹிரண்யனுடைய முருட்டுடலைக் கண்டால் பிற்காலியாதபடியான நரஸிம்ஹத்தினுடையவெ ன்றுதல்; அன்றிக்கே, நாட்டில்நடையாடாத நரஸிம்ஹமென்னு[ஙய தல். (உலப்பில்)அஸங்க்யேயமாய் ஓரோவரங்களே முடிவுகாணவொண்ணாதபடியாயிருப்பதாய், வரங்கொடுத்த தேவதைகளுக்குங்கூடக் குடியிருப்பரிதாம்படிபெரியவரத்தையுடையஹிரண்யனைப்பற்றி. (வாடாத) ஹிரண்யனுடைய முருட்டுடலிலே தைத்தால் வளையக்கடவதன்றிக்கே கூர்மைமிக்கிருக்கிற திருவுகிராலே இரண்டுகூறும்படி பிளந்து, அவன்பக்கல் விழவுதிரும்படி "அவன்மகன்" என்று ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் பக்கலிலே அருளைப்பண்ணினவன் வர்த்திக்கிற தேசம்.

"மிகு" என்றதுக்குத்தாத்பர்யம் (ஓரோவித்யாதி.) உகிருக்குவாட்டமாவது-வளைகையென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ஹிரண்யனுடையவித்யாதி.) அவன் பக்கல்விழவுதிரும்படியென்றது-ஹிரண்யன் தன்னருளுக்கு விஷயமாகாமல் முடிந்தானே! என்னும் திருவுள்ளத்தில் குறைதீரும்படியென்றபடி.

ரு.—கண்டவர்தம் மனம்மகிழ மாவலிதன் வேள்விக்
களவில்மிகுசிறுகுறளாய் மூவடியென்றிரந்திட்
டண்டமுமிவ்வலைகடலுமவனிகளுமெல்லாம்
அளந்தபிரானமருமிடம் வளங்கொள்பொழிலயலே
அண்டமுறு முழவொலியும் வண்டினங்களொலியும்
அருமறையினொலியும் மடவார்சிலம்பினொலியும்
அண்டமுறு மலைகடலினொலிதிகழுநாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. ரு

ப - ரை.—கண்டவர்தம்மனம்-கண்டவர்களெல்லாருடைய நெஞ்சும், மகிழ-ஆநந்திக்கும்படி, மாவலிதன்வேள்வி - மஹாபலியஜ்ஞவாடத்திலே, களவில்மிகு-க்ரித்ரிமத்தில்மிக்கு, சிறுகுறளாய்-வடிவில்சிறுத்தவாமனனாய், மூவடி என்று-மூன்று அடிகள் தரவேணும் என்று, இரந்திட்டு - யாசித்து, அண்டமும் - ஆகாசத்தையும், இ-இவ்வருகான, அலைகடலும் - அலையெறியாநின்றுள்ள ஸாகரங்களையும், அவனிகளும் - ஸப்தத்வீபமான பூமிகளையும், எல்லாம்-இவையெல்லாவற்றையும், அளந்த-அநாயாஸேந அளந்துகொண்ட, பிரான் - உபகாரகன், அமரும் - நித்யவாஸம் பண்ணுகிற, இடம் - தேசமாய்; வளங்கொள் - ஸம்ருத்தியுடைத்தான, பொழில் அயலே - பொழிலின் அருகே, அண்டம் உறும் - ஆகாசத்திலே சென்று வ்யாபரிக்கிற, முழவொலியும்-வாத்யகோஷங்களும், மதுபானம்பண்ணிக் களித்துப்பாடுகிற, வண்டினங்கள் ஒலியும் - வண்டுகளின்த்வநியும், அருமறையின் ஒலியும் - து்ச்ரஹ வேதகோஷமும், மடவார் சிலம்பின்ஒலியும் - அழகிய ஸ்த்ரீகளுடைய சிலம்பின் கோஷமும்; அண்டம் உறும் - அண்டபித்தியிலேசென்று, அலை - அலையெறிகிற, கடலின் ஒலி-ப்ரளயார்ணவகோஷம்போலே, திகழும் - விளங்குகிற, நாங்கூர்—.

---

சேடு - திரட்சி. திரளப்பூத்தசெருந்தி, அழகிய கமுகங்காவனா. (செண்பகமித்யாதி) செண்பகப்பூ மணங்கமழுகிற அழகிய பொழிலி ன்நடுவே ஆடுகையிலேயுற்றவயலில் ஆலைப்புகைகமழும் நாங்கூர். ,.

---

மல்லிகை, செங்கழுநீர், சேடு - திரட்சி. திரளப்பூத்த பூவை யுடைத்தான செருந்தி, அழகியகமுகம்பாளை,செண்பகம், இவை பரி மளத்தைப் புறப்படவிடாநின்றுள்ள அழகியபொழிலின் நடுவே ஆடு கைக்காக ஏறினவயலில் ஆலைப்புகையானது கமழுமாய்த்து. ௪.

---

ஆடுகைக்காக - கரும்பாடுகைக்காக. ... ... ... ... ௪.

அஞ்சாம்பாட்டு.— (கண்டவரித்யாதி.) கீழ்த்திருமொழியில் நரஸிம்ஹாவதார மநுஸந்தித்தவர் ராமாவதாரத்திலேபோய் அநுஸந்தித்தார்; அப்படியே இங்கும்-நர ஸிம்ஹாவதாராநுஸந்தாநாநந்தரம் ராமாவதாரத்தில் போகவொருப்பட, நடுவே வழிபறிக்காரரைப்போலே களவில்மிக்க குறள்வந்து நெஞ்சைவஞ்சிக்க, அங்கே அகப்பட்டநுஸந்தித்துக்கொண்டு,தேவர்க்குதவினதும் எல்லார்க்குமுதவித் திருவடி களைப்பரப்பினமையுமநுஸந்திக்கிறரென்று ஸங்கதி. ஆகையிறே, "கண்டவர்தம் மனம்மகிழ" என்று - தன்னெஞ்சு அபஹ்ருதமானத்தையும் ஸூசிப்பித்தது.

அஞ்சாம்பாட்டு. (கண்டவரித்யாதி) அநுகூல ப்ரதிகூல விபாக மன்றியே கண்டாரெல்லாரும் ஆநந்திக்கும்படி, மஹாபலியுடைய யாகத்திலே க்ஷீத்ரிமம்மிக்க குறளாய், மூன்றடிதா என்றிரந்து. (அண்டமுமித்யாதி) ஆகாசத்தையும் அலையெறிகிற கடலையும் ஸப்த த்வீபமான பூமிகளையெல்லாமளந்த உபகாரகன் நித்யவாஸம்பண்ணுகிறவிடம். (வ்ளங்கொளித்யாதி) அழகுடைத்தான பொழிலருகே அண்டத்திலே சென்றுகிட்டுகிற வாத்யகோஷங்களும், மதுபாநம் பண்ணிக்களித்துப் பாடுகிற வண்டுகளின்த்வநியும், வேதகோஷமும், ந்ருத்தம்பண்ணுகிற மடவாருடைய சிலம்பொலியும், அண்டத்திலேயு செல்ல த்வநிக்கிற கடலோசையாலும் விளங்காநின்றுள்ள நாங்கூர்.

---

அஞ்சாம்பாட்டு.— (கண்டவர்தம்மனம்மகிழ) அநுகூலப்ரதிகூல விபாகமின்றிக்கே கண்டவர்கள் நெஞ்சானது மகிழும்படியாக, மஹாபலியுடைய யஜ்ஞவாடத்திலே, "இவன்தேவகார்யம் செய்கிறான்" என்று தோற்றுதபடியாக "நாட்டில் வாமநர்கள் திருவுலகளந் தருளினவிடம்" என்னும்படியான வாமநவேஷத்தை பரிக்ரஹித்து, "எனக்குமூன்றடிவேணும்" என்று அர்த்தித்து, ஆகாசத்தையும் அலையெறியாநின்றுள்ளகடலையும் த்வீபங்களையுமெல்லாம் அநாயாஸேந அளந்து கொண்ட உபகாரகன் நித்யவாஸம் பண்ணுகிறதேசம்.

(வளமித்யாதி) ஸம்ருத்தியையுடைத்தாயிருக்கிறபொழிலினருகே, ஆகாசத்தில் அவகாசமுள்ளவிடமெங்கும் போய் வ்யாபரிக்கிற வாத்யகோஷமும், மதுபாநம்பண்ணுகிற வண்டுகளினுடைய த்வநியும், வேதகோஷமும், ஆடுகிறஸ்த்ரீகளினுடையசிலம்பொலியும், அண்டபித்தியிலே சென்று அலையெறிகிற ப்ரளயார்ணவகோஷம்போலே விளங்காநின்றுள்ள. ... ... ... ... ரு.

---

களவில்-களவில்லை என்னும்படி தோற்றுமவனாய், மிகவுஞ்சிறிசாய்க்குறளான வேஷத்தையுடையனாய் என்று ஸௌசீல்யம் திருவுள்ளம்பற்றி, ஸௌந்தர்யமருளிச்செய்கிறார் (இவனித்யாதி;) லோகத்தில் வாமநர்களெல்லாரும் த்ரிவிக்ரமனோடொப்பாரென்னும்படி மிகவும்குள்ளனை யென்றபடி.

"அயல்" என்றதினர்த்தம் (அருகேயென்றது.) "முழவொலி" என்றதினர்த்தம் (வாத்யகோஷமென்றது.) ... ... ... ... ரு.

ஆறும்பாட்டு.— (வாளித்யாதி.) நடுவேவழிபறித்தவர் மாண்வேஷத்தை அநுபவித்தவநந்தரம், "மின்னனைய நுண்மருங்குல்" என்கிறபாட்டிலநுபவித்த ராமாவதாரத்தை அநுபவிக்கிறாரென்றுஸங்கதி.

மூ.—வாணெடுங்கண் மலர்க்கூந்தல் மைதிலிக்கா விலங்கை
மன்னன்முடியொருபதும் தோளிருபதும்போயுதிர
தாணெடுந்திண் சிலைவளைத்த தயரதன்சேயென்றன்
தனிச்சரண்வானவர்க்கரசு கருதுமிடம் தடமார்
சேணிடங்கொள் மலர்க்கமலம் சேல்கயல்கள்வாளை
செந்நெலொடு மடுத்தரியவுதிர்ந்த செழுமுத்தம்
வாணெடுங்கண் கடைசியர்கள் வாருமணிநாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. ௬.

ப - ரை.—வாள் - வாள்போலே கூரிதாய், நெடு - நீண்ட, கண் - திருக்கண்களையும், மலர் - பூஅணிந்த, கூந்தல் - மயிர்முடியையுமுடைய, மைதிலிக்கா - பிராட்டிக்காக, இலங்கைமன்னன் - லங்காதிபனான ராவணனுடைய, ஒருபதுமுடியும்- பத்துத்தலைகளும், இருபதுதோளும் - இருபதுதோள்களும், போய் உதிர-உதிர்ந்து போம்படி, தாள்-பூட்டப்பட்டதாளையுடைத்தாய், நெடு-நீண்ட, திண்-திடமான, சிலை - வில்லை, வளைத்த - வளையப்பண்ணின, தயரதன்சேய்-தசரதன்பெற்றமகனாய், என்றன் - எனக்கு, தனிச்சரண் - அத்விதீயரக்ஷகனான, வானவர்க்கரசு - நித்யஸூரிநிர்வாஹகன், கருதும் இடம்-வர்த்திக்கிற ஸ்தானமாய்; தடம் ஆர் - பொய்கைகள் நிறைந்திருப்பதாய், சேண் இடம்கொள் - ஆகாசமுள்ள விடமெங்கும் ஓங்கியிருக்கிற, மலர் - பூக்களையுடைத்தான, கமலம் - தாமரையையும்,சேல்கயல்கள்வாளை- சேல்கயல்வாளை என்னும் மத்ஸ்யங்களையும், செந்நெலொடும் - செந்நெலோடே, அடுத்து அரிய - அடுத்துப்பிடித்து அறுக்க, உதிர்ந்த - அவற்றினின்று உதிர்ந்த, செழு - அழகிய, முத்தம் - முத்துக்களை, வாள் - வாள்போலே கூரிய, நெடு-நீண்ட, கண் - கண்களையுடைய, கடைசியர்கள்-கர்ஷகஸ்த்ரீகள், வாரும் - வாருகிற, அணி- சுந்தரமான, நாங்கூர்—. ... ... ... ... (௬)

ஆறும்பாட்டு. (வாணெடுங்கணித்யாதி) வாள்போலே கூர்ந்து நெடிதானகண்ணழகையும், மலரையுடைய குழலையுமுடைய பிராட்டிக்காக. (இலங்கையித்யாதி) லங்கேஶ்வரனான ராவணன் பத்துத்தலையும் இருபதுதோளும் உதிர, தாளையுடைத்தாய் நெடிதாய் வலியுடைய சிலையைவளைத்த சக்ரவர்த்தித்திருமகன். சேயென்று - பிள்ளை. எனக்கு அத்விதீயமான புகலிடம், நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகன் விரும்பிவர்த்திக்கிறதேஶம்.

ஆறும்பாட்டு.— (வாளித்யாதி) ஒளியைச்சொல்லுதல்; வாள்போலேயிருக்கிற நெடியதிருக்கண்களையும் மலரையுடைத்தான மயிர்முடியையுமுடைய ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்காக, லங்கைக்கு நிர்வாஹகனாயிருக்கிறவனுடைய பத்துத்தலையும் இருபதுதோளும் உதிரும்படியாக,தாளையுடைத்தாய் நெடிதாய்த் திண்ணிதாயிருக்கிற வில்லை வளைத்த தஶரதாத்மஜன். சேய் - பிள்ளை. (என்றன்தனிச்சரண்) "தயரதற்குமகன்றன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே" என்னுமாப்போலேகாணுமிருப்பது. * அயர்வறு மமரர்களதிபதி வர்த்திக்கிற ஸ்தாநம்.

. "தாள்"என்று-பூட்டாய்,பூட்டப்பட்ட நாணைச்சொல்லுமென்று சொல்வது.

மூ.— தீமனத்தான்கஞ்சனது வஞ்சனையில் திரியும்
தேனுகனும் பூதனைதன்னாருயிரும் செகுத்தான்
காமனைத்தான் பயந்த கருமேனியுடையம்மான்
கருதுமிடம் பொருது புனல்துறைதுறைமுத்துந்தி
நாமனத்தால் மந்திரங்கள் நால்வேதமைந்து
வேள்வியோடாறங்கம் நவின்று கலைபயின்றங்
காமனத்து மறையவர்கள் பயிலுமணிநாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. எ.

ப - ரை.—தீமனத்தான் - பொல்லாதநெஞ்சையுடையனான, கஞ்சனது - கம்ஸன்ப்ரேரிதனாகி, வஞ்சனையில் - க்ருத்ரிமவேஷங்கொண்டு, திரியும் - திரிகிற, தேனுகனும் - தேநுகாஸுரனுடையவும், பூதனைதன் - பூதனையுடையவும், ஆர்உயிர் - ஆத்மாவை, செகுத்தான் - முடித்தவனும், காமனை - தன்னழகால்நாட்டைவெருட்டித்திரியும் மந்மதனை, பயந்த - பெற்ற, கருமேனி உடை அம்மான் - கறுத்ததிருமேனியையுடைய ஸ்வாமி, கருதும் இடம் - விரும்பிவர்த்திக்கிற தேசமாய்; பொருது புனல் - திரையோடேகூடி பொராநின்றுள்ள புனலானது, துறைதுறை - ப்ரதிதுறையிலும், முத்து உந்தி - முத்துக்களைத்தள்ளாநிற்பதாய், நா - நாவாலும், மனத்தால் - மநஸ்ஸாலும், மந்திரங்கள் - பகவந்மந்த்ரங்களும், நால்வேதம் - சதுர்வேதங்களும், ஐந்துவேள்வியோடு - பஞ்சமஹாயஜ்ஞங்களும், ஆறுஅங்கம் - ஷடங்கங்களும், நவின்று - அப்யஸித்து, கலைபயின்று - மற்றுமுள்ளசாஸ்த்ரங்களும்ஓதி, அங்கு ஆம் மாத்து - பரிசுத்தாந்தஃகரணரான, மறையவர்கள் - வைதிகர், பயிலும் - நெருங்குகையால் வந்த, அணி - அழகையுடைய, நாங்கூர்— ... ... (எ)

(சேலரித்யாதி) ஆகாசாவகாசமடையத் தனக்கே போரும்படியான பெரியபுக்களையுடைய தாமரை, சேல், கயல்கள், வாளைகள், இவற்றைச்செந்நெலோடே அடுத்துப்பிடித்து அரிய, உதிர்ந்து அழகிய [உடு] முத்துக்களைக் கதிர்பொறுக்க வயலிலே யிழிந்தவர்கள், வாள்போலே நெடுமிக்கூரிய கண்ணையுடையார் வாரி மடியிலிடு நாங்கூர். சு.

பொய்கைகள் நிறைந்திருப்பதாய் ஆகாசமுள்ள விடமெங்கும் வளர்ந்திருக்கிற மலரையுடைத்தான தாமரை, சேல், கயல்கள், வாளை, இவற்றைசெந்நெலோடே அடுத்தறுக்க, உதிர்ந்த அழகிய முத்துக்களை, கதிர்பொறுக்கவிழிந்தவர்கள் வாருவர்களாய்த்து. ... சு.

பொய்கைகள் நிறைந்திருப்பதாயென்றது - பொய்கையெல்லாம் வ்யாபித்திருப்பதா யென்று தாமரைக்கு விசேஷணம். முத்துக்கள் தாமரையிலும் மீன்களிலு முண்டென்னும் ப்ரஸித்தியைப்பற்ற வருளிச்செய்கிறார் (அழகியவித்யாதி.)

ஏழாம்பாட்டு.—(தீமனத்தானித்யாதி.)கீழ் ராமாவதாரத்தில் போனவரையும் வசீகரிக்கும்படியான விரோதிநிரஸந பரம்பரையுள்ளது க்ருஷ்ணாவதாரத்திலே யாகையாலே, கீழ் "கஞ்சன் குஞ்சிபிடித்தடித்தபிரான்" என்று சொன்னத்தால் த்ருப்தி பிறவாமையாலே, இனி மேற்பாட்டுக்களிலெல்லாம் க்ருஷ்ணசரிதங்களை வாய்வந்தபடியே பேசியநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

ஏழாம்பாட்டு. (தீமனத்தானித்யாதி) பொல்லாத நெஞ்சை யுடைய கம்ஸன்ப்ரேரணையாலே க்ருத்ரிமவேஷங்கொண்டுதிரிகிற யே நகனுடையவும் பூதனையுடையவும் நற்சீவனைப்போக்கினவன். (காம னையித்யாதி) காமனைப்பயந்த க்ருஷ்ணன் விரும்பி வர்த்திக்கிறதேசம். திரையோடு திரை பொராநின்றுள்ள புனலானது துறைதோறும் முத்துக்களைத் தள்ளாநிற்பதாய். (நாமனத்தாலித்யாதி) நாவாலும் மநஸ்ஸாலும், ஐமவங்மந்த்ரங்களை, நாலுவகைப்பட்ட வேதம், பஞ்ச மஹாயஜ்ஞம், அங்கங்கள் துடக்கமானவற்றைப் பலகாலும் அப்ய ஸித்து பரிசுத்யாநுஷ்டாநர் நெருங்குகையாலேவந்த அழகை[யு] யுடைய நாங்கூர். ... ... ... ... எ.

எட்டாம்பாட்டு. (கன்றதனாலித்யாதி) கன்றாலேவிளவையெறி ந்து, அதிற்பழத்துடனே விளவையுதிர்த்தபிள்ளை. எல்லாராலும் விரு ம்பப்பட்ட அழகிய காளமேகம்போன்ற வடிவழகையுடையவன், பசுக்களை ரக்ஷிக்கைக்காகக் கல்லெடுத்துக் கல்மாரிகாத்துக் குடக்கூத் தாடினவன் கொண்டாடிவர்த்திக்கிறவிடம்.

---

ஏழாம்பாட்டு.— (தீமனத்தானித்யாதி) தீதான நெஞ்சையுடை யனாய் – ஐமவத்தத்வம் ஓரிடத்திலே யுண்டென்னப்பொறாத நெஞ் சையுடையகம்ஸன்; அவனுக்குறுப்பாய் க்ருத்ரிமத்தாலே நடமாடித் திரிந்த யேநகன், பூதனை, அவர்களைமுடித்துப்போகட்டவன். அற கில்வந்தால் காமனுக்குமுத்பாதகனாய், அவ்வளவல்லாதபடிரூபமான திருமேனியையுடையனாயிருக்கிற ஸர்வேச்வரன் விரும்பிவர்த் திக்கிற தேசமாய்த்து.

திரையோடுதிரைபொராநின்றுள்ள புனலானது துறைதோறும் துறைதோறும் முத்துக்களைத்தள்ளாநிற்பதாய், நாவாலும் மநஸ்ஸா லும், ஐமவங்மந்த்ரங்கள், நாலுவகைப்பட்ட வேதம், பஞ்சமஹாயஜ்ஞம், அங்கங்கள் துடக்கமானவற்றைப் பலகாலுமப்யஸித்து பரிசுத்யா நுஷ்டாநர்நெருங்குகையால்வந்த அழகையுடைய. ... எ.

எட்டாம்பாட்டு.— (கன்றதனாலித்யாதி) கன்றாய்நின்ற அஸுரனை க்கொண்டு விளாவாய்நின்ற அஸுரனைமுடியும்படிபண்ணி லீலாரஸ மநுபவித்த செல்லப்பிள்ளை; காமருவப்படுவதாய் – ஆசைப்படப்படு வதான, சீருண்டு – ஸ்வபாவம், அத்தையும், ரூபமஹாரமாயிருக்கிற திரு மேனியையுமுடையவன், பசுக்களைரக்ஷிக்கைக்காக கோவர்த்தநத்தாலே மழைதடுத்து, மன்றிலே ஸர்வாநுபவயோக்யமாம்படி குடக்கூத்தாடி னவன் கொண்டாடிவர்த்திக்கிற தேசம்.

---

விவரணம் (ஐமவதத்த்வமித்யாதி.) அகங்காரமனதது-ஐமவஷ் விஷயத்துக் காயிருக்கிற மனத்தென்றாய், அதினர்த்த மருளிச்செய்கிறார் *( பரிசுத்யாநுஷ்கா ணரென்று.) ... ... ... ... ... ... எ.

எட்டாம்பாட்டு.— (கன்றித்யாதி.) "விளங்கனியை" என்றது பின்னாட்டி பின்னும் சிலகூட்டியநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

மூ.— கன்றதனால் விளவெறிந்து கனியுதிர்த்தகாளை
காமருசீர்முகில்வண்ணன் காலிகள் முன்காப்பான்
குன்றதனால் மழைதடுத்துக் குடமாடு கூத்தன்
குலவுமிடம் கொடிமதிள்கள் மாளிகைகோபுரங்கள்
துன்றுமணிமண்டபங்கள் சாலைகள் தூமறையோர்
தொக்கீண்டித்தொழுதியொடு மிகப்பயிலும்சோலை
அன்றலர்வாய்மதுவுண் டங்களிமுரலுநாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. அ.

ப-ரை.—கன்றதனால் - வத்ஸாஸுரனாலே, விளவு எறிந்து - விளாவாய்நின்ற அஸுரனை எறிந்து, கனி - அதின்பழத்தை, உதிர்த்த - உதிரும்படிபண்ணி பாலக்ரீடாரஸமநுபவித்த, காளை - நவயௌவநனாய், காமரு - எல்லாராலும்விரும்பப்பட்ட, சீர் - அழகிய, முகில்வண்ணன் - காளமேகம்போன்ற வடிவழகையுடையவனாய், முன் - முன்னே, காலிகள் - பசுக்களை, காப்பான் - ரக்ஷிக்கைக்காக, குன்றதனால் - பர்வதத்தாலே, மழை - வர்ஷத்தை, தடுத்து - நிரோதித்து, குடமாடு கூத்தன் - குடக்கூத்தாடினவன், குலவும் இடம் - கொண்டாடிவர்த்திக்கும் தேசமாய; கொடி - த்வஜங்களையுடைத்தான, மதிள்கள் - ப்ராகாரங்களையும், மாளிகை - மாளிகைகளையும், கோபுரங்கள் - கோபுரங்களையும், துன்று - நெருங்கின, மணி - மணிமயமான, மண்டபங்கள் - மண்டபங்களையும், சாலைகள் - யாகசாலைகளையுமுடைத்தாய், தூ - பரிசுத்தரான, மறையோர் - ப்ராஹ்மணர், தொக்கு ஈண்டி - கூடித்திரளுகையாலுண்டான, தொழுதியொடு - ஆரவாரத்தால் மிக்கிருப்பதாய், மிகப்பயிலும் - மிகவும் நெருங்கின, சோலை - சோலையிலுண்டான, அன்று அலர்வாய் - அப்போது விகஸித்த செவ்விப்பூவில், மது உண்டு - மதுவை ப்பானம்பண்ணி, அங்கு - அவ்விடத்தில, அளி - வண்டுகள், முரலும் - கானம்பண்ணுகிற, நாங்கூர—. ... ... ... ... ... (அ)

(கொடிமதிள்யாதி) கொடிகளாலே அலங்க்ருதமான மதிள்கள், கோபுரங்கள், நெருங்கின மணிமயமான மண்டபங்கள், யாகசாலைகள், தூயரான ப்ராஹ்மணர்கூடித்திரண்ட ஆரவாரத்தால் மிக்கிருப்பதாய், மிகவும் நெருங்கினசோலையில் அப்போதலர்ந்த செவ்விப்பூவில் மதுவைப்பருகி வண்டுகள் களித்துப்பாடும். ... ... அ.

கொடியையுடைத்தான மதிள்கள், மாளிகைகள், கோபுரங்கள், நெருங்கின மணிகளையுடைத்தான மண்டபங்கள், சாலைகள், இவற்றையுடைத்தாய்; ப்ராஹ்மணர் கூடித்திரண்ட ஆரவாரத்தால் மிக்கிருப்பதாய், சோலையிலுண்டான செவ்விப்பூவிலே மதுபானம்பண்ணி வண்டுகள் பாடாநிற்பதுமான. ... ... ... அ.

சாலைகள் - யஜ்ஞசாலைகள். ... ... ... ... அ.

ஒன்பதாம்பாட்டு.— (மஞ்சளையிகபாதி.) "ஆய்ச்சியர்வைத்ததயிர்வெண்ணெயொன்குளிரவமுதுசெய்து" என்றதுபினனுட்டி, உண்டவெண்ணெயெல்லாம சொல்லியருளுகிறான்றாஸங்கதி.

மூ.—சென்றுசினவிடையேழும் படவடர்த்துப் பின்னை
செவ்வித்தோள்புணர்ந்துகந்த திருமால்தன்கோயில்
அன்றயனுமரன்சேயு மனையவர்கள்நாங்கூர்
அரிமேயவிண்ணகரமமர்ந்த செழுங்குன்றை
கன்றிநெடுவேல்வலவன் மங்கையர்தம்கோமான்
கலிகன்றியொலிமாலை யைந்திஞெடுமூன்றும்
ஒன்றிஞெடுமொன்றுமிவை கற்றுவல்லா ருலகத்
தாத்தமர்கட்குத்தமரா யும்பருமாவர்களே. க0.

ப - ரை.— ஏறுதழுவினர்க்கு ஸ்ரீஜநகராஜன்திருமகளைக்கொடுக்கக்கடவோமென்று எருதுகளைவிடுத்த, சென்று - தானே அங்கே சென்று, சினம்-க்ரௌர்யத்தையுடைய, ஏழு விடையும் - ஏழுரிஷபங்களையும், படஅடர்த்து-முடியும்படி பொருது, பின்னை-நப்பின்னைப்பிராட்டியுடைய, செவ்வித்தோள்-அழகியதோளோடே, புணர்ந்து - ஸம்ஶ்லேஷித்து, உகந்த - ஸந்தோஷித்த, திருமால்தன் - ஸ்ரீய:பதி வர்த்திக்கிற, கோயில்-ஸ்தாநமாய்; அயனும்-ப்ரஹ்மாவையும், அரன்சேயும்-ருத்ரன் பிள்ளையான ஸுப்ரஹ்மண்யனையும், அனையவர்கள் - ஒத்தசாந்தியையும் அழகையுமுடையவர்கள் வர்த்திக்கிற, நாங்கூர் - திருநாங்கூரில், அரிமேயவிண்ணகரம்-அரிமேயவிண்ணகரத்தில்,அமர்ந்த-நித்யவாஸம்பண்ணுகிற,செழும்குன்றை-அழகிய பர்வதம்போன்ற ஸ்வாமியை ; கன்றிநெடுவேல்வலவன்-கறைமாறுதநெடியவேலைக் கையிலே யுடையராய், மங்கையர்தம்கோமான் - திருமங்கையிலுள்ளார்க்குத்தலைவராய், கலிகன்றி - கலியைவரியான ஆழ்வார், கவிபாடின, ஒலிமாலை - ஒலியுடைய தொடையான, ஐந்திஞெடு - க்ருஷ்ணாவதாரங்கள் விஷயமான ஐந்துபாட்டும், மூன்றும் - நரஸிம்ஹவாமநராமாவதாரங்கள் விஷயமான மூன்றுபாட்டும், ஒன்றிஞெடும் - அர்ச்சாவதாரபரமான முதற்பாட்டும், ஒன்றும் - பலஶ்ருதியான இப்பாட்டும், இவை - ஆகஇப்பத்துப்பாட்டுக்களையும், கற்று-அப்யஸித்து,வல்லார்-அர்த்ததாத்பர்யம் பண்ணவல்லவர்கள், உலகத்து - இஹலோகத்திலே, உத்தமர்கட்கு உத்தமராய் - "எம்மையாளும்பரமர்" என்னும்படியான வைஷ்ணவர்களுக்குத்தலைவராய், பின்பு, உம்பரும்ஆவர்கள்-நித்யஸூரிகளோடு ஒருகோவையுமாவர். (க0)

பத்தாம்பாட்டு. (சென்றித்யாதி) ஏறுதழுவினர்க்குக் கொடுக்கக் கடவோமென்று எருதுகளைஸங்கமாகவிட, அங்கேசென்று, சினவிடைகளேழையும்படும்படி பொருது, பின்னையுடைய செவ்வித்தோளுடனே கலந்துகந்த திருமால்தன் கோயில்.(அன்றயனுமரன்சேயும்) ப்ரஹ்மாவும் ருத்ரனும், இவனுடைய பிள்ளை ஸுப்ரஹ்மண்யனையும் ஒத்தவர்கள் நாங்கூரரிமேயவிண்ணகரமமர்ந்த செழுங்குன்றைக்கவிபாடிற்று.

பத்தாம்பாட்டு.— (சென்றித்யாதி) அவைநின்றவிடத்திலே தானேசென்று, சினத்தையுடைத்தாயிருக்கிற ரிஷபங்களேழையும் முடியும்படி அடர்த்து, நப்பின்னைப்பிராட்டியுடைய செவ்வியையுடைத்தான தோளோடே அணைந்துகந்த ஸ்ரீய:பதி வர்த்திக்கிற கோயில். (அன்றித்யாதி) ஶாந்திக்கு ப்ரஹ்மாவும், அழகுக்குஸுப்ரஹ்மண்யனும் ஒப்பாம்படியிருக்கிறவர்கள்வர்த்திக்கிற திருநாங்கூரில் அரிமேயவிண்ணகரமமர்ந்த செழுங்குன்றைக் கவிபாடிற்று.

